ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மயர்வறமதிநலமருளப்பெற்ற

# ஆழ்வார்கள் பன்னிருவருளிச்செய்த

தமிழ்வேதமாகிய

# நாலாயிரதிவ்யப்ரபந்தம்.

இஃது,

பரமகாருணிகரானபெரியவாச்சான்பிள்ளை

விசதவாக்சிகாமணியான

மணவாளமாமுநிகள்முதலான பூர்வாசார்யர்களருளிச்செய்த

வ்யாக்யானங்களுக்கிணங்க,

அத்யாபகர்கள் நிறுத்துமிடங்களுக்கும்,

இரட்டித்துச் சேவிக்கப்படும் பாட்டுக்களுக்கு குறிப்புகளும்,

பாடாந்தரமும், அருஞ்சொற்களின் அர்த்தமும்,

திருமலை விளாங்குப்பம்,

உ-வே-ஸ்ரீ நிவாஸவரதாசார்யஸ்வாமிகளால்

பரிசோதிக்கப்பட்டு.

இராகதாளங்கள்-அடிவரவு-திவ்யப்ரபந்த விஷயஸூசிகை நூற்றெட்டு திவ்யதேச அட்டவணை - ஆழ்வார்களின் படங்கள் அன்னோர் சரித்ரவைபவ ஸாராம்சம் இவைகளுடன்,

சென்னை,

பி-நா-சிதம்பரமுதலியாரவர்களது

வித்தியாரத்திநாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

ஸ்ரீபராங்குசர் திருவவதாரவருஷம்-௫௩௫-வதான

சோபகிருதுஸு.

இதன்விலை ரூபா—௨௰.




ஆண்டாள்.


பெரியாழ்வார்.


குலசேகரபெருமாள்.


திருமழிசைப்பிரான்.


தொண்டரடிபொடிகள்


திருப்பாணாழ்வார்.


மதுரகவியாழ்வார்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# அவதாரிகை.

[ஆழ்வார்கள் அவதரித்ததற்குக் காரணம்.]

ஸ்ரீய:பதியான ஸர்வேஶ்வரன், வேதங்களாலும் வேதாந்தங்களாலும் ரிஷிகளாலும் ஆழ்வார்களாலும் கொண்டாடப்பட்ட அதிசயத்தையுடைய பரமபதத்தில், நீண்ட மதிள்களையும் கோபுரங்களையுமுடைய திருப்படைவீட்டில், மணிமாடமாளிகைகளால்சூழப்பட்ட செம்பொன்செய்கோயிலிலே, ஆயிரம் மாணிக்கக்கால்கள் நிறுத்தப்பட்டு ரத்நமயமான திருமாமணி மண்டபத்தின் நடுவேவிளங்குகின்ற சிங்காஸநத்தின்மேலே, உடனமர்காதல்மகளிர் திருமகள் மண்மகள் ஆயர்மடமகள் ஆகிற ஸ்ரீ பூமிநீளைகளோடேகூட உபயவிபூதிக்கும் நிர்வாஹனுய்க் கொண்டெழுந்தருளியிருந்து, தானும் நிரதிசய ஆநந்தயுக்தனுய், அநந்தகருட விஷ்வக்ஸேநர் முதலான நித்யஸூரிகளையும், நிவ்ருத்தஸம்ஸாரருமாய் நித்யரோபாதி லப்தகைங்கர்யருமான முக்தரையும் ஆநந்திப்பித்துக்கொண்டு போராநிற்கச்செய்தே; "இவர்களைப்போலே ஸம்ஸாரிகளும் நம்மை அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான நிரதிசய ஆநந்தரூபமத் கைங்கர்யமாகிற மஹாஸம்பத்தைப்பெற்று வாழுகைக்கு யோக்யதை உண்டாயிருக்க இத்தை யிழந்திருப்பதே!" என்று அங்குத்தை அநுபவங்களொன்றும் உண்டதுருக்காட்டாதே அவன் தனியரைப்போலே மிகவும் நொந்து, இவர்கள் கரணகளேபரங்களின்றியே இறகொடிந்த பக்ஷியைப்போலே யிருக்கிறபடியைக்கண்டு, பரமதயாளுவாய்க்கொண்டு ஸகலாத்மாக்களுக்கும் கரணகளேபரப்ரதாநம்பண்ணியருள; இவர்களும், ஸர்வேஸ்வரன் தன்திருவடிகளைக்கிட்டி ஆஶ்ரயிக்கைக்காகக் கொடுத்த சரீரத்தைக்கொண்டு அவன் நினைவின்படிசெய்யாதே, ஸமிதைதறிக்கக்கொடுத்த கத்தியைக்கொண்டு பசுவின்வாலைத் தறிப்பாரைப்போலவும் களை யெடுக்கக் கொடுத்த கோலைக்கொண்டு கண்ணைக் கிளரிக்கொள்வாரைப் போலவும், ஆறுநீந்தக்கொடுத்த தெப்பத்தைக் கொண்டு கரையேறுதே நீர்வாய்க்காலே யொழுகிக் கடலில் புகுவாரைப்போலவும், இச்சரீரத்தை ஶப்தாதிவிஷயப்ராவண்யத்துக்கு உறுப்பாக்கி பிறவியென்னும் கடலில் புக்கு அார்த்தப்படுகிற படியைக்கண்டு நல்

வழிகண்டு நடக்கைக்குடலாக, தன் க்ருபையாலே, ஶாஸ்த்ர ப்ரதானம்பண்ணியருள; அந்தஶாஸ்த்ரங்களை அப்யஸிக்கைக்குஅநேகயோக்யதை வேண்டியும் நெடுங்காலம் அப்யஸித்தாலன்றி ஸாதிக்கக்கூடாமலும் இருக்கிறபடியைத் திருவுள்ளம்பற்றி, ஸுலபமான திருவஷ்டாக்ஷர ப்ரம்ஹவித்யையை தானே வெளிப்படுத்தினவிடத்திலும், அதின்படிசெய்யாதே, எல்லாப்பாபங்களுக்கும்ஹேதுவாய்தன்ஸ்வாதந்த்ர்யரூபமான ஆத்மாபஹாரத்தைப் பண்ணி அநாதிகர்மவாஸநாதூஷிதராயிருக்கிற படியைக்கண்டு ; சீட்டுக்கு இசையாதாரைச்சேனையைத்திரட்டி வெல்லும் ராஜாக்களைப்போலே, ஸர்வேஶ்வரன் "நாமேபோய் இவர்களை வாரிப்பிடியாகப்பிடித்துக்கொண்டு வரவேணும்" என்று ராம க்ருஷ்ணாத்யவதாரமாக அவதரித்து, ஶாஸ்த்ரீய மர்யாதைகளைத் தான் அநுஷ்டித்தும் அநுஷ்டிப்பித்தும் படாதன பட்டுத் திருத்தப்பார்த்தவிடத்திலும், ஆஸுரப்ரக்ருதிகளாய்த் தன்னைவந்து கிட்டாதே எதிரிட்டு அதமமான கதிகளில் விழுகிறபடியைப் பார்த்து, "விஜாதீயரான நமக்கு இது ஸாத்யமன்று, இணக்குப் பார்வையிட்டு ம்ருகம்பிடிப்பாரைப்போலே மநுஷ்யஸஜாதியரான ஆழ்வார்களைக்கொண்டே கார்யங்கொள்ளவேணும்" என்று அறுதியிட்டு, ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வைஜயந்தீவநமாலைகளையும், ஸ்ரீபூமிநீளைகளையும், ஸ்ரீபஞ்சாயுத ஆழ்வார்களையும், அநந்த கருட விஷ்வக்ஸேநப்ரப்ருதிகளையும் பார்த்து, "நீங்கள்போய் லீலாவிபூதியில் நாநாவர்ணங்களிலும் அவதரித்து எல்லாஆத்மாக்களையும் உத்தரிப்பியுங்கள்" என்று நியமித்தருள ; அவர்களும், தாம்ரபர்ணிகாவேரிமுதலானநதிகளின் ஸமீபங்களான தமிழ்த்தேசங்களில், தாழ்ந்தாரை உயர்த்துகைக்காக நாநாவர்ணங்களில் வந்தவதரிக்க ; ஸர்வேஶ்வரனும் ஆழ்வார்களுக்குமயர்வறமதிநலமருளி, அவர்கள்முகேந, ஸர்வாதிகாரமான த்ரவிட வேதரூப திவ்யப்ரபந்தங்களை ப்ரகாசிப்பித்தருளினன்.

வேறொன்றில் கண்வையாதேபகவத்குணங்களிலேயே ஆழங்கால்பட்டிருந்தமையால், இவர்களுக்கு ஆழ்வார்கள் என்றுபேராயிற்று.



# நாலாயிர திவ்யப்ரபந்தங்க ளருளிச்செய்த ஆழ்வார்கள்.

| ஆழ்வார்கள். | அவதரித்த காலம். | அம்சம். | அருளிச்செய்த ப்ரபந்தங்கள். | பாசுரம். |
|---|---|---|---|---|
| ௧. பொய்கை யாழ்வார் | த்வாபரயுகம் ௮,௬௨. ௯0௧ | பாஞ்சஜந்யாம்சம் | முதல்திருவந்தாதி | ௧00 |
| ௨. பூதத்தாழ்வார் | | கதாம்சம் | இரண்டாந்திருவந்தாதி | ௧00 |
| ௩. பேயாழ்வார் | | நந்தகாம்சம் | மூன்றாந்திருவந்தாதி | ௧00 |
| ௪. திருமழிசையாழ்வார் | | சக்ராம்சம் | திருச்சந்த விருத்தம் (௧௨0), நான்முகன் திருவந்தாதி (௯௬) | ௨௧௬ |
| ௫. மதுரகவியாழ்வார் | ௮, ௬௩, ௮௭௯ கலியுகம் ௪௩-வது நாள் ஹு | வைநதேயாம்சம் | கண்ணிநுண்சிறுத்தாம்பு | ௧௧ |
| ௬. நம்மாழ்வார் | | ஸேநாம்சம் | திருவிருத்தம் (௧00), திருவாசிரியம் (௭) பெரிய திருவந்தாதி (௮௭), திருவாய்மொழி (௧,௧0௨) | ௧௨௯௬ |
| ௭. குலசேகராழ்வார் | ௨௮ | கௌஸ்துபாம்சம் | பெருமாள்திருமொழி | ௧0௫ |
| ௮. பெரியாழ்வார் | ௪௭ | கருடாம்சம் | திருப்பல்லாண்டு (௧௨), திருமொழி(௪௬௧) | ௪௭௩ |
| ௯. ஆண்டாள் | ௯௮ | பூமிப்பிராட்டியாரம்சம் | திருப்பாவை (௩0), திருமொழி (௧௪௩) | ௧௭௩ |
| ௧0. தொண்ட ரடிப்பொடி யாழ்வார் | ௨௯௮ | வநமாலாம்சம் | திருமாலை(௪௫), திருப்பள்ளியெழுச்சி(௧0) | ௫௫ |
| ௧௧. திருப்பாணாழ்வார் | ௩௪௩ | ஸ்ரீவத்ஸாம்சம் | அமலனாதிபிரான் | ௧0 |
| ௧௨. திருமங்கையாழ்வார் | ௩௯௮ | சார்ங்காம்சம் | பெரியதிருமொழி (௧,0௮௪), திருக்குறுந்தாண்டகம் (௨0), திருநெடுந் தாண்டகம் (௩0), திருவெழுகூற்றிருக்கை (௧), சிறியதிருமடல் (௭௭௨), பெரிய திருமடல் (௧௪௮௨.) | ௧,௩௬௧ |
| | | | ஆக, பாசுரம்... | ௪,000 |

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

நாலாயிரதிவ்யப்ரபந்த

# விஷயஸூசிகை.

## முதலாயிரம்.

# இயற்பா.



* "ஸ்ரீமானான நாராயணனே ஸர்வஸ்மாத்பரன்" என்று அநுவாவ்யமான பரவஸ்து வாஸ்தவத்தை நிஷ்கர்ஷிக்கிறார்கள்.

# திருவாய்மொழி.



நாலாயிர திவ்யப்ரபந்த விஷயஸூசிகை முற்றிற்று.

| திருப்பதி. | எண். |
|---|---|
| அட்டபுயகரம் | எரு |
| அரிமேயவிண்ணகரம் | ஙஉ |
| அன்பில் | ச |
| ஆதனூர் | கூ |
| இந்தளூர் | உஉ |
| உறையூர் | உ |
| ஊரகம் | அக |
| கண்டியூர் | கரு |
| கரம்பனூர் | ரு |
| கவித்தலம் | உஅ |
| காரகம் | அங |
| கார்வானம் | அச |
| காவளம்பாடி | ஙஅ |
| காழிச்சீராமவிண்ணகரம் | உச |
| கூடலூர் | உரு |
| சாளக்கிராமம் | க00 |
| சிங்கவேழ்குன்றம் | கூஎ |
| சித்திரகூடம் | உங |
| சிரீவரமங்கை | ருக |
| சிறுபுலியூர் | கக |
| ஸ்ரீவில்லிபுத்தூர் | சஅ |
| ஸ்ரீவைகுந்தம் | ருச |
| செம்பொன்செய்கோயில் | ஙரு |
| தஞ்சைமாமணிக்கோயில் | ங |
| தலைச்சங்கநாண்மதியம் | கங |
| திருக்கச்சி | எச |
| திருக்கடன்மல்லை | கூங |
| திருக்கடிகை | கூரு |
| திருக்கடித்தானம் | எ0 |
| திருக்கண்டங்கடிநகர் | க0உ |
| திருக்கண்ணங்குடி | உசு |
| திருக்கண்ணபுரம் | கஎ |
| திருக்கண்ணமங்கை | உஎ |
| திருக்கள்வனூர் | அரு |
| திருக்காட்கரை | சுக |
| திருக்குடந்தை | கச |
| திருக்குருகூர் | சகூ |
| திருக்குளந்தை | ருசு |
| திருக்குறுங்குடி | ருஎ |
| திருக்கூடல் | சஎ |
| திருக்கோட்டியூர் | சஉ |
| திருக்கோவலூர் | எங |
| திருக்கோளூர் | ருஅ |
| திருச்செங்குன்றூர் | சுச |
| திருச்சேறை | கஉ |
| திருத்தண்கா | எசு |
| திருத்தண்கால் | சரு |
| திருத்தெற்றியம்பலம் | ஙசு |
| திருத்தேவனார்தொகை | ஙங |
| திருநறையூர் | உ0 |
| திருநாகை | ககூ |
| திருநாவாய் | சுரு |
| திருநின்றவூர் | அகூ |
| திருநீர்மலை | கூக |
| திருப்பாற்கடல் | க0எ |
| திருப்பிரிதி | க0ங |
| திருப்புட்குழி | அஅ |
| திருப்புலியூர் | சுங |
| திருபுல்லாணி | சச |
| திருபுளிங்குடி | ருஉ |
| திருப்பேரை | ருங |
| திருப்பேர்நகர் | அ |
| திருமணிக்கூடம் | ஙஎ |
| திருமாலிருஞ்சோலை | சக |
| திருமூழிக்களம் | சுஉ |
| திருமெய்யம் | சங |
| திருமோகூர் | சசு |
| திருவண்பரிசாரம் | சு0 |
| திருவண்வண்டூர் | சுஎ |
| திருவநந்தபுரம் | ருகூ |
| திருவயிந்திரபுரம் | எஉ |
| திருவயோத்தி | கூஅ |
| திருவரங்கம் | க |
| திருவல்லவாழ் | சுசு |
| திருவல்லிக்கேணி (ப்ரந்தாரண்யம்) | கூச |
| திருவழுந்தூர் | க0 |
| திருவாட்டாறு | சுஅ |
| திருவாய்ப்பாடி | க0சு |
| திருவாலி | கஅ |
| திருவாரன்விளை | எக |
| திருவிடவெந்தை | கூஉ |
| திருவிண்ணகர் | சுக |
| திருவெவ்வுள் | கூ0 |
| திருவெள்ளக்குளம் | ஙகூ |
| திருவெள்ளறை | சு |
| திருவெள்ளியங்குடி | உகூ |
| திருவெஃகா | அஉ |
| திருவேங்கடம் | கூசு |
| துவாரகை | க0ச |
| தொலைவில்லிமங்கலம் | ரு0 |
| நந்திபுரவிண்ணகரம் | உக |
| நிலாத்திங்கள்துண்டம் | அ0 |
| நீரகம் | எகூ |
| நைமிசாரணியம் | கூகூ |
| பரமபதம் | க0அ |
| பரமேச்சுரவிண்ணகரம் | அஎ |
| பவளவண்ணம் | அசு |
| பாடகம் | எஅ |
| பார்த்தன்பள்ளி | ச0 |
| புள்ளம்பூதங்குடி | எ |
| மணிமாடக்கோயில் | ங0 |
| வடமதுரை | க0ரு |
| வண்புருடோத்தமம் | ஙச |
| வதரியாச்சிரமம் | க0க |
| வரகுணமங்கை | ருரு |
| வித்துவக்கோடு | சுகூ |
| வேளுக்கை | எஎ |
| வைகுந்தவிண்ணகரம் | ஙக |

நூற்றெட்டுத்திருப்பதிகளின் அகராதி முற்றிற்று.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.

# பெரியாழ்வார் வைபவம்.



𑌮𑌿𑌥𑍁𑌨𑍇 𑌸𑍍𑌵𑌾𑌤𑌿𑌜𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋 𑌰𑌥𑌾𑌂𑌶𑌂 𑌧𑌨𑍍𑌵𑌿𑌨𑌃 𑌪𑍁𑌰𑍇 ।
𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇 𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌂 𑌵𑌿𑌷𑍍𑌣𑍋 𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂 𑌪𑍁𑌰𑌃𑌶𑌿𑌖𑌮𑍍 ॥
மிதுநே ஸ்வாதிஜம் விஷ்ணோ ரதாம்ஶம் தந்விநா: புரே |
ப்ரபத்யே ஶ்வஶுரம் விஷ்ணோ விஷ்ணுசித்தம் புரஶ்ஶிகம் ||

---

இவ்வாழ்வார், ஸ்ரீவில்லிபுத்தூரில், கலி - சஎ - வதான க்ரோதந ஸ்ரீ ஆனிமீ சுக்லபக்ஷம் ஏகாதசி ஞாயிற்றுக்கிழமை கூடின ஸ்வாதிநக்ஷத்ரத்தில், கருடாம்ஶராய், வேதியர்குலத்தில் பதுமையாருக்கும் முகுந்தாசார்யருக்கும் புத்ரராகத் திருவவதரித்து, "விஷ்ணுசித்தர்" என்னும் திருநாமத்தை யுடையராய், வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுககடாக்ஷத்தினால் ஸஹஜபகவத்தாஸ்யமுடையராய், "அவனுகந்தவடிமையேநாம் செய்யத்தக்கது" என்று நினைத்து, அதையறிகைக்கு அவதாரங்களை யாராய்ந்து பார்த்தவிடத்தில்; ஸர்வேஶ்வரன், பூபாரத்தைப்போக்கி தர்மத்தை நிலைநிறுத்தி ஸாதுக்களைக் காக்கும்பொருட்டு தேவகிவயிற்றில் க்ருஷ்ணனாய்ப் பிறந்து, யசோதைவளர்க்க வளர்ந்து, கம்ஸனுக்குப் பணிசெய்து வந்த ஸ்ரீமாலாகாரர் திருமாளிகையில் எழுந்தருளிப்பூ * இரக்க, அவர் உகந்துசூட்டினபடியைக் கண்டு, "இவ்விஷயத்துக்குப் பூவிடுகையே உகப்பு" என்று நிச்சயித்து, திருநந்தவநஞ்செய்து, வடபெருங்கோயிலுடையானுக்குத்திருமாலைகட்டிச் சாத்திக்கொண்டிருந்தார்.

இக்காலத்தில், பாண்டியகுலத்திற்பிறந்த "ஸ்ரீவல்லபதேவன்" என்னும் ஓரரசன், தார்மிகனாகையால் சிறியத்தைப் பெரியது நலியாதபடி "கூடல்" என்னும்மதுரையில் அரசாண்டு கொண்டிருந்தான். அவ்வரசன், ஒருநாளிராத்திரியில் நகரசோதநத்திற்கு வருகையில், ஒரு திண்ணையின்மேல் ஒரு வேதியனிருக்கக்கண்டு, அரசன் அவனையெழுப்பி "நீயார்" என்றுகேட்க; அவனும் "நானொரு ப்ராம்ஹணன், கங்காஸ்நாநம்பண்ணிவருகிறேன்" என்ன;. "உனக்குத்தெரியுமாகில் ஒருக்ரந்தம்சொல்லு" என்ன; அவ்வந்தணனும், ("𑌵𑌰𑍍𑌷𑌾𑌰𑍍𑌥𑌮𑌷𑍍𑌟𑍌 𑌪𑍍𑌰𑌯𑌤𑍇𑌤 𑌮𑌾𑌸𑌾𑌨𑍍 𑌨𑌿𑌶𑌾𑌰𑍍𑌥𑌮𑌰𑍍𑌧𑌂 𑌦𑌿𑌵𑌸𑌂 𑌯𑌤𑍇𑌤 । 𑌵𑌾𑌰𑍍𑌧-

---

* இரக்க - யாசிக்க.

𑌵𑌾𑌰𑍍𑌧𑌕𑍍𑌯𑌹𑍇𑌤𑍋𑌰𑍍𑌵𑌯𑌸𑌾 𑌨𑌵𑍇𑌨 𑌪𑌰𑌤𑍍𑌰𑌹𑍇𑌤𑍋𑌰𑌿𑌹𑌜𑌨𑍍𑌮𑌨𑌾 𑌚|
(வர்ஷார்த்தமஷ்டௌ ப்ரயதேதமாஸாந் நிஶார்த்தமர்த்தம் திவஸம்ய தேத - வார்த்தக்யஹேதோர்வயஸாநவேந பரத்ரஹேதோரிஹஜந்மந ச) இதின்பொருள்-மழைகாலத்தில் வேண்டியவைகளுக்கு எட்டு மாஸங்களிலும், இராத்திரிக்கு வேண்டியவைகளுக்குப் பகலிலும், கிழத்தனத்தில் வேண்டியவைகளுக்கு யௌவநத்திலும், பரலோகத்துக்கு வேண்டியவைகளுக்கு இந்த ஜந்மத்திலும் ஒருவன் ப்ரயத்நஞ் செய்யவேண்டும்" என்று சொல்ல; அரசனும், வித்வானுகையால், நமக்கோ த்ருஷ்டத்தில் ஒருகுறைகளுமில்லை, இனி அத்ருஷ்டயத்நம் பண்ணும்படியென்?" என்று மனக்கேதமுற்று, தன் புரோஹிதனை செல்வநம்பியை நோக்கி, "புருஷார்த்த நிர்ணயபூர்வகமாக அத்ருஷ்டஸித்திக்கு உபாயமென்?" என்று வினவ; புரோஹிதனும், "வித்வான்களைத்திரட்டி, வேதாந்தஸித்தமான பரதத்த்வ நிர்ணயம் பண்ணுவித்து, அவ்வழியாலே பெறவேணும்" என்ன; அரசனும் "அப்படியேயாகிறது" என்று வெகுத்ரவ்யத்தை வித்யாசுல்கமாக ஒரு தோரணத்தில் கிழிச்சீரையிலே கிழியாகக்கட்டுவித்து, ராஜ்யத்தில் வித்வான்களைத்திரட்டும்படி உத்தரவுசெய்தான்.

அப்போது, வடபெருங்கோயிலுடையான், இவ்வாழ்வாரைக் கொண்டு, வேதாந்தத்திற்சொல்லப்படும் பரத்வத்தை இவ்வுலகத்தில் ப்ரகாசிப்பிக்கைக்காக, மெய்யடியாரான இவ்வாழ்வாருடைய ஸ்வப்நத்தில் எழுந்தருளி, "நீர்போய்க்கிழியையறுத்துக்கொண்டு வாரும்" என்றருளிச்செய்ய; "அது வித்யாசுல்கமாக ஏற்படுத்தப்பட்டதன்றோ? ஒன்றுமறியாத நான் என்கையில் கொட்டுத்தழும்பைக்காட்டிக் கிழியையறுக்கலாமோ?" என்ன; "அது உமக்கு பரமோ? நாமன்றோ வேதார்த்தத்தை ப்ரதிபாதிக்கக்கடவோம்?" என்று ஆழ்வாரை நிர்ப்பந்தித்தருள; சிற்றஞ் சிறுகாலையிலெழுந்திருந்து, "இதொருஸ்வப்நமிருந்தபடியேன்!" என்று ஆச்சரியப்பட்டு, பாண்டியனுடைய வித்வத்கோஷ்டியில் எழுந்தருளினவளவில், செல்வநம்பியும் அரசனும் ப்ராப்ஹஜ்ஞோத்தமரான இவ்வாழ்வாரைக்கண்டு எழுந்து சேவித்து மிகவும் ஆதரிக்க; இதைக்கண்ட வித்வான்கள், "இவர்க்கு வேதாப்யாஸம் மிகவுமில்லை" என்று நினைத்து, அரசனை * அதிக்ஷேபிக்க; அப்போது, அபிமாநதுங்கனான செல்வநம்பி ஆழ்வாரைத் தெண்டனிட்டு, வேதாந்தப்ரதிபாத்யமான பரதத்த்வத்தை நிச்சயித்தருளிச் செய்யவேணும், என்று விஜ்ஞாபித்தருளினர்.

* அதிக்ஷேபிக்கை - நிந்திக்கை.

இவ்வாழ்வாரும், ஸ்ரீவால்மீகிபகவான் ப்ரம்ஹாவின் ப்ரஸாதத்தாலே எல்லாவருத்தங்களையும் அறிந்தாற்போலவும் ஸ்ரீபாஞ்சஜந்ய ஸ்பர்ஶத்தாலே ராஜகுமாரனுன த்ருவன் ஸர்வஜ்ஞனுனுற்போலவும், வடபெருங்கோயிலுடையானுடைய நிர்ஹேதுககடாக்ஷத்தாலே, நன்றுக வறிந்துகொண்டு, "அகாரவாச்யனுன ஸ்ரீமந்நாராயணனே ஸர்வஸ்மாத்பரன்" என்று, ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸபுராணுதி வசநஸஹஸ்ரங்களால் பஹுமுகமாக ப்ரதிபாதித்தருளிச் செய்கையால், வித்யாஶுல்கமாகத் தோரணத்தில் கிழியாகக் கட்டிவைத்த தநம் இவர்முன்னேதானே வளைய, ஆழ்வாரும் ப்ரீதியோடே அக்கிழியை அறுத்தருளினுர்.

இதைக்கண்ட வித்வான்களும் அரசன்முதலானேரும் * வியப்புற்று, இவர் திருவடிகளில் தண்டம் ஸமர்ப்பித்து, மிகவும் ப்ரீதியுடனே ஆழ்வாரை யானையின்மேலேற்றி, அந்த வித்வான்கள்குடைசாமரம்முதலானவை தரித்து ஸேவிக்கவும், "வேதப்பயன்கொள்ளவல்ல மெய்ந்நாவன் வந்தான்" என்று விருதூதித் திருச்சிந்நம் பரிமாறவும், ஈண்டியசங்கமெடுத்தூதவும், அரசன் இவர்க்கு பட்டர்பிரான் என்று திருநாமம்சாத்தி, தானும் தன்பரிகரத்துடன் ஸேவித்துக்கொண்டு, நகரிவலம்வருகிற மஹோத்ஸவத்தைக் காண்கைக் காண்கைக்காக, புத்ரர்களை ப்ரம்ஹரதம்பண்ணும்போது மாதா பிதாக்கள்காண ஆதரித்துவருமாப்போலே, ஸர்வேஶ்வரனும், பிராட்டிஸஹிதனுய், கரியமேனியுடன் பெரியதிருவடிமேலேறி, திவ்யாயுததரனுய், ப்ரம்ஹருத்ராதிகளெல்லாரும் ஸேவிக்க, ஆகாசத்தில் திவ்யமங்கள விக்ரஹத்தோடுங்கூடி, நெருங்கிநிற்கிற இந்திரர்களுடன் சந்நிஹிதனுக; இந்த திவ்யமங்கள விக்ரஹத்தை ஆழ்வார் ஸேவித்து. தன்ஸம்ருத்தியைப் பார்த்து இறுமாந்திராதே, அவன் கடாக்ஷத்தாலே அளவற்ற பக்தியைப்பெற்றவராகையாலே,அவனுடையஸர்வஜ்ஞத்வம் ஸர்வஶக்தித்வம் ஸர்வரக்ஷகத்வம் முதலானவைகளை அநுஸந்திப்பதற்கு முன்னமே, முதலில், நீலமேனியிலுண்டான ஸௌந்தர்யம் ஸௌகுமார்யம் லாவண்யம் யௌவநம்முதலானவற்றைக்கண்டு, "பரமபதத்தில் நித்யஸூரிகளால் எப்போதும் தர்ஶநம்பண்ணப்படுகிறவஸ்து, கலி நடமாடுகிற இத்தேசத்தில்வந்து கண்ணுக்குவிஷயமாவதே! இவ்வஸ்துவுக்கு என்னதீங்கு வருகிறதோ!" என்னும் அதிஶங்கைபாலே,யானைக்கழுத்தின் மேல்கிடக்கும் மணிகளைத் தாளமாகக்கொண்டு, "இந்த ஸௌந்தர்யாதிகளுக்கு ஒரு தீங்குவாராதே நித்யமாகச் செல்ல

* வியப்பு - ஆச்சரியம்.

வேணும்" என்று தம் ஸ்வரூபதசையைமறந்து, ப்ரேமபரவசராய்க் கொண்டு மங்களாஶாஸநம்பண்ணியருளி, "இவ்விஷயத்துக்கு நாமொருவரும் மங்களாஶாஸநம் பண்ணுகை போதாது" என்று, ஐஶ்வர்யகைவல்ய பகவச்சரணார்த்திகளையும் மங்களாஶாஸந யோக்யராம்படி திருத்திச்சேர்த்துக்கொண்டு, பலவகையாலும் திருப்பல்லாண்டு பாடியருளினர்.

பின்பு, இவ்வாழ்வார், அவ்வரசனையும் விஶேஷகடாக்ஷம்செய்தருளி, அவனால் ஸத்கரிக்கப்பட்டவராய், மீண்டு ஸ்ரீவில்லிபுத்தூர்க் கெழுந்தருளி; தநத்தை வடபெருங்கோயிலுடையான் திருமுன்னே வைத்து தண்டம் ஸமர்ப்பித்து, தான்முதல் உபக்ரமித்தருளினபடி திருமாலைகட்டி வடபெருங்கோயிலுடையானுக்கு நித்யமாகச்சாத்தி, ஸேவித்துக்கொண்டிருந்தார்.

இவர்தாம், அவதாரங்களை முன்னிட்டுக்கொண்டு, க்ருஷ்ணவதாரத்தில் ஸ்ரீமாலாகாரர் திருமாளிகையிலெழுந்தருளிப் பூவிரந்து சாத்தினன் என்றன்றோ முந்துறத்திருநந்தவநஞ்செய்து திருமாலை ஸமர்ப்பிக்கத் துடங்கினர். ஸ்ரீமாலாகாரர் திருமாலைசாத்தினபின்புமல்லரோடு பொருது வெற்றிகொண்ட தோளுக்குப் பல்லாண்டுபாடுகையாலும், க்ருஷ்ண வ்ருத்தாந்தத்தில் ப்ரவணராய், க்ருஷ்ணன் அவதரித்தது முதலாகச் செய்தருளின வ்ருத்தாந்தத்தை, கோபஜந்மத்தை ஆஸ்தாநம்பண்ணி அநுகரித்து, அவனுடையஸௌஶீல்யம் ஸௌலப்யம்முதலான குணங்களை நன்றாகஅநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான அதிகப்ரீதியாலே "பெரியாழ்வார் திருமொழி" என்கிற திவ்யப்ரபந்தத்தை யருளிச்செய்து, ஸஜ்ஜநங்களுக்கு உபகரித்தருளி, லோகத்தை வாழ்வித்தருளினர்.

நல்லதிருப்பல்லாண்டுநான்மூன்றோன்வாழியே
நானூற்றறுபத்தொன்றுநமக்குரைத்தான்வாழியே
சொல்லரியவானிதனிற்சோதிவந்தான்வாழியே
தொடைசூடிக்கொடுத்தாளைத்தொழுமப்பன்வாழியே
செல்வநம்பிதனைப்போலச்சிறப்புற்றான்வாழியே
சென்றுகிழியறுத்துமால்தெய்வமென்றான்வாழியே
வில்லிபுத்தூர்நகரத்தைவிளங்கவைத்தான்வாழியே
வேதியர்கோன்பட்டர்பிரான்மேதினியில்வாழியே.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# குலசேகராழ்வார் வைபவம்.

𑌕𑍁𑌮𑍍𑌭𑍇𑌪𑍁𑌨𑌰𑍍𑌵𑌸𑍌𑌜𑌾𑌤𑌂𑌕𑍇𑌰𑌳𑍇𑌚𑍋𑌳𑌪𑌟𑍍𑌟𑌣𑍇।
𑌕𑍌𑌸𑍍𑌤𑍁𑌭𑌾𑌂𑌶𑌂𑌧𑌰𑌾𑌧𑍀𑌶𑌂𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇॥
கும்பேபுநர்வஸௌஜாதம் கேரளேசோளபட்டணே।
கௌஸ்துபாம்ஸம் தராதீஸம் குலஸேகரமாஸ்ரயே॥

---

இவ்வாழ்வார், கொல்லிநகரில், கலி-உ௰அ-வதான பராபவ௵ மாசிமீ சுக்லபக்ஷம் துவாதசி வெள்ளிக்கிழமைகூடின புனர்ப்பூசநக்ஷத்ரத்தில் ஸ்ரீகௌஸ்துபாம்ஸராய், சந்த்ரகுலத்தரசராகிய த்ருடவ்ரதர்க்குப் புத்ரராகத் திருவவதரித்தருளினார்.

இவர், ரதம் கஜம் துரகம் பதாதி என்கிற சதுரங்கபலத்தினால் விரோதிகளையெல்லாம் காடேற வோட்டி, தம்முடைய செங்கோலே செங்கோலாகச் சிறியதைப்பெரியது நலியாதபடி மிகவும் உதாரராய் ராஜ்யபாரம் பண்ணிக்கொண்டிருக்கையில், தம்மை சுதந்திரராயவும் நியந்தாவாகவும் அபிமாநித்திருந்தார்.

இப்படியிருந்தவிவரை, உபயவிபூதி நிர்வாஹகனாய் ஸர்வநியந்தாவான ஸ்ரீமந்நாராயணன் தன்நிர்ஹேதுகபரமக்ருபையாலே, இவருடைய ராஜஸ தாமஸகுணங்கள் தலைமடிந்து ஸத்வகுணமே தலையெடுக்கும்படி கடாக்ஷித்து, தம்முடைய ஸ்வரூப ரூப குண விபூதிகளையெல்லாம் நன்றாகக்காட்டிக்கொடுக்க; இவ்வாழ்வார், அவற்றையெல்லாம், பகவத் பக்திரூபமான ஜ்ஞாநத்தையுடையராய்க்கொண்டு கண்டபின்பு, இப்பூமியிலுள்ள ஸம்ஸாரிகள், தேஹத்தில் ஆத்மாபிமாநத்தைப்பண்ணி, தேஹத்துக்கு வசப்பட்டு, தேஹபோகத்தை அநுபவித்து, ஸர்வேஸ்வரனை நினையாமல், ஐம்புலன்கள்கண்டவின்பத்தை ஆதரித்துத்திரிவதையும், அவர்கள்நடுவேஉயிர்க்கழுவிலிருப்புப்போல் தாமிருப்பதையுங்கண்டு, யானைக்கழுத்தி லிருந்து அரசாண்டு ஸ்வகரூபமாக ராஜபோகத்தை யநுபவிக்கிற ராஜத்வமும் இவர்க்கு நெருப்புப்போல்தோற்ற, ஸஹிக்கமாட்டாதவராய், ஸ்ரீவிபீஷணாழ்வான் எல்லாபோகங்களையும் அடியோடேவிட்டு ஸர்வலோக ஸரண்யரானபெருமாளை ஆஸ்ரயித்தாற்போல், இவரும் "இன்பமரும்செல்வமு மிவ்வரசும் யான்வேண்டேன்" என்று சிற்றின்பங்களில் நசைய

ற்று, திருவரங்கப்பெருநகரில் அரவணையிற்பள்ளிகொள்ளும் திருவரங்கனைக் கண்ணாரக்கண்டுகக்கும் காதலுடன், "கோயிலையும் அங்குள்ள ஸ்ரீவைஷ்ணவஸமூஹத்தையும் கண்டு அநுபவிப்பதெப்போதோ? என்று ஸ்ரீரங்கயாத்ரையில் நாடோறும் ஆசையுடையராய், அங்கே நித்யவாஸம்பண்ணி; கங்கை துடக்கமான தீர்த்தங்களுக்கும் மேலான ஸ்வாமி புஷ்கரிணியையுடைத்தாய், பரமரிஷிகள்முதலான மஹாத்மாக்கள் நித்யவாஸம்பண்ணும் திருவேங்கடமலையில், ஸ்தாவர திர்யக் ஜந்மங்களைப் பரிக்ரஹித்து வாஸம்பண்ண ஆசைப்பட்டு, இப்படிமற்றுமுண்டான திவ்யதேசங்களெங்கும் எழுந்தருளி, அங்கங்குள்ள எம்பெருமான்களையும் ஸேவித்து, அங்கங்கேநித்யவாஸம்பண்ண ஆசையுடையராய்; அஷ்டாதசபுராண உபபுராணஇதிஹாஸாதிகளின் ஸாரபூத, மான முகுந்தமாலை அருளிச்செய்தார்.

வேதவேத்யனான பரமபுருஷன் தசரதபுத்ரனாய் வந்தவதரித்தருளினாற்போல், அந்த வேதங்கள்தாமும் ஸ்ரீவால்மீகிபகவான் முகேந இதிஹாஸங்களில் உத்தமமான ஸ்ரீராமாயணமாய்க்கொண்டு ப்ரகாசித்ததாகையாலே, அத்தையே இவ்வாழ்வார் தமக்குப் போதுபோக்காகக்கேட்டுப் போராநிற்க,

"𑌚𑌤𑍁𑌰𑍍𑌦𑌶 𑌸𑌹𑌸𑍍𑌰𑌾𑌣𑌿 𑌰𑌕𑍍𑌷𑌸𑌾𑌂 𑌭𑍀𑌮𑌕𑌰𑍍𑌮𑌣𑌾𑌂 ।
𑌏𑌕𑌶𑍍𑌚 𑌰𑌾𑌮𑍋 𑌧𑌰𑍍𑌮𑌾𑌤𑍍𑌮𑌾 𑌕𑌥𑌂 𑌯𑍁𑌦𑍍𑌧𑌂 𑌭𑌵𑌿𑌷𑍍𑌯𑌤𑌿 ॥
சதுர்த்தஸஸஹஸ்ராணி ரக்ஷஸாம்பீமகர்மணாம் |
ஏகஸ்சராமோதர்மாத்மா கதம்யுத்தம்பவிஷ்யதி ||

என்னும் தருவாயிலே, "பெருமாளும், இளையபெருமாளைப்பிராட்டிக்குத் திருமேனிக்காவலாகநிறுத்தி, கரன் த்ரிசரன் தூஷணன் முதலான பதினாலாயிரம் முரட்டு ராக்ஷஸர்களுடன், தர்மாத்மாவானசக்ரவர்த்தித் திருமகன் ஒருவரே யுத்தஞ்செய்யத்துணிந்தார்! எங்கு இளைக்கிறதோ! என்று ரிஷிவயிறுபிடிக்கிறான், என்றுகேட்டு; இவ்வாழ்வாரும், "பெருமாளுக்கு என்ன அநர்த்தம் விளையுமோ? வாளும் வில்லுங்கொண்டு பின்செல்வாரொருவருமில்லையே!" என்று சதுரங்கபலத்தோடே பெருமாளுக்குப் படைத்துணையாகத் தாமெழுந்தருளினார். இதைத் தவிர்க்கைக்காக, மந்த்ரிகள் உபாயத்தினால் சிலரையெதிரேயனுப்பி, "பெருமாள் அந்தப்பதினாலாயிரம் துஷ்டராக்ஷஸர்களையும் தாமொருவரே நிரஸித்து மீண்டெழுந்தருளினார்" என்றுமெதிரிவிக்க; அதைக்கேட்டு ஆநந்தஸமுத்ரத்தில்மூழ்கித்திரும்பியெழுந்தருளினார்.

மந்த்ரிகள், "நம்முடைய ராஜாவான இவர்க்கு ஸ்ரீவைஷ்ணவ ஸஹவாஸத்தால் இத்தனைகலக்கங்களும் தேற்றங்களும்வந்தன, அவர்களுடைய ஸஹவாஸத்தைத் தவிர்க்கவேண்டும்" என்று நினைத்து, இவ்வாழ்வாருடைய க்ருஹார்ச்சனையெம்பெருமானுடைய திருவாபரணப்பெட்டியிலே நவரத்நசோபிதமாயிருப்பதொரு ஆரத்தைவைத்துமறைத்து, "இவருக்கு அந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவர்கள் எடுத்தார்கள்" என்று அவர்கள்மேல் பழிசுமத்த; அதற்கு ஆழ்வாரும் "பரனன்பர்கொள்ளார்" என்று சபதம்பண்ணி, அவர்களுக்காகத் தாம்பாம்பின்குடத்தில் கையிட்டருளி ஜயிக்க; இதை மந்த்ரிகள்கண்டு தாங்கள்செய்த அக்ருத்யத்தை விண்ணப்பஞ்செய்து, அந்த ஆரத்தை யிவர்திருமுன்பே வைத்துத் தெண்டன்ஸமர்ப்பித்தார்கள்.

பின்பு, ஆழ்வார்க்கு பகவத்வைபவஞ் சொல்லப்பொறுதார் நடுவிலிருக்கு மிருப்பு அக்நிஜ்வாலையி லகப்பட்டாற்போல் அதிதுஸ்ஸஹமாயிருக்கையாலே தம்குமாரருக்கு ராஜ்யாபிஷேகம்பண்ணி, ராஜ்யபாரத்தை அவரிடத்தில்வைத்து, "ஆனதசெல்வத்தரம்பையர்கள் தற்சூழ வானாளும் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்" என்றுஐஹிக ஆமுஷ்மிக திவ்யமாநுஷபோகங்களில் நசையற்று, தமக்கு அந்தரங்கரான ஸ்ரீவைஷ்ணவ ஸஹவாஸத்துடன் திருவரங்கத்துக்கெழுந்தருளி, தகட்டிலழுத்தினமாணிக்கம்போன்ற தேஜஸ்ஸோடே உறங்குவான்போல் யோகுசெய்கின்ற அணியரங்கத்தம்மானைக்கண்களாரக்கண்டு வாயாரவாழ்த்தி அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான அதிக ப்ரீதியாலே, பகவத்பாகவத வைபவத்தையெல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கைக்காக. "பெருமாள் திருமொழி." என்கிற திவ்யப்ரபந்தத்தையருளிச்செய்து லோகத்தை வாழ்வித்தருளினார்.

அஞ்சநமாமலைப்பிறவியாதரித்தான்வாழியே
அணியரங்கர்மணத்தூணையமர்ந்தசெல்வன்வாழியே
வஞ்சிநகரந்தன்னைவாழ்வித்தான்வாழியே
மாசிதனிற்புனர்ப்பூசம்வந்துதித்தான்வாழியே
அஞ்சலெனக்குடப்பாம்பில்கையிட்டான்வாழியே
அநவரதமிராமகதையகமகிழ்வோன்வாழியே
செஞ்சொல்மொழிநூற்றஞ்சுஞ்செப்பினான்வாழியே
சேரலர்கோன்செங்கமலத்திருவடிகள்வாழியே.

குலசேகராழ்வார் திருவடிகளேசரணம்.





ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉

# பொதுத்தனியன்கள்.

### அழகியமணவாளனருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂- 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌮𑍍|
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂𑌵𑌨𑍍𑌦𑍇- 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂𑌮𑍁𑌨𑌿𑌮𑍍||

ஸ்ரீஶைலேஶதயாபாத்ரம்-தீபக்த்யாதிகுணார்ணவம் |
யதீந்த்ரப்ரவணம்வந்தே-ரம்யஜாமாதரம்முநிம் ||

### கூரத்தாழ்வானருளிச்செய்தது.

𑌲𑌕𑍍𑌷𑍍𑌮𑍀𑌨𑌾𑌥𑌸𑌮𑌾𑌰𑌮𑍍𑌭𑌾𑌂- 𑌨𑌾𑌥𑌯𑌾𑌮𑍁𑌨𑌮𑌧𑍍𑌯𑌮𑌾𑌂|
𑌅𑌸𑍍𑌮𑌦𑌾𑌚𑌾𑌰𑍍𑌯𑌪𑌰𑍍𑌯𑌨𑍍𑌤𑌾𑌂- 𑌵𑌨𑍍𑌦𑍇𑌗𑍁𑌰𑍁𑌪𑌰𑌮𑍍𑌪𑌰𑌾𑌂||

லக்ஷ்மீநாதஸமாரம்பாம்-நாதயாமுநமத்யமாம் |
அஸ்மதாசார்யபர்யந்தாம்-வந்தேகுருபரம்பராம் ||

𑌯𑍋𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑌚𑍍𑌯𑍁𑌤𑌪𑌦𑌾𑌮𑍍𑌬𑍁𑌜𑌯𑍁𑌗𑍍𑌮𑌰𑍁𑌕𑍍𑌮
𑌵𑍍𑌯𑌾𑌮𑍋𑌹𑌤𑌸𑍍𑌤𑌦𑌿𑌤𑌰𑌾𑌣𑌿𑌤𑍃𑌣𑌾𑌯𑌮𑍇𑌨𑍇|
𑌅𑌸𑍍𑌮𑌦𑍍𑌗𑍁𑌰𑍋𑌰𑍍𑌭𑌗𑌵𑌤𑍋𑌽𑌸𑍍𑌯𑌦𑌯𑍈𑌕𑌸𑌿𑌨𑍍𑌧𑍋
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌸𑍍𑌯𑌚𑌰𑌣𑍌𑌶𑌰𑌣𑌂𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑍇||

யோநித்யமச்யுதபதாம்புஜயுக்மருக்ம
வ்யாமோஹதஸ்ததிதராணி த்ருணாயமேநே |
அஸ்மத்குரோர்பகவதோஸ்யதயைகஸிந்தோ
ராமாநுஜஸ்யசரணௌஶரணம்ப்ரபத்யே ||

## ஆளவந்தாரருளிச்செய்தது.

𑌮𑌾𑌤𑌾 𑌪𑌿𑌤𑌾 𑌯𑍁𑌵𑌤𑌯𑌸𑍍𑌤𑌨𑌯𑌾 𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌃
𑌸𑌰𑍍𑌵𑌂 𑌯𑌦𑍇𑌵 𑌨𑌿𑌯𑌮𑍇𑌨 𑌮𑌦𑌨𑍍𑌵𑌯𑌾𑌨𑌾𑌮𑍍 ।
𑌆𑌦𑍍𑌯𑌸𑍍𑌯 𑌨𑌃 𑌕𑍁𑌲𑌪𑌤𑍇𑌰𑍍𑌵𑌕𑍁𑌳𑌾𑌭𑌿𑌰𑌾𑌮𑌂
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌤𑌦𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌯𑍁𑌗𑌳𑌂 𑌪𑍍𑌰𑌣𑌮𑌾𑌮𑌿 𑌮𑍂𑌰𑍍𑌧𑍍𑌨𑌾 ॥

மாதாபிதாயுவதயஸ் தநயாவிபூதிஸ்
ஸர்வம்யதேவநியமேநமதந்வயாநாம் |
ஆத்யஸ்யநஃகுலபதேர்வகுளாபிராமம்
ஸ்ரீமத்ததங்க்ரியுகளம்ப்ரணமாமிமூர்த்நா ||

## பட்டரருளிச்செய்தது.

𑌭𑍂𑌤𑌂 𑌸𑌰𑌶𑍍𑌚 𑌮𑌹𑌦𑌾𑌹𑍍𑌵𑌯 𑌭𑌟𑍍𑌟𑌨𑌾𑌥
𑌶𑍍𑌰𑍀𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰 𑌕𑍁𑌲𑌶𑍇𑌖𑌰 𑌯𑍋𑌗𑌿𑌵𑌾𑌹𑌾𑌨𑍍 ।
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁 𑌪𑌰𑌕𑌾𑌲 𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌨𑍍
𑌶𑍍𑌰𑍀𑌮𑌤𑍍𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌮𑍁𑌨𑌿𑌂 𑌪𑍍𑌰𑌣𑌤𑍋𑌽𑌸𑍍𑌮𑌿 𑌨𑌿𑌤𑍍𑌯𑌮𑍍 ॥

பூதம்ஸரஸ்யமஹதாஹ்வயபட்டநாத
ஸ்ரீபக்திஸாரகுலஶேகரயோகிவாஹாந் |
பக்தாங்க்ரிரேணுபரகாலயதீந்த்ரமிஶ்ராந்
ஸ்ரீமத்பராங்குஶமுநிம்ப்ரணதோஸ்மிநித்யம் ||

தனியன்கள்-முற்றும்.

ஜீயர் திருவடிகளே சரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

---

ஆழ்வார்களருளிச்செய்த

நாலாயிரப்ரபந்தத்துள்

# முதலாயிரம்.

## தனியன்.

### நாதமுனிகளருளிச்செய்தது.

𑌗𑍁𑌰𑍁𑌮𑍁𑌖𑌮𑌨𑌧𑍀𑌤𑍍𑌯- 𑌪𑍍𑌰𑌾𑌹𑌵𑍇𑌦𑌾𑌨𑌶𑍇𑌷𑌾𑌨𑍍
𑌨𑌰𑌪𑌤𑌿𑌪𑌰𑌿𑌕𑍍𑌲𑍢𑌪𑍍𑌤𑌂- 𑌶𑍁𑌲𑍍𑌕𑌮𑌾𑌦𑌾𑌤𑍁𑌕𑌾𑌮𑌃।
𑌶𑍍𑌵𑌶𑍁𑌰𑌮𑌮𑌰𑌵𑌨𑍍𑌦𑍍𑌯𑌂- 𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌥𑌸𑍍𑌯𑌸𑌾𑌕𑍍𑌷𑌾𑌤𑍍
𑌦𑍍𑌵𑌿𑌜𑌕𑍁𑌲𑌤𑌿𑌲𑌕𑌂- 𑌤𑌂𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌚𑌿𑌤𑍍𑌤𑌂𑌨𑌮𑌾𑌮𑌿॥

தோடயம் - நாட்டைராகம் - சம்பைதாளம்.

குருமுகமநதீத்யப்ராஹவேதாநஶேஷாந்
நரபதிபரிக்லிப்தம்ஶுல்கமாதாதுகாம꞉ |
ஶ்வஶுரமமரவந்த்யம்ரங்கநாதஸ்ய ஸாக்ஷாத்
த்விஜகுலதிலகம்தம்விஷ்ணுசித்தம்நமாமி ||

### பாண்டியபட்டரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

மின்னார் தடமதிள்சூழ் வில்லிபுத்தூரென்றொருகால் *
சொன்னார்கழற்கமலம்சூடினோம் *—முன்னாள்
கிழியறுத்தானென்றுரைத்தோம் * கீழ்மையினில்சேரும்
வழியறுத்தோம் நெஞ்சமே வந்து.

பாண்டியன்கொண்டாடப் பட்டர்பிரான்வந்தானென்று-*
ஈண்டியசங்கமெடுத்தூத† *—வேண்டிய
வேதங்களோதி விரைந்துகிழியறுத்தான் *
பாதங்கள்யாமுடைய பற்று.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர் திருவடிகளேசரணம்.

---

†எடுத்தோத" என்றும் "அடுத்தூத" என்றும் பாடாந்தரம்.

பெரியாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய

பாகவத ஸாரமாகும்

# திருமொழி.

## முதற்பத்து.

### திருப்பல்லாண்டு.

காப்பு.

வெண்செந்துறை.

நாட்டைராகம்-அடதாளம்.

‡‡ பல்லாண்டுபல்லாண்டு பல்லாயிரத்தாண்டு *
பல்கோடிநூறுயிரம்
மல்லாண்டதிண்டோள் மணிவண்ணு * உன்
‡ செவ்வடி செவ்விதிருக்காப்பு. (க)

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

‡‡ அடியோமோடும்நின்னேடும் பிரிவின்றியாயிரம்பல்லாண்டு *
வடிவாய்நின்வலமார்பினில் வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு *
வடிவார்சோதிவலத்துறையும் சுடராழியும்பல்லாண்டு *
படைபோர்புக்குமுழங்கு மப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே. (உ)

வாழாட்பட்டுநின் றீருள்ளீரேல் வந்துமண்ணும்மணமுங்கொண்மின் *
கூழாட்பட்டுநின் றீர்களை யெங்கள்குழுவினில்புகுதலொட்டோம் *
ஏழாட்காலும்பழிப்பிலோம் நாங்கள், இராக்கதர்வாழ் * இலங்கை
பாழாளாகப்படைபொருதானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (ஈ)

ஏடுநிலத்திலிடுவதன்முன்னம்வந் தெங்கள்குழாம்புகுந்து *
கூடுமனமுடையீர்கள் வரம்பொழிவந்தொல்லைக்கூடுமினோ *
நாடுநகரமும்நன்கறிய நமோநாராயணுயவென்று *
பாடுமனமுடைப்பத்தருள்ளீர் வந்துபல்லாண்டுகூறுமினே. (ச)

அண்டக்குலத்துக்கதிபதியாகி யசுரரிராக்கதரை *
இண்டக்குலத்தையெடுத்துக்களைந்த விருடீகேசன்றனக்கு *
தொண்டக்குலத்திலுள்ளீர்வந்தடிதொழு தாயிரநாமம்சொல்லி *
பண்டைக்குலத்தைத்தவிர்ந்து பல்லாண்டுபல்லாயிரத்தாண்டென்மினே. (ரு)

---

‡ "சேவடி" என்றும் பாடம்.

எந்தைதந்தைதந்தைதந்தைதம்மூத்தப்ப னேழ்படிகால்துடங்கி *
வந்துவழிவழியாட்செய்கின்றோம் * திருவோணத்திருவிழவி
லந்தியம்போதிலரியுருவாகி யரியையழித்தவனை *
† பந்தனைதீரப்பல்லாண்டு பல்லாயிரத்தாண்டென்றுபாடுதுமே. (சு)

தீயிற்பொலிகின்றசெஞ்சுடராழி திகழ்திருச்சக்கரத்தின் *
கோயிற்பொறியாலேயொற்றுண்டு நின்றுகுடிகுடியாட்செய்கின்றோம்
மாயப்பொருபடைவாணனை யாயிரந்தோளும்பொழிகுருதி
பாய * சுழற்றியவாழிவல்லானுக்குப் பல்லாண்டுகூறுதுமே. (எ)

நெய்யிடைநல்லதோர்சோறும் நியதமுமத்தாணிச் ‡ சேவகமும் *
கையடைக்காயும்கழுத்துக்குப்பூணொடு காதுக்குக்குண்டலமும் *
மெய்யிடநல்லதோர்சாந்தமுந்தந் தென்னைவெள்ளுயிராக்கவல்ல *
பையுடைநாகப்பகைக்கொடியானுக்குப் பல்லாண்டுகூறுவனே.(அ)

உடுத்துக்களைந்தநின்பீதகவாடை யுடுத்துக்கலத்ததுண்டு *
தொடுத்ததுழாய்மலர்சூடிக்களைந்தன சூடுமித்தொண்டர்களோம் *
விடுத்ததிசைக்கருமந்திருத்தித் திருவோணத்திருவிழவில் *
படுத்தபைந்நாகணைப் பள்ளிகொண்டானுக்குப்பல்லாண்டுகூறுதுமே.

எந்நாளெம்பெருமா னுன்றனக்கடியோமென்றெழுத்துப்பட்ட
வந்நாளே * அடியோங்களடிக்குடில் வீடுபெற்றுய்ந்ததுகாண் *
செந்நாள்தோற்றித் திருமதுரையுட்சிலைகுனித்து- * ஐந்தலைய
பைந்நாகத்தலைப்பாய்ந்தவனே! உன்னைப்பல்லாண்டுகூறுதுமே. (கய)

அல்வழக்கொன்றுமில்லாவணிகோட்டியர்கோன் * அபிமானதுங்கன்
செல்வனைப்போலத் திருமாலே! நானுமுனக்குப்பழவடியேன் *
நல்வகையால்நமோநாராயணாவென்று நாமம்பலபரவி *
பல்வகையாலும்பவித்திரனே! உன்னைப்பல்லாண்டுகூறுவனே. (கக)

‡‡பல்லாண்டென்றுபவித்திரனைப்பரமேட்டியைச்சார்ங்கமென்னும்*
வில்லாண்டான்றன்னை வில்லிபுத்தூர்விட்டுசித்தன்விரும்பியசொல் *
நல்லாண்டென்றுநவின்றுரைப்பார் நமோநாராயணாயவென்று *
பல்லாண்டும்பரமாத்மனைச் சூழ்ந்திருந்தேத்துவர்பல்லாண்டே.(கஉ)

அடிவரவு.—பல் அடி வாழ் ஏடண்டம் எந்தை தீ நெய் உடுத்து எந்நாள் அல்வழக்கு பல்லாண்டு வண்ணம்.

[ஆதி கூறுதும், அநந்தரம் கூறுமின், அண்டம் என்மின், எந்தைபாடுதும், தீ உடுத்தெந்நாள் கூறுதும், நெய்யுமல்லும் கூறுவனே.]

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



† பந்தனை - அனுக்கம் - பிள்ளைகளுக்குவரும்வியாதி. ‡ அத்தாணி-பிரியாமை.

## உ-வது, வண்ணமாடங்கள்.



கண்ணன் திருவவதாரச்சிறப்பு.

கலிவிருத்தம்.

அபநுபராகம்-அடதாளம்.

‡‡ வண்ணமாடங்கள்சூழ் திருக்கோட்டியூர் *
கண்ணன்கேசவன் நம்பிபிறந்தனில் *
எண்ணெய்சுண்ண மெதிரெதிர்தூவிட *
கண்ணன்முற்றம் கலந்தளறாயிற்றே. (க)

ஓடுவார்விழுவா ருகந்தாலிப்பார் *
நாடுவார்நம்பிரா னெங்குற்றானென்பார் *
பாடுவார்களும் பல்பறைகொட்டநின்று *
ஆடுவார்களு மாயிற்றாய்ப்பாடியே. (உ)

பேணிச்சீருடைப் பிள்ளைபிறந்தனில் *
காணத்தாம்புகுவார் புக்குப்போதுவார் *
$ ஆணொப்பா ரிவன்நேரில்லைகாண் * திரு
வோணத்தானுலகாளு மென்பார்களே. (ங)

உறியைமுற்றத்துருட்டி நின்றாடுவார் *
நறுநெய்பால்தயிர் நன்றாகத்தூவுவார் *
செறிமென்கூந்த லவிழத்திளைத்து-* எங்கும்
அறிவழிந்தன ராய்ப்பாடியாயரே. (ச)

கொண்டதாளுறி கோலக்கொடுமழு
தண்டினர்பறி யோலைச்சயனத்தர் *
† விண்டமுல்லை யரும்பன்னபல்லினர் *
‡ அண்டர்மிண்டிப்புகுந்து நெய்யாடினார். (ரு)

கையுங்காலும்நிமிர்த்து, கடாரநீர் *
பையவாட்டிப் பசுஞ்சிறுமஞ்சளால் *
ஐயநாவழித்தாளுக் கங்காந்திட *
வையமேழுங்கண்டாள் பிள்ளைவாயுளே. (சா)

வாயுள்வையகங்கண்ட மடநல்லார் *
ஆயர்புத்திரனல்ல னருந்தெய்வம் *
பாயசீருடைப் பண்புடைப்பாலகன் *
மாயனென்று மகிழ்ந்தனர்மாதரே. (எ)

$ "ஆணொப்பான் என்றும் பாடம்.
† "விண்டின்முல்லை" என்றும்பாடம். விண்டு-குன்று.
‡ அண்டர்-தேவரும், இடையரும்; இங்கு, இடையரைச் சொல்லுகிறது.

பத்துநாளுங்கடந்த விரண்டாநாள் *
எத்திசையும் சயமரம்கோடித்து *
மத்தமாமலை தாங்கியமைந்தனை *
உத்தாநஞ்செய் துகந்தனராயரே. (அ)

கிடக்கில்தொட்டில் கிழியவுதைத்திடும் *
எடுத்துக்கொள்ளில் மருங்கையிறுத்திடும் *
ஒடுக்கிப்புல்கி லுதரத்தேபாய்ந்திடும் *
$ மிடுக்கிலாமையால் நான்மெலிந்தேன்நங்காய். (கூ)

செந்நெலார்வயல்சூழ் திருக்கோட்டியூர் *
மன்னுநாரணன் நம்பிபிறந்தமை *
மின்னுநூல் விட்டுசித்தன்விரித்த * இப்
பன்னுபாடல் வல்லார்க்கில்லைபாவமே. (ய)

அடிவரவு.—வண்ணம் ஒடுபேணி உறி கொண்டகைவாய் பத்துக்கிடக்கில் செந்நெல் சீத.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, சீதக்கடல்.



திருப்பாதாதிகேஶவண்மை.

கலித்தாழிசை.

**தன்யாசிராகம்-ஆதிதாளம்.**

⁂ சீதக்கடலுள் ளமுதன்னதேவகி *
கோதைக்குழலா ளசோதைக்குப்போத்தந்த *
பேதைக்குழவி பிடித்துச்சுவைத்துண்ணும் *
பாதக்கமலங்கள்காணீரே பவளவாயீர்வந்துகாணீரே. (க)

முத்தும்மணியும் வயிரமும்நன்பொன்னும் *
தத்திப்பதித்துத் தலைப்பெய்தாப்போல் * எங்கும்
பத்துவிரலும் மணிவண்ணன்பாதங்கள் *
ஒத்திட்டிருந்தவாகாணீரே ஒண்ணுதலீர்வந்துகாணீரே. (உ)

பணைத்தோளிளவாய்ச்சி பால்பாய்ந்தகொங்கை *
அணைத்தாரவுண்டு கிடந்தவிப்பிள்ளை *
இணைக்காலில் வெள்ளித்தளைநின் றிலங்கும் *
கணைக்காலிருந்தவாகாணீரே காரிகையீர்வந்துகாணீரே. (௩)

---

$ மிடுக்கு இலாமையால் - பொறுக்கவல்லசக்தி பிள்ளைக்குப் போராமையா லென்றபடி.

உழந்தாள்நறுநெய் யோரோதடாவுண்ண *
இழந்தாளெரிவிணு லீர்த்து-, எழில்மத்தின் *
பழந்தாம்பாலோச்சப் பயத்தால்தவழ்ந்தான் *
முழந்தாளிருந்தவாகாணீரே முகிழ்முலையீர்வந்துகாணீரே. (ச)

பிறங்கியபேய்ச்சி முலைசுவைத்துண்டிட்டு-*
உறங்குவான்போலே கிடந்தவிப்பிள்ளை *
மறங்கொளிரணியன் மார்வைமுன்கீண்டான் *
§ குறங்குகளைவந்துகாணீரே குவிமுலையீர்வந்துகாணீரே. (ரு)

மத்தக்களிற்று வசுதேவர்தம்முடை *
சித்தம்பிரியாத தேவகிதன்வயிற்றில்
அத்தத்தின்பத்தாநாள் தோன்றியவச்சுதன் *
முத்தமிருந்தவாகாணீரே முகிழ்நகையீர்வந்துகாணீரே. (சா)

இருங்கைமதகளி றீர்க்கின்றவனை *
பருங்கிப்பறித்துக் கொண்டோடும்பரமன்றன் *
நெருங்குபவளமும் நேர்நாணும்முத்தும் *
மருங்குமிருந்தவாகாணீரே வாணுதலீர்வந்துகாணீரே. (எ)

வந்தமதலைக்குழாத்தை வலிசெய்து *
தந்தக்களிறுபோல் தானேவிளையாடும் *
நந்தன்மதலைக்கு நன்றுமழகிய *
உந்தியிருந்தவாகாணீரே ஒளியிழையீர்வந்துகாணீரே. (அ)

அதிருங்கடல்நிற வண்ணனை * ஆச்சி
மதுரமுலையூட்டி வஞ்சித்துவைத்து *
பதரப்படாமே பழந்தாம்பாலார்த்த *
உதரமிருந்தவாகாணீரே ஒளிவளையீர்வந்துகாணீரே. (கூ)

பெருமாவுரலில் பிணிப்புண்டிருந்து-* அங்
கிருமாமருத மிறுத்தவிப்பிள்ளை *
குருமாமணிப்பூண் குலாவித்திகழும் *
திருமார்விருந்தவாகாணீரே சேயிழையீர்வந்துகாணீரே. (க0)

நாள்களோர் நாலைந்துதிங்களளவிலே *
தாளைநிமிர்த்துச் சகடத்தைச்சாடிப்போய்
வாள்கொள்வளையெயிற் றுருயிர்வவ்விணுன் *
தோள்களிருந்தவாகாணீரே சுரிகுழலீர்வந்துகாணீரே. (கக)

மைத்தடங்கண்ணி யசோதைவளர்க்கின்ற *
செய்த்தலை நீலநிறத்துச்சிறுப்பிள்ளை *
நெய்த்தலைநேமியும் சங்கும்நிலாவிய *
கைத்தலங்கள்வந்துகாணீரே கநங்குழையீர்வந்துகாணீரே. (கஉ)

§ குறங்கு - திருத்துடை.

வண்டமர்பூங்குழ லாய்ச்சிமகனாக *
கொண்டுவளர்க்கின்ற கோவலர்குட்டற்கு - *
அண்டமும்நாடு மடங்கவிழுங்கிய *
கண்டமிருந்தவாகாணீரே காரிகையீர்வந்துகாணீரே. (கரு)

என்தொண்டைவாய்ச்சிங்கம் வாவென்றெடுத்துக்கொண்டு - *
அந்தொண்டைவா யமுதாதரித்து - * ஆய்ச்சியர்
தந்தொண்டைவாயால் தருக்கிப்பருகும் * இச்
செந்தொண்டைவாய்வந்துகாணீரேசேயிழையீர்வந்துகாணீரே.(கச)

நோக்கியசோதை நுணுக்கியமஞ்சளால் *
நாக்குவழித்து நீராட்டுமிந்நம்பிக்கு *
வாக்கும்நயனமும் வாயும்முறுவலும் *
மூக்குமிருந்தவாகாணீரே மொய்குழலீர்வந்துகாணீரே. (கரு)

விண்கொளமரர்கள் வேதனைதீர * முன்
மண்கொள்வசுதேவர்தம் மகனாய்வந்து *
திண்கொளசுரரைத் தேயவளர்கின்றான் *
கண்களிருந்தவாகாணீரே கனவளையீர்வந்துகாணீரே. (கசு)

பருவம்நிரம்பாமே பாரெல்லாமுய்ய *
திருவின்வடிவொக்கும் தேவகிபெற்ற *
உருவுகரிய வொளிமணிவண்ணன் *
புருவமிருந்தவாகாணீரே பூண்முலையீர்வந்துகாணீரே. (கஎ)

மண்ணும்மலையும் கடலுமுலகேழும் *
உண்ணுந்திறத்து மகிழ்ந்துண்ணும்பிள்ளைக்கு *
வண்ணமெழில்கொள் மகரக்குழையிவை *
திண்ணமிருந்தவாகாணீரே சேயிழையீர்வந்துகாணீரே. (கஅ)

முற்றிலும்தூதையும் முன்கைம்மேல்பூவையும் *
சிற்றிலிழைத்துத் திரிதருவோர்களை *
பற்றிப்பறித்துக் கொண்டோடும் பரமன்றன் *
நெற்றியிருந்தவாகாணீரே நேரிழையீர்வந்துகாணீரே. (கக)

அழகியபைம்பொன்னின்கோ லங்கைக்கொண்டு *
கழல்கள்சதங்கை கலந்தெங்குமார்ப்ப *
மழகன்றினங்கள் மறித்துத்திரிவான் *
குழல்களிருந்தவாகாணீரே குவிமுலையீர்வந்துகாணீரே. (உ0)

§ சுருப்பார்குழலி யசோதைமுன்சொன்ன *
திருப்பாதகேசத்தைத் தென்புதுவைப்பட்டன் *
விருப்பாலுரைத்த விருபதோடொன்று
முரைப்பார், போய் * வைகுந்தத்தொன்றுவர்தாமே. (உக)

சீதமுத்துப்பணேஉழ பிறங்கியமத்த இருங்கைவந்த அதிரும் பெருமாநாள்மைவண்டு என் நோக்கி விண்பருவம் மண்முற்றில் அழகியசுருப்பார் மாணிக்கம்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, மாணிக்கங்கட்டி.



திருத்தாலாட்டு.
கலித்தாழிசை.
**நீலாம்புரிராகம்-அடதாளம்.**

மாணிக்கங்கட்டி வயிரமிடைகட்டி *
ஆணிப்பொன்னால்செய்த வண்ணச்சிறுத்தொட்டில் *
பேணியுனக்குப் பிரமன்விடுதந்தான் *
மாணிக்குறளனேதாலேலோ வையமளந்தானேதாலேலோ. (க)
உடையார்கனமணியோ டொண்மாதளம்பூ - *
இடைவிரவிக்கோத்த வெழில்தெழ்கினோடு *
விடையேறுகாபாலி யீசன்விடுதந்தான் *
உடையாயழேலழேல்தாலேலோ உலகமளந்தானேதாலேலோ. (உ)
என்தம்பிரானா ரெழில்திருமார்வர்க்கு *
சந்தமழகிய தாமரைத்தாளர்க்கு - *
இந்திரன்றானு மெழிலுடைக்கிண்கிணி *
தந்துவனாய்நின்றான்தாலேலோ தாமரைக்கண்ணனேதாலேலோ. ()
சங்கின்வலம்புரியும் சேவடிக்கிண்கிணியும் *
அங்கைச்சரிவளையும் நாணுமரைத்துடரும் *
அங்கண்விசும்பி லமரர்கள்போத்தந்தார் *
செங்கட்கருமுகிலேதாலேலோ தேவகிசிங்கமேதாலேலோ. (ச)
எழிலார்திருமார்வுக் கேற்குமிவையென்று - *
† அழகியவைம்படையு மாரமுங்கொண்டு *
வழுவில்கொடையான் வயிச்சிராவணன் ‡ *
தொழுதுவனாய்நின்றான்தாலேலோ தூமணிவண்ணனேதாலேலோ. ()

---

§ சுரும்பு என்கிறது சுருப்பு என்று கிடக்கிறது; சுரும்பு-வண்டு. † ஐம்படை ஸ்ரீபஞ்சாயுதமாகிற ஆபரணம். ‡ அரவை "அரா" என்னுமாப்போலே, வயிச்சிரவணன் என்பதை "வயிச்சிராவணன்" என நீட்டிக்கிடக்கிறது.

ஓதக்கடலி லொளிமுத்தினாரமும் *
சாதிப்பவளமும் சந்தச்சரிவளையும் *
மாதக்கவென்று வருணன்விடுதந்தான் *
சோதிச்சுடர்முடியாய்தாலேலோ சுந்தரத்தோளனேதாலேலோ. ()
கானார்நறுந்துழாய் கைசெய்தகண்ணியும் *
வானார்செழுஞ்சோலைக் கற்பகத்தின்வாசிகையும் *
தேனார்மலர்மேல் திருமங்கைபோத்தந்தாள் *
கோனேயழேலழேல்தாலேலோ குடந்தைக்கிடந்தானேதாலேலோ. ()
கச்சொடுபொற்சுரிகை காம்புகநகவளை § *
உச்சிமணிச்சுட்டி † யொண்டாணிரைப்பொற்பூ *
அச்சுதனுக்கென் றவனியாள்போத்தந்தாள் *
நச்சுமுலையுண்டாய்தாலேலோ நாராயணாஅழேல்தாலேலோ. (அ)
மெய்திமிரு ‡ நானப் பொடியோடுமஞ்சளும் *
செய்யதடங்கண்ணுக் கஞ்சனமும்சிந்துரமும் *
வெய்யகலைப்பாகி ※ கொண்டுவளாய்நின்றாள் *
ஐயாவழேலழேல்தாலேலோ அரங்கத்தணையானேதாலேலோ. (௯)
⁂ வஞ்சனையால்வந்த பேய்ச்சிமுலையுண்ட *
அஞ்சனவண்ணனை யாச்சிதாலாட்டிய *
செஞ்சொல்மறையவர் சேர்புதுவைப்பட்டன்சொல் *
எஞ்சாமைவல்லவர்க் கில்லையிடர்தானே. (௧௦)

மாணி உடை யென் சங்கெழிலோதக் கானார் கச்சு மெய் வஞ்சனை தன்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௫-வது, தன்முகத்து.



அம்புலிப்பருவம்.

கலிநிலைத்துறை.

**மோஹனராகம்-அடதாளம்.**

⁂ தன்முகத்துச்சுட்டி தூங்கத்தூங்கத்தவழ்ந்துபோய் *
பொன்முகக்கிண்கிணியார்ப்பப் புழுதியளைகின்றான் *
என்மகன்கோவிந்தன் கூத்தினையிளமாமதீ ! *
நின்முகம்கண்ணுளவாகில் நீயிங்கேநோக்கிப்போ.

§ காம்பு - சிறுகாம்பன்சேலை. "கநவளை" என்றும் சொல்லுவர்; கநம்-கநகம் - பொன். † "ஒண் தாள் நிரை." ‡ நானம் - சந்தனம் கஸ்தூரி கர்ப்பூரம் முதலான ஸுகந்தத்ரவ்யம். ※ கலைப்பாகி=கலை-ஆண்மானை வாஹநமாகவுடைய, பாகி - துர்க்கை.

என்சிறுக்குட்ட னெனக்கோரின்னமுதெம்பிரான் *
தன்சிறுக்கைகளால் காட்டிக்காட்டியழைக்கின்றான் *
அஞ்சனவண்ணனோ டாடலாட்வுறுதியேல் *
மஞ்சில்மறையாதே மாமதீ ! மகிழ்ந்தோடிவா. (உ)

சுற்றுமொளிவட்டம் சூழ்ந்துசோதிபரந்தெங்கும் *
எத்தனைசெய்யிலு மென்மகன்முகம்நேரொவ்வாய் *
வித்தகன்வேங்கடவாண னுன்னைவிளிக்கின்ற *
கைத்தலம்நோவாமே அம்புலீ ! கடிதோடிவா. (௩)

சக்கரக்கையன் தடங்கண்ணால்மலரவிழித்து - *
† ஒக்கலைமேலிருந் துன்னையேசுட்டிக்காட்டுங்காண் *
தக்கதறிதியேல் சந்திரா ! ‡ சலம்செய்யாதே *
மக்கள்பெறாத மலடனல்லையேல் வாகண்டாய். (௪)

அழகியவாயி லமுதவூறல்தெளிவுறா *
மழலைமுற்றாத விளஞ்சொல்லாலுன்னைக் கூவுகின்றான் *
§ குழகன்சிரீதரன் கூவக்கூவநீபோதியேல் *
$ புழையிலவாகாதே நின்செவி புகர்மாமதீ !. (௫)

தண்டொடுசக்கரம் சார்ங்கமேந்தும்தடக்கையன் *
கண்டுயில்கொள்ளக்கருதிக் கொட்டாவிகொள்கின்றான் *
உண்டமுலைப்பாலறாகண்டா யுறங்காவிடில் *
விண்டனில்மன்னியமாமதீ ! விரைந்தோடிவா. (௬)

பாலகனென்று பரிபவம்செய்யேல் * பண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்த சிறுக்கனவனிவன் *
மேலெழப்பாய்ந்து பிடித்துக்கொள்ளும் வெகுளுமேல் *
மாலைமதியாதே மாமதீ ! மகிழ்ந்தோடிவா. (௭)

சிறியனென்றென்னிளஞ்சிங்கத்தை யிகழேல்கண்டாய் *
சிறுமையின்வார்த்தையை மாவலியிடைச்சென்றுகேள் *
சிறுமைப்பிழைகொள்ளில் நீயுமுன் ¶ தேவைக்குரியைகாண் *
நிறைமதீ ! நெடுமால் விரைந்துன்னைக்கூவுகின்றான். (௮)

தாழியில்வெண்ணெய் தடங்கையாரவிழுங்கிய *
பேழைவயிற்றெம்பிரான்கண்டா யுன்னைக்கூவுகின்றான் *
ஆழிகொண்டுன்னையெறியும் ஐயுறவில்லைகாண் *
வாழவுறுதியேல் மாமதீ ! மகிழ்ந்தோடிவா. (௯)

---

† ஒக்கலை - மருங்கு. ‡ சலம் - வெறுப்பு. § குழகன் - எல்லாரோடும் கலப்புடையவன். $ புழை - துளை. ¶ தேவை - அடிமை.

⁂ மைத்தடங்கண்ணியசோதை, தன்மகனுக்கு * இவை
யொத்தனசொல்லி யுரைத்தமாற்றம் * ஒளிபுத்தூர்
வித்தகன்விட்டுசித்தன் விரித்ததமிழிவை *
எத்தனையும்சொல்லவல்லவர்க் கிடரில்லையே. (௧௦)

தன் என் சுற்றுச்சக்கரம் அழகிய தண்டு பாலகன் சிறியன் தாழி மை உய்ய.

பெரியாழ்வார்திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.



## ௬-வது, உய்யவுலகு.



### செங்கீரைப்பருவம்.

எண்சீர்க்கழிநெடி-லாசிரியவிருத்தம்.

**முகாரிராகம்-ஆதிதாளம்.**

⁂ உய்யவுலகுபடைத் துண்டமணிவயிறு!
ஊழிதோறூழிபல ஆலினிலையதன்மேல் *
பையவுயோகுதுயில் கொண்டபரம்பரனே!
பங்கயநீணயநத் தஞ்சநமேனியனே! *
செய்யவள்நின்னகலம் சேமமெனக்கருதிச்
செல்வுபொலிமகரக் காதுதிகழ்ந்திலக *
ஐயவெனக்கொருகா லாடுகசெங்கீரை †
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (௧)

கோளரியின்னுருவங் கொண்டவுணனுடலம்
குருதிகுழம்பியெழக் கூருகிரால்குடைவாய்! *
மீளவவன்மகனை மெய்ம்மைகொளக்கருதி;
மேலையமரர்பதி மிக்குவெகுண்டுவர *
காளநன்மேகமவை கல்லொடு ‡ கால்பொழியக்
கருதிவரைக்குடையாக் காலிகள்காப்பவனே! *
ஆளவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (௨)

நம்முடைநாயகனே! நான்மறையின் பொருளே!
நாவியுள்நற்கமலம் நான்முகனுக்கு - * ஒருகால்
§ தம்மனையானவனே! தரணிதலமுழுதும்
தாரகையின்னுலகுந்தடவி யதன்புறமும் *

† செங்கீரை - தாய்மார் முதலானோர், பிள்ளைகளைத் தாங்க ளே அசைத்தாடுவிப்பதொரு ந்ருத்தவிசேஷம். ‡ "கார்பொழிய" என்று பாடாந்தரம். § தம்மனை - தாய்.

விம்மவளர்ந்தவனே! வேழமுமேழ்விடையும்
விரவியவேலைதனுள் வென்றுவருமவனே! *
அம்மவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (ரு)

வானவர்தாம்மகிழ வன்சகடமுருள
வஞ்சமுலைப்பேயின் † நெஞ்சமதுண்டவனே! *
கானகவல்விளவின் காயுதிரக்கருதிக்
கன்றதுகொண்டெறியும் கருநிறவென்கன்றே! *
தேனுகனும்முரனும் திண்டிறல்வெந்நரகன்
என்பவர்தாம்மடியச் செருவதிரச்செல்லும் *
ஆனையெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (சா)

மத்தளவுந்தயிரும் வார்குழல்நன்மடவார்
வைத்தன நெய்களவால் வாரிவிழுங்கி * ஒருங்
கொத்தவிணைமருத முன்னியவந்தவரை
‡ ஊருகரத்தினொடும் உந்தியவெந்திறலோய்! *
முத்தினிளமுறுவல் முற்றவருவதன்முன்
முன்னமுகத்தணியார் மொய்குழல்களலைய *
அத்தவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (ரு)

§ காயமலர்நிறவா! கருமுகில்போலுருவா!
கானகமாமடுவில் காளியனுச்சியிலே *
தூயநடம்பயிலும் சுந்தரவென்சிறுவா!
துங்கமதக்கரியின் கொம்புபறித்தவனே! *
ஆயமறிந்துபொருவா னெதிர்வந்தமல்லை
அந்தரமின்றியழித் தாடியதாளிணையாய்! *
ஆயவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (சு)

துப்புடையாயர்கள்தம் சொல்வழுவாதொருகால்
தூயகருங்குழல் நல்தோகைமயிலனைய *
நப்பினைதன்திறமா நல்விடையேழவிய
நல்லதிறலுடைய நாதனுமானவனே! *
தப்பினபிள்ளைகளைத் தனமிகுசோதிபுகத்
தனியொருதேர்கடவித் தாயொடுகூட்டிய * என்
அப்பவெனக்கொருகா லாடுகசெங்கீரை
ஆயர்கள்போரேறே யாடுகவாடுகவே. (எ)

† "நஞ்சமுதுண்டவனே" என்று பாடாந்தரம். ‡ ஊரு - திருத்துடை.
§ காயா என்பதை "காய" எனக் குறுக்கிக் கிடக்கிறது.

⁂ உன்னையுமொக்கலையிற் கொண்டுதமில்மருவி
    உன்னொடுதங்கள்கருத் தாயினசெய்துவரும் *
கன்னியரும்மகிழக் கண்டவர்கண்குளிரக்
    கற்றவர்தெற்றிவரப் பெற்றவெனக்கருளி *
மன்னுகுறுங்குடியாய்! வெள்ளறையாய்! மதிள்சூழ்
    சோலைமலைக்கரசே! கண்ணபுரத்தமுதே! *
என்னவலங்களைவா யாடுகசெங்கீரை
    ஏழுலகுமுடையா யாடுகவாடுகவே. (அ)
பாலொடுநெய்தயி ரொண்சாந்தொடுசண்பகமும்
    பங்கயம்நல்ல கருப்பூரமும்நாறிவர *
கோலநறும்பவளச் செந்துவர்வாயினிடைக்
    கோமளவெள்ளிமுளைப் போல்சிலபல்லிலக *
நீலநிறத்தழகா ரைம்படையின்நடுவே
    நின்கனிவாயமுத மிற்றுமுறிந்துவிழ *
ஏலுமறைப்பொருளே யாடுகசெங்கீரை
    ஏழுலகுமுடையா யாடுகவாடுகவே. (கூ)
செங்கமலக்கழலில் சிற்றிதழ்போல்விரலில்
    சேர்திகழாழிகளும் கிண்கிணியும் * அரையில்
தங்கியபொன்வடமும் தாளநன்மாதளையின்
    பூவொடுபொன்மணியும் மோதிரமும்கிறியும் *
மங்கலவைம்படையும் தோள்வளையும்குழையும்
    மகரமும்வாளிகளும் சுட்டியுமொத்திலக *
எங்கள்குடிக்கரசே! ஆடுகசெங்கீரை
    ஏழுலகுமுடையா யாடுகவாடுகவே. (ய)
⁂ அன்னமும்மீனுருவு மாளரியும்குறளும்
    ஆமையுமானவனே! ஆயர்கள்நாயகனே! *
என்னவலங்களைவா யாடுகசெங்கீரை
    ஏழுலகமுடையா யாடுகவாடுகவென்று - *
அன்னநடைமடவா ளசோதையுகந்தபரிசு -
    ஆனபுகழ்ப்புதுவைப் பட்டனுரைத்ததமிழ் *
இன்னிசைமாலைகளிப்பத்தும் வல்லார்உலகி
    லெண்டிசையும்புகழ்மிக் கின்பமதெய்துவரே. (கக)

உய்யக் கோளரி நம்முடை வானவர் மத்துக் காய துப்பு உன்னைப் பால் செங்கமலம் அன்னம் மாணிக்கம்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர் திருவடிகளேசரணம்.



## எ-வது, மாணிக்கக்கிண்கிணி.



### சப்பாணிப்பருவம்.

கலித்தாழிசை.

யதுகுலகல்யாணிராகம்-ஆதிதாளம்.

‡‡ மாணிக்கக்கிண்கிணி யார்ப்பமருங்கின்மேல் *
† ஆணிப்பொன்னாற்செய்த ஆய்பொன்னுடைமணி *
பேணிப்பவளவாய் முத்திலங்க * பண்டு
காணிகொண்டகைகளால்சப்பாணி கருங்குழற்குட்டனே சப்பாணி.()
பொன்னரைநாணொடு மாணிக்கக்கிண்கிணி *
தன்னரையாடத் தனிச்சுட்டிதாழ்ந்தாட *
என்னரைமேல்நின்றிழிந் துங்களாயர்தம் *
மன்னரைமேல்கொட்டாய்சப்பாணிமாயவனேகொட்டாய்சப்பாணி.
பன்மணிமுத் தின்பவளம்பதித்தன்ன *
என்மணிவண்ணன் ! இலங்குபொற்றோட்டின்மேல் *
நின்மணிவாய்முத்திலங்க நின்னம்மைதன் *
‡ அம்மணிமேல்கொட்டாய்சப்பாணி ஆழியங்கையனே சப்பாணி. ()
தூநிலாமுற்றத்தே போந்துவிளையாட *
வானிலாவம்புலீ ! சந்திரா ! வாவென்று *
நீநிலா நின்புகழாநின்ற ஆயர்தம் *
கோநிலாவக்கொட்டாய்சப்பாணி குடந்தைக்கிடந்தானே சப்பாணி.
புட்டியிற்சேறும் புழுதியுங்கொண்டுவந்து *
அட்டியமுக்கி யகம்புக்கறியாமே *
சட்டித்தயிரும் தடாவினில்வெண்ணெயுமுண் *
பட்டிக்கன்றேகொட்டாய்சப்பாணி பற்பநாபாகொட்டாய்சப்பாணி.
§ தாரித்துநூற்றுவர் தந்தைசொற்கொள்ளாது *
போருய்த்துவந்து புகுந்தவர்மண்ணாள *
பாரித்தமன்னர்பட்ப் பஞ்சவர்க்கு * அன்று
தேருய்த்தகைகளால்சப்பாணி தேவகிசிங்கமே சப்பாணி. (சு)
பரந்திட்டுநின்ற படுகடல் * தன்னை
இரந்திட்டகைமேல் எறிதிரைமோத *
கரந்திட்டுநின்ற கடலைக்கலங்க *
சரந்தொட்டகைகளால்சப்பாணி சார்ங்கவிற்கையனே சப்பாணி. (எ)

---

† ஆணிப்பொன் - மாற்றெழும்பினபொன். ‡ அம்மணி - அரை. § தரித்து - என்பது "தாரித்து" என நீண்டுக்கிடக்கிறது.

குரக்கினத்தாலே குரைகடல்தன்னை *
நெருக்கியணைகட்டி நீணீரிலங்கை *
அரக்கரவிய அடுகணையாலே *
நெருக்கியகைகளால்சப்பாணி நேமியங்கையனேசப்பாணி. (அ)

அளந்திட்டதூணையவன் தட்ட * ஆங்கே
வளர்ந்திட்டு வாளுகிர்ச்சிங்கவுருவாய் *
உளந்தொட்டிரணிய னொண்மார்வகலம் *
பிளந்திட்டகைகளால்சப்பாணி பேய்முலையுண்டானேசப்பாணி. (கூ)

† அடைந்திட்டமரர்கள், ஆழ்கடல்தன்னை *
மிடைந்திட்டு மந்தரம்மத்தாகநாட்டி *
வடம்சுற்றி வாசுகிவன்கயிறாக *
கடைந்திட்டகைகளால்சப்பாணி கார்முகில்வண்ணனே! சப்பாணி.

⚜ ஆட்கொள்ளத்தோன்றிய வாயர்தங்கோவினை *
நாட்கமழ்பூம்பொழில் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
வேட்கையாற்சொன்ன சப்பாணியீரைந்தும் *
வேட்கையினாற்சொல்லுவார் வினைபோமே. (கக)

மாணிப் பொன் பல் தூநிலாப் புட்டித் தாரித்து பரந்து குரக்கினம் அளந்து அடைந்து ஆட்கொள்ளத் துடர்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

## அ-வது, துடர்சங்கிலிகை.

தளர்நடைப்பருவம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தம்.

அடாணாராகம்-ஆதிதாளம்.

⚜ துடர்சங்கிலிகைசலார்பிலாரென்னத்தூங்குபொன்மணியொலிப்ப
படு ‡ மும்மதப்புனல்சோர வாரணம்பையநின்றூர்வதுபோல் *
உடன்கூடிக்கிண்கிணியாரவாரிப்ப வுடைமணிபறைகறங்க *
தடந்தாளிணைகொண்டு சார்ங்கபாணி தளர்நடைநடவானோ. § (க)

செக்கரிடைநுனிக்கொம்பில்தோன்றும் சிறுபிறைமுளைப்போல் *
நக்கசெந்துவர்வாய்த்திண்ணைமீதே நளிர்வெண்பல்முளையிலக *
$ அக்குவடமுடுத் தாமைத்தாலிபூண்டவநந்தசயநன் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. (உ)

† அடைந்திட்டு - அடைந்திடவென்றபடி. ‡ மும்மதப்புனல் - மதத்தாலே, இரண்டு கபோலமும் மேட்ரமுமாகிற மூன்றில் நின்றும் வடிகிறஜலம்.

§ தளர் நடையாவது - திருவடிகளூன்றி நடக்கும் பருவமன்றிக்கே நடக்கிற தசையாகையாலே தள்ளம்பாறிநடக்கும் நடை.

$ அக்குவடம் - சங்கு மணிவடம்.

மின்னுக்கொடியுமோர்வெண்டிங்களும் சூழ்பரிவேடமுமாய் *
பின்னல்துலங்குமரசிலையும் பீதகச்சிற்றாடையொடும் *
மின்னில்பொலிந்ததோர்கார்முகில்போலக் கழுத்தினிற்காறையொடும் *
தன்னில்பொலிந்தவிருடீகேசன் தளர்நடைநடவானோ. (ங)

கன்னற்குடம்திறந்தாலொத்தூறிக் கணகணசிரித்துவந்து *
முன்வந்துநின்றுமுத்தந்தரு மென்முகில்வண்ணன்திருமார்வன் *
தன்னைப்பெற்றேற்குத்தன்வாயமுதம்தந் தென்னைத்தளிர்ப்பிக்கின்றான் *
தன்னெற்றி † மாற்றலர்தலைகள்மீதே தளர்நடைநடவானோ. (ச)

முன்னலோர்வெள்ளிப்பெருமலைக்குட்டன் மொடுமொடுவிரைந்தோட *
பின்னைத்தொடர்ந்ததோர்கருமலைக்குட்டன் பெயர்ந்தடியிடுவதுபோல் *
பன்னியுலகம்பரவியோவாப்புகழ்ப் பலதேவனென்னும் *
தன்நம்பியோடப்பின்கூடச்செல்வான் தளர்நடைநடவானோ. (ரு)

ஒருகாலிற்சங்கொருகாலிற்சக்கர முள்ளடிபொறித்தமைந்த *
இருகாலுங்கொண்டங்கங்கெழுதினாற்போ லிலச்சினைபடநடந்து *
பெருகாநின்றவின்பவெள்ளத்தின்மேல் பின்னையும்பெய்துபெய்து *
கருகார்க்கடல்வண்ணன்காமர்தாதை தளர்நடைநடவானோ. (சு)

படர்பங்கயமலர்வாய்நெகிழப் பனிபடுசிறுதுளிபோல் *
இடங்கொண்டசெவ்வாயூறியூறி யிற்றிற்றுவீழநின்று *
கடுஞ்சேக்கழுத்தின் மணிக்குரல்போ லுடைமணிகணகணென *
தடந்தாளிணைகொண்டுசார்ங்கபாணி தளர்நடைநடவானோ. (எ)

பக்கம்கருஞ்சிறுப்பாறைமீதே யருவிகள்பகர்ந்தனைய *
அக்குவடமிழிந்தேறித்தாழ அணியல்குல்புடைபெயர *
மக்களுலகினில்பெய்தறியா மணிக்குழவியுருவின் *
தக்கமாமணிவண்ணன்வாசுதேவன் தளர்நடைநடவானோ. (அ)

வெண்புழுதிமேற்பெய்துகொண்டளைந்ததோர் வேழத்தின்கருங்கன்றுபோல்
தெண்புழுதியாடித்திரிவிக்கிரமன் சிறுபுகர்படவியர்த்து *
ஒண்போதலர்கமலச்சிறுக்கா லுறைத்தொன்றும்நோவாமே *
தண்போதுகொண்டதவிசின்மீதே தளர்நடைநடவானோ. (கூ)

திரைநீர்ச்சந்திரமண்டலம்போல் செங்கண்மால்கேசவன் * தன்
திருநீர்முகத்துத்துலங்குசுட்டி திகழ்ந்தெங்கும்புடைபெயர *
பெருநீர்த்திரையெழுகங்கையிலும் பெரியதோர்தீர்த்தபலம்
தருநீர் * சிறுச்சண்ணம்துள்ளம்சோரத் தளர்நடைநடவானோ. (க0)

⁂ ஆயர்குலத்தினில்வந்துதோன்றிய அஞ்சனவண்ணன்றன்னை *
தாயர்மகிழவொன்னார்தளரத் தளர்நடைநடந்ததனை *
வேயர்புகழ்விட்டுசித்தன் சீரால்விரித்தனவுரைக்கவல்லார் *
மாயன்மணிவண்ணன்தாள்பணியும் மக்களைப்பெறுவர்களே. (கக)

துடர் செக்கர் மின்னுக் கன்னல் முன்னல் ஒருகால் படர் பக்கம் வெண் திரை ஆயர் பொன்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



† "தன்எற்று" என்றும் சொல்லுவர்.

## ௯-வது, பொன்னியற்கிண்கிணி.

---

அச்சோபருவம்.

*கலித்தாழிசை.*

**தேசியராகம்-அதிதாளம்.**

⁂ பொன்னியற்கிண்கிணி சுட்டிபுறங்கட்டி *
தன்னியலோசை சலன்சலனென்றிட *
மின்னியல்மேகம் விரைந்தெதிர்வந்தாய்போல் *
என்னிடைக்கோட்டராவச்சோவச்சோ†எம்பெருமான்!வாராவச்சோவச்சோ

செங்கமலப்பூவில் தேனுண்ணும்வண்டேபோல் *
பங்கிகள்வந் துன்பவளவாய்மொய்ப்ப *
சங்குவில்வாள் தண்டு சக்கரமேந்திய *
அங்கைகளாலேவந்தச்சோவச்சோ ஆரத்தழுவாய்வந்தச்சோவச்சோ. (௨)

பஞ்சவர் தூதனாய்ப் பாரதம்கைசெய்து *
நஞ்சுமிழ்நாகங்கிடந்த நற்பொய்கைபுக்கு - *
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டருள்செய்த *
அஞ்சநவண்ணனே ! அச்சோவச்சோ ஆயர்பெருமானே ! அச்சோவச்சோ.()

நாறியசாந்தம் நமக்கிறைநல்கென்ன *
தேறியவளும் திருவுடம்பில்பூச *
ஊறியகூனினை யுள்ளேயொடுங்க * அன்
றேறவுருவினாயச்சோவச்சோ எம்பெருமான் ! வாராவச்சோவச்சோ. (௪)

கழல்மன்னர்சூழக் கதிர்போல்விளங்கி *
எழலுற்றுமீண்டே யிருந்துன்னைநோக்கும் *
சுழலைப்பெரிதுடைத் துச்சோதநனை *
அழலவிழித்தானே ! அச்சோவச்சோ ஆழியங்கையனே ! அச்சோவச்சோ.()

போரொக்கப்பண்ணி யிப்பூமிப்பொறைதீர்ப்பான் *
தேரொக்கவூர்ந்தாய் செழுந்தார்விசயற்காய் *
காரொக்குமேனிக் கரும்பெருங்கண்ணனே *
ஆரத்தழுவாய்வந்தச்சோவச்சோ ஆயர்கள்போரேறேயச்சோவச்சோ. (௬)

மிக்கபெரும்புகழ் மாவலிவேள்வியில் *
தக்கதிதன்றென்று தானம்விலக்கிய *
சுக்கிரன்கண்ணைத் துரும்பால்கிளறிய *
சக்கரக்கையனே ! அச்சோவச்சோ சங்கமிடத்தானே ! அச்சோவச்சோ. (எ)

என்னிதுமாய மென்னப்பனறிந்திலன் *
முன்னையவண்ணமே கொண்டளவாயென்ன *
மன்னு ‡ நமுசியை வானிற்சுழற்றிய *
மின்னுமுடியனே ! அச்சோவச்சோ வேங்கடவாணனே ! அச்சோவச்சோ.()

---

† அச்சோ என்றது - அணைத்துக்கொள் என்றபடி. ‡ நமுசி - மஹாபலியின்பிள்ளை.

கண்டகடலும் மலையுமுலகேழும் *
† முண்டத்துக்காற்ரு முகில்வண்ணு ! ஓ ? என்று *
இண்டைச்சடைமுடி யீசனிரக்கொள்ள *
மண்டைநிறைத்தானே! அச்சோவச்சோ மார்வில்மறுவனே! அச்சோவச்சோ.

துன்னியபேரிருள் சூழ்ந்துலகைமூட *
மன்னியநான்மறை முற்றும்மறைந்திட *
பின்னிவ்வுலகினில் பேரிருள்நீங்க * அன்
றன்னமதானனே! அச்சோவச்சோ! அருமறைதந்தானே! அச்சோவச்சோ.

⁂ நச்சுவார்முன்னிற்கும் நாராயணன்றன்னை *
அச்சோவருகவென் றாச்சியுரைத்தன *
மச்சணிமாடப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
நிச்சலும்பாடுவார் நீள்விசும்பாள்வரே. (கக)

பொன் செங்கமலம் பஞ்சவர் நாறிய கழல் போர் மிக்க என்னிது கண்ட துன்னிய நச்சு வட்டு.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## க0-வது, வட்டுநடுவே.



புறம்புல்கல்.

கலித்தாழிசை.

**உசேனிராகம்-ரூபகதாளம்.**

⁂ வட்டுநடுவே வளர்கின்ற * மாணிக்க
மொட்டுநுனையில் முளைக்கின்றமுத்தேபோல் *
சொட்டுச்சொட்டென்னத் துளிக்கத்துளிக்க * என்
குட்டன்வந்தென்னைப்புறம்புல்குவான் ‡ கோவிந்தனென்னைப்புறம்புல்குவான்

கிண்கிணிகட்டிக் கிறிகட்டிக்கையினில் *
கங்கணமிட்டுக் கழுத்தில்துடர்கட்டி *
தன்கணத்தாலே சதிராநடந்துவந்து *
என்கண்ணனென்னைப்புறம்புல்குவான் எம்பிரானென்னைப்புறம்புல்குவான்.

கத்தக்கதித்துக் கிடந்தபெருஞ்செல்வம் *
ஒத்துப்பொருந்திக்கொண்டுண்ணாது, மண்ணாள்வான் *
கொத்துத்தலைவன் குடிகெடத்தோன்றிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான் ஆயர்களேறென்புறம்புல்குவான். (௩)

நாந்தகமேந்திய நம்பிசரணென்று *
தாழ்ந்ததனஞ்செயற்காகி * தரணியில்
வேந்தர்களுட்க விசயன்மணித்திண்டேர் *
ஊர்ந்தவனென்னைப்புறம்புல்குவான் உம்பர்கோனென்னைப்புறம்புல்குவான்.

---

† முண்டம் - கபாலம்; "உண்டத்துக்கு" என்று பாடாந்தரம்.

‡ புறம் - முதுகு, புல்குதல் - தழுவுகை.

வெண்கலப்பத்திரங்கட்டி விளையாடி *
† கண்பலசெய்த கருந்தழைக்காவின்கீழ் *
பண்பலபாடிப் பல்லாண்டிசைப்ப * பண்டு
மண்பலகொண்டான்புறம்புல்குவான் வாமநனென்னைப்புறம்புல்குவான். (ரு)
சத்திரமேந்தித் தனியொருமாணியாய் *
உத்தரவேதியில் நின்றவொருவனை *
கத்திரிவர்காணக் காணிமுற்றுங்கொண்ட *
‡ பத்திராகாரன்புறம்புல்குவான் பாரளந்தானென்புறம்புல்குவான்.()
பொத்தவுரலைக்கவிழ்த் ததன்மேலேறி *
தித்தித்தபாலும் தடாவினில்வெண்ணெயும் *
மெத்தத்திருவயிறார விழுங்கிய *
அத்தன்வந்தென்னைப்புறம்புல்குவான் ஆழியானென்னைப்புறம்புல்குவான்.()
மூத்தவைகாண முதுமணற்குன்றேறி *
கூத்துவந்தாடிக் குழலாலிசைபாடி *
வாய்த்தமறையோர் வணங்க * இமையவர் *
ஏத்தவந்தென்னைப்புறம்புல்குவான் எம்பிரானென்னைப்புறம்புல்குவான். (அ)
கற்பகக்காவு கருதியகாதலிக்கு - *
இப்பொழுதீவனென் றிந்திரன்காவினில் *
நிற்பனசெய்து நிலாத்திகழ்முற்றத்துள் *
உய்த்தவனென்னைப்புறம்புல்குவான் உம்பர்கோனென்னைப்புறம்புல்குவான்.
‡‡ ஆய்ச்சியன்றாழிப்பிரான் புறம்புல்கிய *
வேய்த்தடந்தோளிசொல் விட்டுசித்தன்மகிழ்ந்து - *
ஈத்ததமிழிவை யீரைந்தும்வல்லவர் *
வாய்த்தநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (கo)

வட்டுக் கிண்கிணி கத்த நாந்தகம் வெண்கலச் சத்திரம் பொத்த மூத்த கற்பக வாய்ச்சி மெச்சு.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

# இரண்டாம்பத்து.

## க-வது, மெச்சூது.

பூச்சிகாட்டுதல்.

கலித்தாழிசை.

பந்துவராளிராகம்-ரூபகதாளம்.

‡‡ § மெச்சூதுசங்கமிடத்தான் நல்வேயூதி *
பொய்ச்சூதில்தோற்ற பொறையுடைமன்னர்க்காய் *
பத்தூர்பெறாதன்று பாரதம்கைசெய்த * [ன்
அத்தூதனப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனே! அப்பூச்சிகாட்டுகின்றா

‡ "கண்பலபெய்து" என்று பாடாந்தரம். ‡ பத்திராகாரன் - பத்ரமான-விலக்ஷணமான, ஆகாரன் - வடிவையுடையவன். § மெச்ச ஊது என்பது "மெச்சூது" எனக் கடைக்குறையாய்த்து.

மலைபுரைதோள்மன்னவரும் மாரதரும்மற்றும் *
பலர்குலைய நூற்றுவரும்பட்டழிய * பார்த்தன்
சில்வலையத்திண்டேர்மேல் முன்னின்ற * செங்க [ன்
ணலவலைவந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றா

காயுநீர்புக்குக் கடம்பேறி * காளியன்
தீயபணத்தில் சிலம்பார்க்கப்பாய்ந்தாடி *
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற *
ஆயன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான்.

இருட்டில்பிறந்துபோய், ஏழைவல்லாயர் *
மருட்டைத்தவிர்ப்பித்து வன்கஞ்சன்மாளப் *
புரட்டி, அந்நாளெங்கள் பூம்பட்டுக்கொண்ட * [ன்
அரட்டன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றா

சேப்பூண்ட சாடுசிதறி * திருடிநெய்க்
† காப்பூண்டு நந்தன்மனைவிகடைதாம்பால் *
† சோப்பூண்டுதுள்ளித் துடிக்கத்துடிக்க * அன்
† றாப்பூண்டானப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான்.()

செப்பிளமென்முலைத் தேவகிநங்கைக்கு *
சொப்படத்தோன்றித் தொறுப்பாடியோம்வைத்த
துப்பமும்பாலும் தயிரும்விழுங்கிய *
அப்பன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (சு)

தத்துக்கொண்டாள்கொலோ? தானேபெற்றாள்கொலோ?
சித்தமனையா ளசோதையிளஞ்சிங்கம் *
கொத்தார்கருங்குழல் கோபாலகோளரி *
அத்தன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (எ)

கொங்கைவன்கூனி சொற்கொண்டு * குவலயத்
துங்கக்கரியும் பரியுமிராச்சியமும் *
எங்கும்பரதற்கருளி வன்கானடை *
அங்கண்ணனப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (அ)

‡ பதகமுதலை வாய்ப்பட்டகளிறு *
கதறிக்கைகூப்பி யென்கண்ணா! கண்ணா! வென்ன *
உதவப்புள்ளூர்ந் தங்குறுதுயர்தீர்த்த *
§ அதகன்வந்தப்பூச்சிகாட்டுகின்றான் அம்மனேயப்பூச்சிகாட்டுகின்றான். (கூ)

---

† 'சோப்பூண்டு' 'ஆப்பூண்டு' என்கிற வினைநீட்டிச் சொல்லிக்கிடக் கிறது. ‡ பதகம் - கொடுமை. § அதகன் - மிடுக்கன்.

வல்லாளிலங்கைமலங்கச் சரந்துரந்த *
வில்லாளனை விட்டுசித்தன்விரித்த
சொல்லார்ந்தவப்பூச்சிப் பாடலிவைபத்தும்
வல்லார், போய் * வைகுந்தம்மன்னியிருப்பரே. (௧௦)

மெச்சு மலை காயிருட்டு சேப்பூண்ட செப்பு தத்துக் கொங்கை பதகம் வல்லாள் அரவணை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, அரவணையாய்.



### முலையுண்ணல்.

கலிவிருத்தம்.

**புன்னாகவராளிராகம் - ரூபகதாளம்.**

அரவணையாயாயரேறே! அம்மமுண்ணத்துயிலெழாயே *
இரவுமுண்ணாதுறங்கிநீபோ யின்றுமுச்சிகொண்டதாலோ! *
வரவுங்காணேன்வயிறசைந்தாய் வனமுலைகள்சோர்ந்துபாய *
திருவுடையவாய்மடுத்துத் திளைத்துதைத்துப்பருகிடாயே. (௧)

வைத்தநெய்யுங்காய்ந்தபாலும் வடிதயிரும்நறுவெண்ணெயும் *
இத்தனையும்பெற்றறியேன் எம்பிரான்! நீபிறந்தபின்னை *
எத்தனையும்செய்யப்பெற்றா யேதும்செய்யேன்கதம்படாதே *
முத்தனையமுறுவல்செய்து மூக்குறிஞ்சிமுலையுணாயே. (௨)

தந்தம்மக்களழுதுசென்றால் தாய்மாராவார்தரிக்ககில்லார் *
வந்துநின்மேல்பூசல்செய்ய வாழவல்லவாசுதேவா! *
உந்தையாருன்திறத்தரல்லர் உன்னைநானொன்றுரப்பமாட்டேன் *
நந்தகோபனணிசிறுவா! நான்சுரந்தமுலையுணாயே. (௩)

கஞ்சன்றன்னால்புணர்க்கப்பட்ட கள்ளச்சகடுகலக்கழிய *
பஞ்சியன்னமெல்லடியால் பாய்ந்தபோதுநொந்திடுமென்று - *
அஞ்சினேன்காணமரர்கோவே! ஆயர்கூட்டத்தளவன்றாலோ *
கஞ்சனையுன்வஞ்சனையால் வலைப்படுத்தாய்முலையுணாயே. (௪)

தீயபுந்திக்கஞ்சனுன்மேல் சினமுடையன், சோர்வு பார்த்து *
மாயந்தன்னால்வலைப்படுக்கில் வாழகில்லேன்வாசுதேவா! *
தாயர்வாய்ச்சொல்கருமங்கண்டாய் சாற்றிச்சொன்னேன்போகவேண்டா *
ஆயர்பாடிக்கணிவிளக்கே! அமர்ந்துவந்தென்முலையுணாயே (௫)

மின்னனைய நுண்ணிடையார் விரிகுழல்மேல்நுழைந்தவண்டு - *
இன்னிசைக்கும்வில்லிபுத்தூ ரினிதமர்ந்தாய்!, உன்னைக்கண்டார் *
என்னநோன்புநோற்றாள்கொலோ இவனைப்பெற்றவயிறுடையாள் *
என்னும்வார்த்தையெய்துவித்த விருடீகேசா! முலையுணாயே. (௬)

பெண்டிர்வாழ்வார் நின்னொப்பாரைப்பெறுதுமென்னுமாசையாலே*
கண்டவர்கள்போக்கொழிந்தார் கண்ணிணையால்கலக்கநோக்கி *
வண்டுலாம்பூங்குழலினாருன்வாயமுதமுண்ணவேண்டி *
கொண்டுபோவான்வந்துநின்றார் கோவிந்தாநீமுலையுணாயே. (எ)

இருமலைபோலெதிர்ந்தமல்லரிருவரங்கமெரிசெய்தாய் * உன்
திருமலிந்துதிகழ்மார்வு தேக்கவந்தென்னல்குலேறி *
ஒருமுலையைவாய்மடுத்தொருமுலையைநெருடிக்கொண்டு *
இருமுலையும்முறைமுறையா ஏங்கியேங்கியிருந்துணாயே. (அ)

அங்கமலப்போதகத்தி லணிகொள்முத்தம்சிந்தினாற்போல்
செங்கமலமுகம்வியர்ப்பத் தீமைசெய்திம்முற்றத்தூடே *
அங்கமெல்லாம்புழுதியாக அளையவேண்டா அம்ம! விம்ம
அங்கமரர்க்கமுதளித்த வமரர்கோவேமுலையுணாயே. (கூ)

ஓடவோடக்கிண்கிணிக ளொலிக்குமோசைப்பாணியாலே *
பாடிப்பாடிவருகின்றாயைப் பற்பநாபனென்றிருந்தேன் *
ஆடியாடியசைந்தசைந்திட்டதனுக்கேற்றகூத்தையாடி *
ஓடியோடிப்போய்விடாதே உத்தமா! நீமுலையுணாயே. (கய)

⁂ வாரணிந்தகொங்கையாச்சி மாதவாவுண்ணென்றமாற்றம் *
நீரணிந்தகுவளைவாசம் நிகழ்நாறும்வில்லிபுத்தூர் *
பாரணிந்ததொல்புகழான் பட்டர்பிரான்பாடல்வல்லார் *
சீரணிந்தசெங்கண்மால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. (கக)

அரவணை வைத்த தந்தம் கஞ்சன் தீய மின் பெண்டிர் இருமலை அங்கமல ஓட வாரணி போய்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, போய்ப்பாடு.



த்வாதஶநாமமாஹாத்ம்யம்.

காதுகுத்தல்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**அசாவேரிராகம்-ஆதிதாளம்.**

⁂போய்ப்பாடுடையநின்தந்தையும் தாழ்த்தான்பொருதிறல்கஞ்சன்கடியன்*
காப்பாருமில்லைகடல்வண்ணா! உன்னை, தனியேபோயெங்குந்திரிதி *
பேய்ப்பால்முலையுண்டபித்தனே!கேசவநம்பி!உன்னைக்காதுகுத்த*[ன்
ஆய்ப்பாலர்பெண்டுகளெல்லாரும்வந்தார் அடைக்காய்திருத்திநான்வைத்தே

வண்ணப்பவளபருங்கினிற்சாத்தி மலர்ப்பாதக்கிண்கிணியார்ப்ப *
நண்ணித்தொழுமவர்சிந்தைபிரியாத நாராயணாவிங்கேவாராய் *
எண்ணற்கரியபிரானே! திரியையெரியாமே காதுக்கிடுவன் *
கண்ணுக்குநன்றுமழகுமுடைய கனகக்கடிப்புமிவையா. † (உ)

† இவையா - இவையிருக்கிறபடிபாராய் என்றபடி.

வையமெல்லாம்பெறும்வார்கடல்வாழும் மகரக்குழைகொண்டுவைத்தேன் *
வெய்யவேகாதில்திரியையிடுவன் நீவேண்டியதெல்லாம்தருவன் *
உய்யவிவ்வாயர்குலத்தினில்தோன்றிய வொண்சுடராயர்கொழுந்தே *
மையன்மைசெய்திளவாய்ச்சியருள்ளத்து மாதவனே ! யிங்கேவாராய். (ந)

வணநன்றுடையவயிரக்கடிப்பிட்டு வார்காதுதாழப்பெருக்கி *
குணநன்றுடையரிக்கோபாலபிள்ளைகள் கோவிந்தாநீசொல்லுக்கொள்ளாய் *
இணைநன்றழகியவிக்கடிப்பிட்டா லினியபலாப்பழம்தந்து *
‡ சுணநன்றணிமுலையுண்ணத்தருவன்நான் § சோத்தம்பிரானிங்கேவாராய்.

சோத்தம்பிரானென்றிரந்தாலும்கொள்ளாய் சுரிகுழலாரொடுநீபோய் *
கோத்துக்குரவைபிணைந்திங்குவந்தால் குணங்கொண்டிடுவனோநம்பீ *
பேர்த்தும்பெரியனவப்பம்தருவன்பிரானே ! திரியிடவொட்டில் *
வேய்த்தடந்தோளார்விரும்புகருங்குழல் விட்டுவே ! நீயிங்கேவாராய். (ரு)

விண்ணெல்லாம்கேட்கவழுதிட்டா யுன்வாயில்விரும்பியதனைநான்நோக்கி *
மண்ணெல்லாம்கண்டென்மனத்துள்ளேயஞ்சி மதுசூதனேஎன்றிருந்தேன் *
புண்ணேதுமில்லையுன்காதுமறியும் பொறுத்திறைப்போதிருநம்பீ *
கண்ணாஎன்கார்முகிலே கடல்வண்ணா ! காவலனேமுலையுணாயே. (சு)

முலையேதும்வேண்டேனென்றோடி நின்காதில்கடிப்பைப்பறித்தெறிந்திட்டு *
மலையையெடுத்துமகிழ்ந்துகன்மாரிகாத்துப் பசுநிரைமேய்த்தாய் ! *
சிலையொன்றிறுத்தாய் ! திரிவிக்கிரமா ! திருவாயர்பாடிப்பிரானே ! *
தலைநிலாப்போதேயுன்காதைப்பெருக்காதே விட்டிட்டேன்குற்றமேயன்றே.

என்குற்றமேயென்றுசொல்லவும்வேண்டாகாண் என்னைநான்மண்ணுண்டே
அன்புற்றுநோக்கியடித்தும்பிடித்தும்அனைவர்க்கும்காட்டிற்றிலையே *[ணாக *
வன்புற்றரவின்பகைக்கொடி வாமநநம்பீ ! உன்காதுகள்தூரும் *
துன்புற்றனவெல்லாம்தீர்ப்பாய்பிரானே ! திரியிட்டுச்சொல்லுகேன்மெய்யே.

மெய்யென்றுசொல்லுவார் சொல்லைக்கருதித் தொடுப்புண்டாய்வெண்ணெ
யையென்று * , கையைப்பிடித்துக்கரையுரலோடென்னைக் காணவேகட்டிற்
றிலையே * , செய்தனசொல்லிச்சிரித்தங்கிருக்கில் சிரீதரா!உன்காதுதூரும் *
கையில்திரியையிடுகிடா யிந்நின்றகாரிகையார்சிரியாமே. (கூ)

காரிகையார்க்குமுனக்குமிழுக்குற்றென் காதுகள்வீங்கியெரியில் *
தாரியாதாகில்தலைநொந்திடுமென்று விட்டிட்டேன்குற்றமேயன்றே *
சேரியில்பிள்ளைகளெல்லாரும் காதுபெருக்கித்திரியவும்காண்டி † *
ஏர்விடைசெற்றிளங்கன்றெறிந்திட்ட விருடீகேசா ! என்றன்கண்ணே. (க0)

கண்ணைக்குளிரக்கலந்தெங்கும்நோக்கிக் கடிகமழ்பூங்குழலார்கள் *
எண்ணத்துளென்றுமிருந்து தித்திக்கும்பெருமானே ! எங்களமுதே *
உண்ணக்கனிகள்தருவன் கடிப்பொன்றும் நோவாமேகாதுக்கிடுவன் *
பண்ணைக்கிழியச்சகடமுதைத்திட்ட பற்பநாபா ! இங்கேவாராய். (கக)

‡ சுணங்கு என்பது "சுணம்" என்று கிடக்கிறது : சுணங்கு - முலைமேல்தோன்றும் நிறம் § சோத்தம் - அஞ்ஜலி பண்ணுமவர்கள் அதுக்கு அநுகூலமாகத் தாழ்ச்சிதோற்றச் சொல்லுவதொரு சப்தவிசேஷம். † காண்டி - காணநின்றாய்.

வாவென்றுசொல்லியென்கையைப்பிடித்து வலியவேகாதில்கடிப்பை *
நோவத்திரிக்கிலுனக்கிங்கிழுக்குற்றென் காதுகள்நொந்திடும்கில்லேன் *
நாவற்பழங்கொண்டுவைத்தேன் இவையாணுய் ‡ நம்பீ * முன்வஞ்சமகளைச்
சாவப்பாலுண்டுசகடிறப்பாய்ந்திட்ட தாமோதராவிங்கேவாராய். (கஉ)

⁂ வார்காதுதாழப்பெருக்கியமைத்து மகரக்குழையிடவேண்டி *
சீரால்சோதைதிருமாலைச்சொன்னசொல் சிந்தையுள்நின்றுதிகழ *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன் பன்னிருநாமத்தால்சொன்ன *
ஆராதவந்தாதிபன்னிரண்டும்வல்லா ரச்சுதனுக்கடியாரே. (கங)

போய் வண்ணி வையம் வணம் சோத்தம் விண் முலை என் மெய் காரிகை கண்ணை வா வார்காது வெண்ணெய்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, வெண்ணெயளைந்த.



நீராட்டம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**பிலஹரிராகம்-சம்பைதாளம்.**

⁂ வெண்ணெயளைந்தகுணுங்கும் விளையாடுபுழுதியும்கொண்டு *
திண்ணெனவிவ்விராவுன்னைத் தேய்த்துக்கிடக்கநானொட்டேன் *
எண்ணெய்புளிப்பழங்கொண் டிங்கெத்தனைபோதுமிருந்தேன் *
நண்ணலரியபிரானே ! நாரணா ! நீராடவாராய். (க)

கன்றுகளோடச்செவியில் கட்டெறும்புபிடித்திட்டால் *
† தென்றிக்கெடுமாகில் வெண்ணெய்திரட்டிவிழுங்குமாகாண்பன் *
நின்றமராமரம்சாய்த்தாய் ! நீபிறந்ததிருவோணம் *
இன்று, நீநீராடவேண்டு மெம்பிரானோடாதேவாராய். (உ)

பேய்ச்சிமுலையுண்ணக்கண்டு பின்னையும்நில்லாதென்னெஞ்சம் *
ஆய்ச்சியரெல்லாருங்கூடி யழைக்கவும்நான்முலைதந்தேன் *
காய்ச்சினநீரொடுநெல்லி கடாரத்தில்பூரித்துவைத்தேன் *
வாய்த்தபுகழ்மணிவண்ணா ! மஞ்சனமாடநீவாராய். (ங)

கஞ்சன்புணர்ப்பினில்வந்த கடியசகடமுதைத்து *
வஞ்சகப்பேய்மகள்துஞ்ச வாய்முலைவைத்தபிரானே !
மஞ்சளும்செங்கழுநீரின் வாசிகையும்நாறுசாந்தும் *
அஞ்சனமும்கொண்டுவைத்தே னழகனேநீராடவாராய். (ச)

அப்பம்கலந்தசிற்றுண்டி யக்காரம்பாலில்கலந்து *
சொப்படநான்சுட்டுவைத்தேன், தின்னலுறுதியேல்நம்பி *
செப்பிளமென்முலையார்கள் சிறுபுறம்பேசிச்சிரிப்பர் *
§ சொப்படநீராடவேண்டும் சோத்தம்பிரானிங்கேவாராய். (ரு)

‡ ஆணுய் - பாராய். † தென்றி - சிதறி. § சொப்பட - நன்றாக.

எண்ணெய்க்குடத்தையுருட்டி யிளம்பிள்ளைகிள்ளியெழுப்பி *
கண்ணைப்புரட்டிவிழித்துக் ‡ கழகண்டுசெய்யும்பிரானே ! *
உண்ணக்கனிகள்தருவ னொலிகடலோதநீர்போலே *
வண்ணமழகியநம்பீ மஞ்சனமாடநீவாராய். (சு)

கறந்தநற்பாலும்தயிரும் கடைந்துறிமேல்வைத்தவெண்ணெய் *
பிறந்ததுவேமுதலாகப் பெற்றறியேனெம்பிரானே ! *
சிறந்தநற்றாயலர்தூற்று மென்பதனால்பிறர்முன்னே *
மறந்துமுரையாடமாட்டேன் மஞ்சனமாடநீவாராய். (எ)

கன்றினைவாலோலைகட்டிக் கனிகளுதிரவெறிந்து *
பின்றொடர்ந்தோடிப்போர்பாம்பைப் பிடித்துக்கொண்டாட்டினாய்போலும் *
நின்திறத்தேனல்லேன்நம்பி ! நீபிறந்ததிருநன்னாள் *
நன்றுநீநீராடவேண்டும் நாரணாவோடாதேவாராய். (அ)

பூணித்தொழுவினில்புக்குப் புழுதியளைந்தபொன்மேனி *
காணப்பெரிதுமுகப்பன் $ ஆகிலும் கண்டார்பழிப்பர் *
நாணித்தனையுமிலாதாய் ! நப்பின்னைகாணில்சிரிக்கும் *
மாணிக்கமே யென்மணியே ! மஞ்சனமாடநீவாராய். (கூ)

⁂ கார்மலிமேனி § நிறத்துக் கண்ணபிரானையுகந்து *
வார்மலிகொங்கையசோதை மஞ்சனமாட்டியவாற்றை *
பார்மலிதொல்புதுவைக்கோன் பட்டர்பிரான்சொன்னபாடல் *
சீர்மலிசெந்தமிழ்வல்லார் தீவினையாதுமிலரே. (க0)

வெண்ணெய் கன்று பேய்ச்சி கஞ்சன் அப்பம் எண்ணெய் கறந்த கன்றினை பூணி கார் பின்னை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு - வது, பின்னைமணாளனை.



குழல்வாரக்காக்கையைவாவெனல்.

*கலித்தாழிசை.*

மத்யமாவதிராகம்-ரூபகதாளம்.

⁂ பின்னைமணாளனைப் பேரில்கிடந்தானை *
முன்னையமரர் முதல்தனிவித்தினை *
என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட *
மன்னனைவந்துகுழல்வாராயக்காக்காய் † மாதவன்றன்குழல்வாராயக்காக்காய்.

பேயின்முலையுண்ட பிள்ளையிவன்முன்னம் *
மாயச்சகடும் மருதுமிறுத்தவன் *
காயாமலர்வண்ணன் கண்ணன்கருங்குழல் *
தூய்தாகவந்துகுழல்வாராய்க்காக்காய் தூமணிவண்ணன்குழல்வாராயங்காக்காய்.

‡ கழகண்டு - தீம்பு. $ "உவப்பன்" என்றுபாடம். § "நிறத்தன்" என்றும் சொல்லுவர்கள். † அக்காக்காய் - சிறுபிள்ளைகளைக் குழல்வாருவார்சீராட்டாகச்சொல்லும் பாசுரம்.

திண்ணக்கலத்தில் திரையுறிமேல்வைத்த *
வெண்ணெய்விழுங்கி விரையவுறங்கிடும் *
அண்ணலமரர்பெருமானை * ஆயர்தம் [வாராயக்காக்காய்.
கண்ணனைவந்து குழல்வாராயக்காக்காய் கார்முகில்வண்ணன் குழல்

பள்ளத்தில்மேயும் பறவையுருக்கொண்டு *
கள்ளவசுரன் வருவானைத்தான்கண்டு *
புள்ளிதுவென்று‡பொதுக்கோவாய்கீண்டிட்ட * [வாராயக்காக்காய்.
பிள்ளையைவந்து குழல்வாராயக்காக்காய் பேய்முலையுண்டான்குழல்

கற்றினம்மேய்த்துக் கனிக்கொருகன்றினை *
பற்றியெறிந்த பரமன்திருமுடி *
உற்றனபேசி நீயோடித்திரியாதே * [யக்காக்காய்.
அற்றைக்கும்வந்து குழல்வாராயக்காக்காய் ஆழியான்றன்குழல்வாரா

கிழக்கில்குடிமன்னர் கேடிலாதாரை *
அழிப்பான்நினைந்திட் டவ்வாழியதனால் *
விழிக்குமளவிலே வேரறுத்தானை * [யக்காக்காய்.
குழற்கணியாகக்குழல்வாராயக் காக்காய்கோவிந்தன்தண்குழல்வாரா

பிண்டத்திரளையும் பேய்க்கிட்டநீர்ச்சோறும் *
உண்டற்குவேண்டி நீயோடித்திரியாதே *
அண்டத்தமரர்பெருமான் - அழகமர் * [ராயக்காக்காய்.
வண்டொத்திருண்டகுழல் வாராயக்காக்காய் மாயவன்றன்குழல்வா

உந்தியெழுந்த வுருவமலர்தன்னில் *
சந்தச்சதுமுகன் றன்னைப்படைத்தவன் *
§ கொந்தக்குழலைக் குறந்து ¶ புளியட்டி * [ராயக்காக்காய்.
தந்தத்தின்சீப்பால் குழல்வாராயக்காக்காய் தாமோதரன்றன்குழல்வா

மன்னன்றன்தேவிமார் கண்டுமகிழ்வெய்த *
முன்னிவ்வுலகினை முற்றுமளந்தவன் *
பொன்னின்முடியினைப் பூவணைமேல்வைத்து * [யக்காக்காய்.
பின்னேயிருந்து குழல்வாராயக்காக்காய் பேராயிரத்தான்குழல்வாரா

⁂ கண்டார்பழியாமே அக்காக்காய் * கார்வண்ணன்
வண்டார்குழல்வார வாவென்றவாய்ச்சிசொல் *
விண்டோய்மதிள் வில்லிபுத்தூர்க்கோன்பட்டன்சொல் *
கொண்டாடிப்பாடக் குறுகாவினைதானே. (௧௦)

பின்னைப் பேய் திண்ணப் பள்ளத்தில் கற்றுக் கிழக்கில் பிண்டம் உந்தி மன்னன்கண்டார் வேலி.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ பொதுக்கோ - பொதுக்கென - சடக்கெனவென்றபடி. § கொந்தம்-நெறிப்பு. ¶ "புழுகுஅட்டி" என்று பாடாந்தரம்.

## கூ - வது, வேலிக்கோல்.

சொல்கொடு வரவிளம்பல்.
கலித்தாழிசை.
தேசியராகம் - அதிதாளம்.

⁂ வேலிக்கோல்வெட்டி விளையாடுவில்லேற்றி *
† தாலிக்கொழுந்தைத் தடங்கழுத்திற்பூண்டு *
பீலித்தழையைப் பிணைத்துப்பிறகிட்டு * [கோர்கோல்கொண்டுவா.
காலிப்பின் போவாற்கோர் கோல்கொண்டுவா, கடல்நிறவண்ணற்

‡ கொங்குங்குடந்தையுங் கோட்டியூரும்பேரும் *
எங்குந்திரிந்து விளையாடுமென்மகன் *
சங்கம்பிடிக்குந் தடக்கைக்குத்தக்க * நல் [கொண்டுவா.
லங்கமுடையதோர் கோல்கொண்டுவா அரக்குவழித்ததோர் கோல்

கறுத்திட்டெதிர்நின்ற கஞ்சனைக்கொன்றான் *
பொறுத்திட்டெதிர்வந்த புள்ளின்வாய்கீண்டான் *
நெறித்தகுழல்களை நீங்கமுன்னோடி * [கோல்கொண்டுவா.
சிறுக்கன்றுமேய்ப்பாற் கோர்கோல்கொண்டுவா தேவபிரானுக்கோர்

ஒன்றேயுரைப்பா னொருசொல்லேசொல்லுவான் *
துன்றுமுடியான் துரியோதநன்பக்கல் *
சென்றங்குப்பாரதம் கையெறிந்தானுக்கு * [கோல்கொண்டுவா.
கன்றுகள்மேய்ப்பதோர் கோல்கொண்டுவா கடல்நிறவண்ணற்கோர்

சீரொன்றுதூதாய்த் துரியோதநன்பக்கல் *
ஊரொன்றுவேண்டிப் பெறாதவுரோடத்தால் *
பாரொன்றிப் பாரதம்கைசெய்து * பார்த்தற்குத் [கோல்கொண்டுவா.
தேரொன்றையூர்ந்தாற்கோர் கோல்கொண்டுவா தேவபிரானுக்கோர்

ஆலத்திலையா னரவினணைமேலான் *
நீலக்கடலுள் நெடுங்காலங்கண்வளர்ந்தான் *
பாலப்பிராயத்தே பார்த்தற்கருள்செய்த * [கோல்கொண்டுவா.
கோலப்பிரானுக்கோர் கோல்கொண்டுவா குடந்தைக்கிடந்தாற்கோர்

பொற்றிகழ் சித்திரகூடப்பொருப்பினில்
உற்றவடிவி லொருகண்ணுங்கொண்ட * அக்
கற்றைக்குழலன் கடியன்விரைந்துன்னை * [ர்கோல்கொண்டுவா.
மற்றைக்கண்கொள்ளாமேகோல்கொண்டுவா மணிவண்ணநம்பிக்கோ

† தாலி-ஆமைத்தாலி; அன்றிக்கே, தாலி-தாளி, அதின்,கொழுந்து-குருத்து. ‡ கொங்குக்குடந்தை என்பதின் வல்லொற்று மெல்லொற்றாயிற்று.

மின்னிடைச் சீதைபொருட்டா * இலங்கையர்
மன்னன்மணிமுடி பத்துமுடன்வீழ *
தன்னிகரொன்றில்லாச் சிலைகால்வளைத்திட்ட * [கொண்டுவா.
மின்னுமுடியற்கோர்கோல்கொண்டுவா வேலையடைத்தாற்கோர்கோல்

தென்னிலங்கைமன்னன் சிரந்தோள்துணிசெய்து *
மின்னிலங்குபூண் விபீடணநம்பிக்கு *
என்னிலங்குநாமத்தளவு மரசென்ற [ல்கொண்டுவா.
மின்னலங்காரற்கோர்கோல்கொண்டுவா வேங்கடவாணற்கோர் கோ

⁂ அக்காக்காய்! நம்பிக்குக் கோல்கொண்டுவாவென்று *
மிக்காளுரைத்தசொல் வில்லிபுத்தூர்ப்பட்டன் *
ஒக்கவுரைத்ததமிழ்ப் பத்தும்வல்லவர் *
மக்களைப்பெற்றுமகிழ்வ ரிவ்வையத்தே. (௧௰)

வேலிகொங்கு கறுத்து ஒன்றே சீர் ஆல் பொற்றிகழ் மின் தென்னிலங்கை அக்காக்காய் ஆநிரை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, ஆநிரை.



### பூச்சூட்டல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**அடாணாராகம் - ரூபகதாளம்.**

⁂ ஆநிரைமேய்க்கநீபோதி யருமருந்தாவதறியாய் *
கானகமெல்லாம்திரிந் துன்கரியதிருமேனிவாட
பானையில்பாலைப்பருகிப் பற்றாதாரெல்லாம்சிரிப்ப *
தேனிலினியபிரானே! செண்பகப்பூச்சூட்டவாராய். (௧)

கருவுடைமேகங்கள்கண்டா லுன்னைக்கண்டாலொக்கும்கண்கள் *
உருவுடையாயுலகேழு முண்டாகவந்துபிறந்தாய் *
திருவுடையாள்மணவாளா! திருவரங்கத்தேகிடந்தாய்! *
மருவிமணம்கமழ்கின்ற மல்லிகைப்பூச்சூட்டவாராய். (௨)

மச்சொடுமாளிகையேறி மாதர்கள்தம்மிடம்புக்கு *
கச்சொடுபட்டைக்கிழித்துக் காம்புதுகிலவைகீறி *
நிச்சலும்தீமைகள்செய்வாய் நீள்திருவேங்கடத்தெந்தாய்! *
பச்சைத்தமனகத்தோடு பாதிரிப்பூச்சூட்டவாராய். (௩)

தெருவின்கண்நின்றிளவாய்ச்சிமார்களைத் தீமைசெய்யாதே *
மருவும்தமனகமும்சீர் மாலைமணம்கமழ்கின்ற *
புருவம்கருங்குழல்நெற்றி பொலிந்தமுகில்கன்றுபோலே *
உருவமழகியநம்பீ யுகந்திவைசூட்டநீவாராய். (௪)

புள்ளினைவாய்பிளந்திட்டாய் பொருகரியின்கொம்பொசித்தாய் *
கள்ளவரக்கியைமூக்கொடு காவலனைத்தலைகொண்டாய் *
அள்ளிநீவெண்ணெய்விழுங்க அஞ்சாதடியேனடித்தேன் *
தெள்ளியநீரிலெழுந்த செங்கழுநீர்சூட்டவாராய். (ரு)

எருதுகளோடுபொருதி யேது † முலோபாய்காண்நம்பீ *
கருதியதீமைகள்செய்த கஞ்சனைக்கால்கொடுபாய்ந்தாய் *
தெருவின்கண்தீமைகள்செய்து சிக்கெனமல்லர்களோடு *
பொருதுவருகின்றபொன்னே ! புன்னைப்பூச்சூட்டவாராய். (சு)

குடங்களெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே ! *
மடங்கொள்மதிமுகத்தாரை மால்செய்யவல்லவென்மைந்தா ! *
இடந்திட்டிரணியன்நெஞ்சை யிருபிளவாகமுன்கீண்டாய் !
குடந்தைக்கிடந்தவெங்கோவே ! குருக்கத்திப்பூச்சூட்டவாராய். (எ)

சீமாலிகனவனேடு தோழமைக்கொள்ளவும்வல்லாய் ! *
சாமாறவனைநீயெண்ணிச் சக்கரத்தால்தலைகொண்டாய் !
ஆமாறறியும்பிரானே ! அணியரங்கத்தேகிடந்தாய் ! *
ஏமாற்றமென்னைத்தவிர்த்தா யிருவாட்சிப்பூச்சூட்டவாராய். (அ)

அண்டத்தமரர்கள்சூழ அத்தாணியுள்ளங்கிருந்தாய் *
தொண்டர்கள்நெஞ்சிலுறைவாய் தூமலராள்மணவாளா *
உண்டிட்டுலகினையேழு மோராலிலையில்துயில்கொண்டாய் *
கண்டுநானுன்னையுகக்கக் கருமுகைப்பூச்சூட்டவாராய். (கூ)

⚜ செண்பகமல்லிகையோடு செங்கழுநீரிருவாட்சி *
எண்பகர்பூவுங்கொணர்ந்தே னின்றிவைசூட்டவாவென்று *
மண்பகர்கொண்டானை யாய்ச்சிமகிழ்ந்துரைசெய்தவிம்மாலை *
பண்பகர்வில்லிபுத்தூர்க்கோன் பட்டர்பிரான்சொன்னபத்தே. (௧௦)

ஆநிரைகருமச்சு தெருப்புள்எருதுகுடம்சீமாலிகனண்டம் செண்பகமிந்திரன்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, இந்திரனேடு.



காப்பிடல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**தோடிராகம்-ரூபகதாளம்.**

⚜ இந்திரனேடுபிரம னீசனிமையவரெல்லாம் *
மந்திரமாமலர்கொண்டு மறைந்துவராய்வந்துநின்றார் *
சந்திரன்மாளிகைசேரும் சதுரர்கள்வெள்ளறைநின்றாய் ! *
அந்தியம்போதிதுவாகும் அழகனே ! காப்பிடவாராய். (௧)

† உலோபாய் - லோபமற்றிராநின்றாய்.

கன்றுகளில்லம்புகுந்து கதறுகின்றபசுவெல்லாம் *
நின்றொழிந்தேனுன்னைக்கூவி நேசமேலொன்றுமிலாதாய்! *
‡ மன்றினில்லேலந்திப்போது மதிள்திருவெள்ளறைநின்றாய்! *
நன்றுகண்டாயென்றன்சொல்லு நானுன்னைக்காப்பிடவாராய். (௨)

செப்போதுமென்முலையார்கள் சிறுசோறுமில்லும்சிதைத்திட்டு *
அப்போதுநானுரப்பப்போ யடிசிலுமுண் டிலையாள்வாய்! *
முப்போதும்வானவரேத்தும் முனிவர்கள்வெள்ளறைநின்றாய்! *
இப்போதுநானொன்றும்செய்யே னெம்பிரான்காப்பிடவாராய். (௩)

கண்ணில்மணற்கொடுதூவிக் காலினால்பாய்ந்தனையென்றென்று - *
எண்ணரும்பிள்ளைகள்வந்திட் டிவராற்முறைப்படுகின்றார் *
கண்ணனே! வெள்ளறைநின்றாய்! கண்டாரோடே தீமைசெய்வாய்!
வண்ணமேவேலையதொப்பாய்! வள்ளலேகாப்பிடவாராய். (௪)

பல்லாயிரவரிவ்வூரில் பிள்ளைகள் தீமைகள்செய்வார் *
எல்லாமுன்மேலன்றிப்போகா தெம்பிரான்நீயிங்கேவாராய் *
நல்லார்கள்வெள்ளறைநின்றாய்! ஞானச்சுடரே! உன்மேனி
சொல்லாரவாழ்த்திநின்றேத்திச் சொப்படக்காப்பிடவாராய். (௫)

கஞ்சன்கறுக்கொண்டுநின்மேல் கருநிறச்செம்மயிர்ப்பேயை *
வஞ்சிப்பதற்குவிடுத்தா னென்பதோர்வார்த்தையுமுண்டு *
மஞ்சுதவழ்மணிமாட மதிள்திருவெள்ளறைநின்றாய்! *
அஞ்சுவன்நீயங்குநிற்க, அழகனே! காப்பிடவாராய். (௬)

கள்ளச்சகடும்மருதும் கலக்கழியவுதைசெய்த *
பிள்ளையரசே! நீபேயைப்பிடித்துமுலையுண்டபின்னை *
உள்ளவாறொன்றுமறியே னொளியுடைவெள்ளறைநின்றாய்! *
பள்ளிகொள்போதிதுவாகும் பரமனே! காப்பிடவாராய். (௭)

இன்பமதனையுயர்த்தா யிமையவர்க்கென்றுமரியாய்! *
கும்பக்களிறட்டகோவே! கொடுங்கஞ்சன்நெஞ்சினிற்கூற்றே! *
செம்பொன்மதிள்வெள்ளறையாய்! செல்வத்தினால்வளர்பிள்ளாய்! *
கம்பக்கபாலிகாணங்கு கடிதோடிக்காப்பிடவாராய். (௮)

இருக்கொடுநீர்சங்கிற்கொண்டிட் டெழில்மறையோர்வந்துநின்றார் *
தருக்கேல்நம்பி! சந்திநின்று தாய்சொல்லுக்கொள்ளாய்சிலநாள் *
திருக்காப்புநானுன்னைச்சாத்தத் தேசுடைவெள்ளறைநின்றாய்! *
உருக்காட்டுமந்திவிளக்கின் றொளிகொள்ளவேற்றுகேன்வாராய். (௯)

---

‡ மன்றில் நில்லேல்.

⁂ போதமர்செல்வக்கொழுந்து புணர்திருவெள்ளறையானை *
மாதர்க்குயர்ந்தவசோதை மகன்றன்னைக்காப்பிட்டமாற்றம் *
வேதப்பயன்கொள்ளவல்ல விட்டுசித்தன்சொன்னமாலை *
பாதப்பயன்கொள்ளவல்ல பத்தருள்ளார்வினைபோமே. (௧௦)

இந்திரன் கன்று செப்பு கண்ணில் பல்லாயிரவர் கஞ்சன் கள்ளஇன்பம் இருக்கு போதமர் வெண்ணெய்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௯-வது, வெண்ணெய்விழுங்கி.

பாலக்ரீடை.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**சாரங்கம்-கேதாரகௌளராகம்-ஆதிதாளம்.**

⁂வெண்ணெய்விழுங்கிவெறுங்கலத்தைவெற்பிடையிட்டதனோசைகேட்கு
கண்ணபிரான்கற்றகல்வி தன்னைக்காக்ககில்லோமுன்மகனைக்காவாய் * [ம்*
புண்ணிற்புளிப்பெய்தாலொக்குந்தீமை புரைபுரையாலிவைசெய்யவல்ல *
அண்ணற்கண்ணானோர்மகனைப்பெற்ற வசோதைநங்காயுன்மகனைக்கூவாய்.()

வருகவருகவருகவிங்கே வாமநனம்பீவருகவிங்கே *
கரியகுழல்செய்யவாய்முகத் தெங்காகுத்தநம்பீ ! வருகவிங்கே *
அரியனிவனெனக்கின்றுநங்காய் ! அஞ்சநவண்ணா ! அசலகத்தார் *
பரிபவம்பேசத்தரிக்ககில்லேன் பாவியேனுக்கிங்கேபோதராயே. (௨)

திருவுடைப்பிள்ளைதான் தீயவாறுதேக்கமொன்றுமிலன், தேசுடையன் *
உருகவைத்தகுடத்தொடுவெண்ணெ யுறிச்சியுடைத்திட்டுப்போந்துநின்றான்
அருகிருந்தார்தம்மை யநியாயஞ்செய்வதுதான்வழக்கோ அசோதாய் ! *
வருகவென்றுன்மகன்றன்னைக்கூவாய் வாழவொட்டான்மதுசூதநனே. (௩)

கொண்டல்வண்ணாயிங்கேபோதராயே கோயிற்பிள்ளாயிங்கேபோதராயே *
தெண்டிரைசூழ்திருப்பேர்க்கிடந்த திருநாரணாவிங்கேபோதராயே *
உண்டுவந்தேனம்மமென்றுசொல்லி யோரடியகம்புக, ஆச்சிதானும் *
கண்டெதிரேசென்றெடுத்துக்கொள்ளக் கண்ணபிரான்கற்றகல்விதானே. ()

பாலைக்கறந்தடுப்பேறவைத்துப் பல்வளையாளென்மகளிருப்ப *
மேலையகத்தேநெருப்புவேண்டிச்சென் றிறைப்பொழுதங்கேபேசிநின்றேன்*
சாளக்கிராமமுடையநம்பி சாய்த்துப்பருகிட்டுப்போந்துநின்றான் *
ஆலைக்கரும்பின்மொழியனைய வசோதைநங்காயுன்மகனைக்கூவாய். (௫)

போதர்கண்டாயிங்கேபோதர்கண்டாய்போதரேனென்னாதேபோதர்கண்டா
ஏதேனும்சொல்லியசலகத்தாரேதேனும்பேசநான்கேட்கமாட்டேன் * [ய்*
கோதுகுலமுடைக்குட்டனேயோ ! குன்றெடுத்தாய் ! குடமாடுகூத்தா ! *
வேதப்பொருளே ! யென்வேங்கடவா ! வித்தகனே ! யிங்கேபோதராயே. ()

செங்கெலரிசிசிறுபருப்புச் செய்தவக்காரம்நறுநெய்பாலால் *
பன்னிரண்டுதிருவோணமட்டேன்பண்டுமிப்பிள்ளைபரிசறிவன் * [ன்
இன்னமுகப்பன்நானென்றுசொல்லி யெல்லாம்விழுங்கிட்டுப்போந்துநின்றா
உன்மகன்றன்னையசோதைநங்காய் ! கூவிக்கொள்ளாயிவையுஞ்சிலவே. (௭)

கேசவனேயிங்கேபோதராயே கில்லேனென்னாதிங்கேபோதராயே *
நேசமிலாதாரகத்திருந்து நீவிளையாடாதேபோதராயே *
தாசனம்சொல்லும் † தொழுத்தைமாரும்தொண்டரும்நின்றவிடத்தில்நின்று
தாய்சொல்லுக்கொள்வதுதன்மங்கண்டாய் தாமோதராவிங்கேபோதராயே.()

கன்னலிலட்டுவத்தோடுசீடைகா ரெள்ளினுண்டைகலத்திலிட்டு *, என்னக
மென்றுநான்வைத்துப்போந்தே னிவன்புக்கவற்றைப் ‡ பெறுத்திப்போந்தா
ன்*,பின்னுமகம்புக்குறியைநோக்கிப்பிறங்கொளிவெண்ணெயும்சோதிக்கின்
றான்*, உன்மகன்றன்னையசோதைநங்காய்!கூவிக்கொள்ளாயிவையும்சிலவே.

சொல்லிலரசிப்படுதி ‖ நங்காய் ! சுழலுடையனுன்பிள்ளைதானே *
இல்லம்புகுந்தென்மகளைக்கூவிக் கையில்வளையைக்கழற்றிக்கொண்டு *
கொல்லையில்நின்றும்கொணர்ந்துவிற்ற அங்கொருத்திக்கவ்வளைகொடுத்து *
நல்லனநாவற்பழங்கள்கொண்டுநானல்லேன்என்றுசிரிக்கின்றானே. (௰)

❋❋வண்டுகளித்திரைக்கும்பொழில்சூழ் வருபுனல்காவிரித்தென்னரங்கன் *
பண்டவன்செய்தகிரீடையெல்லாம் பட்டர்பிரான்விட்டுசித்தன்பாடல் *
கொண்டிவைபாடிக்குனிக்கவல்லார்கோவிந்தன்றன்னடியார்களாகி *
எண்டிசைக்கும்விளக்காகிநிற்பா ரிணையடியென்தலைமேலனவே. (௧௧)

வெண்ணெய் வருக திருக் கொண்டல் பாலை போதர் செங்நெல் கேசவனே கன்னல் சொல்லில் வண்டு ஆற்றில்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௰-வது, ஆற்றிலிருந்து.



அயலகத்தார் முறைபாடு.

கலித்தாழிசை.

**நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.**

❋❋ ஆற்றிலிருந்து விளையாடுவோங்களை *
சேற்றாலெறிந்து வளைதுகில்கைக்கொண்டு *
காற்றில்கடியனாய் ஓடியகம்புக்கு *
மாற்றமும்தாரானாலின்றுமுற்றும் § வளைத்திறம்பேசானாலின்றுமுற்றும். (௧)

குண்டலம்தாழக் குழல்தாழ நாண்தாழ *
எண்டிசையோரு மிறைஞ்சித்தொழுதேத்த *
வண்டமர்பூங்குழலார் துகில்கைக்கொண்டு *
விண்தோய்மரத்தானாலின்றுமுற்றும் வேண்டவும்தாரானாலின்றுமுற்றும். ()

† தொழுத்தைமார் - அடிமைசெய்யுமவர்கள். ‡ பெறுத்திப்போந்தான் என்று - வ்யதிரேகோக்தி; தானே உண்டானென்றபடி. ‖ அரசிப்படுதி-கோபியா நின்றாய். "அரிசப்படுதி" என்றும் சொல்லுவர்கள். § முற்றுதும் என்கிறது "முற்றும்" எனக்கிடக்கிறது: முடிவோமென்றபடி.

தடம்படுதாமரைப் பொய்கைகலக்கி *
விடம்படுநாகத்தை வால்பற்றியீர்த்து *
படம்படுபைந்தலைமேலெழப்பாய்ந்திட்டு - *
உடம்பையசைத்தானாலின்றுமுற்றும் உச்சியில்நின்றானாலின்றுமுற்றும். (௩)
தேநுகனாவிசெகுத்து * பனங்கனி
தானெறிந்திட்ட தடம்பெருந்தோளினால் *
வானவர்கோன்விட வந்தமழைதடுத்து - *
ஆநிரைகாத்தானாலின்றுமுற்றும் அவையுய்யக்கொண்டானாலின்றுமுற்றும்.()
ஆய்ச்சியர்சேரி யளைதயிர்பாலுண்டு *
பேர்த்தவர்கண்டு பிடிக்கப்பிடியுண்டு *
வேய்த்தடந்தோளினார் வெண்ணெய்கொள்மாட்டாது - * அங்
காப்புண்டிருந்தானாலின்றுமுற்றும் அடியுண்டழுதானாலின்றுமுற்றும். (௫)
தள்ளித்தளர்நடையிட் டிளம்பிள்ளையாய் *
உள்ளத்தினுள்ளே யவளையுறநோக்கி *
கள்ளத்தினால்வந்த பேய்ச்சிமுலையுயிர் *
துள்ளச்சுவைத்தானாலின்றுமுற்றும் துவக்கறவுண்டானாலின்றுமுற்றும். (௬)
மாவலிவேள்வியில் மாணுருவாய்ச்சென்று *
மூவடிதாவென் றிரந்தவிம்மண்ணினை *
ஓரடியிட் டிரண்டாமடிதன்னிலே *
† தாவடியிட்டானாலின்றுமுற்றும் தரணியளந்தானாலின்றுமுற்றும் ()
தாழைதண்ணாம்பல் தடம்பெரும்பொய்கைவாய் *
வாழுமுதலை வலைப்பட்டுவாதிப்புண் *
வேழம்துயர்கெட விண்ணோர்பெருமானாய் *
ஆழிபணிகொண்டானாலின்றுமுற்றும் அதற்கருள்செய்தானாலின்றுமுற்றும்.
வானத்தெழுந்த மழைமுகில்போல் * எங்கும்
கானத்துமேய்ந்து களித்துவிளையாடி *
ஏனத்துருவா யிடந்தவிம்மண்ணினை *
தானத்தேவைத்தானாலின்றுமுற்றும் தரணியிடந்தானாலின்றுமுற்றும். (௯)
⁂ அங்கமலக்கண்ணன்றன்னை யசோதைக்கு *
மங்கைநல்லார்கள்தாம்வந்து முறைப்பட்ட *
அங்கவர்சொல்லைப் புதுவைக்கோன்பட்டன்சொல் *
இங்கிவைவல்லவர்க் கேதமொன்றில்லையே. (௧௦)

ஆற்றில் குண்டலம் தடம் தேநுகன் ஆய்ச்சி தள்ளி மாவலி தாழை வானத்து அங்கமலம் தன்னோர்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



† தாவடியிட்டான் - தாவியடியிட்டான்.

# மூன்றாம்பத்து.

## க-வது, தன்னேர்.

அன்னை, கண்ணனுக் கின்னமுதன்றியம்மந்தரேனெனல்.
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
**அரபிராகம்-அதிதாளம்.**

‡‡தன்னேராயிரம்பிள்ளைகளோடு தளர்நடையிட்டுவருவான் *
பொன்னேய்நெய்யொடுபாலமுதுண் டொரு § புள்ளுவன்பொய்யேதவழும் *
மின்னேர் நுண்ணிடைவஞ்சமகள்கொங்கைதுஞ்ச வாய்வைத்தபிரானே ! *
அன்னே ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௧)

பொன்போல்மஞ்சநமாட்டியமுதூட்டிப் போனேன்வருமளவிப்பால் *
வன்பாரச்சகடமிறச்சாடி வடக்கிலகம்புக்கிருந்து *
மின்போல்நுண்ணிடையாளொருகன்னியை வேற்றுருவம்செய்துவைத்த *
அன்பா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௨)

† கும்மாயத்தொடுவெண்ணெய்விழுங்கிக் குடத்தயிர்சாய்த்துப்பருகி *
பொய்ம்மாயமருதானவசுரரைப் பொன்றுவித்தின்றுநீவந்தாய் *
இம்மாயம்வல்லபிள்ளைநம்பி ! உன்னையென்மகனேயென்பர்நின்றார் *
அம்மா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௩)

மையார்கண்மடவாய்ச்சியர்மக்களை மையன்மைசெய்தவர்பின்போய் *
கொய்யார்பூந்துகில்பற்றித் தனிநின்றுகுற்றம்பலபலசெய்தாய் *
பொய்யா ! உன்னைப்புறம்பலபேசுவ புத்தகத்துக்குளகேட்டேன் *
ஐயா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௪)

முப்போதும்கடைந்தீண்டிய வெண்ணெயினோடு தயிரும்விழுங்கி *
‡ கப்பாலாயர்கள் 0 காவில்கொணர்ந்தகலத்தொடுசாய்த்துப்பருகி *
மெய்ப்பாலுண்டழுபிள்ளைகள்போல நீவிம்மிவிம்மியழுகின்ற *
அப்பா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௫)

கரும்பார்நீள்வயல்காய்கதிர்ச் செந்நெலைக்கற்றாநிரை மண்டித்தின்ன *
விரும்பாக்கன்றொன்றுகொண்டு விளங்கனிவீழவெறிந்தபிரானே ! *
சுரும்பார்மென்குழல்கன்னி யொருத்திக்குச்சூழ்வலைவைத்துத்திரியும் *
$ அரம்பா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௬)

மருட்டார்மென்குழல்கொண்டுபொழில் புக்குவாய்வைத்தவ்வாயர்தம்பாடி *
சுருட்டார்மென்குழல்கன்னியர்வந்துன்னைச் சுற்றும்தொழநின்றசோதி ! *
¶பொருட்டாயமிலேனெம்பெருமானுன்னைப்பெற்றகுற்றமல்லாமல் * மற்றிங்
கரட்டாவுன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௭)

---

§ புள்ளுவமாவது - மெய்போலேயிருக்கும் பொய். † கும்மாயம் - குழையச்சமைத்தபருப்பு. ‡ கப்பு - தோள். 0 கா - காவடி. $ அரம்பா - தீம்பனே. ¶ பொருள் தாயம் - அர்த்ததாயம்; பொருள்பங்கு.

வாளாவாகிலும்காணகில்லார் பிறர்மக்களைமையன்மைசெய்து *
தோளாலிட்டவரோடுதிளைத்து நீசொல்லப்படாதனசெய்தாய் *
கேளாராயர்குலத்தவரிப்பழி; கெட்டேன் ! வாழ்வில்லை * நந்தன்
காளாயுன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (அ)

தாய்மார்மோர்விற்கப்போவர் தமப்பன்மார்கற்றுநிரைப்பின்போவர் *
நீயாய்ப்பாடியிளங்கன்னிமார்களை நேர்படவேகொண்டுபோதி *
காய்வார்க்கென்றுமுகப்பனவேசெய்து கண்டார்கழறத்திரியும் *
ஆயா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௯)

தொத்தார்பூங்குழல்கன்னியொருத்தியைச் சோலைத்தடங்கொண்டுபுக்கு *
முத்தார்கொங்கைபுணர்ந்திராநாழிகை மூவேழுசென்றபின்வந்தாய் *
ஒத்தார்க்கொத்தனபேசுவ ருன்னையுரப்பவேநானொன்றும்மாட்டேன் *
அத்தா ! உன்னையறிந்துகொண்டே னுனக்கஞ்சுவனம்மந்தரவே. (௧0)

⁂ காரார்மேனிநிறத்தெம்பிரானைக் கடிகமழ்பூங்குழலாய்ச்சி *
ஆராவின்னமுதுண்ணத்தருவன்நா னம்மந்தாரேனென்றமாற்றம் *
பாரார்தொல்புகழான்புதுவைமன்னன்பட்டர்பிரான்சொன்னபாடல்
ஏராரின்னிசைமாலைவல்லா ரிருடீகேசனடியாரே. (௧௧)

தன்னேர் பொன் கும்மாயம் மையார் முப்போது கரு மருட்டார் வாளா தாய்மார் தொத்தார் காரார் அஞ்சனம்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, அஞ்சநவண்ணனே.



கண்ணனையன்னை கன்றின்பின் போக்கியதெண்ணி
மனங்கரைந்திரங்கியிசைத்தல்.

கலிநிலைத்துறை.

**சங்கராபரணராகம்-ரூபகதாளம்.**

⁂ அஞ்சநவண்ணனை யாயர்கோலக்கொழுந்தினை *
மஞ்சனமாட்டி மனைகடோறுந்திரியாமே *
கஞ்சனைக்காய்ந்த கழலடிநோவக்கன்றின்பின் *
என்செயப்பிள்ளையைப்போக்கினே னெல்லேபாவமே. (௧)

பற்றுமஞ்சள்பூசிப் பாவைமாரொடுபாடியில் *
சிற்றில்சிதைத் தெங்குந் தீமைசெய்துதிரியாமே *
கற்றுத்தூளியுடை வேடர்கானிடைக், கன்றின்பின் *
எற்றுக்கென்பிள்ளையைப் போக்கினே னெல்லேபாவமே. (௨)

நன்மணிமேகலை நங்கைமாரொடுநாடொறும் *
பொன்மணிமேனி புழுதியாடித்திரியாமே *
கல்மணிநின்றதிர் † கானதரிடைக், கன்றின்பின் *
என்மணிவண்ணனைப்போக்கினே னெல்லேபாவமே. (௩)

---

† கானதர் - காட்டுவழி.

வண்ணக்கருங்குழல் மாதர்வந்தலர் தூற்றிடப் *
பண்ணிப், பலசெய் திப்பாடியெங்குந்திரியாமே *
கண்ணுக்கினியானைக் கானதரிடைக், கன்றின்பின் *
எண்ணற்கரியானைப்போக்கினே னெல்லேபாவமே. (ச)
அவ்வவ்விடம்புக் கவ்வாயர்பெண்டிர்க் † கணுக்கனாய் *
கொவ்வைக்கனிவாய்கொடுத்துக் ‡ கூழைமைசெய்யாமே *
§ எவ்வுஞ்சிலையுடை வேடர்கானிடைக், கன்றின்பின் *
தெய்வத்தலைவனைப்போக்கினே னெல்லேபாவமே. (ரு)
மிடறுமெழுமெழுத்தோட வெண்ணெய்விழுங்கிப்போய் *
¶ படிறுபலசெய் திப்பாடியெங்கும் திரியாமே *
$ கடிறுபலதிரி கானதரிடைக், கன்றின்பின் *
†† இடறவென்பிள்ளையைப்போக்கினே னெல்லேபாவமே. (சு)
‡‡ வள்ளிநுடங்கிடை மாதர்வந்தலர் தூற்றிட *
துள்ளிவிளையாடித் தோழரோடுதிரியாமே *
கள்ளியுணங்கு §§ வெங்கானதரிடைக், கன்றின்பின் *
புள்ளின்தலைவனைப்போக்கினே னெல்லேபாவமே. (எ)
பன்னிருதிங்கள் வயிற்றிற்கொண்டவப்பாங்கினால் *
என்னிளங்கொங்கை யமுதமூட்டியெடுத்தியான் *
பொன்னடிநோவப் ¶¶ புலரியே கானிற்கன்றின்பின் *
என்னிளஞ்சிங்கத்தைப்போக்கினே னெல்லேபாவமே. (அ)
குடையுஞ்செருப்புங்கொடாதே தாமோதரனைநான் *
உடையுங்கடியனவூன்று வெம்பரற்களுடை *
கடியவெங்கானிடைக் காலடிநோவக்கன்றின்பின் *
கொடியேனென்பிள்ளையைப்போக்கினே னெல்லேபாவமே. (கூ)
$$ என்றுமெனக்கினியானை யென்மணிவண்ணனை *
கன்றின்பின்போக்கினேனென் றசோதைகழறிய $$ *
பொன்திகழ்மாடப் புதுவையர்கோன்பட்டன்சொல் *
இன்தமிழ்பாலைகள்வல்லவர்க் கிடரில்லையே. (கய)

அஞ்சநப் பற்று நன்மணி வண்ணம் அவ்வவ்விட மிடறு வள்ளி பன்னிருகுடை யென்றும் சீலை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



† அணுக்கன் - அந்தரங்கன். ‡ கூழைமை செய்கை - அவரவர்க்குத் தக்கபடி பரிமாறுகை. § "எவ்வம்" என்று பாடாந்தரம். ¶ படிறு - தீம்பு. $ களிறு என்பதில், ளகரத்துக்கு டகரமாய், கடிறு எனக்கிடக்கிறது.

†† இடற - தட்டித்திரியும்படி. ‡‡ வள்ளி - கொடி. §§ உணங்கல் - உலர்தல். ¶¶ புலரி - விடியற்காலம். $$ கழறல் - க்லேசப்பட்டுச்சொல்லுகை.

## ரு-வது, சீலைக்குதம்பை.

கண்ணன்வரவு கண்டன்னைமகிழ்தல்.
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
சுருட்டிராகம் - அதிதாளம்.

‡‡ சீலைக்குதம்பையொருகாதொருகாதுசெங்கிறமேற்றென்றிப்பூ ‡ *
கோலப்பணைக்கச்சுங்கூறையுடையும் குளிர்முத்தின்கோடாலமும் § *
காலிப்பின்னேவருகின்ற கடல்வண்ணன்வேடத்தைவந்துகாணீர் *
ஞாலத்துப்புத்திரனைப்பெற்றார் நங்கைமீர்நானேமற்றாருமில்லை. (க)
கன்னிநன்மாமதிள்சூழ்தரு பூம்பொழில்காவிரித்தென்னரங்கம் *
மன்னியசீர்மதுசூதனா! கேசவா! பாவியேன்வாழ்வுகந்து - *
உன்னையிளங்கன்றுமேய்க்கச் சிறுகாலேயூட்டியொருப்படுத்தேன் *
என்னின்மனம்வலியாளொருபெண்ணில்லை யென்குட்டனே ‡ முத்தம்தா.()
காடுகளூடுபோய்க்கன்றுகள்மேய்த்துமறியோடி * கார்க்கோடல்பூச்
சூடிவருகின்றதாமோதரா! கற்றுத்தூளிகாணுன்னுடம்பு *
பேடைமயிற்சாயல்பின்னைமணாளா! நீராட்டமைத்துவைத்தேன் *
ஆடியமுதுசெய், அப்பனுமுண்டில னுன்னோடுடனேயுண்பான். (உ)
கடியார்பொழிலணிவேங்கடவா! கரும்போரேறே! * நீயுகக்கும்
குடையுஞ்செருப்புங்குழலுந்தருவிக்கக்கொள்ளாதேபோனாய்மாலே *
கடியவெங்கானிடைக்கன்றின்பின்போன சிறுக்குட்டச்செங்கமல
அடியும்வெதும்பி*உன்கண்கள்சிவந்தாயசைந்திட்டாய்நீயெம்பிரான்.
பற்றார்நடுங்கமுன்பாஞ்சசன்னியத்தைவாய்வைத்தபோரேறே * என்
சிற்றாயர்சிங்கமே! சீதைமணாளா! சிறுக்குட்டச்செங்கண்மாலே! *
சிற்றாடையுஞ்சிறுப்பத்திரமுமிவை கட்டிலின்மேல்வைத்துப்போய் *
கற்றாயரோடுநீகன்றுகள்மேய்த்துக் கலந்துடன்வந்தாய்போலும்.(ரு)
அஞ்சுடராழியுன்கையகத்தேந்துமழகா! நீபொய்கைபுக்கு *
நஞ்சுமிழ்நாகத்தினோடுபிணங்கவும் நானுயிர்வாழ்ந்திருந்தேன்! *
என்செய்யவென்னைவயிறுமறுக்கினாயேதுமோரச்சமில்லை *
கஞ்சன்மனத்துக்குகப்பனவேசெய்தாய்காயாம்பூவண்ணங்கொண்டாய். (சு)
பன்றியுமாமையுமீனமுமாகிய பாற்கடல்வண்ணா! * உன்மேல்
கன்றினுருவாகிமேய்புலத்தேவந்த கள்ளவசுரர்தம்மை *
சென்றுபிடித்துச்சிறுக்கைகளாலே விளங்காயெறிந்தாய்போலும் *
என்றுமென்பிள்ளைக்குத் தீமைகள்செய்வார்கள் அங்ஙனமாவர்களே.

‡ மேல்தோன்றி - செங்காந்தள். § கோடாலம் - பிறைபோல்வளைந்த ஹாரம்; ஆரமென்பது ஆலமெனக்கிடக்கிறது; ஆரமென்று பாடமாகவுமாம்.
‡ முத்தம் - அதரம்.

கேட்டறியாதனகேட்கின்றேன் கேசவா ! கோவலரிந்திரற்கு *
காட்டியசோறும்கறியும்தயிரும் கலந்துடனுண்டாய்போனாலும் *
ஊட்டமுதலிலேனுன்றன்னைக் கொண்டொருபோதுமெனக்கரிது-*
வாட்டமிலாப்புகழ்வாசுதேவா ! உன்னைஅஞ்சுவனின்றுதொட்டும். ()

திண்ணார்வெண்சங்குடையாய் திருநாள்திருவோணமின்றேழுநாள் * முன்
பண்ணேர்மொழியாரைக்கூவிமுளையட்டிப்பல்லாண்டுகூறுவித்தேன் *
கண்ணாலஞ்செய்யக் கறியும்கலத்ததரிசியுமாக்கிவைத்தேன்; *
கண்ணா ! நீநாளைத்தொட்டுக்கன்றின்பின்போகேல்கோலஞ்செய்திங்கேயிரு.

⁂ புற்றரவல்குலசோதைநல்லாய்ச்சி தன்புத்திரன்கோவிந்தனை *
கற்றினம்மேய்த்துவரக்கண்டுகந் தவள்கற்பித்தமாற்றமெல்லாம் *
செற்றமிலாதவர்வாழ்தருதென்புதுவை விட்டுசித்தன்சொல் *
கற்றிவைபாடவல்லார் கடல்வண்ணன்கழலிணைகாண்பர்களே. (க0)

சீலை கன்னி காடு கடி பற்று ரஞ்சுடர் பன்றி கேட்டுதிண்ணார் புற்றுத் தழை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௪-வது, தழைகளும்.



சாலிப்பின்வருங்கண்ணனைக்கண்டுகன்னியர்காமுறல்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**பைரவிராகம்-ஆதிதாளம்.**

⁂தழைகளும்தொங்கலும்†ததும்பியெங்கும்‡தண்ணுமையெக்கம்மத்தளிதா
ழ்பீலி குழல்களும்கீதமுமாகியெங்குங்கோவிந்தன்வருகின்றகூட்டங்கண்டு* [
மழைகொலோவருகின்றதென்றுசொல்லி மங்கைமார்சாலகவாசல்பற்றி *
நுழைவனர்நிற்பனராகி எங்குமுள்ளம்விட்டுண்மறந்தொழிந்தனரே. (க)

வல்லிநுண்ணிதழன்னவாடைகொண்டு வசையறத்திருவரைவிரித்துடுத்து *
பல்லிநுண்பற்றாகவுடைவாள்சாத்திப் பணைக்கச்சுந்திப்பலதழைநடுவே *
முல்லைநன்னறுமலர்வேங்கைமலரணிந்து பல்லாயர்குழாநடுவே *
எல்லியம்போதாகப்பிள்ளைவரு மெதிர்நின்றங்கினவளையிழவேல்மினே. (உ)

சுரிகையும்$தெறிவில்லும்செண்டுகோலும்மேலாடையும்தோழன்மார்கொண்
டோட *, ஒருகையாலொருவன்றன்தோளையூன்றி ஆநிரையினம்மீளக்குறித்
தசங்கம் *, வருகையில்வாடியபிள்ளைகண்ணன் மஞ்சளும்மேனியும்வடிவும்க
ண்டாள் *, அருகேநின்றாளென்பெண்நோக்கிக்கண்டாள் அதுகண்டிவ்வூரொ
ன்று புணர்க்கின்றதே. (௩)

---

† தழை, தொங்கல் - பீலிக்குடை விசேஷங்கள்; "தழைதொங்கல் சாபாலம் பிச்சம் குளிரி பீலிக்குஞ்சமாகும்" என்று திவாகரங்கண்டு.

‡ தண்ணுமை, எக்கம், மத்தளி, தாழ்பீலி - இவை மங்கள வாத்ய விசேஷங்கள். $ தெறிவில் - சுண்டுவில்.

குன்றெடுத்தாநிரைகாத்தபிரான் கோவலனாய்க்குழலூதியூதி *
கன்றுகள்மேய்த்துத்தன்தோழரோடுகலந்துடன்வருவானைத்தெருவில்கண்டு
என்றுமிவனையொப்பாரைநங்காய் கண்டறியேன் ஏடி ‡ வந்துகாணாய் *
ஒன்றுநில்லாவளைகழன்று துகில் ஏந்திளமுலையுமென்வசமல்லவே. (ச)

சுற்றிநின்றாயர்தழைகளிடச் சுருள்பங்கிநேத்திரத்தாலணிந்து *, பற்றிநின்றாயர்கடைத்தலையே பாடவுமாடக்கண்டேன் * அன்றிப்பின், மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேன்மாலிருஞ்சோலையெம்மாயற்கல்லால் *,† கொற்றவனுக்கிவளாமென்றெண்ணிக் கொடுமின்கள்கொடீராகில்கோழம்பமே§. ()

சிந்துரமிலங்கத்தன் திருநெற்றிமேல் திருத்தியகோறம்புந்திருக்குழலும் *
அந்தரமுழவத்தண்தழைக்காவின்கீழ் வருமாயரோடுடன்வளைகோல்வீச *
அந்தமொன்றில்லாதவாயப்பிள்ளையறிந்தறிந்திவ்வீதிபோதுமாகில் *[தோழி
பந்துகொண்டானென்றுவளைத்துவைத்துப்பவளவாய்முறுவலும்காண்போம்

சாலப்பன்னிரைப்பின்னேதழைக்காவின் கீழ்த்தன்திருமேனிநின்றொளிதிகழ *, நீலநன்னறுங்குஞ்சிநேத்திரத்தாலணிந்து பல்லாயர்குழாநடுவே * கோலச்செந்தாமரைக்கண்மிளிரக் குழலூதியிசைபாடிக்குனித்து - * ஆயரோடாலித்துவருகின்றவாயப்பிள்ளை யழகுகண்டென்மகளயர்க்கின்றதே. (எ)

சிந்துரப்பொடிக்கொண்டுசென்னியப்பித் திருநாமமிட்டங்கோரிலையந்தன்னால் *, $ அந்தரமின்றித்தன்னெறிபங்கியை யழகியநேத்திரத்தாலணிந்து *
இந்திரன்போல்வருமாயப்பிள்ளை யெதிர்நின்றங்கினவளையிழவேலென்ன *
சந்தியில்நின்றுகண்டீர்நங்கைதன் துகிலொடுசரிவளைகழல்கின்றதே. (அ)

வலங்காதில்மேல்தோன்றிப்பூவணிந்துமல்லிகைவனமாலை¶மௌவல்மாலை *
‡‡ சிலிங்காரத்தால்குழல்தாழவிட்டுத் தீங்குழல்வாய்மடுத்தூதியூதி *
அலங்காரத்தால்வருமாயப்பிள்ளை யழகுகண்டென்மகளாசைப்பட்டு *
விலங்கிநில்லாதெதிர்நின்றுகண்டீர்வெள்வளைகழன்றுமெய்மெலிகின்றதே. ()

‡‡விண்ணின்மீதமரர்கள்விரும்பித்தொழ மிறைத்தாயர்பாடியில்வீதியூடே *
கண்ணன்காலிப்பின்னேயெழுந்தருளக்கண்டிளவாய்க்கன்னிமார்காமுற்ற
வண்ணம்*வண்டமர்பொழில்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்னமாலை
பண்ணின்பம்வரப்பாடும்பத்தருள்ளார்பரமானவைகுந்தநண்ணுவரே.[பத்தும்

தழை வல்லி சுரி குன்று சுற்றிச் சிந்துரம் சாலச் சிந்துரப்பொடி வலம் விண் அட்டு.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ ஏடி - தோழி. § கொற்றவன் - வெற்றியுடையவன்: கொற்றம் - வெற்றி. † கோழம்பம் - குழப்பம். $ இலையந்தன்னால் என்று பாடமானபோது, அம் - சாரியையாய், இலையாலென்றபடி: இலயந்தன்னால் என்றானபோது, இல் என்று - உள்ளாய், அயமென்று - ஜலமாய், திருப்பவளத்துக்குட்பட்ட ஜலமென்றபடி. ¶ மௌவல் - மல்லிகையிலோர்வகை. ‡‡ சிலிங்காரம் - ச்ரிங்காரம்; அலங்காரமென்றபடி.

## ரு-வது, அட்டுக்குவி.

கோவர்த்தநகிரியைக்குடைகொள்வண்மை.
எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
பந்துவராளிராகம்-அடதாளம்.

‡‡ அட்டுக்குவிசோற்றுப்பருப்பதமும்
தயிர்வாவியும் நெய்யளறுமடங்கப்
பொட்டத்துற்று * மாரிப்பகைபுணர்த்த
பொருமாகடல்வண்ணன்பொறுத்தமலை *
வட்டத்தடங்கண்மடமான்கன்றினை
வலைவாய்பற்றிக்கொண்டு * குறமகளிர்
† கொட்டைத்தலைப் பால்கொடுத்துவளர்க்கும்
கோவர்த்தனமென்னும் ‡ கொற்றக்குடையே. (க)

வழுவொன்றுமில்லாச்செய்கை வானவர்கோன்
வலிப்பட்டு முனிந்துவிடுக்கப்பட்ட *
மழைவந்தெழுநாள்பெய்து மாத்தடைப்ப
மதுசூதனெடுத்து மறித்தமலை *
இழவுதரியாததோரீற்றுப்பிடி
இளஞ்சீயம்துடர்ந்துமுடுகுதலும் *
குழவியிடைக்காலிட்டெதிர்ந்துபொரும்
கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையே. (உ)

அம்மைத்தடங்கண்மடவாய்ச்சியரும்
ஆனயருமாநிரையுமலறி *
எம்மைச்சரணென்றுகொள்ளென்றிரப்ப
இலங்காழிக்கையெந்தையெடுத்தமலை *
தம்மைச்சரணென்ற தம்பாவையரைப்புனம்
மேய்கின்றமானினங்காண்மினென்று *
§ கொம்மைப்புயக்குன்றர்சிலைகுனிக்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (ங)

கடுவாய்ச்சினவெங்கண்களிற்றினுக்குக்
கவளமெடுத்துக்கொடுப்பானவன்போல் *
அடிவாயுறக்கையிட்டெழப்பறித்திட்
டமரர்பெருமான்கொண்டுநின்றமலை *
கடல்வாய்ச்சென்றுமேகங்கவிழ்ந்திறங்கிக்
கதுவாய்ப்படநீர்முகந்தேறி * எங்கும்
குடவாய்பட நின்றுமழைபொழியும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (ச)

---

† கொட்டை - பஞ்சுச்சுருள். ‡ கொற்றக்குடை - இந்த்ரன் வர்ஷிப்பித்த மழையைத் தடுக்கையாலே: கொற்றம் - ஜயம். § கொம்மைப்புயம் - பெரியபுஜம்.

வானத்திலுள்ளீர்வலியீருள்ளீரேல்
அறையோ † வந்துவாங்குமி னென்பவன்போல் *
ஏனத்துருவாகிய வீசனெந்தை
‡ யிடவனெழவாங்கியெடுத்தமலை *
கானக்களியானைதன் கொம்பிழந்து
கதுவாய்மதஞ்சோரத் தன்கையெடுத்து *
§ கூனல்பிறைவேண்டி யண்ணாந்துநிற்கும்
கோவர்த்தனமென்னும் கொற்றக்குடையே. (ரு)

செப்பாடுடையதிருமாலவன்றன்
செந்தாமரைக் கைவிரலைந்தினையும் *
$ கப்பாகமடுத்துமணிநெடுந்தோள்
காம்பாகக்கொடுத்துக்கவித்தமலை *
எப்பாடும்பரந்திழிதெள்ளருவி
யிலங்குமணிமுத்துவடம்பிறழ *
¶ குப்பாயமெனநின்றுகாட்சிதரும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (சு)

படங்கள்பலவுமுடைப்பாம்பரையன்
படர்பூமியைத்தாங்கிக்கிடப்பவன்போல் *
தடங்கைவிரலைந்தும் மலரவைத்துத்
தாமோதரன்தாங்கு தடவரைதான் *
அடங்கச்சென்றிலங்கையையீடழித்த
அநுமன்புகழ்பாடித் தங்குட்டன்களை *
குடங்கைக்கொண்டுமந்திகள்கண்வளர்த்தும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (எ)

சலமாமுகில்பல்கணப்போர்க்களத்துச்
சரமாரிபொழிந்தெங்கும்பூசலிட்டு *
நலிவானுறக்கேடகம்கோப்பவன்போல்
நாராயணன்முன்முகங்காத்தமலை *
இலைவேய்குரம்பைத்தவமாமுனிவ
ரிருந்தார்நடுவேசென்றணார் ‡‡ சொறிய *
கொலைவாய்ச்சினவேங்கைகள்நின்றுறங்கும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (அ)

வன்பேய்முலையுண்ட தோர்வாயுடையன்
வன்தூணெனநின்றதோர்வன்பரத்தை *
தன்பேரிட்டுக்கொண்டுதரணிதன்னில்
தாமோதரன் தாங்குதடவரைதான் *

---

† அறையோ - அறையோவறை: ஜயித்தவன்சொல்லும் பாசுரம்! ‡ இடவன் - மண்கட்டி, § கூனல் - வளைவு. $ கப்பு - காம்படியிலுண்டானகிளை. ¶ குப்பாயம் - சட்டை. ‡‡ அணர் - கழுத்து.

முன்பேவழிகாட்டமுசுக்கணங்கள்
முதுகில்பெய்து தம்முடைக்குட்டன்களை *
கொம்பேற்றியிருந்து குதிபயிற்றும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௯)

கொடியேறுசெந்தாமரைக்கைவிரல்கள்
கோலமுமழிந்தில வாடிற்றில *
வடிவேறுதிருவுகிர்நொந்துமில
மணிவண்ணன்மலையுமோர்சம்பிரதம் † *
முடியேறிய மாமுகிற்பல்கணங்கள்
முன்னெற்றிநரைத்தனபோல * எங்கும்
குடியேறியிருந்துமழைபொழியும்
கோவர்த்தனமென்னும்கொற்றக்குடையே. (௧௦)

⁂ அரவில்பள்ளிகொண்டரவம்துரந்திட்
டரவப்பகையூர்தியவனுடைய *
குரவில்கொடிமுல்லைகள்நின்றுறங்கும்
கோவர்த்தனமென்னுங்கொற்றக்குடைமேல் *
திருவில்பொலிமறைவாணர்புத்தூர்த்
திகழ்பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும் *
பரவுமனநன்குடைப்பத்தருள்ளார்
பரமானவைகுந்தம்நண்ணுவரே. (௧௧)

அட்டு வழு அம்மை கடு வான் செப்பாடு படம் சலம் வன்பேய் கொடி அரவில் நாவல்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௬-வது, நாவலம்.



குழலூதற்சிறப்பு.
எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
**சாவேரிராகம்-அதிதாளம்.**

⁂நாவலம்பெரியதீவினில்வாழும்நங்கைமீர்களிதோரற்புதங்கேளீர் *
தூவலம்புரியுடையதிருமால் தூயவாயிற்குழலோசைவழியே *
கோவலர்சிறுமியரிளங்கொங்கைகுதுகுலிப்பவுடலுளவிழ்ந்து - * எங்கும்
காவலுங்கடந்துகயிறுமாலையாகிவந்து கவிழ்ந்துநின்றனரே. (௧)

இடவணரையிடத்தோளொடுசாய்த் திருகைகூடப்புருவம்நெரிந்தேற *
குடவயிறுபடவாய்கடைகூடக்கோவிந்தன்குழல்கொடூதினபோது *
மடமயில்களொடுமான்பிணைபோலே மங்கைமார்கள்மலர்க்கூந்தலவிழ *
உடைநெகிழவோர்கையால்துகில்பற்றியொல்கியோடரிக்கணோடநின்றனரே

† சம்பிரதம் - இந்திரஜாலம்; - கண்கட்டி வித்தை.

வானிளவரசுவைகுந்தக்குட்டன் வாசுதேவன்மதுரைமன்னன் * நந்த
கோனிளவரசுகோவலர்குட்டன் கோவிந்தன்குழல்கொடூதினபோது *
வானிளம்படியர்வந்துவந்தீண்டி மனமுருகிமலர்க்கண்கள்பனிப்ப *
தேனளவுசெறிகூந்தலவிழச்சென்னிவேர்ப்பச் செவிசேர்த்துநின்றனரே.(ங)

தேநுகன்பிலம்பன்காளியனென்னும் தீப்பப்பூடுகளடங்கவுழக்கி *
கானகம்படியுலாவியுலாவிக் கருஞ்சிறுக்கன்குழலூதினபோது *
மேநகையொடுதிலோத்தமையரம்பை உருப்பசிஅரவர்வெள்கிமயங்கி *
வானகம்படியில்வாய்திறப்பின்றி யாடல்பாடலவைமாறினர்தாமே. (ச)

முன்னரசிங்கமதாகி யவுணன்முக்கியத்தைமுடிப்பான், மூவுலகில்
மன்னரஞ்ச * மதுசூதனன்வாயில் குழலினோசைசெவியைப்பற்றிவாங்க *
நன்னரம்புடையதும்புருவோடு நாரதனும் தந்தம்வீணைமறந்து *
கின்னரமிதுனங்களும்தந்தம்கின்னரம்தொடுகிலோமென்றனரே. (ரு)

செம்பெருந்தடங்கண்ணன் திரடோளன் தேவகிசிறுவன்தேவர்கள்சிங்கம் *
நம்பரமனிந்நாள்குழலூதக்கேட்டவர்க ளிடருற்றனகேளீர் *
அம்பரந்திரியும்காந்தப்பரெல்லா மமுதகீதவலையால்சுருக்குண்டு *
நம்பரமன்றென்றுநாணிமயங்கி நைந்துசோர்ந்துகைமரித்துநின்றனரே. (சு)

புவியுள்நான்கண்டதோரற்புதங்கேளீர் பூணிமேய்க்குமிளங்கோவலர்கூட்டத்
அவையுள்நாகத்தணையான்குழலூத அமரலோகத்தளவுஞ்சென்றிசைப்ப* [து
அவியுணாமறந்துவானவரெல்லாமாயர்பாடிநிறையப்புகுந்தீண்டி * [டாரே.
செவியுள்நாவின்சுவைகொண்டுமகிழ்ந்து கோவிந்தனைத்துடர்ந்தென்றும்வி

சிறுவிரல்கள்தடவிப்பரிமாறச் செங்கண்கோடச்செய்யவாய்கொப்பளிப்ப *
குறுவெயர்ப்புருவம்கூடலிப்பக் கோவிந்தன்குழல்கொடூதினபோது *
பறவையின்கணங்கள்கூடுதுறந்து வந்துசூழ்ந்துபடுகாடுகிடப்ப *
கறவையின்கணங்கள்கால்பரப்பிட்டுக்கவிழ்ந்திறங்கிச்செவியாட்டகில்லாவே.

திரண்டெழுதழைமழைமுகில்வண்ணன் செங்கமலமலர்சூழ்வண்டினம்போ
சுருண்டிருண்டகுழல்தாழ்ந்தமுகத்தானூதுகின்றகுழலோசைவழியே*[லே*
மருண்டுமான்கணங்கள்மேய்கைமறந்துமேய்ந்தபுல்லும்கடைவாய்வழிசோர *
இருண்டுபாடும்துலுங்காப்புடைபெயராஎழுதுசித்திரங்கள்போலநின்றனவே

கருங்கண்தோகைமயிற்பீலியணிந்து, கட்டிநன்குடுத்தபீதகவாடை *
அருங்கலவுருவிலாயர்பெருமா னவனொருவன்குழலூதினபோது *
மரங்கள்நின்றுமதுதாரைகள்பாயும் மலர்கள்வீழும்வளர்கொம்புகள்தாழும் *
இரங்கும்கூம்பும்திருமால்நின்றநின்றபக்கம்நோக்கியவைசெய்யுங்குணமே. ()

⁂குழலிருண்டுசுருண்டேறியகுஞ்சிக்கோவிந்தனுடையகோமளவாயில் *
குழல்முழஞ்சுகளினூடுகுமிழ்த்துக் கொழித்திழிந்தவமுதப்புனல்தன்னை *
குழல்முழவவிளம்பும்புதுவைக்கோன் விட்டுசித்தன்விரித்ததமிழ்வல்லார் *
குழலவென்றகுளிர்வாயினராகிச் சாதுகோட்டியுள்கொள்ளப்படுவாரே. (கக)

நாவல் இட வான் தேநுகன் முன் செம் புவி சிறு திரண்டு கருங் குழல் ஐய.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

## எ-வது, ஐயபுழுதி.



மாலின்மேல் மகள்மாலுறுகின்றகோலந் தாயவள்கூறல்.
கலிநிலைத்துறை.
யழனுகல்யாணிராகம்-திரிபுடைதாளம்.

‡‡ ஐயபுழுதியுடம்பளைந் திவள்பேச்சுமலந்தலையாய் *
செய்யநூலின்சிற்றாடை செப்பனுடுக்கவும்வல்லளல்லள் *
கையினிற்சிறுதூதையோ டிவள்முற்றில்பிரிந்துமிலள் *
பையரவணைப்பள்ளியானொடு கைவத்திவள்வருமே. (க)

வாயில்பல்லுமெழுந்தில மயிரும்முடிகூடிற்றில *
சாய்விலாதகுறுந்தலைச் சிலபிள்ளைகளோடிணங்கி *
தீயிணக்கிணங்காடிவந் திவள்தன்னன்னசெம்மைசொல்லி *
மாயன்மாமணிவண்ணன்மே லிவள்மாலுறுகின்றாளே. (உ)

பொங்குவெண்மணற்கொண்டு சிற்றிலும்முற்றத்திழைக்கலுறில் *
சங்குசக்கரம்தண்டுவாள் வில்லுமல்லதிழைக்கலுறாள் *
கொங்கையின்னம்குவிந்தெழுந்தில, கோவிந்தனோடிவளைச்
சங்கையாகி * என்னுள்ளம் நாடொறும் † தட்டுளுப்பாகின்றதே. ()

ஏழைபேதையோர்பாலகன்வந் தென்பெண்மகளை ‡ யிள்கி
தோழிமார்பலர்கொண்டுபோய்ச்செய்தசூழ்ச்சியையார்க்குரைக்கேன்?
ஆழியானென்னுமாழமோழையில் பாய்ச்சியகப்படுத்தி *
மூழையுப்பறியாததென்னும் மூதுரையுமிலளே. (ச)

நாடுமூருமறியவேபோய் நல்லதுழாயலங்கல்
சூடி * நாரணன்போமிடமெல்லாம் சோதித்துழிதருகின்றாள் *
கேடுவேண்டுகின்றார்பலருளர் கேசவனோடிவளை *
பாடுகாவலிடுமினென்றென்று பார்தடுமாறினதே. (ரு)

பட்டங்கட்டிப்பொற்றோடுபெய் திவள்பாடகமும்சிலம்பும் *
இட்டமாகவளர்த்தெடுத்தேனுக் கென்னோடிருக்கலுறாள் * [ம் *
§ பொட்டப்போய்ப்புறப்பட்டுநின் றிவள்பூவைப்பூவண்ணாவென்னு
வட்டவார்குழல்மங்கைமீ ரிவள்மாலுறுகின்றாளே. (சா)

பேசவும்தெரியாதபெண்மையில் பேதையேன்பேதையிவள் *
கூசமின்றிநின்றார்கள்தம்மெதிர் கோல்கழிந்தான்மூழையாய் *
கேசவாவென்றும்கேடிலீயென்றும் கிஞ்சுகவாய்மொழியாள் *
வாசவார்குழல்மங்கைமீ ரிவள்மாலுறுகின்றாளே. (எ)

காறைபூணும்கண்ணாடிகாணும் தன்கையில்வளைகுலுக்கும் *
கூறையுடுக்குமயர்க்கும் தன்கோவைச்செவ்வாய்திருத்தும் *
தேறித்தேறிநின் றாயிரம்பேர்த்தேவன்திறம்பிதற்றும் *
மாறில்மாமணிவண்ணன்மே லிவள்மாலுறுகின்றாளே. (அ)

---

† தட்டுளுப்பு - தடுமாற்றம். ‡ இள்கி - எத்தி. § பொட்ட - சடக்கென.

கைத்தலத்துள்ளமாடழியக் கண்ணாலங்கள்செய்து - * இவளை
வைத்துவைத்துக்கொண்டென்ன¶ வாணிபம் நம்மைவடுப்படுத்தும் *
செய்த்தலையெழுநாற்றுப்போ லவன்செய்வனசெய்துகொள்ள *
மைத்தடமுகில்வண்ணன்பக்கல் வளரவிடுமின்களே. (௯)

பெருப்பெருத்தகண்ணாலங்கள்செய்து பேணிநம்மில்லத்துள்ளே *
இருத்துவானெண்ணிநாமிருக்க விவளுமொன்றெண்ணுகின்றாள் *
மருத்துவப்பதம்நீங்கினாளென்னும் வார்த்தைபடுவதன்முன் *
ஒருப்படுத்திடுமினிவளை யுலகளந்தானிடைக்கே. (௧௦)

‡‡ஞாலமுற்று முண்டாலிலைத்துயில் நாராயணனுக்கு - * இவள்
மாலதாகிமகிழ்ந்தனளென்று தாயுரைசெய்ததனை *
கோலமார்பொழில்சூழ்புதுவையர்கோன் விட்டுசித்தன்சொன்ன *
மாலைபத்தும்வல்லவர்கட் கில்லைவருதுயரே. (௧௧)

ஐய வாயில் பொங் கேழை நாடு பட்டம் பேசக் காறை கைத்தலம் பெரு ஞாலம் நல்ல.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, நல்லதோர்தாமரை.



மாயவன்பின்சென்றமகளைத் தாயவளுன்னியதகுதல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்.**

‡‡நல்லதோர்தாமரைப்பொய்கை நாண்மலர்மேல்பனிசோர *
அல்லியும்தாதுமுதிர்ந்திட்டழகழிந்தாலொத்ததாலோ *
இல்லம்வெறியோடிற்றாலோ என்மகளையெங்குங்காணேன் *
மல்லரையட்டவன்பின்போய் மதுரைப்புறம்புக்காள்கொலோ. (௧)

ஒன்றுமறிவொன்றில்லாத வுருவறைக்கோபாலர்தங்கள் † *
கன்றுகால்மாறுமாபோலே கன்னியிருந்தாளைக்கொண்டு *
நன்றுங்கிறிசெய்துபோனான் நாராயணன்செய்ததீமை *
என்றுமெமர்கள்குடிக்கோரேச்சுக்கொலாயிடுங்கொலோ. (௨)

‡ குமரிமணஞ்செய்துகொண்டு கோலஞ்செய்தில்லத்திருத்தி *
தமரும்பிறருமறியத் தாமோதரர்க்கென்றுசாற்றி *
அமரர்பதியுடைத்தேவி யரசாணியை § வழிபட்டு *
$துமிலமெழப்பறைகொட்டித் தோரணம்நாட்டிடுங்கொலோ. (௩)

ஒருமகள்தன்னையுடையே னுலகம்நிறைந்தபுகழால் *
திருமகள்போலவளர்த்தேன் செங்கண்மால்தான்கொண்டுபோனான் *
பெருமகளாய்க்குடிவாழ்ந்து பெரும்பிள்ளைபெற்றவசோதை *
மருமகளைக்கண்டுகந்து மணாட்டுப்புறம்செய்யுங்கொலோ. (௪)

¶ வாணிபம் ப்ரயோஜநம் † கோபாலர் தாங்கள்என்பது தங்கள் எனக்குறைத்தது. † குமரி - கந்நிகை. § அரசாணி - அரசு. $ துமிலம்-பெரியஆரவாரம்.

தம்மாமன்நந்தகோபாலன் தழீஇக்கொண்டென்மகள்தன்னை *
¶ செம்மாந்திரேயென்றுசொல்லிச் செழுங்கயற்கண்ணும்செவ்வாயும் *
‡ கொம்மைமுலையுமிடையும் கொழும்பணைத்தோள்களுங்கண்டிட்டு *
இம்மகளைப்பெற்றதாய ரினித்தரியாரென்னுங்கொலோ. (ரு)

வேடர்மறக்குலம்போலே வேண்டிற்றுச்செய்தென்மகளை *
கூடியகூட்டமேயாகக் கொண்டுகுடிவாழுங்கொலோ *
நாடுநகருமறிய நல்லதோர்கண்ணாலஞ்செய்து *
சாடிறப்பாய்ந்தபெருமான் தக்கவாகைப்பற்றுங்கொலோ. (சு)

அண்டத்தமரர்பெருமா னாழியான்இன்றென்மகளை *
பண்டப்பழிப்புக்கள்சொல்லிப் பரிசறஆண்டிடுங்கொலோ *
கொண்டுகுடிவாழ்க்கைவாழ்ந்து கோவலப்பட்டங்கவித்து *
பண்டைமணாட்டிமார்முன்னே பாதுகாவல்வைக்குங்கொலோ. (எ)

குடியில்பிறந்தவர்செய்யும் குணமொன்றும்செய்திலனந்தோ! *
நடையொன்றும்செய்திலன்நங்காய் நந்தகோபன்மகன்கண்ணன் *
இடையிருபாலும்வணங்க இளைத்திளைத்தென்மகளேங்கி *
கடைகயிறேபற்றிவாங்கிக் கைதழும்பேறிடுங்கொலோ. (அ)

வெண்ணிறத்தோய்தயிர்தன்னை †வெள்வரைப்பின்முன்னெழுந்து *
கண்ணுறங்காதேயிருந்து கடையவும்தான்வல்லள்கொலோ *
ஒண்ணிறத்தாமரைச்செங்க ணுலகளந்தான், என்மகளை *
பண்ணறையாப்பணிகொண்டு பரிசறஆண்டிடுங்கொலோ. (கூ)

⁂மாயவன்பின்வழிசென்று வழியிடைமாற்றங்கள்கேட்டு - *
ஆயர்கள்சேரியிலும்புக் கங்குத்தைமாற்றமுமெல்லாம் *
தாயவள்சொல்லியசொல்லைத் தன்புதுவைப்பட்டன்சொன்ன *
தூயதமிழ்பத்தும்வல்லார் தூமணிவண்ணனுக்காளரே. (கo)

நல்ல தொன்று குமரி யொரு தம்மாமன் வேடர் அண்டக் குடி வெண்ணிற மாயவ னென்னுதன்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, என்னுதன்.



நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்று உந்திபறத்தல்.

கலித்தாழிசை.

செஞ்சுருட்டிராகம்-ரூபகதாளம்.

⁂ என்னுதன்தேவிக் கன்றின்பப்பூவீயாதாள் *
தன்னுதன்காணவே தண்பூமரத்தினை *
வன்னுதப்புள்ளால் வலியப்பறித்திட்ட *
என்னுதன்வன்மையைப்பாடிப்பற § எம்பிரான்வன்மையைப்பாடிப்ப [ற.

¶ செம்மாப்பு - செவ்வை. ‡ கொம்மை - பெருமை. † வெள்வரைப்பு கிழக்கு வெளுக்கை. § பற - உந்திபற என்றபடி.

என்வில்வலிகண்டுபோவென் றெதிர்வந்தான் *
தன்வில்லினோடும் தவத்தையெதிர்வாங்கி *
முன்வில்வலித்து முதுபெண்ணுயிருண்டான் *
தன்வில்லின்வன்மையைப்பாடிப்பற தாசரதிதன்மையைப்பாடிப்பற.

உருப்பிணிநங்கையைத் தேரேற்றிக்கொண்டு *
விருப்புற்றங்கேக விரைந்தெதிர்வந்து *
செருக்குற்றான் வீரஞ்சிதைய * தலையைச் [ற.
சிரைத்திட்டான்வன்மையைப்பாடிப்பற தேவகிசிங்கத்தைப்பாடிப்ப

மாற்றுத்தாய்சென்று வனம்போகேயென்றிட *
ஈற்றுத்தாய்பின்தொடர்ந் தெம்பிரானென்றழ *
கூற்றுத்தாய்சொல்லக் கொடியவனம்போன *
சீற்றமிலாதானைப்பாடிப்பற சீதைமணாளனைப்பாடிப்பற. (ச)

பஞ்சவர்தூதனாய்ப்பாரதம்கைசெய்து *
நஞ்சுமிழ்நாகம்கிடந்த நற்பொய்கைபுக்கு - *
அஞ்சப்பணத்தின்மேல் பாய்ந்திட்டருள்செய்த *
அஞ்சனவண்ணனைப்பாடிப்பற அசோதைதன்சிங்கத்தைப்பாடிப்பற.

முடியொன்றி மூவுலகங்களுமாண்டு - * உன்
அடியேற்கருளென் றவன்பின்தொடர்ந்த *
படியில்குணத்துப் பரதநம்பிக்கு - * அன்
றடிநிலையீந்தானைப்பாடிப்பற அயோத்தியர்கோமானைப்பாடிப்பற. ()

காளியன்பொய்கை கலங்கப்பாய்ந்திட்டு - * அவன்
நீண்முடியைந்திலும் நின்றுநடஞ்செய்து *
மீளவவனுக்கருள்செய்தவித்தகன் *
தோள்வலிவீரமேபாடிப்பற தூமணிவண்ணனைப்பாடிப்பற. (எ)

தார்க்கிளந்தம்பிக் கரசீந்து * தண்டகம்
நூற்றவள்சொற்கொண்டுபோகி * நுடங்கிடைச்
சூர்ப்பணகாவைச் செவியொடு மூக்கு - * அவள்
ஆர்க்கவரிந்தானைப்பாடிப்பற அயோத்திக்கரசனைப்பாடிப்பற. (அ)

மாயச்சகடமுதைத்து மருதிறுத்து - *
ஆயர்களோடுபோ யாநிரைகாத்து - * அணி
வேயின்குழலூதி வித்தகனாய்நின்ற *
ஆயர்களேற்றினைப்பாடிப்பற ஆநிரைமேய்த்தானைப்பாடிப்பற. (கூ)

காரார்கடலையடைத்திட் டிலங்கைபுக்கு - *
ஓராதான்பொன்முடி யொன்பதோடொன்றையும் *
† நேரா, அவன்தம்பிக்கே நீளரசீந்த *
ஆராவமுதனைப்பாடிப்பற அயோத்தியர்வேந்தனைப்பாடிப்பற. (க௦)

† நேரா - அறுத்துப்போகட்டு.

⁂ நந்தன்மதலையைக் காகுத்தனைநவின்று - *
உந்திபறந்த வொளியிழையார்கள்சொல் *
செந்தமிழ்த்தென்புதுவை விட்டுசித்தன்சொல் *
ஐந்தினோடைந்தும்வல்லார்க் கல்லலில்லையே. (கக)

என்னுதன் என்வில் உருப்பிணி மாற்றுப் பஞ்சவர் முடி காளியன் தார் மாயக் காரார் நந்தன் நெறி.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௧0-வது, நெறிந்தகருங்குழல்.



சீதைக் கனுமன் றெரிவித்த வடையாளம்.

கலிவிருத்தம்.

**கலியாணிராகம்-ரூபகதாளம்.**

⁂ நெறிந்தகருங்குழல்மடவாய் நின்னடியேன்விண்ணப்பம் *
செறிந்தமணிமுடிச்சனகன் சிலையிறுத்துநினைக்கொணர்ந்த
தறிந்து - * அரசுகளைகட்ட அருந்தவத்தோனிடைவிலங்க *
செறிந்தசிலைகொடுதவத்தைச் சிதைத்ததுமோரடையாளம். (க)

அல்லியம்பூமலர்க்கோதா யடிபணிந்தேன்விண்ணப்பம் *
சொல்லுகேன்கேட்டருளாய் துணைமலர்க்கண்மடமானே ! *
எல்லியம்போதினிதிருத்த லிருந்ததோரிடவகையில் *
மல்லிகைமாமாலைகொண்டங்கார்த்ததுமோரடையாளம். (உ)

கலக்கியமாமனத்தனளாய்க் கைகேசிவரம்வேண்ட *
மலக்கியமாமனத்தனனாய் மன்னவனும்மறாதொழிய *
குலக்குமரா ! காடுறையப்போவென்றுவிடைகொடுப்ப *
இலக்குமணன்றன்னோடு மங்கேகியதோரடையாளம். (ங)

வாரணிந்தமுலைமடவாய் ! ‡ வைதேவீ ! விண்ணப்பம் *
தேரணிந்தவயோத்தியர்கோன் பெருந்தேவீ ! கேட்டருளாய் *
கூரணிந்தவேல்வலவன் குகனோடுங்கங்கைதன்னில் *
சீரணிந்ததோழமைக் கொண்டதுமோரடையாளம். (ச)

மானமருமென்னோக்கி வைதேவீ விண்ணப்பம் *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தகாலத்து *
தேனமரும்பொழிற்சாரல் சித்திரகூடத்திருப்ப *
பால்மொழியாய் ! பரதநம்பி பணிந்ததுமோரடையாளம். (ரு)

சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கைமுலைதீண்ட *
அத்திரமேகொண்டெறிய அனைத்துலகும்திரிந்தோடி *
வித்தகனே ! இராமாவோ ! நின்னபயம்என்றழைப்ப *
அத்திரமேயதன்கண்ணை யறுத்ததுமோரடையாளம். (சு)

---

‡ வைதேவி - விதேஹராஜாவின்பெண்.

மின்ஞெத்தநுண்ணிடையாய் ! மெய்யடியேன்விண்ணப்பம் *
பொன்ஞெத்தமாஞென்று புகுந்தினிதுவிளையாட *
நின்னன்பின்வழிநின்று சிலைபிடித்தெம்பிரானேக *
பின்னேயங்கிலக்குமணன் பிரிந்ததுமோரடையாளம். (எ)
மைத்தகுமாமலர்க்குழலாய் வைதேவி ! விண்ணப்பம் *
ஒத்தபுகழ்வானரக்கோ னுடனிருந்துநினைத்தேட *
அத்தகுசீரயோத்தியர்கோ னடையாளமிவைமொழிந்தான் *
இத்தகையாலடையாளம் † ஈதவன்கைமோதிரமே. (அ)
⁂ திக்குநிறைபுகழாளன் தீவேள்விச்சென்றநாள் *
மிக்கபெருஞ்சவைநடுவே வில்லிறுத்தான்மோதிரங்கண்டு *
ஒக்குமாலடையாளம் அநுமான் ! என்று * உச்சிமேல்வைத்
துக்கொண்டுகந்தனளால் ! மலர்க்குழலாள்சீதையுமே. (கூ)
⁂ வாராரும்முலைமடவாள் வைதேவிதனைக்கண்டு *
சீராரும்திறலநுமன் தெரிந்துரைத்தவடையாளம் *
பாராரும்புகழ்ப்புதுவைப்பட்டர்பிரான்பாடல்வல்லார் *
ஏராரும்வைகுந்தத் திமையவரோடிருப்பாரே (கO)

நெறி யல்லி கலக்கிய வாரணி மான் சித்திர மின் மைத்த திக்கு வாராரும் கதிர்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

# நாலாம்பத்து.

## க-வது, கதிராயிரம்.

மாயனைக்கண்ட சுவடுரைத்தல்.

கலிநிலைத்துறை.

**தோடிராகம்-அடதாளம்.**

⁂ கதிராயிரமிரவி கலந்தெறித்தாலொத்தநீண்முடியன் *
எதிரில்பெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல் *
அதிரும்கழல்பொருதோ ளிரணியனாகம்பிளந்தரியாய் *
உதிரமளைந்தகையோடிருந்தானை யுள்ளவாகண்டாருளர். (க)
நாந்தகம்சங்குதண்டு நாணொலிச்சார்ங்கம்திருச்சக்கரம் *
ஏந்துபெருமையிராமனை யிருக்குமிடம்நாடுதிரேல் *
காந்தள்முகிழ்விரல்சீதைக்காகிக் கடுஞ்சிலைசென்றிறுக்க *
வேந்தர்தலைவன்சனகராசன்றன் வேள்வியிற்கண்டாருளர். (உ)
கொலையானைக்கொம்புபறித்துக் கூடலர்சேனைபொருதழிய *
சிலையால்மராமரமெய்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
தலையால்குரக்கினம்தாங்கிச்சென்று தடவரைகொண்டடைப்ப *
அலையார்கடற்கரைவீற்றிருந்தானை யங்குத்தைக்கண்டாருளர். (ங)

† "இது வவன்கை" என்றும் பாடம்.

§ தோயம்பரந்தநடுவுசூழலில் தொல்லைவடிவுகொண்ட *
மாயக்குழவியதனைநாடுறில் வம்மின் சுவடுரைக்கேன் *
ஆயர்மடமகள்பின்னைக்காகி யடல்விடையேழினையும் *
வீயப்பொருதுவியர்த்துநின்றானை மெய்ம்மையேகண்டாருளர். (௪)

நீரேறுசெஞ்சடைநீலகண்டனும் நான்முகனும், முறையால் *
சீரேறுவாசகஞ்செய்யநின்ற திருமாலைநாடுதிரேல் *
வாரேறுகொங்கையுருப்பிணியை வலியப்பிடித்துக்கொண்டு
தேரேற்றி * சேனைநடுவுபோர்செய்யச் சிக்கெனக்கண்டாருளர். (௫)

பொல்லாவடிவுடைப்பேய்ச்சிதுஞ்சப் புணர்முலைவாய்மடுக்க
வல்லானை * மாமணிவண்ணனை மருவுமிடம்நாடுதிரேல் *
பல்லாயிரம்பெருந்தேவிமாரொடு பௌவமெறிதுவரை *
எல்லாருஞ்சூழச்சிங்காசனத்தே யிருந்தானைக்கண்டாருளர். (௬)

வெள்ளைவிளிசங்கு வெஞ்சுடர்த்திருச்சக்கரமேந்துகையன் *
உள்ளவிடம்வினவி லுமக்கிறைவம்மின், சுவடுரைக்கேன் *
வெள்ளைப்புரவிகுரக்குவெல்கொடித் தேர்மிசைமுன்புநின்று *
கள்ளப்படைத்துணையாகிப் பாரதம்கைசெய்யக்கண்டாருளர். (௭)

நாழிகைகூறிட்டுக்காத்துநின்ற வரசர்கள்தம்முகப்பே *
நாழிகைபோகப்படைபொருதவன் தேவகிதன்சிறுவன் *
ஆழிகொண்டன்றிரவிமறைப்பச், சயத்திரதன்தலையை *
பாழிலுருளப்படைபொருதவன் பக்கமேகண்டாருளர். (௮)

மண்ணும்மலையும்மறிகடல்களும் மற்றும்யாவுமெல்லாம் *
திண்ணம்விழுங்கியுமிழ்ந்ததேவனைச் சிக்கெனநாடுதிரேல் *
எண்ணற்கரியதோரேனமாகி யிருநிலம்புக்கிடந்து *
வண்ணக்கருங்குழல்மாதரோடு மணந்தானைக்கண்டாருளர். (௯)

⁂ கரியமுகில்புரைமேனிமாயனைக் கண்டசுவடுரைத்து *
புரவிமுகஞ்செய்துசெந்நெலோங்கி விளைகழனிப்புதுவை *
திருவில்பொலிமறைவாணன் பட்டர்பிரான்சொன்னமாலைபத்தும் *
பரவுமனமுடைப்பத்தருள்ளார் பரமனடிசேர்வர்களே. (௧0)

கதிர் நாந்தகம் கொலை தோயம் நீரேறு பொல்லா வெள்ளை நாழிகை மண் கரி அலம்பா.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



§ தோயம் - ஜலம்.

## உ-வது, அலம்பாவெருட்பா.

திருமாலிருஞ்சோலைச்சிறப்பு.
கலிவிருத்தம்.
அடாணாராகம் - ஜம்பைதாளம்.

⁂ அலம்பாவெருட்டாக் கொன்றுதிரியுமரக்கரை *
குலம்பாழ்படுத்துக் குலவிளக்காய்நின்றகோன்மலை *
சிலம்பார்க்கவந்து தெய்வமகளிர்களாடும், சீர் *
சிலம்பாறுபாயும் தென்திருமாலிருஞ்சோலையே. (க)

வல்லாளன்தோளும் வாளரக்கன்முடியும் * தங்கை
பொல்லாதமூக்கும் போக்குவித்தான்பொருந்துமலை *
எல்லாவிடத்திலு மெங்கும்பரந்து * பல்லாண்டொலி
செல்லாநிற்கும்சீர்த்தென் திருமாலிருஞ்சோலையே. (உ)

தக்கார்மிக்கார்களைச் சஞ்சலஞ்செய்யும்சலவரை *
† தெக்காநெறியேபோக்குவிக்கும் செல்வன்பொன்மலை *
எக்காலமும்சென்று சேவித்திருக்குமடியரை *
அக்கானெறியைமாற்றும் தண்மாலிருஞ்சோலையே. (ங)

ஆனாயர்கூடி யமைத்தவிழவை * அமரர்தம்
நோனார்க்கொழியக் கோவர்த்தனத்துச்செய்தான்மலை *
வானாட்டில்நின்றும் மாமலர்க்கற்பகத்தொத்திழி *
தேனாறுபாயும் தென்திருமாலிருஞ்சோலையே. (ச)

ஒருவாரணம்பணிகொண்டவன் பொய்கையில் * கஞ்சன்றன்
ஒருவாரணமுயிருண்டவன் சென்றுறையுமலை *
கருவாரணம் தன்பிடிதுறந்தோட * கடல்வண்ணன்
திருவாணைகூறத்திரியும் தண்மாலிருஞ்சோலையே. (ரு)

ஏவிற்றுச்செய்வா னேன்றெதிர்ந்துவந்தமல்லரை *
சாவத்தகர்த்த சாந்தணிதோள்சதுரன்மலை *
ஆவத்தனமென் றமரர்களும்நன்முனிவரும் *
சேவித்திருக்கும் தென்திருமாலிருஞ்சோலையே. (சூ)

மன்னர்மறுக மைத்துனன்மார்க்கொருதேரின்மேல் *
முன்னங்குநின்று மோழையெழுவித்தவன்மலை *
கொன்னவிற்கூர்வேல்கோன் நெடுமாறன் ‡ தென்கூடல் § கோன்
தென்னன்கொண்டாடும் தென்திருமாலிருஞ்சோலையே. (எ)

† தெக்காம்நெறி - தக்ஷிணதிக்கில் யாம்யமார்க்கம். ‡ மாறன் - பாண்டியன். § கூடல் - மதுரை.

குறுகாதமன்னரைக் கூடுகலக்கி * வெங்கானிடைச்
சிறுகால்நெறியேபோக்குவிக்கும் செல்வன்பொன்மலை *
அறுகால்வரிவண்டுக ளாயிரநாமஞ்சொல்லி *
சிறுகாலைப்பாடும் தென்திருமாலிருஞ்சோலையே. (அ)

சிந்தப்புடைத்துச் செங்குருதிகொண்டு * பூதங்கள்
அந்திப்பலிகொடுத் தாவத்தனஞ்செய்யப்பன்மலை *
இந்திரகோபங்க ளெம்பெருமான்கனிவாயொப்பான் *
சிந்தும்புறவில் தென்திருமாலிருஞ்சோலையே. (௯)

எட்டுத்திசையு மெண்ணிறந்தபெருந்தேவிமார் *
விட்டுவிளங்க வீற்றிருந்தவிமலன்மலை *
பட்டிப்பிடிகள் பகடுரிஞ்சிச்சென்று, மாலைவாய் *
¶ தெட்டித்திளைக்கும் தென்திருமாலிருஞ்சோலையே. (௧௦)

⁂ மருதப்பொழிலணி மாலிருஞ்சோலைமலைதன்னை *
கருதியுறைகின்ற கார்க்கடல்வண்ணனம்மான்றன்னை *
விரதங்கொண்டேத்தும் வில்லிபுத்தூர்விட்டுசித்தன்சொல் *
கருதியுரைப்பவர் கண்ணன்கழலிணைகாண்பர்களே. (௧௧)

அலம் வல்லாளன் தக்காரா ருயர் ஒரு ஏவிற்று மன்னர் குறுகாத சிந்த எட்டு மருத உருப்பிணி.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, உருப்பிணிநங்கை.



திருமாலிருஞ்சோலைமலையின்மாட்சி.

கலிநிலைத்துறை.

ஸஹானராகம் - ரூபகதாளம்.

⁂ உருப்பிணிநங்கைதன்னைமீட்பான் றொடர்ந்தோடிச்சென்ற *
† உருப்பனையோட்டிக்கொண்டிட் டுறைத்திட்டவுறைப்பன்மலை *
பொருப்பிடைக்கொன்றைநின்று முறியாழியும்காசுங்கொண்டு *
விருப்பொடுபொன்வழங்கும் வியன்மாலிருஞ்சோலையதே. (௧)

கலிவிருத்தம்.

கஞ்சனும்காளியனும் களிறும்மருதுமெருதும் *
வஞ்சனையில்மடிய வளர்ந்தமணிவண்ணன்மலை *
நஞ்சுமிழ்நாகமெழுந்தணவி நளிர்மாமதியை *
செஞ்சுடர்நாவளைக்கும் திருமாலிருஞ்சோலையதே. (௨)

மன்னுநரகன்றன்னைச் சூழ்போகிவளைத்தெறிந்து *
கன்னிமகளிர்தம்மைக் கவர்ந்தகடல்வண்ணன்மலை *
புன்னைசெருந்தியொடு புனவேங்கையும்கோங்கும்நின்று *
பொன்னரிமாலைகள்சூழ் பொழில்மாலிருஞ்சோலையதே. (௩)

¶ தெட்டல் - முற்றல். † உருப்பன் - ருக்மன்; ருக்மிணிப்பிராட்டிக்குத் தமையன்.

மாவலிதன்னுடைய மகன்வாணன்மகளிருந்த *
காவலைக்கட்டழித்த தனிக்காளைகருதும்மலை *
கோவலர்கோவிந்தனைக் குறமாதர்கள்பண்குறிஞ்சி *
பாவொலிபாடிநடம்பயில் மாலிருஞ்சோலையதே. (௪)

‡‡ பலபலநாழஞ்சொல்லிப் பழித்தசிசுபாலன்றன்னை *
அலைவலைமைதவிர்த்த வழக னலங்காரன்மலை *
குலமலைகோலமலை குளிர்மாமலைகொற்றமலை *
நிலமலைநீண்டமலை திருமாலிருஞ்சோலையதே. (௫)

பாண்டவர்தம்முடைய ‡ பாஞ்சாலிமறுக்கமெல்லாம் *
ஆண்டங்குநூற்றுவர்தம் பெண்டிர்மேல்வைத்தவப்பன்மலை *
§ பாண்டகுவண்டினங்கள் பண்கள்பாடிமதுப்பருக *
தோண்டலுடையமலை தொல்லைமாலிருஞ்சோலையதே. (௬)

கனங்குழையாள்பொருட்டாக் கணைபாரித்து - * அரக்கர்தங்கள்
இனம்கழுவேற்றுவித்த வெழில்தோளெம்பிராமன்மலை *
கனங்கொழிதெள்ளருவி வந்துசூழ்ந்தகல்ஞாலமெல்லாம் *
இனங்குழுவாடும்மலை யெழில்மாலிருஞ்சோலையதே. (௭)

எரிசிதறும்சரத்தா லிலங்கையினை * தன்னுடைய
வரிசிலைவாயிற்பெய்து வாய்க் $ கோட்டம்தவிர்த்துகந்த *
அரையனமரும்மலை யமரரொடுகோனும்சென்று *
திரிசுடர்சூழும்மலை திருமாலிருஞ்சோலையதே. (௮)

கோட்டுமண்கொண்டிடந்து குடங்கையில்மண்கொண்டளந்து *
மீட்டுமதுண்டுமிழ்ந்து விளையாடும்விமலன்மலை *
ஈட்டியபல்பொருள்க ளெம்பிரானுக்கடியுறை † யென்று *
ஓட்டரும்தண்சிலம்பாறுடை மாலிருஞ்சோலையதே. (௯)

‡‡ஆயிரம்தோள்பரப்பி முடியாயிரமின்னிலக *
ஆயிரம்பைந்தலைய அனந்தசயநனாளும்மலை *
ஆயிரமாறுகளும் சுனைகள்பலவாயிரமும் *
ஆயிரம்பூம்பொழிலுமுடை மாலிருஞ்சோலையதே. (௧0)

‡‡ மாலிருஞ்சோலையென்னும் மலையையுடையமலையை *
நாலிருமூர்த்திதன்னை நால்வேதக்கடலமுதை *
மேலிருங்கற்பகத்தை வேதாந்தவிழுப்பொருளின்
மேலிருந்தவிளக்கை * விட்டுசித்தன்விரித்தனவே. (௧௧)

உருப்பிணி கஞ்சன் மன்னு மாவலி பல பாண்டவர் கனம் எரி கோட்டு ஆயிரம் மாலிருஞ்சோலை நா.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



---

‡ பாஞ்சாலி - பாஞ்சாலராஜாவின் புத்ரி; த்ரௌபதி. § பாண்தகு - பாண் - பட்டு. $ கோட்டம் - கோடுதல் - விலங்குதல். † அடியுறை - திருமுன் காணிக்கை.

## ச-வது, நாவகாரியம்.

திருக்கோட்டியூர் திவ்யப்ரபாவம்.
எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
நாதநாமக்கிரியைராகம்-அடதாளம்.

ஸ்ரீ ‡ நாவகாரியம்சொல்லிலாதவர் நாடொறும்விருந்தோம்புவார் *
தேவகாரியம்செய்து வேதம்பயின்றுவாழ்திருக்கோட்டியூர் *
மூவர்காரியமுந்திருத்தும் முதல்வனைச்சிந்தியாத * அப்
பாவகாரிகளைப்படைத்தவ னெங்ஙனம்படைத்தான்கொலோ. (க)

குற்றமின்றிக்குணம்பெருக்கிக் குருக்களுக்கநுகூலராய் *
செற்றமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
துற்றியேழுலகுண்ட தூமணிவண்ணன்றன்னைத்தொழாதவர் *
பெற்றதாயர்வயிற்றினைப் பெருநோய்செய்வான்பிறந்தார்களே. (உ)

வண்ணநன்மணியும் மரகதமுமழுத்தி * நிழலெழும்
திண்ணைசூழ்திருக்கோட்டியூர் திருமாலவன்திருநாமங்கள் *
எண்ணக்கண்டவிரல்களா லிறைப்பொழுதெண்ணகிலாதுபோய் *
உண்ணக்கண்டதம்மூத்தைவாய்க்குக் கவளமுந்துகின்றார்களே. (ங)

உரகமெல்லணையான்கையி லுறைசங்கம்போல்மடவன்னங்கள் *
நிரைகணம்பரந்தேறும் செங்கமலவயல்திருக்கோட்டியூர் *
நரகநாசனை நாவில்கொண்டழையாதமானிடசாதியர் *
பருகுநீருமுடுக்கும்கூறையும் பாவஞ்செய்தனதான்கொலோ. (ச)

ஆமையின்முதுகத்திடைக்குதிகொண்டு தூமலர்சாடிப்போய் *
தீமைசெய்திளவாளைகள் விளையாடுநீர்த்திருக்கோட்டியூர் *
நேமிசேர்தடங்கையினானை நினைப்பிலாவலிநெஞ்சுடை *
பூமிபாரங்களுண்ணுஞ்சோற்றினைவாங்கிப் புல்லைத்திணிமினே. (ரு)

பூதமைந்தொடுவேள்வியைந்து புலன்களைந்துபொறிகளால் *
ஏதமொன்றுமிலாத வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
நாதனைநரசிங்கனை நவின்றேத்துவார்களுழக்கிய *
பாததூளிபடுதலா லிவ்வுலகம்பாக்கியம்செய்ததே. (சா)

குருந்தமொன்றொசித்தானொடுஞ்சென்று கூடியாடிவிழாச்செய்து *
திருந்துநான்மறையோ ரிராப்பகலேத்திவாழ்திருக்கோட்டியூர் *
கருந்தடமுகில்வண்ணனைக் கடைக்கொண்டுகைதொழும்பத்தர்கள் *
இருந்தவூரிலிருக்கும்மானிட ரெத்தவங்கள்செய்தார்கொலோ. (எ)

நளிர்ந்தசீலன் † நயாசலன் அபிமாநதுங்கனை, நாடொறும் *
தெளிந்தசெல்வனைச்சேவகங்கொண்ட செங்கண்மால்திருக்கோட்டியூர் *
குளிர்ந்துறைகின்றகோவிந்தன் குணம்பாடுவாருள்ளநாட்டினுள் *
விளைந்ததானியமுமிராக்கதர் மீதுகொள்ளகிலார்களே. (அ)

---

‡ நா - அகாரியம். † நயாசலன் - நயம் - நீதிக்கு, அசலன் - குலைத்தலில்லாதவன்,

கொம்பினார்பொழில்வாய்க் குயிலினம்கோவிந்தன்குணம்பாடுசீர் *
செம்பொனார்மதில்சூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *
நம்பனைநரசிங்கனை நவின்றேத்துவார்களைக்கண்டக்கால் *
எம்பிரான்றனசின்னங்க ளிவரிவரென் ‡ றாசைகள்தீர்வனே. (௯)

காசின்வாய்க்கரம்விற்கினும் கரவாதுமாற்றிலிசோறிட்டு *
தேசவார்த்தைபடைக்கும் வண்கையினார்கள்வாழ்திருக்கோட்டியூர் *
கேசவா புருடோத்தமா ! கிளர்சோதியாய்குறளாவென்று *
பேசுவாரடியார்களெந்தம்மைவிற்கவும்பெறுவார்களே. (௧0)

⁂ சீதநீர்புடைசூழ் செழுங்கழனியுடைத்திருக்கோட்டியூர் *
ஆதியானடியாரையு மடிமையின்றித்திரிவாரையும் *
கோதில்பட்டர்பிரான் குளிர்புதுவைமன்விட்டுசித்தன்சொல் *
ஏதமின்றியுரைப்பவ ரிருடீகேசனுக்காளரே. (௧௧)

நா குற்றம் வண்ண உரகம் ஆமை பூதம் குருந்தம் நளிர்ந்த கொம்பின் காசின் சீதநீர் ஆசை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௫-வது, ஆசைவாய்.

எல்லையில் மாயனையேத்தும்பேறு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**கண்டாராகம்-ஆதிதாளம்.**

⁂ஆசைவாய்ச்சென்றசிந்தையராகி அன்னையத்தனென்புத்திரர்பூமி *
வாசவார்குழலாளென்றுமயங்கி மாளுமெல்லைக்கண்வாய்திறவாதே *
கேசவாபுருடோத்தமாவென்றும் கேழலாகியகேடிலீயென்றும் *
பேசுவாரவரெய்தும்பெருமை பேசுவான்புகில் நம்பரமன்றே. (௧)

சீயினால்செறிந்தேறியபுண்மேல் † செற்றலேறிக்குழம்பிருந்து * எங்கும்
ஈயினாலரிப்புண்டுமயங்கி யெல்லைவாய்ச்சென்றுசேர்வதன்முன்னம் *
வாயினால்நமோநாரணவென்றுமத்தகத்திடக்கைகளைக்கூப்பி * [டாரே.
போயினால்பின்னையித்திசைக்கென்றும் $ புணைக்கொடுக்கிலும்போதவொட்

சோர்வினால்பொருள்வைத்ததுண்டாகில் சொல்லுசொல்லென்சுற்றுமிருந்து
ஆர்வினவிலும்வாய்திறவாதே அந்தகாலமடைவதன்முன்னம் *
மார்வமென்பதோர்கோயிலமைத்து மாதவனென்னும்தெய்வத்தைநாட்டி *
ஆர்வமென்பதோர்பூவிடவல்லார்க் § கரவதண்டத்திலுய்யலுமாமே. (௩)

‡ "இவரென்றென்று" என்றும் சொல்லுவார்கள். † செற்றல் எறி - ஈ முட்டையிட்டு. $ புணைக்கொடுக்கை - ஈடுகாட்டுகை. § அரவதண்டம் - யமபடரால்வரும் க்லேசம்.

மேலெழுந்ததோர்வாயுக்கிளர்ந்து மேல்மிடற்றினையுள்ளெழவாங்கி *
காலுங்கையும்விதிர்விதிர்த்தேறிக் கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
மூலமாகியவொற்றையெழுத்தை மூன்றுமாத்திரையுள்ளெழவாங்கி *
வேலைவண்ணனை மேவுதிராகில் விண்ணகத்தினில்மேவலுமாமே. (ச)

மடிவழிவந்துநீர்புலன்சோர வாயிலட்டியகஞ்சியும்மீண்டே *
கடைவழிவாரக்கண்டமடைப்பக் கண்ணுறக்கமதாவதன்முன்னம் *
துடைவழியும்மைநாய்கள்கவரா, சூலத்தாலும்மைப்பாய்வதுஞ்செய்யார் *
இடைவழியில்நீர்கூறையுமிழவீரிருடீகேசனென்றேத்தவல்லீரே. (ரு)

அங்கம்விட்டவையைந்துமகற்றி யாவிமூக்கினில்சோதித்தபின்னை *
சங்கம்விட்டவர்கையைமறித்துப் பையவேதலைசாய்ப்பதன்முன்னம் *
வங்கம்விட்டுலவும்கடல்பள்ளிமாயனை மதுசூதனைமார்பில்
தங்கவிட்டுவைத்து * ஆவதோர்கருமஞ்சாதிப்பார்க்கென்றுஞ்சாதிக்கலாமே.

தென்னவன்தமர் ¶ செப்பமிலாதார் § சேயதக்குவார்போலப்புகுந்து *
பின்னும்வன்கயிற்றால்பிணித்தெற்றிப் பின்முன்னாகவிழுப்பதன்முன்னம் *
இன்னவனினையானென்றுசொல்லி யெண்ணியுள்ளத்திருளறநோக்கி *
மன்னவன்மதுசூதனனென்பார் வானகத்துமன்றாடிகள்தாமே. (எ)

கூடிக்கூடியுற்றார்களிருந்து குற்றம்நிற்கநற்றங்கள்பறைந்து *
பாடிப்பாடியோர்பாடையிலிட்டு நரிப்படைக்கொருபாகுடம் $ போலே *
கோடிமூடியெடுப்பதன்முன்னம் கௌவத்துவமுடைக்கோவிந்தனோடு *
கூடியாடியவுள்ளத்தரானால் குறிப்பிடங்கடந்துய்யலுமாமே. (அ)

வாயொருபக்கம்வாங்கிவலிப்ப வார்ந்தநீர்க்குழிக்கண்கள்மிழற்ற *
தாயொருபக்கம்தந்தையொருபக்கம் தாரமுமொருபக்கமலற்ற *
தீயொருபக்கஞ்சேர்வதன்முன்னம் செங்கண்மாலொடும்சிக்கெனச்சுற்றல் *
மாய் * ஒருபக்கம்நிற்கவல்லார்க் கரவதண்டத்திலுய்யலுமாமே. (கூ)

செத்துப்போவதோர்போதுநினைந்துசெய்யும் செய்கைகள்தேவபிரான்மேல்*
பத்தராயிறந்தார்பெறும்பேற்றைப்பாழித் தோள்விட்டுசித்தன்புத்தூர்க்கோ
சித்தம்நன்கொருங்கித்திருமாலைச் செய்தமாலையிவைபத்தும்வல்லார் * [ன்*
சித்தம்நன்கொருங்கித்திருமால்மேல் சென்றசிந்தைபெறுவர்தாமே. (கO)

ஆசை சீ சோர்வு மேல் மடி யங்கம் தென்னவன் கூடி வாய் செத்துக் காசு.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, காசுங்கறையுடை.



நாரணநாமமநந்தநர்க்கிடுநலம்.

கலிவிருத்தம்.

**மோஹனராகம்-ரூபகதாளம்.**

‡‡ காசும்கறையுடைக்கூறைக்கு மங்கோர்கற்றைக்கும்
ஆசையினால் * அங்கவத்தப்பேரிடும் ஆதர்காள் † *
கேசவன்பேரிட்டு நீங்கள்தேனித்திருமினோ ‡ *
நாயகன்நாரணன் தம்மன்னை ‡‡ நரகம்புகாள். (க)

---

¶ செப்பம் - செவ்வை. § சே - அதக்குவார். $ பாகுடம் - பச்சை, உபஹாரம். † ஆதர் - அறிவுகேடர். ‡ தேணித்திருக்கை - இனியராயிருக்கை. ‡‡ தம்மன்னை - தாய்.

அங்கொருகூறை யரைக்குடுப்பதனுசையால் *
மங்கியமானிடசாதியின் பேரிடுமாதர்காள் *
செங்கணெடுமால் சிரீதராவென்றழைத்தக்கால் *
நங்கைகாள் ! நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (உ)

உச்சியிலெண்ணெயும் சுட்டியும்வளையுமுகந்து - *
எச்சம்பொலிந்தீர்கா ளென்செய்வான்பிறர்பேரிட்டீர் *
பிச்சைபுக்காகிலு மெம்பிரான்திருநாமமே
நச்சுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (ங)

மானிடசாதியில்தோன்றிற் றோர்மானிடசாதியை *
மானிடசாதியின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
வானுடைமாதவா ! கோவிந்தாவென்றழைத்தக்கால் *
நானுடைநாரணன் தம்மன்னைநரகம்புகாள். (ச)

மலமுடையூத்தையில்தோன்றிற் றோர்மலவூத்தையை *
மலமுடையூத்தையின்பேரிட்டால் மறுமைக்கில்லை *
குலமுடைக்கோவிந்தா கோவிந்தாவென்றழைத்தக்கால் *
நலமுடைநாரணன் தம்மன்னைநரகம்புகாள். (ரு)

நாடுநகருமறிய மானிடப்பேரிட்டு *
கூடியழுங்கிக் குழியில்வீழ்ந்துவழுக்காதே *
சாடிறப்பாய்ந்ததலைவா தாமோதராவென்று
நாடுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (சு)

மண்ணில்பிறந்துமண்ணாகும் மானிடப்பேரிட்டு - * அங்கு
எண்ணமொன்றின்றி யிருக்குமேழைமனிதர்காள் *
கண்ணுக்கினிய கருமுகில்வண்ணன்நாமமே
நண்ணுமின் * நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (எ)

நம்பிபிம்பியென்று நாட்டுமானிடப்பேரிட்டால் *
நம்பும்பிம்புமெல்லாம் நாலுநாளிலழுங்கிப்போம் *
செம்பெருந்தாமரைக்கண்ணன் பேரிட்டழைத்தக்கால் *
நம்பிகாள் ! நாரணன் தம்மன்னைநரகம்புகாள். (அ)

ஊத்தைக்குழியி லமுதம்பாய்வதுபோல் - * உங்கள்
மூத்திரப்பிள்ளையை யென்முகில்வண்ணன்பேரிட்டு *
கோத்துக்குழைத்துக் குணலையாடித்திரிமினோ *
நாத்தகுநாரணன் தம்மன்னைநரகம்புகாள். (கூ)

⁂ சீரணிமால் திருநாமமேயிடத்தேற்றிய *
வீரணிதொல்புகழ் விட்டுசித்தன்விரித்த *
ஓரணியொண்டமி ழொன்பதோடொன்றும்வல்லவர் *
பேரணிவைகுந்தத் தென்றும்பேணியிருப்பரே. (கo)

காசும் அங்கொரு உச்சி மானிட மல நாடு மண் நம்பி ஊத்லித சீரணி தங்கை.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, தங்கையைமூக்கும்.



**கங்கைக்கரையின் கண்டமென்னுந்திருப்பதி.**

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**அடாணாராகம்-திரிபுடைதாளம்.**

⁂ தங்கையைமூக்கும்தமயனைத்தலையும் தடிந்தவெந்தாசரதிபோய் *
எங்கும்தன்புகழாவிருந்தரசாண்ட எம்புருடோத்தமனிருக்கை *
கங்கைகங்கையென்றவாசகத்தாலே கடுவினைகளைந்திடகிற்கும் *
கங்கையின்கரைமேல்கைதொழநின்ற கண்டமென்னும்கடிநகரே. (க)

சலம்பொதியுடம்பில்தழலுமிழ்பேழ்வாய்ச் சந்திரன்வெங்கதிரஞ்ச *
மலர்ந்தெழுந்தணவுமணிவண்ணவுருவின் மால்புருடோத்தமன்வாழ்வு *
நலந்திகழ்சடையான்முடிக்கொன்றைமலரும் நாரணன்பாதத்துழாயுங் *
கலந்திழிபுனலால்புகர்படுகங்கைக் கண்டமென்னும்கடிநகரே. (உ)

அதிர்முகமுடையவலம்புரிகுமிழ்த்தி அழலுமிழாழிகொண்டெறிந்து - * அங்
கெதிர்முகவசுரர்தலைகளையிடறுமெம்புருடோத்தமனிருக்கை *
சதுமுகன்கையில்சதுப்புயன்தாளில் சங்கரன்சடையினில்தங்கி *
கதிர்முகமணிகொண்டிழிபுனல்கங்கைக் கண்டமென்னும்கடிநகரே. (ந)

இமையவரிறுமாந்திருந்தரசாள ஏற்றுவந்தெதிர்பொருசேனை *
நமபுரம்நணுகநாந்தகம்விசிறும் நம்புருடோத்தமன்நகர்தான் *
இமவந்தந்தொடங்கியிருங்கடலளவு மிருகரையுலகிரைத்தாட *
† கமையுடைப்பெருமைக்கங்கையின்கரைமேல் கண்டமென்னும்கடிநகரே. ()

உழுவதோர்படையுமுலக்கையும்வில்லு மொண்சுடராழியும்சங்கும் *
மழுவொடுவாளும்படைக்கலமுடைய மால்புருடோத்தமன்வாழ்வு *
எழுமையுங்கூடியீண்டியபாவ மிறைப்பொழுதளவினிலெல்லாம் *
கழுவிடும்பெருமைக்கங்கையின்கரைமேல் கண்டமென்னும்கடிநகரே. (ரு)

தலைப்பெய்துகுமுறிச்சலம்பொதிமேகம் சலசலபொழிந்திடக்கண்டு *
மலைப்பெருங்குடையால்மறைத்தவன்மதுரை மால்புருடோத்தமன்வாழ்வு *
அலைப்புடைத்திரைவாயருந்தவமுனிவர் அவபிரதம்குடைந்தாட *
கலப்பைகள்கொழிக்கும்கங்கையின்கரைமேல்கண்டமென்னும்கடிநகரே. (சு)

† கமை - க்ஷமை - பொறுமை.

விற்பிடித்திறுத்துவேழத்தைமுறுக்கி மேலிருந்தவன்தலைசாடி *
மற்பொருதெழப்பாய்ந்தரையனையுதைத்த மால்புருடோத்தமன்வாழ்வு *
அற்புதமுடையஜராவதமதமும் அவரிளம்படியரொண்சாந்தும் *
கற்பகமலரும்கலந்திழிகங்கைக் கண்டமென்னும்கடிநகரே. (எ)

திரைபொருகடல்சூழ்திண்மதிள் துவரைவேந்துதன்மைத்துனன்மார்க்காய்*
அரசனையவியவரசினையருளு மரிபுருடோத்தமனமர்வு *
நிரைநிரையாக நெடியனயூபம்நிரந்தரமொழுக்குவிட்டு - * இரண்டு
கரைபுரைவேள்விப்புகைகமழ்கங்கைக் கண்டமென்னும்கடிநகரே. (அ)

⁂வடதிசைமதுரைசாளக்கிராமம் வைகுந்தம்துவரையயோத்தி *
இடமுடைவதரியிடவகையுடைய எம்புருடோத்தமனிருக்கை *
தடவரையதிரத்தரணிவிண்டிடியத் தலைப்பற்றிக்கரைமரம்சாடி *
கடலினைக்கலங்கக்கடுத்திழிகங்கைக் கண்டமென்னும்கடிநகரே. (௯)

⁂மூன்றெழுத்ததனைமூன்றெழுத்ததனால் மூன்றெழுத்தாக்கி*மூன்றெழுத்
தென்றுகொண்டிருப்பார்க்கிரக்கநன்குடையஎம்புருடோத்தமனிருக்கை*[தை
மூன்றடிநிமிர்த்துமூன்றினில்தோன்றி மூன்றினில்மூன்றுருவானான் *
கான்தடம்பொழில்சூழ்கங்கையின்கரைமேல்கண்டமென்னும்கடிநகரே. (௧௦)

⁂பொங்கொலிகங்கைக்கரைமலிகண்டத் துறைபுருடோத்தமனடிமேல் *
வெங்கலிநலியாவில்லிபுத்தூர்க்கோன் விட்டுசித்தன்விருப்புற்று *
தங்கியவன்பால்செய்ததமிழ்மாலை தங்கியநாவுடையார்க்கு *
கங்கையில்திருமால்கழலிணைக்கீழே குளித்திருந்தகணக்காமே. (௧௧)

தங்கை சலம் அதிர் இமையவர் உழு தலை வில் திரை வட மூன்று பொங்கு மாதவத்தோன்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௮-வது, மாதவத்தோன்.



திருவரங்கம்.

கலிவிருத்தம்.

**சங்கராபரணராகம்-ஆதிதாளம்.**

⁂ மாதவத்தோன்புத்திரன்போய் மறிகடல்வாய்மாண்டானை *
ஓதுவித்ததக்கணையா வுருவுருவேகொடுத்தானூர் *
தோத † வத்தித்தூய்மறையோர் துறைபடியத்துளும்பியெங்கும் *
போதில்வைத்ததேன்சொரியும் புனலரங்கமென்பதுவே. (௧)

பிறப்பகத்தேமாண்டொழிந்த பிள்ளைகளைநால்வரையும் *
இறைப்பொழுதில்கொணர்ந்துகொடுத்தொருப்படுத்தவுறைப்பனூர்*
மறைப்பெருந்தீவளர்த்திருப்பார் வருவிருந்தையளித்திருப்பார் *
சிறப்புடையமறையவர்வாழ் திருவரங்கமென்பதுவே. (௨)

† வத்தி - வஸ்த்ரத்தைதரித்தவர்கள்.

மருமகன்றன்சந்ததியை யுயிர்மீட்டு, மைத்துனன்மார் *
† உருமகத்தேவீழாமே குருமுகமாய்க்காத்தானூர் *
திருமுகமாய்ச்செங்கமலம் திருநிறமாய்க்கருங்குவளை *
பொருமுகமாய்நின்றலரும் புனலரங்கமென்பதுவே. (௩)

கூன்தொழுத்தைசிதகுரைப்பக் கொடியவள்வாய்கடியசொற்கேட்டு *
ஈன்றெடுத்ததாயரையு மிராச்சியமுமாங்கொழிய *
கான்தொடுத்தநெறிபோகிக் கண்டகரைக்களைந்தானூர் *
தேன்தொடுத்தமலர்ச்சோலைத்திருவரங்கமென்பதுவே. (௪)

பெருவரங்களவைபற்றிப் பிழைக்குடையவிராவணனை *
‡ உருவரங்கப்பொருதழித் திவ்வுலகினைக்கண்பெறுத்தானூர் *
குரவரும்பக்கோங்கலரக் குயில்கூவுங்குளிர்பொழில்சூழ் *
திருவரங்கமென்பதுவே யென்திருமால்சேர்விடமே. (௫)

கீழுலகிலசுரர்களைக் கிழங்கிருந்துகிளராமே *
ஆழிவிடுத்தவருடைய கருவழித்தவழிப்பனூர்த்
தாழைமடலூடுரிஞ்சித் தவளவண்ணப்பொடியணிந்து *
யாழினிசைவண்டினங்க ளாளம்வைக்குமரங்கமே. (௬)

கொழுப்புடையசெழுங்குருதி கொழித்திழிந்துகுமிழ்த்தெறிய *
பிழக்குடையவசுரர்களைப் பிணம்படுத்தபெருமானூர் *
தழுப்பரியசந்தனங்கள் தடவரைவாயீர்த்துக்கொண்டு *
தெழிப்புடையகாவிரிவந் தடிதொழும்சீரரங்கமே. (௭)

வல்லெயிற்றுக்கேழலுமாய் வாளெயிற்றுச்சீயமுமாய் *
எல்லையில்லாதரணியையு மவுணனையுமிடந்தானூர் *
எல்லியம்போதிருஞ்சிறைவண்டெம்பெருமான்குணம்பாடி *
மல்லிகைவெண்சங்கூதும் மதிளரங்கமென்பதுவே. (௮)

குன்றாடுகொழுமுகில்போல் குவளைகள்போல்குரைகடல்போல் *
நின்றாடுகணமயில்போல் நிறமுடையநெடுமாலூர் *
குன்றாடுபொழில்நுழைந்து கொடியிடையார்முலையணவி *
மன்றாடுதென்றலுலா மதிளரங்கமென்பதுவே. (௯)

‡§ பருவரங்களவைபற்றிப் படையாலித்தெழுந்தானை *
செருவரங்கப்பொருதழித்த திருவாளன்திருப்பதிமேல் *
திருவரங்கத்தமிழ்மாலை விட்டுசித்தன்விரித்தனகொண்டு - *
இருவரங்கமெரித்தானை யேத்தவல்லாரடியோமே. (௧௦)

மாதவப் பிறப்பு மருமகன் கூன் பெரு கீழ் கொழுப்பு வல்லெயிற்று குன்று பரு மாவடி.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



† உருமகம் - உரு - சரீரம், மகம் - யஜ்ஞம் : நரமேத யஜ்ஞம், ‡ உரு அரங்க.

## ௯-வது, மரவடியை.

### திருவரங்கம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**தோடிராகம்-ஆதிதாளம்.**

⁂மரவடியைத்தம்பிக்கு வான்பணையம்வைத்துப்போய்வானோர்வாழ ✻
செருவுடையதிசைக்கருமம் திருத்திவந்துலகாண்டதிருமால்கோயில் ✻
திருவடிதன்திருவுருவும்திருமங்கைமலர்க்கண்ணும்காட்டிநின்று ✻
உருவுடையமலர்நீலம் காற்றாட்டஓ! சலிக்குமொளியரங்கமே. (௧)

⁂தன்னடியார்திறத்தகத்துத் தாமரையாளாகிலும்சிதகுரைக்குமேல் ✻
என்னடியாரதுசெய்யார் செய்தாரேல்நன்றுசெய்தாரென்பர்போலும் ✻
மன்னுடையவிபீடணற்காய்மதிளிலங்கைத் திசைநோக்கிமலர்க்கண்வைத்த ✻
என்னுடையதிருவரங்கற்கன்றியும் மற்றொருவர்க்காளாவரே. (௨)

கருளுடையபொழில்மருதும் கதக்களிறும்பிலம்பனையும்கடியமாவும் ✻
உருளுடையசகடரையும்மல்லரையு முடையவிட்டோசைகேட்டான் ✻
இருளகற்றுமெறிகதிரோன் மண்டலத்தூடேற்றிவைத்தேணிவாங்கி ✻
அருள்கொடுத்திட்டடியவரை யாட்கொள்வானமருமூரணியரங்கமே. (௩)

பதினாறாமாயிரவர் தேவிமார்பணிசெய்ய ✻ துவரையென்னு
மதில்நாயகராகி வீற்றிருந்தமணவாளர்மன்னுகோயில் ✻
புதுநாண்மலர்க்கமல மெம்பெருமான்பொன்வயிற்றில்பூவேபோல்வான் ✻
பொதுநாயகம்பாவித் திறுமாந்துபொன்சாய்க்கும்புனலரங்கமே. (௪)

ஆமையாய்க்கங்கையா யாழ்கடலாயவனியாயருவரைகளாய் ✻
நான்முகனாய்நான்மறையாய் வேள்வியாய்த்தக்கணையாய்த்தானுமானான் ✻
சேமமுடைநாரதனார் சென்றுசென்றுதுதித்திறைஞ்சக்கிடந்தான்கோயில் ✻
பூமருவிப்புள்ளினங்கள் புள்ளரையன்புகழ்குழறும்புனலரங்கமே. (௫)

மைத்துனன்மார்காதலியைமயிர்முடிப்பித் தவர்களையேமன்னராக்கி ✻
உத்தரைதன்சிறுவனையுமுய்யக்கொண்ட வுயிராளனுறையும்கோயில் ✻
பத்தர்களும்பகவர்களும் பழமொழிவாய்முனிவர்களும்பரந்தநாடும் ✻
சித்தர்களும்தொழுதிறைஞ்சத் திசைவிளக்காய்நிற்கின்றதிருவரங்கமே. (௬)

குறட்பிரமசாரியாய் மாவலியைக்குறும்பதக்கியரசுவாங்கி ✻
இறைப்பொழுதில்பாதாளம்கலவிருக்கைகொடுத்துகந்தவெம்மான்கோயில் ✻
எறிப்புடையமணிவரைமே லிளநாயிறெழுந்தாப்போலரவணையின்வாய் ✻
சிறப்புடையபணங்கள்மிசைச்செழுமணிகள்விட்டெறிக்கும்திருவரங்கமே. ()

உரம்பற்றியிரணியனையுகிர்நுதியா லொள்ளியமார்புறைக்கவூன்றி ✻
சிரம்பற்றிமுடியிடியக்கண்பிதுங்க வாயலரத்தெழித்தான்கோயில் ✻
உரம்பெற்றமலர்க்கமல முலகளந்தசேவடிபோலுயர்ந்துகாட்ட ✻
வரம்புற்றகதிர்ச்செந்நெல் தாள்சாய்த்துத்தலைவணக்கும்தண்ணரங்கமே. (௮)

தேவுடையமீனமாயாமையா யேனமாயரியாய்க்குறளாய் *
மூவுருவிலிராமனாய்க் கண்ணனாய்க்கற்கியாய்முடிப்பான்கோயில் *
சேவலொடுபெடையன்னம் செங்கமலமலரேறியூசலாடி *
பூவணைமேல்துதைந்தெழு செம்பொடியாடிவிளையாடும்புனலரங்கமே. (க)

செருவாளும்புள்ளாளன்மண்ணாளன் செருச்செய்யும்நாந்தகமென்னும்
ஒருவாளன் * மறையாளனோடாதபடையாளன்விழுக்கையாளன் *
இரவாளன்பகலாளனென்னையாள னேழுலகப்பெரும்புரவாளன் *
திருவாளனினிதாகத் திருக்கண்கள்வளர்கின்றதிருவரங்கமே. (க0)

✤கைந்நாகத்திடர்கடிந்த கனலாழிப்படையுடையான்கருதும்கோயில் *
தென்னாடும்வடநாடும்தொழநின்ற திருவரங்கந்திருப்பதியின்மேல் *
மெய்ந்நாவன்மெய்யடியான் விட்டுசித்தன்விரித்ததமிழுரைக்கவல்லார் *
எஞ்ஞான்றும்மெம்பெருமானிணையடிக்கீழிணைபிரியாதிருப்பர்தாமே. (கக)

மரவடி தன் கருள் பதினாறு ஆமை மைத்துனன் குற னூரம் தேவு செரு கைந்நாகத் துப்பு.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## க0-வது, துப்புடையாரை.



அரவணைப்பள்ளிகொளரங்கனைப்போற்றல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**ஆரபிராகம் - ஆதிதாளம்.**

✤ துப்புடையாரையடைவதெல்லாம்சோர்விடத்துத்துணையாவரென்றே *
ஒப்பிலேனாகிலும்நின்னடைந்தே னானைக்குநீயருள்செய்தமையால் *
எய்ப்பென்னைவந்துநலியும்போதங்கேதும் நானுன்னைநினைக்கமாட்டேன்
அப்போதைக்கிப்போதேசொல்லிவைத்தே னரங்கத்தரவணைப்பள்ளியானே.

சாமிடத்தென்னைக்குறிக்கொள்கண்டாய் சங்கொடுசக்கரமேந்தினானே *
நாமடித்தென்னையனேகதண்டஞ் செய்வதாநிற்பர்நமன்தமர்கள் *
போமிடத்துன்திறத்தெத்தனையும் புகாவண்ணம்நிற்பதோர்மாயைவல்லை *
ஆமிடத்தேயுன்னைச்சொல்லிவைத்தே னரங்கத்தரவணைப்பள்ளியானே. (உ)

எல்லையில்வாசல்குறுகச்சென்றா லெற்றிநமன்தமர்பற்றும்போது *
நில்லுமினென்னுமுபாயமில்லை நேமியும்சங்கமுமேந்தினானே * [டென்றும்*
சொல்லலாம்போதேயுன்நாமமெல்லாம்சொல்லினேனென்னைக்குறிக்கொண்
அல்லல்படாவண்ணங்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. (ங)

ஒற்றைவிடையனும்நான்முகனு முன்னையறியாப்பெருமையோனே ! *
முற்றவுலகெல்லாம்நீயேயாகி மூன்றெழுத்தாயமுதல்வனேயோ ! *
அற்றதுவாணாளிவற்கென்றெண்ணி யஞ்சநமன்தமர்பற்றலுற்ற *
அற்றைக்குநீயென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. (ச)

பையரவினணைப்பாற்கடலுள் பள்ளிகொள்கின்றபரமமூர்த்தி *
உய்யவுலகுபடைக்கவேண்டி யுந்தியில்தோற்றினாய்நான்முகனை *
வையமனிசரைப்பொய்யென்றெண்ணிக் காலனையுமுடனேபடைத்தாய் *
ஐய! இனியென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. (ரு)

தண்ணனவில்லைநமன்றமர்கள் சாலக்கொடுமைகள்செய்யாநிற்பர் *
மண்ணொடுநீருமெரியும்காலும் மற்றுமாகாசமுமாகிநின்றாய் * [டென்றும்
எண்ணலாம்போதேயுன்னாமமெல்லா மெண்ணினேனென்னைக்குறிக்கொண்
அண்ணலேநீயென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. (சு)

செஞ்சொல்மறைப்பொருளாகிநின்ற தேவர்கள்நாயகனேயெம்மானே *
எஞ்சலிலென்னுடையின்னமுதே யேழுலகுமுடையாயென்னப்பா *
வஞ்சவுருவில்நமன்றமர்கள் வலிந்துநலிந்தென்னைப்பற்றும்போது *
† அஞ்சலமென்றென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. ()

நானேதுமுன்மாயமொன்றறியேன் நமன்றமர்பற்றிநலிந்திட்டு - * இந்த
ஊனேபுகேயென்றுமோதும்போதங்கேதும்நானுன்னைநினைக்கமாட்டேன் ‡ *
வானேய்வானவர்தங்களீசா ! மதுரைப்பிறந்தமாமாயனே ! * என்
ஆனாய்நீயென்னைக்காக்கவேண்டு மரங்கத்தரவணைப்பள்ளியானே. (அ)

குன்றெடுத்தாநிரைகாத்தவாயா கோநிரைமேய்த்தவனேயெம்மானே *
அன்றுமுதலின்றறுதியா ஆதியஞ்சோதிமறந்தறியேன் *
நன்றும்கொடியநமன்றமர்கள் நலிந்துவலிந்தென்னைப்பற்றும்போது - *
அன்றங்குநீயென்னைக்காக்கவேண்டு மரஙகத்தரவணைப்பள்ளியானே. (கூ)

⁂ மாயவனைமதுசூதனனை மாதவனைமறையோர்களேத்தும் *
ஆயர்களேற்றினையச்சுதனை யரங்கத்தரவணைப்பள்ளியானை *
வேயர்புகழ்வில்லிபுத்தூர்மன் விட்டுசித்தன்சொன்னமாலைபத்தும் *
தூயமனத்தனராகிவல்லார் தூமணிவண்ணனுக்காளர்தாமே. (க0)

துப்புச் சாமிட மெல்லை ஒற்றை பை தண்ணனவு செஞ்சொல் நான் குன்று மாய வாக்கு.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.

# அஞ்சாம்பத்து.

## க-வது, வாக்குத்தூய்மை.

நைச்யநவிற்றுதி.

கலிவிருத்தம்.

தன்யாசிராகம்-அடதாளம்.

⁂ வாக்குத்தூய்மையிலாமையினாலே மாதவாவுன்னைவாய்க்கொள்ளமாட்டே
நாக்குநின்னையல்லாலறியாது நானதஞ்சுவனென்வசமன்று * [ன் *
மூர்க்குப்பேசுகின்றானிவனென்று முனிவாயேலுமென்னாவினுக்காற்றேன் *
காக்கைவாயிலும்கட்டுரைகொள்வர் காரணாகருளக்கொடியானே. (க)

† அஞ்சலம் - அஞ்சாதேகொள். ‡ "அங்குன்னை நானொன்றும் நினைக்கமாட்டேன்" என்று பாடாந்தரம்.

சழக்குநாக்கொடுபுன்கவிசொன்னேன் சங்குசக்கரமேந்துகையானே *
பிழைப்பராகிலும்தம்மடியார்சொல் பொறுப்பதுபெரியோர்கடனன்றே *
விழிக்குங்கண்ணிலேன்நின்கண்மற்றல்லால் வேறொருவரோடென்மனம்பற்
றுழைக்கோர்புள்ளிமிகையன்றுகண்டாயூழியேழுலகுண்டுமிழ்ந்தானே. [றாது

நன்மைதீமைகளொன்றுமறியேன் நாரணாவென்னுமித்தனையல்லால் *
புன்மையாலுன்னைப்புள்ளுவம்பேசிப் புகழ்வானன்றுகண்டாய்திருமாலே *
உன்னுமாறுன்னையொன்றுமறியேனோவாதேநமோநாரணாவென்பன் * [யே.
வன்மையாவதுன்கோயிலில்வாழும் வைட்டணவனென்னும்வன்மைகண்டா

நெடுமையாலுலகேழுமளந்தாய்நின்மலாநெடியாய், அடியேனை *, குடிமைகொ
ள்வதற்கையுறவேண்டா கூறைசோறிவைவேண்டுவதில்லை *, அடிமையென்
னுமக்கோயின்மையாலேயங்கங்கேயவைபோதருங்கண்டாய் *, கொடுமைக்க
ஞ்சனைக்கொன்றுநின்தாதைகோத்தவன்தளைகோள்விடுத்தானே. (௪)

தோட்டமில்லவளாத்தொழுவோடைத்துடவையுங்கிணறுமிவையெல்லாம்*
வாட்டமின்றியுன்பொன்னடிக்கீழேவளைப்பகம்வகுத்துக்கொண்டிருந்தேன்*
நாட்டுமானிடத்தோடெனக்கரிது நச்சுவார்பலர்கேழலொன்றாகி *
கோட்டுமண்கொண்டகொள்கையினானேகுஞ்சரம்வீழக்கொம்பொசித்தானே

கண்ணாநான்முகனைப்படைத்தானே காரணாகரியாய் ! அடியேன்நான் *
உண்ணாநாள்பசியாவதொன்றில்லை ஓவாதேநமோநாரணாவென்று *
எண்ணாநாளும், இருக்கெசுச்சாமவேதநாண்மலர்கொண்டுன்பாதம்
நண்ணாநாள் * அவைதத்துறுமாகி லன்றெனக்கவைபட்டினிநாளே. (௬)

வெள்ளைவெள்ளத்தின்மேலொருபாம்பைமெத்தையாகவிரித்து * (அதன்மே
லே,கள்ளநித்திரைகொள்கின்றமார்க்கம்காணலாங்கொலென்றாசையினாலே*
உள்ளஞ்சோரவுகந்தெதிர்விம்மி யுரோமகூபங்களாய் * கண்ணநீர்கள்
துள்ளம்சோரத்துயிலணைகொள்ளேன் சொல்லாயானுன்னைத்தத்துறுமாறே.

வண்ணமால்வரையேகுடையாக மாரிகாத்தவனே ! மதுசூதா *
கண்ணனே ! கரிகோள்விடுத்தானே ! காரணா ! களிறட்டபிரானே *
எண்ணுவாரிடரைக்களைவானே ! ஏத்தரும்பெருங்கீர்த்தியினானே *
நண்ணிநானுன்னைநாடொறுமேத்தும்நன்மையேயருள்செய்யெம்பிரானே. ()

நம்பனே ! நவின்றேத்தவல்லார்கள்நாதனே ! நரசிங்கமதானாய் ! *
உம்பர்கோனுலகேழுமளந்தா யூழியாயினாயாழிமுன்னேந்தி *
கம்பமாகரிகோள்விடுத்தானே காரணாகடலைக்கடைந்தானே *
எம்பிரானென்னையாளுடைத்தேனே யேழையேனிடரைக்களையாயே. (௯)

‡‡காமர்தாதைகருதலர்சிங்கம் காணவினியகருங்குழற்குட்டன் *
வாமனனென்மரகதவண்ணன் மாதவன்மதுசூதனன்றன்னை *
சேமநன்கமரும்புதுவையர்கோன்விட்டுசித்தன்வியன்தமிழ்பத்தும் *
நாமமென்றுநவின்றுரைப்பார்கள் நண்ணுவாரொல்லைநாரணனுலகே. (௧௦)

வாக்குச் சழக்கு நன்மை நெடுமை தோட்டம் கண்ணா வெள்ளை வண்ண நம்பன் காமர் நெய்.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, நெய்க்குடத்தை.

அரவணையாதியான் காப்பாற்பிணிபோக்கல்.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

**பியாகடைராகம்-ரூபகதாளம்.**

‡‡ நெய்க்குடத்தைப்பற்றியேறு மெறும்புகள்போல்நிரந்து * எங்கும்
கைக்கொண்டுநிற்கின்றநோய்காள் காலம்பெறவுய்யப்போமின் *
மெய்க்கொண்டுவந்துபுகுந்து வேதப்பிரானார்கிடந்தார் *
பைக்கொண்டபாம்பணையோடும் பண்டன்று ¶ பட்டினங்காப்பே. ()

சித்திரகுத்தனெழுத்தால் தென்புலக்கோன்பொறியொற்றி *
வைத்தவிலச்சினைமாற்றித் தூதுவரோடியொளித்தார் *
முத்துத்திரைக்கடற்சேர்ப்பன் மூதறிவாளர்முதல்வன் *
பத்தர்க்கமுதனடியேன் பண்டன்றுபட்டினங்காப்பே. (உ)

வயிற்றில்தொழுவைப்பிரித்து வன்புலச்சேவையதக்கி *
கயிற்றும் § அக்காணிகழித்துக் காலிடைப்பாசங்கழற்றி *
எயிற்றிடைமண்கொண்ட வெந்தையிராப்பகலோதுவித்து, என்னைப்
பயிற்றிப்பணிசெய்யக்கொண்டான் பண்டன்றுபட்டினங்காப்பே. ()

மங்கியவல்வினைநோய்காளுமக்குமோர்வல்வினைகண்டீர் *
இங்குப்புகேன்மின்புகேன்மின் எளிதன்றுகண்டீர்புகேன்மின் *
சிங்கப்பிரானவனெம்மான் சேரும்திருக்கோயில்கண்டீர் *
பங்கப்படாதுய்யப்போமின் பண்டன்றுபட்டினங்காப்பே. (ச)

மாணிக்குறளுருவாய மாயனையென்மனத்துள்ளே *
பேணிக்கொணர்ந்து புகுதவைத்துக்கொண்டென்பிறிதின்றி *
மாணிக்கப்பண்டாரங்கண்டீர் வலிவன்குறும்பர்களுள்ளீர் *
† பாணிக்கவேண்டாநடமின் பண்டன்றுபட்டினங்காப்பே. (ரு)

உற்றவுறுபிணிநோய்காளுமக்கொன்றுசொல்லுகேன்கேண்மின் *
பெற்றங்கள்மேய்க்கும்பிரானார் பேணும்திருக்கோயில்கண்டீர் *
‡ அற்றமுரைக்கின்றேனின்னமாழ்வினைகாள் * உமக்கிங்கோர்
பற்றில்லைகண்டீர்நடமின் பண்டன்றுபட்டினங்காப்பே. (சூ)

கொங்கைச்சிறுவரையென்னும் பொதும்பினில்வீழ்ந்துவழுக்கி *
அங்கோர்முழையினில்புக்கிட் டழுந்திக்கிடந்துழல்வேனை *
வங்கக்கடல்வண்ணனம்மான் வல்வினையாயினமாற்றி *
பங்கப்படாவண்ணஞ்செய்தான் பண்டன்றுபட்டினங்காப்பே. (எ)

---

¶ பட்டினம் - பத்தநம்; நிதிகிடக்குமிடம் : ராஜதானி. § அக்கு - எலும்பு : அக்காணி - ஸ்தூலசரீரம். † பாணிக்கவேண்டா - விளம்பிக்கவேண்டா. ‡ அற்றம் - அறுதி.

ஏதங்களாயினவெல்லா மிறங்கலிடுவித்து – * என்னுள்ளே
பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து *
போதில்கமலவன்னெஞ்சம்புகுந்து மென்சென்னித்திடரில் *
பாதவிலச்சினைவைத்தார் பண்டன்றுபட்டினங்காப்பே. (அ)

உறகலுறகலுறக லொண்சுடராழியேசங்கே *
அறவெறிநாந்தகவாளே யழகியசார்ங்கமேதண்டே *
இறவுபடாமலிருந்த வெண்மருலோகபாலீர்காள் *
பறவையரையாவுறகல் பள்ளியறைகுறிக்கொண்மின். (கூ)

⁂ அரவத்தமளியினோடு மழகியபாற்கடலோடும் *
அரவிந்தப்பாவையுந்தானும் அகம்படிவந்துபுகுந்து *
பரவைத்திரைபலமோதப் பள்ளிகொள்கின்றபிரானை *
பரவுகின்றான்விட்டுசித்தன் பட்டினங்காவல்பொருட்டே. (கO)

நெய்சித்திர வயிற்றில் மங்கிய மாணி உற்ற கொங்கை ஏதம் உறகல் அரவத்துக்க.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## க-வது, துக்கச்சுழலையை.



### திருமாலிருஞ்சோலைப்பெருமானைமீக்கூறல்.

கலிநிலைத்துறை.

ஸஹானராகம் - அடதாளம்.

⁂ துக்கச்சுழலையைச்சூழ்ந்துகிடந்த வலையையறப்பறித்து *
புக்கினிற்புகுன்னைக்கண்டுகொண்டே னினிப்போகவிடுவதுண்டே*
மக்களறுவரைக்கல்லிடைமோத இழந்தவள்தன்வயிற்றில் *
சிக்கெனவந்துபிறந்துநின்றாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். (க)

வளைத்துவைத்தேனினிப்போகலொட்டே னுன்றனிந்திரஞாலங்களால்
ஒளித்திடில்நின் திருவாணைகண்டாய் நீயொருவர்க்கும்மெய்யனல்லை*
அளித்தெங்குநாடுநகரமும் தம்முடைத்தீவினைத்தீர்க்கலுற்று *
தெளித்துவலஞ்செய்யும்தீர்த்தமுடைத்திருமாலிருஞ்சோலையெந்தாய்

⁂ உனக்குப்பணிசெய்திருக்கும்தவமுடையேனினிப்போயொருவன்
றனகுப்பணிந்து * கடைத்தலைநிற்கைநின்சாயையழிவுகண்டாய் *
புனத்தினைக்கிள்ளிப்புதுவவிக்காட்டி யுன்பொன்னடிவாழ்கவென்று*
இனக்குரவர்புதியதுண்ணு மெழில்மாலிருஞ்சோலையெந்தாய். (ந)

காதம்பலவும்திரிந்துழன்றேற் கங்கோர்நிழலில்லைநீருமில்லை*உன்
பாதநிழலல்லால்மற்றோருயிர்ப்பிடம் நானெங்கும்காண்கின்றிலேன் *
தூதுசென்றாய்குருபாண்டவர்க்கா யங்கோர்பொய்ச்சுற்றம்பேசிச்சென்று *
பேதஞ்செய்தெங்கும்பிணம்படுத்தாய் திருமாலிருஞ்சோலையெந்தாய்.

காலுமெழாகண்ணநீரும்நில்லா வுடல்சோர்ந்துநடுங்கி * குரல்
மேலுமெழாமயிர்கூச்சுமறா எனதோள்களும்வீழ்வொழியா *
மாலுகளாநிற்குமென்மனனே யுன்னைவாழத்தலைப்பெய்திட்டேன் *
சேலுகளாநிற்கும்நீள்சுனைசூழ் திருமாலிருஞ்சோலையெந்தாய். (ரு)

எருத்துக்கொடியுடையானும் பிரமனுமிந்திரனும் * மற்றும்
ஒருத்தருமிப்பிறவியென்னும்நோய்க்கு மருந்தறிவாருமில்லை *
மருத்துவனாய்நின்றமாமணிவண்ணா மறுபிறவிதவிரத்
திருத்தி*உன்கோயில்கடைப்புகப்பெய்திருமாலிருஞ்சோலையெந்தாய்.
அக்கரையென்னுமனத்தக்கடலு ளழுந்தியுன்பேரருளால் *
இக்கரையேறியிளைத்திருந்தேனை யஞ்சேலென்றுகைகவியாய் *
சக்கரமும்தடக்கைகளும் கண்களும்பீதகவாடையொடும் *
செக்கர்நிறத்துச்சிவப்புடையாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். (எ)
எத்தனைகாலமுமெத்தனையூழியுமின்றொடுநாளையென்றே *　　[ன் *
இத்தனைகாலமும்போய்க்கிறிபட்டே னினியுன்னைப்போகலொட்டே
மைத்துனன்மார்களைவாழ்வித்து மாற்றலர்நூற்றுவரைக்கெடுத்தாய் *
சித்தம்நின்பாலதறிதியன்றே திருமாலிருஞ்சோலையெந்தாய்.　(அ)
அன்றுவயிற்றிற்கிடந்திருந்தே யடிமைசெய்யலுற்றிருப்பன் *
இன்றுவந்திங்குன்னைக்கண்டுகொண்டேனினிப்போகவிடுவதுண்டே*
சென்றங்குவாணனையாயிரந்தோளும் திருச்சக்கரமதனால் *
தென்றித்திசைதிசைவீழச்செற்றாய் திருமாலிருஞ்சோலையெந்தாய். ()
✠சென்றுலகம்குடைந்தாடுஞ்சுனைத்திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடிமேலடிமைத்திறம் நேர்படவிண்ணப்பஞ்செய் *
பொன்திகழ்மாடம்பொலிந்துதோன்றும்புதுவையர்கோன்விட்டுசித்த
னொன்றினோடொன்பதும்பாடவல்லாருலகமளந்தான்தமரே.　[ன்

துக்க வளைத்து உனக்கு காதம் காலு மெருத்து அக்கரை யெத்தனை யன்று சென்று சென்னி.

பெரியாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, சென்னியோங்கு.



இதயத்துணிறைந்தெம்பிரான்மலர்ந்தமை.

கலிவிருத்தம்.

**ஸ்ரீராகம்-திரிபுடைதாளம்.**

✠ சென்னியோங்கு தண்திருவேங்கடமுடையாய் * உலகு
தன்னைவாழநின்றநம்பீ தாமோதராசதிரா *
என்னையுமென்னுடைமையையுமுன் சக்கரப்பொறியொற்றிக்கொண்டு
நின்னருளேபுரிந்திருந்தே னினியென்திருக்குறிப்பே?.　(க)
பறவையேறுபரம்புருடா நீயென்னைக்கைக்கொண்டபின் *
பிறவியென்னும்கடலும்வற்றிப் பெரும்பதமாகின்றதால் *
இறவுசெய்யும்பாவக்காடு தீக்கொளீஇவேகின்றதால் *
அறிவையென்னுமமுதவாறு தலைப்பற்றிவாய்க்கொண்டதே.　(உ)
எமனுமென்குலதெய்வமே,யென்னுடைநாயகனே *
நின்னுள்ளேனாய்ப்பெற்றநன்மை யிவ்வுலகினிலார்பெறுவார்? *
நம்மன்போலேவீழ்த்தமுக்கும் நாட்டிலுள்ளபாவமெல்லாம் *
† சும்மெனாதேகைவிட்டோடித் தூறுகள்பாய்ந்தனவே.　(ங)

† சும்மெனாதே - மூச்சுவிடாதே.

கடல்கடைந்தமுதங்கொண்டு கலசத்தைநிறைத்தாப்போல் *
உடலுருகிவாய்திறந்து மடுத்துன்னைநிறைத்துக்கொண்டேன் *
கொடுமைசெய்யுங்கூற்றமுமென் § கோலாடிகுறுகப்பெறு *
தடவரைத்தோள்சக்கரபாணீ சார்ங்கவிற்சேவகனே. (௪)
பொன்னைக்கொண்டுரைகல்மீதே நிறமெழவுரைத்தாப்போல் * [ன் *
உன்னைக்கொண்டென்நாவகம்பால் மாற்றின்றியுரைத்துக்கொண்டே
உன்னைக்கொண்டென்னுள்வைத்தே னென்னையுமுன்னிலிட்டேன் *
என்னப்பாவென்னிருடீகேசா என்னுயிர்காவலனே. (௫)
உன்னுடையவிக்கிரம மொன்றொழியாமலெல்லாம் *
என்னுடையநெஞ்சகம்பால் சுவர்வழியெழுதிக்கொண்டேன் *
மன்னடங்கமழு வலங்கைக்கொண்டவிராமநம்பீ *
என்னிடைவந்தெம்பெருமா னினியெங்குப்போகின்றதே. (௬)
பருப்பதத்துக்கயல்பொறித்த பாண்டியர்குலபதிபோல் *
திருப்பொலிந்தசேவடி யென்சென்னியின்மேல்பொறித்தாய் *
மருப்பொசித்தாய்மல்லடர்த்தா யென்றென்றுன்வாசகமே *
உருப்பொலிந்தநாவினேனை யுனக்குரித்தாக்கினையே. (எ)
அனந்தன்பாலுங்கருடன்பாலும் † ஐதுநொய்தாகவைத்து - * என்
மனந்தனுள்ளேவந்துவைகி வாழச்செய்தாயெம்பிரான் *
நினைந்தென்னுள்ளேநின்றுநெக்குக் கண்கள் ‡ அசும்பொழுக *
நினைந்திருந்தேசிரமந்தீர்ந்தேன் நேமிநெடியவனே. (அ)
பனிக்கடலில்பள்ளிகோளைப் பழகவிட்டு - * ஓடிவந்தென்
மனக்கடலில்வாழவல்ல மாயமணாளநம்பீ *
தனிக்கடலேதனிச்சுடரே தனியுலகேயென்றென்று - *
உனக்கிடமாயிருக்க வென்னையுனக்குரித்தாக்கினையே. (௯)

சாற்றுப்பாட்டுக்கள்.

⁂ தடவரைவாய்மிளிர்ந்துமின்னும் தவளநெடுங்கொடிப்போல் *
சுடரொளியாய்நெஞ்சினுள்ளே தோன்றுமென்சோதிநம்பீ *
வடதடமும்வைகுந்தமும் மதிள்துவராபதியும் *
இடவகைகளிகழ்ந்திட் டென்பாலிடவகைகொண்டனையே. (௧0)
⁂ வேயர்தங்கள்குலத்துதித்த விட்டுசித்தன்மனத்தே *
கோயில்கொண்டகோவலனைக் கொழுங்குளிர்முகில்வண்ணனை *
ஆயரேற்றையமரர்கோவை யந்தணர்தமமுதத்தினை *
சாயைபோலப்பாடவல்லார் தாமுமணுக்கர்களே. (௧௧)

சென்னி பறவை எம்மனு கடல் பொன் னுன் பருப் பனந்தன் பனி தடவரை வேயர் மார்கழி.

ஆ பத்து-௫-க்கு, பாட்டு - ௪௭௩.

பெரியாழ்வார்திருமொழி ஸம்பூர்ணம்.



கோலாடி - ஆஜ்ஞை. † ஐதுநொய்தாகவைத்து -(ஸ்நேஹத்தை) அத்யல்பமாகப்பண்ணி. ‡ அசும்பு - அசறு; கல்மஷம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

# ஆண்டாள்வைபவம்.

𑌕𑌰𑍍𑌕𑌟𑍇 𑌪𑍂𑌰𑍍𑌵𑌫𑌲𑍍𑌗𑍁𑌨𑍍𑌯𑌾𑌂 𑌤𑍁𑌲𑌸𑍀𑌕𑌾𑌨𑌨𑍋𑌦𑍍𑌭𑌵𑌾𑌮𑍍।
𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑍇𑌵𑌿𑌶𑍍𑌵𑌮𑍍𑌭𑌰𑌾𑌂𑌗𑍋𑌦𑌾𑌂𑌵𑌨𑍍𑌦𑍇𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌨𑌾𑌯𑌕𑍀𑌮𑍍॥

கர்க்கடேபூர்வபல்குந்யாம் துளஸீகாநநோத்பவாம் -
பாண்ட்யேவிஸ்வம்பராம்கோதாம் வந்தேஸ்ரீரங்கநாயகீம்.

ஆண்டாள், ஸ்ரீவில்லிபுத்தூரில் நந்தவநத்தில் துளசிமலரில், கலி-௯௮-வதான நளஷூ ஆடிமீ சுக்லபக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க்கிழமைகூடின பூரநக்ஷத்ரத்தில், பூமிப் பிராட்டியா ரம்சையாய், அயோநிஜையாய்த் திருவவதரித்தருளினாள்.

இவள் திருவவதாரக்ரமமிருக்கும்படி யென்னென்னில்;—ஸ்ரீஜநகராஜன் யாகசாலைக்கு இடத்தை உழுதுபண்ணாநிற்க, அந்தப்படைச்சாலிலே பிராட்டி ப்ராதுர்ப்பவித்தருள, அதுதானே நிரூபகமாக ஸீதையென்று திருநாமம்சாத்தி உகப்போடே ஸ்ரீஜநகராஜன்புத்திரியாக வளர்த்துக்கொண்டாப்போலே; மெய்யடியாரான விஷ்ணுசித்தர் தம் திருநந்தவநத்தில் திருத்துழாய்க்குக் கொத்தாநிற்க, அத்திருத்துழாய்மண்ணின் கீழே, திருவாடிப் பூரத்தில், ஸ்ரீபூமிப்பிராட்டிப்ராதுர்ப்பவித்தருள, இதை விஷ்ணுசித்தர் கண்டு விஸ்மயப்பட்டு, எல்லா லக்ஷணங்களோடுங்கூடின இக்கந்நிகையைப் புத்திரியாக வெடுத்துக் கொண்டு, ப்ரீதியோடே "கோதை" என்று திருநாமஞ்சாத்தி, திருமகள் போலவளர்த்துக்கொண்டு போராநின்றார்.

விஷ்ணுசித்தர், வடபெருங்கோயிலுடையானுக்குச் சாத்தும்படிகட்டிவைத்த திருமாலையை, அவரில்லாத சமயத்தில், இப்பெண்பிள்ளைதான்சூடிக்கொண்டு, "அவனுக்குநேரொவ்வாதிருக்கிறேனோ?. ஒத்திருக்கிறேனோ?" என்று, காறைபூண்டு, கூறையுடுத்து, வைகளைகுலுக்கி, கோவைச்செவ்வாய் திருத்தி, அவ்வொப்பனை யழகைக்கண்ணாடியிலேகண்டு, இப்படிபலநாளும் பந்துபந்தாகச் சுருட்டிவைக்க, இதைப்பெரியாழ்வார் ஒருநாள் கண்டருளி, "பெண்ணே! இப்படியோ செய்வது?" என்று மிகவும்கோபித்து, அந்தத்திருமாலையை அன்றுவடபெருங்கோவிலுடையானுக்குச் சாத்தாமலிருக்க; அன்றிராத்திரியில்ஆழ்வாருடைய ஸ்வப்நத்திலே எம்பெருமானெழுந்தருளி "இ

ன்றுநமக்கு மாலை கொண்டுவராதிருப்பானென்?" என்ன; தம்புத்திரி கோதை குழலிலேமுடித்த அக்ருத்யத்தை விண்ணப்பஞ்செய்ய; எம்பெருமானும், "அப்போது காணும் வாஸனையாய் ப்ரியமாயிருப்பது" என்றருளிச்செய்ய; ஆழ்வாரும், அன்றுமுதல் "இவ்வாண்டாள் நப்பின்னைப் பிராட்டியோ? பூமிப் பிராட்டியோ? பெரிய பிராட்டியாரோ? இப்படி பிறந்தாள்" என்று மிகவும் விஸ்வஸிக்கத் தொடங்கினார். ஆழ்வார்திருமகளார்தாம் பூமாலை சூடிக்கொடுத்ததுவே நிரூபமாக சூடிக்கொடுத்தநாச்சியாரானார்.

திருத்துழாய் பரிமளத்தோடே முளைக்குமாப்போலே, இந்நாய்ச்சியாரும், அவதரித்தது தொடங்கி பால்ய யௌவநாவஸ்தைகள் தோறும்வளருகிற பரபக்தி பரஜ்ஞாந பரமபக்திகளை யுடையளாய், பகவத்விஷயப்ராவண்யமுண்டான ஆழ்வார்களிற்காட்டில் அதிசயித்திருந்தாள்; அந்தப்ராவண்யத்தினால், அவனைவிட்டுப்பிரியில் தரிக்கமாட்டாதவளானாள். கோபகன்னிகைகள் க்ருஷ்ணவிரஹத்தை ஸஹிக்கமாட்டாமல் அவனை அநுகரித்துதரித்தாப்போல், இவ்வாண்டாளும், "மார்கழிநீராடியும் நோன்பு நோற்றும் காமபஜநம் முதலானவற்றைப் பண்ணியும் தரிப்போம்" என்றுபார்த்து, சங்கத்தமிழ்மாலையாகத் திருப்பாவைநாச்சியார்திருமொழி என்கிற திவ்ய ப்ரபந்தங்களை யருளிச்செய்து, ஜகத்துக்கு உபகரித்தருளினாள்.

இப்படிவாழுங்காலத்தில், ஸ்ரீஜநகராஜன் தன்திருமகளானபிராட்டியின்பருவங்கண்டு சிந்தார்ணவத்தில் மூழ்கினாற்போல், பெரியாழ்வாரும் இந்நாச்சியாருடைய விவாஹயோக்யமான பருவங்கண்டு சிந்தா வ்யாகுலத்தை யுடையவராய், இவ்வாண்டாள், "மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்" என்றும் "மற்றொருவர்க்கென்னைப்பேசலொட்டேன் மாலிருஞ்சோலையெம் மாயற்கல்லால்" என்றும் "அவன்முகத்தன்றி விழியேன்" என்றும் அருளிச்செய்வதைக் கண்டு, "நூற்றெட்டுத் திருப்பதி யெம்பெருமான்களில் நீ ராருக்கு வாழ்க்கைப்படுகிறீர்?" என்று கேட்க; ஆண்டாளும் ஆழ்வாரைக்குறித்து, "அவ்வவருடைய குணபதாநங்களைக் கீர்த்தித்தருளவேணும்" என்ன; ஆழ்வாரும், வடபெருங்கோயிலுடையான் வைபவமடியாக, பாண்டியமண்டலத்திலும், மலைநாட்டுத்திருப்பதிகளிலும்,வடதிசைத்திருப்பதிகளிலுமுள்ள எம்பெருமான்களின் வைபவமும், வடதிருவேங்கடவன் வைபவந்தொடங்கி, தொண்டைமண்டலத்திலும், சோழமண்டலத்திலுமுள்ள எம்பெருமான்கள்வைபவமும், அழ

கர் வைபவமுமெல்லாம் அருளிச்செய்ய; ஆண்டாளும், அதுகேட்டு, ஆநந்தக்கண்ணீர் பெருகவும், உடம்பெங்கும் மயிர்க்குச்செறியவும், இன்னரங்கத்தின்னமுதருடைய குழலழகு வாயழகு கண்ணழகுகளைக் கேட்டு,மிகவும் வ்யாகுலையாய், மோஹித்து, வந்தானோதிருவரங்கன் வாரானோவென்றென்றே வளையுஞ்சோரும்" என்கிறபடியே மனமுருகி, மலர்க்கண்கள் துளிக்க, அழகிய மணவாளரையேகாமித்து, மந்திரக்கோடியுடுத்தி மணமாலைசூட்டி மதுசூதன்வந்துகைத்தலம்பற்றி மத்தளங்கொட்ட வரிசங்கம்நின்றூத முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ் பெருப்பெருத்த கண்ணாலஞ்செய்யக் கனாக்கண்டு, அணியரங்கத்தம்மானுக்கே தீர்ந்த காதலையுடையளானாள்.

அவ்வளவில் ஆழ்வாரும், கோதைக்குத் தக்கவரன் கோயிற்பிள்ளை என்று கருதி, "இது கூடும்படியென்?" என்று சிந்தைகலங்கிக் கண்வளர்ந்தருள; திருவரங்கச்செல்வனார், ஆழ்வார் ஸ்வப்நத்தில் எழுந்தருளி, "உமது புத்திரி கோதையைக்கொண்டு அணியரங்கன் திருமுற்றத்துக்கு வாரீர், நாமே தகுதியாக பாணிக்ரஹணம்பண்ணுகிறோம்" என்றருளிச்செய்ய, ஆழ்வாரும், உகந்து நிர்ப்பரராயிருந்தார். அப்போது, திருவரங்கச்செல்வனார், தமது சத்ரம் சாமரம்முதலான எல்லாவரிசைகளோடும் ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குப்போய் ஆண்டாளை அழைத்துவரும்படி தம்பரிஜநங்களுக்கு நியமித்தருள; அனைத்துப் பரிகரமும் ஸ்ரீவில்லிபுத்தூர்க்குச்சென்று, ஆழ்வாரைக்கண்டு, நம்பெருமாளருளப்பாடிட் டருளினபடியை விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும் ப்ரீதராய் மிகவும் ஆச்சரியப்பட்டு, வடபெருங்கோயிலுடையானுக்கு விண்ணப்பஞ்செய்து, அவருடைய அநுமதியுடன் ஆண்டாளை மணிப்பல்லக்கில் எழுந்தருளுவித்துக்கொண்டு, அழகிய மணவாளரையன்றி யறியாத பாதிவ்ரத்யமுடைய ஆண்டாளைப் பிறர் கண்படாமல் தட்டுப்பாயிட்டு மூடிக்கொண்டு, பலவாத்யங்களும் முழங்க எல்லாரும் சேவிக்க எழுந்தருளப் பண்ணிக்கொண்டு, திருவரங்கந் திருப்பதிக்குச் சென்றவாறே, "ஆண்டாள் வந்தாள்! சூடிக்கொடுத்தாள் வந்தாள்! சுரும்பார் குழற்கோதை வந்தாள்! திருப்பாவைபாடிய செல்விவந்தாள்! தென்னரங்கந் தொழும் தேசியள்வந்தாள்!" என்று பல சின்னங்கள்பரிமாற எழுந்தருளுவித்துக் கொண்டுவந்து, அழகியமணவாளன் திருமண்டபத்தே சென்று தட்டுப்பாயை வாங்கியருளினார். சூடிக்கொடுத்த நாய்ச்சியாரும், எல்லாரும் காணும்படி, உதறியுடுத்த பட்டுச்சேலையும், பருத்த செங்கழுநீர்மாலையும், திருநுதலில் கஸ்தூரிதிலகமும், காதளவோடிக் கயல்போல் மிளிரும்

கடைக்கண் விழியும், வஞ்சிக்கொடிபோன்ற இடையுமாய், கோங்கொத்த கொங்கைகுலுங்க, சிலம்பார்க்க, சீரார்வளையொலிப்ப, அன்னமென்னடைகொண்டு, அழகியமணவாளன் திருமுன்னேசென்று, உள்ளேபுகுந்து, கண்களாரக்கண்டு, "கேசவநம்பியைக் கால்பிடிப்பாள்" என்னும் பேறுபெற்று, திருவநந்தாழ்வானுகிற படுக்கையை மிதித்தேறித் திருவரங்கரைச்சேர்ந்து, திருவரங்கன் திருவடிவே நாடும்படி அந்தர்ப்பவித்தருளினுள்.

இதைக்கண்டு ஆழ்வார் சிஷ்யரான வல்லபதேவ னுள்ளிட்டார் எல்லாரும் ஆச்சரியப்பட; திருவரங்கச்செல்வனுர் ஆழ்வாருக்குஅருளப்பாடிட்டருளி, "க்ஷீரஸமுத்ரராஜனைப்போல் நீரும் நமக்கு மாமனுராய்விட்டீர்" என்று மிகவும் உகந்தருளி. இவருக்குத் தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டத்துடன் ஸ்ரீசடகோபனும் ப்ரஸாதித்து, "வில்லிபுத்தூருறைவான் பொன்னடி பூண்டு வாழும்" என்று விடைகொடுத்தருள; ஆழ்வாரும், அதிக ப்ரீதியோடும் ஆச்சரியத்தோடும் ஸ்ரீ வில்லிபுத்தூர்க்குச்சென்று, முன்புபோலே வடபெருங்கோயிலுடையான் கைங்கர்யத்தில் நிரதராய் வாழ்ந்துகொண்டு எழுந்தருளியிருந்தார்.

திருவாடிப்பூரத்துச்செகத்துதித்தாள்வாழியே
திருப்பாவைமுப்பதுஞ்செப்பினுள்வாழியே
பெரியாழ்வார்பெற்றெடுத்தபெண்பிள்ளைவாழியே
பெரும்பூதூர்மாமுனிக்குபின்னுனுள்வாழியே
ஒருநூற்றுநாற்பத்தொருமூன்றுரைத்தாள்வாழியே
உயரரங்கர்க்கேகண்ணியுகந்தளித்தாள்வாழியே
மருவாருந்திருமல்லிவளநாடிவாழியே
வண்புதுவைநகர்க்கோதைமலர்ப்பதங்கள்வாழியே.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

## ஆண்டாளருளிச்செய்த

# திருப்பாவை.

தனியன்.

பிலஹரிராகம்.

பட்டரருளிச்செய்தது.

𑌨𑍀𑌲𑌾𑌤𑍁𑌙𑍍𑌗𑌸𑍍𑌤𑌨𑌗𑌿𑌰𑌿𑌤𑌟𑍀𑌸𑍁𑌪𑍍𑌤𑌮𑍁𑌦𑍍𑌬𑍋𑌧𑍍𑌯𑌕𑍃𑌷𑍍𑌣𑌂
𑌪𑌾𑌰𑌾𑌰𑍍𑌥𑍍𑌯𑌂𑌸𑍍𑌵𑌂𑌶𑍍𑌰𑍁𑌤𑌿𑌶𑌤𑌶𑌿𑌰𑌸𑍍𑌸𑌿𑌦𑍍𑌧𑌮𑌧𑍍𑌯𑌾𑌪𑌯𑌨𑍍𑌤𑍀।
𑌸𑍍𑌵𑍋𑌚𑍍𑌛𑌿𑌷𑍍𑌟𑌾𑌯𑌾𑌂𑌸𑍍𑌰𑌜𑌿𑌨𑌿𑌗𑌳𑌿𑌤𑌂𑌯𑌾𑌬𑌲𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑍍𑌯𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇
𑌗𑍋𑌦𑌾𑌤𑌸𑍍𑌯𑍈𑌨𑌮𑌇𑌦𑌮𑌿𑌦𑌂𑌭𑍂𑌯𑌏𑌵𑌾𑌸𑍍𑌤𑍁𑌭𑍂𑌯𑌃॥

நீளாதுங்கஸ்தநகிரிதடீஸுப்தமுத்போத்யக்ருஷ்ணம்
பாரார்த்யம்ஸ்வம்ஶ்ருதிஶதஶிரஸ்ஸித்தமத்யாபயந்தீ-
ஸ்வோச்சிஷ்டாயாம்ஸ்ரஜிநிகளிதம்யாபலாத்க்ருத்யபுங்க்தே
கோதாதஸ்யைநமஇதமிதம்பூயஏவாஸ்துபூய꞉.

உய்யக்கொண்டா ரருளிச்செய்தது.

இருவிகற்ப நேரிசைவெண்பா.

அன்னவயல்புதுவையாண்டாள், அரங்கற்குப்
பன்னுதிருப்பாவைபல்பதியம்—இன்னிசையால்
பாடிக்கொடுத்தாள்நற்பாமாலை, பூமாலை
சூடிக்கொடுத்தாளைச்சொல்லு.

சூடிக்கொடுத்தசுடர்க்கொடியே ! தொல்பாவை
பாடியருளவல்லபல்வளையாய்—நாடிநீ
வேங்கடவற்கென்னைவிதியென்றவிம்மாற்றம்
நாம்கடவாவண்ணமேநல்கு.

இயற்றரவிணைக் கொச்சகக்கலிப்பா.

பிலஹரிராகம்-அடதாளம்.

⁂ மார்கழித்திங்கள் மதிநிறைந்தநன்னாளால் *
நீராடப்போதுவீர் போதுமினோ, நேரிழையீர் ! *
சீர்மல்குமாய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்காள் *
கூர்வேல்கொடுந்தொழிலன் நந்தகோபன்குமரன் *
ஏரார்ந்தகண்ணி யசோதையிளஞ்சிங்கம் *
கார்மேனிச்செங்கண் கதிர்மதியம்போல்முகத்தான் *
நாராயணனே நமக்கேபறைதருவான் *
பாரோர்புகழப் படிந்தேலோரெம்பாவாய். (க)

பந்துவராளிராகம் - ஆதிதாளம்.

வையத்துவாழ்வீர்காள் நாமும்நம்பாவைக்கு *
செய்யும்கிரிசைகள் கேளீரோ * பாற்கடலுள்
† பையத்துயின்ற பரமனடிபாடி *
நெய்யுண்ணோம்பாலுண்ணோம் நாட்காலேநீராடி *
மையிட்டெழுதோம் மலரிட்டுநாம்முடியோம் *
செய்யாதனசெய்யோம் தீக்குறளைச்சென்றோதோம் *
ஐயமும்பிச்சையு மாந்தனையும்கைகாட்டி *
உய்யுமாறெண்ணி யுகந்தேலோரெம்பாவாய். (உ)

பந்துவராளிராகம்-திரிபுடைதாளம்.

⁂ ஓங்கியுலகளந்த வுத்தமன்பேர்பாடி *
நாங்கள்நம்பாவைக்குச் சாற்றிநீராடினல் *
தீங்கின்றிநாடெல்லாம் திங்கள்மும்மாரிபெய்து - *
ஓங்குபெருஞ்செந்நெலூடு கயலுகள *
பூங்குவளைப்போதில் பொறிவண்டுகண்படுப்ப *
தேங்காதேபுக்கிருந்து சீர்த்தமுலைபற்றி
வாங்க * குடம்நிறைக்கும் வள்ளல்பெரும்பசுக்கள் *
நீங்காதசெல்வம் நிறைந்தேலோரெம்பாவாய். (ங)

காம்போதிராகம்-ஆதிதாளம்.

ஆழிமழைக்கண்ணா வொன்றுநீகைகரவேல் *
ஆழியுள்புக்கு முகந்துகொடார்த்தேறி *
ஊழிமுதல்வ னுருவம்போல்மெய்கறுத்து *
பாழியந்தோளுடைப் பற்பநாபன்கையில் *
ஆழிபோல்மின்னி வலம்புரிபோல்நின்றதிர்ந்து *
தாழாதே சார்ங்கமுதைத் தசரமழைபோல் *
வாழவுலகினில்பெய்திடாய் * நாங்களும்
மார்கழிநீராட மகிழ்ந்தேலோரெம்பாவாய். (ச)

தோடிராகம்-ரூபகதாளம்.

மாயனைமன்னுவட மதுரைமைந்தனை *
தூயபெருநீர் யமுனைத்துறைவனை *
ஆயர்குலத்தினில் தோன்றும்மணிவிளக்கை *
தாயைக்குடல்விளக்கஞ்செய்த தாமோதரனை *
தூயோமாய்வந்துநாம் தூமலர்தூவித்தொழுது ‡ *
வாயினல்பாடி மனத்தினல்சிந்திக்க *
போயபிழையும் புகுதருவான்நின்றனவும் *
தீயினில்தூசாகும் செப்பேலோரெம்பாவாய். (ரு)

† பைய - மெள்ள. ‡ "தூமலர்கள். தூய்த்தொழுது" என்றும்பாடம்.

பூபாளராகம்-ஆதிதாளம்.

புள்ளும்சிலும்பினகாண் புள்ளரையன் † கோயிலில் *
வெள்ளைவிளிசங்கின் பேரரவம்கேட்டிலையோ *
பிள்ளாயெழுந்திராய் பேய்முலைநஞ்சுண்டு *
கள்ளச்சகடம் கலக்கழியக்காலோச்சி *
வெள்ளத்தரவில் துயிலமர்ந்தவித்தினை *
உள்ளத்துக்கொண்டு முனிவர்களும்யோகிகளும் *
மெள்ளவெழுந் தரியென்றபேரரவம் *
உள்ளம்புகுந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (சு)

பூபாளராகம் - ரூபகதாளம்.

கீசுகீசென் றெங்குமானைச்சாத்தன் * கலந்து
பேசினபேச்சரவம் கேட்டிலையோபேய்ப்பெண்ணே *
காசும்பிறப்பும் கலகலப்பக்கைபேர்த்து *
வாசநறுங்குழலாச்சியர் * மத்தினால்
ஓசைபடுத்த தயிரரவம்கேட்டிலையோ *
நாயகப்பெண்பிள்ளாய் நாராயணன்மூர்த்தி *
கேசவனைப்பாடவும் நீகேட்டேகிடத்தியோ *
தேசமுடையாய் திறவேலோரெம்பாவாய். (எ)

பூபாளராகம்-அடதாளம்.

கீழ்வானம்வெள்ளென் றெருமைசிறுவீடு *
மேய்வான்பரந்தனகாண் மிக்குள்ளபிள்ளைகளும் *
போவான்போகின்றாரைப் போகாமல்காத்து - * உன்னைக்
கூவுவான்வந்துநின்றோம் * கோதுகலமுடைய
பாவாயெழுந்திராய் பாடிப்பறைகொண்டு *
மாவாய்பிளந்தானை மல்லரைமாட்டிய *
தேவாதிதேவனைச் சென்றுநாம்சேவித்தால் *
ஆவாவென்றாராய்ந்தரு ளேலோரெம்பாவாய். (அ)

மோஹனராகம்-ஆதிதாளம்.

தூமணிமாடத்துச் சுற்றும்விளக்கெரிய *
தூபம்கமழத் துயிலணைமேல்கண்வளரும் *
மாமான்மகளே மணிக்கதவம்தாள்திறவாய் *
மாமீ ரவளையெழுப்பீரோ * உன்மகள்தான்
ஊமையோ அன்றிச்செவிடோ அனந்தலோ *
ஏமப்பெருந்துயில் மந்திரப்பட்டாளோ *
மாமாயன்மாதவன் வைகுந்தனென்றென்று *
நாமம்பலவும் நவின்றேலோரெம்பாவாய். (கூ)

அசாவேரிராகம்-ஆதிதாளம்.

நோற்றுச்சுவர்க்கம் புகுகின்றவம்மனாய் *
மாற்றமும்தாராரோ வாசல்திறவாதார் *

---

† கோயில் என்றும் பாடம்.

நாற்றத்துழாய்முடி நாராயணன் * நம்மால்
போற்றப்பறைதரும் புண்ணியனால் * பண்டொருநாள்
கூற்றத்தின்வாய்வீழ்ந்த கும்பகரணனும் *
தோற்றுமுனக்கேபெருந்துயில்தான் தந்தானோ *
ஆற்றஅனந்தலுடையா யருங்கலமே *
தேற்றமாய்வந்துதிறவேலோ ரெம்பாவாய். (கூ0)

ஸஹானாராகம்-திரிபுடைதாளம்.

கற்றுக்கறவைக் கணங்கள்பலகறந்து *
செற்றார்திறலழியச் சென்றுசெருச்செய்யும் *
குற்றமொன்றில்லாத கோவலர்தம்பொற்கொடியே *
புற்றரவல்குல் புனமயிலேபோதராய் *
சுற்றத்துத்தோழிமா ரெல்லாரும்வந்து * நின்
முற்றம்புகுந்து முகில்வண்ணன்பேர்பாட *
சிற்றாதேபேசாதே செல்வபெண்டாட்டி * நீ
எற்றுக்குறங்கும்பொரு ளேலோரெம்பாவாய். (கக)

கேதாரகௌளராகம்-ஆதிதாளம்.

கனைத்திளங்கற்றெருமை கன்றுக்கிரங்கி *
நினைத்துமுலைவழியே நின்றுபால்சோர *
நனைத்தில்லம்சேறாக்கும் நற்செல்வன்தங்காய் ! *
பனித்தலைவீழ நின்வாசல்கடைபற்றி *
சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச்செற்ற *
மனத்துக்கினியானைப் பாடவும்நீவாய்திறவாய் *
இனித்தானெழுந்திரா யீதென்னபேருறக்கம் *
அனைத்தில்லத்தாரு மறிந்தேலோரெம்பாவாய். (கஉ)

அடாணாராகம்-ரூபகதாளம்.

புள்ளின்வாய்கீண்டானைப் பொல்லாவரக்கனை *
கிள்ளிக்களைந்தானைக் கீர்த்திமைபாடிப்போய் *
பிள்ளைகளெல்லாரும் பாவைக்களம்புக்கார் *
வெள்ளியெழுந்து வியாழமுறங்கிற்று *
புள்ளும்சிலும்பினகாண் போதரிக்கண்ணினாய் *
குள்ளக்குளிரக் குடைந்துநீராடாதே *
பள்ளிக்கிடத்தியோ பாவாய்நீநன்னாளால் *
கள்ளம்தவிர்ந்து கலந்தேலோரெம்பாவாய். (கங)

ஸாரங்கராகம்-ஆதிதாளம்.

உங்கள்புழைக்கடைத் தோட்டத்துவாவியுள் *
செங்கழுநீர்வாய்நெகிழ்ந் தாம்பல்வாய்கூம்பினகாண் *
செங்கல்பொடிக்கூறை வெண்பல்தவத்தவர் *
தங்கள்திருக்கோயில் சங்கிடுவான் $ போதந்தார் *
எங்களைமுன்ன மெழுப்புவான்வாய்பேசும் *
நங்காயெழுந்திராய் நாணாதாய்நாவுடையாய் *

$ போகின்றார் என்றும் பாடம்.

சங்கொடுசக்கர மேந்தும்தடக்கையன் *
பங்கயக்கண்ணனைப் பாடேலோரெம்பாவாய். (கச)

சௌராஷ்டிரராகம்-அடதாளம்.

எல்லேயிளங்கிளியே யின்னமுறங்குதியோ *
சில்லென்றழையேன்மின் நங்கைமீர்போதருகின்றேன் *
வல்லையுன்கட்டுரைகள் பண்டேயுன்வாயறிதும் *
வல்லீர்கள்நீங்களே நானேதானாயிடுக *
ஒல்லைநீபோதா யுனக்கென்னவேறுடையை *
எல்லாரும்போந்தாரோ போந்தார்போந்தெண்ணிக்கொள் *
வல்லானைகொன்றானை மாற்றாரைமாற்றழிக்க
வல்லானை * மாயனைப்பாடேலோரெம்பாவாய். (கரு)

யமுனகல்யாணிராகம்-ஆதிதாளம்.

⁂ நாயகனாய்நின்ற நந்தகோபனுடைய
கோயில்காப்பானே * கொடித்தோன்றும் தோரண
வாசல்காப்பானே * மணிக்கதவம்தாள்திறவாய் *
ஆயர்சிறுமியரோமுக்கு - * அறைபறை
மாயன்மணிவண்ணன் நென்னேலேவாய்நேர்ந்தான் *
தூயோமாய்வந்தோம் துயிலெழுபாடுவான் *
வாயால்முன்னமுன்னம் மாற்றாதேயம்மா * நீ
நேசநிலைக்கதவம் நீக்கேலோரெம்பாவாய். (கசா)

யமுனகல்யாணிராகம்-ரூபகதாளம்.

அம்பரமேதண்ணீரே சோறேயறஞ்செய்யும் *
எம்பெருமான் நந்தகோபாலாஎழுந்திராய் *
கொம்பனார்க்கெல்லாம் கொழுந்தேகுலவிளக்கே *
எம்பெருமாட்டி யசோதாயறிவுறாய் *
அம்பரமூடறுத் தோங்கியுலகளந்த *
உம்பர்கோமானே யுறங்காதெழுந்திராய் *
செம்பொற்கழலடிச்செல்வா பலதேவா *
உம்பியுநீயு முறங்கேலோரெம்பாவாய். (கஎ)

சாவேரிராகம்-ஆதிதாளம்.

⁂ உந்துமதகளிற்ற னோடாதேதோள்வலியன் *
நந்தகோபாலன்மருமகளே நப்பின்னாய் *
கந்தம்கமழும்குழலீ கடைதிறவாய் *
வந்தெங்கும்கோழியழைத்தனகாண் * மாதவிப்
பந்தல்மேல் பல்கால்குயிலினங்கள்கூவினகாண் *
பந்தார்விரலீ யுன்மைத்துனன்பேர்பாட *
செந்தாமரைக்கையால் சீரார்வளையொலிப்ப *
வந்துதிறவாய் மகிழ்ந்தேலோரெம்பாவாய். (கஅ)

ஸ்ரீராகம்-ஆதிதாளம்.

குத்துவிளக்கெரியக் கோட்டுக்கால்கட்டில்மேல் *
மெத்தென்ற பஞ்சசயனத்தின்மேலேறி *
கொத்தலர்பூங்குழல் நப்பின்னைகொங்கைமேல் *
வைத்துக்கிடந்த மலர்மார்பாவாய்திறவாய் *
மைத்தடங்கண்ணினாய் நீயுன்மணாளனை *
எத்தனைபோதும் துயிலெழவொட்டாய்காண் *
எத்தனையேலும் பிரிவாற்றகில்லாயால் *
தத்துவமன்று தகவேலோரெம்பாவாய். (கக)

தேசியராகம்-ஆதிதாளம்.

முப்பத்துமூவ ரமரர்க்குமுன்சென்று *
கப்பம்தவிர்க்கும் கலியே துயிலெழாய் *
செப்பமுடையாய் திறலுடையாய் * செற்றார்க்கு
வெப்பங்கொடுக்கும் விமலா துயிலெழாய் *
செப்பன்னமென்முலைச் செவ்வாய்ச்சிறுமருங்குல் *
நப்பின்னைநங்காய் திருவே துயிலெழாய் *
உக்கமும்தட்டொளியும் தந்துன்மணாளனை *
இப்போதே யெம்மைநீராட்டேலோரெம்பாவாய். (உ0)

அபநபராகம்-ஆதிதாளம்.

ஏற்றகலங்க ளெதிர்பொங்கிமீதளிப்ப *
மாற்றாதேபால்சொரியும் வள்ளல்பெரும்பசுக்கள் *
ஆற்றப்படைத்தான் மகனேயறிவுறாய் *
ஊற்றமுடையாய் பெரியாய் * உலகினில்
தோற்றமாய்நின்ற சுடரே துயிலெழாய் *
மாற்றாருனக்கு வலிதொலைந்துன்வாசற்கண் *
ஆற்றாதுவந் துன்னடிபணியுமாபோலே *
போற்றியாம்வந்தோம் புகழ்ந்தேலோரெம்பாவாய். (உக)

பைரவிராகம்-ஆதிதாளம்.

அங்கண்மாஞாலத்தரசர் * அபிமான
பங்கமாய்வந்து நின்பள்ளிக்கட்டிற்கீழே *
சங்கமிருப்பார்போல் வந்துதலைப்பெய்தோம் *
கிங்கிணிவாய்ச்செய்த தாமரைப்பூப்போலே *
செங்கண்சிறுச்சிறிதே யெம்மேல்விழியாவோ *
திங்களுமாதித்தியனு மெழுந்தாப்போல் *
அங்கணிரண்டுங்கொண் டெங்கள்மேல்நோக்குதியேல் *
எங்கள்மேல்சாப மிழிந்தேலோரெம்பாவாய். (உஉ)

அடாணாராகம்-ஆதிதாளம்.

✤✤ மாரிமலைமுழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும் *
சீரியசிங்க மறிவுற்றுத்தீவிழித்து *

வேரிமயிர்பொங்க எப்பாடும்பேர்ந்துதறி *
மூரிநிமிர்ந்து முழங்கிப்புறப்பட்டு *
போதருமாபோலே நீபூவைப்பூவண்ணா * உன்
கோயில்நின்று இங்ஙனேபோந்தருளி * கோப்புடைய
சீரியசிங்காசனத்திருந்து * யாம்வந்த
காரியமாராய்ந் தருளேலோரெம்பாவாய். (உங)

பியாகடைராகம்-ஆதிதாளம்.

⚜ அன்றிவ்வுலகமளந்தா யடிபோற்றி *
சென்றங்குத்தென்னிலங்கைசெற்றாய் திறல்போற்றி *
பொன்றச்சகடமுதைத்தாய் புகழ்போற்றி *
கன்றுகுணிலாவெறிந்தாய் கழல்போற்றி *
குன்றுகுடையாவெடுத்தாய் குணம்போற்றி *
வென்றுபகைகெடுக்கும் நின்கையில்வேல்போற்றி *
என்றென்றுன்சேவகமே யேத்திப்பறைகொள்வான் *
இன்றுயாம்வந்தோ மிரங்கேலோரெம்பாவாய். (உச)

சங்கராபரணராகம்-ஆதிதாளம்.

ஒருத்திமகனாய்ப்பிறந்து * ஓரிரவில்
ஒருத்திமகனாயொளித்துவளர *
தருக்கிலானாகித் தான்தீங்குநினைந்த *
கருத்தைப்பிழைப்பித்துக் கஞ்சன்வயிற்றில் *
நெருப்பென்னநின்றநெடுமாலே * உன்னை
அருத்தித்துவந்தோம் பறைதருதியாகில் *
திருத்தக்கசெல்வமும் சேவகமும்யாம்பாடி *
வருத்தமும்தீர்ந்து மகிழ்ந்தேலோரெம்பாவாய். (உரு)

ஆரபிராகம்-ஆதிதாளம்.

மாலேமணிவண்ணா மார்கழிநீராடுவான் *
மேலையார்செய்வனகள் வேண்டுவனகேட்டியேல் *
ஞாலத்தையெல்லாம் நடுங்கமுரல்வன *
பாலன்னவண்ணத்துன் பாஞ்சசன்னியமே *
போல்வனசங்கங்கள் போய்ப்பாடுடையனவே *
சாலப்பெரும்பறையே பல்லாண்டிசைப்பாரே *
கோலவிளக்கே கொடியேவிதானமே *
ஆலினிலையா யருளேலோரெம்பாவாய். (உசா)

ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

⚜ கூடாரைவெல்லும்சீர்க் கோவிந்தா * உன்றன்னைப்
பாடிப்பறைகொண்டு யாம்பெறுசம்மானம் *
நாடுபுகழும் பரிசினால்நன்றாக *
சூடகமேதோள்வளையே தோடேசெவிப்பூவே *
பாடகமேயென்றனைய பல்கலனும்யாமணிவோம் *
ஆடையுடுப்போ மதன்பின்னேபால்சோறு *

மூட, நெய்பெய்து முழங்கைவழிவார *
கூடியிருந்து குளிர்ந்தேலோரெம்பாவாய். (உஎ)

தன்யாசிராகம்-ஆதிதாளம்.

⁂ கறவைகள்பின்சென்று கானஞ்சேர்ந்துண்போம் *
அறிவொன்றுமில்லாத வாய்க்குலத்து - * உன்றன்னைப்
பிறவிபெறுந்தனை புண்ணியம்யாமுடையோம் *
குறைவொன்றுமில்லாத கோவிந்தா * உன்றன்னோ
டுறவேல்நமக் கிங்கொழிக்கவொழியாது - *
அறியாதபிள்ளைகளோ மன்பினுல் * உன்றன்னைச்
சிறுபேரழைத்தனவும் சீறியருளாதே *
இறைவாநீதாராய் பறையேலோரெம்பாவாய். (உஅ)

கல்யாணிராகம்-ஆதிதாளம்.

சாற்றுப்பாட்டுக்கள்.

⁂ சிற்றஞ்சிறுகாலே வந்துன்னைச்சேவித்து - * உன்
பொற்றாமரையடியே போற்றும்பொருள்கேளாய் *
பெற்றம்மேய்த்துண்ணும் குலத்தில்பிறந்து * நீ
குற்றேவலெங்களைக் கொள்ளாமற்போகாது - *
இற்றைப்பறைகொள்வா னன்றுகாண்கோவிந்தா *
எற்றைக்குமேழேழ் பிறவிக்கும் * உன்றன்னோ
டுற்றோமேயாவோ முனக்கேநாமாட்செய்வோம் *
மற்றைநங்காமங்கள் மாற்றேலோரெம்பாவாய். (உகூ)

சுருட்டிராகம்-ரூபகதாளம்.

⁂ வங்கக்கடல்கடைந்த மாதவனைக்கேசவனை *
திங்கள்திருமுகத்துச் சேயிழையார்சென்றிறைஞ்சி *
அங்கப்பறைகொண்டவாற்றை * அணிபுதுவைப்
பைங்கமலத்தண்டெரியல் பட்டர்பிரான்கோதைசொன்ன *
சங்கத்தமிழ்மாலை முப்பதும்தப்பாமே *
இங்கிப்பரிசுரைப்பா ரீரிரண்டுமால்வரைத்தோள் *
செங்கண்திருமுகத்துச் செல்வத்திருமாலால் *
எங்கும்திருவருள்பெற் றின்புறுவரெம்பாவாய். (௩0)

மார்கழி வையம் ஓங் காழி மாயன் புள்ளு கீசு கீழ்வானம் தூமணி நோற்று கற்றுக் கனைத்து புள் ளுங்கள் எல்லே நாயகன் அம்பர முந்து குத்து முப்பதுஎற் றங்கண்மாரி அன்றி ஒருத்தி மாலே கூடாரை கறவை சிற்றம் வங்கம் தை.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.

திருப்பாவை ஸம்பூர்ணம்.

ஆ பாட்டு-௫0௩.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# ஆண்டாளருளிச்செய்த

# நாச்சியார் திருமொழி.

தனியன்கள்.

திருக்கண்ணமங்கையாண்டானருளிச்செய்தது.

இருவிகற்பநேரிசைவெண்பா.

அல்லிநாட்டாமரைமே லாரணங்கினின்துணைவி *
மல்லிநாடாண்ட மடமயில்—மெல்லியலாள் *
ஆயர்குலவேந்த னாகத்தாள் * தென்புதுவை
வேயர்பயந்த விளக்கு.

கட்டளைக்கலித்துறை.

[கோலச்சுரிசங்கை மாயன்செவ்வாயின்குணம்வினவும்
சீலத்தனள் * தென்திருமல்லிநாடி * செழுங்குழல்மேல்
மாலைத்தொடை தென்னரங்கருக்கீயும்மதிப்புடைய
சோலைக்கிளி * அவள்தூயநற்பாதம்துணைநமக்கே. † ]

## க-வது, தையொருதிங்கள்.

கண்ணனையிணக்கெனக்காமனைத்தொழுதல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சாவேரிராகம்-ஆதிதாளம்.

தையொருதிங்களும்தரைவிளக்கித்
தண்மண்டலமிட்டுமாசிமுன்னாள் *
ஐயநுண்மணற்கொண்டுதெருவணிந்து
அழகினுக்கலங்கரித்தனங்கதேவா *
உய்யவுமாங்கொலோவென்றுசொல்லி
உன்னையுமும்பியையும்தொழுதேன் *
வெய்யதோர்தழலுமிழ்சக்கரக்கை
வேங்கடவற்கென்னைவிதிக்கிற்றியே. (க)

வெள்ளைநுண்மணற்கொண்டுதெருவணிந்து
வெள்வரைப்பதன்முன்னம்துறைபடிந்து *
முள்ளுமில்லாச்சுள்ளியெரிமடுத்து
முயன்றுன்னைநோற்கின்றேன்காமதேவா *
கள்ளவிழ்பூங்கணைதொடுத்துக்கொண்டு
கடல்வண்ணனென்பதோர்பேரெழுதி *
புள்ளினவாயபிளந்தானென்பதோர்
இலக்கினில்புகவென்னையெய்கிற்றியே. (உ)

† இத்தனியன் இந்த ப்ராந்தங்களில் அநுஸந்திப்பதில்லை.

† மத்தநன்னறுமலர்முருக்கமலர்கொண்டு
முப்போதுமுன்னடிவணங்கி *
தத்துவமிலியென்றுநெஞ்செரிந்து
வாசகத்தழித்துன்னைவைதிடாமே *
கொத்தலர்பூங்கணைதொடுத்துக்கொண்டு
கோவிந்தனென்பதோர்பேரெழுதி *
வித்தகன்வேங்கடவாணனென்னும்
விளக்கினில்புகவென்னைவிதிக்கிற்றியே. (௩)

சுவரில்புராணநின்பேரெழுதிச்
‡ சுறவநற்கொடிக்களும்துரங்கங்களும் *
கவரிப் § பிணாக்களும்கருப்புவில்லும்
காட்டித்தந்தேன்கண்டாய் காமதேவா *
அவரைப்பிராயந்தொடங்கி * என்று
மாதரித்தெழுந்தவென் தடமுலைகள் *
துவரைப்பிரானுக்கே சங்கற்பித்துத்
தொழுதுவைத்தே னொல்லைவிதிக்கிற்றியே. (௪)

வானிடைவாழுமவ்வானவர்க்கு
மறையவர்வேள்வியில்வகுத்தவவி *
கானிடைத்திரிவதோர்நரிபுகுந்து
கடப்பதும்மோப்பதும்செய்வதொப்ப *
ஊனிடையாழிசங்குத்தமர்க்கென்று -
உன்னித்தெழுந்தவென் தடமுலைகள் *
மானிடவர்க்கென்றுபேச்சுப்படில்
வாழகில்லேன்கண்டாய்மன்மதனே. (௫)

உருவுடையாரிளையார்கள்நல்லார்
ஒத்துவல்லார்களைக்கொண்டு * வைகல்
தெருவிடையெதிர்கொண்டு பங்குனிநாள்
திருந்தவேநோற்கின்றேன்காமதேவா *
கருவுடைமுகில்வண்ணன்காயாவண்ணன்
கருவிளைபோல்வண்ணன், கமலவண்ணத் *
திருவுடைமுகத்தினில்திருக்கண்களால்
திருந்தவேநோக்கெனக்கருள்கண்டாய். (௬)

காயுடைநெல்லொடுகரும்பமைத்துக்
கட்டியரிசியவலமைத்து *
வாயுடைமறையவர்மந்திரத்தால்
மன்மதனேயுன்னைவணங்குகின்றேன் *

† மத்தமலர் - மதமத்தம்பூ. ‡ சுறவம் - ஓர்வகைமத்ஸ்யம். § பிணா-பெண்.

தேசமுன்னளந்தவன் திரிவிக்கிரமன்
திருக்கைகளாலென்னைத்தீண்டும்வண்ணம் *
சாயுடைவயிறுமென் தடமுலையும்
தரணியில்தலைப்புகழ்தரக்கிற்றியே. (எ)

மாசுடையுடம்பொடுதலையுலறி
வாய்ப்புறம்வெளுத்தொருபோதுமுண்டு *
தேசுடைத்திறலுடைக்காமதேவா!
நோற்கின்றநோன்பினைக்குறிக்கொள்கண்டாய் *
பேசுவதொன்றுண்டிங்கெம்பெருமான்!
பெண்மையைத்தலையுடைத்தாக்கும்வண்ணம் *
கேசவநம்பியைக்கால்பிடிப்பா
ளென்னுமிப்பேறெனக்கருள்கண்டாய். (அ)

தொழுதுமுப்போதுமுன்னடிவணங்கித்
தூமலர்தூய்த்தொழுதேத்துகின்றேன் *
பழுதின்றிப்பாற்கடல்வண்ணனுக்கே
பணிசெய்துவாழப்பெறாவிடில்நான் *
அழுதழுதலமந்தம்மாவழங்க
ஆற்றவுமதுவுனக்குறைக்குங்கண்டாய் *
உழுவதோரெருத்தினை நுகங்கொடுபாய்ந்து -
ஊட்டமின்றித்துறந்தாலொக்குமே. (கூ)

⁂ கருப்புவில்மலர்க்கணைக்காமவேளைக்
கழலிணைபணிந்தங்கோர்கரியலற *
மருப்பினையொசித்துப்புள்வாய்பிளந்த
மணிவண்ணற்கென்னைவகுத்திடென்று *
பொருப்பன்னமாடம்பொலிந்துதோன்றும்
புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை *
விருப்புடையின்தமிழ்மாலைவல்லார்
விண்ணவர்கோனடிநண்ணுவரே. (கo)

தை வெள்ளை மத்தச் சுவர் வானுருக்காய் மாசுதொழுது கருப்புநாமம்.
ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## உ-வது, நாமமாயிரம்.



சிறுமியர்மாயனைத்தஞ்சிற்றில்சிதையேலெனல்.

கலிவிருத்தம்.

**யமுனகல்யாணிராகம்-திரிபுடைதாளம்.**

⁂ நாமமாயிரமேத்தநின்ற நாராயணாநரனே * உன்னை
மாமிதன்மகனாகப்பெற்றால் எமக்குவாதைதவிருமே *
காமன்போதருகாலமென்று பங்குனிநாள்கடைபாரித்தோம் *
தீமைசெய்யும்சிரீதரா எங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (க)

இன்றுமுற்றும்முதுகுநோவ இருந்திழைத்தவிச்சிற்றிலை *
நன்றும்கண்ணுறநோக்கி நாங்களுமார்வந்தன்னைத்தணிகிடாய் *
அன்றுபாலகனாகி யாலிலைமேல்துயின்றவெம்மாதியாய் *
என்றுமுன்றனக்கெங்கள்மே லிரக்கமெழாததெம்பாவமே. (௨)

குண்டுநீருறைகோளரீ மதயானைகோள்விடுத்தாய் ! * உன்னைக்
கண்டுமாலுறுவோங்களைக் கடைக்கண்களாலிட்டுவாதியேல் *
வண்டல்நுண்மணல்தெள்ளியாம் வளைக்கைகளால்சிரம்பப்பட்டோம்*
தெண்டிரைக்கடற்பள்ளியா யெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௩)

பெய்யுமாமுகில்போல்வண்ணா வுன்றன்பேச்சும்செய்கையும்*எங்களை
மையலேற்றிமயக்க வுன்முகம்மாயமந்திரந்தான்கொலோ *
நொய்யர்பிள்ளைகளென்பதற் குன்னைநோவநாங்களுரைக்கிலோம் *
செய்யதாமரைக்கண்ணினா யெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௪)

வெள்ளைநுண்மணல்கொண்டு சிற்றில்விசித்திரப்பட * வீதிவாய்த்
தெள்ளிநாங்களிழைத்தகோல மழித்தியாகிலும், உன்றன்மேல் *
உள்ளமோடியுருகலல்லா லுரோடமொன்றுமிலோங்கண்டாய் *
கள்ளமாதவா ! கேசவா ! உன்முகத்தனகண்களல்லவே. (௫)

முற்றிலாதபிள்ளைகளோம் முலைபோந்திலாதோமை * நாடொறும்
சிற்றில்மேலிட்டுக்கொண்டு நீசிறிதுண்டுதிண்ணனநாமது
கற்றிலோம் * கடலையடைத்தரக்கர்குலங்களை முற்றவும்
செற்று - * இலங்கையைப்பூசலாக்கியசேவகா எம்மைவாதியேல்.(௬)

பேதநன்கறிவார்களோ டிவைபேசினால்பெரிதின்சுவை *
யாதுமொன்றறியாதபிள்ளைகளோமை நீநலிந்தென்பயன் ? *
ஓதமாகடல்வண்ணா வுன்மணவாட்டிமாரொடுசூழறும் *
சேதுபந்தம்திருத்தினா யெங்கள்சிற்றில்வந்துசிதையேலே. (௭)

வட்டவாய்ச்சிறுதூதையோடு சிறுசுளகும்மணலுங்கொண்டு - *
இட்டமாவிளையாடுவோங்களைச் சிற்றிலீடழித்தென்பயன் ? *
தொட்டுதைத்துநலியேல்கண்டாய் சுடர்ச்சக்கரம்கையிலேந்தினாய் *
கட்டியும்கைத்தா லின்னாமையறிதியேகடல்வண்ணனே. (௮)

முற்றத்தூடுபுகுந்து நின்முகங்காட்டிப்புன்முறுவல்செய்து *
சிற்றிலோடெங்கள்சிந்தையும் சிதைக்கக்கடவையோகோவிந்தா *
முற்றமண்ணிடம்தாவிவிண்ணுறநீண்டளந்துகொண்டாய் * எம்மைப்
பற்றிமெய்ப்பிணக்கிட்டக்கா லிந்தப்பக்கம்நின்றவரென்சொல்லார். ()

⁂ சீதைவாயமுதமுண்டா யெங்கள்சிற்றில்நீசிதையேலென்று *
வீதிவாய்விளையாடு மாயர்சிறுமியர்மழலைச்சொல்லை *
வேதவாய்த்தொழிலார்கள்வாழ் வில்லிபுத்தூர்மன்விட்டுசித்தன்றன்*
கோதைவாய்த்தமிழ்வல்லவர் குறைவின்றிவைகுந்தம்சேருவரே.(௧௦)

நாம மின்று குண்டு பெய் வெள்ளை முற்றில் பேதவட்ட முற்றச் சீதைகோழி.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## ங-வது, கோழி.



கன்னியரோடு கண்ணன்விளையாடல்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**செஞ்சுருட்டிராகம்-அடதாளம்.**

⁂ கோழியழைப்பதன்முன்னம் குடைந்துநீராடுவான்போந்தோம் *
ஆழியன்செல்வனெழுந்தா னரவணைமேல்பள்ளிகொண்டாய் *
ஏழைமையாற்றவும்பட்டோ மினியென்றும்பொய்கைக்குவாரோம் *
தோழியும்நானுந்தொழுதோம் துகிலைப்பணித்தருளாயே. (க)

இதுவென்புகுந்ததிங்கந்தோ ? இப்பொய்கைக்கெவ்வாறுவந்தாய் ? *
மதுவின்துழாய்முடிமாலே ! மாயனே ! எங்களமுதே ! *
விதியின்மையாலதுமாட்டோம் வித்தகப்பிள்ளாய் ! விரையேல் *
குதிகொண்டரவில்நடித்தாய் குருந்திடைக்கூறைபணியாய். (உ)

எல்லேயீதென்னவிளமை † யெம்மனைமார்காணிலொட்டார் *
பொல்லாங்கீதென்றுகருதாய் பூங்குருந்தேறியிருத்தி *
வில்லாலிலங்கைபழித்தாய் நீவேண்டியதெல்லாந்தருவோம் *
பல்லாருங்காணுமேபோவோம் பட்டைப்பணித்தருளாயே. (ங)

பரக்கவிழித்தெங்கும்நோக்கிப் பலர்குடைந்தாடும்சுனையில் *
அரக்கநில்லாக்கண்ணநீர்க ளலமருகின்றவாபாராய் *
இரக்கமேலொன்றுமிலாதா யிலங்கையழித்தபிரானே *
குரக்கரசாவதறிந்தோம் குருந்திடைக்கூறைபணியாய். (ச)

காலைக்கதுவிடுகின்ற கயலொடுவாளைவிரவி *
வேலைப்பிடித்தென்னைமார்க ‡ ளோட்டிலென்னவிளையாட்டோ *
கோலச்சிற்றாடைபலவுங்கொண்டு நீயேறியிராதே *
கோலங்கரியபிரானே குருந்திடைக்கூறைபணியாய். (ரு)

தடத்தவிழ்தாமரைப்பொய்கைத் தாள்களெங்காலைக்கதுவ *
விடத்தேளெறிந்தாலேபோல வேதனையாற்றவும்பட்டோம் *
குடத்தையெடுத்தேறவிட்டுக் கூத்தாடவல்லவெங்கோவே *
படிற்றையெல்லாந்தவிர்ந் தெங்கள்பட்டைப்பணித்தருளாயே. (சு)

நீரிலேநின்றயர்க்கின்றோம் நீதியல்லாதனசெய்தாய் *
ஊரகம்சாலவும்சேய்த்தா லூழியெல்லாமுணர்வானே ! *
ஆர்வமுனக்கேயுடையோ மம்மனைமார்காணிலொட்டார் *
போரவிடாயெங்கள்பட்டைப் பூங்குருந்தேறியிராதே. (எ)

மாமிமார்மக்களேயல்லோம் மற்றுமிங்கெல்லாரும்போந்தார் *
தூமலர்க்கண்கள்வளரத் தொல்லையிராத்துயில்வானே *
சேமமேலன்றிதுசாலச் சிக்கெனநாமிதுசொன்னோம் *
கோமளவாயர்கொழுந்தே குருந்திடை * கூறைபணியாய். (அ)

† எம் அன்னைமார் - எங்கள் தாய்மார். ‡ என் ஐம்மார் - எங்கள் தமயன்மார்.

கஞ்சன்வலைவைத்தவன்று காரிருளெல்லில்பிழைத்து *
நெஞ்சுதுக்கம்செய்யப்போந்தாய் நின்றவிக்கன்னியரோமை *
அஞ்சவுரப்பாளசோதை ஆணாட்டிட்டிருக்கும் *
வஞ்சகப்பேய்ச்சிபாலுண்ட மகிமையிலீகூறைதாராய். (கூ)

⁂ கன்னியரோடெங்கள்நம்பி கரியபிரான்விளையாட்டை *
பொன்னியல்மாடங்கள்சூழ்ந்த புதுவையர்கோன்பட்டன்கோதை *
இன்னிசையால்சொன்னமாலை யீரைந்தும்வல்லவர்தாம்போய் *
மன்னியமாதவனோடு வைகுந்தம்புக்கிருப்பாரே. (கO)

கோழியிதுஎல்லே பாக்கக்காலைதடத்துநீர் மாமிகஞ்சன்கன்னி தெள்ளியார்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## ச-வது, தெள்ளியார்பலர்.



கூடல் குறிப்பு.

வஞ்சிவிருத்தம்.

கேதாரராகம்-அடதாளம்.

⁂ தெள்ளியார் பலர்கைதொழும்தேவனார் *
வள்ளல்மாலிருஞ்சோலைமணாளனார் *
பள்ளிகொள்ளுமிடத் தடிகொட்டிட *
கொள்ளுமாகில்நீ கூடிடுகூடலே. (க)

⁂ காட்டில்வேங்கடம் கண்ணபுரநகர் *
வாட்டமின்றி மகிழ்ந்துறைவாமநன் *
ஓட்டராவந் தென்கைப்பற்றி * தன்னொடும்
கூட்டுமாகில்நீ கூடிடுகூடலே. (உ)

பூமகன்புகழ்வானவர் போற்றுதற்
காமகன் * அணிவாணுதல் தேவகி
மாமகன் * மிகுசீர் வசுதேவர்தம் *
கோமகன்வரில் கூடிடுகூடலே. (ங)

ஆய்ச்சிமார்களு மாயருமஞ்சிட *
பூத்தநீள் கடம்பேறிப் புகப்பாய்ந்து *
வாய்த்தகாளியன்மேல் நடமாடிய *
கூத்தனார்வரில் கூடிடுகூடலே. (ச)

மாடமாளிகைசூழ் மதுரைப்பதி
நாடி * நந்தெருவின் நடுவேவந்திட்டு - *
ஓடைமா மதயானையுதைத்தவன் *
கூடுமாகில்நீ கூடிடுகூடலே. (ரு)

அற்றவன் மருதமுறியநடை
கற்றவன் * கஞ்சனை வஞ்சனையில்
செற்றவன் திகழும்மதுரைப்பதிக் *
கொற்றவன்வரில் கூடிடுகூடலே. (சு)

அன்றின்னாதனசெய் சிசுபாலனும் *
நின்றநீள் மருதுமெருதும்புள்ளும் *
வென்றிவேல் விறற்கஞ்சனும்வீழ * முன்
கொன்றவன்வரில் கூடிடுகூடலே. (எ)

ஆவலன்புடையார்தம் மனத்தன்றி
மேவலன் * விரைசூழ் துவராபதிக்
காவலன் * கன்றுமேய்த்து விளையாடும் *
கோவலன்வரில் கூடிடுகூடலே. (அ)

கொண்டகோலக் குறளுருவாய்ச்சென்று *
பண்டுமாவலிதன் பெருவேள்வியில் *
அண்டமும்நிலனு மடியொன்றினால் *
கொண்டவன்வரில் கூடிடுகூடலே. (கூ)

பழகுநான்மறையின் பொருளாய் * மத
மொழுகுவாரண முய்யவளித்த * எம்
மழகனு ரணியாச்சியர்சிந்தையுள் *
குழகனூர்வரில் கூடிடுகூடலே. (கo)

✥ ஊடல்கூட லுணர்தல்புணர்தலை *
நீடுநின்ற நிறைபுகழாய்ச்சியர் *
கூடலைக் குழற்கோதைமுன்கூறிய *
பாடல்பத்தும்வல்லார்க் கில்லைபாவமே. (கக)

தெள்ளி காட்டில் பூமக ளுய்ச்சி மாட மற்றன்று ஆவல் கொண்ட பழகு ஊடல் மன்னு.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## ரு-வது, மன்னுபெரும்புகழ்.



### குயிற்பத்து.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**ஆநந்தபைரவிராகம்-அதிதாளம்.**

✥✥மன்னுபெரும்புகழ்மாதவன் மாமணிவண்ணன்மணிமுடி†மைந்தன்
தன்னை * உகந்ததுகாரணமாக என்சங்கிழக்கும்வழக்குண்டே *
புன்னைகுருக்கத்திநாழல்செருந்திப் பொதும்பினில்வாழும்குயிலே *
பன்னியெப்போதுமிருந்துவிரைந் தென்பவளவாயன்வரக்கூவாய். ()

† மைந்தன் வலியுடையவன் : மைந்து - வலி.

வெள்ளைவிளிசங்கிடங்கையிற்கொண்ட விமலனெனக்குருக்காட்டான் *
உள்ளம்புகுந்தென்னைநைவித்து நாளுமுயிர்ப்பெய்துகூத்தாட்டுக்காணும் *
கள்ளவிழ்செண்பகப்பூமலர்கோதிக் களித்திசைபாடும்குயிலே *
மெள்ளவிருந்துமிழற்றிமிழற்றா தென்வேங்கடவன்வரக்கூவாய். (௨)

மாதலிதேர்முன்புகோல்கொள்ள மாயனிராவணன்மேல் * சரமாரி
தாய்தலையற்றற்றுவீழத் தொடுத்ததலைவன்வரவெங்குங்காணேன் *
போதலர்காவில்புதுமணம்நாறப் பொறிவண்டின்காமரங்கேட்டு * உம்
காதலியோடுடன்வாழ்குயிலே யென்கருமாணிக்கம்வரக்கூவாய். (௩)

என்புருகியினவேல்நெடுங்கண்க ளிமைபொருந்தாபலநாளும் *
துன்பக்கடல்புக்குவைகுந்தனென்பதோர் தோணிபெறாதுழல்கின்றேன் *
அன்புடையாரைப்பிரிவுறுநோயது நீயுமறிதிகுயிலே *
பொன்புரைமேனிக்கருளக்கொடியுடைப் புண்ணியனைவரக்கூவாய். (௪)

மென்னடையன்னம்பரந்துவிளையாடும் வில்லிபுத்தூருறைவான்றன் *
பொன்னடிகாண்பதோராசையினாலென்பொருகயற்கண்ணிணைதுஞ்சா *
இன்னடிசிலொடுபாலமுதூட்டி யெடுத்தவென்கோலக்கிளியை *
உன்னொடுதோழமைக்கொள்ளுவன்குயிலே உலகளந்தான்வரக்கூவாய். (௫)

எத்திசையுமமரர்பணிந்தேத்து மிருடீகேசன்வலிசெய்ய *
முத்தன்னவெண்முறுவல் செய்யவாயும்முலையுமழகழிந்தேன்நான் *
கொத்தலர்காவில்மணித்தடம் கண்படைகொள்ளுமிளங்குயிலே * என்
தத்துவனைவரக்கூகிற்றியாகில் தலையல்லால்கைம்மாறிலேனே. (௬)

பொங்கியபாற்கடல்பள்ளிகொள்வானைப் புணர்வதோராசையினால் * என்
கொங்கைகிளர்ந்துகுமைத்துக் குதுகலித்தாவியையாகுலஞ்செய்யும்
அங்குயிலே * உனக்கென்னமறைந்துறைவு ஆழியுஞ்சங்குமொண்தண்டும் *
தங்கியகையவனைவரக்கூவில்நீ சாலத்தருமம்பெறுதி. (௭)

சார்ங்கம்வளையவலிக்கும் தடக்கைச்சதுரன்பொருத்தமுடையன் *
நாங்களெம்மிலிருந்தொட்டிய † கச்சங்கம் நானுமவனுமறிதும் *
தேங்கனிமாம்பொழில்செந்தளிர்கோதும் சிறுகுயிலே * திருமாலை
ஆங்குவிரைந்தொல்லைக்கூகிற்றியாகி லவனைநான்செய்வனகாணே. (௮)

பைங்கிளிவண்ணன்சிரீதரனென்பதோர் பாசத்தகப்பட்டிருந்தேன் *
பொங்கொளிவண்டிரைக்கும் பொழில்வாழ்குயிலேகுறிக்கொண்டிதுநீகேள் *
சங்கொடுசக்கரத்தான்வரக்கூவுதல் பொன்வளைகொண்டுதருதல் *
இங்குள்ளகாவினில்வாழக்கருதி லிரண்டத்தொன்றேல்திண்ணம்வேண்டும்.

அன்றுலகமளந்தானையுகந் தடிமைக்கணவன்வலிசெய்ய *
தென்றலுந்திங்களுமூடறுத் தென்னைநலியும்முறைமையறியேன் *
என்றுமிக்காவிலிருந்திருந் தென்னைத் ‡ ததர்த்தாதேநீயுங்குயிலே *
இன்றுநாராயணனைவரக்கூவாயே லிங்குற்றுநின்றுந்துரப்பன். (௧௦)

---

† கச்சங்கம் - வ்யவஸ்தை; ப்ரதிஜ்ஞை. ‡ ததர்த்தாதே - நோவுபடுத்தாதே.

✣✣விண்ணுறநீண்டடிதாவியமைந்தனை வேற்கண்மடந்தைவிரும்பி *
கண்ணுறவென்கடல்வண்ணனைக் கூவுகருங்குயிலேயென்றமாற்றம் *
பண்ணுறுநான்மறையோர்புதுவைமன்னன்பட்டர்பிரான்கோதைசொன்ன*
நண்ணுறுவாசகமாலைவல்லார் நமோநாராயணாயவென்பாரே. (கக)

மன்னு வெள்ளை மாதலி என்பு மென்னடை எத்திசை பொங்கிய சார்ங்கம் பைங்கிளி அன்று விண் வாரணம்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## சு-வது, வாரணமாயிரம்.



மாயவன்றன்னை மணஞ்செயக்கண்ட தூயநற்
கனவைத் தோழிக்குரைத்தல்.
கலிவிருத்தம்.

**கலியாணிராகம்-ரூபகதாளம்.**

✣✣ வாரணமாயிரம் சூழவலம்செய்து *
நாரணனம்பி நடக்கின்றானென்றெதிர் *
பூரணபொற்குடம் வைத்துப்புறமெங்கும் *
தோரணம்நாட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (க)

நாளைவதுவை மணமென்றுநாளிட்டு *
பாளைகமுகு பரிசுடைப்பந்தற்கீழ் *
கோளரிமாதவன் கோவிந்தனென்பானோர் *
காளைபுகுதக் கனாக்கண்டேன்தோழீநான். (உ)

இந்திரனுள்ளிட்ட தேவர்குழாமெல்லாம் *
வந்திருந்தென்னை மகள்பேசிமந்திரத்து *
மந்திரக்கோடியுடுத்தி, மணமாலை *
† அந்தரிசூட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (ங)

நால்திசைத்தீர்த்தங்கொணர்ந்து நனிநல்கி *
பார்ப்பனச்சிட்டர்கள் ‡ பல்லாரெடுத்தேத்தி *
பூப்புனைகண்ணிப் புனிதனோடென்றன்னை *
காப்புநாண்கட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (ச)

கதிரொளிதீபம் கலசமுடனேந்தி *
சதிரிளமங்கையர்தாம் வந்தெதிர்கொள்ள *
மதுரையார்மன்ன னடிநிலைதொட்டு - * எங்கும்
அதிரப்புகுதக் கனாக்கண்டேன்தோழீநான். (ரு)

மத்தளம்கொட்ட வரிசங்கம்நின்றூத *
முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்தபந்தற்கீழ் *
மைத்துனன்நம்பி மதுசூதன்வந்து - * என்னைக்
கைத்தலம்பற்றக் கனாக்கண்டேன்தோழீநான். (சு)

† அந்தரி-துர்க்கை. ‡ "பல்லாண்டெடுத்தேத்தி" என்று சில ஸ்ரீகோசங்கள்.

வாய்நல்லார் நல்லமறையோதிமந்திரத்தால் *
பாசிலைநாணல்படுத்துப் பரிதிவைத்து *
காய்சினமாகளிறன்னா னென்கைப்பற்றி *
தீவலம்செய்யக் கனாக்கண்டேன்தோழீநான். (எ)

இம்மைக்குமேழேழ்பிறவிக்கும் பற்றாவான் *
நம்மையுடையவன் நாராயணன்நம்பி *
செம்மையுடையதிருக்கையால் தாள்பற்றி *
அம்மிமிதிக்கக் கனாக்கண்டேன்தோழீநான். (அ)

வரிசிலைவாள்முகத் தென்னைமார்தாம்வந்திட்டு *
எரிமுகம்பாரித் தென்னைமுன்னேநிறுத்தி *
அரிமுகனச்சுதன் கைம்மேலென்கைவைத்து *
பொரிமுகந்தட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (கூ)

குங்குமமப்பிக் குளிர்சாந்தம்மட்டித்து *
மங்கலவீதி வலம்செய்துமணநீர் *
அங்கவனோடுமுடன்சென் றங்கானைமேல் *
மஞ்சனமாட்டக் கனாக்கண்டேன்தோழீநான். (க0)

⁂ ஆயனுக்காகத் தான்கண்டகனாவினை *
வேயர்புகழ் வில்லிபுத்தூர்க்கோன்கோதைசொல் *
தூயதமிழ்மாலை யீரைந்தும்வல்லவர் *
வாயுநன்மக்களைப்பெற்று மகிழ்வரே. (கக)

வாரணம் நாளை இந்திரன் நாற்றிசை கதிர் மத்தளம் வாயிம்மை வரிசிலை குங்குமம் ஆயன் கருப்பூரம்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## எ-வது, கருப்பூரம்.



பாஞ்சசன்னியத்தைப்பதுமநாபனோடுஞ்சுற்றமாக்கல்.

கலிவிருத்தம்.

வராளிராகம்-ரூபகதாளம்.

⁂ கருப்பூரம்நாறுமோ கமலப்பூநாறுமோ *
திருப்பவளச்செவ்வாய்தான் தித்தித்திருக்குமோ *
மருப்பொசித்தமாதவன்றன் வாய்ச்சுவையும்நாற்றமும் *
விருப்புற்றுக்கேட்கின்றேன் சொல்லாழிவெண்சங்கே. (க)

கடலில்பிறந்துகருதாது * பஞ்சசன
னுடலில்வளர்ந்துபோ யூழியான்கைத்தலத் *
திடரில், குடியேறித் தீயவசுரர் *
நடலைப்படமுழங்கும் தோற்றத்தாய்நற்சங்கே. (உ)

தடவரையின்மீதே சரற்காலசந்திரன் *
இடையுவாவில்வந் தெழுந்தாலேபோல * நீயும்
வடமதுரையார்மன்னன் வாசுதேவன்கையில் *
குடியேறிவீற்றிருந்தாய் கோலப்பெருஞ்சங்கே. (ங)

சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில் *
அந்தரமொன்றின்றி யேறியவன்செவியில் *
மந்திரம்கொள்வாயேபோலும் வலம்புரியே *
இந்திரனுமுன்னோடு செல்வத்துக்கேலானே. (ச)

உன்னோடுடனே யொருகடலில்வாழ்வாரை *
இன்னாரினையாரென் றெண்ணுவாரில்லைகாண் *
மன்னுகின்ற மதுசூதன்வாயமுதம் *
பன்னாளுமுண்கின்றாய் பாஞ்சசன்னியமே. (ரு)

போய்த்தீர்த்தமாடாதே நின்றபுணர்மருதம் *
சாய்த்தீர்த்தான்கைத்தலத்தே யேறிக்குடிகொண்டு *
சேய்த்தீர்த்தமாய்நின்ற செங்கண்மால்தன்னுடைய *
வாய்த்தீர்த்தம்பாய்ந்தாடவல்லாய் வலம்புரியே. (சு)

செங்கமலநாண்மலர்மேல் தேனுகருமன்னம்போல் *
செங்கட்கருமேனி வாசுதேவனுடைய *
அங்கைத்தலமேறி யன்னவசஞ்செய்யும் *
சங்கரையா ! உன்செல்வம் சாலவழகியதே. (எ)

உண்பதுசொல்லி லுலகளந்தான்வாயமுதம் *
கண்படைகொள்ளில் கடல்வண்ணன்கைத்தலத்தே *
பெண்படையாருன்மேல் பெரும்பூசல்சாற்றுகின்றார் *
பண்பலசெய்கின்றாய் பாஞ்சசன்னியமே. (அ)

பதினாறுமாயிரவர் தேவிமார்பார்த்திருப்ப *
மதுவாயில்கொண்டாப்போல் மாதவன்றன்வாயமுதம் *
பொதுவாகவுண்பதனைப் புக்குநீயுண்டக்கால் *
சிதையாரோவுன்னோடு செல்வப்பெருஞ்சங்கே. (கூ)

❦ பாஞ்சசன்னியத்தைப் பற்பநாபனோடும் *
வாய்ந்தபெருஞ்சுற்ற மாக்கியவண்புதுவை *
ஏய்ந்தபுகழ்ப்பட்டர்பிரான் கோதைதமிழீரைந்தும் *
ஆய்ந்தேத்தவல்லா ரவருமணுக்கரே. (கo)

கருப்பூரம் கடல் தடவரை சந்திர னுன்னோடு போய் செங்கமல முண்பது பதினாறு பாஞ்ச விண்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## அ-வது, விண்ணீலமேலாப்பு.

மேகவிடு தூது.

கலிவிருத்தம்.

துசாவந்திராகம் - ஆதிதாளம்.

‡‡ விண்ணீலமேலாப்பு விரித்தாப்போல்மேகங்காள் *
தெண்ணீர்பாய்வேங்கடத் தென்திருமாலும்போந்தானே *
கண்ணீர்கள்முலைக்குவட்டில் துளிசோரச்சோர்வேனை *
பெண்ணீர்மையீடழிக்கு மிதுதமக்கோர்பெருமையே. (க)

மாமுத்தநிதிசொரியும் மாமுகில்காள் * வேங்கடத்துச்
சாமத்தின்நிறங்கொண்ட தாடாளன்வார்த்தையென்னே *
காமத்தீயுள்புகுந்து கதுவப்பட்டு, இடைக்கங்குல் *
ஏமத்தோர்தென்றலுக் கிங்கிலக்காய்நானிருப்பேனே. (உ)

ஒளிவண்ணம்வளைசிந்தை யுறக்கத்தோடிவையெல்லாம் *
எளிமையாலிட்டென்னை யீடழியப்போயினவால் *
குளிரருவிவேங்கடத் தென்கோவிந்தன்குணம்பாடி *
அளியத்தமேகங்கா ளாவிகாத்திருப்பேனே. (ங)

மின்னாகத்தெழுகின்ற மேகங்காள் * வேங்கடத்துத்
தன்னாகத்திருமங்கை தங்கியசீர்மார்வற்கு - *
என்னாகத்திளங்கொங்கை விரும்பித்தாம்நாடோறும் *
பொன்னாகம்புல்குதற் கென்புரிவுடைமைசெப்புமினே. (ச)

வான்கொண்டுகிளர்ந்தெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்துத்
தேன்கொண்டமலர்சிதறத் திரண்டேறிப்பொழிவீர்காள் *
ஊன்கொண்டவள்ளுகிரா லிரணியனையுடலிடந்தான் *
தான்கொண்டசரிவளைகள் தருமாகில்சாற்றுமினே. (ரு)

சலங்கொண்டுகிளர்ந்தெழுந்த தண்முகில்காள் * மாவலியை
நிலங்கொண்டான்வேங்கடத்தே நிரந்தேறிப்பொழிவீர்காள் *
† உலங்குண்டவிளங்கனிபோ லுள்மெலியப்புகுந்து - * என்னை
நலங்கொண்டநாரணற் கென்நடலைநோய்செப்புமினே. (சு)

சங்கமாகடல்கடைந்தான் தண்முகில்காள் * வேங்கடத்துச்
செங்கண்மால்சேவடிக்கீ ழடிவீழ்ச்சி ‡ விண்ணப்பம் *
கொங்கைமேல் குங்குமத்தின்குழம்பழியப்புகுந்து - * ஒருநாள்
தங்குமேலென்னாவி தங்குமென்றுரையீரே. (எ)

கார்காலத்தெழுகின்ற கார்முகில்காள் * வேங்கடத்துப்
போர்காலத்தெழுந்தருளிப் பொருதவனார்பேர்சொல்லி *
நீர்காலத்தெருக்கி லம்பழவிலைபோல்வீழ்வேனை *
வார்காலத்தொருநாள் தம்வாசகம்தந்தருளாரே. (அ)

---

† உலங்கு - பெருநுளம்பு: பெருங்கொசுகென்றபடி. ‡ அடிவீழ்ச்சி. அடியாட்டி: திருவடிகளிலேவிழுந்து என்றும்.

மதயானைபோலெழுந்த மாமுகில்காள் * வேங்கடத்தைப்
பதியாகவாழ்வீர்காள் பாம்பணையான்வார்த்தையென்னே *
கதியென்றும்தானவான் கருதாது - * ஓர்பெண்கொடியை
வதைசெய்தானென்னும்சொல் வையகத்தார்மதியாரே. (கூ)

⁂ நாகத்தினணையானை நன்னுதலாள்நயந்துரைசெய் *
மேகத்தைவேங்கடக்கோன் விடுதூதில்விண்ணப்பம் *
போகத்தில்வழுவாத புதுவையர்கோன்கோதைதமிழ் *
ஆகத்துவைத்துரைப்பாரவ ரடியாராகுவரே. (கo)

விண் மா ஒளி மின் வான் சலம் சங்கம் கார் மத நாகச் சிந்துரம்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## கூ-வது, சிந்துரச்செம்பொடி.



### திருமாலிருஞ்சோலையெம்பெருமானை வழிபடல்.

கலிவிருத்தம்.

**அபநுபராகம்-நுபகதாளம்.**

⁂சிந்துரச்செம்பொடிப்போல் திருமாலிருஞ்சோலையெங்கும் *
இந்திரகோபங்களே யெழுந்தும்பரந்திட்டனவால் *
மந்தரம்நாட்டியன்று மதுரக்கொழுஞ்சாறுகொண்ட *
சுந்தரத்தோளுடையான் சுழலையில்நின்றுய்துங்கொலோ. (க)

போர்க்களிறுபொரும் மாலிருஞ்சோலையம்பூம்புறவில் *
தார்க்கொடிமுல்லைகளும் தவளநகைகாட்டுகின்ற *
கார்க்கொள் † படாக்கள்நின்று கழறிச்சிரிக்கத்தரியேன் *
ஆர்க்கிடுகோதோழீ அவன்தார்செய்தபூசலையே. (உ)

கருவிளையொண்மலர்காள் ! காயாமலர்காள் ! * திருமா
லுருவொளிகாட்டுகின்றீ ரெனக்குய்வழக்கொன்றுரையீர் *
திருவிளையாடுதிண்டோள் திருமாலிருஞ்சோலைநம்பி *
வரிவளையிலபுகுந்து § வந்திபற்றும்வழக்குளதே. (ங)

பைம்பொழில்வாழ்குயில்காள் ! மயில்காள் ! ஒண்கருவிளைகாள் ! *
வம்பக்களங்கனிகாள் ! வண்ணப்பூவைநறுமலர்காள் ! *
ஐம்பெரும்பாதகர்காள் ! அணிமாலிருஞ்சோலைநின்ற *
எம்பெருமானுடையநிற முங்களுக்கென்செய்வதே. (ச)

துங்கமலர்ப்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
செங்கட்கருமுகிலின் திருவுருப்போல் * மலர்மேல்
தொங்கியவண்டினங்காள் ! தொகுபூஞ்சுனைகாள் ! * சுனையில்
தங்குசெந்தாமரைகா ளெனக்கோர்சரண்சாற்றுமினே. (ரு)

---

† படா - புஷ்பவிசேஷம். § வந்திபற்றுகை - பலாத்காரமாக அபஹரிக்கை.

⁂ நாறுநறும்பொழில் மாலிருஞ்சோலைநம்பிக்கு * நான்
நூறுதடாவில்வெண்ணெய் வாய்நேர்ந்துபராவிவைத்தேன் *
நூறுதடாநிறைந்த அக்காரவடிசில்சொன்னேன் *
ஏறுதிருவுடையா னின்றுவந்திவைகொள்ளுங்கொலோ. (சு)

இன்றுவந்தித்தனையு மமுதுசெய்திடப்பெறில் * நான்
ஒன்றுநூறாயிரமாகக்கொடுத்துப் பின்னுமாளும்செய்வன் *
தென்றல்மணங்கமழும் திருமாலிருஞ்சோலைதன்னுள்
நின்றபிரான் * அடியேன்மனத்தே வந்துநேர்படிலே. (எ)

காலையெழுந்திருந்து கரியகுருவிக்கணங்கள் *
மாலின்வரவுசொல்லி மருள்பாடுதல்மெய்ம்மைகொலோ *
சோலைமலைப்பெருமான் துவராபதியெம்பெருமான் *
ஆலினிலைப்பெருமா னவன்வார்த்தையுரைக்கின்றதே. (அ)

கோங்கலரும்பொழில் மாலிருஞ்சோலையில்கொன்றைகள்மேல் *
தூங்குபொன்மாலைகளோ டுடனாய்நின்றுதூங்குகின்றேன் *
பூங்கொள்திருமுகத்து மடுத்தூதியசங்கொலியும் *
சார்ங்கவில்நாணொலியும் தலைப்பெய்வதெஞ்ஞான்றுகொலோ. (கூ)

⁂ சந்தொடுகாரகிலும்சுமந்து தடங்கள்பொருது *
வந்திழியும்சிலம்பாறுடை மாலிருஞ்சோலைநின்ற
சுந்தரனை * சுரும்பார்குழல்கோதை தொகுத்துரைத்த *
செந்தமிழ்ப்பத்தும்வல்லார் திருமாலடிசேர்வர்களே. (க௦)

சிந்துரப் போர் கருவிளை பைம்பொழில் துங்க நாறு இன்று காலைகோங்கு சந்து கார்க்கோடல்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## க௦-வது, கார்க்கோடல்பூக்காள்.



மாற்செய்வகையொடுமாற்றமியம்பல்.

கலிவிருத்தம்.

**காம்போதிராகம்-திரிபுடைதாளம்.**

⁂ கார்க்கோடல்பூக்காள் கார்க்கடல்வண்ணனென்மேல் * உம்மைப்
போர்க்கோலம்செய்து போரவிடுத்தவனெங்குற்றான் ? *
ஆர்க்கோவினிநாம் பூசலிடுவது – * அணிதுழாய்த்
தார்க்கோடும்நெஞ்சந்தன்னைப் படைக்கவல்லேனந்தோ. ! (க)

மேல்தோன்றிப்பூக்காள் மேலுலகங்களின் மீதுபோய் *
மேல்தோன்றும்சோதி வேதமுதல்வர்வலங்கையில் *
மேல்தோன்றுமாழியின் வெஞ்சுடர்போலச்சுடாது – * எம்மை
மாற்றோலைப்பட்டவர் கூட்டத்து வைத்துக்கொள்கிற்றிரே. (உ)

கோவைமணாட்டி நீயுன்கொழுங்கனிகொண்டு - * எம்மை
ஆவிதொலைவியேல் வாயழகர்தம்மையஞ்சுதும் *
பாவியேன்தோன்றிப் பாம்பணையார்க்கும்தம்பாம்புபோல் *
நாவுமிரண்டுளவாய்த்து நாணிலியேனுக்கே. (௩)

முல்லைப்பிராட்டி நீயுன்முறுவல்கள்கொண்டு * எம்மை
அல்லல்விளைவியே லாழிநங்காயுன்னடைக்கலம் *
கொல்லையரக்கியைமூக்கரிந்திட்ட குமரனார்
சொல்லும்பொய்யானால் * நானும்பிறந்தமைபொய்யன்றே. (௪)

பாடும்குயில்காள்! ஈதென்னபாடல் * நல்வேங்கட
நாடர் நமக்கொருவாழ்வுதந்தால்வந்துபாடுமின் *
ஆடும்கருளக்கொடியுடையார் வந்தருள்செய்து *
கூடுவராயிடில் கூவிநும்பாட்டுக்கள்கேட்டுமே. (௫)

கணமாமயில்காள் கண்ணபிரான்திருக்கோலம்போன்று - *
அணிமாநடம்பயின்றாடுகின்றீர்க் கடிவீழ்கின்றேன் *
பணமாடரவணைப் பற்பலகாலமும்பள்ளிகொள் *
மணவாளர், நம்மைவைத்த பரிசிதுகாண்மினே. (௬)

நடமாட்டித் தோகைவிரிக்கின்றமாமயில்காள் * உம்மை
நடமாடங்காணப் பாவியேன்நானோர்முதலிலேன் *
குடமாடுகூத்தன் கோவிந்தன்கோமிறைசெய்து - * எம்மை
யுடைமாடுகொண்டா னுங்களுக்கினியொன்றுபோதுமே. (௭)

மழையேமழையே மண்புறம்பூசியுள்ளாய்நின்ற *
மெழுகூற்றினாற்போல், ஊற்றுநல்வேங்கடத்துள்நின்று - *
அழகப்பிரானார்தம்மை யென்னெஞ்சத்தகப்படத்
தழுவிநின்று - * என்னைத்ததர்த்திக்கொண் டூற்றவும்வல்லையே. (௮)

கடலேகடலே யுன்னைக்கடைந்துகலக்குறுத்து - *
உடலுள்புகுந்து நின்றூறலறுத்தவர்க்கு - * என்னையு
முடலுள்புகுந்து நின்றூறலறுக்கின்றமாயர்க்கு - * என்
நடலைகளெல்லாம் நாகணைக்கேசென்றுரைத்தியே. (௯)

⁂ நல்லவென்தோழி நாகணைமிசைநம்பரர் *
செல்வர்பெரியர் சிறுமானிடவர்நாம்செய்வதென் ? *
வில்லிபுதுவை விட்டுசித்தர்தங்கள்தேவரை *
வல்லபரிசுவருவிப்பரே லதுகாண்டுமே. (௧0)

கார் மேல் கோவை முல்லை பாடும் கண நடமழை கடலே நல்ல தாம்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.

---

## கக-வது, தாமுகக்கும்.

திருவரங்கத்துச்செல்வனைக்காமுறல்.

கலிவிருத்தம்.

சாவேரிராகம்-திரிபுடைதாளம்.

⁂ தாமுகக்கும்தம்கையில் சங்கமேபோலாவோ *
யாமுகக்குமென்கையில் சங்கமுமேந்திழையீர் *
தீமுகத்துநாகணைமேல் சேரும்திருவரங்கர் *
ஆமுகத்தைநோக்காரால் அம்மனேயம்மனே. (க)

எழிலுடையவம்மனைமீர் என்னரங்கத்தின்னமுதர் *
குழலழகர்வாயழகர் கண்ணழகர் * கொப்பூழில்
எழுகமலப்பூவழக ரெம்மானார் * என்னுடைய
கழல்வளையைத் தாமும்கழல்வளையேயாக்கினரே. (உ)

⁂ பொங்கோதம்சூழ்ந்த புவனியும்விண்ணுலகும் *
அங்காதுஞ்சோராமே யாள்கின்றவெம்பெருமான் *
செங்கோலுடைய திருவரங்கச்செல்வனார் *
எங்கோல்வளையா லிடர்தீர்வராகாதே. (ங)

மச்சணிமாட மதிளரங்கர்வாமனனார் *
பச்சைப்பசுந்தேவர் தாம்பண்டுநீரேற்ற
பிச்சைக்குறையாகி யென்னுடையபெய்வளைமேல் *
இச்சையுடையரே லித்தெருவேபோதாரே. (ச)

பொல்லாக்குறளுருவாய்ப் பொற்கையில்நீரேற்று - *
எல்லாவுலகு மளந்துகொண்டவெம்பெருமான் *
நல்லார்கள்வாழும் நளிரரங்கநாகணையான் *
இல்லாதோம்கைப்பொருளு மெய்துவானொத்துளனே. (ரு)

கைப்பொருள்கள்முன்னமே கைக்கொண்டார் * காவிரிநீர்
செய்ப்புரளவோடும் திருவரங்கச்செல்வனார் *
எப்பொருட்கும்நின் றார்க்குமெய்தாது * நான்மறையின்
சொற்பொருளாய்நின்றா ரென்மெய்ப்பொருளும்கொண்டாரே. (சு)

உண்ணாதுறங்கா தொலிகடலையூடறுத்து *
பெண்ணாக்கையாப்புண்டு தாமுற்றபேதெல்லாம் *
திண்ணார்மதிள்சூழ் திருவரங்கச்செல்வனார் *
எண்ணாதேதம்முடைய நன்மைகளேயெண்ணுவரோ. (எ)

⁂ பாசிதூர்த்துக்கிடந்த பார்மகட்கு * பண்டொருநாள்
மாசுடம்பில்நீர்வாரா மானமிலாப்பன்றியாம் *
தேசுடையதேவர் திருவரங்கச்செல்வனார் *
பேசியிருப்பனகள் பேர்க்கவும்பேராவே. (அ)

கண்ணாலங்கோடித்துக் கன்னிதன்னைக்கைப்பிடிப்பான் *
திண்ணார்ந்திருந்த சிசுபாலன்தேசழிந்து *
அண்ணாந்திருக்கவே யாங்கவளைக்கைப்பிடித்த *
பெண்ணாளன்பேணுமூர் பேருமரங்கமே. (கூ)

✲ செம்மையுடைய திருவரங்கர்தாம்பணித்த *
மெய்ம்மைப்பெருவார்த்தை விட்டுசித்தர்கேட்டிருப்பர் *
தம்மையுகப்பாரைத் தாமுகப்பரென்னும்சொல் *
தம்மிடையேபொய்யானால் சாதிப்பாராரினியே ?. (க0)

தா மெழில் பொங்கு மச்சு பொல்லா கை யுண்ணப் பாசி கண்ணாலம் செம்மை மற்று.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## கஉ-வது, மற்றிருந்தீர்.



சீதரனிருந்துழிச்செலுத்துவீர்தனையெனக்
கோதைதமர்க்குக்கூறியதுணிபு.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**நாதநாமக்கிரியைராகம்-ஆதிதாளம்.**

✲ மற்றிருந்தீர்கட்கறியலாகா மாதவனென்பதோரன்புதன்னை *
உற்றிருந்தேனுக்குரைப்பதெல்லா மூமையரோடுசெவிடர்வார்த்தை *
பெற்றிருந்தாளையொழியவேபோய்ப்பேர்த்தொருதாயில்வளர்ந்தநம்பி
மற்பொருந்தாமற்களமடைந்தமதுரைப்புரத்தென்னையுய்த்திடுமின். ()

நாணியினியோர்கருமமில்லை நாலயலாருமறிந்தொழிந்தார் *
பாணியாதென்னைமருந்துசெய்து பண்டுபண்டாக்கவுறுதிராகில் *
மாணியுருவாயுலகளந்த மாயனைக்காணில்தலைமறியும் *
ஆணையால்நீரென்னைக்காக்கவேண்டிலாய்ப் பாடிக்கேயென்னையுய்த்திடுமின்.

தந்தையுந்தாயுமுற்றாரும்நிற்கத் தனிவழிபோயினாளென்னும்சொல்லு *
வந்தபின்னைப்பழிகாப்பரிது மாயவன்வந்துருக்காட்டுகின்றான் *
† கொந்தளமாக்கிப் ‡ பரக்கழித்துக்குறும்புசெய்வானோர்மகனைப்பெற்ற *
நந்தகோபாலன்கடைத்தலைக்கேநள்ளிருட்கணென்னையுய்த்திடுமின். (ங)

அங்கைத்தலத்திடையாழிகொண்டானவன்முகத்தன்றிவிழியேனென்று *
செங்கச்சுக்கொண்டுகண்ணாடையார்த்துச் சிறுமானிடவரைக்காணில்நாணும்
கொங்கைத்தலமிவைநோக்கிக்காணீர்கோவிந்தனுக்கல்லால்வாயில்போகா *
இங்குத்தைவாழ்வையொழியவேபோய்§யமுனைக்கரையென்னையுய்த்திடுமின்

ஆர்க்குமென்னோயிதறியலாகா தம்மனைமீர்துழதிப்படாதே *
கார்க்கடல்வண்ணனென்பானொருவன் கைகண்டயோகம்தடவத்தீரும் *
நீர்க்கரைநின்றகடம்பையேறிக் காளியனுச்சியில்நட்டம்பாய்ந்து *
போர்க்களமாகநிருத்தஞ்செய்த பொய்கைக்கரைக்கென்னையுய்த்திடுமின். (ரு)

---

† கொந்தளம் - சிலுகிடுகை. ‡ பரக்கழிக்கை - பழிவிளைக்கை. § "யமுனைக்கரைக்கு" என்றும்பாடம்.

கார்த்தண்முகிலும்கருவிளையும் காயாமலரும்கமலப்பூவும் *
ஈர்த்திடுகின்றனவென்னைவந்திட் டிருடீகேசன்பக்கல்போகேயென்று *
வேர்த்துப்பசித்துவயிறசைந்து வேண்டடிசிலுண்ணும்போது * ஈதென்று
பார்த்திருந்துநெடுநோக்குக்கொள்ளும் † பத்தவிலோசநத்துய்த்திடுமின்.(சு)

வண்ணம்திரிவும்மனங்குழைவும்மானமிலாமையும்வாய்வெளுப்பும் *
உண்ணலுறுமையுமுள்மெலிவுமோதநீர்வண்ணனென்பானொருவன் *
தண்ணந்துழாயென்னும்மாலைகொண்டு சூட்டத்தணியும்,பிலம்பன்றன்னைப்*
பண்ணழியப்பலதேவன்வென்ற ‡ பாண்டிவடத்தென்னையுய்த்திடுமின். (எ)

கற்றினம்மேய்க்கிலும்மேய்க்கப்பெற்றான் காடுவாழ்சாதியுமாகப்பெற்றான் *
பற்றியுரலிடையாப்புமுண்டான் பாவிகாளுங்களுக்கேச்சுக்கொலோ *
கற்றனபேசிவசவுணாதே காலிகளுய்யமழைதடுத்து *
கொற்றக்குடையாகவேந்திநின்ற கோவர்த்தநத்தென்னையுய்த்திடுமின். (அ)

கூட்டிலிருந்துகிளியெப்போதும் கோவிந்தா! கோவிந்தா! என்றழைக்கும்*
ஊட்டக்கொடாதுசெறுப்பனாகி லுலகளந்தானென்றுயரக்கூவும் *
நாட்டில்தலைப்பழியெய்தி யுங்கள்நன்மையிழந்துதலையிடாதே *
சூட்டுயர்மாடங்கள்சூழ்ந்துதோன்றும் துவராபதிக்கென்னையுய்த்திடுமின். ()

⁂மன்னுமதுரைதுடக்கமாக வண்துவராவதிதன்னளவும் *, தன்னைத்தமருய்த்துப்பெய்யவேண்டித்தாழ்குழலாள்துணிந்ததுணிவை *, பொன்னியல்மாடம்பொலிந்துதோன்றும் புதுவையர்கோன்விட்டுசித்தன்கோதை, இன்னிசையால்சொன்னசெஞ்சொல்மாலை யேத்தவல்லார்க்கிடம்வைகுந்தமே. (க0)

மற்று நாணி தந்தை அங்கை ஆர்க்கும் கார்த் தண் வண்ணம் கற்றினம் கூட்டில் மன்னு கண்ணன்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



## கந-வது, கண்ணனென்னும்.



அச்சுதனணிபொருட்கொண்டவலந்தணிமினெனல்.

கலிவிருத்தம்.

பைரவிராகம்-ஆதிதாளம்.

⁂ கண்ணனென்னும்கருந்தெய்வம் காட்சிப்பழுகிக்கிடப்பேனை *
புண்ணில்புளிப்பெய்தாப்போல புறநின்றழகுபேசாதே *
பெண்ணின்வருத்தமறியாத பெருமானரையில்பீதக
வண்ணவாடைகொண்டு - * என்னைவாட்டம்தணியவீசீரே. (க)

பாலாலிலையில்துயில்கொண்ட பரமன்வலைப்பட்டிருந்தேனை *
வேலால்துன்னம்பெய்தாப்போல் வேண்டிற்றெல்லாம்பேசாதே *
கோலால்நிரைமேய்த்தாயனாய்க் குடந்தைக்கிடந்தகுடமாடி *
நீலார்தண்ணந்துழாய்கொண்டென்னெறிமென்குழல்மேல்சூட்டீரே.()

† பத்தவிலோசநம்=பத்தம் - சோறு, விலோசநம் - பார்வை: ஶ்லேஷையால், சோறுபார்த்திருக்குமிடம். ‡ பாண்டிவடம்=வடம் - ஆலாய், பாண்டீரவடம் என்று பேரையுடைத்தான கன்றுகள்மேய்க்கிற ப்ரதேசம்.

கஞ்சைக்காய்ந்தகருவில்லி கடைக்கணென்னும்சிறைக்கோலால் *
நெஞ்சூடுருவவேவுண்டு நிலையும்தளர்ந்துநைவேனை *
அஞ்சேலென்னானவனொருவ னவன்மார்வணிந்தவநமாலை *
வஞ்சியாதேதருமாகில் மார்வில்கொணர்ந்துபுரட்டீரே. (௩)

ஆரேயுலகத்தாற்றுவார் ? ஆயர்பாடிகவர்ந்துண்ணும் *
காரேறுழக்கவுழக்குண்டு தளர்ந்தும்முறிந்தும்கிடப்பேனை *
ஆராவமுதமனையான்ற னமுதவாயிலூறிய *
நீர்தான்கொணர்ந்துபுலராமே பருக்கியிளைப்பைநீக்கீரே. (௪)

அழிலும்தொழிலுமுருக்காட்டா னஞ்சேலென்னானவனொருவன் *
தழுவிமுழுகிப்புகுந்தென்னைச் சுற்றிச்சுழன்றுபோகானல் *
தழையின்பொழில்வாய்நிரைப்பின்னே நெடுமாலூதிவருகின்ற *
குழலின்துளைவாய்நீர்கொண்டு குளிரமுகத்துத்தடவீரே. (௫)

நடையொன்றில்லாவுலகத்து நந்தகோபன்மகனென்னும் *
கொடியகடியதிருமாலால் † குளப்புக்கூறுகொளப்பட்டு *
புடையும்பெயரகில்லேன்நான் ‡ போட்கன்மிதித்தவடிப்பாட்டில் *
பொடித்தான்கொணர்ந்துபூசீர்கள் போகாவுயிரென்னுடம்பையே. ()

வெற்றிக்கருளக்கொடியான்றன் மீமீதாடாவுலகத்து *
வெற்றவெறிதேபெற்றதாய் வேம்பேயாகவளர்த்தாளே *
குற்றமற்றமுலைதன்னைக் குமரன்கோலப்பணைத்தோளோடு *
அற்றகுற்றமவைதீர அணைபவமுக்கிக்கட்டீரே. (௭)

உள்ளேயுருகிநைவேனை யுளளோவிலளோவென்னாத *
கொள்ளைகொள்ளிக்குறும்பனைக் கோவர்த்தநனைக்கண்டக்கால் *
கொள்ளும்பயனென்றில்லாத கொங்கைதன்னைக்கிழங்கோடும் *
அள்ளிப்பறித்திட்டவன்மார்விலெறிந்தென்னழலைத்தீர்வேனே. ()

கொம்மைமுலைகளிடர்தீரக் கோவிந்தற்கோர்குற்றேவல் *
இம்மைப்பிறவிசெய்யாதே யினிப்போய்ச்செய்யும்தவந்தானென் *
செம்மையுடையதிருமார்வில் சேர்த்தானேலும், ஒருநான்று *
மெய்ம்மைசொல்லிமுகம்நோக்கி விடைதான்தருமேல்மிகநன்றே. ()

‡‡ அல்லல்விளைத்தபெருமானை யாயர்பாடிக்கணிவிளக்கை *
வில்லிபுதுவைநகர்நம்பி விட்டுசித்தன்வியன்கோதை *
வில்லைத்துலைத்தபுருவத்தாள் வேட்கையுற்றுமிகவிரும்பும் *
சொல்லைத்துதிக்கவல்லார்கள் துன்பக்கடலுள்துவளாரே. (க0)

கண்ணன் பால் கஞ்சை ஆரே அழில் நடை வெற்றி உள்ளே கொம்மை அல்லல் பட்டி.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



---

† குளப்புக்கூறு கொளப்பட்டு - துகைத்து. குளப்பில்கூறு கொள்ளப் பட்டது: மிதித்தவிடத்திலே மிதிக்கப்பட்ட தென்றபடி. ‡ போட்கன் - சுணைகேடன்.

## கசு-வது, பட்டிமேய்ந்து.

விருந்தாவனத்தே பரந்தாமற்கண்டமை.

கலிவிருத்தம்.

**அபநுபராகம்-நுபகதாளம்.**

⁂ பட்டிமேய்ந்தோர்காரேறு பலதேவற்கோர்கீழ்க்கன்றாய் *
இட்டீறிட்டுவிளையாடி யிங்கேபோதக்கண்டீரே? *
இட்டமானபசுக்களை யினிதுமறித்துநீரூட்டி *
விட்டுக்கொண்டுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (க)

அனுங்கவென்னைப்பிரிவுசெய் தாயர்பாடிகவர்ந்துண்ணும் *
குணுங்குநாறிக்குட்டேற்றைக் கோவர்த்தநனைக்கண்டீரே? *
கணங்களோடுமின்மேகம் கலந்தாப்போல், வநமாலை *
மினுங்கநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (உ)

மாலாய்ப்பிறந்தநம்பியை மாலேசெய்யும்மணாளனை *
ஏலாப்பொய்களுரைப்பானை யிங்கேபோதக்கண்டீரே? *
மேலால்பரந்தவெயில்காப்பான் வினதைசிறுவன்சிறகென்னும் *
† மேலாப்பின்கீழ்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (ங)

கார்த்தண்கமலக்கண்ணென்னும் நெடுங்கயிறுபடுத்தி * என்னை
ஈர்த்துக்கொண்டுவிளையாடு மீசன்றன்னைக்கண்டீரே? *
போர்த்தமுத்தின் ‡ குப்பாயப் புகர்மால்யானைக்கன்றேபோல் *
வேர்த்துநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (ச)

⁂ மாதவனென்மணியினை வலையில்பிழைத்தபன்றிபோல் *
ஏதுமொன்றும்கொளத்தாரா வீசன்றன்னைக்கண்டீரே? *
பீதகவாடையுடைதாழப் பெருங்கார்மேகக்கன்றேபோல் *
வீதியாரவருவானை விருந்தாவனத்தேகண்டோமே, (ரு)

தருமமறியாக்குறும்பனைத் தன்கைச்சார்ங்கமதுவேபோல் *
புருவவட்டமழகிய பொருத்தமிலியைக்கண்டீரே? *
உருவுகரிதாய்முகம்செய்தா யுதயப்பருப்பதத்தின்மேல் *
விரியும்கதிரேபோல்வானை விருந்தாவனத்தேகண்டோமே. (சா)

பொருத்தமுடையநம்பியைப் புறம்போலுள்ளும்கரியானை *
கருத்தைப்பிழைத்துநின்ற அக்கருமாமுகிலைக்கண்டீரே? *
அருத்தித்தாராகணங்களால் § ஆரப்பெருகுவானம்போல் *
விருத்தம்பெரிதாய்வருவானை விருந்தாவனத்தேகண்டோமே. (எ)

வெளியசங்கொன்றுடையானைப் பீதகவாடையுடையானை *
அளிநன்குடையதிருமாலை யாழியானைக்கண்டீரே? *
களிவண்டெங்கும்கலந்தாப்போல் கமழ்பூங்குழல்கள், தடந்தோள்மேல் *
மிளிரநின்றுவிளையாட விருந்தாவனத்தேகண்டோமே. (அ)

---

† மேலாப்பு-மேல்கட்டி. ‡ குப்பாயம் - சட்டை. § "ஆரப்பருகு" என்று பாடாந்தரம்.

சாற்றுப்பாட்டுக்கள்.

‡‡நாட்டைப்படையென்று † அயன்முதலாத்தந்தனளிர்மாமலருந்தி*
வீட்டைப்பண்ணிவிளையாடும் விமலன்றன்னைக்கண்டீரே ? *
காட்டைநாடித்தேநுகனும் களிறும்புள்ளுமுடன்மடிய *
வேட்டையாடிவருவானை விருந்தாவநத்தேகண்டோமே. (கூ)

‡‡ பருந்தாள்களிற்றுக்கருள்செய்த பரமன்றன்னை * பாரின்மேல்
விருந்தாவநத்தேகண்டமை விட்டுசித்தன்கோதைசொல் *
மருந்தாமென்றுதம்மனத்தே வைத்துக்கொண்டுவாழ்வார்கள் *
பெருந்தாளுடையபிரானடிக்கீழ்ப் பிரியாதென்றுமிருப்பாரே. (கய)

பட்டி அனுங்க மால்கார்த் தண் மாதவன் தருமம் பொருத்தம் வெளிய நாட்டைப் பருந்தாள் இருள்.

ஆண்டாள் திருவடிகளேசரணம்.



நாச்சியார் திருமொழி ஸம்பூர்ணம்.

அூ திருமொழி - கச - க்கு - பாட்டு - கசங.



† "அயன்றன்னைத்தந்த" என்று பாடாந்தரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

குலசேகரப்பெருமாளருளிச்செய்த

# பெருமாள் திருமொழி.

தனியன்கள்.

மணக்கால்நம்பிக ளருளிச்செய்தது.

இருவிகற்ப நேரிசைவெண்பா.

இன்னமுதமூட்டுகே னிங்கேவாபைங்கிளியே *
தென்னரங்கம்பாடவல்ல சீர்ப்பெருமாள் *—பொன்னஞ்
சிலைசேர்நுதலியர்வேள் சேரலர்கோன் * எங்கள்
குலசேகரனென்றே கூறு.

கட்டளைக்கலித்துறை.

ஆரங்கெடப்பரனன்பர்கொள்ளாரென்று-*அவர்கட்கே
† வாரங்கொடுகுடப்பாம்பில்கையிட்டவன் * மாற்றலரை
வீரங்கெடுத்தசெங்கோல் கொல்லிகாவலன்வில்லவர்கோன் *
சேரன்குலசேகரன் முடிவேந்தர்சிகாமணியே.

## க-வது, இருளிரிய.

அழகியமணவாளன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

பந்துவராளிராகம்-ஆதிதாளம்.

⁂ இருளிரியச்சுடர்மணிகளிமைக்கும்நெற்றி
யினத்துத்தியணிபணமாயிரங்களார்ந்த *
அரவரசப்பெருஞ்சோதியனந்தனென்னும்
அணிவிளங்குமுயர்வெள்ளையணையைமேவி *
திருவரங்கப்பெருநகருள்தெண்ணீர்ப்பொன்னி
திரைக்கையாலடிவருடப்பள்ளிகொள்ளும் *
கருமணியைக், கோமளத்தைக்கண்டுகொண்டு-என்
கண்ணிணைக ளென்றுகொலோகளிக்கும்நாளே ? (க)

வாயோரீரைஞ்ஞூறு ‡ துதங்களார்ந்த
வளையுடன்பிலழல்நாகம்உமிழ்ந்தசெந்தீ *
வீயாதமலர்ச்சென்னிவிதானமேபோல்
மேன்மேலும்மிகவெங்கும்பரந்ததன்கீழ் *

† வாரம்-பக்ஷபாதம். வாரங்கொடு-பக்ஷபதித்து. ‡ துதம்-ஸ்துதம்.

காயாம்பூமலர்ப்பிறங்கலன்னமாலைக்
கடியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும்
மாயோனை, மணத்தூணேபற்றிநின் றென்
வாயாரஎன்றுகொலோவாழ்த்துநாளே. (உ)

எம்மாண்பிலயன்நான்குநாவினாலும்
எடுத்தேத்தி ஈரிரண்டுமுகமுங்கொண்டு - *
எம்மாடுமெழில்கண்களெட்டினோடும்
தொழுதேத்தி யினிதிறைஞ்சநின்ற * செம்பொன்
அம்மான்றன்மலர்க்கமலக்கொப்பூழ்தோன்ற
அணியரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
அம்மான்றனடியிணைக்கீழலர்களிட்டங்
கடியவரோடென்றுகொலோவணுகுநாளே. (௩)

மாவினைவாய்பிளந்துகந்தமாலை வேலை
வண்ணனைஎன்கண்ணனை, வண்குன்றமேந்தி *
ஆவினையன்றுய்யக்கொண்டவாயரேற்றை
அமரர்கள் தந்தலைவனை அந்தமிழின்பப்
பாவினை * அவ்வடமொழியைப்பற்றற்றார்கள்
பயிலரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கோவினை, நாவுறவழுத்தி என்றன்கைகள்
கொய்மலர் தூயென்றுகொலோகூப்புநாளே. (௪)

இணையில்லா வின்னிசையாழ்கெழுமியின்பத்
தும்புருவும்நாரதனுமிறைஞ்சியேத்த *
துணையில்லாத்தொன்மறைநூல்தோத்திரத்தால்
தொன்மலர்க்கணயன்வணங்கியோவாதேத்த *
மணிமாடமாளிகைகள்மல்குசெல்வ
மதிளரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மணிவண்ணனம்மானைக்கண்டுகொண் டென்
மலர்ச்சென்னியென்றுகொலோவணங்குநாளே. (ரு)

அளிமலர்மேலயனரனிந்திரனோடேனை
அமரர்கள்தம்குழவு மரம்பையரும்! மற்றும் *
தெளிமதிசேர்முனிவர்கள்தம்குழவுமுந்தித்
திசைதிசையில்மலர் தூவிச்சென்றுசேரும் *
களிமலர்சேர்பொழிலரங்கத்துரகமேறிக்
கண்வளரும்கடல்வண்ணர் கமலக்கண்ணும் *
ஒளிமதிசேர்திருமுகமும் கண்டுகொண்டென்
னுள்ளமிகவென்றுகொலோவுருகுநாளே. (சா)

† மறம்திகழு மனமொழித்துவஞ்சமாற்றி
ஐம்புலன்களடக்கியிடர்ப்பாரத்துன்பம்

† மறம் - கொலை, சினம், கொடுமை.

துறந்து - * இருமுப்பொழுதேத்தி யெல்லையில்லாத்
தொன்னெறிக்கண்நிலைநின்றதொண்டரான *
அறம்திகழும்மனத்தவர்தம் கதியைப்பொன்னி
யணியரங்கத்தரவணையில் பள்ளிகொள்ளும் *
நிறம்திகழும்மாயோனைக்கண்டென்கண்கள்
நீர்மல்கவென்றுகொலோநிற்குநாளே. (எ)
கோலார்ந்தநெடுஞ்சார்ங்கம்கூனற்சங்கம்
கொலையாழிகொடுந்தண்டு கொற்றவொள்வாள் *
காலார்ந்தகதிக்கருடனென்னும் வென்றிக்
கடும்பறவையிவையனைத்தும்புறஞ்சூழ்காப்ப *
சேலார்ந்தநெடுங்கழனிசோலைசூழ்ந்த
திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
மாலோனைக், கண்டின்பக்கலவியெய்தி
வல்வினையேனென்றுகொலோவாழுநாளே. (அ)
தூராதமனக்காதல்தொண்டர்தங்கள்
குழாம்குழுமித் திருப்புகழ்கள்பலவும்பாடி *
ஆராதமனக்களிப்போடழுதகண்ணீர்
மழைசோர நினைந்துருகியேத்தி * நாளும்
சீரார்ந்தமுழவோசைபரவைகாட்டும்
திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
போராழியம்மானைக்கண்டுதுள்ளிப்
பூதலத்திலென்றுகொலோபுரளுநாளே. (கூ)
⁂ வன்பெருவானகமுய்யவமரருய்ய
மண்ணுய்யமண்ணுலகில்மனிதருய்ய *
துன்பமிகுதுயரகலஅயர்வொன்றில்லாச்
சுகம்வளர அகமகிழுந்தொண்டர்வாழ *
அன்பொடுதென்திசைநோக்கிப் பள்ளிகொள்ளும்
அணியரங்கன்திருமுற்றத்துஅடியார்தங்கள் *
இன்பமிகுபெருங்குழவுகண்டு யானும்
இசைந்துடனேயென்றுகொலோவிருக்குநாளே. (கo)
⁂ திடர்விளங்குகரைப்பொன்னிநடுவுபாட்டுத்
திருவரங்கத்தரவணையில்பள்ளிகொள்ளும் *
கடல்விளங்குகருமேனியம்மான்றன்னைக்,
கண்ணாரக்கண்டுகக்கும்காதல்தன்னால் *
குடைவிளங்குவிறல்தானைக்கொற்றவொள்வாள்
கூடலர்கோன்கொடைக்குலசேகரன்சொற்செய்த *
நடைவிளங்குதமிழ்மாலைபத்தும்வல்லார்
நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

இருள் வாய் எம்மா மாவினை இணை அளிமறம் கோல் தூரா வன் திடர் தேட்டு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



## உ-வது, தேட்ட.

அழகியமணவாளன்விஷயம்.

கலிவிருத்தம்.

ஸ்ரீராகம்-ரூபகதாளம்.

⁂ தேட்டருந்திறல்தேனினைத் தென்னரங்கனை * திருமாதுவாழ்
வாட்டமில்வனமாலைமார்வனை வாழ்த்திமால்கொள்சிந்தையராய் *
ஆட்டமேவியலர்ந்தழைத் தயர்வெய்தும்மெய்யடியார்கள்தம் *
ஈட்டம்கண்டிடக்கூடுமேல் அதுகாணுங்கண்பயனாவதே!. (க)

தோடுலாமலர்மங்கைதோளிணைதோய்ந்ததும், சுடர்வாளியால் *
நீடுமாமரம்செற்றதும் நிரைமேய்த்ததுமிவையேநினைந்து-*
ஆடிப்பாடிஅரங்கவோ! என்றழைக்கும் தொண்டரடிப்பொடி
ஆடநாம்பெறில் * கங்கைநீர்குடைந்தாடும் வேட்கையென்னாவதே.()

ஏறடர்த்ததுமேனமாய்நிலங்கீண்டதும், முன்னிராமனாய் *
மாறடர்த்ததும்மண்ணளந்ததும் சொல்லிப்பாடி*வண்பொன்னிப்பே
ராறுபோல்வரும்கண்ணநீர்கொண் டரங்கன்கோயில்திருமுற்றம் *
சேறுசெய்தொண்டர்சேவடிச்செழுஞ்சேறென்சென்னிக்கணிவனே.

தோய்த்ததண்டயிர்வெண்ணெய்பாலுடனுண்டலும் † உடன்றாய்ச்சிகண்டு*
ஆர்த்ததோளுடையெம்பிரானென்னரங்கனுக்கடியார்களாய் *
நாத்தழும்பெழநாரணாவென்றழைத்து மெய்தழும்பத்தொழு [மே.
தேத்தி * இன்புறும்தொண்டர்சேவடி யேத்திவாழ்த்துமென்னெஞ்ச

‡ பொய்சிலைக்குரலேற்றெருத்தமிறுத்துப் போரரவீர்த்தகோன் *
செய்சிலைச்சுடர்சூழொளித் திண்ணமாதிள்தென்னரங்கனாம் *
மெய்சிலைக்கருமேகமொன்று தம்நெஞ்சுள்நின்றுதிகழப்போய் *
மெய்சிலிர்ப்பவர்தம்மையேநினைந் தென்மனம்மெய்சிலிர்க்குமே. (ரு)

ஆதியந்தமனந்தமற்புதமான வானவர்தம்பிரான் *
பாதமாமலர்சூடும் பத்தியிலாதபாவிகளுய்ந்திட *
தீதில்நன்னெறிகாட்டி யெங்குந்திரிந்தரங்கனெம்மானுக்கே * [மே.
காதல்செய்தொண்டர்க் கெப்பிறப்பிலும் காதல்செய்யுமென்னெஞ்ச

காரினம்புரைமேனிநல்கதிர்முத்தவெண்ணகைச்செய்யவாய் *
ஆரமார்வனரங்கனென்னும் அரும்பெருஞ்சுடரொன்றினை *
சேரும்நெஞ்சினராகிச்சேர்ந்து கசிந்திழிந்தகண்ணீர்களால் *
வாரநிற்பவர்தாளிணைக்கு ஓர்வாரமாகுமென்னெஞ்சமே. (எ)

மாலையுற்றகடல்கிடந்தவன் வண்டுகிண்டுநறுந்துழாய் *
மாலையுற்றவரைப்பெருந்திருமார்வனை, மலர்க்கண்ணனை *
மாலையுற்றெழுந்தாடிப்பாடித்திரிந் தரங்கனெம்பானுக்கே *
மாலையுற்றிடும்தொண்டர்வாழ்வுக்கு மாலையுற்றதென்னெஞ்சமே. (அ)

† உடன்று - கோபித்து. ‡ பொய் - க்ரித்ரிமம். சிலை-கோபம்.

மொய்த்துக்கண்பனிசோரமெய்கள்சிலிர்ப்ப ஏங்கியிளைத்துநின்று *
எய்த்துக்கும்பிடுநட்டமிட்டெழுந்தாடிப்பாடியிறைஞ்சி * என்
அத்தனச்சனரங்கனுக் கடியார்களாகி, அவனுக்கே
பித்தராமவர் * பித்தரல்லர்கள் மற்றையார்முற்றும்பித்தரே. (கூ)

⁂ அல்லிமாமலர்மங்கைநாத னரங்கன்மெய்யடியார்கள் தம் *
எல்லையிலடிமைத்திறத்தினி லென்றுமேவுமனத்தனும் *
கொல்லிகாவலன் † கூடல்நாயகன் ‡ கோழிக்கோன்குலசேகரன் *
சொல்லினின்தமிழ்மாலைவல்லவர் தொண்டர்தொண்டர்களாவரே. ()

தேட்டு தோடு ஏறு தோய்த்த பொய் ஆதி காரினம் மாலை மொய்த்து அல்லி மெய்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



## ௩-வது, மெய்யில்வாழ்க்கையை.



அழகியமணவாளன்விஷயம்.

கலிவிருத்தம்.

**சௌராஷ்டிரராகம்-அடதாளம்.**

⁂ மெய்யில்வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும் * இவ்
வையந்தன்னொடும் கூடுவதில்லையான் *
ஐயனே ! அரங்காவென்றழைக்கின்றேன் *
மையல்கொண்டொழிந்தே னென்றன்மாலுக்கே. (க)

நூலினேரிடையார் திறத்தேநிற்கும் *
ஞாலந்தன்னொடும் கூடுவதில்லையான் *
ஆலியா அழையா அரங்காவென்று *
மாலெழுந்தொழிந்தே னென்றன்மாலுக்கே. (உ)

மாரனார் வரிவெஞ்சிலைக்காட்செய்யும் *
பாரினாரொடும் கூடுவதில்லையான் *
ஆரமார்வ னரங்கனநந்தன் * நல்
நாரணன் நரகாந்தகன்பித்தனே. (௩)

உண்டியேயுடையே யுகந்தோடும் * இம்
மண்டலத்தொடும் கூடுவதில்லையான் *
அண்டவாண னரங்கன், வன்பேய்முலை *
உண்டவாயன்ற னுந்தமத்தன்காண்மினே. (ச)

நீதில்நன்னெறிநிற்க, அல்லாதுசெய் *
நீதியாரொடும் கூடுவதில்லையான் *
ஆதிஆய னரங்கன், அந்தாமரை *
பேதைமாமணவாளன்றன் பித்தனே. (ரு)

† கூடல் - மதுரை. ‡ கோழி - உறையூர்.

எம்பரத்த ரல்லாரொடும்கூடலன் *
உம்பர்வாழ்வை யொன்றாகக்கருதிலன் *
தம்பிரானமரர்க்கு-, அரங்கநகர் *
எம்பிரானுக் கெழுமையும்பித்தனே. (சு)
எத்திறத்திலும் யாரொடும்கூடும் * அச்
சித்தந்தன்னைத் தவிர்த்தனன்செங்கண்மால் *
அத்தனே! அரங்காவென்றழைக்கின்றேன் *
பித்தனாயொழிந்தேனெம்பிரானுக்கே. (எ)
பேயரே யெனக்கியாவரும் * யானுமோர்
பேயனே யெவர்க்கும் இதுபேசியென் *
ஆயனே! அரங்கா! என்றழைக்கின்றேன் *
பேயனாயொழிந்தே னெம்பிரானுக்கே. (அ)
அங்கையாழி யரங்கனடியிணை *
தங்குசிந்தைத் தனிப்பெரும்பித்தனாய் *
கொங்கர்கோன் குலசேகரன்சொன்னசொல் *
இங்குவல்லவர்க் கேதமொன்றில்லையே. (கூ)

மெய் நூல் மார னுண்டி தீதிலெம் பரத்தர் எத்திறம் பே யங்கை ஊன்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



## ச-வது, ஊனேறு.



### திருவேங்கடத்தான்விஷயம்.

கொச்சகம்.

**தன்யாசிராகம்-திரிபுடைதாளம்.**

ஊனேறுசெல்வத் துடற்பிறவியான்வேண்டேன் *
ஆனேறேழ்வென்றா னடிமைத்திறமல்லால் *
கூனேறுசங்கமிடத்தான் தன்வேங்கடத்து *
கோனேரிவாழும் குருகாய்ப்பிறப்பேனே. (க)
ஆனாதசெல்வத் தரம்பையர்கள் தற்சூழ *
வானாளும்செல்வமும் மண்ணரசும்யான்வேண்டேன்
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடச்சுனையில் *
மீனாய்ப்பிறக்கும் விதியுடையேனாவேனே. (உ)
பின்னிட்டசடையானும் பிரமனுமிந்திரனும் *
துன்னிட்டுப்புகலரிய வைகுந்தநீள்வாசல் *
மின்வட்டச்சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும் *
பொன்வட்டில்பிடித்துடனே புகப்பெறுவேனாவேனே. (௩)
ஒண்பவளவேலை யுலவுதண்பாற்கடலுள் *
கண்டுயிலும்மாயோன் கழலிணைகள்காண்பதற்கு *
பண்பகரும்வண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்து *
செண்பகமாய்நிற்கும் திருவுடையேனாவேனே. (ச)

கம்பமதயானைக் கழுத்தகத்தின்மேலிருந்து *
இன்பமருஞ்செல்வமு மிவ்வரசும்யான்வேண்டேன் *
எம்பெருமானீச னெழில்வேங்கடமலைமேல் *
தம்பகமாய்நிற்கும் தவமுடையேனாவேனே. (௫)
மின்னனையநுண்ணிடையா ருருப்பசியும்மேநகையும் *
அன்னவர்தம்பாடலொடு மாடலவையாதரியேன் *
தென்னவெனவண்டினங்கள் பண்பாடும்வேங்கடத்துள் *
அன்னனையபொற்குவடா மருந்தவத்தனாவேனே. (௬)
வானாளும்மாமதிபோல் வெண்குடைக்கீழ் * மன்னவர்தம்
கோனாகிவீற்றிருந்து கொண்டாடும்செல்வமறியேன்
தேனார்பூஞ்சோலைத் திருவேங்கடமலைமேல்
கானாறாய்ப்பாயும் கருத்துடையேனாவேனே. (௭)
பிறையேறுசடையானும் பிரமனுமிந்திரனும் *
முறையாயபெருவேள்விக் குறைமுடிப்பான், மறையானான் *
வெறியார்தண்சோலைத் திருவேங்கடமலைமேல் *
நெறியாய்க்கிடக்கும் நிலையுடையேனாவேனே. (௮)
⁂ செடியாயவல்வினைகள் தீர்க்கும்திருமாலே *
நெடியானே ! வேங்கடவா ! நின்கோயிலின்வாசல் *
அடியாரும்வானவரு மரம்பையரும்கிடந்தியங்கும் *
படியாய்க்கிடந் துன்பவளவாய்காண்பேனே. (௯)
உம்பருலகாண் டொருகுடைக்கீழ், உருப்பசிதன் *
அம்பொற்கலையல்குல் பெற்றாலுமாதரியேன் *
செம்பவளவாயான் திருவேங்கடமென்னும் *
எம்பெருமான்பொன்மலைமே லேதேனுமாவேனே. (௧0)
⁂ மன்னியதண்சாரல் வடவேங்கடத்தான்றன் *
பொன்னியலும்சேவடிகள் காண்பான்புரிந்திறைஞ்சி *
கொன்னவிலும்கூர்வேல் குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்வல்லார் பாங்காயபத்தர்களே. (௧௧)

ஊன் ஆனாத பின் ஒண் கம்பம் மின் வான் பிறை செடி உம்பர் மன்னிய தரு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



## ௫-வது, தருதுயரம்.



வித்துவக்கோட்டம்மான்விஷயம்.

கலிவிருத்தம்.

**சங்கராபரணராகம்-ரூபகதாளம்.**

⁂ தருதுயரம்தடாயே லுன்சரணல்லால்சரணில்லை *
விரைகுழவுமலர்ப்பொழில்சூழ் வித்துவக்கோட்டம்மானே ! *
அரிசினத்தாலீன்றதா யகற்றிடினும் * மற்றவள்தன்
அருள்நினைந்தேயழுங்குழவி யதுவேபோன்றிருந்தேனே. (௧)

கண்டாரிகழ்வனவே காதலன்றான்செய்திடினும் *
கொண்டானையல்லா லறியாக்குலமகள்போல் *
விண்டோய்மதிள்புடைசூழ் வித்துவக்கோட்டம்மா ! * நீ
கொண்டாளாயாகிலு முன்குரைகழலேகூறுவனே. (உ)
மீன்நோக்கும்நீள்வயல்சூழ் வித்துவக்கோட்டம்மா ! * என்
பால்நோக்காயாகிலு முன்பற்றல்லால்பற்றிலேன் *
தான்நோக்காதெத்துயரம் செய்திடினும் * தார்வேந்தன்
கோல்நோக்கிவாழும் குடிபோன்றிருந்தேனே. (ங)
வாளாலறுத்துச்சுடினும், மருத்துவன்பால் *
மாளாதகாதல் நோயாளன்போல், மாயத்தால் *
மீளாத்துயர்தரிலும் வித்துவக்கோட்டம்மா ! * நீ
ஆளாவுனதருளே பார்ப்பனடியேனே. (ச)
§ வெங்கட்டின்களிறடர்த்தாய் ! வித்துவக்கோட்டம்மானே ! *
எங்குப்போயுய்கே னுன்னிணையடியேயடையலல்லால் *
எங்கும்போய்க்கரைகாணா தெறிகடல்வாய்மீண்டேயும் *
† வங்கத்தின் ‡ கூம்பேறும் மாப்பறவைபோன்றேனே. (ரு)
செந்தழலே வெந்தழலைச்செய்திடினும் * செங்கமலம்
அந்தரஞ்சேர் வெங்கதிரோற்கல்லா லலராவால் *
வெந்துயர்வீட்டாவிடிலும் வித்துவக்கோட்டம்மா ! * உன்
அந்தமில்சீர்க்கல்லா லகங்குழையமாட்டேனே. (சு)
எத்தனையும்வான் ¶ மறந்தகாலத்தும், பைங்கூழ்கள் *
மைத்தெழுந்தமாமுகிலே பார்த்திருக்கும்மற்றவைபோல் *
மெய்த்துயர்வீட்டாவிடினும் வித்துவக்கோட்டம்மா ! * என்
சித்தமிகவுன்பாலே வைப்பனடியேனே. (எ)
தொக்கிலங்கியாறெல்லாம் பரந்தோடி * தொடுகடலே *
புக்கன்றிப்புறம்நிற்க மாட்டாதமற்றவைபோல் *
மிக்கிலங்குமுகில்நிறத்தாய் ! வித்துவக்கோட்டம்மா ! * உன்
புக்கிலங்குசீரல்லால் புக்கிலன்காண்புண்ணியனே!. (அ)
நின்னையேதான்வேண்டி நீள்செல்வம்வேண்டாதான் *
தன்னையே, தான்வேண்டும் செல்வம்போல், மாயத்தால் *
மின்னையேசேர்திகிரி வித்துவக்கோட்டம்மா ! *
நின்னையேதான்வேண்டி நிற்பனடியேனே. (கூ)
‡‡ வித்துவக்கோட்டம்மா ! நீ வேண்டாயேயாயிடினும் *
மற்றாருமபற்றிலேனென்று அவனைத்தாள்நயந்த *
கொற்றவேல்தானைக் குலசேகரன்சொன்ன *
நல்தமிழ்பத்தும்வல்லார் நண்ணார் நரகமே. (கO)

தரு கண்டார் மீன்வாளால் வெங்கண் செந்தழல் எத்தனை தொக்கு நின்னை வித்து எர்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



§ வெங்கண்,திண். † வங்கம்-மரக்கலம். ‡ கூம்பு-கொம்பு. ¶ மறத்தல் -மறுத்தல்.

## சு-வது, ஏர்மலர்ப்பூங்குழல்.



ஆய்ச்சியருடையமலனையெள்கல்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

**செஞ்சுருட்டிராகம்-ஆதிதாளம்.**

❧ ஏர்மலர்ப்பூங்குழலாயர்மாதரெனைப்பலருள்ளவிவ்வூரில் * உன்றன்
மார்வுதழுவுதற்காசையின்மையறிந்தறிந்தே யுன்றன்பொய்யைக்கேட்டு
கூர்மழைபோல்பனிக்கூதலெய்திக் கூசிநடுங்கியமுனையாற்றில் *
வார்மணல்குன்றில்புலராநின்றேன் வாசுதேவாஉன்வரவுபார்த்தே. (க)

கெண்டையொண்கண்மடவாளொருத்தி கீழையகத்துத்தயிர்கடையக்
கண்டு * ஒல்லைநானுங்கடைவனென்று கள்ளவிழியைவிழித்துப்புக்கு *
வண்டமர்பூங்குழல்தாழ்ந்துலாவ வாண்முகம்வேர்ப்பச்செவ்வாய்துடிப்ப *
§ தண்டயிர்நீகடைந்திட்டவண்ணம் தாமோதராமெய்யறிவன்நானே. (உ)

கருமலர்க்கூந்தலொருத்திதன்னைக் கடைக்கணித்து * ஆங்கேயொருத்திதன்
பால், மருவிமனம்வைத்துமற்றொருத்திக்குரைத்தொருபேதைக்குப்பொய்கு
றித்து *, புரிகுழல்மங்கையொருத்திதன்னைப்புணர்தி யவளுக்கும்மெய்யனல்
லை*,மருதிறுத்தாயுன்வளர்த்தியூடே வளர்கின்றதாலுன்றன்மாயைதானே.()

தாய்முலைப்பாலிலமுதிருக்கத் தவழ்ந்துதளர்நடையிட்டுச்சென்று *
பேய்முலைவாய்வைத்துநஞ்சையுண்டுபித்தனென்றேபிறரேசநின்றாய் *
ஆய்மிகுகாதலோடுயானிருப்ப யான்விடவந்தவென்தூதியோடே *
நீமிகுபோகத்தைநன்குகந்தாய் அதுவுமுன் † கோரம்புக்கேற்குமன்றே. (ச)

மின்னொத்தநுண்ணிடையாளைக்கொண்டுவீங்கிருள்வாயென்றன்வீதியூடே*
பொன்னொத்தவாடை‡குக்கூடலிட்டுப் போகின்றபோதுநான்கண்டுநின்றே
ன்*, கண்ணுற்றவளைநீகண்ணாலிட்டுக்கைவிளிக்கின்றதும்கண்டேநின்றேன்*
என்னுக்கவளைவிட்டிங்குவந்தா யின்னமங்கேநடநம்பிநீயே. (ரு)

மற்பொருதோளுடைவாசுதேவா ! வல்வினையேன்துயில்கொண்டவாறே *
இற்றையிரவிடையேமத்தென்னை யின்னணைமேலிட்டகன்றுநீபோய் *
அற்றையிரவுமோர்பிற்றைநாளு மரிவையரோடுமணைந்துவந்தாய் *
எற்றுக்குநீயென்மருங்கில்வந்தா யெம்பெருமான்நீயெழுந்தருளே. (சா)

பையரவினணைப்பள்ளியினாய் பண்டையோமல்லோம்நாம் * நீயுகக்கும்
மையரியொண்கண்ணினருமல்லோம் வைகியென்சேரிவரவொழிநீ *
செய்யவுடையும்திருமுகமும் செங்கனிவாயும்குழலும்கண்டு *
பொய்யொருநாள்பட்டதேயமையும் புள்ளுவம்பேசாதேபோகுநம்பீ. (எ)

என்னைவருகவெனக்குறித்திட் டினமலர்முல்லையின்பந்தர்நீழல் *
மன்னியவளைப்புணரப்புக்குமற்றென்னைக்கண்டுழறுநெகிழ்ந்தாய் *
பொன்னிறவாடையைக்கையில்தாங்கிப்பொய்யச்சங்காட்டிநீபோதியேலும்*
இன்னமென்கையகத்தீங்கொருநாள் வருதியேலென்சினம்தீர்வன்நானே. ()

மங்கலநல்வனமாலைமார்விலிலங்க மயில்தழைப்பீலிசூடி *
பொங்கிளவாடையரையில்சாத்திப்பூங்கொத்துக்காதிற்புணரப்பெய்து *
கொங்குநறுங்குழலார்களோடு குழைந்துகுழலினிதூதிவந்தாய் *
எங்களுக்கேயொருநாள்வந்தூத வுன்குழலின்னிசைபோதராதே. (கூ)

§ தண்தயிர். † கோரம்பு. ‡ தீம்பு. குக்கூடல் - முட்டாக்கு.

⁂அல்லிமலர்த்திருமங்கைகேள்வன்றன்னை நயந்திளவாய்ச்சிமார்கள் *
எல்லிப்பொழுதினிலேமத்தாடி யெள்கியுரைத்தவுரையதனை *
கொல்லிநகர்க்கிறைகூடல்கோமான் குலசேகரனின்னிசையில்மேவி *
சொல்லியவின்தமிழ்மாலைபத்தும் சொல்லவல்லார்க்கில்லைதுன்பந்தானே. ()

ஏர் கெண்டை கரு தாய் மின் மற்பொருபை என்னை மங்கல அல்லி ஆலை.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.

## எ-வது, ஆலை நீள்கரும்பு.

### சேய்வளர்காட்சியின்சீரையசோதைபோல்தாய்தேவகி பெறாத்தாழ்வெணிப்புலம்பல்.

*அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.*

**கேதாரகௌளராகம்-அடதாளம்.**

⁂ஆலைநீள்கரும்பன்னவன்தாலோ அம்புயத்தடங்கண்ணினன்தாலோ *
வேலைநீர்நிறத்தன்னவன்தாலோ வேழப்போதகமன்னவன்தாலோ *
ஏலவார்குழலென்மகன்தாலோ என்றென்றுன்னைஎன்வாயிடைநிறைய *
தாலொலித்திடும்திருவினையில்லாத் தாயரில்கடையாயினதாயே. (க)

வடிக்கொளஞ்சனமெழுதுசெம்மலர்க்கண்மருவிமேலினிதொன்றினைநோக்கி
முடக்கிச்சேவடிமலர்ச்சிறுகருந்தாள்பொலியுநீர்முகில்குழவியேபோல *
அடக்கியாரச்செஞ்சிறுவிரலனைத்தும்† அங்கையோடணைந்தானையிற்கிடந்த*
கிடக்கைகண்டிடப்பெற்றிலனந்தோ! கேசவா! கெடுவேன்கெடுவேனே. (உ)

முந்தைநன்முறையன்புடைமகளிர் முறைமுறைதந்தம்குறங்கிடையிருத்தி *
எந்தையே! என்றன்குலப்பெருஞ்சுடரே! எழுமுகில்கணத்தெழில்கவரேறே*
உந்தையாவனென்றுரைப்பநின்செங்கேழ் விரலினும்கடைக்கண்ணினும்காட்
ட*,நந்தன்பெற்றனன்நல்வினையில்லாநங்கள்கோன்வசுதேவன்பெற்றிலனே.

களிநிலாவெழில்மதிபுரைமுகமும் கண்ணனேதிண்கைமார்வும்திண்டோளும்
தளிமலர்க்கருங்குழல்பிறையதுவும்தடங்கொடாமரைக்கண்களும்பொலிந்த*
இளமையின்பத்தையின்றென்றன்கண்ணால் பருகுவேற்கிவள்தாயெனநினைந்
த*, அளவில்பிள்ளைமையின்பத்தையிழந்த பாவியேனெனதாவிநில்லாதே. ()

மருவுநின்திருநெற்றியில்சுட்டியசைதர மணிவாயிடைமுத்தம், தருதலும் * உ
ன்றன்தாதையைப்போலும்வடிவுகண்டுகொண்டுள்ளமுள்குளிர*, விரலைச்செ
ஞ்சிறுவாயிடைச்சேர்த்துவெகுளியாய்நின்றுரைக்குமவ்வுரையும்*, திருவிலே
னொன்றும்பெற்றிலேன் எல்லாம்தெய்வநங்கையசோதைபெற்றாளே. (ரு)

தண்ணந்தாமரைக்கண்ணனேகண்ணா தவழ்ந்தெழுந்துதளர்ந்ததோர்நடை
யால்*, மண்ணில்செம்பொடியாடிவந்தென்றன்மார்வில் மன்னிடப்பெற்றி
லேனந்தோ *, வண்ணச்செஞ்சிறுகைவிரலனைத்தும் வாரிவாய்க்கொண்டவ
டிசிலின்மிச்சில் *, உண்ணப்பெற்றிலேன்! ஓ! கொடுவினையேன்என்னைஎன்
செய்யப்பெற்றதெம் ‡ மோயே. (சூ)

குழகனேயென்றன்கோமளப்பிள்ளாய் கோவிந்தாஎன்குடங்கையில்மன்னி *
ஒழுகுபேரெழிலிளஞ்சிறுதளிர்போலொருகையாலொருமுலைமுகம்நெருடா*
மழலைமென்னகையிடையிடையருளா வாயிலேமுலையிருக்கவென்முகத்தே *
எழில்கொள்நின்திருக்கண்ணிணைநோக்கந்தன்னையுமிழந்தேனிழந்தேனே. ()

† அங்கை - உள்ளங்கை. ‡ மோய் - தாய்.

முழுதும்வெண்ணெயளைந்து தொட்டுண்ணும்முகிழிளம்சிறுத்தாமரைக்கையும்*, எழில்கொள்தாம்புகொண்டடிப்பதற்கெள்குநிலையும்வெண்தயிர்தோய்ந்த செவ்வாயும்*, அழுகையுமஞ்சிநோக்குமந்நோக்குமணிகொள்செஞ் சிறுவாய் நெளிப்பதுவும் *, தொழுகையுமிவைகண்டவசோதை தொல்லையின்பத்திறுதிகண்டாளே. (அ)

குன்றினால்குடைகவித்ததும் கோலக்குரவைகோத்ததும்குடமாட்டும் *
கன்றினால்விளவெறிந்ததும்காலால்காளியன்தலைமிதித்ததுமுதலா *
வென்றிசேர்பிள்ளைநல்விளையாட்டமனைத்திலுமங்கென்னுள்ளமுள்குளிர *
ஒன்றும்கண்டிடப்பெற்றிலேனடியேன் காணுமாறினியுண்டெனிலருளே. ()

வஞ்சமேவியநெஞ்சுடைப்பேய்ச்சிவரண்டுநார்நரம்பெழக்கரிந்துக்க *
நஞ்சமார்தருசுழிமுலையந்தோ! சுவைத்துநீயருள்செய்துவளர்ந்தாய் *
கஞ்சன்நாள்கவர்கருமுகிலெந்தாய்! கடைப்பட்டேன்வெறிதேமுலைசுமந்து *
தஞ்சமேலொன்றிலேனுய்ந்திருந்தேன் தக்கதேநல்லதாயைப்பெற்றாயே.(க0)

⁂மல்லைமாநகர்க்கிறையவன்றன்னைவான்செலுத்திவந்தீங்கணைமாயத்து *
எல்லையில்பிள்ளைசெய்வனகாணாத் தெய்வத்தேவகிபுலம்பியபுலம்பல் *
கொல்லிகாவலன்மாலடிமுடிமேல்கோலமாம்குலசேகரன்சொன்ன *
நல்லிசைத்தமிழ்மாலைவல்லார்கள்நண்ணுவாரொல்லைநாரணனுலகே. (கக)

ஆலை வடி முந்தை களி மருவு தண்ணம் குழகன் முழுது குன்று வஞ்சம் மல்லை மன்னு.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.

## அ-வது, மன்னுபுகழ்.

கண்ணபுரத்தொளிர்காகுத்தன்றாலாட்டு.

கலிவிருத்தம்.

நீலாம்புரிராகம்-திரிபுடைதாளம்.

⁂ மன்னுபுகழ்க்கௌசலைதன் மணிவயிறுவாய்த்தவனே! *
தென்னிலங்கைக்கோன்முடிகள்சிந்துவித்தாய்!, செம்பொன்சேர் *
கன்னிநன்மாமதிள் புடைசூழ்கணபுரத்தென்கருமணியே! *
என்னுடையவின்னமுதே ! இராகவனே ! தாலேலோ. (க)

புண்டரீகமலரதன்மேல் புவனியெல்லாம்படைத்தவனே! *
திண்டிறலால் தாடகைதன்உரமுருவச்சிலைவளைத்தாய்! *
கண்டவர்தம்மனம்வழங்கும் கணபுரத்தென்கருமணியே! *
எண்டிசையுமாளுடையாய் ! இராகவனே ! தாலேலோ. (உ)

கொங்குமலிகருங்குழலாள் கௌசலைதன்குலமதலாய்! *
தங்குபெரும்புகழ்ச்சனகன் திருமருகா ! தாசரதீ ! *
கங்கையிலும்தீர்த்தமலி கணபுரத்தென்கருமணியே! *
எங்கள்குலத்தின்னமுதே ! இராகவனே ! தாலேலோ. (ங)

தாமரைமேலயனவனைப் படைத்தவனே ! * தயரதன்றன்
மாமதலாய் ! மைதிலிதன்மணவாளா ! * வண்டினங்கள்
காமரங்களிசைபாடும் கணபுரத்தென்கருமணியே ! *
ஏமருவும்சிலைவலவா ! இராகவனே ! தாலேலோ. (ச)

பாராளும்படர்செல்வம் பரதனம்பிக்கேயருளி
ஆராவன்பிளையவனோ டருங்கானமடைந்தவனே ! *
சீராளும்வரைமார்பா ! திருக்கண்ணபுரத்தரசே ! *
தாராளும்நீண்முடி யென்தாசரதீ ! தாலேலோ. (ரு)
சுற்றமெல்லாம்பின் றுடரத் தொல்கானமடைந்தவனே ! *
அற்றவர்கட்கருமருந்தே ! அயோத்திநகர்க்கதிபதியே ! *
கற்றவர்கள்தாம்வாழும் கணபுரத்தென்கருமணியே ! *
சிற்றவைதன்சொல்கொண்ட சீராமா ! தாலேலோ. (சு)
ஆலினிலைப்பாலகனா யன்றுலகமுண்டவனே ! *
வாலியைக்கொன்றர சிளையவாநரத்துக்களித்தவனே ! *
காலின்மணிகரையலைக்கும் கணபுரத்தென்கருமணியே ! *
ஆலிநகர்க்கதிபதியே ! அயோத்திமனே ! தாலேலோ. (எ)
⁂ மலையதனாலணைகட்டி மதிளிலங்கையழித்தவனே ! *
அலைகடலைக்கடைந் தமரர்க்கமுதருளிச்செய்தவனே ! *
கலைவலவர்தாம்வாழும் கணபுரத்தென்கருமணியே ! *
சிலைவலவா ! சேவகனே ! சீராமா ! தாலேலோ. (அ)
தளையவிழும்நறுங்குஞ்சித் தயரதன்றன்குலமதலாய் ! *
வளையவொருசிலையதனால் மதிளிலங்கையழித்தவனே ! *
களைகழுநீர்மருங்கலரும் கணபுரத்தென்கருமணியே ! *
இளையவர்கட்கருளுடையாய் ! இராகவனே ! தாலேலோ. (கூ)
⁂ தேவரையுமசுரரையும் திசைகளையும்படைத்தவனே ! *
யாவரும்வந்தடிவணங்க அரங்கநகர்த்துயின்றவனே ! *
காவிரிநல்நதிபாயும் கணபுரத்தென்கருமணியே ! *
ஏவரிவெஞ்சிலைவலவா ! இராகவனே ! தாலேலோ. (கo)
⁂ கன்னிநன்மாமதிள்புடைசூழ் கணபுரத்தென்காகுத்தன்
தன்னடிமேல் * தாலேலோவென்றுரைத்த தமிழ்மாலை *
கொல்நவிலும்வேல்வலவன் குடைக்குலசேகரன்சொன்ன *
பன்னியநூல்பத்தும்வல்லார் பாங்காயபத்தர்களே. (கக)

மன்னு புண்டரீகம் கொங்கு தாமரை பார் சுற்றம் ஆலின் மலை தளைதேவர் கன்னி வன்தாள்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.

## கூ-வது, வன்தாளினிணை.

### தனயன்கான்புகத் தசரதன் புலம்பல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

காம்போதிராகம்-ஆதிதாளம்.

⁂ வன்தாளினிணைவணங்கி வளநகரம்தொழுதேத்தமன்னனாவான்
நின்றாயை * அரியணைமேலிருந்தாயை நெடுங்கானம்படரப்போகு
வென்றாள் * எம்பிராமாவோ ! உனைப்பயந்தகைகேசிதன்சொற்கேட்டு
நன்றாகநானிலத்தையாள்வித்தேன் நன்மகனேயுன்னைநானே. (க)

வெவ்வாயேன்வெவ்வுரைகேட்டிருநிலத்தைவேண்டாதேவிரைந்துவென்றி
மைவாயகளிறொழிந்துதேரொழிந்துமாவொழிந்துவனமேமேவி
நெய்வாயவேல்நெடுங்கண்நேரிழையுமிளங்கோவும்பின்புபோக *
எவ்வாறுநடந்தனையெம்மிராமாவோ ? எம்பெருமானென்செய்கேனே. (௨)

கொல்லணைவேல்வரிநெடுங்கண்கௌசலைதன்குலமதலாய், குனிவில்லேந்தும்
மல்லணைந்தவரைத்தோளா வல்வினையேன்மனமுருக்கும்வகையேகற்றாய் *
மெல்லணைமேல்முன்துயின்றாய் யின்றினிப்போய்வியன்கானமரத்தின்நீழல் *
கல்லணைமேல்கண்டுயிலக்கற்றனையோ காகுத்தா ! கரியகோவே. (௩)

வாபோகுவா இன்னம்வந் தொருகால்கண்டுபோ, மலராள்கூந்தல் *
வேய்போலுமெழில்தோளிதன்பொருட்டாவிடையோன்றன்வில்லைச்செற்றா
ய், மாபோகுநெடுங்கானம் வல்வினையேன்மனமுருக்கும்மகனே * இன்று
நீபோகவென்னெஞ்ச மிருபிளவாய்ப்போகாதேநிற்குமாறே. (௪)

பொருந்தார்கைவேல்நுதிபோல்பரல்பாயமெல்லடிக்கள்குருதிசோர
விரும்பாதகான்விரும்பிவெயிலுறைப்பவெம்பசிநோய்கூர * இன்று
பெரும்பாவியேன்மகனேபோகின்றாய் கேகயர்கோன்மகளாய்ப்பெற்ற *
அரும்பாவிசொற்கேட்டவருவினையேனென்செய்கேனந்தோயானே. (௫)

அம்மாவென்றுகந்தழைக்கு மார்வச்சொல்கேளாதே, அணிசேர்மார்வம் *
என்மார்வத்திடையழுந்தத் தழுவாதேமுழுசாதேமோவாதுச்சி *
கைம்மாவின்நடையன்னமென்னடையும் கமலம்போல்முகமும்காணாது *
எம்மானையென்மகனையிழந்திட்ட இழிதகையேனிருக்கின்றேனே. (௬)

பூமருவுநறுங்குஞ்சிபுன்சடையாப்புனைந்து, பூந்துகில்சேர்அல்குல் *
காமரெழில் † விழலுடுத்துக்கலனணியா தங்கங்களழகுமாறி *
ஏமருதோளென்புதல்வன்யானின்றுசெலத்தக்கவனந்தான்சேர்தல் *
தூமறையீரிதுதகவோ சுமந்திரனேவசிட்டனேசொல்லீர்நீரே. (௭)

பொன்பெற்றாரெழில்வேதப்புதல்வனையும்தம்பியையும், பூவைபோலும் *
மின்பற்றாநுண்மருங்குல் மெல்லியலென் ‡ மருகியையும்வனத்தில்போக்கி *
நின்பற்றாநின்மகன்மேல்பழிவிளைத்திட்டென்னையும்நீள்வானில்போக்க *
என்பெற்றாய்கைகேசீ யிருநிலத்திலினிதாகவிருக்கின்றாயே. (௮)

முன்னொருநாள்மழுவாளிசிலைவாங்கி யவன்தவத்தைமுற்றும்செற்றாய் *
உன்னையுமுன்னருமையையுமுன்மோயின்வருத்தமு மொன்றாகக்கொள்ளா
து*, என்னையுமென்மெய்யுரையும்மெய்யாகக்கொண்டுவனம்புக்கவெந்தாய் *
நின்னையேமகனாகப்பெறப்பெறுவேனேழ்பிறப்பும்நெடுந்தோள்வேந்தே. (௯)

தேன்நகுமாமலர்க்கூந்தல்கௌசலையும்சுமித்திரையும்சிந்தைநோவ
கூனுருவில்கொடுந்தொழுத்தைசொற்கேட்ட கொடியவள்தன்சொற்கொண் [டுஇன்று
கானகமேமிகவிரும்பி நீதுறந்தவளநகரைத்துறந்து * நானும்
வானகமேமிகவிரும்பிப்போகின்றேன்மநுகுலத்தார்தங்கள்கோவே. (௧0)

† விழல் - விச்வாமித்ரம். ‡ மருகி - மருமகள்.

⁂ ஏரார்ந்தகருநெடுமாலிராமனாய் வனம்புக்கவதனுக்காற்ற *
தாரார்ந்ததடவரைத்தோள் தயரதன்றான் புலம்பியவப்புலம்பல்தன்னை
கூரார்ந்தவேல்வலவன்கோழியர்கோன் குடைக்குலசேகரன்சொற்செய்த *
சீரார்ந்ததமிழ்மாலையிவைவல்லார் தீநெறிக்கண்செல்லார்தாமே. (௧௧)

வன்தாள் செவ்வாய் கொல்லணை வாபோகு பொருந்தா ரம்மா பூப்பொன்முன் தேன் ஏரார் அங்கண்.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



## ௧0-வது, அங்கணெடுமதிள்.



தில்லைநகர்த் திருச்சித்திரகூட மால்தொல்லி ராமனாய்
தோன்றிய கதைமுறை.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**கல்யாணிராகம்-ஆதிதாளம்.**

⁂ அங்கணெடுமதிள்புடைசூழயோத்தியென்னும்
அணிநகரத்துலகனைத்தும்விளக்குஞ்சோதி *
வெங்கதிரோன்குலத்துக்கோர்விளக்காய்த்தோன்றி
விண்முழுதுமுய்யக்கொண்டவீரன்றன்னை *
செங்கணெடுங்கருமுகிலையிராமன்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
எங்கள்தனிமுதல்வனையெம்பெருமான்றன்னை
யென்றுகொலோகண்குளிரக்காணுநாளே. (௧)

வந்தெதிர்ந்ததாடகைதனுரத்தைக்கீறி
வருகுருதிபொழிதரவன்கணையொன்றேவி *
மந்திரங்கொள்மறைமுனிவன்வேள்விகாத்து
வல்லரக்கருயிருண்டமைந்தன்காண்மின் *
செந்தெளிர்வாய்மலர்நகைசேர்செழுந்தண்சோலைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
அந்தணர்களொருமூவாயிரவரேத்த
அணிமணியாசனத்திருந்தவம்மான்றானே. (௨)

செவ்வரிநற்கருநெடுங்கண்சீதைக்காகிச்
சினவிடையோன்சிலையிறுத்துமழுவாளேந்தி *
வெவ்வரிநற்சிலைவாங்கிவென்றிகொண்டு
வேல்வேந்தர்பகைதடிந்தவீரன்றன்னை *
தெவ்வரஞ்சநெடும்புரிசையுயர்ந்த † பாங்கர்த்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
எவ்வரிவெஞ்சிலைத்தடக்கையிராமன்றன்னை
யிறைஞ்சுவாரிணையடியேயிறைஞ்சினேனே. (௩)

† பாங்கர் - அட்டாலை;-மேல்தளம், துர்க்கசவரணை.

தொத்தலர்பூஞ்சுரிகுழல்கைகேசிசொல்லால்
தொன்னகரந்துறந்து, துறைக்கங்கைதன்னை *
பத்தியுடைக்குகன்கடத்தவனம்போய்ப்புக்குப்
பரதனுக்குப்பாதுகமுமரசுமீந்து *
சித்திரகூடத்திருந்தான்றன்னையின்று
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
எத்தனையுங்கண்குளிரக்காணப்பெற்ற
இருநிலத்தார்க்கிமையவர்நேரொவ்வார்தாமே. (௪)

வலிவணக்குவரைநெடுந்தோள் விராதைக்கொன்று
வண்டமிழ்மாமுனிகொடுத்தவரிவில்வாங்கி *
கலைவணக்குநோக்கரக்கிமூக்கைநீக்கிக்
கரனோடுதூடணன்றனுயிரைவாங்கி *
சிலைவணக்கிமான்மரியவெய்தான்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
தலைவணங்கிக்கைகூப்பியேத்தவல்லார்
திரிதலால்தவமுடைத்துத்தரணிதானே. (௫)

தனமருவுவைதேவிபிரியலுற்றுத்
தளர்வெய்திச்சடாயுவைவைகுந்தத்தேற்றி *
வனமருவுகவியரசன்காதல்கொண்டு
வாலியைக்கொன்றிலங்கைநகரரக்கர்கோமான் *
சினமடங்கமாருதியால்சுடுவித்தானைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
இனிதமர்ந்தவம்மானையிராமன்றன்னை
யேத்துவாரிணையடியேயேத்தினேனே. (௬)

குரைகடலையடலம்பால்மறுகவெய்து
குலைகட்டிமறுகரையையதனாலேறி *
எரிநெடுவேலரக்கரொடுமிலங்கைவேந்தன்
இன்னுயிர்கொண்டவன்தம்பிக்கரசுமீந்து *
திருமகளோடினிதமர்ந்தசெல்வன்றன்னைத்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
அரசமர்ந்தானடிசூடுமரசையல்லால்
அரசாகவெண்ணேன்மற்றரசுதானே. (௭)

அம்பொனெடுமணிமாடவயோத்தியெய்தி
அரசெய்தி, அகத்தியன்வாய்த்தான்முன்கொன்றான்
றன் * பெருந்தொல்கதைகேட்டு, மிதிலைச்செல்வி
யுலகுய்யத்திருவயிறுவாய்த்தமக்கள் *
செம்பவளத்திரள்வாய்தன்சரிதைகேட்டான்
தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
எம்பெருமான்றன்சரிதைசெவியால்கண்ணால்
பருகுவோமின்னமுதைமதியோமின்றே. (௮)

செறிதவச்சம்புகன்றன்னைச்சென்றுகொன்று
 செழுமறையோனுயிர்மீட்டுத், தவத்தோனீந்த *
நிறைமணிப்பூணணியுங்கொண்டிலங்கைமன்னன்றன்னைத்
 தம்பியால்வானேற்றி, முனிவன்வேண்ட *
திறல்விளங்குமிலக்குமனைப்பிரிந்தான்றன்னைத்
 தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
உறைவானை, மறவாதவுள்ளந்தன்னை
 யுடையோம்மற்றுறுதுயரமடையோமின்றே. (கூ)

சாற்றுப்பாட்டுக்கள்.

⁂ அன்றுசராசரங்களைவைகுந்தத்தேற்றி
 அடலரவப்பகையேறியசுரர்தம்மை
வென்று - * இலங்குமணிநெடுந்தோள்நான்கும்தோன்ற
 விண்முழுதுமெதிர்வரத்தன்தாமமேவி *
சென்றினிதுவீற்றிருந்தவம்மான்றன்னைத்
 தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள் *
என்றும்நின்றானவனிவனென்றேத்திநாளு
 மிறைஞ்சுமினோவெப்பொழுதும்தொண்டீர்நீரே. (கO)

⁂ தில்லைநகர்த்திருச்சித்திரகூடந்தன்னுள்
 திறல்விளங்குமாருதியோடமர்ந்தான்றன்னை *
எல்லையில்சீர்த்தயரதன்றன்மகனாய்த்தோன்றிற்
 றதுமுதலாத்தன்னுலகம்புக்கதீறா *
கொல்லியலும்படைத்தானைக்கொற்றவொள்வாள்
 கோழியர்கோன்குடைக்குலசேகரன்சொற்செய்த *
நல்லியலின்தமிழ்மாலைபத்தும்வல்லார்
 நலந்திகழ்நாரணனடிக்கீழ்நண்ணுவாரே. (கக)

அங்கண் வந்து செவ்வரி தொத்து வலி தனம் குரை அம்பொன் செறி அன்று தில்லை பூநிலா.

குலசேகரப்பெருமாள் திருவடிகளேசரணம்.



பெருமாள் திருமொழி ஸம்பூர்ணம்.

ஆக திருமொழி - கO - க்கு, பாட்டு - கOரு.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

# திருமழிசைப்பிரானருளிச்செய்த

# திருச்சந்தவிருத்தம்.

தனியன்கள்.

கலிவிருத்தம்.

திருக்கச்சிநம்பிகளருளிச்செய்தவை.

தருச்சந்தப்பொழில்தழுவு தாரணியின்துயர்தீர *
திருச்சந்தவிருத்தம்செய் திருமழிசைப்பரன்வருமூர் *
கருச்சந்தும்காரகிலும் கமழ்கோங்குமணநாறும் *
திருச்சந்தத்துடன்மருவு திருமழிசைவளம்பதியே.

இருவிகற்பநேரிசைவெண்பா.

உலகுமழிசையுமுள்ளுணர்ந்து * தம்மில்
புலவர்புகழ்க்கோலால்தூக்க *—உலகுதன்னை
வைத்தெடுத்தபக்கத்தும் * மாநீர்மழிசையே
வைத்தெடுத்தபக்கம்வலிது.

தத்வநிலைபரந்தாமனேயெனல்.

கலிவிருத்தம்.

யமுனகல்யாணிராகம்-ரூபகதாளம்.

பூநிலாயவைந்துமாய்ப் புனற்கண்நின்றநான்குமாய் *
தீநிலாயமூன்றுமாய்ச் சிறந்தகாலிரண்டுமாய் *
மீநிலாயதொன்றுமாகி வேறுவேறுதன்மையாய் *
நீநிலாயவண்ண ! நின்னையார்நினைக்கவல்லரே. (க)

ஆறுமாறுமாறுமா யோரைந்துமைந்துமைந்துமாய் *
ஏறுசீரிரண்டுமூன்று மேழுமாறுமெட்டுமாய் *
வேறுவேறுஞானமாகி மெய்யினோடுபொய்யுமாய் *
ஊறொடோசையாயவைந்து மாயஆயமாயனே. (உ)

ஐந்துமைந்துமைந்துமாகி யல்லவற்றுளாயமாய் *
ஐந்துமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனே *
ஐந்துமைந்துமைந்துமாகி யந்தரத்தணைந்துநின்று *
ஐந்துமைந்துமாயநின்னை யாவர்காணவல்லரே. (ங)

மூன்றுமுப்பதாறினோ டோரைந்துமைந்துமைந்துமாய் *
மூன்றுமூர்த்தியாகிமூன்று மூன்றுமூன்றுமூன்றுமாய் *
தோன்றுசோதிமூன்றுமாய்த் துளக்கமில்விளக்கமாய் *
ஏன்றெனாவியுள்புகுந்த தென்கொலோவெம்மீசனே. (ச)

நின்றியங்குமொன்றலா வுருக்கடோறும்ஆவியாய் *
ஒன்றியுள்கலந்துநின்ற நின்னதன்மையின்னதென்று *
என்றும்யார்க்குமெண்ணிறந்தஆதியாய் ! நின்னுந்திவாய் *
அன்றுநான்முகன்பயந்த வாதிதேவனல்லையே. (ரு)

நாகமேந்துமேருவெற்பை நாகமேந்துமண்ணினை *
நாகமேந்துமாகமாக மாகமேந்துவார்புனல் *
மாகமேந்துமங்குல்தீயோர் வாயுவைந்துமைந்துகாத்து-*
ஏகமேந்திநின்றநீர்மை நின்கணேயியன்றதே. (சு)

ஒன்றிரண்டுமூர்த்தியா யுறக்கமோடுணர்ச்சியாய் *
ஒன்றிரண்டுகாலமாகி வேலைஞாலமாயினாய் *
ஒன்றிரண்டுதீயுமாகி யாயனாயமாயனே *
ஒன்றிரண்டுகண்ணினானு முன்னையேத்தவல்லனே. (எ)

ஆதியானவானவர்க்கு மண்டமாயவப்புறத்து *
ஆதியானவானவர்க்கு மாதியானவாதிநீ *
ஆதியானவானவாண ரந்தகாலம்நீயுரைத்தி *
ஆதியானகாலநின்னை யாவர்காணவல்லரே. (அ)

தாதுலாவுகொன்றைமாலை துன்னுசெஞ்சடைச்சிவன் *
நீதியால்வணங்குபாத நின்மலாயநிலாயசீர் *
வேதவாணர்கீதவேள்வி நீதியானகேள்வியார் *
நீதியால்வணங்குகின்ற நீர்மைநின்கண்நின்றதே. (கூ)

தன்னுளேதிரைத்தெழும் தரங்கவெண்தடங்கடல் *
தன்னுளேதிரைத்தெழுந் தடங்குகின்றதன்மைபோல் *
நின்னுளேபிறந்திறந்து நிற்பவும்திரிபவும் *
நின்னுளேயடங்குகின்ற நீர்மைநின்கண்நின்றதே. (க0)

அபஙபராகம்-ஙபகதாளம்.

சொல்லினால்தொடர்ச்சிநீ சொலப்படும்பொருளும்நீ *
சொல்லினால்சொலப்படாது தோன்றுகின்றசோதிநீ *
சொல்லினால்படைக்கநீ படைக்கவந்துதோன்றினார் *
சொல்லினால்சுருங்கநின் குணங்கள்சொல்லவல்லரே. (கக)

உலகுதன்னைநீபடைத்தி யுள்ளொடுக்கிவைத்தி * மீண்
டுலகுதன்னுளேபிறத்தி யோரிடத்தையல்லையால் *
உலகுநின்னொடொன்றிநிற்க வேறுநிற்றியாதலால் *
உலகுநின்னையுள்ளசூழல் யாவருள்ளவல்லரே. (கஉ)

இன்னையென்றுசொல்லலாவ தில்லையாதும், † இட்டிடைப் *
பின்னைகேள்வனென்பருன் பிணக்குணர்ந்தபெற்றியோர் *
பின்னையாயகோலமோடு பேருமூருமாதியும் *
நின்னையார்நினைக்கவல்லர் நீர்மையால்நினைக்கிலே. (கங)

† "யாதுமிட்டு" என்று நிறுத்தி, "இடை" என்பதை மேலோடே கூட்டவுமாம்.

தூய்மையோகமாயினாய்! துழாயலங்கல்மலையாய்! *
ஆமையாகியாழ்கடல் துயின்றவாதிதேவ! * நின்
நாமதேயமின்னதென்ன வல்லமல்லவாகிலும் *
சாமவேதகீதனாய சக்ரபாணியல்லையே. (கச)

அங்கமாறும்வேதநான்கு மாகிநின்றவற்றுளே *
தங்குகின்றதன்மையாய்! தடங்கடல்பணத்தலை *
செங்கணாகணைக்கிடந்த செல்வமல்குசீரினாய்! *
சங்கவண்ணமன்னமேனி சார்ங்கபாணியல்லையே. (கரு)

தலைக்கணத் † துகள்குழம்பு சாதிசோதிதோற்றமாய் *
நிலைக்கணங்கள்காணவந்து நிற்றியேலும், நீடிரும் *
கலைக்கணங்கள்சொற்பொருள் கருத்தினால்நினைக்கொணா *
மலைக்கணங்கள்போலுணர்த்தும் மாட்சிநின்றன்மாட்சியே. (கசு)

ஏகமூர்த்திமூன்றுமூர்த்தி நாலுமூர்த்தி, நன்மைசேர் *
போகமூர்த்திபுண்ணியத்தின் மூர்த்தியெண்ணில்மூர்த்தியாய் *
நாகமூர்த்திசயனமாய் நலங்கடல்கிடந்து * மேல்
ஆகமூர்த்தியாயவண்ண மென்கொலாதிதேவனே. (கஎ)

விடத்தவாயொராயிர மிராயிரம்கண்வெந்தழல் *
விடுத்துவீள்விலாதபோகம் மிக்கசோதிதொக்கசீர் *
தொடுத்துமேல்விதானமாய பௌவநீரராவணை *
படுத்த ‡ பாயல்பள்ளிகொள்வ தென்கொல்வேலைவண்ணனே!. ()

புள்ளதாகிவேதநான்கு மோதினாய், அதன்றியும் *
புள்ளின்வாய்பிளந்துபுட் கொடிப்பிடித்தபின்னரும் *
புள்ளையூர்தியாதலா லதென்கொல்மின்கொள்நேமியாய்! *
புள்ளின்மெய்ப்பகைக்கடல் கிடத்தல்காதலித்ததே. (கக)

கூசமொன்றுமின்றி மாசுணம்படுத்து, வேலைநீர் *
பேசநின்றதேவர்வந்து பாடமுன்கிடந்ததும் *
பாசநின்றநீரில்வாழு மாமையானகேசவா! *
ஏசவன்றுநீகிடந்த வாறுகூறுதேரவே. (உ0)

அடாணாராகம்-ஆதிதாளம்.

அரங்கனேதரங்கநீர் கலங்கவன்று, குன்றுசூழ் *
§ மரங்கடேயமாநிலம் குலுங்கமாசுணம்சுலாய் *
நெருங்க, நீகடைந்தபோது நின்றசூரென்செய்தார்? *
குரங்கையாளுகந்தவெந்தை கூறுதேரவேறிதே. (உக)

பண்டுமின்றுமேலுமா யோர்பாலனாகி, ஞாலமேழும் *
உண்டுமண்டியாலிலைத் துயின்றவாதிதேவனே! *
வண்டுகிண்டுதண்டுழா யலங்கலாய்!, கலந்தசீர்ப் *
புண்டரீகபாவைசேரு மார்பபூமிநாதனே!. (உஉ)

---

† துகள் - குற்றம். புழுதி. ‡ "பாயலும் பள்ளியும் பாழியும் படுக்கை" என்று நிகண்டு. § மரங்கள்தேய.

வானிறத்தோர்சீயமாய் வளைந்தவாளெயிற்றவன் *
ஊன்நிறத்துகிர்த்தல மழுத்தினாய், உலாயசீர் *
நால்நிறத்தவேதநாவர் நல்லயோகினால்வணங்கு *
பால்நிறக்கடல்கிடந்த பற்பநாபனல்லையே. (உங)

கங்கைநீர்பயந்தபாத பங்கயத்தெம்மண்ணலே ! *
அங்கையாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய் ! *
சிங்கமாயதேவதேவ ! தேனுலாவுமென்மலர் *
மங்கை, மன்னிவாழுமார்ப ! ஆழிமேனிமாயனே!. (உச)

வரத்தினில்சிரத்தைமிக்க வாளெயிற்றுமற்றவன் *
உரத்தினில்கரத்தைவைத் துகிர்த்தலத்தையூன்றினாய் *
இரத்திநீயிதென்னபொய் யிரந்தமண்வயிற்றுளே
கரத்தி*உன்கருத்தை யாவர்காணவல்லர்? கண்ணனே !. (உரு)

ஆணினோடுபெண்ணுமாகி யல்லவோடுநல்லவாய் *
ஊணொடோசையூறுமாகி யொன்றலாதமாயையாய் *
பூணிபேணுமாயனாகிப் பொய்யினோடுமெய்யுமாய் *
காணிபேணுமாணியாய்க் கரந்துசென்றகள்வனே. (உசு)

விண்கடந்தசோதியாய்! விளங்குஞானமூர்த்தியாய் *
பண்கடந்ததேசமேவு பாவநாசநாதனே ! *
எண்கடந்தயோகினோ டிரந்துசென்றுமாணியாய் *
மண்கடந்தவண்ணநின்னை யார்மதிக்கவல்லரே ?. (உஎ)

படைத்தபாரிடந்தளந் ததுண்டுமிழ்ந்து, பௌவநீர் *
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்தபெற்றியோய் ! *
மிடைத்தமாலிமாலிமான் விலங்குகாலனூர்புக *
படைக்கலம்விடுத்தபல் படைத்தடக்கைமாயனே. (உஅ)

பரத்திலும்பரத்தையாதி பௌவநீரணைக்கிடந்து – *
உரத்திலுமொருத்திதன்னை வைத்துகந்ததன்றியும் *
நரத்திலும்பிறத்திநாத ஞானமூர்த்தியாயினாய் *
ஒருத்தருந்நினாதுதன்மை யின்னதென்னவல்லரே. (உகூ)

வானகமும்மண்ணகமும் வெற்புமேழ்கடல்களும் *
போனகம்செய்தாலிலைத் துயின்றபுண்டரீகனே ! *
தேனகஞ்செய்தண்ணறு மலர்த்துழாய்நன்மாலையாய் *
கூனகம்புகத்தெறித்த கொற்றவில்லியல்லையே. (ங0)

பியாகடைராகம்-திரிபுடைதாளம்.

காலநேமிகாலனே ! கணக்கிலாதகீர்த்தியாய் ! *
ஞாலமேழுமுண்டு பண்டோர்பாலனாயபண்பனே ! *
வேலைவேவவில்வளைத்த வெல்சினத்தவீர ! * நின்
பாலராயபத்தர்சித்தம் முத்திசெய்யும்மூர்த்தியே. (ஙக)

குரக்கினப்படைகொடு குரைகடலின்மீதுபோய் *
அரக்கரங்கரங்கவெஞ் சரந்துரந்தவாதிநீ *

இரக்கமண்கொடுத்தவற் கிரக்கமொன்றுமின்றியே *
பரக்கவைத்தளந்துகொண்ட பற்பபாதனல்லையே. (௩உ)

மின்னிரத்தெயிற்றரக்கன் வீழவெஞ்சரம்துரந்து *
பின்னவற்கருள்புரிந் தரசளித்தபெற்றியோய் ! *
நன்னிறத்தொரின்சொலேழை பின்னைகேள்வ!, மன்னுசீர்ப் *
பொன்னிறத்தவண்ணனாய புண்டரீகனல்லையே. (௩௩)

ஆதியாதியாதிநீ யொரண்டமாதியாதலால் *
சோதியாதசோதிநீ அதுண்மையில்விளங்கினாய் *
வேதமாகிவேள்வியாகி விண்ணினோடுமண்ணுமாய் *
ஆதியாகியாயனாய மாயமென்னமாயமே. (௩௪)

அம்புலாவுமீனுமாகி யாமையாகி, ஆழியார் *
தம்பிரானுமாகிமிக்க தன்புமிக்கதன்றியும் *
கொம்பராவுநுண்மருங்கு லாயர்மாதர்பிள்ளையாய் *
எம்பிரானுமாயவண்ண மென்கொலோவெம்மீசனே !. (௩௫)

ஆடகத்தபூண்முலை யசோதையாய்ச்சிபிள்ளையாய் *
சாடுதைத்தோர்புள்ளதாவி கள்ளதாயபேய்மகள் *
வீடவைத்தவெய்யகொங்கை ஐயபாலமுதுசெய்து *
ஆடகக்கைமாதர்வா யமுதமுண்டதென்கொலோ. (௩௬)

காய்த்தநீள்விளங்கனி யுதிர்த்தெதிர்ந்தபூங்குருந்தம்
சாய்த்து * மாபிளந்தகைத்தலத்தகண்ணனென்பரால் *
ஆய்ச்சிபாலையுண்டுமண்ணையுண்டு வெண்ணெயுண்டு * பின்
பேய்ச்சிபாலையுண்டு பண்டொரேனமாயவாமனா !. (௩௭)

கடங்கலந்தவன்கரி மருப்பொசித்து ஓர்பொய்கைவாய் *
விடங்கலந்தபாம்பின்மேல் நடம்பயின்றநாதனே ! *
குடங்கலந்தகூத்தனாய கொண்டல்வண்ண! தண்டுழாய் *
வடங்கலந்தமாலைமார்ப! காலநேமிகாலனே. (௩௮)

வெற்பெடுத்துவேலைநீர் கலக்கினாய், அதன்றியும் *
வெற்பெடுத்துவேலைநீர் வரம்புகட்டி, வேலைசூழ் *
வெற்பெடுத்தவிஞ்சிசூ ழிலங்கைகட்டழித்தநீ *
வெற்பெடுத்துமாரிகாத்த மேகவண்ணனல்லையே. (௩௯)

ஆனைகாத்தோரானைகொன் றதன்றியாயர்பிள்ளையாய் *
ஆனைமேத்தியானெயுண்டி, அன்றுகுன்றமொன்றினால் *
ஆனைகாத்து, மையரிக்கண் மாதரார்திறத்து * முன்
ஆனையன்றுசென்றடர்த்த மாயமென்னமாயமே. (௪0)

அரபிராகம்-நபகதாளம்.

ஆயனாகியாயர்மங்கை வேயதோள்விரும்பினாய் *
ஆயநின்னையாவர்வல்ல ரம்பரத்தொடிம்பராய் *
மாயமாயமாயைகொல் அதன்றிநீவகுத்தலும் *
மாயமாயமாக்கினா யுன்மாயமுற்றுமாயமே. (௪க)

வேறிசைந்தசெக்கர்மேனி நீறணிந்தபுன்சடை *
கீறுதிங்கள்வைத்தவன் கைவைத்தவன்கபால்மிசை *
ஊறுசெங்குருதியால் நிறைத்தகாரணந்தனை
ஏறுசென்றடர்த்தவீச ! பேசுகூசமின்றியே. (சஉ)

வெஞ்சினத்தவேழவெண் மருப்பொசித்து, † உருத்தமா *
கஞ்சனைக்கடிந்துமண் ணளந்துகொண்டகாலனே ! *
வஞ்சனத்துவந்தபேய்ச்சியாவிபாலுள்வாங்கினாய் *
அஞ்சனத்தவண்ணனாய் ஆதிதேவனல்லையே. (சங)

பாலிநீர்மைசெம்பொனீர்மை பாசியின்பசும்புறம் *
போலுநீர்மைபொற்புடைத் தடத்துவண்டுவிண்டுலா *
நீலநீர்மையென்றிவை நிறைந்தகாலம்நான்குமாய் *
மாலினீர்மைவையகம் மறைத்ததென்னநீர்மையே. (சச)

மண்ணுளாய்கொல்விண்ணுளாய்கொல் மண்ணுளேமயங்கிநின்று *
எண்ணுமெண்ணகப்படாய்கொ லென்னமாயை ? நின்தமர் *
கண்ணுளாய்கொல்சேயைகொ லனந்தன்மேல்கிடந்தவெம்
புண்ணியா * புனந்துழாயலங்கலம்புனிதனே. (சரு)

தோடுபெற்றதண்டுழா யலங்கலாடுசென்னியாய் *
கோடுபற்றியாழியேந்தி யஞ்சிறைப்புள்ளூர்தியாய் *
நாடுபெற்றநன்மை நண்ணமில்லையேனும், நாயினேன் *
வீடுபெற்றிறப்பொடும் பிறப்பறுக்குமாசொலே. (சசு)

காரொடொத்தமேனிநங்கள் கண்ண ! விண்ணின்நாதனே ! *
நீரிடத்தராவணைக் கிடத்தியென்பவர் அன்றியும் *
ஓரிடத்தையல்லையெல்லை யில்லையென்பராதலால் *
சேர்விடத்தைநாயினேன் தெரிந்திறைஞ்சுமாசொலே. (சஎ)

குன்றில்நின்று வானிருந்து நீள்கடல்கிடந்து * மண்
ஒன்றுசென் றதொன்றையுண் டதொன்றிடந்துபன்றியாய் *
நன்றுசென்றநாளவற்றுள் நல்லுயிர்படைத்து, அவர்க்கு *
அன்றுதேவமைத்தளித்த வாதிதேவனல்லையே. (சஅ)

‡‡ கொண்டைகொண்டகோதைமீது தேனுலாவுகூனிகூன் *
உண்டைகொண்டரங்கவோட்டி யுள்மகிழ்ந்தநாதனூர் *
நண்டையுண்டுநாரைபேர வாளைபாய, நீலமே *
அண்டைகொண்டுகெண்டைமேயு மந்தணீரரங்கமே. (சகூ)

வெண்டிரைக்கருங்கடல் சிவந்துவேவ, முன்னோர்நாள் *
திண்டிறல்சிலைக்கைவாளி விட்டவீரர்சேருமூர் *
எண்டிசைக்கணங்களு மிறைஞ்சியாடுதீர்த்தநீர் *
வண்டிரைத்தசோலைவேலி மன்னுசீரரங்கமே. (ருo)

---

† "உருத்து" என்றுபாடாந்தரம்.

தோடிராகம்-ஆதிதாளம்.

சரங்களைத்துரந்து வில்வளைத்து, இலங்கைமன்னவன் *
சிரங்கள்பத்தறுத்துதிர்த்த செல்வர்மன்னுபொன்னிடம் *
பரந்துபொன்நிரந்துநுந்தி வந்தலைக்கும்வார்புனல் *
அரங்கமென்பர்நான்முகத் தயன்பணிந்தகோயிலே. (ருக)

பொற்றையுற்றமுற்றல்யானை போரெதிர்ந்துவந்ததை *
பற்றியுற்று, மற்றதன் மருப்பொசித்தபாகனூர் *
சிற்றெயிற்றுமுற்றல்மூங்கில் மூன்றுதண்டரொன்றினர் *
அற்றபற்றர்சுற்றிவாழு மந்தணீரரங்கமே. (ருஉ)

மோடியோடிலச்சையாய சாபமெய்திமுக்கணன் *
கூடுசேனைமக்களோடு கொண்டுமண்டிவெஞ்சமர்த்
தோட * வாணனாயிரம் கரங்கழித்தவாதிமால் *
பீடுகோயில்கூடுநீ ரரங்கமென்றபேரதே. (ருங)

இலைத்தலைச்சரந்துரந் திலங்கைகட்டழித்தவன் *
மலைத்தலைப்பிறந்திழிந்து வந்துநுந்துசந்தனம் *
குலைத்தலைத்திறுத்தெறிந்த குங்குமக்குழம்பினோடு - *
அலைத்தொழுகுகாவிரி யரங்கமேயவண்ணலே. (ருச)

மன்னுமாமலர்க்கிழத்தி வையமங்கைமைந்தனாய் *
பின்னுமாயர்பின்னைதோள் மணம்புணர்ந்ததன்றியும் *
உன்னபாதமென்னசிந்தை மன்னவைத்துநல்கினாய் *
பொன்னிசூழரங்கமேய புண்டரீகனல்லையே. (ருரு)

இலங்கைமன்ன னைந்தொடைந்து பைந்தலைநிலத்துக் *
கலங்கவன்றுசென்றுகொன்று வென்றிகொண்டவீரனே *
† விலங்குநூலர் வேதநாவர் நீதியானகேள்வியார் *
வலங்கொளக்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே. (ருசு)

சங்குதங்குமுன்கைநங்கை கொங்கைதங்கலுற்றவன் *
அங்கமங்கவன்றுசென் றடர்த்தெறிந்தவாழியான் *
கொங்குதங்குவார்குழல் மடந்தைமார்குடந்தைநீர் *
பொங்குதண்குடந்தையுள் கிடந்தபுண்டரீகனே. (ருஎ)

மரங்கெடநடந்தடர்த்து மத்தயானைமத்தகத்து - *
உரங்கெடப்புடைத் தோர்கொம்பொசித்துகந்தவுத்தமா ! *
துரங்கம்வாய்பிளந்து மண்ணளந்தபாத ! * வேதியர்
வரங்கொளக்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே. (ருஅ)

† விலங்கு - உடம்பு.

சாலிவேலிதண்வயல் தடங்கிடங்குபூம்பொழில் *
கோலமாடநீடுதண் குடந்தைமேயகோவலா ! *
காலநேமிவக்கரன் கரன்முரன்சிரமவை *
காலனோடுகூடவில் குனித்தவில்கைவீரனே!. (ருகூ)

செழுங்கொழும்பெரும்பனிபொழிந்திட * உயர்ந்தவேய்
விழுந்துலர்ந்தெழுந்துவிண் புடைக்கும்வேங்கடத்துள்நின்று - *
எழுந்திருந்துதேன்பொருந்து பூம்பொழில்தழைக்கொழும் *
செழுந்தடங்குடந்தையுள் கிடந்தமாலுமல்லையே. (சூ0)

கல்யாணிராகம்-ரூபகதாளம்.

நடந்தகால்கள்நொந்தவோ! நடுங்கஞாலமேனமாய் *
இடந்தமெய்குலுங்கவோ ! விலங்குமால்வரைச்சுரம் *
கடந்தகால்பரந்தகா விரிக்கரைக்குடந்தையுள் *
கிடந்தவாறெழுந்திருந்துபேசு, வாழி, கேசனே!. (சூக)

கரண்டமாடுபொய்கையுள் கரும்பனைப்பெரும்பழம் *
புரண்டுவீழ, வாளைபாய் குறுங்குடிநெடுந்தகாய் ! *
திரண்டதோளிரணியன் சினங்கொளாகமொன்றையும் *
இரண்டுகூறுசெய்துகந்த சிங்கமென்பதுன்னையே. (சூஉ)

நன்றிருந்துயோகநீதி நண்ணுவார்கள்சிந்தையுள் *
சென்றிருந்துதீவினைகள் தீர்த்ததேவதேவனே *
குன்றிருந்தமாடநீடு பாடகத்துமூரகத்தும் *
நின்றிருந்துவெஃகணைக் கிடந்ததென்னநீர்மையே. (சூங)

நின்றதெந்தையூரகத் திருந்ததெந்தைபாடகத்து - *
அன்றுவெஃகணைக்கிடந்த தென்னிலாதமுன்னெலாம் *
அன்றுநான்பிறந்திலேன் பிறந்தபின்மறந்திலேன் *
நின்றதுமிருந்ததும் கிடந்ததுமென்நெஞ்சுளே. (சூச)

நிற்பதுமோர்வெற்பகத் திருப்பவிண்கிடப்பதும் *
நற்பெருந்திரைக்கடலுள் நானிலாதமுன்னெலாம் *
அற்புதனனந்தசயன னாதிபூதன்மாதவன் *
நிற்பதுமிருப்பதும் கிடப்பதுமென்நெஞ்சுளே. (சூரு)

இன்றுசாதல்நின்றுசாத லன்றியாரும்வையகத்து - *
ஒன்றிநின்றுவாழ்தலின்மை கண்டுநீசரென்கொலோ *
அன்றுபாரளந்தபாத போதையுன்னி, வானின்மேல் *
சென்றுசென்றுதேவரா யிருக்கிலாதவண்ணமே. (சூசு)

சண்டமண்டலத்தினூடு சென்றுவீடுபெற்றுமேல் *
கண்டுவீடிலாத காதலின்பம்நாளுமெய்துவீர் *
புண்டரீகபாத புண்ணியகீர்த்திநுஞ்செவிமடுத்து - *
உண்டு, நும்முறுவினைத் துயருள்நீங்கியுய்மினோ. (சூஎ)

முத்திறத்துவாணியத் திரண்டிலொன்றுநீசர்கள் *
மத்தராய்மயங்குகின்ற திட்டதிலிறந்துபோந்து - *
எத்திறத்துமுய்வதோ ருபாயமில்லையுய்குறில் *
தொத்திறுத்ததண்டுழாய் நன்மாலைவாழ்த்திவாழ்மினோ. (சுஅ)

காணிலுமுருப்பொலார் செவிக்கினாதகீர்த்தியார் *
பேணிலும்வரந்தர மிடுக்கிலாததேவரை *
ஆணமென்றடைந்துவாழும் ஆதர்காள்! எம்மாதிபால் *
பேணிநும்பிறப்பெனும் பிணக்கறுக்ககிற்றிரே. (சுகூ)

குந்தமோடுசூலம்வேல்கள் தோமரங்கள்தண்டுவாள் *
பந்தமானதேவர்கள் பரந்துவானகமுற *
வந்தவாணனீரைஞ்ஞூறு தோள்களைத்துணித்தநாள் *
அந்தவந்தவாகுல மமரரேயறிவரே. (எ0)

சாவேரிராகம்-திரிபுடைதாளம்.

வண்டுலாவுகோதைமாதர் காரணத்தினால்வெகுண்டு - *
இண்டவாணனீரைஞ்ஞூறு தோள்களைத்துணித்தநாள் *
முண்டனீறன்மக்கள்வெப்பு மோடியங்கியோடிடக் *
கண்டு, நாணிவாணனுக் கிரங்கினானெம்மாயனே. (எக)

போதில்மங்கைபூதலக் கிழத்திதேவியன்றியும் *
போதுதங்குநான்முகன்மக னவன்மகன்சொலில் *
மாதுதங்குகூறன்ஏறதூர்தியென்று, வேதநூல் *
ஓதுகின்றதுண்மை யல்லதில்லைமற்றுரைக்கிலே. (எஉ)

மரம்பொதச்சரந்துரந்து வாலிவீழமுன்னொர்நாள்
உரம்பொதச்சரந்துரந்த வும்பராளியெம்பிரான் *
வரம்குறிப்பில்வைத்தவர்க் கலாதுவானமாளிலும் *
நிரம்பிநீடுபோகமெத் திறத்தும்யார்க்குமில்லையே. (எங)

அறிந்தறிந்துவாமன னடியிணைவணங்கினால் *
செறிந்தெழுந்தஞானமோடு செல்வமும்சிறந்திடும் *
மறிந்தெழுந்ததெண்டிரையுள் மன்னுமாலைவாழ்த்தினால் *
பறிந்தெழுந்துதீவினைகள் பற்றறுதல்பான்மையே. (எச)

ஒன்றிநின்றிநல்தவம்செய் தூழியூழிதோறெலாம் *
நின்றுநின்றவன்குணங்க ளுள்ளியுள்ளம்தூயராய் *
சென்றுசென்றுதேவதேவ ரும்பரும்பரும்பராய் *
அன்றியெங்கள்செங்கண்மாலை யாவர்காணவல்லரே. (எரு)

புன்புலவழியடைத் தரக்கிலச்சினைசெய்து *
நன்புலவழிதிறந்து ஞானநற்சுடர்கொளீஇ *
என்பிலெள்கிநெஞ்சுருகி யுள்கனிந்தெழுந்ததோர் *
அன்பிலன்றியாழியானை யாவர்காணவல்லரே. (எசு)

எட்டுமெட்டுமெட்டுமா யொரேழுமேழுமேழுமாய் *
எட்டுமூன்றுமொன்றுமாகி நின்றவாதிதேவனை *
எட்டினாயபேதமோ டிறைஞ்சிநின்றவன்பெயர் *
எட்டெழுத்துமோதுவார்கள் வல்லர்வானமாளவே. (எஎ)

சோர்விலாதகாதலால் தொடக்கறாமனத்தராய் *
நீரராவணைக்கிடந்த நின்மலன்நலங்கழல் *
ஆர்வமோடிறைஞ்சிநின் றவன்பெயரெட்டெழுத்தும் *
வாரமாகவோதுவார்கள் வல்லர்வானமாளவே. (எஅ)

பத்தினோடுபத்துமா யொரேழினோடொரொன்பதாய் *
பத்திநான்திசைக்கணின்ற நாடுபெற்றநன்மையாய் *
பத்தினாயதோற்றமோ டொராற்றல்மிக்கவாதிபால் *
பத்தராமவர்க்கலாது முத்திமுற்றலாகுமே. (எகூ)

வாசியாகிநேசமின்றி வந்தெதிர்ந்ததேனுகன் *
நாசமாகிநாளுலப்ப நன்மைசேர்பனங்கனிக்கு *
வீசிமேல்நிமிர்ந்ததோளி னில்லையாக்கினாய்கழற்கு *
ஆசையாமவர்க்கலா லமரராகலாகுமே. (அ0)

சுருட்டிராகம்-திரிபுடைதாளம்.

கடைந்தபாற்கடல்கிடந்து காலநேமியைக்கடிந்து *
உடைந்தவாலிதன்றனக் குதவவந்திராமனாய் *
மிடைந்தவேழ்மரங்களு மடங்கவெய்து, வேங்கடம் *
அடைந்தமாலபாதமே யடைந்துநாளுமுய்ம்மினோ. (அக)

எத்திறத்துமொத்துநின் றுயர்ந்துயர்ந்தபெற்றியோய் ! *
முத்திறத்துமூரிநீ ரராவணைத்துயின்ற * நின்
பத்துறுத்தசிந்தையோடு நின்றுபாசம்விட்டவர்க்கு *
எத்திறத்துமின்பமிங்கு மங்குமெங்குமாகுமே. (அஉ)

மட்டுலாவுதண்டுழா யலங்கலாய் ! புலன்கழல் *
விட்டுவீள்விலாதபோகம் விண்ணில்நண்ணியேறினும் *
எட்டினோடிரண்டெனும் கயிற்றினால்மனந்தனைக்
கட்டி * வீடிலாதுவைத்த காதலின்பமாகுமே. (அங)

பின்பிறக்கவைத்தனன்கொ லன்றிநின்றுதன்கழற்கு - *
அன்புறைக்கவைத்தநா ளறிந்தனன்கொலாழியான் *
தன்திறத்தொரன்பிலா வறிவிலாதநாயினேன் *
என்திறத்திலென்கொலெம் பிரான்குறிப்புல்வைத்ததே. (அச)

நச்சராவணைக்கிடந்த நாத! பாதபோதினில் *
வைத்தசிந்தைவாங்குவித்து நீங்குவிக்கநீயினம் *
மெய்த்தன்வல்லையாதலா லறிந்தனன், நின்மாயமே *
உய்த்துநின்மயக்கினில் மயக்கலென்னைமாயனே. (அரு)

சாடுசாடுபாதனே! சலங்கலந்தபொய்கைவாய் *
ஆடரவின்வன்பிடர் நடம்பயின்றநாதனே *
கோடுநீடுகையசெய்ய பாதநாளுமுள்ளினால் *
வீடநாகமெய்செயாத வண்ணமென்கொல்கண்ணனே. (அகூ)

நெற்றிபெற்றகண்ணன்விண்ணி னாதனோடுபோதின்மேல் *
நற்றவத்துநாதனோடு மற்றுமுள்ளவானவர் *
கற்றபெற்றியால்வணங்கு பாதநாதவேத * நின்
பற்றலாலோர்பற்றுமற்ற துற்றிலேனுரைக்கிலே. (அஎ)

வெள்ளைவேலைவெற்புநாட்டி வெள்ளெயிற்றராவளாய் *
அள்ளலாக்கடைந்தவன் றருவரைக்கொராமையாய் *
உள்ளநோய்கள்தீர்மருந்து வானவர்க்களித்த * எம்
வள்ளலாரையன்றிமற்றோர் தெய்வம்நான்மதிப்பனே. (அஅ)

பார்மிகுத்தபாரமுன் னொழிச்சுவானருச்சுனன் *
தேர்மிகுத்தமாயமாக்கி நின்றுகொன்றுவென்றிசேர் *
மாரதர்க்குவான்கொடுத்து வையமைவர்பாலதாம் *
சீர்மிகுத்தநின்னலாலோர் தெய்வம்நான்மதிப்பனே. (அகூ)

குலங்களாயவீரிரண்டி லொன்றிலும்பிறந்திலேன் *
நலங்களாயநற்கலைகள் நாலிலும்நவின்றிலேன் *
புலன்களைந்தும்வென்றிலேன் பொறியிலேன்புனித! * நின்
இலங்குபாதமன்றிமற்றோர் பற்றிலேனெம்மீசனே. (கூ0)

சங்கராபரணராகம்-ரூபகதாளம்.

பண்ணுலாவுமென்மொழிப் படைத்தடங்கணாள்பொருட்டு - *
எண்ணிலாவரக்கரை நெருப்பினால்நெருக்கினாய் *
கண்ணலாலோர்கண்ணிலேன் கலந்தசுற்றம்மற்றிலேன் *
எண்ணிலாதமாய! நின்னை யென்னுள்நீக்கலென்றுமே. (கூக)

விடைக்குலங்களேழடர்த்து, வென்றிவேல்கண்மாதரார் *
கடிக்கலந்ததோள்புணர்ந்த காலியாய், வேலைநீர் *
படைத்தடைத்ததிற்கிடந்து முன்கடைந்து, நின்றனக்கு - *
அடைக்கலம்புகுந்தவென்னை யஞ்சலென்னவேண்டுமே. (கூஉ)

சுரும்பரங்குதண்டுழாய் துதைந்தலர்ந்தபாதமே *
விரும்பிநின்றிறைஞ்சுவேற் கிரங்குஅரங்கவாணனே ! *
கரும்பிருந்தகட்டியே ! கடல்கிடந்தகண்ணனே ! *
இரும்பரங்கவெஞ்சரம் துரந்தவில்லிராமனே !. (கூ௩)

ஊனின்மேயவாவிநீ உறக்கமோடுணர்ச்சிநீ *
ஆனில்மேயவைந்துநீ அவற்றுள்நின்றதூய்மைநீ *
வானிளுேடுமண்ணும்நீ வளங்கடற்பயனும்நீ *
யானும்நீயதன்றியெம் பிரானும்நீயிராமனே. (கூச)

அடக்கரும்புலன்கள்ஐந் தடக்கியாசையாமவை *
துடக்கறுத்துவந்துநின் தொழிற்கணின்றவென்னைநீ *
விடக்கருதிமெய்செயாது மிக்கோராசையாக்கிலும் *
கடல்கிடந்தநின்னலாலோர் கண்ணிலேனெம்மண்ணலே. (கூ௫)

வரம்பிலாதமாய! மாய! வையமேழும்மெய்ம்மையே *
வரம்பிலூழியேத்திலும் வரம்பிலாதகீர்த்தியாய் ! *
வரம்பிலாதபல்பிறப் பறுத்துவந்துநின்கழல் *
பொருந்துமா, திருந்தநீ வரஞ்செய்புண்டரீகனே. (கூ௬)

வெய்யவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்துசீர்க்
கைய! செய்யபோதில்மாது சேருமார்பநாதனே ! *
ஐயிலாயவாக்கைநோ யறுத்துவந்துநின்னடைந்து - *
உய்வதோருபாயம்நீ யெனக்குநல்கவேண்டுமே. (கூஎ)

மறம்துறந்துவஞ்சமாற்றி யைம்புலன்களாசையும்
துறந்து * நின்கண்ணாசையே தொடர்ந்துநின்ற நாயினேன் *
பிறந்திறந்துபேரிடர்ச் சுழிக்கணின்றுநீங்குமா *
மறந்திடாதுமற்றெனக்கு மாய ! நல்கவேண்டுமே. (கூஅ)

காட்டினான்செய்வல்வினைப் பயந்தனால்மனந்தனை *
நாட்டிவைத்துநல்லவல்ல செய்யவெண்ணினாரென *
கேட்டதன்றியென்னதாவி பின்னைகேள்வ !, நின்னொடும் *
பூட்டிவைத்தவென்னைநின்னுள் நீக்கல்பூவைவண்ணனே. (கூகூ)

பிறப்பினோடுபேரிடர்ச் சுழிக்கண்நின்றும்நீங்குமஃது - *
இறப்பவைத்தஞானநீ சரைக்கரைக்கொடேற்றுமா *
பெறற்கரியநின்னபாத பத்தியானபாசநம் *
பிறற்கரியமாயனே யெனக்குநல்கவேண்டுமே. (௧00)

சேஞ்சுருட்டிராகம்-ரூபகதாளம்.

இரந்துரைப்பதுண்டுவாழி ஏமநீர்நிறத்தமா *
வரந்தரும்திருக்குறிப்பில் வைத்ததாகில்மன்னுசீர் *
பரந்தசிந்தையொன்றிநின்று நின்னபாதபங்கயம் *
நிரந்தரம்நினைப்பதாக நீநினைக்கவேண்டுமே. (௧0௧)

வீள்விலாதகாதலால் விளங்குபாதபோதில்வைத்து - *
உள்ளுவேனதூனநோ யொழுக்குமாறெழிக்குநீர் *
பள்ளிமாயபன்றியாய வென்றிவீர! குன்றினல் *
துள்ளுநீர்வரம்புசெய்த தோன்றலொன்றுசொல்லிடே. (கOஉ)

திருக்கலந்துசேருமார்ப! தேவதேவதேவனே! *
இருக்கலந்தவேதநீதி யாகிநின்றநின்மலா *
கருக்கலந்தகாளமேக மேனியாயநின்பெயர் *
உருக்கலந்தொழிவிலா துரைக்குமாறுரைசெயே. (கOங)

கடும்கவந்தன்வக்கரன் கரன்முரன்சிரமவை *
இடந்துகூறுசெய்தபல் படைத்தடக்கைமாயனே *
கிடந்திருந்துநின்றியங்கு போதும்நின்னபொற்கழல் *
தொடர்ந்து ‡ வீள்விலாததோர் தொடர்ச்சிநல்கவேண்டுமே. (கOச)

மண்ணையுண்டுமிழ்ந்துபின் னிரந்துகொண்டளந்து * மண்
கண்ணுளல்லதில்லையென்று வென்றகாலமாயினாய் *
பண்ணைவென்றவின்சொல்மங்கை கொங்கைதங்குபங்கயக்
கண்ண * நின்னவண்ணமல்ல தில்லையெண்ணும்வண்ணமே. (கOரு)

கறுத்தெதிர்ந்தகாலநேமி காலனோடுகூட * அன்
றறுத்தவாழிசங்குதண்டு வில்லும்வாளுமேந்தினாய் *
தொறுக்கலந்தவூனமஃதொழிக்கவன்றுகுன்றம்முன் *
பொறுத்தநின்புகழ்க்கலாலோர் நேசமில்லைநெஞ்சமே. (கOசு)

காய்சினத்தகாசிமன்னன் வக்கரன்பவுண்டிரன் *
மாசினத்தமாலிமான் சுமாலிகேசிதேநுகன் *
நாசமுற்றுவீழநாள் கவர்ந்தநின்கழற்கலால் *
நேசபாசமெத்திறத்தும் வைத்திடேனெம்மீசனே. (கOஎ)

கேடில்சீர்வரத்தனாய்க் கெடும்வரத்தயனரன் *
நாடினோடெட்டாயி ரத்தன்நாடுநண்ணிலும் *
வீடதானபோகமெய்தி வீற்றிருந்தபோதிலும் *
கூடுமாசையல்லதொன்று கொள்வனோகுறிப்பிலே. (கOஅ)

சுருக்குவாரையின்றியே சுருங்கினாய், சுருங்கியும் *
பெருக்குவாரையின்றியே பெருக்கமெய்துபெற்றியோய் *
செருக்குவார்கள் தீக்குணங்கள் தீர்த்ததேவதேவனென்று - *
இருக்குவாய்முனிக்கணங்க ளேத்தயானுமேத்தினேன். (கOகூ)

தூயனாயுமன்றியும் சுரும்புலாவுதண்டுழாய் *
மாய! நின்னைநாயினேன் வணங்கிவாழ்த்துமீதெலாம் *
நீயுநின்குறிப்பினிற் பொறுத்துநல்கு, வேலைநீர் *
பாயலோடுபத்தர்சித்தம் மேயவேலைவண்ணனே. (ககO)

‡ வீடிலாதது - என்றும்பாடம்.

மோஹனராகம்-ருபகதாளம்.

வைதுநின்னைவல்லவா பழித்தவர்க்கும், மாறில்போர் *
செய்துநின்னசெற்றதீயில் வெந்தவர்க்கும், வந்துன்னை *
எய்தலாகுமென்ப ராதலாலெம்மாய! நாயினேன் *
செய்தகுற்றம்நற்றமாக வேகொள்ஞாலநாதனே. (ககக)

வாள்களாகிநாள்கள்செல்ல நோய்மைகுன்றிமூப்பெய்தி *
மாளுநாளதாதலால் வணங்கிவாழ்த்தென்நெஞ்சமே *
ஆளதாகுநன்மையென்று நன்குணர்ந்ததன்றியும் *
மீள்விலாதபோகம்நல்க வேண்டும்மாலபாதமே. (ககஉ)

சலங்கலந்தசெஞ்சடைக் கறுத்தகண்டன், வெண்டலை *
புலன்கலங்கவுண்ட பாதகத்தன்வன்துயர்கெட *
அலங்கல்மார்வில்வாசநீர் கொடுத்தவநடுத்தசீர் *
நலங்கொள்மாலைநண்ணும்வண்ணமெண்ணுவாழிநெஞ்சமே. (ககஙு)

ஈனமாயவெட்டுநீக்கி யேதமின்றிமீதுபோய் *
வானமாளவல்லையேல் வணங்கிவாழ்த்தென்நெஞ்சமே *
ஞானமாகிநாயிருகி ஞாலமுற்றுமோரெயிற்று *
ஏனமாயிடந்தமூர்த்தி யெந்தைபாதமெண்ணியே. (ககச)

அத்தனாகியன்னையாகி யாளுமெம்பிரானுமாய் *
ஒத்தொவ்வாதபல்பிறப் பொழித்துநம்மையாட்கொள்வான் *
முத்தனார்முகுந்தனார் புகுந்துநம்முள்மேவினார் *
எத்தினாலிடர்க்கடல் கிடத்தியேழைநெஞ்சமே. (ககரு)

மாறுசெய்தவாளரக்கன் நாளுலப்ப, அன்றிலங்கை *
நீறுசெய்துசென்றுகொன்று வென்றிகொண்டவீரனார் *
வேறுசெய்துதம்முளென்னை வைத்திடாமையால் * நமன்
கூறுசெய்துகொண்டிருந்த குற்றமெண்ணவல்லனே. (ககசூ)

அச்சம்நோயொடல்லல்பல் பிறப்பவாயமூப்பிவை *
வைத்தசிந்தைவைத்தவாக்கை மாற்றிவானிலேற்றுவான் *
அச்சுதனநந்தகீர்த்தி யாதியந்தமில்லவன் *
நச்சுநாகணைக்கிடந்த நாதன்வேதகீதனே. (ககஎ)

சொல்லினும்தொழிற்கணும் தொடக்கறாதவன்பினும் *
அல்லுநன்பகலினோடு மானமாலைகாலையும் *
வல்லிநாண்மலர்க்கிழத்தி நாத! பாதபோதினை *
புல்லியுள்ளம்வீள்விலாது பூண்டுமீண்டதில்லையே. (ககஅ)

சாற்றுப்பாட்டுக்கள்.

⁂ பொன்னிசூழரங்கமேய பூவைவண்ணமாய கேள் *
என்னதாவியென்னும் வல்வினையினுள்கொழுந்தெழுந்து - *
உன்னபாதமென்னநின்ற வொண்சுடர்க்கொழுமலர் *
மன்னவந்துபூண்டுவாட்ட மின்றியெங்குநின்றதே. (கககூ)

⁂ இயக்கறுதபல்பிறப்பி லென்னைமாற்றியின்றுவந்து - *
உயக்கொள்மேகவண்ணநண்ணி யென்னிலாயதன்னுளே *
மயக்கினான்றன்மன்னுசோதி யாதலாலென்னாவிதான் *
இயக்கலாமறுத்தருத வின்பவீடுபெற்றதே. (கஉO)

---

பூவாறைந்துமூன்று நின்றுநாகமொன்றுதி தாதுதன்னுள்சொல்—சொல்லுலகின்னைதூய்மை அங்கம்தலையேகவிடத்த புள்கூசமரங்கன்—அரங்கன் பண்டு வானிறக்கங்கை வரத்திலாண் விண்படைபரத்தில் வானகம்காலன்—காலன்குரக்குமின்னுதி அம்புஆடகம் காய்த்தகடம் வெற்பானைஆயன்—ஆயன்வேறு வெஞ்சினப்பால்மண்தோடு கார்குன்று கொண்டை வெண்டிரைச்சரம்—சரம்பொற்றைமோடியிலை மன்னிலங்கை சங்குமரம் சாலிசெழுநடந்த—நடந்தகரண்டம் நன்றுநின்றது நிற்பதுமின்று சண்டமுத்திறம் காணில்குந்தம்வண்டு—வண்டுபோதில்மரம் அறிந்துஒன்றிபுன்புலஎட்டுச் சோர்வுபத்தின்வாசிகடை—கடைஎத்திரம்மட்டுப் பின்நச்சராச்சாடுநெற்றிவெள்ளைபார்குலம்பண்—பண்விடைசுரும்பூன் அடக்கவரம்பு வெய்யமறம்காட்டினான் பிறப்பிரந்து—இரந்துவிள் திருக்கடும்மண்ணைக்கருத்து காய்சினக்கேடு சுருக்குத்தூயன்வைது—வைதுவாள்சலம் ஈனமத்தன்மாறச்சம்சொல் பொன்னிஇயக்கறுக்காவல்.

திருமழிசையாழ்வார் திருவடிகளேசரணம்.



திருச்சந்தவிருத்தம் ஸம்பூர்ணம்.

ஆகூ பாட்டு - கஉO.

---

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

---

# தொண்டரடிப்பொடியாழ்வார் வைபவம்.

𑌕𑍋𑌦𑌣𑍍𑌡𑍇𑌜𑍍𑌯𑍇𑌷𑍍𑌠𑌨𑌕𑍍𑌷𑌤𑍍𑌰𑍇𑌮𑌣𑍍𑌡𑌙𑍍𑌗𑍁𑌡𑌿𑌪𑍁𑌰𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍।
𑌚𑍋𑌳𑍋𑌰𑍍𑌵𑍍𑌯𑌾𑌂𑌵𑌨𑌮𑌾𑌲𑌾𑌂𑌶𑌂𑌭𑌕𑍍𑌤𑌪𑌦𑍍𑌰𑍇𑌣𑍁𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇॥

கோதண்டேஜ்யேஷ்ட்ட நக்ஷத்ரேமண்டங்குடிபுரோத்பவம்-
சோளோர்வ்யாம்வநமாலாம்ஶம் பக்தபத்ரேணுமாஶ்ரயே.

---

இவ்வாழ்வார், திருமண்டங்குடியென்கிற க்ராமத்தில் கலி-௨௯௮ வதான ப்ரபவஹூ மார்கழிமீ க்ருஷ்ணபக்ஷம் சதுர்த்தசி செவ்வாய்க் கிழமைகூடின கேட்டைநக்ஷத்ரத்தில், ஸ்ரீவைஜயந்தி வநமாலிகாம்ஸராய், ஸ்ரீவைஷ்ணவசோழியருக்குப் புத்ரராய்ப்ராம்ஹணவர்ணத்திலே திருவவதரித்தருளினார்.

எம்பெருமான் இவரை விசேஷகடாக்ஷம் செய்தருள, அத்தாலே ஜ்ஞாநபக்தி வைராக்யங்களை நன்றாகவுடையரான இவர்க்கு விப்ரநாராயணர் என்று திருநாமஞ்சாத்தி, காலந்தப்பாமல் சௌளம் உபநயநம் முதலானதுகளையும் பண்ணுவித்து, வேதம் ஶாத்ரம்முதலான எல்லாவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள்; இவரும், எல்லாவித்யைகளிலும் ஸமர்த்தராய், மிகவும் விரக்தராய், ஸ்ரீரங்கக்ஷேத்ரத்துக் கெழுந்தருளி, அனந்தனென்னும் அணையின்மேல் பள்ளிகொள்ளும் பரவாசுதேவரான அழகியமணவாளரை ஸேவித்தார். இவர் பகவத்விஷயத்தின் வாசியறிந்து பற்றினதையே ஹேதுவாகக்கொண்டு, பெரியபெருமாளும், தம்முடைய க்ருபையாலே, குழலழகர் வாயழகர் கண்ணழகர் என்று சொல்லப்படுகிற தம்வடிவழகைக்காட்டி இவரைத் தம்பக்கலிலே மிகவும் பக்தியுக்தராம்படி கடாக்ஷித்தருளினார். விப்ரநாராயணரும், அரங்கனார்க்காட் செய்யவேணும் என்று துளவத்தொண்டிலே மண்டி, ஸ்ரீபுண்டரீகர் மாலாகாரர் கஜேந்த்ராழ்வான் பெரியாழ்வார் இவர்களைப்போல் நித்யம் திருமாலை

கட்டித் திருவரங்கனூர்க்குச் சாத்தித் திருநந்தவநம் செய்துகொண்டிருந்தார்.

இப்படி யிருக்கையில், திருக்கரம்பனூரில் அதிசுந்தரையான தேவதேவி என்றொரு வேஶ்யை, நிசுளாபுரியென்னும் உரையூர்க்கு அதிபதியான சோளராஜாவை ஸேவித்துத் திரும்பிவருகிறபோது, வழியில் இளைப்பாறுகைக்காக ஸ்ரீ விப்ரநாராயணர்செய்கிற திருநந்தவநத் திருச்சோலைநிழலிலே ஒருமரத்தடியில் தன்ஸகிகளோடே கூடவிருந்தாள். அத்திருச்சோலையில் அநேகவிதமான பல வ்ருக்ஷங்கள் நிறைந்து எப்போதும் வஸந்தமா யிருப்பதையும், ஸுகந்தமான புஷ்பங்கள் பரிமளம் வீசுவதையும் தேவதேவிகண்டு, தன் தமக்கையுடன் இப்பொழிலின் அழகைச் சுற்றிச்சுழன்று பார்த்துக்கொண்டாடி, அங்கே விப்ரநாராயணரைக் கண்டார்கள். அவரும், திருமேனியெங்கும் வளர்ந்த மயிரையுடையராய், துளஸீ பத்மாக்ஷமாலையும் த்வாதசோர்த்வ புண்ட்ரங்களும் தரித்துக்கொண்டு, திவ்யோத்யாநத்திலுள்ள செடிகொடிகளுக்குத் திருமஞ்சனம்பரிமாறுகை முதலான கைங்கர்யத்தில் நிரதராயிருக்க, அதை யிவர்களிருவரும் ஆச்சரியத்துடன் பார்த்துக்கொண்டிருந்தார்கள்; அவரும், தம்கைங்கர்யத்தில் ஊற்றத்தால் இவர்களை முகமெடுத்துப்பாராமல் அநாதரித்திருந்தார். அவ்வளவில், தேவதேவியும் தன்தமக்கையைப்பார்த்து, "இவன் அங்கபூர்த்தியில்லாதவனோ? பைத்தியக்காரனோ? நாம்வந்து முன்னேநிற்க பாராதிருக்கிறானே!" என்ன; தமக்கையும், அவளைக்குறித்து, "ரங்கேசகைங்கர்யத்தில்வைத்த நெஞ்சையுடையராய் மஹாவிரக்தரானவிவர் உன்ரூபஸம்பத்தியைக் காறியுமிழ்ந்திருப்பர், இவரை உன்புன்சிரிப்பு கடைக்கண்பார்வை முதலானதுகளால் மோஹிப்பித்தாயாகில், நீயே வேஶ்யைகளில் முக்யை; உனக்கு நான் ஆறுமாஸம் தாஸியாயிருக்கிறேன்" என்றாள்; தேவதேவியும், ஸ்வாக்ரஜையைநோக்கி, "இவரை நான் வசீகரியாவிட்டால் உனக்கு ஆறுமாஸம் வெள்ளாட்டியாவேன்" என்று ப்ரதிஜ்ஞைபண்ணி, தன் ஸகிகளோடேகூட ஸ்வாக்ரஜையையு மனுப்பி, தன் அலங்காரத்தையும் கழற்றிக்கொடுத்து, ஸாத்விகவேஷம்தரித்து ஆழ்வார் திருவடிகளில் தண்டம்ஸமர்ப்பித்து நின்றாள்;

ஆழ்வாரும் "இதுஎன்ன? பெண்ணே!" என்று கேட்க; இவளும், "வேஶ்யைவயிற்றில் பாபவசத்தாற்பிறந்த என்னை என்தாயானவள் 'எல்லாரையும் அடித்துத் திரவியம் ஸம்பாதி' என்றாள்' அடி

யேன் 'முன்பு பாபங்களைப்பண்ணி யிஜ்ஜந்மத்தில் பிறந்ததுபோதாதோ? இன்னம் பாபங்கள்பண்ணிப் படுகுழியில் விழவேணுமோ?' என்று, த்ரவியத்தில் லுப்தையான அவளைவிட்டு, ரங்கேசகைங்கர்யத்தில்வைத்த நெஞ்சையுடைய தேவரீர் திருவடிகளை ஆஸ்ரயித்து உஜ்ஜீவிக்கலாம் என்றுவந்தேன்; கதியில்லாத அடியேனைத் திருநந்தவநம் காக்கிற காரியத்தில் நியமித்தால், தேவரீர் பெருமாளுக்குத் திருமாலை ஸமர்ப்பித்து மாதூகரம்பண்ணி யெழுந்தருளுமளவும் காத்திருக்கிறேன்" என்றாள், அவருமிரங்கியருளி, தன்திருவாராதநமான எம்பெருமானுக்கு பக்ஷத்தை அமுதுசெய்யப்பண்ணி, தாமுமமுதுசெய்து, அமுதுசெய்தருளின சேஷமுமிரங்கியருளினர். அதின் மற்றைநாள் அவளும் திருநந்தவநத்தில் திருத்துழாய்முதலான பூச்செடிகளுக்குக் குழிகட்டிச் சோதித்துக் கொத்தித் திருமஞ்சநம் பரிமாறிக்கொண்டு இப்படியே ஆறுமாஸம் அநுவர்த்தித்தாள்.

பின்னையும் ஒருநாள் குழிகட்டிச்சோதித்து திருமஞ்சநம் பரிமாறிக்கொண்டு வாராநிற்கச்செய்தே, வர்ஷாகாலமானவாறே பெருவர்ஷம் வர்ஷிக்க, விப்ரநாராயணரும் பர்ணசாலையில் சேர்ந்திருக்க, இவளும் இப்பாலிருந்து நனையாநிற்கக்கண்டு "உள்ளே வா" என்றழைக்க; அவளும் உள்ளே புகுந்தவளவிலே, ஈரப்புடவையுடனே யிருக்கிறதைக்கண்டு தம்முடைய உத்தரீயத்தை ப்ரஸாதிக்க; அவளும் தரித்துக்கொண்டு, ஆழ்வாரைப்பார்த்து "திருவடிகளைப் பிடிக்கிறேன்" என்ன; ஆழ்வாரும் அநுகூலிக்க; அவளும் திருவடிகளைப் பிடியாநிற்கச்செய்தே, "ஸ்வாமீ! அடியேனுக்கு ஹிதமாயிருப்பதொரு வார்த்தை யருளிச்செய்யவேணும்" என்று மந்தஸ்மிதஞ்செய்து கடைக்கண்ணால்பார்க்க; அவரும் மனங்கலங்கி அவள்கையைப்பிடிக்க; அவளும் "தந்யையானேன்" என்று அவரை காடாலிங்கநம் பண்ணிக்கொண்டு ரமித்து, அவர்மநஸ்ஸைத் தன்விஷயத்தில் மக்நமாம்படிபண்ணினள். அதின்மற்றைநாள் தன்வீட்டினின்றும் ஆபரணங்களை அழைப்பித்து, ஸர்வாபரண பூஷிதையாய், இவரைத் தன்வசப்படுத்தி மயக்கி, ஒருவரையொருவர் ஒருக்ஷணமுங்கூடப் பிரியக்ஷமரன்றியே திருநந்தவனத்திலே யிருந்தார்கள். தம்ஸம்பந்தத்தை ஸஹிப்பித்து, இவரைத் தன்வசவர்த்தியாக்கி, தன்ஸகிகளும் தமக்கையுங்கண்டு ஸ்லாகிக்கும்படி ப்ரதிஜ்ஞையை நிறைவேற்றித் தன்வீட்டிற்குவந்து, இவருடைய வர்ணாஸ்ரமதர்மங்களையும் கொலைத்து, ப்ரக்ருதிபரவசராக்கி, சிலகாலம் ரமியாநிற்க; இவரும், மிகவும் விஷயப்ரவணராய், தன்தர்மம் அநுஷ்டாநம் ஸந்திஸாவித்ரியையும் மறந்

து, ஸ்திரீபோகமே போதுபோக்காக வர்த்திக்க; இவள் இப்போது நமக்கு நல்லசமயம் வாய்த்தது" என்று, அவருடைய எல்லாசொத்துக்களையும் அபஹரித்து, "அவர்கையில் இனி தநமில்லை" என்றுஅறிந்தவாறே தள்ளிவிட்டாள்; இவர், அவள்வீட்டுவாசலில் காத்துக்கொண்டு கிடந்தார்.

அவ்வளவிலே, பெருமாளும் பிராட்டியும் அவ்வீதியிலே யெழுந்தருளாநிற்க; பிராட்டி யிவரைக்கண்டு மந்தஸ்மிதம்பண்ணி, "வேசிவீட்டின் வாசலில் காத்துக்கிடப்பவரார்?" என்று பெருமாளைக்கேட்க; பெருமாளும் பிராட்டியுடனே, "நமக்குப் பூமாலைதரும் விப்ரநாராயணன் வேசியின் வலையிலகப்பட்டு தநத்தையெல்லாமிழந்து அவள்வாசலில் துக்கித்துக்கிடக்கிறான்" என்றருளிச்செய்ய; பிராட்டியும் பெருமாளுடனே "நமக்கு அந்தரங்கரானவர் அப்படி விஷயாஸக்தரானாலும் அவரை விஷயாஸக்தியிலுண்டான பாபத்தைப்போக்கிக் கடாக்ஷித்தருளவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் பிராட்டிவார்த்தைக்கிசைந்து, தம் பஞ்சபாத்ரங்களில் சுத்தோதகபாத்ரத்தை யெடுத்துக்கொண்டு வேசியின்வாசலில் நின்று "தேவதேவீ கதவைத்திற" என்ன; அவள் "யார்?" என்றுகேட்க; "நான் அழகிய மணவாளதாஸன், விப்ரநாராயணனனுப்பவந்தேன்" என்ன; தேவதேவியும் சடக்கென்று கதவைத்திறந்து "ஏன்?" என்றுவினவ; பெருமாளும், "விப்ரநாராயணன் உனக்கு இந்தப்பொன் வட்டிலைத் தந்தான்" என்ன; அவளும் ஸந்தோஷத்துடன் வட்டிலை வாங்கிக்கொண்டு "அவரை உள்ளேவரச்சொல்லும்" என்ன; அழகியமணவாளதாஸனும், விப்ரநாராயணரண்டையிற்சென்று "தேவதேவி உம்மை உள்ளேவரச்சொன்னாள்" என்று சொல்ல; செவிக்கு இனிதான இவ்வார்த்தையை யிவர்கேட்டு ஸந்துஷ்டராய் உள்ளேபுகுந்து, அவளுடன் க்ரீடாரதிபரானார்; பெருமாளும்கோயிலிலேபோந்து திருவனந்தாழ்வான்மேல் சாய்ந்தருளினார்.

அவ்வளவில், பொழுதுவிடிந்தவாறே திருக்காப்பைநீக்க, ஸந்நிதியிலிருந்த சுத்தோதகபாத்ரத்தைக்காணமல், கோயில் பரிகரத்தாரடையபயப்பட்டு, ராஜகர்த்தர்க்கு அறிவித்தார்கள். நிசுளாபுரியரசன் இச்செய்தியைக்கேட்டு, நம்பியார்பரிசாரகர் எல்லாரையும் அபராததண்டம் வாங்கும்படி உத்தரவுசெய்தான். அப்போது, தேவதேவி வீட்டு வேலைக்காரி ஜலம்கொண்டுவருவதற்காக அங்கேவர, தன்னோடு ஸம்பந்தமுடையா னொருவனை பாதிக்கக்கண்டு, "இதுவென்?" எ

ன்றுகேட்க; சுத்தோதகபாத்ரம்போனதை அவளுக்குச்சொல்ல; அவள் அதைக்கேட்டு, "விப்ரநாராயணன் எங்கள்தேவதேவிக்கு ஒரு பொன்வட்டில் கொடுத்திருக்கிறான், அவர்கள் மெத்தைத்தலைக்கணையிலே பாத்ரமிருக்கிறது" என்றாள்; அவன் இதைக்கேட்டு ராஜகார்த்தருக்குச்சொன்னான்; உடனே அவர்கள்வந்து இவர்களைப்பிடித்துக்கொண்டு, அவள் வீட்டைச்சோதித்து, வட்டிலையு மெடுத்துக்கொண்டுபோய் ராஜாவுக்குக் காட்டினார்கள். அரசனும், வேசியைக்குறித்து, "பெருமாளுடைமையை நீ யிப்படி அபஹரிக்கலாமோ?" என்ன; "நான் பெருமாளதென்றறியேன், இவன் தன்வட்டிலென்று தன்தூதன் அழகியமணவாளனென்பானொருவன் கையில் கொடுத்தனுப்பினான், அறியாமல் வாங்கினேன்" என்றாள். இவரும், நமக்கொரு தூதனுமில்லை, நான் வட்டிலையுமறியேன்" என்ன; அவள் "உண்டு," என்ன; இவர் "இல்லை" என்ன; இப்படி யிருவருடைய விவாதத்தைக்கேட்டு, ராஜா, அந்தவேசியை அபராததண்டம்வாங்கி வட்டிலையும் பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, இவரை விசாரித்து தண்டிக்கக்கடவோமென்று காவலில்வைத்துத் தன்வீட்டுக்குப்போனான்.—பெருமாள், ராஜாவின் ஸ்வப்நத்திலேயெழுந்தருளி, நடந்த வ்ருத்தாந்தங்களை யறிவித்து, "விப்ரநாராயணர் நிர்த்தோஷர், தண்டிக்கத்தக்கவரன்று, அவரைவிட்டு முன்புபோலே திருமாலை கைங்கர்யத்தில் நிறுத்தும்" என்று நியமிக்க; சோளபூபதியும், நம்பெருமாள் தனக்கு ஸ்வப்நத்தில் நியமித்தருளினபடியைச் சொல்லி ஆச்சரியப்பட்டு, விப்ரநாராயணரை யழைத்துத் தெண்டனிட்டான். இவரும், விஷயாந்தரங்களில் ருசியைக்காறியுமிழ்ந்து, எல்லாபாபங்களுக்கும் ப்ராயஶ்சித்தமான பகவத்பாகவத ஸ்ரீ பாததீர்த்தத்தை ஸ்வீகரித்து பரிசுத்தரானார்.

அநந்தரம், இவர், க்ராமகுலாதிகளால்வரும் அநர்த்தப்பேறன்றிக்கே, ஸ்ரீவைஷ்ணவர்களுடைய ஸ்ரீபாததூளி (தொண்டரடிப்பொடி) என்றே தமக்கு நிலைநின்ற நிரூபகமான திருநாமத்தையுடையராய், திருவரங்கந் திருப்பதியை யிருப்பாகப்பெற்று, அழகியமணவாளரை யல்லது அறியாதேயிருக்க; இதை தேவதேவி கண்டு, "இவரைப்போலே உஜ்ஜீவிக்கவேணும்" என்று நினைத்து, தன் சொத்துக்களையெல்லாம் நம்பெருமாளுக்கு ஸமர்ப்பித்து, அவர் ஸந்நிதியில் திருவலகிட்டுக்கொண்டிருந்தாள்.

இவ்வாழ்வார்க்கு பரபக்தி பரஜ்ஞான பரமபக்திகள் தலைமண்டையிட்டு, "பெரியபெருமாளே ஸர்வவிதபந்து" என்று இவர் திரு

மந்த்ராநுஸந்தாநத்தாலே அநுஸந்தித்தருளி, யமாதிகள் தலையிலே அடியிடலாம்படியான அம்மந்த்ரவைபவத்தைச்சொல்லி ஆநந்தித்து, ஸ்ரீவைஷ்ணவர்களடியில் முடியைவைத்து, திருமாலைகட்டித் திருமாலைசாத்த நினைத்து, பெரியபெருமாள் § ஶ்ரோதாவாகவும் தான் ‡ வக்தாவாகவும் திருமாலைபாடி ப்ரகாசிப்பித்தருளி, இச்சரீரத்தில் ஆத்மபுத்தியை நிவர்த்திப்பித்து, திருமந்த்ரநிஷ்ட்டராய், தமக்குப் பெருமாளுண்டாக்கின ததீயசேஷத்வத்தை ப்ரார்த்தித்தருளி, இப்படி இவ்வர்த்தங்களை யெல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி, "திருமாலை, திருப்பள்ளியெழுச்சி" என்கிற திவ்யப்ரபந்தங்களை யருளிச்செய்து, லோகத்தை வாழ்வித்தருளினார்.

மண்டங்குடியதனில்வாழவந்தோன்வாழியே
  மார்கழியில்கேட்டைநாள்வந்துதித்தான்வாழியே
தெண்டிரைசூழரங்கரையேதெய்வமென்றான்வாழியே
  திருமாலையொன்பதஞ்சும்செப்பினான்வாழியே
பண்டுதிருப்பள்ளியெழுச்சிபத்துரைத்தான்வாழியே
  பாவையர்கள்கலவிதன்னைப்பழித்தசெல்வன்வாழியே
தொண்டுசெய்துதுளவத்தால்துலங்கினான்வாழியே
  தொண்டரடிப்பொடியாழ்வார்துணைப்பதங்கள்வாழியே.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளேசரணம்.



§ ஶ்ரோதா - கேட்கிறவன், ‡ வக்தா - சொல்லுகிறவன்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருமாலை.

தனியன்.

இருவிகற்பநேரிசை வெண்பா.

திருவரங்கப்பெருமாளரைய ரருளிச்செய்தது.

மற்றொன்றும்வேண்டா மனமேமதிளரங்கர் *
கற்றினம்மேய்த்த கழலிணைக்கீழ் * —உற்ற
திருமாலைபாடும்சீர்த் தொண்டரடிப்பொடியெம்
பெருமானை * எப்பொழுதும் பேசு.

---

கலிநிலைத்துறை.

ஸஹஸ்ரநாமாகம்-இயல்.

‡‡ காவலிற்புலனைவைத்துக் கலிதன்னைக்கடக்கப்பாய்ந்து *
† நாவலிட்டுழிதருகின்றோம் நமன்தமர்தலைகள்மீதே *
மூவுலகுண்டுமிழ்ந்த முதல்வ! நின்நாமம்கற்ற *
$ ஆவலிப்புடைமைகண்டா யரங்கமாநகருளானே. (க)

‡‡ பச்சைமாமலைபோல்மேனி பவளவாய்கமலச்செங்கண் *
அச்சுதா! அமரரேறே! ஆயர்தம்கொழுந்தேயென்னும் *
இச்சுவைதவிரயான்போ யிந்திரலோகமாளும் *
அச்சுவைபெறினும்வேண்டே னரங்கமாநகருளானே. (உ)

வேதநூல்பிராயம்நூறு மனிதர்தாம்புகுவரேலும் *
பாதியுமுறங்கிப்போகும் நின்றதில்பதினையாண்டு *
பேதைபாலகனதாகும் பிணிபசிமூப்புத்துன்பம் *
ஆதலால்பிறவிவேண்டே னரங்கமாநகருளானே. (ந)

மொய்த்தவல்வினையுள்நின்று மூன்றெழுத்துடையபேரால் *
கத்திரபந்துமன்றே பராங்கதிகண்டுகொண்டான் *
இத்தனையடியரானார்க் கிரங்குநம்மரங்கனாய *
பித்தனைப், பெற்றுமந்தோ! பிறவியுள்பிணங்குமாறே. (ச)

---

† நாவல் - தோற்றவர்கள்முன்னே ஜயித்தவர் சொல்லும்சொல்; "அறையோ அறை" என்னுமாப்போலே. $ ஆவலிப்பு - பலம், கர்வம்.

பெண்டிரால்சுகங்களுய்ப்பான் பெரியதோரிடும்பைபூண்டு - *
உண்டிராக்கிடக்கும்போது - உடலுக்கேகரைந்துநைந்து *
தண்டுழாய்மாலைமார்பன் தமர்களாய்ப்பாடியாடி *
தொண்டுபூண்டமுதமுண்ணுத் தொழும்பர்சோறுகக்குமாறே. (ரு)

மறம்சுவர்மதிளெடுத்து மறுமைக்கேவெறுமைபூண்டு *
புறம்சுவரோட்டைமாடம் புரளும்போதறியமாட்டீர் *
அறம்சுவராகிநின்ற வரங்கனுர்க்காட்செய்யாதே *
புறம்சுவர்கோலஞ்செய்து புள்கவ்வக்கிடக்கின்றீரே. (சு)

புலையறமாகிநின்ற புத்தொடுசமணமெல்லாம் *
கலையறக்கற்றமாந்தர் காண்பரோகேட்பரோதான் *
தலையறுப்புண்டும்சாவேன் சத்தியங்காண்மின்ஐயா ! *
சிலையினுலிலங்கைசெற்ற தேவனேதேவனுவான். (எ)

வெறுப்பொடுசமணர்முண்டர் விதியில்சாக்கியர்கள் * நின்பால்
பொறுப்பரியனகள்பேசில் போவதேநோயதாகி *
† குறிப்பெனக்கடையுமாகில் கூடுமேல், தலையை * ஆங்கே
அறுப்பதேகருமங்கண்டா யரங்கமாநகருளானே. (அ)

மற்றுமோர்தெய்வமுண்டே மதியிலாமானிடங்காள் ! *
உற்றபோதன்றிநீங்களொருவனென்றுணரமாட்டீர் *
அற்றமேலொன்றறியீ ரவனல்லால்தெய்வமில்லை *
கற்றினம்மேய்த்தவெந்தை கழலிணைபணிமினீரே. (கூ)

நாட்டினுன்தெய்வமெங்கும் நல்லதோரருள்தன்னுலே *
காட்டினுன்திருவரங்க முய்பவர்க்குய்யும்வண்ணம் *
கேட்டிரேநம்பிமீர்காள் ! கெருடவாகநனும்நிற்க *
‡ சேட்டைதன்மடியகத்துச் செல்வம்பார்த்திருக்கின்றீரே. (க0)

ஒருவில்லாலோங்குமுந்நீ ரடைத்துலகங்களுய்ய *
செருவிலேயரக்கர்கோனைச் செற்றநம்சேவகனுர் *
மருவியபெரியகோயில் மதிள்திருவரங்கமென்னு *
கருவிலேதிருவிலாதீர் ! காலத்தைக்கழிக்கின்றீரே. (கக)

நமனும் § முற்கலனும்பேச நரகில்நின்றார்கள்கேட்க *
நரகமேசுவர்க்கமாகும் நாமங்களுடையநம்பீ *
அவனதூரரங்கமென்னுது - அயர்த்துவீழ்ந்தளியமாந்தர் *
கவலையுள்படுகின்றுரென் றதனுக்கேகவர்கின்றேனே. (கஉ)

எறியுநீர்வெறிகொள்வேலை மாநிலத்துயிர்களெல்லாம் *
வெறிகொள்பூந்துளவமாலை விண்ணவர்கோனையேத்த *
அறிவிலாமனிதரெல்லா மரங்கமென்றழைப்பராகில் *
பொறியில்வாழ்நரகமெல்லாம் புல்லெழுந்தொழியுமன்றே. (கஙு)

† குறித்தல் - நினைத்தல், கடத்தல், கிடைத்தல். ‡ சேட்டை - அலக்ஷ்மி. § முற்கலன் - முத்கலன் என்பவன்.

‡‡ வண்டினமுரலும்சோலை மயிலினமாலும்சோலை *
கொண்டல்மீதணவும்சோலை குயிலினம்கூவும்சோலை *
அண்டர்கோனமரும்சோலை அணிதிருவரங்கமென்னா *
‡ மிண்டர்பாய்ந்துண்ணும்சோற்றை விலக்கிநாய்க்கிடுமினீரே. (கச)

மெய்யர்க்கேமெய்யனாகும் விதியிலாவென்னைப்போல *
பொய்யர்க்கேபொய்யனாகும் புட்கொடியுடையகோமான் *
உய்யப்போமுணர்வினார்கட் கொருவனென்றுணர்ந்தபின்னை *
ஐயப்பாடறுத்துத்தோன்று மழகனூரரங்கமன்றே. (கரு)

சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடிசைந்தகாலம் *
மாதரார்கயல்கணென்னும் வலையுள்பட்டழுந்துவேனை *
போதரேயென்றுசொல்லிப் புந்தியில்புகுந்து * தன்பால்
ஆதரம்பெருகவைத்த வழகனூரரங்கமன்றே. (கசு)

விரும்பிநின்றேத்தமாட்டேன் விதியிலேன்மதியொன்றில்லை *
இரும்புபோல்வலியநெஞ்ச மிறையிறையுருகும்வண்ணம் *
சுரும்பமர்சோலைசூழ்ந்த வரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டென் கண்ணிணைகளிக்குமாறே!. (கஎ)

$ இனிதிரைத்திவலைமோத வெறியும்தண்பரவைமீதே *
தனிகிடந்தரசுசெய்யும் தாமரைக்கண்ணனெம்மான்
கனியிருந்தனையசெவ்வாய் கண்ணனைக்கண்டகண்கள் *
பனியரும்புதிருமாலோ என்செய்கேன்பாவியேனே. (கஅ)

‡‡ § குடதிசைமுடியவைத்துக் குணதிசைபாதம்நீட்டி *
வடதிசைபின்புகாட்டித் தென்திசையிலங்கைநோக்கி *
கடல்நிறக்கடவுளெந்தை யரவணைத்துயிலுமாகண்டு *
உடலெனக்குருகுமாலோ என்செய்கேனுலகத்தீரே. (ககூ)

பாயுநீரரங்கந்தன்னுள் பாம்பணைப்பள்ளிகொண்ட *
மாயனார்திருநன்மார்பும் மரதகவுருவும்தோளும் *
தூயதாமரைக்கண்களும் துவரிதழ்ப்பவளவாயும் *
ஆயசீர்முடியும்தேசு மடியரோர்க்ககலலாமே.? (உ0)

பணிவினால்மனமதொன்றிப் பவளவாயரங்கனார்க்கு *
துணிவினால்வாழமாட்டாத் தொல்லைநெஞ்சே! நீசொல்லாய் *
அணியனார்செம்பொனாய அருவரையனையகோயில் *
மணியனார்கிடந்தவாற்றை மனத்தினால்நினைக்கலாமே.? (உக)

பேசிற்றேபேசலல்லால் பெருமையொன்றுணரலாகாது - *
¶ ஆசற்றார்தங்கட்கல்லா லறியலாவானுமல்லன் *
† மாசற்றார்மனத்துளானை வணங்கிநாமிருப்பதல்லால் *
பேசத்தானாவதுண்டோ பேதைநெஞ்சே! நீசொல்லாய். (உஉ)

---

‡ மிண்டர் - மூர்க்கர். $ இனிது திரை என்பது "இனிதிரை" எனக்கடைக்குறையாயிற்று. § குடதிசை - மேற்கு; குணதிசை - கிழக்கு ¶ ஆசு- குற்றம். † மாசு - குற்றம்.

கங்கையில்புனிதமாய காவிரிநடுவுபாட்டு *
பொங்குநீர்பரந்துபாயும் பூம்பொழிலரங்கந்தன்னுள் *
எங்கள்மாலிறைவனீசன் கிடந்ததோர்கிடக்கைகண்டும் *
எங்ஙனம்மறந்துவாழ்கேனேழையேனேழையேனே.! (௨௩)

வெள்ளநீர்பரந்துபாயும் விரிபொழிலரங்கந்தன்னுள் *
கள்வனார், கிடந்தவாறும் கமலநன்முகமுங்கண்டும் *
உள்ளமேவலியைபோலு மொருவனென்றுணரமாட்டாய் *
கள்ளமேகாதல்செய்துன் கள்ளத்தேகழிக்கின்றாயே. (௨௪)

குளித்துமூன்றனலையோம்பும் குறிகொளந்தண்மைதன்னை *
ஒளித்திட்டேனென்கணில்லை நின்கணும்பத்தனல்லேன் *
களிப்பதென்கொண்டுநம்பி! கடல்வண்ணா! கதறுகின்றேன் *
அளித்தெனக்கருள்செய்கண்டா யரங்கமாநகருளானே. (௨௫)

போதெல்லாம்போதுகொண்டுன் பொன்னடிபுனையமாட்டேன் *
தீதிலாமொழிகள்கொண்டுன் திருக்குணம்செப்பமாட்டேன் *
காதலால்நெஞ்சமன்பு கலந்திலேனதுதன்னாலே *
ஏதிலேனரங்கர்க்கல்லே னென்செய்வான்தோன்றினேனே. (௨௬)

குரங்குகள்மலையைநூக்கக் குளித்துத்தாம்புரண்டிட்டோடி *
தரங்கநீரடைக்கலுற்ற சலமிலாவணிலம்போலேன் *
மரங்கள்போல்வலியநெஞ்சம் வஞ்சனேன்நெஞ்சுதன்னால் *
அரங்கனார்க்காட்செய்யாதே அளியத்தேனயர்க்கின்றேனே. (௨௭)

உம்பராலறியலாகா வொளியுளார், ஆனைக்காகி *
செம்புலாலுண்டுவாழும் முதலைமேல்சீறிவந்தார் *
நம்பரமாயதுண்டே நாய்களோம், சிறுமையோரா *
எம்பிராற்காட்செய்யாதே யென்செய்வான்தோன்றினேனே. (௨௮)

ஊரிலேன்காணியில்லை உறவுமற்றொருவரில்லை *
பாரில்நின்பாதமூலம் பற்றிலேன்பரமமூர்த்தி ! *
காரொளிவண்ணனே! கண்ணனே! கதறுகின்றேன் *
ஆருளர்களைகணம்மா! அரங்கமாநகருளானே. (௨௯)

மனத்திலோர்தூய்மையில்லை வாயிலோரின்சொலில்லை *
சினத்தினால்செற்றம்நோக்கித் தீவிளிவிளிவன்வாளா *
புனத்துழாய்மாலையானே! பொன்னிசூழ்திருவரங்கா! *
எனக்கினிக்கதியென்சொல்லா யென்னையாளுடையகோவே.! (௩௰)

தவத்துளார்தம்மிலல்லேன் தனம்படைத்தாரிலல்லேன் *
உவர்த்தநீர்போலவென்ற னுற்றவர்க்கொன்றுமல்லேன் *
துவர்த்தசெவ்வாயினார்க்கே துவக்கறத் § துரிசனானேன் *
அவத்தமேபிறவிதந்தா யரங்கமாநகருளானே. (௩௧)

§ துரிசன் - கள்ளன்.

ஆர்த்துவண்டலம்பும்சோலை யணிதிருவரங்கந்தன்னுள் *
காத்திரளனையமேனிக் கண்ணனே! உன்னைக்காணும் *
மார்க்கமொன்றறியமாட்டா மனிதரில்துரிசனாய *
மூர்க்கனேன்வந்துநின்றேன் மூர்க்கனேன்மூர்க்கனேனே. (௩௨)

மெய்யெல்லாம்போகவிட்டு விரிகுழலாரில்பட்டு *
பொய்யெல்லாம்பொதிந்துகொண்ட † போட்கனேன்வந்துநின்றேன்
ஐயனே! அரங்கனே! உன் னருளென்னுமாசைதன்னால் *
பொய்யனேன்வந்துநின்றேன் பொய்யனேன்பொய்யனேனே. (௩௩)

உள்ளத்தேயுறையும்மாலை உள்ளுவாருணர்வொன்றில்லா *
கள்ளத்தேனாநும்தொண்டாய்த் தொண்டுக்கேகோலம்பூண்டு - *
உள்ளுவாருள்ளிற்றெல்லா முடனிருந்தறிதியென்று *
வெள்கிப்போயென்னுள்ளேநான் ‡ விலவறச்சிரித்திட்டேனே. (௩௪)

தாவியன்றுலகமெல்லாம் தலைவிளாக்கொண்டவெந்தாய் *
சேவியேனுன்னையல்லால் சிக்கெனச்செங்கண்மாலே! *
ஆவியே! அமுதே! என்ற னாருயிரனையவெந்தாய்! *
பாவியேனுன்னையல்லால் பாவியேன்பாவியேனே. (௩௫)

மழைக்கன்றுவரைமுனேந்தும் மைந்தனே! மதுரவாறே! *
உழைக்கன்றேபோலநோக்க முடையவர்வலையுள்பட்டு - *
உழைக்கின்றேற்கென்னைநோக்கா தொழிவதே, உன்னையன்றே *
அழைக்கின்றேன், ஆதிமூர்த்தீ! அரங்கமாநகருளானே. (௩௬)

தெளிவிலாக்கலங்கல்நீர்சூழ் திருவரங்கத்துள்ளோங்கும் *
ஒளியுளார்தாமேயன்றே தந்தையும்தாயுமாவார் *
எளியதோரருளுமன்றே யென்திறத்தெம்பிரானார் *
அளியன்நம்பையலென்னார் அம்மவோ! கொடியவாறே. (௩௭)

‡‡ மேம்பொருள்போகவிட்டு மெய்ம்மையைமிகவுணர்ந்து *
ஆம்பரிசறிந்துகொண்டு ஐம்புலனகத்தடக்கி *
காம்பறத்தலைசிரைத்துன் கடைத்தலையிருந்து * வாழும்
சோம்பரைஉகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே. (௩௮)

அடிமையில்குடிமையில்லா அயல் $ சதுப்பேதிமாரில் *
குடிமையில்கடைமைபட்ட § குக்கரில்பிறப்பரேலும் *
முடியினில்துளபம்வைத்தாய் மொய்கழற்கன்புசெய்யும் *
அடியரையுகத்திபோலு மரங்கமாநகருளானே. (௩௯)

திருமறுமார்வ! நின்னைச் சிந்தையுள்திகழவைத்து *
மருவியமனத்தராகில் மாநிலத்துயிர்களெல்லாம் *
வெருவுறக்கொன்றுசுட்டிட் டீட்டியவினையரேலும் *
அருவினைப்பயனதுய்யார் அரங்கமாநகருளானே. (௪0)

† போட்கன் - கதிசூந்யன். ‡ விலவு - விலா. $ சதுப்பேதிமார் - சதுர்வேதிகள். § குக்கர்சண்டாளரிலும் தண்ணியர்.

வானுளாரறியலாகா வானவா! என்பராகில் *
தேனுலாந்துளபமாலைச் சென்னியா! என்பராகில் *
ஊனமாயனகள்செய்யு மூனகாரகர்களேனும் *
போனகம்செய்தசேடம் தருவரேல்புனிதமன்றே. (சக)

பழுதிலாவொழுகலாற்றுப் பலசதுப்பேதிமார்கள் *
இழிகுலத்தவர்களேனு மெம்மடியார்களாகில் *
தொழுமினீர்கொடுமின்கொள்மி னென்றுநின்னோடுமொக்க *
வழிபடவருளினாய்போல் மதிள்திருவரங்கத்தானே. (சஉ)

அமரவோரங்கமாறும் வேதமோர்நான்குமோதி *
தமர்களில்தலைவராய சாதியந்தணர்களேனும் *
நுமர்களைப்பழிப்பராகில் நொடிப்பதோரளவில் * ஆங்கே
அவர்கள்தாம்புலையர்போலு மரங்கமாநகருளானே. (சங)

சாற்றுப்பாட்டுக்கள்.

‡‡ பெண்ணுலாம்சடையினானும் பிரமனுமுன்னைக்காண்பான் *
எண்ணிலாவூழியூழி தவஞ்செய்தார்வெள்கிநிற்ப *
விண்ணுளார்வியப்பவந்து ஆனைக்கன்றருளையீந்த
‡ கண்ணறா * உன்னையென்னோ களைகணாக்கருதுமாறே. (சச)

‡‡ வளவெழும்தவளமாட மதுரைமாநகரந்தன்னுள் *
கவளமால்யானைகொன்ற கண்ணனை அரங்கமாலை *
துளவத்தொண்டாயதொல்சீர்த் தொண்டரடிப்பொடிசொல் *
இளையபுன்கவிதையேனு மெம்பிரார்க்கினியவாறே. (சரு)

காவல்பச்சை வேதம்மொய்த்த பெண்டிர்மறம்புலை வெறுப்புமற்றும்நாட்டினான் ஒருநமனும்எறி வண்டுமெய்சூதுவிரும்பி இனிதுகுடபாய்பணிபேசுகங்கைவெள்ளக்குளித்து போதுகுரங்கு உம்பரால் ஊர்மனம் தவமார்த்து மெய்யுள்ளந்தாவி மழைதெளி மேம்பொருளடிமை திருவான்பழுதில் அமரப்பெண் வளவெழும்கதிர்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளேசரணம்.



திருமாலை ஸம்பூர்ணம்.

ஆக பாட்டு ௪ சரு.

‡ கண்ணறா - ப்ரீதிதலைமண்டையிட்டுச் சொல்லும்வார்த்தை: என்ன கண்ணுடைமை? - என்ன பும்ஸ்த்வமென்றபடி.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாய நம:.

# தொண்டரடிப்பொடியாழ்வார் அருளிச்செய்த

# திருப்பள்ளியெழுச்சி.

---

தனியன்கள்.

---

**பூபாளராகம்.**

திருமாலையாண்டானருளிச்செய்தது.

𑌤𑌮𑍇𑌵𑌮𑌤𑍍𑌵𑌾𑌪𑌰𑌵𑌾𑌸𑍁𑌦𑍇𑌵𑌂
𑌰𑌙𑍍𑌗𑍇𑌶𑌯𑌂𑌰𑌾𑌜𑌵𑌦𑌰𑍍𑌹𑌣𑍀𑌯𑌮𑍍।
𑌪𑍍𑌰𑌾𑌬𑍋𑌧𑌿𑌕𑍀𑌂𑌯𑍋𑌕𑍃𑌤𑌸𑍂𑌕𑍍𑌤𑌿𑌮𑌾𑌲𑌾𑌂
𑌭𑌕𑍍𑌤𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌰𑍇𑌣𑍁𑌂𑌭𑌗𑌵𑌨𑍍𑌤𑌮𑍀𑌡𑍇॥

தமேவமத்வாபரவாஸுதேவம்
ரங்கேஶயம்ராஜவதர்ஹணீயம்-
ப்ராபோதிகீப்யோக்ருதஸூக்திமாலாம்
பக்தாங்க்ரிரேணும்பகவந்தமீடே.

இருவிகற்பநேரிசைவெண்பா.

திருவரங்கப்பெருமாளரைய ரருளிச்செய்தது.

மண்டங்குடியென்பர்மாமறையோர்மன்னியசீர் *
தொண்டரடிப்பொடிதொன்னகரம் *—வண்டு
திணர்த்தவயல்தென்னரங்கத்தம்மானைப் * பள்ளி
உணர்த்தும்பிரானுதித்தவூர்.

*எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.*

**பூபாளராகம்-அடதாளம்.**

⁂ கதிரவன்குணதிசைச்சிகரம்வந்தணைந்தான்
கனையிருளகன்றது காலையம்பொழுதாய் *
மதுவிருந்தொழுகினமாமலரெல்லாம்
வானவரரசர்கள்வந்துவந்தீண்டி *
எதிர்திசைநிறைந்தனரிவரொடும்புகுந்த
இருங்களிற்றீட்டமும்பிடியொடுமுரசும் *
அதிர்தலில்லைகடல்போன்றுளதெங்கும்
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (க)

கொழுங்கொடிமுல்லையின்கொழுமலரணவிக்
கூர்ந்ததுகுணதிசைமாருதமிதுவோ *
எழுந்தனமலரணைப்பள்ளிகொண்டன்னம்
ஈன்பனிநனைந்ததமிருஞ்சிறகுதறி *
விழுங்கியமுதலையின்பிலம்புரைபேழ்வாய்
வெள்ளெயிறுறவதன்விடத்தினுக்கனுங்கி *
அழுங்கியவானையினருந்துயர்கெடுத்த
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (உ)

சுடரொளிபரந்தனசூழ்திசையெல்லாம்
துன்னியதாரகைமின்னொளிசுருங்கி *
படரொளிபசுத்தனன்பனிமதியிவனோ
பாயிருளகன்றதுபைம்பொழில்கமுகின் *
மடலிடைக்கீறிவண்பாளைகள்நாற
வைகறைகூர்ந்ததுமாருதமிதுவோ *
அடலொளிதிகழ்தருதிகிரியந்தடக்கை
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (௩)

மேட்டிளமேதிகள்தளைவிடுமாயர்கள்
வேய்ங்குழலோசையும்விடைமணிக்குரலும் *
ஈட்டியவிசைதிசைபரந்தனவயலுள்
இரிந்தனசுரும்பினம், இலங்கையர்குலத்தை *
வாட்டியவரிசிலைவானவரேறே !
மாமுனிவேள்வியைக்காத்து - அவபிரதம்
ஆட்டியவடுதிறலயோத்தியெம்மரசே !
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (௪)

புலம்பினபுட்களும் பூம்பொழில்களின்வாய்
போயிற்றுக்கங்குல்புகுந்ததுபுலரி *
கலந்ததுகுணதிசை கனைகடலரவம்
களிவண்டுமிழற்றியகலம்பகம்புனைந்த *

அலங்கலந்தொடையல்கொண்டடியிணைபணிவான்
அமரர்கள்புகுந்தனராதலிலம்மா! *
இலங்கையர்கோன்வழிபாடுசெய்கோயில்
எம்பெருமான்! பள்ளியெழுந்தருளாயே. (ரு)

இரவியர்மணிநெடுந்தேரொடுமிவரோ
இறையவர்பதினொருவிடையருமிவரோ *
மருவியமயிலினனறுமுகனிவனே
மருதரும்வசுக்களும்வந்துவந்தீண்டி *
புரவியோடாடலும்பாடலுந்தேரும்
குமரதண்டம்புகுந்தீண்டியவெள்ளம் *
அருவரையனையநின்கோயில்முன்னிவரோ
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (சு)

அந்தரத்தமரர்கள்கூட்டங்களிவையோ
அருந்தவமுனிவரும்மருதருமிவரோ *
இந்திரனானையுந்தானும்வந்திவனே
எம்பெருமானுனகோயிலில்வாசல் *
சுந்தரர்நெருக்கவிச்சாதரர்நூக்க
இயக்கரும்மயங்கினர்திருவடித்தொழுவான் *
அந்தரம்பாரிடமில்லைமற்றிதுவோ
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (எ)

வம்பவிழ்வானவர் $ வாயுறைவழங்க
மாநிதிகபிலையொண்கண்ணாடிமுதலா *
எம்பெருமான்படிமெய்க்கலம்காண்டற்கு
ஏற்பனவாயினகொண்டுநன்முனிவர் *
தும்புருநாரதர்புகுந்தனரிவரோ
தோன்றினனிரவியுந்துலங்கொளிபரப்பி *
அம்பரதலத்தில்நின்றகல்கின்றதிருள்போய்
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (அ)

⁂ ஏதமில்தண்ணுமையெக்கம்மத்தளி
யாழ்குழல்முழவமோடிசைதிசைகெழுமி *
கீதங்கள்பாடினர்கின்னரர்கெருடர்கள்
கந்தருவரவர்கங்குலுளெல்லாம் *
மாதவர்வானவர்சாரணரியக்கர்
சித்தரும்மயங்கினர்திருவடித்தொழுவான் *
ஆதலிலவர்க்குநாளோலக்கமருள
அரங்கத்தம்மா! பள்ளியெழுந்தருளாயே. (கூ)

---

$ வாயுறை - அறுகம்புல்.

⁂ கடிமலர்க்கமலங்கள்மலர்ந்தனவிவையோ
கதிரவன்கனைகடல்முளைத்தனனிவனோ *
துடியிடையார்சுரிகுழல்பிழிந்துதறித்
துகிலுடுத்தேறினர்சூழ்புனலரங்கா ! *
தொடையொத்ததுளவமும்கூடையும்பொலிந்து
தோன்றியதோள்தொண்டரடிப்பொடியென்னும்
அடியனை * அளியனென்றருளியுன்னடியார்க்
காட்படுத்தாய்பள்ளியெழுந்தருளாயே. (கO)

கதிர்கொழுசுடர்மோட்டுப்புலமிரவி அந்தரம் வம்பவிழ்ஏதம்கடி அமலன்.

தொண்டரடிப்பொடியாழ்வார் திருவடிகளேசரணம்.



திருப்பள்ளியெழுச்சி ஸம்பூர்ணம்.

ஆ பாட்டு - கO.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# திருப்பாணாழ்வார் வைபவம்.

𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑍇 𑌰𑍋𑌹𑌿𑌣𑍀𑌜𑌾𑌤𑌂 𑌶𑍍𑌰𑍀𑌪𑌾𑌣𑌿𑌂 𑌨𑌿𑌚𑍁𑌳𑌾𑌪𑍁𑌰𑍇 ।
𑌶𑍍𑌰𑍀𑌵𑌤𑍍𑌸𑌾𑌂𑌶𑌂 𑌗𑌾𑌯𑌕𑍇𑌂𑌦𑍍𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

வ்ருஶ்சிகேரோகிணீஜாதம் ஸ்ரீபாணிம் நிசுளாபுரே-
ஸ்ரீவத்ஸாம்ஶம்காயகேந்த்ரம் முநிவாஹநமாஶ்ரயே.

---

இவ்வாழ்வார், திருவுறையூரில் செந்நெற்பயரில், கலியுகம்-௩௪௩ வதான துர்மதி௵ கார்த்திகைமீ க்ருஷ்ணபக்ஷம் த்விதீயை புதன் கிழமைகூடின ரோகிணிநக்ஷத்ரத்தில், ஸ்ரீவத்ஸாம்ஶராய் அயோநிஜராய் பஞ்சமவர்ணத்தில் திருவவதரித்தருளினார்.

தன்வெள்ளத்தைத்தோடுவதினால் மோக்ஷம்தரத்தக்க பெருமையுடைய திருக்காவேரிக்கரையில், நிசுளாபுரிஎன்னும் உறையூரில், சூரியவம்சத்திற்பிறந்த சோழராஜன் தர்மம் தவறாமல் பூமியை ஆண்டுகொண்டுவருகையில்; திருப்பாற்கடலில் பிராட்டி திருவவதரித்தருளினாற்போல், நம்பெருமாள் பக்கல்வைத்த நெஞ்சையுடைய தர்மவர்மாவின் வம்சத்தில் சோழனுக்குக் கன்னிகையாய் நீளாம்ஶஜையான உறையூர் நாய்ச்சியார் திருவவதரித்தருளினாள், சோழராஜனும், ஸ்ரீஜநகராஜன் பிராட்டியை ப்ரீதியோடே எடுத்து வளர்த்தாப்போலே, உகப்போடேவளர்க்க, வளர்ந்தருளுகிற நாய்ச்சியார், ஒருநாள் தன் ஸகிகளோடேகூட உத்யாநவநத்தில் விளையாடிக்கொண்டிருக்கையில்; நம்பெருமாள் அங்கே வேட்டைக்கெழுந்தருள, அவரைக்கண்டுமோகித்து, ஊருக்குவந்து, தன்பிதாவான சோழராஜனைநோக்கி, "நம்பெருமாளை யல்லது வேறொருபுருஷனுக்கு வாழ்க்கைப்படேன், என்னை அவருக்கே உதகம் பண்ணிக்கொடும்" என்றாள். ராஜாவும் ஸந்துஷ்டனாய், நம்பெருமாள் ஸந்நிதியிற்சென்று அச்செய்தியை விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும், "நாமே பாணிக்ரஹணம் பண்ணுகிறோம், நமக்கே உதகப்பண்ணிக்கொடும்" என்று திருவுள்ளம்பற்ற; ராஜாவும், ஸந்தோஷத்துடன் அரங்கமாநகரை அலங்கரித்து பெருப்பெருத்த கண்ணாலஞ்செய்து நாய்ச்சியாரை உதகம் பண்ணிக்கொடுத்

தான். பெருமாளும் உகப்போடே திருமணம்புணர; அரசன் பொன்னரிசி முந்நூற்றருபது பாரமும், அதுக்குத்தக்க முத்துமாணிக்கமயமான நவரத்ந * உபஹாரமும், நிரவதிகமான ஆடைஆபரணங்களும், பசு யானை குதிரை தாசீ பூஷணங்களும் குறைவறக்கொடுத்து, ஒன்றிலும் த்ருப்தி பிறவாமையால் தன்சொத்துக்களையெல்லாம் நம்பெருமாளுக்கேயாக்கி வாழ்ந்துகொண்டிருந்தான்; அக்காலத்தில், திருப்பாணாழ்வார் அவதரித்தருளினர்.

இவ்வாழ்வார்க்கு நம்பெருமாள் ஜாயமாநகடாக்ஷம் பண்ணுகையாலே, இவர்க்கு ஸத்வகுணமே தலையெடுத்து, மோட்சத்தில் விருப்பமுண்டாய், "பரமாத்துமனைச் சூழ்ந்துநின்று ஸாமகாநம்பண்ணும் நித்யஸூரிகளிலே யொருவர் வந்தவதரித்தாரோ?" என்று சொல்லலாம்படியான திவ்யசரித்திரங்களுடையராய், தன் வர்ணாநுகூலமாக இரண்டாற்றுக்கும் நடுத் தாம் மிதியாமே தென்னாற்றின் தென்கரையில் திருமுகத்துறைக்கெதிரே தூரநின்று திருவரங்கமேயான் திசையை யுற்றுநோக்கிக் கையும் வீணையுமாய்த் திருப்புகழ்கள் பலவும் பாடிக்கொண்டிருந்தார். பெரியபெருமாள் இவர்பக்கல் திருவுள்ளமிரங்கியருள; அவ்வளவில் நாய்ச்சியாரும் "நமக்கு அந்தரங்கரான பாண்பெருமாள் புறம்பே நிற்பதென்?" என்றுபெருமாளுடன் விண்ணப்பஞ்செய்ய; பெருமாளும் இவரைப் பலகால் அருளப்பாடிட்டருளியும், தன் ஸ்வரூபத்தாலும் வர்ணத்தாலும் வந்த நைச்யத்தால் பின்வாங்கிக் கடுநடையிட்டுப் பின்னேசெல்ல; அவ்வளவில் பெரியபெருமாள், பின்னையும் இவர் பக்கலுள்ள க்ருபாதிசயத்தாலும் தன் நிரங்குசஸ்வாதந்தர்யத்தாலும், ஸ்ரீலோகஸாரங்க மஹா முநீந்த்ரரைப் பார்த்து, "நமக்கு அந்தரங்கரான பாண்பெருமாளை நீர் நெகிழநினைத்துப்போகவேண்டா, அவரை உமது தோளிலேகொண்டு நம்பக்கலில் அழைத்துக்கொண்டு வரவேண்டும்" என்று ஸ்வப்நமுகமாக அருளிச்செய்ய; அவரும், விடிவோறே யெழுந்திருந்து, திருமுகத்துறையில் நீராடி அநுஷ்டாநம்பண்ணி, அதிதூரத்தில் நின்று அரங்கத்தைப் பாடாநிற்கும் இப்பாணாழ்வார் திருவடிகளில் தாளுந் தடக்கையுங் கூப்பிப்பணிந்து, "தேவரீரை நம்பெருமாள் எழுந்தருளப் பண்ணுவித்துக்கொண்டு வரவேண்டும் என்று அடியேனை நியமித்தருளினர்" என்று விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும் தன்நைச்யத்தைமுன்னிட்டுப் பிற்காலித்து, "திருவரங்கப்பெருநகரை நான் மிதிப்ப

* உபஹாரம் - பச்சை; உரிசை.

ணே?" என்ன; ஸ்ரீலோகஸாரங்க முனிகளும் "ஆகில் அடியேனுடைய தோளின்மேலே யெழுந்தருளும், பெருமாள் அருளப்பாடிட் டருளினபடியே எழுந்தருளுவித்துக்கொண்டு போகிறேன்" என்ன; ஆழ்வாரும் செயலற்றுநிற்க; முக்தனைப்போமவனை ஆதிவாஹிகர் எழுந்தருளுவித்துக்கொண்டு திருமாமணி மண்டபத்தேறப் போமாப்போலே, ஸ்ரீலோகஸாரங்க மஹாமுநீந்த்ரரும் ஆழ்வாரைத் தமது திருத்தோளின்மேலேகொண்டு அழகியமணவாளன் திருமண்டபத்தவ்வருகே புகுர; பெரியபெருமாளும் தம்முடைய திவ்யமங்கள விக்ரஹத்தை, நித்யதரித்ரனுக்கு நிதிகாட்டுவாரைப்போலே இவர்க்குக் காட்டிக்கொடுக்க; ஆழ்வார் பரவசராய், தாயாரின் எல்லா அவயவங்களுங்கிடக்க முலைப்பாலுண்ணும் குழந்தை முலையிலேவாய்வைக்குமாப்போலே, சேஷிபக்கல் சேஷபூதன் இழியும்துறை திருவடிகளாகையாலே சேஷத்வ போக்யத்வ உபாயத்வங்கள் குறைவற்ற திருவடிகளை முதலிலேபற்றி, பின்பு பெரிய பெருமாளுடைய திவ்யமங்கள விக்ரஹத்தைத் திருவடிகள் தொடங்கித் திருமுடியளவும் அநுபவித்து, அவ்வநுபவத்தா லுண்டான ப்ரீத்யதிஶயத்தாலே அமலனாதிபிரான் என்கிற திவ்ய ப்ரபந்தத்தைப் பத்துப்பாட்டாக வருளிச்செய்துலோகத்தை வாழ்வித்தருளி மிகவும் உகப்போடேநிற்க; பெரியபெருமாளும் ஆழ்வாரை அத்திருமேனியோடே அங்கீகரித்தருள; ஆழ்வாரும், எல்லாரும் காணும்படி அணியரங்கன் திருவடிகளில் அந்தர்ப்பவித்தருளினார்.

உம்பர்தொழுமெய்ஞ்ஞானத்துறையூரான்வாழியே
  உரோகிணிநாள்கார்த்திகையிலுதித்தவள்ளல்வாழியே
வம்பவிழ்தார்முனிதோளில்வந்தபிரான்வாழியே
  மலர்க்கண்ணைவேறென்றில்வையாதான்வாழியே
அம்புவியில்மதிளரங்கரகம்புகுந்தான்வாழியே
  அமலனாதிபிரான்பத்துமருளினான்வாழியே
சொம்பொனடிமுடியளவும்சேவிப்போன்வாழியே
  திருப்பாணன்பொற்பதங்கள்செகதலத்தில்வாழியே.

திருப்பாணாழ்வார் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# திருப்பாணாழ்வா ரருளிச்செய்த

# அமலனாதிப்பிரான்.

---

தனியன்கள்.

---

**ஸஹானா-ராகம்.**

பெரியநம்பிகளருளிச்செய்தது.

𑌆𑌪𑌾𑌦𑌚𑍂𑌡𑌮𑌨𑍁𑌪𑍂𑌯 𑌹𑌰𑌿𑌂𑌶𑌯𑌾𑌨𑌂
𑌮𑌧𑍍𑌯𑍇 𑌕𑌵𑍇𑌰𑌦𑍁𑌹𑌿𑌤𑍁𑌰𑍍𑌮𑍁𑌦𑌿𑌤𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌤𑍍𑌮𑌾।
𑌅𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑍃𑌤𑌾𑌂 𑌨𑌯𑌨𑌯𑍋𑌰𑍍𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌾𑌣𑌾𑌂
𑌯𑍋 𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌕𑌾𑌯 𑌮𑌨𑌵𑍈 𑌮𑍁𑌨𑌿𑌵𑌾𑌹𑌨𑌂𑌤𑌮𑍍‖

ஆபாதசூடமநுபூயஹரிம்ஶயாநம்
மத்யேமவேரதுஹிதுர்முதிதாந்தராத்மா
அத்ரஷ்டதாம்நயநயோர்விஷயாந்தராணாம்
யோநிஶ்சிகாயமநவைமுநிவாஹநந்தம்.

கலிநிலைத்துறை.

திருமலைநம்பிக ளருளிச்செய்தது.

காட்டவேகண்டபாதம் கமலநல்லாடையுந்தி *
தேட்டருமுதரபந்தம் திருமார்வுகண்டம்செவ்வாய் *
வாட்டமில்கண்கள்மேனி முனியேறித்தனிபுகுந்து *
பாட்டினால்கண்டுவாழும் பாணர்தாள்பரவினோமே.

---

வெண்டுறை.

**அபநபராகம்-திரிபுடைதாளம்.**

⁂ அமலனாதிபிரா னடியார்க்கென்னையாட்படுத்த
விமலன் * விண்ணவர்கோன் விரையார்பொழில்வேங்கடவன் *
நிமலன்நின்மலன்நீதிவானவன் நீள்மதிளரங்கத்தம்மான் * திருக்
கமலபாதம்வந்தென்கண்ணினுள்ளனவொக்கின்றதே. (க)

உவந்தவுள்ளத்தனா யுலகமளந்தண்டமுற *
நிவர்ந்தநீண்முடிய னன்றுநேர்ந்தநிசாசரரை * [ச்
கவர்ந்தவெங்கணைக்காகுத்தன் கடியார்பொழிலரங்கத்தம்மான்*அரை
சிவந்தவாடையின்மேல் சென்றதாமெனசிந்தனையே. (உ)

⚜ மந்திபாய் வடவேங்கடமாமலை * வானவர்கள்
சந்திசெய்யநின்றா னரங்கத்தரவினணையான் *
அந்திபோல்நிறத்தாடையு மதன்மேலயனைப்படைத்ததோரெழில் *
உந்திமேலதன்றோ அடியேனுள்ளத்தின்னுயிரே. (௩)

சதிரமாமதிள்சூழிலங்கைக்கிறைவன் தலைபத்
துதிரவோட்டி * ஓர்வெங்கணையுய்த்தவ னோதவண்ணன் *
மதுரமாவண்டுபாட மாமயிலாடரங்கத்தம்மான் * திருவயிற்
றுதரபந்தன மென்னுள்ளத்துள்நின் றுலாகின்றதே. (௪)

பாரமாய பழவினைபற்றறுத்து - * என்னைத்தன்
வாரமாக்கிவைத்தான் வைத்தன் றியென்னுள்புகுந்தான் *
கோரமாதவம்செய்தனன்கொலறியே னரங்கத்தம்மான் * திரு
வாரமார்பதன்றோ அடியேனையாட்கொண்டதே. (௫)

துண்டவெண்பிறையன் துயர்தீர்த்தவன் * அஞ்சிறைய
வண்டுவாழ்பொழில்சூ ழரங்கநகர்மேயவப்பன் *
அண்டரண்டபகிரண்டத் தொருமாநிலமெழுமால்வரை * முற்றும்
உண்டகண்டங்கண்டீ ரடியேனையுய்யக்கொண்டதே. (௬)

கையினார் சுரிசங்கனலாழியர் நீள்வரைபோல்
மெய்யனார் * துளபவிரையார்கமழ்நீண்முடியெம்
ஐயனார் * அணியரங்கனா ரரவினணைமிசைமேயமாயனார் *
செய்யவாயய்யோ! என்னைச்சிந்தைகவர்ந்ததுவே. (௭)

பரியனாகிவந்த வவுணனுடல்கீண்ட * அமரர்க்
கரியவாதிப்பிரா னரங்கத்தமலன்முகத்து *
கரியவாகிப்புடைபரந்து மிளிர்ந்துசெவ்வரியோடி * நீண்டவப்
பெரியவாயகண்க ளென்னைப்பேதைமைசெய்தனவே. (௮)

⚜ ஆலமாமரத்தினிலைமே லொருபாலகனாய் *
ஞாலமேழுமுண்டா னரங்கத்தரவினணையான் *
கோலமாமணியாரமும் முத்துத்தாமமும்முடிவில்லதோரெழில் *
நீலமேனியய்யோ! நிறைகொண்டதென்நெஞ்சினையே. (௯)

⚜கொண்டல்வண்ணனைக் கோவலனாய்வெண்ணே
யுண்டவாயன் * என்னுள்ளம்கவர்ந்தானை *
அண்டர்கோனணியரங்கன் * என்னமுதனைக்
கண்டகண்கள் மற்றொன் றினைக்காணாவே. (௧௦)

அமலனுவந்தமந்தி சதிரம்பாரம்துண்டம் கைபரிஆலம் கொண்டல்கண்ணி.
திருப்பாணாழ்வார் திருவடிகளேசரணம்.



அமலனாதிபிரான் ஸம்பூர்ணம்.

ஆ பாட்டு - ௧௦.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# மதுரகவியாழ்வார் வைபவம்.

𑌮𑍇𑌷𑍇𑌚𑌿𑌤𑍍𑌰𑌾𑌸𑌮𑍁𑌦𑍍𑌭𑍂𑌤𑌂𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌦𑍇𑌶𑍇𑌕𑌲𑍌𑌶𑍁𑌕𑌮𑍍।
𑌶𑍍𑌰𑍀𑌪𑌰𑌾𑌙𑍍𑌕𑍁𑌶𑌸𑌦𑍍𑌭𑌕𑍍𑌤𑌂𑌮𑌧𑍁𑌰𑌂𑌕𑌵𑌿𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇॥

மேஷேசித்தாஸமுத்பூதம் பாண்ட்யதேஶேகணும்ஶகம்-
ஸ்ரீபராங்குஶஸத்பக்தம் மதுரம்கவிமாஶ்ரயே.

---

இவ்வாழ்வார், திருக்கோளூரில், த்வாபரயுகம்-௮௬௩-௮௭௯-வதான ஈஶ்வரஞு சித்திரைமீ சுக்லபக்ஷம் சதுர்த்தசி வெள்ளிக்கிழமைகூடின சித்திரைநக்ஷத்திரத்தில், ஸ்ரீவைநதேயாம்சராய்த் திருவவதரித்தருளினர். ஆதித்யோதயத்துக்கு அருணேதயம் முற்படுமாப்போலே, வகுளபூஷணராகிற சூரியோதயத்துக்கு அருணேதயம்போலேயாயிற்று ஸ்ரீமதுரகவிகளவதாரம்.

இவர் ஸாமவேதம் அத்யயநம் பண்ணும்$பூர்வசிகையையுடைய ப்ராம்ஹணகுலத்தில் அவதரிக்கையால், இவர்க்கு அந்தந்தகாலத்தில் சௌளம் உபநயநம் முதலானதுகளைச்செய்து, பதினன்கு வித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள். வேதங்களை அங்கங்களோடே அதிகரித்தவரும் மஹாவிரக்தருமான இவர், மோக்ஷந்தரத்தக்க பெருமையுடைய திருவயோத்யை முதலான திவ்யதேசங்களைச்சேவிக்க எழுந்தருளினர்.

இப்படி ஸ்ரீமதுரகவிகள் தீர்த்தயாத்ரைக்காகப் புறப்பட்டுக்கங்கக்கரையிலே யெழுந்தருளியிருக்க, ஒருநாள்ராத்ரி தெற்குத்திக்கிலே சூரியோதய மானற்போலே ஒரு தேஜஸ்ஸுதோற்ற, இதேது? என்று விஸ்மிதராயிருக்க, மற்றைநாளுமப்படியேதோற்ற, "தெற்கு ஒரதிசயமுண்டாகவேணும்" என்று திருவுள்ளம்பற்றியெழுந்தருளாநிற்க, பயணந்தோறும் தெற்கே தெற்கே அந்ததேஜஸ்ஸு தோற்ற திருநகரியளவில் வந்தவாறே அவ்வருகு தோற்றக் காணமையாலே "இங்கேயாகவேணும்" என்று பார்த்து, "இங்கு ஏதேனும் புதுமைகளுண்டோ?" என்று கேட்க; ஆழ்வார் திருவவதரித்தருளித் திருப்புளியாழ்வார் கீழே யெழுந்தருளியிருக்கிற வ்ருத்தாந்தத்தை அங்குள்ளார் விண்ணப்பஞ்செய்ய; இவரும் ஆழ்வார் ஸந்நிதியிலே யெழுந்தருள; ஆழ்வார் பகவதநுபவம் பண்ணிக்கொண்டு, இவரைக்க

---

$ பூர்வசிகை - முன்குடுமி.

டாக்ஷித்தல் ஒரு ஸ்ரீஸூக்தி யருளிச்செய்தல் செய்யக் காணுமை யாலே, இவர்க்கு ஸ்ரவணுதிகளுண்டோ? இல்லையோ? என்றுபரீக்ஷிக்கைக்காக, ஒருகல்லைத் திருமதிளிலேயெறிய, அந்த ஓசையைக்கேட்டுஆழ்வாரும் திரும்பிப்பார்த்தருள; "இவர்ஸர்வஜ்ஞராயிருந்தார் இவருடைய ஸ்ரீஸூக்தியைக்கேட்கவேணும்" என்றுகொண்டு, "§செத்தத்தின் வயிற்றில் சிறியதுபிறந்தால் எத்தைத்தின் றெங்கேகிடக்கும்?" என்று கேட்க; ஆழ்வாரும் "கானலோடிய காட்டில் சிறியது பிறந்தால் அத்தைத்தின்று அங்கேகிடக்கும்" என்று அதுக்கு உத்தரமருளிச்செய்ய; அவ்வளவிலே ஸ்ரீமதுரகவிகளும் ஹ்ருஷ்டராய் ஆழ்வார் திருவடிகளிலே விழுந்து "அடியேனை அங்கீகரிக்கவேணும்" என்று விண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும் அவரை விசேஷகடாக்ஷம் பண்ணியருளி, பஞ்சஸம்ஸ்காரமும் ப்ரஸாதித்து, "நாம்பகவதநுபவத்துக்குப் போக்குவீடாகச்சொல்லும் பாசுரங்களை நீர் பட்டோலைகொள்ளும்" என்றருளிச்செய்தருளினுர். மதுரகவிகளும் ஆழ்வார்திருவடிகளில் ஆஶ்ரயித்து க்ருதார்த்தராளுர்.

அநந்தரம், ஸ்ரீமதுரகவிகளும், தன் ஆசார்யரான ஸ்ரீபராங்குசருடைய வைபவத்தை கண்ணிநுண் சிறுத்தாம்பு என்கிற திவ்யப்ரபந்தத்திலே யருளிச்செய்து எல்லாரும் அறியும்படி ப்ரகாசிப்பித்துக்கொண்டு சிலகாலம் எழுந்தருளியிருந்து லோகத்தை வாழ்வித்தருளினுர்.

சித்திரையில்சித்திரைநாள்சிறக்கவந்தோன்வாழியே
  திருக்கோளூரவதரித்தசெல்வனுர்வாழியே
உத்தரகங்காதீரத்துயர்தவத்தோன்வாழியே
  ஒளிகதிரோன்தெற்குதிக்கிலுகந்துவந்தான்வாழியே
பத்தியுடன்பதினென்றும்பாடினுன்வாழியே
  பராங்குசனேபரமென்றுபற்றினுன்வாழியே
மத்திமமாம்பதப்பொருளைவாழ்வித்தான்வாழியே
  மதுரகவிதிருவடிகள்வாழிவாழிவாழியே.

மதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.



---

§ "அசேதநமான ப்ரக்ருதிக்குள்ளே அணுவானஜீவன் சரீரமெடுத்தால் அவனுக்கு போக்யமென்ன? போகஸ்தாநமென்ன?" என்று கேட்க; "மரீசிகைபோலிருக்கும் விஷயங்களாலே ப்ரசுரமான ஸம்ஸாராரண்யத்தில் ஜநித்த ஜீவன் அந்தப்ரக்ருதியையே புஜித்து அதிலேயிருப்பன்" என்றருளிச்செய்தார் என்று அர்த்தம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மதுரகவியாழ்வாரருளிச்செய்த

# கண்ணிநுண்சிறுத்தாம்பு.

## தனியன்கள்.

ஆரபிராகம்.

ஸ்ரீமந்நாதமுனிகளருளிச்செய்தது

𑌅𑌵𑌿𑌦𑌿𑌤𑌵𑌿𑌷𑌯𑌾𑌨𑍍𑌤𑌰𑌶𑍍𑌶𑌠𑌾𑌰𑍇
𑌰𑍁𑌪𑌨𑌿𑌷𑌦𑌾𑌮𑍁𑌪𑌗𑌾𑌨𑌮𑌾𑌤𑍍𑌰𑌭𑍋𑌗𑌃।
𑌅𑌪𑌿𑌚𑌗𑍁𑌣𑌵𑌶𑌾𑌤𑍍𑌤𑌦𑍇𑌕𑌶𑍇𑌷𑍀
𑌮𑌧𑍁𑌰𑌕𑌵𑌿𑌰𑍍𑌹𑍃𑌦𑌯𑍇𑌮𑌮𑌾𑌵𑌿𑌰𑌸𑍍𑌤𑍁॥

அவிதிதவிஷயாந்தரஶ்ஶடாரே ருபநிஷதாமுபகாநமாத்ரபோக:-
அபிசகுணவஶாத்ததேகஶேஷீ மதுரகவிர்ஹ்ருதயேமமாவிரஸ்து.

இருவிகற்பநேரிசைவெண்பா.

வேறொன்றும்நானறியேன்வேதம்தமிழ்செய்த *
மாறன்சடகோபன்வண்குருகூர்—ஏறெங்கள்
வாழ்வாமென்றேத்தும் மதுரகவியார் * எம்மை
ஆள்வாரவரே ‡ யரண்.

---

கலிவிருத்தம்.

ஆரபிராகம் - ஆதிதாளம்.

⁂ கண்ணிநுண்சிறுத்தாம்பினால் கட்டுண்ணப்
பண்ணியபெருமாயன் * என்னப்பனில் *
நண்ணித்தென்குருகூர் நம்பியென்றக்கால் *
அண்ணிக்குமமுதூறு மென்நாவுக்கே. (க)

நாவினால்நவிற் றின்பமெய்தினேன் *
மேவினே னவன்பொன்னடிமெய்ம்மையே *
தேவுமற்றறியேன் குருகூர்நம்பி *
பாவினின்னிசை பாடித்திரிவனே. (உ)

திரிதந்தாகிலும் தேவபிரானுடை *
கரியகோலத் திருவுருக்காண்பன்நான் *
பெரியவண்குருகூர் நகர்நம்பிக்கா
ளுரியனாய் * அடியேன்பெற்றநன்மையே. (௩)

நன்மையால்மிக்க நான்மறையாளர்கள் *
புன்மையாகக் கருதுவராதலில் *
அன்னையாயத்தனா யென்னையாண்டிடும்
தன்மையான் * சடகோபனென்நம்பியே. (௪)

---

‡ "சரண்" என்றுபாடாந்தரம்; அரண்-சரண்-ரக்ஷை.

நம்பினேன் பிறர்நன்பொருள் தன்னையும் *
நம்பினேன் மடவாரையும்முன்னெலாம் *
செம்பொன்மாடத்திருக்குருகூர்நம்பிக்
கண்பனாய் * அடியேன்சதிர்த்தேனென்றே. (ரு)

இன்றுதொட்டு மெழுமையுமெம்பிரான் *
நின்றுதன்புக ழேத்தவருளினான் *
குன்றமாடத் திருக்குருகூர்நம்பி *
என்றுமென்னை யிகழ்விலன்காண்மினே. (சு)

கண்டுகொண்டென்னைக் காரிமாறப்பிரான் *
பண்டைவல்வினை பாற்றியருளினான் *
எண்டிசையு மறியவியம்புகேன் *
ஒண்டமிழ்ச் சடகோபனருளையே. (எ)

அருள்கொண்டாடு மடியவரின்புற *
அருளினா னவ்வருமறையின்பொருள் *
அருள்கொண்டாயிரமின்தமிழ்ப்பாடினான் *
அருள்கண்டீ ரிவ்வுலகினில்மிக்கதே. (அ)

மிக்கவேதியர் வேதத்தினுட்பொருள் *
நிற்கப்பாடி யென்னெஞ்சுள்நிறுத்தினான்
தக்கசீர்ச் சடகோபனென்நம்பிக்கு - * ஆட்
புக்ககாத லடிமைப்பயனன்றே. (கூ)

⁂ பயனன்றாகிலும் பாங்கல்லராகிலும் *
செயல்நன்றாகத் திருத்திப்பணிகொள்வான் *
குயில்நின்றார்பொழில்சூழ் குருகூர்நம்பீ *
முயல்கின்றேனுன்றன் மொய்கழற்கன்பையே. (க0)

⁂ அன்பன் தன்னை யடைந்தவர்கட்கெல்லாம்
அன்பன் * தென்குருகூர் நகர்நம்பிக்கு - *
அன்பனாய் மதுரகவிசொன்னசொல்
நம்புவார்பதி * வைகுந்தம்காண்மினே. (கக)

மதுரகவியாழ்வார் திருவடிகளேசரணம்.



| | | | | | |
|---|---|---|---|---|---|
| பெரியாழ்வார்திருமொழி | பாட்டு | சஎங | திருமாலை | பாட்டு | சரு |
| திருப்பாவை | ,, | ங0 | திருப்பள்ளியெழுச்சி | ,, | க0 |
| நாய்ச்சியார்திருமொழி | ,, | கசங | அமலனாதிபிரான் | ,, | க0 |
| பெருமாள்திருமொழி | ,, | க0ரு | கண்ணிநுண்சிறுத்தாம்பு | ,, | கக |
| திருச்சந்தவிருத்தம் | ,, | கஉ0 | | | |

ஆக, பாட்டு கூசஎ.

## முதலாயிரம் ஸம்பூர்ணம்.

ஆழ்வார் திருவடிகளேசரணம், ஜீயர் திருவடிகளேசரணம்.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# திருமங்கையாழ்வார் வைபவம்.

𑌵𑍃𑌶𑍍𑌚𑌿𑌕𑍇𑌕𑍃𑌤𑍍𑌤𑌿𑌕𑌾𑌜𑌾𑌤𑌂𑌚𑌤𑍁𑌷𑍍𑌕𑌵𑌿𑌶𑌿𑌖𑌾𑌮𑌣𑌿𑌮𑍍।
𑌷𑌟𑍍𑌪𑍍𑌰𑌬𑌨𑍍𑌧𑌕𑍃𑌤𑌂𑌶𑌾𑌰𑍍𑌙𑍍𑌗𑌮𑍂𑌰𑍍𑌤𑌿𑌂𑌕𑌲𑌿𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇॥

வ்ருஶ்சிகேக்ருத்திகாஜாதம் சதுஷ்கவிஶிகாமணிம்-
ஷட்ப்ரபந்தக்ருதம்சார்ங்க மூர்த்திம்கலிஹமாஶ்ரயே.

---

இவ்வாழ்வார், திருவாலி திருநகரியில், திருக்குறையலூரில் கலி ௩௯௮-வதான நள ௵ கார்த்திகைமீ பௌர்ணமி வியாழக்கிழமை கூடின க்ருத்திகாநக்ஷத்ரத்தில், ஸ்ரீசார்ங்காம்ஶராய், நீலன் என்பவருக்குக் குமாரராகத் திருவவதரித்தருளினார்.

இவர் ம்லேச்சவம்சத்தில் அவதரிக்கையாலே இவர்க்கு நீலநிறத்தர் என்று திருநாமம்சாத்தினார்கள். இவர் சோளபூபதியை ஸேவித்து யுத்தத்தில் பராக்ரமசாலியாய் மிகவும் வீரராயிருந்தார். அந்த ராஜாவும் இவரை ஒருதேசாதிபதியும் ஸேநாநாயகனுமாக்கினான். இவர்க்கு, நீர்மேல்நடப்பான், நிழலிலோதுங்குவான், சாயைப்பிடிப்பான், தாளூதுவான், தோராவழக்கன், உசரத்தோங்குவான் முதலானமந்த்ரிகளும், அநேகம் பரிஜனங்களும் இருந்தார்கள் இவர் ஏறும் குதிரைக்கு ஆடல்மா என்றுபெயர். இவர் மிகவும் விஷயப்ரவணராய், கையில் வாளைப்பிடித்துத் திரிந்துகொண்டிருந்தார்.

இப்படியிருக்கையில், திருவாலிநாட்டில் நன்றாயிருந்த வொரு தாமரைப்பொய்கையில் சில அப்ஸரஸ்ஸுக்கள் வந்து நாடோறும் ஜலக்ரீடை பண்ணிப்போகாநின்றார்கள்; திருமாமகளும் ஒரு அப்ஸரஸ்ஸுவேஷத்தை தரித்துக்கொண்டு அவர்களோடு கூடவந்து குமுதமலர் கொய்துகொண்டிருக்கையில், கூடவந்தவர்கள் இவளைவிட்டுப்போனார்கள்; அதினால் இவள் மநுஷ்யசரீரத்தைப் பரிக்ரஹித்துத் தனித்துநின்றாள். அப்போது, திருநாங்கூரில் எம்பெருமானைச்சேவித்திருப்பாரொரு மருத்துவரான பாகவதோத்தமர் அநுஷ்டாநார்த்தமாக அங்கேவர; இப்பெண்பிள்ளையைக்கண்டு, "நீயார்? தனித்திருப்பானென்?" என்றுகேட்டார்; அவளும், "கூடவந்தபெண்பிள்ளைகள் என்னைவிட்டுப்போனார்கள், என்னை இனி உம்மோடே கொண்டுபோம்" என்று தான்வந்த க்ரமத்தை அவருக்குச்சொன்னாள்; அவர் பிள்ளையில்லாதவராகையால் மிகவும் உகப்புடன் இவளையழைத்துக்கொண்டுபோய் தன்பத்நிகையில் காட்டிக்கொடுத்தார்; அவளும் அதிஸந்தோஷத்துடன் அங்கீகரித்தாள், இவள் குமுதமலர்கொண்டு

நின்றதுவே நிரூபகமாக குமுதவல்லியார் என்று திருநாமம்சாத்தி வளர்த்துக்கொண்டு வந்தார்கள்.

இச்செய்தியை ஆழ்வார்கேட்டு, நின்றவாநில்லா நெஞ்சையுடையராய் திருநகரியில் மருத்துவரான பாகவதரகத்திற்குச்சென்று அவருடன் ஸம்பாஷணம் பண்ணிக்கொண்டிருக்கச்செய்தே, இப்பெண்பிள்ளை புறப்படக்கண்டு ஆச்சரியப்பட்டு, பாகவத பிஷக்வரரைப் பார்த்து, "பிள்ளையில்லாதவுமக்கு இப்பெண்பிள்ளை எங்ஙனே உண்டாயிற்று?" என்றுகேட்க; அவரும், அப்பெண்ணின் வரலாற்றை யிவருடன்சொல்லி, இப்பெண்ணினால் பிள்ளையில்லாதகுறை தீர்ந்தேன், குலமும் கோத்ரமும தெரியாதஇவளை யாருக்குவாழ்க்கைப் படுத்துவேன்? இவளுக்கோ விவாஹ உசிதமான வயஸ்ஸுவந்துவிட்டதே!" என்று தன்குறையை யறிவிக்க; இவரும் "இப்பெண்ணைப்பத்நிபாக நமக்குத்தரவேணும்" என்று வஸ்த்ரம் பூஷணம் முதலான த்ரவ்யங்களைக் குறைவறக்கொடுத்து மிகவும் அநுவர்த்தித்து விரும்பிக்கேட்க; அவர்களும் அப்பெண்பிள்ளையை யிவருக்குக்கொடுப்பதாக உத்யோகித்தார்கள்: அவ்வளவில், அப்பெண்பிள்ளை, "திருவிலச்சிணையும் திருநாமமுமுள்ளவர்க்கொழிய மற்றொருவர்க்கென்னைப் பேசவொட்டேன்" என்று தன்நெஞ்சில் அத்யவஸாயத்தைச்சொல்ல; இவரும், அவ்வசநத்தைக்கேட்டு, அதித்வரையோடே திருநறையூரில் நம்பிதிருமுன்பே சென்று திருவிலச்சினைதரித்து, பன்னிரண்டு திருநாமங்களையும் சாத்திக்கொண்டு வந்தார்; பின்பு குமுதவல்லியார் ஆழ்வாரைப்பார்த்து, "ஒருவருஷம் நித்யமாக ஆயிரத்தெட்டு ஸ்ரீவைஷ்ணவர்களை அமுதுசெய்வித்து அவர்களுடைய ஸ்ரீபாததீர்த்தமும் தளிகைப்ரஸாதமும் ஸ்வீகரித்து நிறைவேற்றினாலொழியஉம்மை நான் பர்த்தாவாக அங்கீகரிப்பதில்லை" என்று ஒரு நியமம்பண்ண; அவரும் அதுக்கு இசைந்து ப்ராவண்யாதிசயத்தாலே ப்ரதிஜ்ஞை பண்ணிக்கொடுக்க; அதின்பின்பு குமுதவல்லியாரை நீலநிறத்தார்க்கு நாடும் ஊரும் அறிய நல்லதோர் கண்ணாலஞ்செய்து, உதகபூர்வகமாக ஸமர்ப்பித்தார்கள்.

அநந்தரம், ஆழ்வாரும் தன்கையிலகப்பட்ட தநத்தையெல்லாமிட்டு ததீயாராதநம் பண்ணிக்கொண்டுவந்தார். இக்காலத்தில், "பரகாலன் பகுதிப்பணத்தையெல்லாம் செலவழித்து ததீயாராதநம் பண்ணுகிறான்" என்று சோழராஜனுக்குச் சிலரறிவிக்க; அவன் அதைக்கேட்டுக் கோபங்கொண்டு, பகுதிக்கு இவரிடம் தரவுஅனுப்ப; தரவுவந்த ராஜமநுஷ்யர்க்கு இவர் "இதோதருகிறேன், அதோதருகிறேன்" என்று அநேகபர்யாயங்கள்சொல்ல; அவர்கள்கேட்டுச் சலித்து "பகுதிப்பணம்தரவேண்டும்" என்று நிர்பந்திக்க, இவர்கோபித்து அவர்களைத்தள்ளிவிட; அவர்கள் சோழராஜனிடம்சென்று இவ்விசேஷத்தை யறிவித்தார்கள். இவர் ஆஜ்ஞாபங்கம் பண்ணினதற்கு அரசன் மிகவும்சீறி, தன்ஸேநாதிபதியையழைத்து "பரகாலனை யிங்கேபிடித்துக்கொண்டுவா" என்று உத்தரவுசெய்தான். அவன், யானை

குதிரை காலாள்களுடன் சென்று இவரைவளைத்துப் பிடிக்கப்பார்க்க; இவர் குதிரையின்மேலேறித் தன் பலங்களுடன்வந்து ஆரவாரத்துடன் அவர்கள்மேலேவிழுந்து சேனைகளையெல்லாம் துண்டித்துத் துரத்தியோட்டிவிட; ஸேநாதிபதியும் வெட்கப்பட்டு ஓடி அரசனுக்கு அறிவிக்க; சோழராஜனும்கேட்டு, கோபத்தினால் கண்கள்சிவந்து அப்போதே தன் சதுரங்கபலத்தோடே புறப்பட்டுவந்து, இவரைவளைத்துக்கொள்ளும்படி தன்சேனைகளுக்கு உத்தரவுசெய்தான். அப்படியே அவர்கள்வந்து வளைத்துக்கொள்ள; இவரும் முன்புபோலே வாளுங்கையுமாய்ப் புறப்பட்டுவந்து, ஆரவாரத்துடன் எதிர்த்துவந்தபடையைப் பாறுபாறுக்கித் துரத்த; எல்லாரும்தோற்று ஓடிவந்து ராஜாவின்மேலேவிழுந்தார்கள்; ராஜாவும் ஓடுகிறவர்களை அதிககோபத்துடன் நிறுத்தி, இவரை ஸேனைகளின் நடுவேயாம்படி வளைத்துக்கொண்டான்: இவரும் அதிவீரராய், தன்கையிலிருந்த வாளின்பலத்தாலே ஸேனையை மதியாமல் ஸம்ஹரிக்கத்தொடங்கினார். அதை அரசன்கண்டு இவரைப்பார்த்து "நீர் ஒன்றுக்கும்பயப்படவேண்டா, உம்முடையசௌர்யவீர்யம் கண்டு மிகவும் ஸந்துஷ்டனானேன், நீர் செய்த அபகாரங்களையெல்லாம் மறந்தேன், அஞ்சாதே என்னை நம்பிவாரும்" என்று தன் குருதெய்வங்களைத்தொட்டுசபதம்பண்ணிக்கொடுக்க; இவரும்நம்பி அவனண்டையிற் சென்றவளவிலே, இவருடைய பராக்ரமத்தை மிகவும்கொண்டாடி, "நீர்செய்த த்ரோஹமெல்லாம்மறந்தோம், நம் பகுதிப்பணத்தை மாத்திரம் தரவேணும்" என்று இவரைத் தன்மந்த்ரிவசமாக்கித் திரும்பிப்போனான்: மந்த்ரியும் இவரைப்பிடித்துக்கொண்டுவந்து ஒருதேவாலயத்தில் சிறைவைத்தான்.

இப்படி ஆழ்வார் அந்தக்கோயிலில் மூன்றுநாள்அமுதுசெய்யாமல் உபவஸிதராயிருக்க; இவர் ஸ்வப்நத்தில் பேரருளாளர் எழுந்தருளி, "உமக்குப் பகுதிக்குவேண்டிய தநம்தருகிறோம், காஞ்சீபுரத்துக்குவாரும்" என்றருளிச்செய்ய; இவரும், மறுநாள் மந்த்ரியுடன் "காஞ்சீபுரத்தில் ஆபத்தநமாகக் கொஞ்சம் தநம்புதைத்துவைத்திருக்கிறது, அங்கேவந்தால் உங்கள் தநம் தருகிறேன்" என்ன; அவனும் ராஜாவுக்கு அறிவிக்க. "ஆனால் அதையும்பார்ப்போம், ஜாக்ரதையாய்க்காவலிட்டுக்கொண்டு போதுங்கள்" என்று அரசன் ஆஜ்ஞாபிக்க; இவரும், காவலுடன் காஞ்சீநகரிக்குச்சென்று, புதையல் தநத்தைத் தேடிக்காணமல் மூசித்து மூடிக்கிடந்தார். அவ்வளவில், கருணாகரரான வரதராஜரும், "அஞ்சாதேகொள்ளும்" என்று வேகவதீ தீரத்தில் தநமிருக்கிறவிடத்தை அடையாளமாகக் காட்டியருள; இவரும் அங்கே தநம்கண்டெடுத்து, கப்பப்பணத்தைக்கொடுத்து,மிகுதிதநத்தை ததீயாராதநத்திற்காக வைத்துக்கொண்டார்.

மந்த்ரி, நடந்த வ்ருத்தாந்தத்தைச்சொல்லி தநத்தை அரசன்முன்னே வைத்தான். ராஜாவும், வரதராஜர் ப்ரஸந்நராய் த்ரவ்யம் தந்தபடிகேட்டு ஆச்சரியப்பட்டு, "இவர் ஸாமாந்யரன்று, மஹாபாகவ

தர், இது த்ரௌபதிக்குப் புடவை சுரந்தாற்போலே யிருந்தது, இந் ததநத்தை நம்பொக்கிஷத்தில் வைக்கலாகாது" என்று நினைத்து, ஆழ்வாரையழைத்து அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டு பஹுமுகமாக பஹுமாநம்பண்ணியனுப்பி, அந்த த்ரவ்யத்தை தேவப்ராம்ஹணஸமர்ப்பணம் பண்ணி, இவர் உபவாஸமிருந்த தோஷத்தைத் தீர்த்துக்கொண்டான். ஆழ்வாரும் மற்றதநத்தைக்கொண்டு ததீயாராதநம் நடத்தி, தநமெல்லாம் தீர்ந்து; கையில் காசில்லாமற்போய், "வழிபறித்தாகிலும் பணம்ஸம்பாதித்து ததீயாராதநம் இடைவிடாமல் நடத்தவேணும்," என்று, வழிபறித்து தநங்கொண்டுவந்து ததீயாராதநம் பக்தியுடன் நடத்திக்கொண்டு போராநின்றார்.

இப்படியிருக்கையில், ஆழ்வார் வழிபறிக்கைக்குவேண்டும் பரிகரத்தையுங் கூட்டிக்கொண்டு, திருமணங்கொல்லையில் ஒரு அரசமரத்தில் பதுங்கியிருந்தார்: இவர் ஸ்ரீ வைஷ்ணவர்களுக்காகவே வழிபறிப்பவராகையால் இவர் கைங்கர்யநிஷ்ட்டரானமையை ஸர்வேஸ்வரன்கண்டு, "அந்த ஸுக்ருதமே ஹேதுவாக இவரை விசேஷ கடாக்ஷம்பண்ணி அங்கீகரிக்கவேணும்" என்று திருவுள்ளமாய், அவ்வழியில், வயலாலிமணவாளன் திருமணம்புணர்ந்துவருகிற மணவாளக்கோலமும் தாமுமாய், ப்ராம்ஹணவேஷம்பூண்டு, பத்நியோடேகூட, எல்லா ஆபரணங்களும் அணிந்துகொண்டு, வெகுத்ரவ்யத்துடன், பெருந்திரளோடுவந்துதோற்ற; இத்திரளைக்கண்டு ஆழ்வார் அதிகஸந்தோஷத்தோடே வாளுங்கையுமாய் பரிகரங்களுடன் இவர்ரவளைத்துக்கொண்டு, ஆடைஆபரணங்களையெல்லாம் அபஹரித்து, அறுகாழிமோதிரத்தைத் தன்திருமுத்தால் கடித்துவாங்க; எம்பெருமானும் இதைக்கண்டு "நம்கலியனோ" என்றருளிச்செய்தார். பின்பு, இவையெல்லாவற்றையும் சுமைசுமையாகக்கட்டி யெடுக்கப்பார்க்க, அவை பேர்க்கவும் பேராதபடியாலே, மணவாளனை ப்ராம்ஹணனைப்பார்த்து, "நீ மந்த்ரவாதம்பண்ணினாய்" என்று நெருக்க; "அம்மந்த்ரத்தை உமக்குச் சொல்லுகிறோம் வாரும்" என்று கழுத்தையணைக்க; ஆழ்வாரும் சம்மதித்து, "நீசொல்லாவிடில் இந்தவாளுக்கு இரையாவாய்" என்று தன்கையில் வாளைக்காட்டி ஹடாத்கரித்துக்கேட்க; எம்பெருமானும், எட்டு அக்ஷரமாய் மூன்றுபதமான பெரிய திருமந்த்ரத்தை ஆழ்வாருடைய வலத்திருச்செவியில் செவிக்கின்பமாக உபதேசித்து பெரியதிருவடிமேல் காளமேகம்போன்ற திவ்யமங்களவிக்ஹத்துடன் ஸேவைஸாதிக்க; இவ்வாழ்வார், தமக்கு நிர்ஹேதுகமாகக்கிடைத்த திருமந்த்ரத்தையும், அதுக்குள்ளீடான ஸ்ரீமந் நாராயணனுடைய ஸ்வரூப ரூப குணவிபூதி சேஷ்டிதங்களையும், அருள்மாரி என்னும்படி பெரியபிராட்டியாரருளாலே இவற்றையெல்லாங் கண்டு அநுபவித்து, அத்தாலுண்டான ப்ரீத்யதிசயத்தினால், பெரியதிருமொழி, திருக்குறுந்தாண்டகம், திருநெடுந்தாண்டகம், திருவெழுகூற்றிருக்கை, சிறியதிருமடல், பெரியதிருமடல் என்கிற இவ்வாறு ப்ரபந்தங்களையும், நம்மாழ்வாரருளிச்செய்த நான்குவேதங்களின் ஸாரமாகிய நான்கு

ப்ரபந்தங்களுக்கும் ஆறு அங்கமாக, ஆசு மதுரம் சித்ரம் விஸ்தாரம் என்கிற நான்குவிதமான கவிகளாலே யருளிச்செய்து, நாலு கவிப் பெருமாள் என்று ப்ரஸித்தமாம்படி உபகரித்தருளினர்.

முன்பு திருமொழியருளிச்செய்துகொண்டுதிவ்யதேசங்கள்தோறும் ஸேவித்து எழுந்தருளாநிற்கச்செய்தே, சோழமண்டலத்தில் எழுந்தருளினவளவில், "நாலுகவிப்பெருமாள்வந்தார்! நம்கலியன்வந்தார்! ஆலிநாடர்வந்தார்! அருள்மாரிவந்தார்! கொங்குமலர்க்குழலியர் வேள்வந்தார்! மங்கைவேந்தர்வந்தார்! பரகாலன்வந்தார்! பரவாதிமத்தகஜ கண்டூரவர்வந்தார்!" என்று விருதூதிச்செல்லாநிற்க; அங்கே சம்பந்தன் சிஷ்யர்கள் வந்து, ஆழ்வாரை "எங்கள் சம்பந்தப்பெருமாளிருக்கிறவிடத்தில் நீர் நாலுகவிப்பெருமாளென்று விருதூதிச்செல்லத்தகாது" என்றுதடுக்க; ஆழ்வாரும், "உங்கள் சம்பந்தப்பெருமாளுடன் தர்க்கிக்கக்கடவோம்" என்று அருளிச்செய்ய! "ஆகில்நம்மூரேவாரும்" என்று அழைத்துக்கொண்டுபோய், இவ்விசேஷத்தைச் சம்பந்தருக்குஅறிவிக்க; அவரும் "இவருடன்தர்க்கிக்கக்கடவோம்" என்றுவர: ஊர்முழுதும் சைவராய் வீரபாஷண்டிகளா யிருக்கக் கண்டு, இவ்வாழ்வார்க்கு பகவத்விக்ரஹமின்றியே வாக்குக்கிளம்பாதிருக்க; "இதற்கு என்செய்யக்கடவோம்"? என்று சிந்தித்திருக்கையில், வைஷ்ணவியான ஒரு அம்மையாரைக்கண்டு, "இப்படியிருக்கிறது, ஆகையால் உன்திருவாராதநமான எம்பெருமானை யெனக்கு ஒருக்ஷணம் தரவேணும்" என்றுகேட்க; அவளும் ஆழ்வாருக்கு, தனக்கு ஆராதநமான வெண்ணெயுண்ட தாடாளனை யெழுந்தருளுவித்துக்கொடுக்க; ஆழ்வாரும், அவரையெடுத்துக்கொண்டு சம்பந்தனிருந்தவிடத்தில்போயிருக்க; அவனும், இவரைக்குறித்து ஒருகவிசொல்ல: இவர் அதைக்கேட்டு தூஷிக்க; "ஆகில் நீர் ஒரு கவிசொல்லும்" என்ன; ஆழ்வாரும், "ஒருகுறளாயிருநிலம்" [ரு-பத்து-ச-திருமொழி] என்கிற திருமொழியை யருளிச்செய்து, தம்பெருமையெல்லாம் தோற்ற, "ஆலிநாடன் அருள்மாரி அரட்டமுக்கி அடையார்சியம்-கொங்குமலர்க் குழலியர்வேள்மங்கைவேந்தன் கொற்றவேல்பரகாலன் கலியன்சொன்ன-சங்கமுகத்தமிழ்மாலை" என்றருளிச்செய்ய; அவனும் இதைக்கேட்டு ப்ரத்யுத்தரம் சொல்லிக் கவிபாடமாட்டாமல், "இப்படியும் ஒருவருண்டோ!" என்று ஆச்சரியப்பட்டு, "நாலுகவிப்பெருமாள் என்னும் விருது உமக்குச்செல்லும், விருதூதிக்கொண்டு செல்லீர்" என்று கும்பிட்டுப்போனன்.

பின்பு, பெரியபெருமாளுக்கும் திருவரங்கச்செல்வனரான அழகிய மணவாளர்க்கும், விமாநம் மண்டபம் கோபுரம் ப்ராகாரம் முதலான கைங்கர்யங்கள் செய்தருளத் திருவுள்ளமாய், தம்பரிஜநங்களை யழைத்து, இதற்கு தநார்ஜநம்பண்ணும் உபாயம் கேட்டருள; அவர்களும், "நாகப்பட்டணத்தில் பொன்னுற்செய்த ஒரு புத்தவிக்ரஹமிருக்கிறது, அதைக்கொண்டுவந்து சிங்நம் பிங்நமாக்கிக் கோயிலுக்கு

க் கோபுரம்முதலானவை கட்டலாம்" என்று சொன்னார்கள்: ஆழ்வாரும் நாகப்பட்டணத்திற்குப்போய்,

"ஈயத்தாலாகாதோ? இரும்பினாலாகாதோ ?
பூயத்தால் மிக்கதொரு பூதத்தாலாகாதோ ?
தேயத்தே பித்தளைநற் செம்புகளாலாகாதோ ?
மாயப்பொன்வேணுமோ மதித்துன்னைப் பண்ணுகைக்கே."

என்று அந்த பிம்பம் ஊளையிடும்படி அபஹரித்துக்கொண்டுவந்து பங்கப்படுத்தி, திருமதிள் கைங்கர்யத்துக்கு அர்ஹமாம்படி உருக்கிப் பொன்னாக்கி, அந்தத்ரவ்யத்தைக்கொண்டு திருமதிள்முதலாக சிகரபர்யந்தமாகப்பண்ணவேணும் என்று உபக்ரமித்து, திருமதிள் கட்டுவித்துக் கொண்டுவந்தார். ஸ்ரீ தொண்டரடிப்பொடியாழ்வார் பெரியபெருமாளுக்குத் திருமாலைகட்டுவிக்கிற ஸ்தலம் குறுக்கேநேர்பட, அவ்விடத்தைத் தப்பியொதுங்கத் திருமதிள்கட்டுவிக்க; இதைப்பெரியபெருமாள் பார்த்துத் திருவுள்ளமுகந்தருளி, அருள்மாரி என்றுஇவர்க்குத் திருநாமம்சாத்தி, ப்ரீதராயருளினார். திருமங்கையாழ்வாரும், திருமதிள் திருமண்டபம் மற்றுமுண்டான கைங்கர்யங்கள் முதலாக சிகரபர்யந்தமாகப் பண்ணுவித்து க்ருதார்த்தரானார்.

கலந்ததிருக்கார்த்திகையில்கார்த்திகைவந்தோன்வாழியே
காசினியிற்குறையலூர்க்காவலோன்வாழியே
நலந்திகழாயிரத்தெண்பத்துநாலுரைத்தான்வாழியே
நாலைந்துமாறைந்தும்நமக்குரைத்தான்வாழியே
இலங்கெழுகூற்றிருக்கையிருமடலீந்தான்வாழியே
இம்மூன்றிலிருநூற்றிருபத்தேழீந்தான்வாழியே
வலந்திகழும்குமுதவல்லிமணவாளன்வாழியே
வாட்கலியன்பரகாலன்மங்கையர்கோன்வாழியே.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.





ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

திருமங்கையாழ்வா ரருளிச்செய்த

# பெரிய திருமொழி.



தனியன்கள்.

திருக்கோட்டியூர்நம்பி யருளிச்செய்தது.

𑌕𑌲𑌯𑌾𑌮𑌿𑌕𑌲𑌿𑌧𑍍𑌵𑌂𑌸𑌂 𑌕𑌵𑌿𑌂𑌲𑍋𑌕𑌦𑌿𑌵𑌾𑌕𑌰𑌂।
𑌯𑌸𑍍𑌯𑌗𑍋𑌭𑌿𑌃𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌾𑌭𑌿𑌰𑌾𑌵𑌿𑌦𑍍𑌯𑌂𑌨𑌿𑌹𑌤𑌂𑌤𑌮𑌃॥

கலயாமிகலித்வம்ஸம் கவிம்லோகதிவாகரம் |
யஸ்யகோபி: ப்ரகாஶாபி ராவித்யம்நிஹதம் தம: ||

எம்பெருமானா ரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

வாழிபரகாலன்வாழிகலிகன்றி *
வாழிகுறைய லூர்வாழ் வேந்தன் *—வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல்.

ஆழ்வானருளிச்செய்தது.

கலித்துறை.

நெஞ்சுக்கிருள்கடிதீப மடங்காநெடும்பிறவி
நஞ்சுக்குநல்லவமுதம் * தமிழ்நன் னூல்துறைகள்
அஞ்சுக்கிலக்கியமாரணசாரம் * பரசமய
பஞ்சுக்கனலின்பொறி * பரகாலன்பனுவல்களே.

எம்பா ரருளிச்செய்தது.

நேரிசைவெண்பா.

எங்கள்கதியேயிராமாநுசமுனியே *
சங்கைகெடுத்தாண்டதவராசா*—பொங்குபுகழ்
மங்கையர்கோனீந்த மறையாயிரமனைத்தும் *
தங்குமனம்நீயெனக்குத்தா.

† [மாலைத்தனியே வழிபறிக்கவேணுமென்று *
கோலிப்பதிவிருந்த கொற்றவனே*—வேலை
அணைத்தருளுங்கையா லடியேன்வினையை *
துணித்தருளவேணும்துணிந்து.]

தனியன்கள் முற்றிற்று.



ஆழ்வார் திருவடிகளேசரணம்.

ஜீயர்திருவடிகளேசரணம்.



† இந்தத்தனியன், சோமாசியாண்டானருளிச்செய்ததென்று சிலர்சொல்லுவர்கள்; க்ரந்தஸ்தமாக ஆகரம்கண்டுகொள்வது: இத்தனியனை இந்தப்ராந்தங்களில் அநுஸந்திக்கும் வழக்கமில்லை.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

திருமங்கையாழ்வா ரருளிச்செய்த

# பெரிய திருமொழி.

## முதற்பத்து.

### க-வது, வாடினேன்.

பகவத்விஷயீகாரம் பிறந்தபின்னர் கீழ்கின்றநிலையை யநுஸந்தித்து அநுதபித்து யாவருமறிந்து ஜ்ஜீவியுங்களென்று திருமந்த்ரப்ரபாவமதனை அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**சங்கராபரணராகம் - திரிபுடைதாளம்.**

⚜வாடினேன்வாடிவருந்தினேன்மனத்தால்பெருந்துயரிடும்பையில்பிறந்து*
கூடினேன்கூடியிளையவர்தம்மோடவர்தரும்கலவியேகருதி *
ஓடினேனோடியுய்வதோர்பொருளாலுணர்வெனும்பெரும்பதந்தெரிந்து ‡ *
நாடினேன்நாடிநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். (க)

⚜ ஆவியேயமுதேயெனநினைந்துருகியவரவர்பணைமுலைதுணையா *
பாவியேனுணராதெத்தனைபகலும்பழுதுபோயொழிந்தனநாள்கள் *
தூவிசேரன்னம்துணையொடும்புணரும்சூழ்புனல்குடந்தையேதொழுது* என்
நாவினாலுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். ()

சேமமேவேண்டித்தீவினைபெருக்கித் தெரிவைமாருருவமேமருவி *
ஊமனார்கண்டகனவிலும்பழுதா யொழிந்தனகழிந்தவந்நாள்கள் *
காமனார்தாதைநம்முடையடிகள் தம்மடைந்தார்மனத்திருப்பார் *
நாமம்நானுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம்.()

வென்றியேவேண்டிவீழ்பொருட்கிரங்கி வேற்கணார்கலவியேகருதி *
நின்றவாநில்லாநெஞ்சினையுடையே னென்செய்கேன் * நெடுவிசும்பணவும்
பன்றியாயன்றுபாரகங்கீண்ட பாழியானாழியானருளே *
நன்றுநானுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். (ச)

கள்வனேனானேன்படிறுசெய்திருப்பேன் கண்டவாதிரிதந்தேனேலும் *
தெள்ளியேனானேன்செல்கதிக்கமைந்தேன் சிக்கெனத்திருவருள்பெற்றேன்*
உள்ளெலாமுருகிக்குரல்தழுத்தொழிந்தே னுடம்பெலாம்கண்ணநீர்சோர *
நள்ளிருளளவும்பகலும்நானழைப்பன் நாராயணாவென்னும்நாமம். (ரு)

---

‡ "திரிந்து" என்று பாடாந்தரம்.

⁂எம்பிரானெந்தையென்னுடைச்சுற்றமெனக்கரசென்னுடைவாணாள் * †
அம்பினாலரக்கர்வெருக்கொளநெருக்கி யவருயிர்செகுத்தவெம்மண்ணல் *
வம்புலாஞ்சோலைமாமதிள் § தஞ்சைமாமணிக்கோயிலேவணங்கி *
நம்பிகாளுய்யநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாமம். (௬)

இற்பிறப்பறியீரிவரவரென்னீ ரின்னதோர்தன்மையென்றுணரீர் *
கற்பகம்புலவர்களைகணென்றுலகில் கண்டவாதொண்டரைப்பாடும் *
சொற்பொருளாளீர்சொல்லுகேன்வம்மின்சூழ்புனல்குடந்தையேதொழுமின்
நற்பொருள்காண்மின்பாடிநீருய்மின் நாராயணாவென்னும்நாமம். (எ)

கற்றிலேன்கலைகளைம்புலன்கருதும்கருத்துளேதிருத்தினேன்மனத்தை *
பெற்றிலேனதனால்பேதையேன்நன்மை பெருநிலத்தாருயிர்க்கெல்லாம் *
செற்றமேவேண்டித்திரிதருவேன்தவிர்ந்தேன் செல்கதிக்குய்யுமாறெண்ணி*
நற்றுணையாகப்பற்றினேனடியேன் நாராயணாவென்னும்நாமம். (அ)

⁂ குலந்தருஞ்செல்வந்தந்திடுமடியார் படுதுயராயினவெல்லாம் *
நிலந்தரஞ்செய்யும்நீள்விசும்பருளு மருளொடுபெருநிலமளிக்கும் *
¶ வலந்தரும்மற்றுந்தந்திடும் பெற்றதாயினுமாயினசெய்யும் * [ம்.
நலந்தருஞ்சொல்லைநான்கண்டுகொண்டேன் நாராயணாவென்னும்நாம

⁂ மஞ்சுலாஞ்சோலைவண்டறைமாநீர் மங்கையார்வாள்கலிகன்றி *
செஞ்சொலாலெடுத்ததெய்வநன்மாலையிவைகொண்டுசிக்கெனத்தொண்டீர்*
துஞ்சும்போதழைமின்துயர்வரில்நினைமின் துயரிலீர்சொல்லிலும்நன்றாம் *
நஞ்சுதான்கண்டீர்நம்முடைவினைக்கு நாராயணாவென்னும்நாமம். ()

வாடாவிசேமம் வென்றி கள்வனெம்பிரானிற் பிறப்புகற்றுக்குலம்மஞ்சுவாலி.
திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## உ-வது, வாலிமாவலத்து.

மந்த்ரமுபதேசித்து அதற்கர்த்தமான தத்புருஷ பஹுவ்ரீஹிஸமாஸப்ரஸித்தமாய் ஸ்வாமித்வ ஸௌலப்யங்களுக் கெல்லைநிலமாகும் அர்ச்சாவதாரங்களை யாஶ்ரயிக்கும்படி உபதேசிக்கக்கோலி யுகந்தருளின நிலங்களுக் கெல்லைநிலமான இமவான்நிலத்தில் திருப்பிரிதியளவுஞ்சென்று அவ்விடமநுபவிப்பதாகத் திருவுள்ளத்துக் கருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
அடாணராகம்-ஆதிதாளம்.

⁂ வாலிமாவலத்தொருவனதுடல்கெட வரிசிலைவளைவித்தன்று - *
ஏலநாறுதண்டடம்பொழிலிடம்பெற விருந்தநலிமயத்துள் *
ஆலிமாமுகிலதிர்தரவருவரை யகடுறமுகடேறி *
பீலிமாமயில்நடஞ்செயுந்தடஞ்சுனைப் பிரிதிசென்றடைநெஞ்சே. (க)

---

† வீரசோழியம் - சந்திப்படலம்-உச-சூத்திரம், "ஐம்மூன்றதாமுடல் வன்மைபின் வந்திடிலாறுடைந்தா, மெய்ம்மாண்பதாநவ்வரின் முன்பழிந்து பின்மிக்கணவ்வா, மம்மேல்வரினிருமூன்றுமுடன்மற்றியல்புசந்தி, தம்மாசகலம் கிடப்பின்களாமென்பதாழ்குழலே." (உ-ம்) பாழ்கும்பி - பாண்கும்பி; வாழ்நாள் - வாணாள். § "தஞ்சமா" என்று நஞ்சீயர்படிவ்யாக்யாநத்திற்பாடம். ¶ "வரந்தரும்" என்று பாடாந்தரம்.

கலங்கமாக்கடலரிகுலம்பணிசெய்ய அருவரையணைகட்டி *
இலங்கைமாநகர்பொடிசெய்தவடிகள்தா மிருந்தநலிமயத்து *
விலங்கல்போல்வனவிறலிருஞ்சினத்தன வேழங்கள்துயர்கூர *
பிலங்கொள்வாளெயிற்றரியவைதிரிதரு பிரிதிசென்றடைநெஞ்சே. ()

துடிகொள்நுண்ணிடைச்சுரிகுழல் துளங்கெயிற்றிளங்கொடிதிறத்து-*ஆயர்
இடிகொள்வெங்குரலினவிடையடர்த்தவ னிருந்தநலிமயத்து *
கடிகொள்வேங்கையின்நறுமலரமளியின் † மணியறைமிசைவேழம் *
பிடியினோடுவண்டிசைசொலத்துயில்கொளும் பிரிதிசென்றடைநெஞ்சே.(௫)

மறங்கொளாளரியுருவெனவெருவர வொருவனதகல்மார்வம்
திறந்து * வானவர்மணிமுடிபணிதர விருந்தநலிமயத்துள் *
இறங்கியேனங்கள்வளைமருப்பிடந்திடக் கிடந்தருகெரிவீசும் *
பிறங்குமாமணியருவியொடிழிதரு பிரிதிசென்றடைநெஞ்சே. (௬)

கரைசெய்மாக்கடல்கிடந்தவன் கனைகழலமரர்கள்தொழுதேத்த *
அரைசெய்மேகலையலர்மகளவளொடு மமர்ந்தநலிமயத்து *
வரைசெய்மாக்களிறிளவெதிர்வளர்முளை‡யளைமிகுதேன்தோய்த்து*
$பிரச¶வாரிதன்னிளம்பிடிக்கருள்செயும்பிரிதிசென்றடைநெஞ்சே.

பணங்களாயிரமுடைய நல்லரவணைப்பள்ளிகொள்பரமாவென்று-*
இணங்கிவானவர்மணிமுடிபணிதர விருந்தநலிமயத்து *
மணங்கொள்மாதவிநெடுங்கொடிவிசும்புற நிமிர்ந்தவைமுகில்பற்றி *
பிணங்குபூம்பொழில்நுழைந்துவண்டிசைசொலும்பிரிதிசென்றடைநெஞ்சே

கார்கொள்வேங்கைகள்கனவரைதழுவிய கறிவளர்கொடிதுன்னி *
போர்கொள்வேங்கைகள்புனவரைதழுவிய பூம்பொழிலிமயத்துள் *
ஏர்கொள்பூஞ்சுனைத்தடம்படிந் தினமலரெட்டுமிட்டிமையோர்கள் *
பேர்களாயிரம்பரவிநின்றடிதொழும் பிரிதிசென்றடைநெஞ்சே. (எ)

இரவுகூர்ந்திருள்பெருகியவரைமுழை யிரும்பசியதுகூர *
அரவமாவிக்கு மகன்பொழில்தழுவிய வருவரையிமயத்து *
பரமனாதியெம்பனிமுகில்வண்ணனென் றெண்ணிநின் றிமையோர்கள் *
பிரமனோடுசென்றடிதொழும்பெருந்தகைப்பிரிதிசென்றடைநெஞ்சே.

ஓதியாயிரநாமங்களுணர்ந்தவர்க் குறுதுயரடையாமல் *
ஏதமின்றிநின் றருளும்நம்பெருந்தகை யிருந்தநலிமயத்து *
தாதுமல்கியபிண்டிவிண்டலர்கின்ற தழல்புரையெழில்நோக்கி *
பேதைவண்டுகளெரியெனவெருவரு பிரிதிசென்றடைநெஞ்சே. (௯)

† மணியறை - மாணிக்கப்பாறை. ‡ அளை - வங்கு. $ பிரசம் - தேன்கூடும், மதுகரங்களும். ¶ வாரி - தேன்.

⁂ கரியமாமுகில்படலங்கள்கிடந் தவைமுழங்கிட * களிறென்று
பெரிய $ மாசுணம்வரையெனப்பெயர்தரு பிரிதியெம்பெருமானை *
வரிகொள்வண்டறைபைம்பொழில்மங்கையர் கலியனதொலிமாலை *
அரியவின்னிசைபாடுநல்லடியவர்க் கருவினையடையாவே. (கo)

வாலி கலங்கத் துடி மறம் கரைசெய் பணம் கா ரிரவு ஓதி கரிய முற்ற.
திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, முற்றமூத்து.



செய்கிறோமென்று நெஞ்சாறியிருக்கச் சரீராஸ்திரத்தையும் வார்த்திகதோஷத்தையுஞ் சொல்லிக்கொண்டு பதரியைச் சீக்ரத்தில் ஆஶ்ரயிப்போமென்று அருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**முகாரிராகம்-ஆதிதாளம்.**

⁂ முற்றமூத்துக்கோல்துணையா முன்னடிநோக்கிவளைந்து - *
இற்றகால்போல்தள்ளிமெள்ள விருந்தங்கிளையாமுன் *
பெற்றதாய்போல்வந்தபேய்ச்சி பெருமுலையூடு - * உயிரை
வற்றவாங்கியுண்டவாயான் வதரிவணங்குதுமே. (க)

முதுகுபற்றிக்கைத்தலத்தால் முன்னொருகோலூன்றி *
விதிர்விதிர்த்துக்கண்சுழன்று மேற்கிளைக்கொண்டிருமி *
இதுவென்னப்பர்மூத்தவாறென் றிளையவரேசாமுன் *
மதுவுண்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. (உ)

உறிகள்போல்மெய்ந்நரம்பெழுந் தூன்தளர்ந்துள்ளமெள்கி *
நெறியைநோக்கிக்கண்சுழன்று நின்றுநடுங்காமுன் *
அறிதியாகில்நெஞ்சமன்பாயாயிரநாமஞ்சொல்லி *
வெறிகொள்வண்டுபண்கள்பாடும் வதரிவணங்குதுமே. (௩)

பீளைசோரக்கண்ணிடுங்கிப் பித்தெழமூத்திருமி *
தாள்கள்நோவத்தம்மில்முட்டித் தள்ளிநடவாமுன் *
காளையாகிக்கன்றுமேய்த்துக் குன்றெடுத்தன்றுநின்றான் *
வாளைபாயும்தண்டடஞ்சூழ் வதரிவணங்குதுமே. (௪)

பண்டுகாமரானவாறும் பாவையர்வாயமுதம்
உண்டவாறும் * வாழ்ந்தவாறு மொக்கவுரைத்திருமி *
தண்டுகாலாவூன்றியூன்றித் தள்ளிநடவாமுன் *
வண்டுபாடும்தண்டுழாயான் வதரிவணங்குதுமே. (௫)

---

$ மாசுணம் - மலைப்பாம்பு.

எய்த்தசொல்லோடீளேயேங்கி யிருமியிளைத்துடலம் *
பித்தர்போலச்சித்தம்வேறாய்ப் பேசியயராமுன் *
அத்தனெந்தைபாதிமூர்த்தி யாழ்கடலைக்கடைந்த *
மைத்தசோதியெம்பெருமான் வதரிவணங்குதுமே. (சு)

பப்பஅப்பர்மூத்தவாறு பாழ்ப்பதுசீத்திரளை
யொப்ப * † ஐக்கள்போதவுந்த வுன்தமர்காண்மினென்று *
செப்புநேர்மென்கொங்கைநல்லார் தாம்சிரியாதமுன்னம் *
வைப்பும்நங்கள்வாழ்வுமானான் வதரிவணங்குதுமே. (எ)

ஈசிபோமினீங்கிரேன்மி னிருமியிளைத்தீர் * உள்ளம்
கூசியிட்டீரென்றுபேசும் குவளையங்கண்ணியர்பால் *
நாசமானபாசம்விட்டு நன்னெறிநோக்கலுறில் *
வாசம்மல்குதண்டுழாயான் வதரிவணங்குதுமே. (அ)

புலன்கள்நையமெய்யில்மூத்துப் போந்திருந்துள்ளமெள்கி *
கலங்கஐக்கள்போதவுந்திக் கண்டபிதற்றாமுன் *
அலங்கலாயதண்டுழாய்கொண் டாயிரநாமஞ்சொல்லி *
வலங்கொள்தொண்டர்பாடியாடும் வதரிவணங்குதுமே. (கூ)

‡‡ வண்டுதண்டேனுண்டுவாழும் வதரிநெடுமாலை *
‡ கண்டல்வேலிமங்கைவேந்தன் கலியனொலிமாலை *
கொண்டுதொண்டர் பாடியாடக்கூடிடில் * நீள்விசும்பில்
அண்டமல்லால்மற்றவர்க் கோராட்சியறியோமே. (கo)

முற்ற மூது குறி பீளை பண் டெய்த்த பப்ப ஈசி புலன் வண்டேனம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, ஏனமுனகி.



பதரிகாஶ்ரமத்தை யாஶ்ரயிப்போமென்று அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**பர்துவராளிராகம்-ஆதிதாளம்.**

‡‡ ஏனமுனகியிருநிலமிடந் தன்றிணையடியிமையவர்வணங்க *
தானவனகம்தரணியிற்புரளத் தடஞ்சிலைகுனித்தவென்தலைவன் *
தேனமர்சோலைக்கற்பகப்பயந்த தெய்வநன்னறுமலர்கொணர்ந்து *
வானவர்வணங்குங்கங்கையின் கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே

கானிடையுருவைச்சுடுசரந்துரந்து, கண்டுமுன்கொடுந்தொழிலுரவோன் *
ஊனுடையகலத்தடுகணைகுளிப்ப வுயிர்கவர்ந்துகந்தவெம்மொருவன் *
தேனுடைக்கமலத்தயனொடுதேவர் சென்றுசென்றிறைஞ்சிட * பெருகு
வானிடைமுதுநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. (உ)

† ஐக்கள் - ஶ்லேஷ்மா. ‡ கண்டல் - தாழை.

இலங்கையும்கடலுமடலருந்துப்பி லிருநிதிக்கிறைவனும் * அரக்கர் [ன்ற
குலங்களும்கெடமுன்கொடுந்தொழில்புரிந்தகொற்றவன், கொழுஞ்சுடர்சுழ
விலங்கலிலுரிஞ்சிமேல்நின்றவிசும்பில் வெண்துகில்கொடியெனவிரிந்து *
வலந்தருமணிநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. (ந)

துணிவினியுனக்குச்சொல்லுவன்மனமேதொழுதெழு, தொண்டர்கள்தமக்கு
பிணியொழித்தமரர்பெருவிசும்பருளும் பேரருளாளனெம்பெருமான் *
அணிமலர்க்குழலாரரம்பையர்துகிலு மாரமும்வாரிவந்து - * அணிநீர்
மணிகொழித்திழிந்தகங்கையின்கரைமேல்வதரியாச்சிராமத்துள்ளானே. (ச)

பேயிடைக்கிருந்துவந்தமற்றவள்தன் பெருமுலைசுவைத்திட * பெற்ற
தாயிடைக்கிருத்தலஞ்சுவனென்று தளர்ந்திடவளர்ந்தவென்தலைவன் *
சேய்முகட்டுச்சியண்டமும்சுமந்த செம்பொன்செய்விலங்கலிலிலங்கு *
வாய்முகட்டிழிந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. (ரு)

தோரணங்கல்குல்செழுங்கயல்கண்ணி திறத்தொருமறத்தொழில்புரிந்து *
பாரணங்கிமிலேறேழும்முன்னடர்த்த பனிமுகில்வண்ணனெம்பெருமான் *
காரணந்தன்னால்கடும்புனல்கயத்த கருவரைபிளவெழக்குத்தி *
வாரணங்கொணர்ந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே.(சு)

வெந்திறல்களிறும்வேலைவாயமுதும் விண்ணொடுவிண்ணவர்க்கரசும் *
இந்திரற்கருளியெமக்குமீந்தருளுமெந்தையெம்மடிகளெம்பெருமான் *
அந்தரத்தமராடியிணைவணங்க ஆயிரமுகத்தினாலருளி *
மந்தரத்திழிந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. (எ)

மான்முனிந்தொருகால்வரிசிலைவளைத்தமன்னவன்,பொன்னிறத்துரவோன்*
ஊன்முனிந்தவனதுடலிருபிளவா வுகிர்நுதிமடுத்து - * அயனரனைத்
தான்முனிந்திட்ட வெந்திறல்சாபந்தவிர்த்தவன் * தவம்புரிந்துயர்ந்த
மாமுனிகொணர்ந்தகங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. ()

கொண்டல்மாருதங்கள்குலவரைதொகுநீர்க் குரைகடலுலகுடனனைத்தும் *
உண்டமாவயிற்றோனொண்சுடரேய்ந்த வும்பருமூழியுமானான் *
அண்டமூடறுத்தன்றந்தரத்திழிந் தங்கவனியாளலமர * பெருகும்
மண்டுமாமணிநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானே. (கூ)

⁂ வருந்திரைமணிநீர்க்கங்கையின்கரைமேல் வதரியாச்சிராமத்துள்ளானை *
கருங்கடல்முன்னீர்வண்ணனையெண்ணிக் கலியன்வாயொலிசெய்தபனுவல்*
வரஞ்செய்தவைந்துமைந்தும்வல்லார்கள்வானவருலகுடன்மருவி *
இருங்கடலுலகமாண்டுவெண்குடைக்கீ ழிமையவராகுவர்தாமே. (க0)

எனம் கான் இலங்கை துணிவு பேய் தேர் வெந்திறல் மான் கொண்டல் வருந்திரை கலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு-வது, கலையும்கரியும்.

ஸ்ரீசாளக்ராமத்தில்வந்து ஸந்நிஹிதனானவனை ஆஸ்ரயிப்போமென்று திருவுள்ளத்தோடே கூடுகிறதாக அருளிச்செய்கிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அபநுபாாகம்-ஆதிதாளம்.

⁂ கலையும்கரியும்பரிமாவும் திரியும்கானம்கடந்துபோய் *
சிலையும்கணையும்துணையாகச் சென்றான்வென்றிச்செருக்களத்து *
மலைகொண்டலைநீரணைகட்டி மதிள்நீரிலங்கைவாளரக்கர்
தலைவன் * தலைபத்தறுத்துகந்தான் சாளக்கிராமமடைநெஞ்சே. (க)

கடம்சூழ்கரியும்பரிமாவுமொலி † மாங்தேரும்காலாளும் *
உடன்சூழ்ந்தெழுந்தகடியிலங்கை பொடியாவடிவாய்ச்சரந்துரந்தான்
இடஞ்சூழ்ந்தெங்குமிருவிசும்பி லிமையோர்வணங்கமணங்கமழும் *
தடஞ்சூழ்ந்தெங்குமழகாய சாளக்கிராமமடைநெஞ்சே. (உ)

உலவுதிரையும்குலவரையு மூழிமுதலாவெண்திக்கும் *
நிலவும்சுடருமிருளுமாய் நின்றான்வென்றிவிறலாழி
வலவன் * வானோர்தம்பெருமான் மருவாவரக்கர்க்கெஞ்ஞான்றும்
0 சலவன் * சலஞ்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே. (ங)

ஊரான்குடந்தையுத்தம னொருகாலிருகால்சிலைவளைய *
தேராவரக்கர்தேர்வெள்ளம்செற்றான் வற்றாவருபுனல்சூழ்
பேரான் * பேராயிரமுடையான் பிறங்குசிறைவண்டறைகின்ற
தாரான் * ‡ தாராவயல்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே. (ச)

அடுத்தார்த்தெழுந்தாள்பிலவாய்விட்டலற வவள்மூக்கயில்வாளால்
விடுத்தான் * விளங்குசுடராழிவிண்ணோர்பெருமான்நண்ணார்முன் *
கடுத்தார்த்தெழுந்தபெருமழையைக் கல்லொன்றேந்தியினநிரைக்காத்
தடுத்தான் * தடஞ்சூழ்ந்தழகாய சாளக்கிராமமடைநெஞ்சே. (ரு)

தாயாய்வந்தபேயுயிரும் தயிரும்விழுதுமுடனுண்ட
வாயான் * தூய ¶ வரியுருவிற்குறளாய்ச்சென்றுமாவலியை
$ ஏயானிரப்ப * மூவடிமண்ணின்றேதாவென்றுலகேழும்
தாயான் * காயாமலர்வண்ணன் சாளக்கிராமமடைநெஞ்சே. (சு)

ஏனோரஞ்சவெஞ்சமத்து ளரியாய்ப்பரியவிரணியனை *
ஊனாரகலம்பிளவெடுத்த வொருவன், தானேயிருசுடராய் *
வானாய்த்தீயாய்மாருதமாய் மலையாயலைநீருலகனைத்தும்
தானாய் * தானுமானான்றன் சாளக்கிராமமடைநெஞ்சே. (எ)

---

† மாத்தேர் என்பதின் வல்லொற்று மெல்லொற்றாய், மாங்தேர் எனக் கிடக்கிறது. 0 சலவன் - ஸாத்ரவமுடையவன். ‡ தாரா - ஓர்பட்சி. ¶ "வலி" என்றும் பாடம். $ ஏயான் - (இரப்புக்குத்) தகாதவன்.

வெந்தாரென்பும்சுடுநீறும் மெய்யிற்பூசிக்கையகத்து -* ஓர்
சந்தார்தலைகொண்டுலகேழுந்திரியும்பெரியோன்றான்சென்று * என்
எந்தாய் ! சாபம்தீரென்ன, § இலங்கமுதுநீர்திருமார்பில்
தந்தான் * சந்தார்பொழில்சூழ்ந்த சாளக்கிராமமடைநெஞ்சே. (அ)

தொண்டாமினமுமிமையோரும் துணைநூல்மார்விலந்தணரும் *
அண்டா ! எமக்கேயருளாயென் றணையும்கோயிலருகெல்லாம் *
வண்டார்பொழிலின்பழனத்து வயலினயலேகயல்பாய *
தண்டாமரைகள்முகமலர்த்தும் சாளக்கிராமமடைநெஞ்சே. (கூ)

⁂ தாராவாரும்வயல்சூழ்ந்த சாளக்கிராமத்தடிகளை *
காரார்புறவில்மங்கைவேந்தன் கலியனொலிசெய்தமிழ்மாலை *
ஆராருலகத்தறிவுடையா ரமரர்நன்னாட்டரசாள *
பேராயிரமுமோதுமின்க ளன்றியிவையேபிதற்றுமினே. (கO)

கலை கட முலை லூர் அடுத்துத் தாய் ஏனோர் வெந்தார் தொண்டு தாரா வாணிலா.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, வாணிலாமுறுவல்.

தம்முபதேசங்கேட்டு நெஞ்சொருப்பட்டவாறே நிகர்ஷதையை அநுஸந்தித்து விஷயாந்தர ப்ராவண்யம்முதலான பூர்வவிருத்தங்களைச்சொல்லிக்கொண்டு நைமிசாரண்யத்திலே நிற்கிற ஸர்வேசுவரன் திருவடிகளிலே ஶரணம்புகுந்ததாக அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**காம்போதிராகம்-ஆதிதாளம்.**

⁂ வாணிலாமுறுவல்சிறுநுதல்பெருந்தோள்
மாதரார்வனமுலைப்பயனே
பேணினேன் * அதனைப்பிழையெனக்கருதிப்
பேதையேன்பிறவிநோயறுப்பான் *
ஏணிலேனிருந்தேனெண்ணினேனெண்ணி
யிளையவர்கலவியின்திறத்தை *
நாணினேன், வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (க)

சிலம்படியுருவிற்கருநெடுங்கண்ணார்
திறத்தனாயறத்தையேமறந்து *
புலன்படிந்துண்ணும்போகமேபெருக்கிப்
போக்கினேன்பொழுதினைவாளா *

§ "இலங்குமதுநீர்" என்றும்பாடம்.

அலம்புரிதடக்கையாயனேமாயா
வானவர்க்கரசனே * வானோர்
நலம்புரிந்திறைஞ்சும்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (உ)

சூதினைப்பெருக்கிக்களவினைத்துணிந்து
சுரிகுழல்மடந்தையர்திறத்து *
காதலேமிகுத்துக்கண்டவாதிரிந்த
தொண்டனேன், நமன்றமர்செய்யும் *
வேதனைக்கொடுங்கிநடுங்கினேன், வேலை
வெண்டிரையலமரக்கடைந்த *
நாதனே, வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (ங)

வம்புலாங்கூந்தல்மனைவியைத்துறந்து
பிறர்பொருள்தாரமென்றிவற்றை *
நம்பினாரிறந்தால்நமன்றமர்பற்றி
யெற்றிவைத்து - * எரியெழுகின்ற
செம்பினாலியன்றபாவையைப் பாவீ !
தழுவெனமொழிவதற்கஞ்சி *
நம்பனேவந்துன் திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (ச)

இடும்பையாலடர்ப்புண்டிடுமினோதுற்றென்
றிரந்தவர்க்கில்லையேயென்று *
நெடுஞ்சொலால்மறுத்தநீசனேனந்தோ !
நினைக்கிலேன்வினைப்பயன்றன்னை *
கடுஞ்சொலார்கடியார்காலனார்தமரால்
படுவதோர்கொடுமிறைக்கஞ்சி *
நடுங்கிநான்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (ரு)

கோடியமனத்தால்சினத்தொழில்புரிந்து
திரிந்துநாயினத்தொடும்திளைத்திட்டு - *
ஓடியுமுழன்றுமுயிர்களேகொன்றேன்
உணர்விலேனாதலால் *, நமனார்
பாடியைப்பெரிதும்பரிசழித்திட்டேன்
பரமனே பாற்கடற்கிடந்தாய் *
நாடிநான்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (சு)

நெஞ்சினால்நினைந்தும்வாயினால்மொழிந்தும்
நீதியல்லாதனசெய்தும் *
துஞ்சினார்செல்லும்தொன்னெறிகேட்டே
துளங்கினேன் விளங்கனிமுனிந்தாய் *
வஞ்சனேனடியேன்நெஞ்சினிற்பிரியா
வானவா தானவர்க்கென்றும்
நஞ்சனே * வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (எ)

ஏவினார்கலியார்நலிகவென்றென்மேல்
எங்ஙனேவாழுமாறு - * ஐவர்
கோவினார்செய்யும்கொடுமையை ‡ மடித்தேன்
குறுங்குடிநெடுங்கடல்வண்ணா *
பாவினாரின்சொல்பன்மலர்கொண்டுன்
பாதமேபரவிநான்பணிந்து - * என்
நாவினால்வந்துன்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (அ)

ஊனிடைச்சுவர்வைத்தென்புதூண்நாட்டி
உரோமம் மேய்ந்து, ஒன்பதுவாசல் *
தானுடைக்குரம்பைபிரியும்போதுன்றன்
சரணமேசரணமென்றிருந்தேன் *
தேனுடைக்கமலத்திருவினுக்கரசே
திரைகொள்மாநெடுங்கடல்கிடந்தாய் *
நானுடைத்தவத்தால்திருவடியடைந்தேன்
நைமிசாரணியத்துளெந்தாய். (கூ)

⁂ ஏதம்வந்தணுகாவண்ணநாமெண்ணி
யெழுமினோதொழுதுமென்று - * இமையோர்
நாதன்வந்திறைஞ்சும்நைமிசாரணியத்
தெந்தையைச் சிந்தையுள்வைத்து *
காதலேமிகுத்தகலியன்வாயொலிசெய்
மாலைதான்கற்றுவல்லார்கள் *
ஓதநீர்வையகமாண்டுவெண்குடைக்கீழ்
உம்பருமாகுவர்தாமே. (க0)

வாள் சிலம்பு சூது வம் பிடும்பை கோடிய நெஞ் சேவினார் ஊனேத மங்கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ மடித்தேன் - திரியவிடுவித்தேன்.

## எ-வது, அங்கண்ஞாலம்.



*இவ்வாழ்வாருடைய பயந்தீரும்படி சிங்கவேழ்குன்றிலே ஸந்நிதிபண்ணி உமக்கொரு பயம்வேண்டா நீர்கிட்டி நம்மையநுபவித்துச் சுகமே யிருமென்ன ஹ்ருஷ்டரா யனுபவிக்கையிலே ஒருப்படுகிற தாக அருளிச்செய்கிறார்.*

*அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.*

**கமாசுராகம்-நபகதாளம்..**

✠ அங்கண்ஞாலமஞ்ச அங்கோராளரியாய் * அவுணன்
பொங்கவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
பைங்கணானைக்கொம்புகொண்டு பத்திமையால் * அடிக்கீழ்ச்
செங்கணுளியிட்டிறைஞ்சும் சிங்கவேழ்குன்றமே. (க)
அலைத்தபேழ்வாய் வாளெயிற்றோர்க்கோளரியாய் * அவுணன்
கொலைக்கையாளன்நெஞ்சிடந்த கூருகிராளனிடம் *
† மலைத்தசெல்சாத்தெறிந்தபூசல் வன்துடிவாய்கடுப்ப *
சிலைக்கைவேடர்தெழிப்பறாத சிங்கவேழ்குன்றமே. (உ)
ஏய்ந்தபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
வாய்ந்தவாகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
ஓய்ந்த ‡ மாவுமுடைந்தகுன்றுமன்றியும், நின்றழலால் *
தேய்ந்தவேயுமல்லதில்லாச் சிங்கவேழ்குன்றமே. (ங)
எவ்வும்வெவ்வேல்பொன்பெயரோ னேதலனின்னுயிரை
வவ்வி * ஆகம்வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம் *
கவ்வுநாயுங்கழுகு முச்சிப்போதொடுகால்சுழன்று *
தெய்வமல்லால்செல்லவொண்ணுச் சிங்கவேழ்குன்றமே. (ச)
மென்றபேழ்வாய் வாளெயிற்றோர்கோளரியாய் * அவுணன்
பொன்றவாகம்வள்ளுகிரால் போழ்ந்தபுனிதனிடம் *
நின்றசெந்தீமொண்டு $ சூறை நீள்விசும்பூடிரிய ¶ *
சென்றுகாண்டற்கரியகோயில் சிங்கவேழ்குன்றமே. (ரு)
எரிந்தபைங்கணிலங்குபேழ்வா யெயிற்றொடிதெவ்வுருவென்று *
இரிந்துவானோர்கலங்கியோட விருந்தவம்மானதிடம் *
நெரிந்தவேயின்முழையுள்நின்று நீணெறிவாயுழுவை 0 *
திரிந்தவானைச்சுவடுபார்க்கும் சிங்கவேழ்குன்றமே. (சு)
முனைத்தசீற்றம்விண்சுடப்போய் மூவுலகும்பிறவும் *
அனைத்துமஞ்சவாளரியா யிருந்தவம்மானதிடம் *
கனைத்ததீயுங்கல்லுமல்லா வில்லுடைவேடருமாய் *
தினைத்தனையும்செல்லவொண்ணுச் சிங்கவேழ்குன்றமே. (எ)

---

† மலைத்த - (வேடரால்) தகைப்பட்டு, செல்சாத்து - போகாநிற்கிற ஸமூஹம். ‡ மா - மிருகங்கள்; "மாவேகருமையும் பெருமையும் நிலனும், மேவியநாற்கா லுடையவும்வண்டும், பூவுறைதிருவென வாறையும்பொருந்தும்" என்று நிகண்டு. $ சூறை - சுழல்காற்று. ¶ "எரிய" என்றுபாடாந்தரம். 0 உழுவை - புலி.

நாத்தழும்பநான்முகனு மீசனுமாய்முறையால்
ஏத்த * அங்கோராளரியா யிருந்தவம்மானதிடம் *
காய்த்தவாகைநெற்றொலிப்பக் கல்லதர்வேய்ங்கழைபோய் *
தேய்த்ததீயால்விண்சிவக்கும் சிங்கவேழ்குன்றமே. (அ)

நல்லநெஞ்சேநாம்தொழுதும் நம்முடைநம்பெருமான் *
அல்லிமாதர்புல்கநின்ற வாயிரந்தோளனிடம் *
நெல்லிமல்கிக்கல்லுடைப்பப் புல்லிலையார்த்து - * அதர்வாய்
§ சில்லிசில்லென்றொல்லறாத சிங்கவேழ்குன்றமே. (கூ)

⁂ செங்கணாளியிட்டிறைஞ்சும் சிங்கவேழ்குன்றுடைய *
எங்களீசனெம்பிரானை யிருந்தமிழ்நூற்புலவன் *
மங்கையாளன்மன்னுதொல்சீர் வண்டறைதார்க்கலியன் *
செங்கையாளன்செஞ்சொல்மாலை வல்லவர்தீதிலரே. (கO)

அங்கணலை எய்ந்த எவ்வம் மென்றெரிமுனைத்த நாநலைசெங்கண்கொங்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, கொங்கலர்ந்த.



நாமஞ்சொன்னருடைய துரிதங்களைப் போக்குகைக்காகத் திருமலையிலேவந்து ஸந்நிஹிதனானவனை யங்கேபோ யநுபவிப்போமென்று திருவுள்ளத்தோடு கூட்டுகிறதாக அருளிச்செய்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**யழனுகலியாணிராகம்-திரிபுடைதாளம்.**

⁂ கொங்கலர்ந்தமலர்க்குருந்தமொசித்த கோவலனெம்பிரான் *
சங்குதங்குதடங்கடல் துயில்கொண்டதாமரைக்கண்ணினன் *
பொங்குபுள்ளினைவாய்பிளந்த புராணர்தம்மிடம் * பொங்குநீர்
செங்கயல்திளைக்கும்சுனைத் திருவேங்கடமடைநெஞ்சமே. (க)

⁂ பள்ளியாவதுபாற்கடலறங்கம், இரங்க வன்பேய்முலை *
பிள்ளையாயுயிருண்ட வெந்தைபிரானவன்பெருகுமிடம் *
வெள்ளியான்கரியான்மணிநிறவண்ணனென்றெண்ணி * நாடொறும்
தெள்ளியார்வணங்கும்மலைத் திருவேங்கடமடை நெஞ்சமே. (உ)

நின்றமாமருதிற்றுவீழ நடந்தநின்மலன்நேமியான் *
என்றும்வானவர்கைதொழு மிணைத்தாமரையடியெம்பிரான் *
கன்றிமாரிபொழிந்திடக் கடிதாநிரைக்கிடர்நீக்குவான் *
சென்றுகுன்றமெடுத்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே. (ங)

பார்த்தற்காயன்றுபாரதங்கைசெய்திட்டு வென்றபரஞ்சுடர் *
கோத்தங்காயர்தம்பாடியில் குரவைபிணைந்தவெங்கோவலன் *
ஏத்துவார்தம்மனத்துள்ளான், இடவெந்தைமேவியவெம்பிரான் *
தீர்த்தநீர்த்தடஞ்சோலைசூழ் திருவேங்கடமடைநெஞ்சமே. (ச)

---

§ சில்லி - சில்வீடு - என்னும் பக்ஷிகள்.

வண்கையானவுணர்க்குநாயகன் வேள்வியில்சென்று, மாணியாய் *
மண்கையாலிரந்தான் மராமரமேழுமெய்தவலத்தினன் *
எண்கையானிமயத்துள்ளா னிருஞ்சோலைமேவியவெம்பிரான் *
திண்கைமாதுயர்தீர்த்தவன் திருவேங்கடமடைநெஞ்சமே. (ரு)
எண்டிசைகளுமேழுலகமும்வாங்கிப் பொன்வயிற்றில்பெய்து *
பண்டொராலிலைப்பள்ளிகொண்டவன் பான்மதிக்கிடர்தீர்த்தவன் *
ஒண்டிறலவுணனுரத்துகிர்வைத்தவனொள்ளெயிற்றொடு *
திண்டிறலரியாயவன் திருவேங்கடமடைநெஞ்சமே. (சு)
பாருநீரெரிகாற்றினோடாகாசமுமிவையாயினன் *
பேருமாயிரம்பேசநின்ற பிறப்பிலிபெருகுமிடம் *
காரும்வார்பனிநீள்விசும்பிடைச் சோருமாமுகில் ‡ தோய்தர *
சேருவார்பொழில்சூழெழில்திருவேங்கடமடைநெஞ்சமே. (எ)
அம்பரமனல்கால் நிலம்சலமாகிநின்றவமரர்கோன் *
வம்புலாமலர்மேல் மலிமடமங்கைதன்கொழுநனவன் *
கொம்பினன்னவிடைமடக்குறமாதர் நீளிதணந் ¶ தொறும் *
செம்புனமவைகாவல்கொள் திருவேங்கடமடைநெஞ்சமே. (அ)
பேசுமின்திருநாமமெட்டெழுத்தும் சொல்லிநின்று * பின்னரும்,
பேசுவார்தம்மையுய்யவாங்கிப் பிறப்பறுக்கும்பிரானிடம் *
வாசமாமலர்நாறுவார்பொழில் சூழ்தருமுலகுக்கெல்லாம் *
தேசமாய்த்திகழும்மலைத் திருவேங்கடமடைநெஞ்சமே. (கூ)
⁂ செங்கயல்திளைக்குஞ்சுனைத் திருவேங்கடத்துறைசெல்வனை *
மங்கையர்தலைவன்கலிகன்றி வண்டமிழ்ச்செஞ்சொல்மாலைகள் *
சங்கையின்றித்தரித்துரைக்கவல்லார்கள், தஞ்சமதாகவே *
வங்கமாகடல்வையங்காவலராகி வானுலகாள்வரே. (கய)

கொங்கு பள்ளி நின்ற பார்த்தன் வண்கை எண்டிசை பார் அம்பரம்பேசுசெங்கயல் தாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## கூ-வது, தாயேதந்தை.

திருமலையை ஆஸ்ரயியென்று சொல்லித் தன்னுடைய நைச்யத்தைஅநுஸந்தித்துத் தமது துர்வ்ருத்தாந்தத்தையெல்லாம் விண்ணப்பஞ்செய்து அவைகளைப் பொறுத்தருளி அடியேனுக்கு ஸ்வரூபாநுரூபமான வ்ருத்தியைக் கொண்டருளவேண்டுமென்று ஸரணம் புகுவதாக அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்.

### முகாரிராகம்-அடதாளம்.

⁂ தாயேதந்தையென்றும் தாரமேகிளைமக்களென்றும் *
நோயேபட்டொழிந்தே னுன்னைக்காண்பதோராசையினல் *
வேயேய்பூம்பொழில்சூழ் விரையார்திருவேங்கடவா *
நாயேன்வந்தடைந்தேன் நல்கியாளென்னைக்கொண்டருளே. (க)

‡ "சேருமாமுகில்" என்று பாடாந்தரம். ¶ இதணம் - பரண்.

மானேய்கண்மடவார் மயக்கிற்பட்டு * மாநிலத்து
நானேநாநாவிதநரகம்புகும் பாவஞ்செய்தேன் *
தேனேய்பூம்பொழில்சூழ் திருவேங்கடமாமலை * என்
ஆனாய்வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (உ)

கொன்றேன்பல்லுயிரைக் குறிக்கோளொன்றிலாமையினால் *
என்றேனுமிரந்தார்க் கினிதாகவுரைத்தறியேன் *
குன்றேய்மேகமதிர் குளிர்மாமலைவேங்கடவா *
அன்றேவந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (௩)

குலந்தானெத்தனையும் பிறந்தேயிறந்தெய்த்தொழிந்தேன் *
நலந்தானொன்றுமிலேன் நல்லதோரறஞ்செய்துமிலேன் *
நிலந்தோய் § நீள்முகில்சேர் நெறியார்திருவேங்கடவா *
அலந்தேன்வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (ச)

எப்பாவம்பலவு மிவையேசெய்திளைத்தொழிந்தேன் *
துப்பாநின்னடியே தொடர்ந்தேத்தவும்கிற்கின்றிலேன் *
செப்பார்திண்வரைசூழ் திருவேங்கடமாமலை * என்
அப்பா, வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (ரு)

மண்ணாய்நீரெரிகால் மஞ்சுலாவுமாகாசமுமாம்
புண்ணாராக்கைதன்னுள் புலம்பித்தளர்ந்தெய்த்தொழிந்தேன் *
விண்ணார்நீள்சிகர விரையார்திருவேங்கடவா *
அண்ணா ! வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (சா)

தெரியேன்பாலகனாய்ப் பலதீமைகள்செய்துமிட்டேன் *
பெரியேனாயினபின் பிறர்க்கேயுழைத்தேழையானேன் *
கரிசேர்பூம்பொழில்சூழ் கனமாமலைவேங்கடவா *
அரியேவந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (எ)

நோற்றேன்பல்பிறவி யுன்னைக்காண்பதோராசையினால் *
ஏற்றேன், இப்பிறப்பே யிடருற்றனனெம்பெருமான் *
கோல்தேன்பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ்வேங்கடவா *
ஆற்றேன்வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (அ)

பற்றேலொன்றுமிலேன் பாவமேசெய்துபாவியானேன் *
மற்றேலொன்றறியேன் மாயனேயெங்கள்மாதவனே *
கல்தேன்பாய்ந்தொழுகும் கமலச்சுனைவேங்கடவா *
அற்றேன்வந்தடைந்தே னடியேனையாட்கொண்டருளே. (கூ)

---

§ "நீர்முகில்" என்று பாடாந்தரம்.

⁂ கண்ணாயேழுலகுக்குயிராய வெங்கார்வண்ணனை *
விண்ணோர்தாம்பரவும் பொழில்வேங்கடவேதியனை *
திண்ணார்மாடங்கள்சூழ் திருமங்கையர்கோன்கலியன் *
பண்ணார்பாடல்பத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே. (கO)

தாய் மான் கொன்றேன் குலமெப்பாவம் மண்தெரி நோற்றேன் பற்றேல் கண்ணாய் கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## கO-வது, கண்ணார்கடல்.

விரோதத்தை நீக்கி யென்னிடத்தில் க்ருபை பண்ணவேண்டுமென்று இவரபேக்ஷித்தபடியே இவர் திருவுள்ளத்தில் வந்து பரபக்த்யாதிகளைப் பிறப்பித்தானென்று அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம் - திரிபுடைதாளம்.

⁂ கண்ணார்கடல்சூழிலங்கைக்கிறைவன்றன் *
திண்ணாகம்பிளக்கச் சரஞ்செலவுய்த்தாய் *
விண்ணோர்தொழும் வேங்கடமாமலைமேய *
அண்ணா, அடியேனிடரைக்களையாயே. (க)

இலங்கைப்பதிக்கன்றிறையாய * அரக்கர்
குலங்கெட் டவர்மாளக் கொடிப்புள்திரித்தாய் *
விலங்குகல்குடுமித் திருவேங்கடம்மேய *
அலங்கல்துளபமுடியா யருளாயே. (உ)

நீரார்கடலும் நிலனும்முழுதுண்டு - *
ஏராலமிளந்தளிர்மேல் துயிலெந்தாய் ! *
சீரார்திருவேங்கட மாமலைமேய *
ஆராவமுதே யடியேற்கருளாயே. (ங)

உண்டாயுறிமேல் நறுநெய்யமுதாக *
கொண்டாய்குறளாய் நிலமீரடியாலே *
விண்டோய்சிகரத் திருவேங்கடம்மேய *
அண்டா, அடியேனுக்கருள்புரியாயே. (ச)

தூணாய தனூடரியாய் வந்துதோன்றி *
பேணாவவுணனுடலம் பிளந்திட்டாய் *
சேணார்திருவேங்கடமாமலைமேய *
கோணாகணையாய் குறிக்கொள்ளெனைநீயே. (ரு)

மன்னு ! இம்மனிசப்பிறவியைநீக்கி *
தன்னுக்கித் தன்னின்னருள்செய்யுந்தலைவன் *
மின்னூர்முகில்சேர் திருவேங்கடம்மேய *
என்னுனையென்னப்ப னென்னெஞ்சிலுளானே. ‡ (சு)
மானேய்மடநோக்கிதிறத் தெதிர்வந்த *
ஆனேழ்விடைசெற்ற வணிவரைத்தோளா ! *
தேனே ! திருவேங்கடமாமலைமேய *
கோனே ! என்மனம் குடிகொண்டிருந்தாயே. (எ)
சேயனணியனெனசிந்தையுள்நின்ற
மாயன் * மணிவாளொளிவெண்தரளங்கள் *
வேய்விண்டுதிர் வேங்கடமாமலைமேய *
ஆயனடியல்லது மற்றறியேனே. (அ)
வந்தாயென்மனம்புகுந்தாய் மன்னிநின்றாய் *
நந்தாதகொழுஞ்சுடரே யெங்கள்நம்பீ *
சிந்தாமணியே திருவேங்கடம்மேய
எந்தாய் * இனியானுன்னை யென்றும்விடேனே. (கூ)
⁂ வில்லார்மலி வேங்கடமாமலைமேய *
மல்லார்திரடோள் மணிவண்ணனம்மானை *
கல்லார்திரடோள் கலியன்சொன்னமாலை *
வல்லாரவர் வானவராகுவர்தாமே. (க0)

கண் இலங்கை நீர் உண்டாய் தூணாய் மன்னு மானேய் சேயன் வந்தாய் வில்வானவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



ஆ பத்து-க-க்கு-பாட்டு-க00.

# இரண்டாம்பத்து.



## க-வது, வானவர்.



நமக்கிப்படி பகவத் ப்ராவண்ய முண்டாகைக்கடி யென்னெஞ்சிறே யென்று தம்முடையதிருவுள்ளத்தை ஶ்லாகித் தினியராகிறார்.

ஆசிரியத்துறை.

**ஆனந்தபைரவிராகம்-ரூபகதாளம்.**

⁂ வானவர்தங்கள்சிந்தைபோல என்னெஞ்சமேயினிதுவந்து*மாதவ
மானவர்தங்கள்சிந்தை யமர்ந்துறைகின்றவெந்தை *
கானவரிடுகாரகிற்புகை யோங்குவேங்கடம்மேவி * மாண்குற
ளானவந்தணற் கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (க)

‡ "என்னெஞ்சினுளானே" என்றுபாடம்.

உறவுசுற்றமென்றொன்றிலாவொருவனுகந்தவர்தம்மை * மண்மிசைப்
பிறவியேகெடுப்பா னதுகண்டென்னெஞ்சமென்பாய் *
குறவர்மாதர்களோடு வண்டுகுறிஞ்சிமருளிசைபாடும் * வேங்கடத்
தறவநாயகற் கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (உ)
இண்டையாயினகொண்டுதொண்டர்க ளேத்துவாருறவோடும்*வானி
கொண்டுபோயிடவுமதுகண்டென்னெஞ்சமென்பாய் * [டைக்
வண்டுவாழ்வடவேங்கடமலை கோயில்கொண்டதனோடும் * மீமிசை
அண்டமாண்டிருப்பாற் கடிமைத்தொழில்பூண்டாயே. (ந)
பாவியாதுசெய்தாயென்னெஞ்சமே!பண்டுதொண்டுசெய்தாரை*மண்
மேவியாட்கொண்டுபோய் விசும்பேறவைக்குமெந்தை * [மிசை
கோவிநாயகன்கொண்டலுந்துயர் வேங்கடமலையாண்டு * வானவர்
ஆவியாயிருப்பாற் கடிமைத்தொழில்பூண்டாயே. (௪)
பொங்கு † போதியும்பிண்டியுமுடைப் புத்தர்நோன்பியர்பள்ளியுள்ளு
தங்கள்தேவரும்தாங்களுமேயாக என்னெஞ்சமென்பாய் ! * [றை
எங்கும்வானவர்தானவர்நிறைந்தேத்தும் வேங்கடம்மேவிநின்றருள் *
அங்கணாயகற் கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (ரு)
துவரியாடையர்மட்டையர் சமண்தொண்டர்கள்மண்டியுண்டு,பின்ன
தமரும்தாங்களுமே தடிக்க, என்னெஞ்சமென்பாய் * [ரும் *
கவரிமாக்கணம்சேரும்வேங்கடம் கோயில்கொண்ட கண்ணார்விசும்பி
அமரநாயகற் கின்றடிமைத்தொழில்பூண்டாயே. [டை *
தருக்கினால்சமண்செய்து சோறுதண்தயிரினால்திரளை * மிடற்றிடை
நெருக்குவார் அலக்கணதுகண் டென்னெஞ்சமென்பாய் ! * [ளிடை
மருட்கள்வண்டுகள்பாடும் வேங்கடம் கோயில்கொண்டதனோடும்*வா
அருக்கன்மேவிநிற்பாற் கடிமைத்தொழில்பூண்டாயே. (எ)
சேயனணியன்சிறியன்பெரியனென்பதும் சிலர்பேசக்கேட்டிருந்
தே * என்னெஞ்சமென்பாய் ! எனக்கொன்றுசொல்லாதே *
வேய்கள்நின்றுவெண்முத்தமேசொரி வேங்கடமலைகோயில்மேவிய *
‡ ஆயர்நாயகற் கின்றடிமைத்தொழில்பூண்டாயே. (அ)
கூடியாடியுரைத்ததேயுரைத்தாயென்னெஞ்சமென்பாய்துணிந்துகேள்
பாடியாடிப்பலரும் பணிந்தேத்திக்காண்கிலார் *
ஆடுதாமரையோனுமீசனு மமரர்கோனும் நின்றேத்தும் * வேங்கடத்
தாடுகூத்தனுக் கின்றடிமைத்தொழில் பூண்டாயே. (கூ)
‡‡ மின்னுமாமுகில்மேவு தண்திருவேங்கடமலைகோயில்மேவிய *
அன்னமாய்நிகழ்ந்த வமரர்பெருமானை *
கன்னிமாமதிள்மங்கையர்கலிகன்றி யின்தமிழாலுரைத்த * இம்
மன்னுபாடல்வல்லார்க் கிடமாகும் வானுலகே. (க0)
வான் உறவு இண்டைபாவிபொங்குதுவரிதருக்குச்சேயன் கூடிமின்னுகாசை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† போதி-அரசு, பிண்டி- அசோகம், புத்தர்-பௌத்தர், நோன்பியர்-ஆர்ஹதர். ‡ "ஆயநாயகற்கு" என்றும்பாடம்.

## உ-வது, காசையாடை.



ஸர்வேச்வரன் ஆச்ரிதர்பக்கல் தனக்குண்டான இனிமையாலே அவர்களுக்கேத்தலாம்படி திருவெவ்வளூரிலே சாய்ந் தருளினபடியை யநுசந்தித்து இனியராகிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**கமாசுராகம்-ரூபகதாளம்.**

காசையாடை மூடியோடிக் காதல்செய் தானவனூர் *
நாசமாகநம்பவல்ல நம்பிநம்பெருமான் *
வேயினன்னதோள்மடவார் வெண்ணெயுண்டானிவனென்று - *
ஏசநின்றவெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (க)

தையலாள்மேல் காதல்செய்த தானவன்வாளரக்கன் *
பொய்யிலாதபொன்முடிக ளொன்பதோடொன்றும் * அன்று
செய்தவெம்போர் தன்னி லங்கோர்செஞ்சரத்தா லுருள *
எய்தவெந்தையெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (உ)

முன்னோர்தூது வாநரத்தின்வாயில்மொழிந்து * அரக்கன்
மன்னூர்தன்னை வாளியினால்மாளமுனிந்து * அவனே †
பின்னோர் தூதாதிமன்னர்க்காகிப் பெருநிலத்தார் *
இன்னார்தூதனெனநின்றா னெவ்வுள்கிடந்தானே. (ங)

பந்தணைந்தமெல்விரலாள் பாவைதன்காரணத்தால் *
வெந்திறலேறேழும் வென்றவேந்தன், விரிபுகழ்சேர் *
நந்தன்மைந்தனாகவாகும் நம்பிநம்பெருமான் *
எந்தைதந்தைதம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (ச)

பாலனாகிஞாலமேழுமுண்டு * பண்டாலிலைமேல்
சாலநாளும்பள்ளிகொள்ளும் தாமரைக்கண்ணன், எண்ணில் *
நீலமார்வண்டுண்டுவாழும் நெய்தலந்தண்கழனி *
ஏலநாறும்பைம்புறவி லெவ்வுள்கிடந்தானே. (ரு)

சோத்தம்நம்பியென்று தொண்டர்மிண்டித்தொடர்ந்தழைக்கும் *
ஆத்தநம்பிசெங்கணம்பி யாகிலும்தேவர்க்கெல்லாம் *
மூத்தநம்பிமுக்கணம்பியென்று முனிவர்தொழு
தேத்தும் * நம்பியெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (சு)

திங்களப்பு வானெரிகாலாகி * திசைமுகனார்
தங்களப்பன்சாமியப்பன் பாகத்திருந்த * வண்டுண்
தொங்கலப்புநீண்முடியான் சூழ்கழல்சூடநின்ற *
எங்களப்பனெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (எ)

† "முனிந்தவனே !" என்று நஞ்சீயர்படியிற்பாடம்.

முனிவன்மூர்த்திமூவராகி வேதம்விரித்துரைத்த
புனிதன் * பூவைவண்ணனண்ணல் புண்ணியன்விண்ணவர்கோன் *
தனியன்சேயன் தானொருவனாகிலும் தன்னடியார்க்கு - *
இனியனெந்தையெம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (௮)

பந்திருக்கும்மெல்விரலாள் பாவைபனிமலராள் *
வந்திருக்கும்மார்வன் நீலமேனிமணிவண்ணன் *
அந்தரத்தில்வாழும் வானோர்நாயகனாயமைந்த *
இந்திரற்கும்தம்பெருமா னெவ்வுள்கிடந்தானே. (௯)

‡‡ இண்டைகொண்டு தொண்டரேத்த எவ்வுள்கிடந்தானை *
வண்டுபாடும்பைம்புறவில் மங்கையர்கோன்கலியன் *
கொண்டல்சீரால்தண்டமிழ்செய்மாலை யீரைந்தும்வல்லார் *
அண்டமாள்வதாணை யன்றேலாள்வரமருலகே. (௧0)

காசை தையல்முன்பந்துபாலன்சோத்தம்திங்கள் முனிவன்பந்திண்டைவில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, விற்பெருவிழவும்.



ஆர்த்தரக்ஷகனானவன் திருவல்லிக்கேணியிலே சாய்ந்தான் நான்கண்டேனென்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**தோடிராகம்-ஆதிதாளம்.**

‡‡ விற்பெருவிழவும்கஞ்சனும்மல்லும் வேழமும்பாகனும்வீழ *
செற்றவன்றன்னை, புரமெரிசெய்த சிவனுறுதுயர்களைதேவை *
பற்றலர்வீயக்கோல்கையில்கொண்டுபார்த்தன்றன்தேர்முன்நின்றானை
சிற்றவைபணியால்முடிதுறந்தானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே.

‡‡ வேதத்தைவேதத்தின்சுவைப்பயனை, விழுமியமுனிவர்விழுங்கும்*
கோதிலின்கனியைநந்தனார்களிற்றைகுவலயத்தோர்தொழுதேத்தும்*
ஆதியையமுதை யென்னையாளுடையப்பனை, ஒப்பவரில்லா
மாதர்கள்வாழும்*மாடமாமயிலைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. ()

வஞ்சனைசெய்யத்தாயுருவாகி வந்தபேயலறிமண்சேர *
நஞ்சமர்முலையூடுயிர்செகவுண்ட நாதனைத்தானவர்கூற்றை *
விஞ்சைவானவர்சாரணர்சித்தர் வியந்துதிசெய்யப்பெண்ணுருவாகி *
அஞ்சுவையமுதமன்றளித்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. ()

இந்திரனுக்கென்றுயர்களெடுத்த வெழில்விழவில்பழநடைசெய் *
மந்திரவிதியில்பூசனைபெறாது மழைபொழிந்திடத்தளர்ந்து - * ஆயர்
எந்தம்மோடினவானிரைதளராமலெம்பெருமானருளென்ன *
அந்தமில்வரையால்மழைதடுத்தானைத்திருவல்லிக்கேணிக்கண்டேனே

இன்துணைப்பதுமத்தலர்மகள்தனக்குமின்பன், நல்புவிதனக்கிறைவன் *
தன்துணையாயர்பாவைநப்பின்னைதனக்கிறை, மற்றையோர்க்கெல்லாம்
வன்துணை * பஞ்சபாண்டவர்க்காகி வாயுரைதூதுசென்றியங்கும்
என்துணை * எந்தைதந்தைதம்மானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. (ரு)

அந்தகன்சிறுவனரசர்தமரசர்க்கிளையவனணியிழையைச்சென்று - *
எந்தமக்குரிமைசெய்யெனத்தரியாதெம்பெருமானருளென்ன *
‡ சந்தமல்குழலாளலக்கண்நூற்றுவர்தம்பெண்டிருமெய்திநூலிழப்ப *
இந்திரன்சிறுவன்தேர்முன்நின்றானைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. (சு)

⁂பாதனும்தம்பிசத்துருக்கனுமிலக்குமனோடுமைதிலியும் *
இரவுநன்பகலும்துதிசெய்யநின்ற விராவணாந்தகனையெம்மானை *
குரவமேகமழிம்குளிர்பொழிலூடு குயிலொடுமயில்கள்நின்றால *
இரவியின்கதிர்கள்நுழைதல்செய்தறியாத்திருவல்லிக்கேணிக்கண்டேனே. ()

⁂பள்ளியிலோதிவந்ததன்சிறுவன் வாயிலோராயிரநாமம் *
ஒள்ளியவாகிப்போதவாங்கதனுக் கொன்றுமோர்பொறுப்பிலனாகி * [ய் *
பிள்ளையைச்சீறிவெகுண்டுதூண்புடைப்ப, பிறையெயிற்றனல்விழிப்பேழ்வா
தெள்ளியசிங்கமாகியதேவைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. (அ)

⁂மீனமர்பொய்கைநாண்மலர்கொய்வான்வேட்கையினோடுசென்றிழிந்த *
கானமர்வேழம்கையெடுத்தலறக் கராவதன்காலினைக்கதுவ *
ஆனையின்துயரம்தீரப்புள்ளூர்ந்து சென்றுநின்றாழிதொட்டானை *
தேனமர்சோலைமாடமாமயிலைத் திருவல்லிக்கேணிக்கண்டேனே. (கூ)

⁂ மன்னுதண்பொழிலும்வாவியும்மதிளும்மாடமாளிகையும்மண்டபமும் *
தென்னன்தொண்டையர்கோன்செய்தநன்மயிலைத் திருவல்லிக்கேணிநின்றா
கன்னிநன்மாடமங்கையர்தலைவன் காமருசீர்க்கலிகன்றி * [னை *
சொன்னசொல்மாலைபத்துடன்வல்லார் சுகமினிதாள்வர்வானுலகே. (கo)

வில் வேத வஞ்சனை இந்திரன் இன்துணை அந்தகன் பரதன் பள்ளி மீன மர் மன்னு அன்றாயர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, அன்றாயர்.



ஸர்வேஸ்வரனுகந்தருளின நிலங்களெல்லாவற்றிலும் பண்ணுகிறவாதரத்தை திருநீர்மலையிலேபண்ணிக்கொண்டுவந்து ஸந்நிஹிதனானான்; அவனை யாஶ்ரயித்து க்ருதார்த்தராகுங்கோளென்று பரோபதேஶப்ரவ்ருத்தராகிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**அபநபராகம்-ஆதிதாளம்.**

⁂ அன்றாயர்குலக்கொடியோடணிமாமலர்மங்கையொடன்பளவி*அவுணர்க்
கென்றானுமிரக்கமிலாதவனுக்குறையுமிடமாவது * இரும்பொழில்சூழ்
நன்றாயபுனல்நறையூர்திருவாலிகுடந்தை தடந்திகழ்கோவல்நகர் *
நின்றானிருந்தான்கிடந்தான்நடந்தாற்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (க)

‡ "சந்து அமர்குழலாள்" என்று பாடாந்தரம்.

காண்டாவனமென்பதோர்காடமரர்க்கரையனதுகண்டவன்நிற்க * முனே
மூண்டாரழலுண்ணமுனிந்ததுவு மதுவன்றியும்முன்னுலகம்பொறைதீர்த்
தாண்டான் * அவுணனவன்மார்வகலமுகிரால்வகிராகமுனிந்து * அரியாய்
நீண்டான்குறளாகிநிமிர்ந்தவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. (உ)

அலமன்னுமடல்சுரிசங்கமெடுத் ‡ தடலாழியினுலணியாருருவில் *
புலமன்னுவடம்புனைகொங்கையினுள்பொறைதீரமுனுளடுவாளமரில் *
பலமன்னர்படச்சுடராழியினைப்பகலோன்மறையப்பணிகொண்டு* அணிசேர்
நிலமன்னனுமாயுலகாண்டவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. (௩)

தாங்காததோராளரியா யவுணன்றனைவீடமுனிந் தவனுலமூரும் * [ரில்*
பூங்கோதையர்பொங்கெரிமூழ்கவிளைத்ததுவன்றியும், வென்றிகொள்வாளம
பாங்காகமுனைவரொடன்பளவிப்பதித்தைந்திரட்டிப்படைவேந்தர்பட*
நீங்காச்செருவில் † நிறைகாத்தவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (ச)

மாலுங்கடலாரமலைக்குவடிட்டணைகட்டி வரம்புருவ * மதிசேர்
கோலமதிளாயவிலங்கைகெடப்படை தொட்டொருகாலமரிலதிர *
காலமிதுவென்றயன்வாளியினல் ¶ கதிர்நீண்முடிபத்துமறுத்தமரும் *
நீலமுகில்வண்ணரெமக்கிறைவற்கிடம்மாமலையாவதுநீர்மலைய. (ரு)

பாராருலகும்பனிமால்வரையும்கடலும்சுடருமிவையுண்டும் * எனக்
காராதெனநின்றவனெம்பெருமா னலைநீருலகுக்கரசாகிய * அப்
பேராணைமுனிந்தமுனிக்கரையன் பிறரில்லைநுனக்கெனுமெல்லையினன் *
நீரார்பேரான்நெடுமாலவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. (சு)

புகாருருவாகிமுனிந்தவனைப்புகழ்வீடமுனிந்துயிருண்டு * அசுரன்
நகராயினபாழ்படநாமமெறிந்ததுவன்றியும் வென்றிகொள்வாளவுணன் *
பகராதவனுயிரநாம மடிப்பணியாதவனை, பணியாலமரில் *
நிகராயவன்நெஞ்சிடந்தானவனுக்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (எ)

பிச்சச்சிறுபீலிபிடித்துலகில்பிணந்தின்மடவாரவர்போல் * அங்ஙனே
அச்சமிலர்நாணிலராதன்மையாலவர்செய்கைவெறுத்தணிமாமலர்தூய் *
நச்சிநமனுரடையாமைநமக்கருள்செய்யென வுள்குழைந்தார்வமொடு *
நிச்சம்நினைவார்க்கருள்செய்யுமவற்கிடம்மாமலையாவதுநீர்மலையே. (அ)

பேசுமளவன்றிதுவம்மின் நமர்பிறர்கேட்பதன்முன், பணிவார்வினைகள் *
நாசமதுசெய்திடுமாதன்மையாலதுவேநமதுய்விடம், நாண்மலர்மேல் $ *
வாசம்மணிவண்டறைபைம்புறவில்மனமைந்தொடு நைந்துழல்வார் * மதியில்
நீசரவர்சென்றடையாதவனுக்கிடம் மாமலையாவதுநீர்மலையே. (கூ)

⁂ நெடுமாலவன்மேவியநீர்மலைமேல் நிலவும்புகழ்மங்கையர்கோன் * அமரில்
கடமாகளியானைவல்லான்கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார்க்கு * உடனே
விடுமால்வினை, வேண்டிடில்மேலுலகுமெளிதாயிடுமன்றியிலங்கொலிசேர் *
கொடுமாகடல்வையகமாண்டுமதிக்குடைமன்னவராயடிகூடுவரே. (க0)

அன்று காண்டா அலம் தாங்காத மால் பார் புகர் பிச்ச பேசு நெடுமால்பார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ "அடுத்து" என்று பாடாந்தரம். † நிறை - ஸ்ரீத்வம். ¶ அயன்வாளி-ப்ரஹ்மாஸ்த்ரம். $ "நாண்மலர்தூய்" என்று பாடாந்தரம்.

## ரு-வது, பாராயது.

திருக்கடன்மல்லைப்பெருமாள் விஷயம்.
பரோபதேசம்.
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
கல்யாணிராகம்-ஆதிதாளம்.

⁂ பாராயதுண்டுமிழ்ந்தபவளத்தூணைப்
படுகடலிலமுதத்தைப் பரிவாய்கீண்ட
சீரானை * எம்மானைத்தொண்டர்தங்கள்
சிந்தையுள்ளே முளைத்தெழுந்ததீங்கரும்பினை *
போரானைக்கொம்பொசித்தபோரேற்றினைப்
புணர்மருதமிறநடந்தபொற்குன்றினை *
காரானையிடர்கடிந்தகற்பகத்தைக்
கண்டதுநான்கடன்மல்லைத்தலசயனத்தே. (க)

⁂ பூண்டவத்தம்பிறர்க்கடைந்துதொண்டுபட்டுப்
பொய்ந்நூலைமெய்ந்நூலென்றென்றுமோதி
மாண்டு - * அவத்தம்போகாதேவம்மி னெந்தை
யென்வணங்கப்படுவானை * கணங்களேத்தும்
நீண்டவத்தைக்கருமுகிலை † யெம்மான்றன்னை
நின்றவூர்நித்திலத்தைத் தொத்தார்சோலை *
காண்டவத்தைக் கனலெரிவாய் பெய்வித்தானைக்
கண்டதுநான்கடன்மல்லைத்தலசயனத்தே. (உ)

உடம்புருவில்மூன்றொன்றாய்மூர்த்திவேறா
யுலகுய்யநின்றானை * அன்றுபேய்ச்சி
விடம்பருகுவித்தகனைக், கன்றுமேய்த்து
விளையாடவல்லானைவரைமீகானில் *
தடம்பருகுகருமுகிலைத் தஞ்சைக்கோயில்
தவநெறிக்கோர்பெருநெறியை, வையங்காக்கும் *
கடும்பரிமேல்கற்கியைநான் கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (ங)

பேய்த்தாயைமுலையுண்டபிள்ளைதன்னைப்
பிணைமருப்பில்கருங்களிற்றைப், பிணைமான்நோக்கில் *
ஆய்த்தாயர்தயிர்வெண்ணெயமர்ந்தகோவை
அந்தணர்தமமுதத்தைக், குரவைமுன்னே
கோத்தானை * குடமாடுகூத்தன்றன்னைக்
கோகுலங்கள்தளராமல்குன்றமேந்திக்
காத்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (ச)

† "நீண்ட அத்தக்கருமுகிலை" என்று பாடாந்தரம்.

பாய்ந்தானைத்திரிசகடம்பாறிவீழப்
பாலகனுயாலிலையில்பள்ளியின்ப
மேய்ந்தானை * இலங்கொளிசேர்மணிக்குன்றன்ன
ஈரிரண்டுமால்வரைத்தோளம்மான்றன்னை *
தோய்ந்தானைநிலமகள்தோள், தூதிற்சென்றப்
பொய்யறைவாய்புகப்பெய்தமல்லர்மங்கக்
காய்ந்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (ரு)
கிடந்தானைத்தடங்கடலுள் பணங்கள்மேவிக்
கிளர்பொறியமறிதிரியவதனின்பின்னே
படர்ந்தானை * படுமதத்தகளிற்றின்கொம்பு
பறித்தானைப் பாரிடத்தையெயிறுகீற
விடந்தானை * வளைமருப்பிலேனமாகி
யிருநிலனும்பெருவிசும்புமெய்தாவண்ணம்
கடந்தானை * எம்மானைக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (சு)
பேணுதவலியரக்கர்மெலியவன்று
பெருவரைத்தோளிறநெரித் தன்றவுணர்கோனை *
பூணுகம்பிளவெடுத்தபோர்வல்லோனைப்
பொருகடலுள் துயிலமர்ந்தபுள்ளூர்தியை *
ஊணுகப்பேய்முலைநஞ்சுண்டான்றன்னை
உள்ளுவாருள்ளத்தேயுறைகின்றானை *
காணுதுதிரிதருவேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (எ)
பெண்ணாகியின்னமுதம்வஞ்சித்தானைப்
பிறையெயிற்றன்றடலரியாய்ப்பெருகினானை *
தண்ணார்ந்தவார்புனல்சூழ்மெய்யமென்னும்
தடவரைமேல்கிடந்தானைப் பணங்கள்மேவி *
எண்ணானையெண்ணிறந்தபுகழினானை
யிலங்கொளிசேரரவிந்தம்போன்றுநீண்ட
கண்ணானை * கண்ணாரக்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (அ)
தொண்டாயார்தாம்பரவுமடியினானைப்
படிகடந்ததாளாளர்க்காளாயுய்தல்
விண்டானை * தென்னிலங்கையரக்கர்வேந்தை
விலங்குண்ணவலங்கைவாய்ச்சரங்களாண்டு *

பண்டாயவேதங்கள்நான்கும் ஐந்து
வேள்விகளும்கேள்வியோடங்கமாறும்
கண்டானை * தொண்டனேன்கண்டுகொண்டேன்
கடிபொழில்சூழ்கடன்மல்லைத்தலசயனத்தே. (கூ)

⁂ படநாகத்தணைக்கிடந்தன்றவுணர்கோனைப்
படவெகுண்டுமருதிடைபோய்ப்பழனவேலி *
தடமார்ந்தகடன்மல்லைத் தலசயனத்துத்
தாமரைக்கண்துயிலமர்ந்ததலைவர்தம்மை *
கடமாரும்கருங்களிறுவல்லான்வெல்போர்க்
கலிகன்றியொலிசெய்த வின்பப்பாடல் *
திடமாகவிவையைந்துமைந்தும்வல்லார்
தீவினையைமுதலரியவல்லார்தாமே. (கo)

பார் பூண்டுடம்பு பேய்பாய் கிடந்தபேணுப்பெண் தொண்டுபடம் நண்ணாத.
திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, நண்ணாத.



திருக்கடன்மல்லைப்பெருமாள்விஷயம்.

அவைஷ்ணவரிடத்தில் தமக்குண்டான வஸஹ்யதையையருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம்.

ஸஹாநாராகம்-நபகதாளம்.

⁂ நண்ணாதவாளவுணரிடைப்புக்கு * வானவரைப்
பெண்ணாகியமுதூட்டும் பெருமானார் * மருவினிய
$ தண்ணார்ந்தகடன்மல்லைத் தலசயனத்துறைவாரை *
எண்ணாதேயிருப்பாரை யிறைப்பொழுதுமெண்ணோமே. (க)

பார்வண்ணமடமங்கை பனிநன்மாமலர்க்கிழத்தி *
நீர்வண்ணன்மார்வத்தி லிருக்கையைமுன்னினைந்தவனூர் *
கார்வண்ணமுதுமுந்நீர்க் கடன்மல்லைத்தலசயனம் *
ஆரெண்ணும்நெஞ்சுடையா ரவரெம்மையாள்வாரே. (உ)

⁂ ஏனத்தினுருவாகி நிலமங்கையெழில்கொண்டான் *
வானத்திலவர்முறையால் மகிழ்ந்தேத்திவலங்கொள்ள ‡ *
கானத்தின்கடன்மல்லைத் தலசயனத்துறைகின்ற *
ஞானத்தினொளியுருவை நினைவாரென்நாயகரே. (ங)

விண்டாரைவென்றாவிவிலங்குண்ண * மெல்லியலார்
கொண்டாடும்மல்லகலமழலேற வெஞ்சமத்துக்
கண்டாரை * கடன்மல்லைத்தலசயனத்துறைவாரை *
கொண்டாடும்நெஞ்சுடையா ரவரெங்கள்குலதெய்வமே. (ச)

$ "கண்ணார்ந்த" என்று நஞ்சீயர்படியிற்பாடம். ‡ "வரங்கொள்ள" என்று பாடாந்தரம்.

பிச்சச்சிறுபீலிச்சமண் † குண்டர் முதலாயோர் *
விச்சைக்கிறையென்னு மவ்விறையைப்பணியாதே *
கச்சிக்கிடந்தவனூர் கடன்மல்லைத்தலசயனம் *
நச்சித்தொழுவாரை நச்சென்றன்நன்னெஞ்சே. (ரு)

புலன்கொள்நிதிக்குவையோடு புழைக்கைம்மாகளிற்றினமும் *
நலங்கொள்நவமணிக்குவையும் சுமந்தெங்கும்நான்றொசிந்து *
கலங்களியங்கும்மல்லைக் கடன்மல்லைத்தலசயனம் *
வலங்கொள்மனத்தாரவரை வலங்கொள்ளென்மடநெஞ்சே. (சா)

பஞ்சிச்சிறுகூழை யுருவாகிமருவாத *
வஞ்சப்பெண்நஞ்சுண்ட வண்ணல், முன்நண்ணாத *
கஞ்சைக்கடந்தவனூர் கடன்மல்லைத்தலசயனம் *
நெஞ்சில்தொழுவாரைத் தொழுவாயென் தூய்நெஞ்சே. (எ)

செழுநீர்மலர்க்கமலம் திரையுந்து, வன்பகட்டால் *
உழுநீர்வயலுழவருழப் பின்முன்பிழைத்தெழுந்த *
கழுநீர்கடிகமழும் கடன்மல்லைத்தலசயனம் *
தொழுநீர்மனத்தவரைத் தொழுவாயென் தூய்நெஞ்சே. (அ)

பிணங்களிடுகாடதனுள் நடமாடு ‡ பிஞ்ஞகனோடு - *
இணங்குதிருச்சக்கரத் தெம்பெருமானார்க்கிடம் * விசும்பில்
கணங்களியங்கும்மல்லைக் கடன்மல்லைத்தலசயனம் *
வணங்குமனத்தாரவரை வணங்கென்றன்மடநெஞ்சே. (கூ)

⁂ கடிகமழுநெடு ¶ மறுகில் கடன்மல்லைத்தலசயனத்து - *
அடிகளடியேநினையு மடியவர்கள்தம்மடியான் *
வடிகொள்நெடுவேல்வலவன் கலிகன்றியொலிவல்லார் *
முடிகொள் நெடுமன்னவர்தம் முதல்வர்முதலாவாரே. (கo)

நண்ணாதபாரேனம் விண்டார்பிச்சபுலன் பஞ்சிசெழுநீர் பிணம்கடிதிவளும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, திவளும்.

திருவிடந்தைநித்யகல்யாணர்விஷயம்.
தாய்ச்சொல்.
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
சாவேரிராகம்-ஆதிதாளம்.

⁂ திவளும்வெண்மதிபோல்திருமுகத்தரிவை செழுங்கடலமுதினிற்பிறந்தவளும் * நின்னாகத்திருப்பதுமறிந்து மாகிலுமாசைவிடாளால் * குவளையங்கண்ணி $ கொல்லியம்பாவைசொல்லு, நின்தாள்நயந்திருந்த இவளை * உன்மனத்தாலென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே.

† குண்டு என்று-ஆழமாய், அத்தால்-தாழ்ச்சியைச் சொல்லிற்றாய், நீசரென்றபடி. ‡ பிஞ்ஞகன்-ருத்ரன். ¶ மறுகு-வீதி $ கொல்லி-ஓர்மலை; அங்கிருக்குமோர்பாவையை உருவகுப்புக்குத் தமிழர் சொல்லுவர்கள்.

† துளம்படுமுறுவல்தோழியர்க்கருளாள், துணைமுலைசாந்துகொண்டணியாள் *
குளம்படுகுவளைக்கண்ணிணையெழுதாள், கோலநன்மலர்குழற்கணியாள் *
வளம்படுமுந்நீர்வையமுன்னளந்தமாலென்னும், மாலினமொழியாள் *
இளம்படியிவளுக்கென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே. (௨)

சாந்தமும்பூணும்சந்தநக்குழம்பும் தடமுலைக்கணியிலும்தழலாம் *
போந்தவெண்திங்கள்கதிர்சுடமெலியும் பொருகடல்புலம்பிலும்புலம்பும் *
மாந்தளிர்மேனிவண்ணமும்பொன்னும் வளைகளுமிறைநில்லா * என்றன்
ஏந்திழையிவளுக்கென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே. (௩)

ஊழியில்பெரிதால்நாழிகையென்னு மொண்சுடர்துயின்றதாலென்னும் *
ஆழியும்புலம்புமன்றிலுமுறங்கா தென்றலும்தீயினிற்கொடிதாம் * [ம் *
தோழியோவென்னும்துணைமுலையரக்கும்சொல்லுமினென்செய்கேனென்னு
ஏழையென்பொன்னுக் கென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே.

ஓதிலுமுன்பேரன்றிமற்றோதா ளுருகும்நின்திருவுருநினைந்து *
காதன்மைபெரிது ‡ கையறவுடையள் கயல்நெடுங்கண் துயில்மறந்தாள் *
பேதையேன்பேதைபிள்ளைமைபெரிது தெள்ளியள்வள்ளிநுண்மருங்குல் *
ஏதலர்முன்னாவென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே. (௫)

தன்குடிக்கேதும் தக்கவாநினையாள் தடங்கடல்நுடங்கெயிலிலங்கை *
வன்குடிமடங்கவாளமர்தொலைத்த வார்த்தைகேட்டின்புறும்மயங்கும் *
மின்கொடிமருங்குல்சுருங்கமேல்நெருங்கி மென்முலைபொன்பயந்திருந்த *
என்கொடியிவளுக்கென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே. (௬)

உளங்கனிந்திருக்குமுன்னையேபிதற்றுமுனக்கன்றியெனக்கன்பொன்றிலளா
வளங்கனிபொழில்சூழ்மாலிருஞ்சோலைமாயனேயென்றுவாய்வெருவும் * [ல் *
களங்கனிமுறுவல்காரிகைபெரிது கவலையோடவலம்சேர்ந்திருந்த *
இளங்கனி $ யிவளுக்கென்னினைந்திருந்தாயிட வெந்தையெந்தைபிரானே. ()

அலங்கெழுதடக்கையாயன்வாயாம்பற் கழியுமாலென்னுள்ளமென்னும் *
புலங்கெழுபொருநீர்ப்புட்குழிபாடும் போதுமோநீர்மலைக்கென்னும் *
குலங்கெழுகொல்லிக்கோமளவல்லிக்கொடியிடைநெடுமழைக்கண்ணி *
இலங்கெழில்தோளிக்கென்னினைந்திருந்தா யிடவெந்தையெந்தைபிரானே. ()

பொன்குலாம்பயலைபூத்தனமென்தோள் பொருகயல்கண்துயில்மறந்தாள் *
அன்பினாலுன்மேலாதரம்பெரிது § என்னணங்கினுக்குற்றநோயறியேன் *
மின்குலாமருங்குல்சுருங்கமேல்நெருங்கி வீங்கியவனமுலையாளுக்கு - *
என்கொலாம்குறிப்பிலென்னினைந்திருந்தாயிடவெந்தையெந்தைபிரானே. ()

‡‡ அன்னமுமீனுமாமையுமரியுமாய வெம்மாயனேயருளாய் *
என்னுமின்தொண்டர்க்கின்னருள்புரியுமிடவெந்தையெந்தைபிரானை *
மன்னுமாமாடமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார் நாளும்பழவினைபற்றறுப்பாரே. (௧௦)

திவள் துளம் சாந்தூழி ஓதிலும் தன் உள் அலம் பொன் அன்னம் திரிபுரம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† துளம்-மாதுளம்; பீலிக்காம்பு. ‡ கையறவு-கைபுகுராமையால் வந்த வ்யஸநம். $ கன்னி என்பது "கனி" என இடைக்குறையாயிற்று. § "இவ்வணங்கினுக்கு" என்றும் பாடம்.

## அ-வது, திரிபுரம்.



அஷ்டபுஜம் சக்ரராயர்விஷயம்.

பாவநாப்ரகர்ஷத்தாலே அஷ்டபுஜநாயனுரும் தாமும் உத்தர ப்ரத்யுத்தரங்கள் சொல்லுகிறதாகத் தோழி தாய்முதலானுருக்குச்சொல்லுகிறுர்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**தர்பார்ராகம்-ரூபகதாளம்.**

⁂ திரிபுரமூன்றெரித்தானும்மற்றைமலர்மிசைமேலயனும்வியப்ப *
முரிதிரைமாகடல்போல்முழங்கி மூவுலகும்முறையால்வணங்க *
எரியெனகேசரவாளெயிற்றே டிரணியனுகமிரண்டுகூறு
அரியுருவாமிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றுரே. (க)

வெந்திறல்வீரரில்வீரரொப்பார்வேதமுரைத்திமையோர்வணங்கும் *
செந்தமிழ்பாடுவார்தாம்வணங்கும்தேவரிவர்கொல்தெரிக்கமாட்டேன்
வந்துகுறளுருவாய்நிமிர்ந்து மாவலிவேள்வியில்மண்ணளந்த *
அந்தணர்போன்றிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றுரே.

செம்பொனிலங்குவலங்கைவாளி திண்சிலைதண்டொடுசங்கமொள்வாள்*
உம்பரிருசுடராழியோடு கேடகமொண்மலர்பற்றியெற்றே! *
வெம்புசினத்தடல்வேழம்வீழ வெண்மருப்பொன்றுபறித்து * இருண்ட
அம்புதம்போன்றிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றுரே. (ங)

மஞ்சுயர் மாமணிக்குன்றமேந்தி மாமழைகாத்தொருமாயவானை
அஞ்ச * அதன்மருப்பன்று ‡ வாங்குமாயர்கொல்மாயமறியமாட்டேன் *
வெஞ்சுடராழியும்சங்குமேந்தி வேதமுனேதுவர்நீதிவானத்து - *
அஞ்சுடர்போன்றிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றுரே. (ச)

கலைகளும்வேதமும்நீதிநூலும் கற்பமும்சொற்பொருள்தானும் * மற்றை
நிலைகளும்வானவர்க்கும்பிறர்க்கும்நீர்மையினலருள்செய்து * நீண்ட
மலைகளும்மாமணியும் மலர்மேல்மங்கையும்சங்கமும்தங்குகின்ற *
அலைகடல்போன்றிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றுரே. (ரு)

எங்ஙனும்நாமிவர்வண்ணமெண்ணி லேதுமறிகிலம் * எந்திழையார்
சங்கும்மனமும்நிறைவுமெல்லாம் தம்மனவாகப்புகுந்து * தாமும்
பொங்குகருங்கடல்பூவை காயாப்போதவிழ்நீலம்புனைந்தமேகம் *
அங்ஙனம்போன்றிவரார்கொலென்ன அட்டபுயகரத்தேனென்றுரே. (சு)

முழுசிவண்டாடியதண்டுழாயின் மொய்ம்மலர்க்கண்ணியும் * மேனியஞ்சாந்
திழிசியகோலமிருந்தவாறெங்ஙனஞ்சொல்லுகேன், ஒவிநல்லார் *
எழுதியதாமரையன்னகண்ணுமேந்தெழிலாகமும்தோளும்வாயும் *
அழகியதாமிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றுரே. (எ)

‡ "ஒன்று" என்றும் பாடம்.

மேவியெப்பாலும்விண்ணோர்வணங்க வேதமுரைப்பர்முந்நீர்மடந்தை
தேவி * அப்பாலதிர்சங்கமிப்பால்சக்கரம் மற்றிவர்வண்ணமெண்ணில் *
காவியொப்பார்கடலேயுமொப்பார் கண்ணும்வடிவும்நெடியராய் * என்
ஆவியொப்பாரிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றாரே. (அ)

தஞ்சமிவர்க்கென்வளையுமில்லா நெஞ்சமும்தம்மதேசிந்தித்தேற்கு *
வஞ்சிமருங்குல்நெருங்கநோக்கி வாய்திறந்தொன்றுபணித்ததுண்டு *
நஞ்சமுடைத்திவர்நோக்கும்நோக்கம்நானிவர்தம்மையறியமாட்டேன் *
அஞ்சுவன்மற்றிவரார்கொலென்ன, அட்டபுயகரத்தேனென்றாரே. (கூ)

‡‡மன்னவன்தொண்டையர்கோன்வணங்கும் நீள்முடிமாலைவயிரமேகன் *
தன்வலிதன்புகழ்சூழ்ந்தகச்சி யட்டபுயகரத்தாதிதன்னை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன் காமருசீர்க்கலிகன்றி * குன்றா [மே.
வின்னிசையால்சொன்ன செஞ்சொல்மாலையேத்தவல்லார்க் கிடம்வைகுந்த

திரி வெந்திறல் செம்பொன் மஞ்சு கலை எங்ஙனும் முழுசி மேவித் தஞ்சம் மன்னவன் சொல்லு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, சொல்லு.



பல்லவனும் சோழனுமென்பார் அநுகூலவ்ருத்திகளைப்பண்ணுகிற பரமேஶ்வர விண்ணகரத்தை யனுபவித்துப் பேசுகிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**யமுனகலியாணிராகம் - ஆதிதாளம்.**

‡‡சொல்லுவன்சொற்பொருள்தானவையாய்ச் சுவையூறொலிநாற்றமும்தோற்றமுமாய்*,நல்லரன் † நான்முகன்நாரணனுக்கிடந்தான் தடஞ்சூழ்ந்தழகாய
கச்சி *, பல்லவன்வில்லவனென்றுலகில் பலராய்ப்பலவேந்தர்வணங்குகழல்,
பல்லவன்*மல்லையர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (க)

கார்மன்னுநீள்விசும்பும் கடலும்சுடரும்நிலனும்மலையும் * தன்னுந்தித்
தார்மன்னுதாமரைக்கண்ணனிடம் தடமாமதிள்சூழ்ந்தழகாயகச்சி *
தேர்மன்னுதென்னவனைமுனையில்செருவில்திறல்வாட்டியதிண்சிலையோன்*
பார்மன்னுபல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே. (உ)

உரந்தருமெல்லணைப்பள்ளிகொண்டானொருகால்முன்னம்மாவுருவாய்க்கடலு
வரந்தரும்மாமணிவண்ணனிடம்மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி * [ள் *
நிரந்தவர் ‡ மண்ணையில்புண்ணுகர்வேல்நெடுவாயிலுகச்செருவில்முனநாள் *
பரந்தவன்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ங)

அண்டமுமெண்டிசையும்நிலனு மலைநீரொடுவானெரிகால்முதலா
வுண்டவன் * எந்தைபிரானதிட மொளிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி *
விண்டவரிண்டைக்குழாமுடனேவிரைந்தாரிரியச்செருவில்முனிந்து *
பண்டொருகால்வளைத்தான் பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே. (ச)

† "நாரணன் நான்முகனுக்கு" என்றும் பாடம். ‡ மண்ணை - ஓர்ஆறு ஓர்படைவீடு.

தூம்புடைத்திண்கைவன்தாள்களிற்றின் துயர்தீர்த்தரவம்வெருவ*முனநாள்
பூம்புனல்பொய்கைபுக்கானவனுக்கிடந்தான்தடஞ்சூழ்ந்தழகாயகச்சி* [ன்ற*
தேம்பொழில்குன்றெயில்தென்னவனைத்திசைப்பச்செருமேல்வியந்தன்றுசெ
பாம்புடைப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (ரு)

திண்படைக்கோளரியினுருவாய்த் திறலோனகலம்செருவில்முனநாள் *
புண்படப்போழ்ந்தபிரானதிடம் பொருமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி * [த்த*
வெண்குடைநீழல்செங்கோல்நடப்ப விடைவெல்கொடிவேல்படைமுன்னுயர்
பண்புடைப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (சா)

இலகியநீண்முடிமாவலிதன்பெருவேள்வியில்மாணுருவாய் * முனநாள்
சலமொடுமாநிலங்கொண்டவனுக்கிடந்தான் தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
உலகுடைமன்னவன்தென்னவனைக்கன்னிமாமதிள்சூழ்கருவூர்வெருவ *
பலபடைசாயவென்றான்பணிந்தபரமேச்சுரவிண்ணகரமதுவே. (எ)

குடைத்திறல்மன்னவனாயொருகால் குரங்கைப்படையா*மலையால்கடலை
யடைத்தவனெந்தைபிரானதிடம்மணிமாடங்கள்சூழ்ந்தழகாயகச்சி * [த்த*
விடைத்திறல்வில்லவன் † நென்மெலியில்வெருவச்செருவேல்வலங்கைப்பிடி
படைத்திறல்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (அ)

பிறையுடைவாணுதல்பின்னைதிறத்துமுன்னேயொருகால்செருவில்லுருமின்
மறையுடைமால்விடையேழடர்த்தார்க்கிடந்தான் தடஞ்சூழ்ந்தழகாயகச்சி *
கறையுடைவாள்மறமன்னர்கெடக்கடல்போல்முழங்கும்குரல்கடுவாய் *
பறையுடைப்பல்லவர்கோன்பணிந்த பரமேச்சுரவிண்ணகரமதுவே. (கூ)

⁂பார்மன்னுதொல்புகழ்பல்லவர்கோன்பணிந்தபரமேச்சுரவிண்ணகர்மேல் *
கார்மன்னுநீள்வயல்மங்கையர்தந்தலைவன் கலிகன்றிகுன்றாதுரைத்த *
சீர்மன்னுசெந்தமிழ்மாலைவல்லார் திருமாமகள்தன்னருளால் * உலகில்
தேர்மன்னராயொலிமாகடல்சூழ் செழுநீருலகாண்டுதிகழ்வர்களே. (க0)

சொல்லு கார் உரம் அண்டம் தூம்பு திண் இலகிய குடை பிறை பார்ம
ஞ்சாடு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## க0-வது, மஞ்சாடு.



### திருக்கோவலூர் திருவிக்ரமன்விஷயம்.

பிராட்டிமாருந்தானுமாகவாஶ்ரயணீயனாய் திருக்கோவலூரிலேவந்து நி
ன்றான்; நானவனை யங்கேகண் டநுபவிக்கப்பெற்றேனென்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

அரபிராகம்-ஆதிதாளம்.

⁂மஞ்சாடுவரையேழும்கடல்களேழும்
வானகமும்மண்ணகமும்மற்றுமெல்லாம் *
எஞ்சாமல்வயிற்றடக்கியாலின்மேலோ
ரிளந்தளிரில்கண்வளர்ந்தவீசன்றன்னை *

† நென்மெலி - ஓர் படைவீடு.

துஞ்சாநீர்வளஞ்சுரக்கும்பெண்ணைத்தென்பால்
தூயநான்மறையாளர்சோமுச்செய்ய *
† செஞ்சாலிவிளைவயலுள்திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (க)

கொந்தலர்ந்தநறுந்துழாய்சாந்தம்தூபம்
தீபங்கொண்டமரர்தொழப்பணங்கொள்பாம்பில்
சந்தணிமென்முலைமலராள்தரணிமங்கை
தாமிருவரடிவருடும் தன்மையானை
வந்தனைசெய்து இசையேழாறங்கம்ஐந்து
வளர்வேள்விநான்மறைகள்மூன்றுதீயும்
சிந்தனைசெய்திருபொழுதுமொன்றும்செல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (உ)

கொழுந்தலரும்மலர்ச்சோலைக்குழாங்கொள்பொய்கைக்
கோள்முதலைவாளெயிற்றுக்கொண்டற்கெள்கி
அழுந்தியமாகளிற்றிறுக்கன்றாழியேந்தி
யந்தரமேவரத்தோன்றி யருள்செய்தானை
எழுந்தமலர்க்கருநீலமிருந்தில்காட்ட
இரும்புன்னை முத்தரும்பிச்செம்பொன்காட்ட
செழுந்தடநீர்க்கமலம்தீவிகைபோல்காட்டும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௩)

தாங்கரும்போர்மாலிபடப்பறவையூர்ந்து
தராதலத்தோர்குறைமுடித்ததன்மையானை
ஆங்கரும்பிக்கண்ணீர்சோர்ந்தன்புகூரு
மடியவர்கட்காரமுதமானான்றன்னை
கோங்கரும்பு சுரபுன்னைகுரவார்சோலைக்
குழாவரிவண்டிசைபாடும்பாடல்கேட்டு
தீங்கரும்புகண்வளரும்கழனிசூழ்ந்த
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௪)

கறைவளர்வேல்கரன்முதலாக்கவந்தன்வாலி
கணையொன்றினால்மடியவிலங்கைதன்னுள்
பிறையெயிற்றுவாளரக்கர்சேனையெல்லாம்
பெருந்தகையோடுடன்துணித்தபெம்மான்றன்னை
மறைவளரப்புகழ்வளரமாடந்தோறும்
மண்டபமொண்டொளியனைத்தும்வாரமோத
சிறையணைந்தபொழிலணைந்த தென்றல்வீசும்
திருக்கோவலூரதனுள்கண்டேன்நானே. (௫)

† செஞ்சாலி - செந்நெல்;

உறியார்ந்தநறுவெண்ணெ யொளியால்சென்றங்
குண்டானைக்கண்டாச்சியுரலோடார்க்க *
தறியார்ந்தகருங்களிறேபோலநின்று
தடங்கண்கள்பனிமல்கும் தன்மையானை *
வெறியார்ந்தமலர்மகள்நா மங்கையோடு
வியன்கலையெண்தோளி னுள்விளங்கு * செல்வச்
செறியார்ந்தமணிமாடம் திகழ்ந்துதோன்றும்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (சு)
இருங்கைமாகரிமுனிந்து பரியைக்கீரி
இனவிடைகளேழடர்த்து மருதம்சாய்த்து *
வரும்சகடமிறவுதைத்து மல்லையட்டு
வஞ்சஞ்செய்கஞ்சனுக்கு நஞ்சானானை *
கருங்கமுகுபசும்பாளை வெண்முத்தீன்று
காயெல்லாம்மரதகமாய்ப் பவளங்காட்ட *
செருந்திமிகமொட்டலர்த்தும் தேன்கொள்சோலைத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (எ)
பாரேறுபெரும்பாரந் தீரப்பண்டு
பாரதத்துத்தூதியங்கி * பார்த்தன்செல்வத்
தேரேறுசாரதியா யெதிர்ந்தார்சேனை
செருக்களத்துத்திறலழியச் செற்றான்றன்னை *
போரேற்றொன்றுடையானு மளகைக்கோனும்
புரந்தரனும்நான்முகனும் பொருந்துமூர்போல் *
சீரேறுமறையாளர் நிறைந்தசெல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (அ)
தூவடிவில்பார்மகள் பூமங்கையோடு
சுடராழிசங்கிருபால் பொலிந்துதோன்ற *
காவடிவில்கற்பகமே போலநின்று
கலந்தவர்கட்கருள்புரியும் கருத்தினானை *
சேவடிகைதிருவாய்கண் சிவந்தவாடை
செம்பொன்செய்திருவுருவ மானான்றன்னை *
தீவடிவில்சிவனயனே போல்வார்மன்னு
திருக்கோவலூரதனுள் கண்டேன்நானே. (கூ)
⁂ வாரணங்கொளிடர்கடிந்த மாலைநீல
மரதகத்தைமழைமுகிலே போல்வான்றன்னை *
சீரணங்குமறையாளர் நிறைந்தசெல்வத்
திருக்கோவலூரதனுள் கண்டேனென்று *

வாரணங்குழுவைமடவார் மங்கைவேந்தன்
வாட்கலியனொலியைந்து மைந்தும்வல்லார் *
காரணங்களாலுலகங் கலந்தங்கேத்தக்
கரந்தெங்கும்பரந்தானைக் காண்பர்தாமே. (கo)

மஞ்சு கொந்து கொழுந்து தாங்குகறை உறி இருங்கை பார் தூவடிவு வாரணம் இருந்தண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

# மூன்றாம்பத்து.

## க-வது, இருந்தண்.

திருவயிந்திரபுரம் தேவநாயகர்விஷயம்.

பரிச்சிந்நனஸர்வேச்வரன் பரிச்சேதித்தநுபவிக்கலாம்படி திருவயிந்திரபுரத்திலே நிற்கிறபடியைக்கண்டு அவ்விடத்தை ப்ராப்யமென்று புத்திபண்ணி அத்தையநுபவிக்கிறார்.

நெடிலடி ஆசிரியவிருத்தம்.

சேஞ்சுருட்டிராகம்-அதிதாளம்.

இருந்தண்மாநிலமேனமதாய் வளைமருப்பினிலகத்தொடுக்கி *
கருந்தண்மாகடல்கண்டுயின்றவனிடம் கமலநன்மலர்த்தேற
லருந்தி*இன்னிசைமுரன்றெழுமளிகுலம்பொதுளியம்பொழிலூடே
செருந்திநாண்மலர்சென்றணைந்துழிதரு திருவயிந்திரபுரமே. (க)

மின்னுமாழியங்கையவன் செய்யவளுறைதருதிருமார்பன் *
பன்னுநான்மறைப்பல்பொருளாகிய பரனிடம்வரைச்சாரல் *
பின்னுமாதவிப்பந்தலில்பெடைவரப் பிணியவிழ்கமலத்து *
தென்னவென்றுவண்டின்னிசைமுரல் தருதிருவயிந்திரபுரமே. (உ)

வையமேழுமுண்டாலிலைவைகிய மாயவன் * அடியவர்க்கு
மெய்யனாகியதெய்வநாயகனிடம் மெய்தகுவரைச்சாரல் *
மொய்கொள்மாதவிசெண்பகம் முயங்கியமுல்லையங்கொடியாட
செய்யதாமரைச்செழும்பணைதிகழ்தரு திருவயிந்திரபுரமே. (ந)

மாறுகொண்டுடன்றெதிர்ந்தவல்லவுணன் றன்மார்பகமிருபிளவா *
கூறுகொண்டவன்குலமகற்கின்னருள் கொடுத்தவனிடம் * மிடைந்து
சாறுகொண்டமென்கரும்பிளங்கழை தகைவிசும்புறமணிநீழல் *
சேறுகொண்டதண்பழனமதெழில் திகழ்திருவயிந்திரபுரமே. (ச)

ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென்றகலிடமளந்து - * ஆயர்
பூங்கொடிக்கினவிடைபொருதவனிடம் பொன்மலர்திகழ் * வேங்கை
கோங்குசெண்பகக்கொம்பினில்குதிகொடுகுரக்கினமிரைத்தோடி *
தேன்கலந்ததண்பலங்கனி நுகர்தருதிருவயிந்திரபுரமே. (ரு)

கூனுலாவியமடந்தைதன்கொடுஞ்சொலின்திறத்திளங்கொடியொடும்*
கானுலாவியகருமுகில்திருநிறத்தவனிடம்; கவினாரும் *
வானுலாவியமதிதவழ்மால்வரை மாமதிள்புடைசூழ *
தேனுலாவியசெழும்பொழில்தழுவிய திருவயிந்திரபுரமே. (சா)

மின்னில்நுண்ணிடைமடக்கொடிகாரணம்விலங்கலின்மிசையிலங்கை
மன்னன்*நீண்முடிபொடிசெய்தமைந்தனதிடம்; மணிவரைநீழல் *
அன்னமாமலரரவிந்தத்தமளியில் பெடையொடுமினிதமர *
செங்நெலார்கவரிக்குலைவீசு தண்திருவயிந்திரபுரமே. (எ)

விரைகமழ்ந்தமென்கருங்குழல்காரணம்வில்லிறுத்து*அடல்மழைக்கு
நிரைகலங்கிடவரைகுடையெடுத்தவன் நிலவியவிடம்; தடமார் *
வரைவளந்திகழ்மதகரிமருப்பொடு மலைவளரகிலுந்தி *
திரைகொணர்ந்தணைசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. (அ)

வேல்கொள்கைத்தலத்தரசர்வெம்போரினில்விசயனுக்காய்*மணித்தே
ர்க், கோல்கொள்கைத்தலத்தெந்தைபெம்மானிடம்; குலவுதண்வரை
ச்சாரல், கால்கொள்கண்கொடிக்கையெழக் கமுகிளம்பாளைகள்கமழ்
சாரல்*, சேல்கள்பாய்தருசெழுநதிவயல்புகு திருவயிந்திரபுரமே. ()

⁂ மூவராகியவொருவனை, மூவுலகுண்டுமிழ்ந்தளந்தானை *
தேவர்தானவர்சென்றுசென்றிறைஞ்ச தண்திருவயிந்திரபுரத்து *
மேவுசோதியை, வேல்வலவன் கலிகன்றிவிரித்துரைத்த *
பாவுதண்டமிழ்பத்திவைபாடிடப் பாவங்கள்பயிலாவே. (கo)

இருந்தண் மின் வையம் மாறுங்கு கூன் மின் விரை வேல் மூவ ரூன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, ஊன்வாட.



திருச்சித்ரகூடம் கோவிந்தராஜன்விஷயம்.

பரோபதேசம்.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**சங்கராபரணராகம்-அடதாளம்.**

⁂ ஊன்வாடவுண்ணாதுயிர்காவலிட்
டுடலிற்பிரியாப்புலனைந்தும்நொந்து *
தாம்வாடவாடத்தவம்செய்யவேண்டா
தமதாவிமையோருலகாளகிற்பீர் *
கானாடமஞ்ஞைக்கணமாடமாடே
கயலாடுகானீர்ப்பழனம்புடைபோய் *
தேனாடமாடக்கொடியாடுதில்லைத்
திருச்சித்திரகூடம்சென்றுசேர்மின்களே. (க)

காயோடுநீடுகனியுண்டு வீசு
கடுங்கால்நுகர்ந்து * நெடுங்காலமைந்து
தீயோடுநின்று தவஞ்செய்யவேண்டா
திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர் *
வாயோதுவேதம்மல்கின்றதொல்சீர்
மறையாளர்நாளும் முறையால்வளர்த்த *.
தீயோங்கவோங்கப் புகழோங்குதில்லைத்
திருச்சித்திரகூடம்சென்றுசேர்மின்களே. (௨)

வெம்புஞ்சினத்துப் புனக்கேழலொன்றாய்
விரிநீர்முதுவெள்ளமுள்புக்கழுந்த *
வம்புண்பொழில்சூழுலகன்றெடுத்தா
னடிப்போதணைவான் விருப்போடிருப்பீர் *
பைம்பொன்னுமுத்தும் மணியுங்கொணர்ந்து
படைமன்னவன் பல்லவர்கோன்பணிந்த *
செம்பொன்மணிமாடங்கள் சூழ்ந்ததில்லைத்
திருச்சித்திரகூடம்சென்று சேர்மின்களே. (௩)

அருமாநிலமன்றளப்பான்குறளாய்
அவுணன்பெருவேள்வியில் சென்றிரந்த *
பெருமான்திருநாமம்பிதற்றி நுந்தம்
பிறவித்துயர்நீங்குதுமென்னகிற்பீர் *
கருமாகடலுள்கிடந்தானுவந்து
$ கவைநாவரவினணைப்பள்ளியின்மேல் *
திருமால்திருமங்கையோடாடு தில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (௪)

கோமங்கவங்கக்கடல்வையமுய்யக்
குலமன்னரங்கம்மழுவில்துணிய *
தாமங்கமருள்படைதொட்டவென்றித்
தவமாமுனியைத்தமக்காக்ககிற்பீர்
பூமங்கைதங்கிப்புலமங்கைமன்னிப்
புகழ்மங்கையெங்கும் திகழ * புகழ்சேர்
சேமங்கொள்பைம்பூம் பொழில்சூழ்ந்ததில்லைத்
திருச்சித்திரகூடம் சென்றுசேர்மின்களே. (௫)

நெய்வாயழலம்புதுரந்து முந்நீர்
துணியப்பணிகொண்டணியார்ந்து - * இலங்கு
மையார்வணிமண்ணனையெண்ணி நுந்தம்
மனத்தேயிருத்தும்படிவாழவல்லீர் *

$ கவைநா - இரண்டுநாக்கு.

அவ்வாயிளமங்கையர்பேசவுந்தான்
அருமாமறையந்தணர்சிந்தைபுக *
செவ்வாய்க்கிளிநான்மறைபாடுதில்லைத்
திருச்சித்திரகூடம்சென்றுசேர்மின்களே. (௬)
மௌவல்குழலாய்ச்சிமென்தோள்நயந்து
§ மகரம்சுழலச்சுழல்நீர்பயந்த *
தெய்வத்திருமாமலர்மங்கைதங்கு
திருமார்பனைச்சிந்தையுள்வைத்துமென்பீர் *
கௌவைக்களிற்றின்மருப்பும் பொருப்பில்
கமழ்சந்துமுந்திநிவாவலங்கொள் *
தெய்வப்புனல்சூழ்ந்தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடம்சென்றுசேர்மின்களே. (எ)
மாவாயினங்கம்மதியாதுகீறி
மழைமாமுதுகுன்றெடுத்து - * ஆயர்தங்கள்
கோவாய்நிரைமேய்த்துலகுண்டமாயன்
குரைமாகழல்கூடுங்குறிப்புடையீர் *
மூவாயிரநான்மறையாளர் நாளும்
முறையால்வணங்க அணங்காயசோதி *
தேவாதிதேவன்திகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம்சென்றுசேர்மின்களே. (அ)
செருநீலவேற்கண்மடவார்திறத்துச்
சினத்தோடுநின்றுமனத்தால்வளர்க்கும் *
அருநீலபாவமகலப்புகழ்சேர்
அமரர்க்குமெய்தாதவண்டத்திருப்பீர் *
பெருநீர்நிவாவுந்திமுத்தங்கொணர்ந் தெங்கும்
வித்தும்வயலுள்கயல்பாய்ந்துகள *
திருநீலநின்றுதிகழ்கின்ற தில்லைத்
திருச்சித்திரகூடம்சென்றுசேர்மின்களே. (௯)
⁂ சீரார்பொழில்சூழ்ந்தழகாய தில்லைத்
திருச்சித்திரகூடத்துறைசெங்கண்மாலுக்கு - *
ஆராதவுள்ளத்தவர்கேட்டுவப்ப
அலைநீருலகுக்கருளேபுரியும் *
காரார்புயற்கைக்கலிகன்றி குன்றா
வொலிமாலையோரொன்பதோடொன்றும்வல்லார் *
பாராருலகமளந்தானடிக்கீழ்
பலகாலம்நிற்கும்படிவாழ்வர்தாமே. (௧0)

ஊன்காய்வெம்பருமா கோமங்கநெய்மௌவல் மாவாய்செருச்சீரார்வாட.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



§ மகரம் - ஓர்மீன்.

## ௩-வது, வாடமரு.

திருச்சித்ரகூடம் கோவிந்தராஜன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

மோகனராகம்-ஆதிதாளம்.

⁂ வாடமருதிடைபோகி மல்லரைக்கொன்றொக்கலித்திட்டு - *
ஆடல்நன்மாவுடைத் தாயராநிரைக்கன்றிடர்தீர்ப்பான் *
கூடியமாமழைகாத்த கூத்தனெனவருகின்றான் *
சேடுயர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. (௧)

பேய்மகள்கொங்கைநஞ்சுண்ட பிள்ளைபரிசிதுவென்றால் *
மாநிலமாமகள் மாதர்கேள்வனிவனென்றும் * வண்டுண்
பூமகள்நாயகனென்றும் புலங்கெழுகோவியர்பாடி *
தேமலர்தூவவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௨)

பண்டிவன்வெண்ணெயுண்டானென் றாய்ச்சியர்கூடியிழிப்ப ‡ *
எண்டிசையோரும்வணங்க இணைமருதூடுநடந்திட்டு - *
அண்டரும்வானத்தவரு மாயிரநாமங்களோடு *
திண்டிறல்பாடவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௩)

வளைக்கைநெடுங்கண்மடவா ராய்ச்சியரஞ்சியழைப்ப *
தளைத்தவிழ்தாமரைப்பொய்கைத் தண்டடம்புக்கண்டர்காண *
முளைத்தவெயிற்றழல்நாகத் துச்சியில்நின்றதுவாட *
திளைத்தமர்செய்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௪)

பருவக்கருமுகிலொத்து முத்துடைமாகடலொத்து - *
அருவித்திரள்திகழ்கின்ற வாயிரம்பொன்மலையொத்து - *
உருவக்கருங்குழலாய்ச்சித் திறத் தினமால்விடைசெற்று *
தெருவில்திளைத்துவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௫)

⁂ எய்யச்சிதைந்ததிலங்கைமலங்க வருமழைகாப்பான் *
உய்யப்பருவரைதாங்கி யாநிரைகாத்தானென்றேத்தி *
¶ வையத்தெவரும்வணங்க அணங்கெழுமாமலைபோலே *
தெய்வப்புள்ளேறிவருவான் சித்திரகூடத்துள்ளானே. (௬)

ஆவரிவைசெய்தறிவா ரஞ்சநமாமலைபோலே *
மேவுசினத்தடல்வேழம் வீழமுனிந்து - * அழகாய
காவிமலர்நெடுங்கண்ணார் கைதொழவீதிவருவான் *
தேவர்வணங்குதண்தில்லைச் சித்திரகூடத்துள்ளானே. (௭)

பொங்கியமரிலொருகால் பொன்பெயரோனைவெருவ *
அங்கவனாகமளைந்திட் டாயிரந்தோளெழுந்தாட *
பைங்கணிரண்டெரிகான்ற நீண்டவெயிற்றொடுபேழ்வாய் *
சிங்கவுருவில்வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௮)

---

‡ "அழைப்ப" என்று நஞ்சீயர் படியிற்பாடம். ¶ "வையத்தவரும்" என்றும் பாடம்.

கருமுகில்போல்வதோர்மேனி கையனவாழியும்சங்கும் *
பெருவிறல்வானவர்சூழ ஏழுலகும்தொழுதேத்த *
ஒருமகளாயர்மடந்தை யொருத்திநிலமகள் * மற்றைத்
திருமகளோடும்வருவான் சித்திரகூடத்துள்ளானே. (௯)

⁂ தேனமர்பூம்பொழில்தில்லைச் சித்திரகூடமமர்ந்த *
வானவர்தங்கள்பிரானை மங்கையர்கோன், வருவார் *
ஊனமர்வேல்கலிகன்றி யொண்டமிழொன்பதோடொன்றும் *
தானிவைகற்றுவல்லார்மேல் $ சாராதீவினைதானே. (௧0)

வாடப் பேய் பண்டு வளை பரு எய்ய ஆவர் பொங்கிய கருமுகில் தேனமர் ஒருகுறள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௪-வது, ஒருகுறளாய்.



காழிச்சீராமவிண்ணகரம் தாடாளப்பெருமாள்விஷயம்.
பரோபதேஶம்.
எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
**பியாகடைராகம்-நுபகதாளம்.**

⁂ ஒருகுறளாயிருநிலம்மூவடிமண்வேண்டி
யுலகனைத்துமீரடியாலொடுக்கி * ஒன்றும்
தருகவெனுமாவலியைச்சிறையில்வைத்த
† தாடாளன்தாளணைவீர் * தக்ககீர்த்தி
யருமறையின்திரள்நான்கும்வேள்வியைந்தும்
அங்கங்களவையாறுமிசைகளேழும் *
தெருவில்மலிவிழாவளமும்சிறக்கும் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௧)

நான்முகனுள்மிகத்தருக்கை யிருக்குவாய்மை
நலமிகுசீருரோமசனால்நவிற்று * நக்க
னூன்முகமார்தலையோட்டூணொழித்தவெந்தை
யொலிமலர்ச்சேவடியணைவீர் * உழுசேயோடச்
சூன்முகமார்வளையளைவாயுகுத்தமுத்தைத்
தொல்குருகுசினையென்னச்சூழ்ந்தியங்க * எங்கும்
தேன்முகமார்கமலவயல்சேல்பாய் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (௨)

வையணைந்தநுதிக்கோட்டுவராகமொன்றாய்
மண்ணெல்லாமிடந்தெடுத்துமதங்கள்செய்து *
நெய்யணைந்ததிகிரியினால்வாணன்திண்டோள்
நேர்த்தவன்தாளணைகிற்பீர் * நெய்தலோடு

---

$ "சாரகில்லாவினைதானே" என்று சில ஸ்ரீகோசங்கள். † தாடாளன்-மேன்மையுடையவன்.

மையணிந்தகுவளைகள்தங்கண்களென்றும்
மலர்க்குமுதம்வாயென்றும் கடைசிமார்கள் *
செய்யணைந்துகளைகளையாதேறும் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (ங)

பஞ்சியமெல்லடிப்பின்னைதிறத்து முன்னாள்
பாய்விடைகளேழடர்த்துப், பொன்னன்பைம்பூண் *
நெஞ்சிடந்துகுருதியுகவுகிர்வேலாண்ட
நின்மலன்தாளணைகிற்பீர் * நீலமாலைத்
தஞ்சுடையவிருள்தழைப்பத்தரளமாங்கே
தண்மதியின்நிலாக்காட்டப்பவளந்தன்னால் *
செஞ்சுடர்வெயில்விரிக்குமழகார் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (ச)

$ தெவ்வாயமறமன்னர் குருதிகொண்டு
திருக்குலத்திலிறந்தோர்க்குத்திருத்திசெய்து
வெவ்வாயமாகீண்டுவேழமட்ட
விண்ணவர்கோன்தாளணைவீர் * விகிர்தமாத
ரவ்வாயவாள்நெடுங்கண்குவளைகாட்ட
அரவிந்தம்முகங்காட்ட, அருகேயாம்பல் *
செவ்வாயின்திரள்காட்டும்வயல்சூழ் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (ரு)

பைங்கண்விறல்செம்முகத்துவாலிமாளப்
படர்வனத்துக்கவந்தனொடும், படையார்திண்கை *
வெங்கண்விறல்விராதனுகவிற்குனித்த
விண்ணவர்கோன்தாளணைவீர் * வெற்புப்போலும்
துங்கமுகமாளிகைமேலாயங்கூடும்
துடியிடையார் முகக்கமலச்சோதிதன்னால் *
திங்கள்முகம்பனிபடைக்குமழகார் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (சு)

பொருவில்வலம்புரியரக்கன்முடிகள்பத்தும்
புற்றுமறிந்தனபோலப்புவிமேல்சிந்த *
செருவில்வலம்புரிசிலைக்கைமலைத்தோள்வேந்தன்
திருவடிசேர்ந்துய்கிற்பீர் * திரைநீர்த்தெள்கி
மருவிவலம்புரி கைதைக்கழியூடாடி
வயல்நண்ணிமழைதருநீர்த்தடம்சூழ்கால்மன்னி *
தெருவில்வலம்புரிதரளமீனும் காழிச்
சீராமவிண்ணகரேசேர்மினீரே. (எ)

$ தெவ் - சத்ருக்கள்.

பட்டரவேரகலல்குல் பவளச்செவ்வாய்ப்
பணைநெடுந்தோள்பிணைநெடுங்கண் பாலாமின்சொல் *
மட்டவிழுங்குழலிக்காவானோர்காவில்
மரங்கொணர்ந்தானடியணைவீர் * அணில்கள்தாவ
நெட்டிலையகருங்கமுகின்செங்காய்வீழ
நீள்பலவின் தாழ்சினையில் நெருங்கு * $ பீநத்
† தெட்டபழம்சிதைந்துமதுச்சொரியும்காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (அ)
பிறைதங்குசடையானை வலத்தேவைத்துப்
பிரமனைத்தன்னுந்தியிலே தோற்றுவித்து *
கறைதங்குவேல்தடங்கண் திருவைமார்பில்
கலந்தவன்தாளணைகிற்பீர் * கழுநீர்கூடித்
துறைதங்குகமலத்துத்துயின்றுகைதைத்
தோடாரும்போதிசோற்றுச் சுண்ணம்நண்ணி
சிறைவண்டுகளிபாடும் வயல்சூழ்காழிச்
சீராமவிண்ணகரே சேர்மினீரே. (௯)
⁂ செங்கமலத்தயனனைய மறையோர்காழிச்
சீராமவிண்ணகரென்செங்கண்மாலை
அங்கமலத்தடவயல்சூ ழாலிநாடன்
அருள்மாரியரட்டமுக்கி யடையார்சீயம்
கொங்குமலர்க்குழலியர்வேள் மங்கைவேந்தன்
கொற்றவேல்பரகாலன் கலியன்சொன்ன
சங்கமுகத்தமிழ்மாலை பத்தும்வல்லார்
தடங்கடல்சூழுலகுக்குத் தலைவர்தாமே. (௧0)

ஒரு நான் வை பஞ்சி தெவ்வாய் பைங்கண் பொருபட்டு பிறை செங் கமலம் வந்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௫-வது, வந்து.

திருவாலிநகர்வயலாலிமணவாளப்பெருமாள்விஷயம்.

கைங்கர்யப்ரார்த்தனைபண்ணுவாராய் அவன்பண்ணின வுபகாரத்தை ஸ்மரிக்கிறார்.

ஆசிரியத்துறை.

சாவேரிராகம்-ஆதிதாளம்.

⁂ வந்துனதடியேன்மனம்புகுந்தாய் புகுந்ததற்பின்வணங்கும்* என்
சிந்தனைக்கினியாய் ! திருவே ! என்னுருயிரே
அந்தளிரணியாரசோகி னிளந்தளிர்கள்கலந்து - * அவையெங்கும்
செந்தழல்புரையும் திருவாலியம்மானே. (௧)

$ பீநம்-பருத்த. † தெட்டபழம் - பக்வபலங்கள்.

நீலத்தடவரை மாமணிநிகழக்கிடந்ததுபோல் * அரவணை
வேலைத்தலைக்கிடந்தா யடியேன்மனத்திருந்தாய்
சோலைத்தலைக்கணமாமயில் நடமாடமழைமுகில்போன்றெழுந்து - எங்கும்
ஆலைப்புகைகமழு மணியாலியம்மானே. (உ)

நென்னெல்போய்வருமென்றென்றெண்ணியிராமையென்மனத்தேபுகுந்தது
$ இம்மைக்கென்றிருந்தே னெறிநீர்வளஞ்செறுவில் *
செந்நெற்கூழைவரம்பொரீஇ யரிவார்முகத்தெழு † வாளைபோய் * கரும்பு -
§ அந்நல்காடணையு மணியாலியம்மானே. (௩)

மின்னில்மன்னு நுடங்கிடைமடவார்தம்சிந்தைமறந்துவந்து * நின்
மன்னுசேவடிக்கே மறவாமைவைத்தாயால் *
புன்னைமன்னுசெருந்தி வண்பொழில்வாயகன்பணைகள் * கலந்தெங்கும்
அன்னம்மன்னும்வய லணியாலியம்மானே. (௪)

நீடுபன்மலர்மாலையிட்டு நின்னிணையடிதொழுதேத்தும் * என்மனம்
வாடநீநினையேல் மரமெய்தமாமுனிவா! *
பாடலின்னொலிசங்கினோசைபரந்து பல்பணையால்மலிந்து - * எங்கும்
ஆடலோசையறா அணியாலியம்மானே. (௫)

கந்தமாமலரெட்டுமிட்டு நின்காமர்சேவடிகைதொழுதெழும் *
புந்தியேன்மனத்தே புகுந்தாயைப்போகலொட்டேன் *
சந்திவேள்விசடங்குநான்மறையோதியோதுவித்தாதியாய்வரும் *
அந்தணாளரறா வணியாலியம்மானே. (௬)

உலவுதிரைக்கடற்பள்ளிகொண்டு வந்துன்னடியேன்மனம்புகுந்த * அப்
புலவபுண்ணியனே! புகுந்தாயைப்போகலொட்டேன் *
நிலவுமலர்ப்புன்னைநாழல்நீழல் தண்டாமரைமலரின்மிசை * மலி
அலவன்கண்படுக்கு மணியாலியம்மானே. (௭)

சங்குதங்குதடங்கடல் கடன்மல்லையுள்கிடந்தாய் * அருள்புரிந்
திங்கென்னுள்புகுந்தா யினிபோயினாலறையோ *
கொங்குசெண்பகமல்லிகைமலர்புல்கியின்னிளவண்டுபோய் * இளம்
தெங்கின்தாதளையும் திருவாலியம்மானே. (௮)

ஓதியாயிரநாமமும்பணிந்தேத்தி நின்னடைந்தேற்கு - * ஒருபொருள்
வேதியா அரையா! உரையாயொருமாற்றமெந்தாய் *
நீதியாகியவேதமாமுனியாளர் தோற்றமுரைத்து * மற்றவர்க்
காதியாயிருந்தா யணியாலியம்மானே. (௯)

‡‡ புல்லிவண்டறையும்பொழில்புடைசூழ்தென்னாலியிருந்தமாயனை *
கல்லின்மன்னுதிண்டோள் கலியனொலிசெய்த *
நல்லவின்னிசைமாலை நாலுமோரைந்துமொன்றும்நவின்று * தாமுடன்
வல்லராயுரைப்பார்க் கிடமாகும்வானுலகே. (௧0)

வந்து நீல நென்னெல் மின்னில் நீடு கந்த முலவு சங்கு ஓதி புல்லி தூவிரி.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

---

$ "இன்மைக்கு" என்று பாடாந்தரம். † "எழ" என்றும் பாடம்.
§ "அன்னல்" என்று பாடமானால் - செடிமிக்க என்றுபொருள்.

## சு-வது, தூவிரிய.

திருவாலிநகர் வயலாலிமணவாளப் பெருமாள்விஷயம்.

தூ து வி டு கி ரு ர்.

கலிவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம்-ரூபகதாளம்.

தூவிரியமலருழக்கித் துணையோடும்பிரியாதே *
பூவிரியமதுநுகரும் பொறிவரியசிறுவண்டே *
தீவிரியமறைவளர்க்கும் புகழாளர்திருவாலி *
ஏவரிவெஞ்சிலையானுக் கென்னிலைமையுரையாயே. (க)

பிணிஅவிழுநறுநீலமலர்கிழியப் பெடையோடும் *
அணிமலர்மேல்மதுநுகரு மறுகாலசிறுவண்டே *
மணிகெழுநீர்மருங்கலரும் வயலாலிமணவாளன்
பணியறியேன் * நீசென்றென் பயலைநோயுரையாயே. (உ)

நீர்வானம்மண்ணெரிகா லாய்நின்றநெடுமால் * தன்
தாராயநறுந்துளவம் பெறுந்தகையேற்கருளானே *
சீராரும்வளர்பொழில்சூழ் திருவாலிவயல்வாழும் *
கூர்வாயசிறுகுருகே குறிப்பறிந்துகூறாயே. (ரு)

தானாகநினையானேல் தன்னினைந்துநைவேற்கு- * ஓர்
மீனாயகொடிநெடுவேள் வலிசெய்யமெலிவேனோ *
தேன்வாயவரிவண்டே திருவாலிநகராளும் *
ஆனாயற்கென்னுறுநோ யறியச்சென்றுரையாயே. (ச)

வாளாயகண்பனிப்ப மென்முலைகள்பொன்னரும்ப *
நாளுநின்னினைந்து நைவேற்று-* ஓ! மண்ணளந்த
தாளாளா! தண்குடந்தைநகராளா * வரையெடுத்த
தோளாளா! என்றனக்கோர் துணையாளனாகாயே. (ரு)

தாராயதண்டுளவ, வண்டுழுதவரைமார்பன் *
போரானைகொம்பொசித்த புட்பாகனென்னம்மான் *
தேராரும்நெடுவீதித் திருவாலிநகராளும் *
காராயனென்னுடைய கனவளையும்கவர்வானோ. (சு)

கொண்டரவத்திரையுலவு குரைகடல்மேல்குலவரைபோல் *
பண்டரவினணைக்கிடந்து பாரளந்தபண்பாளா! *
வண்டமரும்வளர்பொழில்சூழ் வயலாலிமைந்தா * என்
கண்டுயில்நீகொண்டாய்க்கென் கனவளையும்கடவேனோ. (எ)

குயிலாலும்வளர்பொழில்சூழ் தண்குடந்தைக்குடமாடி! *
துயிலாதகண்ணிணையேன் நின்னினைந்துதுயர்வேனோ *
முயலாலுமிளமதிக்கே வளையிழந்தேற்கு - * இதுநடுவே
வயலாலிமணவாளா! கொள்வாயோமணிநிறமே. (அ)

நிலையாளாநின்வணங்க † வேண்டாயேயாகிலும் * என்
முலையாளவொருநா ளுன்னகலத்தாலாளாயே *
சிலையாளா! மரமெய்ததிறலாளா! திருமெய்ய
மலையாளா! * நீயாளவளையாளமாட்டோமே. (கூ)
‡‡ மையிலங்குகருங்குவளை மருங்கலரும்வயலாலி *
நெய்யிலங்குசுடராழிப் படையானை நெடுமாலை *
கையிலங்குவேல்கலியன் கண்டுரைத்ததமிழ்மாலை *
ஐயிரண்டுமிவைவல்லார்க் கருவினைகளடையாவே. (கo)

தூவிரிய பிணி நீர் தான் வாள் தாராய கொண்டு குயில் நிலை மையில
ங்கு கள்வன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, கள்வன்கொல்.



திருவாலிமணவாளப் பெருமாள்விஷயம்.

தாயார்பாசுரம்.

கலிவிருத்தம்.

**துசாவந்திராகம் - ஆதிதாளம்.**

‡‡ கள்வன்கொல்யானறியேன் கரியானொருகாளைவந்து *
வள்ளிமருங்குலென்றன் மடமானினைப்போதவென்று *
வெள்ளிவளைக்கைபற்றப் பெற்றதாயரையிட்டகன்று - *
அள்ளலம்பூங்கழனி யணியாலிபுகுவர்கொலோ. (க)
பண்டிவனாயன்நங்காய்; படிறன்புகுந்து * - என்மகள்தன்
தொண்டையஞ்செங்கனிவாய் நுகர்ந்தானையுகந்து * - அவன்பின்
கெண்டையொண்கண்மிளிரக் கிளிபோல்மிழற்றிநடந்து *
வண்டமர்கானல்மல்கும் வயலாலிபுகுவர்கொலோ. (உ)
அஞ்சுவன்வெஞ்சொல்நங்காய்! அரக்கர்குலப்பாவைதன்னை *
வெஞ்சினமூக்கரிந்த விறலோன்திறங்கேட்கில், மெய்யே *
பஞ்சியமெல்லடி யெம்பணைத்தோளி ‡ பரக்கழிந்து *
வஞ்சியந்தண்பணைசூழ் வயலாலிபுகுவர்கொலோ. (ந)
ஏதுஅவன்தொல்பிறப் பிளையவன்வளையூதி * மன்னர்
தூதுவனாயவனூர் சொல்வீர்கள்சொல்லீரறியேன் *
மாதவன்தன்துணையாநடந்தாள் தடஞ்சூழ்புறவில் *
$ போதுவண்டாடு § செம்மல் புனலாலிபுகுவர்கொலோ. (ச)
தாயெனையென்றிரங்காள் தடந்தோளிதனக்கமைந்த
மாயனை * மாதவனை மதித்தென்னையகன்றவிவள் ¶ *
வேயனதோள்விசிறிப் பெடையன்னமெனநடந்து *
போயினபூங்கொடியாள் புனலாலிபுகுவர்கொலோ. (ரு)

† "வேண்டாயேயாயினும்".என்றும்பாடம். ‡ பரக்கு-அடக்கம். $ போது-அப்போதலர்ந்தபூ. § செம்மல் - பெருமை, பழமை, பூ. ¶ "அகன்றவன்பின்" என்று பாடாந்தரம்.

என்துணையென்றெடுத்தேற் கிறையேனுமிரங்கிற்றிலள் *
தன்துணையாயவென்றன் தனிமைக்குமிரங்கிற்றிலள் *
வன்துணைவானவர்க்காய் வரஞ்செற்றரங்கத்துறையும் *
இன்துணைவனொடும்போ யெழிலாலிபுகுவர்கொலோ. (௬)

அன்னையுமத்தனுமென் றடியோமுக்கிரங்கிற்றிலள் *
பின்னைதன்காதலன்றன் பெருந்தோள்நலம்பேணினளால் *
மின்னையும்வஞ்சியையும் வென்றிலங்குமிடையாள்நடந்து *
புன்னையுமன்னமுஞ்சூழ் புனலாலிபுகுவர்கொலோ. (௭)

முற்றிலும்பைங்கிளியும் பந்துமூசலும் * பேசுகின்ற
சிற்றில்மென்பூவையும் விட்டகன்றசெழுங்கோதைதன்னை *
பெற்றிலேன்முற்றிழையைப் பிறப்பிலிபின்னேநடந்து *
மற்றெல்லாம்கைதொழப்போய் வயலாலிபுகுவர்கொலோ. (௮)

காவியங்கண்ணியெண்ணில் கடிமாமலர்ப்பாவையொப்பாள் *
பாவியேன்பெற்றமையால் பணைத்தோளிபரக்கழிந்து *
தூவிசேரன்னமன்னநடையாள் நெடுமாலொடும்போய் *
வாவியந்தண்பணைசூழ் வயலாலிபுகுவர்கொலோ. (௯)

⁂ தாய்மனம்நின்றிரங்கத் தனியேநெடுமால்துணையா *
போயினபூங்கொடியாள் புனலாலிபுகுவரென்று *
காய்சினவேல்கலியனொலிசெய்தமிழ்மாலைபத்தும் *
மேவிய ‡ நெஞ்சுடையார் தஞ்சமாவதுவிண்ணுலகே. (௧௦)

கள்வன் பண்டஞ்சுவன் ஏதவன்தாய் என்துணை அன்னைமுற்றில் காவி தாய் மனம் நந்தா.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, நந்தாவிளக்கு.



திருநாங்கூர்மணிமாடக்கோயில் பெருமாள்விஷயம்.

திருமணிமாடக்கோயிலிலே நின்றருளினவனை நீயங்கேசென்று அநுபவியென்று தன் மனதுக்கு நியமிக்கிறார்.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தோடிராகம்-அடதாளம்.

⁂ நந்தாவிளக்கேயளத்தற்கரியாய் !
நரநாரணனே கருமாமுகில்போல்
எந்தாய் * எமக்கேயருளாயெனநின்று -
இமையோர்பரவுமிடம் * எத்திசையும்

‡ "நெஞ்சுடையார்க்கு" என்றும் பாடம்.

கந்தாரமந்தேனிசைபாடமாடே
 களிவண்டுமிழற்றநிழல்துதைந்து *
மந்தாரநின்றுமணமல்குநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௧)

முதலைத்தனிமாமுரண்தீரவன்று
 முதுநீர்த்தடத்துச்செங்கண்வேழமுய்ய *
† விதலைத்தலைச்சென்றதற்கேயுதவி
 வினைதீர்த்தவம்மானிடம் * விண்ணணவும்
பதலைக்கபோதத்தொளிமாடநெற்றிப்
 பவளக்கொழுங்காலபைங்கால்புறவம் *
மதலைத்தலைமென்பெடைகூடுநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௨)

கொலைப்புண்தலைக்குன்றமொன்றுய்ய வன்று
 கொடுமாமுதலைக்கிடர்செய்து * கொங்கார்
இலைப்புண்டரீகத்தவளின்பமன்போ
 டணைந்திட்டவம்மானிடம் * ஆளரியால்
அலைப்புண்டயானைமருப்பு மகிலும்
 அணிமுத்தும்வெண்சாமரையோடு * பொன்னி
மலைப்பண்டமண்டத்திரையுந்துநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௩)

சிறையார்உவணப்புள்ளொன்றேறி யன்று
 திசைநான்கும் நான்குமிரிய * செருவில்
கறையார்நெடுவேலரக்கர்மடியக்
 கடல்சூழிலங்கைகடந்தானிடந்தான் *
முறையால்வளர்க்கின்றமுத்தீயர் நால்வேதர்
 ஐவேள்வியாறங்கரேழினிசையோர் *
மறையோர்வணங்கப்புகழெய்துநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௪)

இழையாடுகொங்கைத்தலைநஞ்சமுண்டிட்டு
 இளங்கன்றுகொண்டுவிளங்காயெறிந்து *
தழைவாடவன்தாள் குருந்தமொசித்துத்
 தடந்தாமரைப்பொய்கைபுக்கானிடந்தான் *
குழையாடவல்லிக்குலமாடமாடே
 குயில்கூவநீடுகொடிமாடமல்கு *
மழையாடுசோலைமயிலாலுநாங்கூர்
 மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (௫)

† விதலைத்தலை-விதனப்படுகிறவளவிலே: விதலை-நடுக்கம்.

பண்ணேர்மொழியாய்ச்சியரஞ்ச வஞ்சப்
பகுவாய்க் ‡ கழுதுக்கிரங்காது - * அவள்தன்
உண்ணாமுலைமற்றவளாவியோடும்
உடனேசுவைத்தானிடம் * ஓங்குபைந்தாள்
கண்ணார்கரும்பின்கழைதின்றுவைகிக்
கழுநீரில்மூழ்கிச்செழுநீர்த்தடத்து *
மண்ணேந்திளமேதிகள் வைகுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (சு)

தளைக்கட்டவிழ்தாமரைவைகு பொய்கைத்
தடம்புக்கு அடங்காவிடங்காலரவம் *
இளைக்கத்திளைத்திட்டதனுச்சிதன்மேல்
அடிவைத்தவம்மானிடம் * மாமதியம்
திளைக்கும்கொடிமாளிகைசூழ் தெருவில்
செழுமுத்துவெண்ணெற்கெனச், சென்று* முன்றில்
வளைக்கைநுளைப்பாவையர்மாறுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (எ)

துளையார்கருமென்குழலாய்ச்சியர்தம்
துகில்வாரியும் சிற்றில்சிதைத்தும் * முற்றா
விளையார்விளையாட்டொடு காதல்வெள்ளம்
விளைவித்தவம்மானிடம் * வேல்நெடுங்கண்
முளைவாளெயிற்றுமடவார்பயிற்று
மொழிகேட்டிருந்துமுதிராதவின்சொல் *
வளைவாயகிள்ளைமறைபாடுநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (அ)

விடையோடவென்றாய்ச்சிமென்தோள்நயந்த
விகிர்தா, விளங்குசுடராழியென்னும் *
படையோடுசங்கொன்றுடையாயெனநின்று-
இமையோர்பரவுமிடம் * பைந்தடத்துப்
பெடையோடுசெங்காலவன்னம்துகைப்பத்
தொகைப்புண்டரீகத்திடைச்செங்கழுநீர் *
மடையோடநின்றுமதுவிம்முநாங்கூர்
மணிமாடக்கோயில்வணங்கென்மனனே. (கூ)

‡‡ வண்டார்பொழில்சூழ்ந்தழகாயநாங்கூர்
மணிமாடக்கோயில்நெடுமாலுக்கு - * என்றும்
தொண்டாயதொல்சீர்வயல்மங்கையர்கோன்
கலியனொலிசெய் தமிழ்மாலைவல்லார் *

‡ கழுது - பேய்.

கண்டார்வணங்கக்களியானைமீதே
கடல்சூழுலகுக்கொருகாவலராய் *
விண்தோய்நெடுவெண்குடைநீழலின்கீழ்
விரிநீருலகாண்டுவிரும்புவரே. (கο)

நந்தா முதலை கொலை சிறை இழை பண் தளை துளை விடை வண்டார் சலம்.
திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது; சலங்கொண்ட.



வைகுந்தவிண்ணகரம் வைகுந்தநாதன்விஷயம்.
எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
அடாணாராகம்-அடதாளம்.

‡‡ சலங்கொண்டவிரணியனதகல்மார்வங்கீண்டு
தடங்கடலைக்கடைந்தமுதங்கொண்டுகந்தகாளை *
நலங்கொண்டகருமுகில்போல்திருமேனியம்மான்
நாடோறும் மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
சலங்கொண்டுமலர்சொரியும்மல்லிகையொண்செருந்தி
செண்பகங்கள்மணநாறும்வண்பொழிலினூடே *
வலங்கொண்டுகயலோடி விளையாடுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (க)

திண்ணியதோரரியுருவாய்த்திசையனைத்தும்நடுங்கத்
தேவரொடுதானவர்கள்திசைப்ப * இரணியனை
நண்ணியவன்மார்வகலத்துகிர்மடுத்தநாதன்
நாடோறும்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில் *
எண்ணில்மிகுபெருஞ்செல்வத்தெழில்விளங்குமறையும்
ஏழிசையும்கேள்விகளுமியன்றபெருங்குணத்தோர் *
மண்ணில்மிகுமறையவர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (உ)

அண்டமுமிவ்வலைகடலுமவனிகளுமெல்லாம்
அமுதுசெய்ததிருவயிற்றன், அரன்கொண்டுதிரியும் *
முண்டமதுநிறைத் தவன்கண்சாபமதுநீக்கும்
முதல்வனவன்மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
எண்டிசையும்பெருஞ்செந்நெலிளந்தெங்குகதலி
இலைக்கொடியொண்குலைக்கமுகோடிசலிவளம்சொரிய *
வண்டுபலவிசைபாடமயிலாலுநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௩)

கலையிலங்குமகலல்குலரக்கர் குலக்கொடியைக்
காதொடுமூக்குடனரியக்கதறியவளோடி *
தலையிலங்கைவைத்துமலையிலங்கைபுகச்செய்த
தடந்தோளன் மகிழ்ந்தினிதுமருவியுறைகோயில் *
சிலையிலங்குமணிமாடத்துச்சிமிசைச்சூலம்
செழுங்கொண்டலகடிரியச்சொரிந்தசெழுமுத்தம் *
மலையிலங்குமாளிகைமேல்மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௪)

மின்னனையநுண்மருங்குல் மெல்லியற்காயிலங்கை
வேந்தன்முடியொருபதும் தோளிருபதும்போயுதிர *
தன்நிகரில்சிலைவளைத்தன் றிலங்கைபொடிசெய்த
தடந்தோளன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில் *
செந்நெலொடுசெங்கமலம்சேல்கயல்கள்வாளை
செங்கழுநீரொடுமிடைந்து கழனிதிகழ்ந்தெங்கும் *
மன்னுபுகழ்வேதியர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௫)

பெண்மைமிகுவடிவுகொடுவந்தவளைப் பெரிய
பேயினதுவுருவுகொடுமாளவுயிருண்டு *
திண்மைமிகுமருதொடுநற்சகடமிறுத்தருளும்
தேவனவன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில்
உண்மைமிகுமறையொடுநற் கலைகள்நிறைபொறைகள்
உதவுகொடையென்றிவற்றி னொழிவில்லா * பெரிய
வண்மைமிகுமறையவர்கள் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம்வணங்குமடநெஞ்சே. (௬)

விளங்கனியையிளங்கன்று கொண்டுதிரவெறிந்து
வேல்நெடுங்கணாய்ச்சியர்கள் வைத்ததயிர்வெண்ணெய் *
உளங்குளிரவமுதுசெய் திவ்வுலகுண்டகாளை
உகந்தினிதுநாடோறும் மருவியுறைகோயில் *
இளம்படிநற்கமுகுகுலைத் தெங்குகொடிச்செந்நெல்
ஈன்கரும்புகண்வளரக் கால்தடவும்புனலால் *
வளங்கொண்டபெருஞ்செல்வம் வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௭)

ஆறுதசினத்தின்மிகு நரகனுரமழித்த
அடலாழித்தடக்கையன், அலர்மகட்குமரற்கும் *
கூறுகக்கொடுத்தருளும் திருவுடம்பன், இமையோர்
குலமுதல்வன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில் *

மாருதமலர்க்கமலம் செங்கழுநீர் ததும்பி
மதுவெள்ளமொழுக வயலுழவர்மடையடைப்ப *
மாருதபெருஞ்செல்வம் வளருமணிநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (அ)

வங்கமலிதடங்கடலுள் வானவர்களோடு
மாமுனிவர்பலர்கூடி மாமலர்கள் தூவி *
எங்கள் தனிநாயகனே ! யெமக்கருளாயென்னும்
ஈசனவன்மகிழ்ந்தினிது மருவியுறைகோயில் *
செங்கயலும்வாளைகளும் செந்நெலிடைக்குதிப்பச்
சேலுகளுஞ்செழும்பணைசூழ் வீதிதொறும்மிடைந்து *
மங்குல்மதியகடுரிஞ்சு மணிமாடநாங்கூர்
வைகுந்தவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (கூ)

⁂ சங்குமலிதண்டுமுதல் சக்கரமுனேந்தும்
தாமரைக்கண்நெடியபிரான் றானமரும்கோயில் *
வங்கமலிகடலுலகில் மலிவெய்துநாங்கூர்
வைகுந்தவிண்ணகர்மேல், வண்டறையும்பொழில்சூழ் *
மங்கையர் தம்தலைவன் மருவலர்தமுடல்துணிய
வாள்வீசும்பரகாலன் கலிகன்றிசொன்ன *
சங்கமலிதமிழ்மாலை பத்திவைவல்லார்கள்
தரணியொடுவிசும்பாளும் தன்மைபெறுவாரே. (கO)

சலம் திண்ணிய அண்டம் கலை மின் பெண்மை விளங்கனி ஆருத வங்கம் சங்கு திரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கO-வது, திருமடந்தை.



திருஅரிமேயவிண்ணகரம் குடமாடுகூத்தப்பிரான்விஷயம்.
எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
மோஹனராகம்-ஜம்பைதாளம்.

⁂ திருமடந்தைமண்மடந்தை யிருபாலும்திகழத்
தீவினைகள்போயகல வடியவர்கட்கென்றும்
அருள்நடந்து * இவ்வேழுலகத்தவர்பணியவானோர்
அமர்ந்தேத்தவிருந்தவிடம் பெரும்புகழ்வேதியர்வாழ்
தருமிடங்கள் * மலர்கள்மிகுகைதைகள்செங்கழுநீர்
தாமரைகள்தடங்கடொறு மிடங்கடொறும்திகழ *
அருவிடங்கள்பொழில்தழுவி யெழில்திகழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (க)

வென்றிமிகுநரகனுரமதுவழியவிசிறும்
விறலாழித்தடக்கையன், விண்ணவர்கட்கு - * அன்று
குன்றுகொடுகுரைகடலைக் கடைந்தமுதமளிக்கும்
குருமணியென்னாரமுதம் குலவியுறைகோயில் *
என்றுமிகுபெருஞ்செல்வத் தெழில்விளங்குமறையோர்
ஏழிசையும்கேள்விகளு மியன்றபெருங்குணத்தோர்
அன்றுலகம்படைத்தவனே யனையவர்கள்நாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௨)

உம்பருமிவ்வேழுலகு மேழ்கடலுமெல்லாம்
உண்டபிரான், அண்டர்கள்முன் கண்டுமகிழ்வெய்த *
கும்பமிகுமதயானை மருப்பொசித்துக்கஞ்சன்
குஞ்சிபிடித்தடித்தபிரான் கோயில் * மருங்கெங்கும்
பைம்பொனொடுவெண்முத்தம் பலபுன்னைகாட்டப்
பலங்கனிகள்தேன்காட்டப் படவரவேரல்குல் *
அம்பனையகண்மடவார் மகிழ்வெய்துநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௩)

ஓடாதவாளரியி னுருவமதுகொண்டு அன்
றுலப்பில்மிகுபெருவரத்த விரணியனைப்பற்றி *
வாடாதவள்ளுகிரால் பிளந்தவன்றன்மகனுக்
கருள்செய்தான்வாழுமிடம்; மல்லிகைசெங்கழுநீர் *
சேடேறுமலர்ச்செருந்தி செழுங்கமுகம்பாளை
செண்பகங்கள்மணநாறும் வண்பொழிலினூடே *
ஆடேறுவயலாலைப் புகைகமழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௪)

கண்டவர்தம்மனம்மகிழ மாவலிதன்வேள்விக்
களவில்மிகுசிறுகுறளாய் மூவடியென்றிரந்திட்டு - *
அண்டமுமிவ்வலைகடலு மவனிகளுமெல்லாம்
அளந்தபிரானமருமிடம்; வளங்கொள்பொழிலயலே *
அண்டமுறுமுழவொலியும் வண்டினங்களொலியும்
அருமறையினொலியும் மடவார்சிலம்பினொலியும் *
அண்டமுறுமலைகடலி னொலிதிகழுநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௫)

வாணெடுங்கண்மலர்க்கூந்தல் மைதிலிக்காஇலங்கை
மன்னன்முடியொருபதும் தோளிருபதும்போயுதிர *
தாணெடுந்திண்சிலைவளைத்த தயரதன்சேய் என்றன்
தனிச்சரண், வானவர்க்கரசுகருதுமிடம்; தடமார் *
சேணிடங்கொள்மலர்க்கமலம் சேல்கயல்கள்வாளை
செந்நெலொடுமடுத்தரிய வுதிர்ந்தசெழுமுத்தம் *
வாணெடுங்கண்கடைசியர்கள் வாருமணிநாங்கூர்
அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௬)

தீமனத்தான்கஞ்சனது வஞ்சனையில்திரியும்
 தேநுகனும்பூதனைதனுருயிரும் செகுத்தான் *
நாமனைத்தான்பயந்தகரு மேனியுடையம்மான்
 கருதுமிடம்; பொருதுபுனல்துறைதுறைமுத்துந்தி *
காமனத்தால்மந்திரங்கள் நால்வேதம்ஐந்து
 வேள்வியோடாறங்கம் நவின்றுகலைபயின்று - * அங்
காமனத்துமறையவர்கள் பயிலுமணிநாங்கூர்
 அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (எ)

கன்றதனால்விளவெறிந்து கனியுதிர்த்தகாளை
 காமருசீர்முகில்வண்ணன் காலிகள்முன்காப்பான் *
குன்றதனால்மழைதடுத்துக் குடமாடுகூத்தன்
 குலவுமிடம்; கொடிமதிள்கள்மாளிகைகோபுரங்கள் *
துன்றுமணிமண்டபங்கள் சாலைகள்தூமறையோர்
 தொக்கீண்டித் ‡ தொழுதியொடுமிகப்பயிலும்சோலை *
அன்றலர்வாய்மதுவுண்டங்களிமுரலுநாங்கூர்
 அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (அ)

வஞ்சனையால்வந்தவள்தானுயிருண்டுவாய்த்த
 தயிருண்டுவெண்ணெயமுதுண்டு * வலிமிக்க
கஞ்சனுயிரதுவுண்டிவ் வுலகுண்டகாளை
 கருதுமிடம்; காவிரிசந்தகில்கனகமுந்தி *
மஞ்சுலவுபொழிலூடும் வயலூடும்வந்து
 வளங்கொடுப்பமாமறையோர் மாமலர்கள்தூவி *
அஞ்சலித்தங்கரிசரணென் றிறைஞ்சுமணிநாங்கூர்
 அரிமேயவிண்ணகரம் வணங்குமடநெஞ்சே. (௯)

‡‡ சென்றுசினவிடையேழும் படவடர்த்துப்பின்னை
 செவ்வித்தோள்புணர்ந்துணர்ந்த திருமால்தன்கோயில் *
அன்றயனுமரன்சேயு மனையவர்கள்நாங்கூர்
 அரிமேயவிண்ணகர மமர்ந்தசெழுங்குன்றை *
கன்றிநெடுவேல்வலவன் மங்கையர்தம்கோமான்
 கலிகன்றியொலிமாலை யைந்தினொடுமூன்றும் *
ஒன்றினொடொன்றுமிவை கற்றுவல்லார்உலகத்
 துத்தமர்கட்குத்தமராயும்பருமாவர்களே. (௧௦)

திரு வென்றி உம்பர் ஒடாத கண்டூ வாள் தீமனம் கன்று வஞ்சனை சென்று போது.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ தொழுதி - ஆரவாரம்.

# நாலாம்பத்து.

## க-வது, போதலர்ந்த.

திருத்தேவனார்தொகைதேவநாயகப்பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

பைரவிராகம்-ஆதிதாளம்.

‡‡ போதலர்ந்தபொழில்சோலைப் புறமெங்கும்பொருதிரைகள் *
தாதுதிரவந்தலைக்கும் தடமண்ணித்தென்கரைமேல் *
மாதவன்றானுறையுமிடம் வயல்நாங்கை * வரிவண்டு
தேதெனவென்றிசைபாடும் திருத்தேவனார்தொகையே. (க)

யாவருமாயாவையுமா யெழில்வேதப்பொருள்களுமாய் *
மூவருமாய்முதலாய மூர்த்தியமர்ந்துறையுமிடம் *
மாவரும்திண்படைமன்னை வென்றிகொள்வார்மன்னுநாங்கை *
தேவரும்சென்றிறைஞ்சுபொழில் திருத்தேவனார்தொகையே. (உ)

வானாடும்மண்ணாடும் மற்றுள்ளபல்லுயிரும் *
தானாயவெம்பெருமான் தலைவனமர்ந்துறையுமிடம் *
† ஆனாதபெருஞ்செல்வத் தருமறையோர்நாங்கைதன்னுள் *
தேனாரும்மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. (ஙு)

இந்திரனுமிமையவரும் முனிவர்களும் ‡ எழிலமைந்த *
சந்தமலர்ச்சதுமுகனும் கதிரவனும்சந்திரனும் *
எந்தையெமக்கருளெனநின் றருளுமிடம்; எழில்நாங்கை *
சுந்தரநல்பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. (ச)

அண்டமுமிவ்வலைகடலு மவனிகளும்குலவரையும் *
உண்டபிரானுறையுமிடம்; ஒளிமணிசந்தகில்கநகம் *
தெண்டிரைகள்வரத்திரட்டும் திகழ்மண்ணித்தென்கரைமேல் *
திண்திறலார்பயில்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (ரு)

ஞாலமெல்லாமமுதுசெய்து நான்மறையும்தொடராத *
பாலகனாயாலிலையில் பள்ளிகொள்ளும்பரமனிடம் *
சாலிவளம்பெருகிவரும் தடமண்ணித்தென்கரைமேல் *
சேலுகளும்வயல்நாங்கைத் திருத்தேவனார்தொகையே. (சு)

ஓடாதவாளரியினுருவாகி யிரணியனை *
வாடாதவள்ளுகிரால் பிளந்தளைந்தமாலதிடம் *
ஏடேறுபெருஞ்செல்வத் தெழில்மறையோர்நாங்கைதன்னுள் *
$ சேடேறுபொழில்தழுவு திருத்தேவனார்தொகையே. (எ)

---

† ஆனாத - அழியாத. ‡ "எழிலமர்ந்த" என்றும் பாடம். $ "சேடேறு மலர்ப்பொழில்சூழ்" என்று பாடாந்தரம்.

¶ வாராருமிளங்கொங்கை மைதிலியைமணம்புணர்வான் *
காரார்திண்சிலையிறுத்த தனிக்காளைகருதுமிடம் *
ஏராரும்பெருஞ்செல்வத் தெழில்மறையோர்நாங்கைதன்னுள் *
சீராரும்மலர்ப்பொழில்சூழ் திருத்தேவனார்தொகையே. (அ)

கும்பமிகுமதயானை பாகனொடும்குலைந்துவீழ *
கொம்பதனைப்பறித்தெறிந்த கூத்தனமர்ந்துறையுமிடம் *
வம்பவிழும்செண்பகத்தின் மணங்கமழும்நாங்கைதன்னுள் *
செம்பொன்மதிள்பொழில்புடைசூழ் திருத்தேவனார்தொகையே. (கூ)

⁂ காரார்ந்ததிருமேனிக் கண்ணனமர்ந்துறையுமிடம் *
சீரார்ந்தபொழில்நாங்கைத் திருத்தேவனார்தொகைமேல் *
கூரார்ந்தவேல்கலியன் கூறுதமிழ்பத்தும்வல்லார்
ஏரார்ந்தவைகுந்தத் திமையவரோடிருப்பாரே. (க0)

போது யாவர் வானுடு இந்திரன் அண்டம் ஞால மோடாத வாரார் கும்பம் காரார் கம்பம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ - வது, கம்பமா.



திருவண்புருஷோத்தமம் புருஷோத்தமப்பிரான்விஷயம்.
கலிவிருத்தம்.
கலியாணிராகம்-ரூபகதாளம்.

⁂ கம்பமாகடலடைத்திலங்கைக்குமன் கதிர்முடியவைபத்தும்
அம்பினலறுத்து - * அரசவன்தம்பிக்களித்தவனுறைகோயில் *
செம்பலாநிரைசெண்பகம்மாதவி சூதகம்வாழைகள்சூழ் *
வம்புலாம்கமுகோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (க)

பல்லவம்திகழ்பூங்கடம்பேறி யக்காளியன்பணவரங்கில் *
ஒல்லைவந்துறப்பாய்ந்தருநடஞ்செய்த வும்பர்கோனுறைகோயில் *
நல்லவெந்தழல்மூன்றுநால்வேத மைவேள்வியோடாறங்கம் *
வல்லவந்தணர்மல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (உ)

அண்டரானவர்வானவர்கோனுக்கென்றமைத்தசோறதுவெல்லாம்
உண்டு*கோநிரைமேய்த்தவைகாத்தவ னுகந்தினிதுறைகோயில் *
கொண்டலார்முழவில்குளிர்வார்பொழில் குலமயில்நடமாட *
வண்டுதானிசைபாடிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. (ஙு)

பருங்கையானையின்கொம்பினைப்பறித்ததன்பாகனைச்சாடிப்புக்கு - *
ஒருங்கமல்லரைக்கொன்று பின்கஞ்சனையுதைத்தவனுறைகோயில் *
† கரும்பினூடியர்சாலிகள்விளைதரு கழனியில்மலிவாவி *
மருங்கெலாம்பொழிலோங்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (ச)

---

¶ "வாராளும்" என்று சிலமூலஸ்ரீகோசங்கள். † "கரும்பினோடு" என்று நஞ்சீயர்படியிற் பாடம்.

சாடுபோய்விழத்தாள்நிமிர்த்தீசன் தன்படையோடும்கிளையோடு
மோட* ‡ வாணனையாயிரந்தோள்களுந்துணித்தவனுறைகோயில் *
ஆடுவான்கொடியகல்விசும்பணவிப்போய்ப்பகலவனொளிமறைக்கும்*
மாடமாளிகைசூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. (ரு)

அங்கைபாலடிமூன்றுநீரேற் றயனலர்கொடுதொழுதேத்த *
கங்கைபோதரக்கால்நிமிர்த்தருளிய கண்ணன்வந்துறைகோயில் *
கொங்கைகோங்கவைகாட்ட,வாய்குமுதங்கள்காட்டமாபதுமங்கள்*
மங்கைமார்முகம்காட்டிடுநாங்கூர் வண்புருடோத்தமமே. (சு)

உளையவொண்டிறல்பொன்பெயரோன்றன துரம்பிளந்துதிரத்தை
யளையும் * வெஞ்சினத்தரிபரிகீறிய வப்பன்வந்துறைகோயில் * [கை
இளையமங்கையரிணையடிச்சிலம்பினொடெழில்கொள்பந்தடிப்போர் *
வளையில்நின்றொலிமல்கியநாங்கூர் வண்புருடோத்தமமே. (எ)

வாளையார்தடங்கணுமைபங்கன் வன்சாபமற்றதுநீங்க *
மூளையார்சிரத்தையமுன்னளித்தவெம்முகில்வண்ணனுறைகோயில் *
பாளைவான்கமுகூடுயர்தெங்கின் வன்பழம்விழவெருவிப்போய் *
வாளைபாய்தடம்சூழ்தருநாங்கூர் வண்புருடோத்தமமே. (அ)

இந்துவார்சடையீசனைப்பயந்த நான்முகனைத், தன்னெழிலாரும் *
உந்திமாமலர்மீமிசைப்படைத்தவ னுகந்தினிதுறைகோயில் *
குந்திவாழையின்கொழுங்கனிநுகர்ந்துதன் குருளையைத்தழுவிப்போய்
மந்திமாம்பணைமேல்வைகுநாங்கூர் வண்புருடோத்தமமே. (கூ)

⁂ மண்ணுளார்புகழ்வேதியர்நாங்கூர் வண்புருடோத்தமத்துள் *
அண்ணல்சேவடிக்கீழடைந்துய்ந்தவ னாலிமனருள்மாரி *
பண்ணுளார்தரப்பாடியபாட லிப்பத்தும்வல்லார் * உலகில்
எண்ணிலாதபேரின்பமுற் றிமையவரோடுங்கூடுவரே. (க0)

கம்பம் பல்லவம் அண்டர் பருங்கைசாடங்கை உளையவாளை இந்துமண்பேரணி.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு - வது, பேரணிந்து.



திருநாங்கூர்செம்பொன்செய் கோயில்பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

பந்துவராளிராகம் - அடதாளம்.

⁂ பேரணிந்துலகத்தவர்தொழுதேத்தும் பேரருளாளனெம்பிரானை*
வாரணிமுலையாள்மலர்மகளோடு,மணமகளுமுடன்நிற்ப *
சீரணிமாடநாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
காரணிமேகம்நின்றதொப்பானைக் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே.

‡ "வாணனாயிரம்தோள்களும்" என்றும்பாடம்.

பிறப்பொடுமூப்பொன்றில்லவன்றன்னைப், பேதியாவின்பவெள்ளத்தை *
இறப்பெதிர்காலக்கழிவுமானானை, எழிசையின்சுவைதன்னை *
சிறப்புடைமறையோர்நாங்கைநன்னடுவுள்செம்பொன்செய்கோயிலினுள்ளே
மறைப்பெரும்பொருளைவானவர்கோனைக்கண்டுநான்வாழ்ந்தொழிந்தேனே()

திடவிசும்பெரிநீர்திங்களும்சுடரும் செழுநிலத்துயிர்களும்மற்றும் *
படர்பொருள்களுமாய்நின்றவன்றன்னை, பங்கயத்தயனவனனைய *
திடமொழிமறையோர்நாங்கைநன்னடுவுள்செம்பொன்செய்கோயிலினுள்ளே
கடல்நிறவண்ணன்றன்னைநாடியேன் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௩)

வசையறுகுறளாய்மாவலிவேள்வியில் மண்ணளவிட்டவன்றன்னை *
அசைவறுமமரரடியிணைவணங்க வலைகடல்துயின்றவம்மானை *
திசைமுகனனையோர்நாங்கைநன்னடுவுள்செம்பொன்செய்கோயிலினுள்ளே *
உயர்மணிமகுடம்சூடிநின்றானைக் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௪)

தீமனத்தரக்கர்திறலழித்தவனேயென்று சென்றடைந்தவர்தமக்கு *
தாய்மனத்திரங்கியருளினைக்கொடுக்கும் தயரதன்மதலையை * ‡ சயமே
தேமலர்ப்பொழில்சூழ்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே
காமனைப்பயந்தான்றன்னைநாடியேன் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (௫)

மல்லைமாமுந்நீரதர்பட மலையாலணைசெய்துமகிழ்ந்தவன்றன்னை *
கல்லின்மீதியன்றகடிமதிளிலங்கைகலங்க வோர்வாளிதொட்டானை *
செல்வநான்மறையோர்நாங்கைநன்னடுவுள்செம்பொன்செய்கோயிலினுள்ளே
அல்லிமாமலராள்தன்னொடுமடியேன் கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. (௬)

வெஞ்சினக்களிறும்வில்லொடுமல்லும் வெகுண்டிறுத்தடர்த்தவன்றன்னை *
கஞ்சனைக்காய்ந்தகாளையம்மானைக் கருமுகில்திருநிறத்தவனை * [ள்ளே
செஞ்சொல்நான்மறையோர்நாங்கைநன்னடுவுள்செம்பொன்செய்கோயிலினு
அஞ்சனக்குன்றம்நின்றதொப்பானைக் கண்டுகொண்டல்லல்தீர்ந்தேனே. (௭)

† அன்றியவாணனாயிரம்தோளும்துணிய வன்றாழிதொட்டானை *
மின்திகழ்குடுமிவேங்கடமலைமேல் மேவியவேதநல்விளக்கை *
தென்திசைத்திலதமனையவர்நாங்கைச் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
மன்றதுபொலியமகிழ்ந்துநின்றானை வணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே. (௮)

களங்கனிவண்ணா! கண்ணனே! என்றன்கார்முகிலேயெனநினைந்திட்டு *
உளங்கனிந்திருக்குமடியவர்தங்க ளுள்ளத்துளூறியதேனை * [ளே *
தெளிந்தநான்மறையோர்நாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்
வளங்கொள்பேரின்பம்மன்னிநின்றானை வணங்கிநான்வாழ்ந்தொழிந்தேனே.

‡‡தேனமர்சோலைநாங்கைநன்னடுவுள் செம்பொன்செய்கோயிலினுள்ளே *
வானவர்கோனைக்கண்டமைசொல்லும் மங்கையார்வாள்கலிகன்றி *
ஊனமில்பாடலொன்பதோடொன்று மொழிவின்றிக்கற்றுவல்லார்கள் *
மானவெண்குடைக்கீழ்வையகமாண்டு வானவராகுவர்மகிழ்ந்தே. (௧௦)

பேரணி பிறப்புத் திட வசை தீ மல்லை வெஞ்சினம் அன்றிய களங்கனி தேனமர் மாற்று.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச - வது; மாற்றரசர்.

திருநாங்கூர் திருத்தெற்றியம்பலப் பெருமாள்விஷயம்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம்-ரூபகதாளம்.

⁂ மாற்றரசர்மணிமுடியும் திறலும்தேசும்
மற்றவர்தம்காதலிமார் குழையும் * தந்தை
கால்தளையுமுடன்கழல வந்துதோன்றிக்
கதநாகம்காத்தளித்த கண்ணர்கண்டீர்*
நூற்றிதழ்க்கொளரவிந்தம் நுழைந்தபள்ளத்
திளங்கமுகின்முதுபாளை பகுவாய்நண்டின் *
சேற்றளையில்வெண்முத்தம் சிந்துநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (க)

பொற்றொடித்தோள்மடமகள்தன் வடிவுகொண்ட
பொல்லாதவன்பேச்சி கொங்கைவாங்கி *
பெற்றெடுத்ததாய்போல மடுப்பஆரும்
பேணாநஞ்சுண்டுகந்த பிள்ளைகண்டீர் *
நெல்தொடுத்தமலர்நீலம் நிறைந்தசூழல்
இருஞ்சிறையவண்டொலியும், நெடுங்கணார்தம் *
சிற்றடிமேல்சிலம்பொலியும் மிழற்றுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (உ)

படலடைத்தசிறுகுரம்பை நுழைந்துபுக்குப்
பசுவெண்ணெய்பதமாரப் பண்ணைமுற்றும் *
அடலடர்த்தவேற்கணார் * தோக்கைபற்றி
அலைந்தலைமைசெய்துழலு மையன்கண்டீர் *
மடலெடுத்தநெடுந்தெங்கின் பழுங்கள்வீழ
மாங்கனிகள்திரட்டுருட்டா வருநீர்ப்பொன்னி*
† திடலெடுத்துமலர்சுமந்தங் கிழியுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (ங)

வாராரும்முலைமடவாள் பின்னைக்காகி
வளைமருப்பில்கடுஞ்சினத்து வன்தாளார்ந்த *
காரார்திண்விடையடர்த்து வதுவையாண்ட
கருமுகில்போல்திருநிறத்தென் கண்ணர்கண்டீர் *
ஏராரும்மலர்ப்பொழில்கள் தழுவியெங்கும்
எழில்மதியைக்கால்தொடர * விளங்குசோதிச்
சீராருமணிமாடம் திகழுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (ச)

† "திடலொடுத்து" என்றும் பாடம்.

கலையிலங்குமகலல்குல் கமலப்பாவை
கதிர்முத்தவெண்ணகையாள் கருங்கணாய்ச்சி *
முலையிலங்குமொளிமணிப்பூண் வடமும்தேய்ப்ப
மூவாதவரைநெடுந்தோள் மூர்த்திகண்டீர்
மலையிலங்குநிரைச்சந்திமாடவீதி
ஆடவரைமடமொழியார்முகத்து - * இரண்டு
சிலைவிலங்கிமனஞ்சிறைகொண் டிருக்குநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (ரு)

தான்போலுமென்றெழுந்தான் தரணியாளன்
அதுகண்டுதரித்திருப்பா னரக்கர்தங்கள் *
கோன்போலுமேன்றெழுந்தான் குன்றமன்ன
இருபதுதோளுடன்துணித்த வொருவன்கண்டீர் *
மான்போலுமென்னோக்கிற் செய்யவாயார்
மரதகம்போல்மடக்கிளியைக் கைமேல்கொண்டு *
தேன்போலும்மென்மழலை பயிற்றுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (சா)

பொங்கிலங்குபுரிநூலும் தோலும்தாழப்
பொல்லாதகுறளுருவாய்ப் பொருந்தாவாணன் *
மங்கலம்சேர்மறைவேள்வி யதனுள்புக்கு
மண்ணகலக்குறையிரந்த மைந்தன்கண்டீர் *
கொங்கலர்ந்தமலர்க்குழலார் கொங்கைதோய்ந்த
குங்குமத்தின்குழம்பளைந்த கோலந்தன்னால் *
செங்கலங்கல்வெண்மணல்மேல் தவழுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (எ)

சிலம்பினிடைச்சிறுபரல்போல் பெரியமேரு
திருக்குளம்பில்கணகணப்பத் திருவாகாரம்
குலுங்க * நிலமடந்தைதனை யிடந்துபுல்கிக்
கோட்டிடைவைத்தருளியவெங் கோமான்கண்டீர் *
இலங்கியநான்மறையனைத்து மங்கமாறும்
ஏழிசையும்கேள்விகளு மெண்டிக்கெங்கும் *
சிலம்பியநற்பெருஞ்செல்வம் திகழுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (அ)

ஏழுலகும்தாழ்வரையுமெங்குமூடி
யெண்டிசையும்மண்டலமும் மண்டி * அண்டம்
மேழையெழுந்தாழிமிகு மூழிவெள்ளம்
முன்னகட்டிலொடுக்கியவெம் மூர்த்திகண்டீர் *

ஊழிதொறூழிதொரு முயர்ந்தசெல்வத்
தோங்கியநான்மறையனைத்தும் தாங்குநாவர் *
சேழுயர்ந்தமணிமாடம் திகழுநாங்கூர்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலே. (கூ)

⁂ சீரணிந்தமணிமாடம் திகழுநாங்கூர்த்
திருத்தெற்றியம்பலத்தென் செங்கண்மாலை *
கூரணிந்தவேல்வலவ னாலிநாடன்
கொடிமாடமங்கையர்கோன் குறையலாளி *
பாரணிந்ததொல்புகழான் கலியன்சொன்ன
பாமாலையிவையைந்து மைந்தும்வல்லார் *
சீரணிந்தவுலகத்து மன்னராகிச்
சேண்விசும்பில்வானவராய்த் திகழ்வர்தாமே. (கo)

மாற்றுப் பொற்படல் வாரார் கலை தான் பொங்கு சிலம்பேழ் சீரணி தூம்பு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ரு-வது, தூம்புடை.

திருமணிக்கூடப்பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

பிலஹரிராகம்-அதிதாளம்.

⁂ தூம்புடைப் † பனைக்கைவேழம் துயர்கெடுத்தருளி *மன்னு
காம்புடைக்குன்றமேந்திக் கடுமழைகாத்தவெந்தை *
பூம்புனல்பொன்னி † முற்றும்புகுந்துபொன்வரண்ட*எங்கும்
தேம்பொழில்கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (க)

கவ்வைவாளெயிற்றுவன்பேய்க் கதிர்முலைசுவைத்து - * இலங்கை
‡ வவ்வியவிடும்பைகூரக் கடுங்கணைதுரந்தவெந்தை *
கொவ்வைவாய்மகளிர்கொங்கைக் குங்குமங்கழுவிப்போந்த*
தெய்வநீர்கமழுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (உ)

மாத்தொழில்மடங்கச்செற்று மருதிறநடந்து * வன்தாள்
சேத்தொழில்சிதைத்துப்பின்னை செவ்வித்தோள்புணர்ந்தவெந்தை
நாத்தொழில்மறைவல்லார்கள் நயந்தறம்பறந்த * வண்கைத்
தீத்தொழில்பயிலுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (ங)

தாங்கரும்சினத்துவன்தாள் தடக்கைமாமருப்புவாங்கி *
பூங்குருந்தொசித்துப்புள்வாய் பிளந்தெருதடர்த்தவெந்தை *
மாங்கனிநுகர்ந்தமந்தி வந்துவண்டிரிய * வாழைத்
தீங்கனிநுகருநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (ச)

† "பனைக்கைவேழம்" என்றும், "முற்றும்புகுந்து" என்றும்பாடாந்தரம்.
‡ "இலங்கைமன்னியவிடும்பைதீர" "மன்னியவிடும்பைகூர" "வவ்வியவிடும்பைதீர" என்று பாடாந்தரம்,

கருமகளிலங்கையாட்டி பிலங்கொள்வாய்திறந்து * தன்மேல்
வருமவள்செவியும்மூக்கும் வாளினால்தடிந்தவெந்தை *
பெருமகள்பேதைமங்கை தன்னொடும்பிரிவிலாத *
திருமகள்மருவுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (ரு)

கெண்டையும்குறளும்புள்ளும் கேழலுமரியும்மாவும் *
அண்டமும்சுடருமல்லா வாற்றலுமாயவெந்தை *
ஒண்டிறல்தென்னனோட வடவரசோட்டங்கண்ட *
திண்டிறலாளர்நாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௬)

குன்றமும்வானும்மண்ணும் குளிர்புனல்திங்களோடு *
நின்றவெஞ்சுடருமல்லா நிலைகளுமாயவெந்தை *
மன்றமும்வயலும்காவும் மாடமும்மணங்கொண்டு- * எங்கும்
தென்றல்வந்துலவுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (எ)

சங்கையும்துணிவும்பொய்யும் மெய்யும்இத்தரணியோம்பும் *
பொங்கியமுகிலும்அல்லாப் பொருள்களுமாயவெந்தை *
பங்கயமுகுத்ததேறல் பருகியவாளைபாய *
செங்கயலுகளுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (அ)

பாவமுமறமும்வீடு மின்பமுந்துன்பந்தானும் *
கோவமுமருளுமல்லாக் குணங்களுமாயவெந்தை *
மூவரிலெங்கள்மூர்த்தி யிவனெனமுனிவரோடு *
தேவர்வந்திறைஞ்சுநாங்கூர்த் திருமணிக்கூடத்தானே. (௯)

✤ திங்கள்தோய்மாடநாங்கூர்த் திருமணிக்கூடத்தானை *
மங்கையர்தலைவன்வண்டார் கலியன்வாயொலிகள்வல்லார் *
பொங்குநீருலகமாண்டு பொன்னுலகாண்டு * பின்னும்
வெங்கதிர்ப்பருதிவட்டத் தூடுபோய்விளங்குவாரே. (௧0)

தூம்பு கவ்வை மா தாங்கரும் கெண்டை குன்றம் சங்கை பாவம் திங்கள்தாவளந்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௬-வது, தாவளந்து.



### திருக்காவளம்பாடி கோபாலஸ்வாமிவிஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

**மத்தியமாவதிராகம்-ரூபகதாளம்.**

✤ தாவளந்துலகமுற்றும் தடமலர்ப்பொய்கைபுக்கு *
நாவளநவின்றங்கேத்த நாகத்தின்நடுக்கந்தீர்த்தாய் *
மாவளம்பெருகிமன்னு மறையவர்வாழும் * நாங்கைக்
காவளம்பாடிமேய கண்ணனேகளைகண்நீயே. (௧)

மண்ணிடந்தேனமாகி மாவலிவலிதொலைப்பான் *
விண்ணவர்வேண்டச்சென்று வேள்வியில்குறையிரந்தாய் *
துண்ணெனமாற்றார்தம்மைத் துலைத்தவர்நாங்கைமேய *
கண்ணனே ‡ காவளந்தண்பாடியாய்களைகணீயே. (உ)

உருத்தெழுவாலிமார்வி லொருகணையுருவவோட்டி *
கருத்துடைத்தம்பிக்கின்பக் கதிர்முடியரசளித்தாய் *
பருத்தெழுபலவும்மாவும் பழம்விழுந்தொழுகும் * நாங்கைக்
கருத்தனே காவளந்தண்பாடியாய்களைகணீயே. (௩)

மூனைமுகத்தரக்கன்மாள முடிகள்பத்தறுத்துவீழ்த்து - * ஆங்
கனையவற்கிளையவற்கே யரசளித்தருளினானே *
சுனைகளில்கயல்கள்பாயச் சுரும்புதேன்நுகருநாங்கை *
கனைகழல்காவளந்தண்பாடியாய் களைகணீயே. (௪)

படவரவுச்சிதன்மேல் பாய்ந்துபன்னடங்கள்செய்து*
மடவரல்மங்கைதன்னை மார்வகத்திருத்தினானே *
தடவரைதங்குமாடத்தகுபுகழ்நாங்கைமேய *
கடவுளே காவளந்தண்பாடியாய் களைகணீயே. (ரு)

மல்லரையட்டுமாளக் கஞ்சனைமலைந்துகொன்று *
பல்லரசவிந்துவீழப் பாரதப்போர்முடித்தாய் *
நல்லரண்காவின்நீழல் நறைகமழ்நாங்கைமேய *
கல்லரண்காவளந்தண்பாடியாய் களைகணீயே. (சு)

மூத்தவற்கரசுவேண்டி முன்புதூதெழுந்தருளி *
† மாத்தமர்பாகன்வீழ மதகரிமருப்பொசித்தாய் *
பூத்தமர்சோலையோங்கிப் புனல்பரந்தொழுகும் * நாங்கைக்
காத்தனே காவளந்தண்பாடியாய் களைகணீயே. (எ)

ஏவிளங்கன்னிக்காகி யிமையவர்கோனைச்செற்று *
காவளம்கடிதிறுத்துக் கற்பகம்கொண்டுபோந்தாய் *
பூவளம்பொழில்கள்சூழ்ந்த $ புரந்தரன்செய்தநாங்கை *
காவளம்பாடிமேய கண்ணனேகளைகணீயே. (அ)

சந்தமாய்ச்சமயமாகிச் சமயவைம்பூதமாகி *
அந்தமாயாதியாகி யருமறையவையுமானாய் *
மந்தமார்பொழில்கடோறும் மடமயிலாலுநாங்கை *
கந்தமார்காவளந்தண்பாடியாய் களைகணீயே. (கூ)

---

‡ "காவளந்தன்பாடியாய்" என்று சிலமூல ஸ்ரீகோசங்கள். † "மா" என்று - ஆனையாய், "அத்து-" ஸப்தம்யர்த்தத்திலேயாய், ஆனையிலமர்ந்த பாகனென்றபடி. $ புரந்தரன் - இந்த்ரன்.

⁂ மாவளம்பெருகிமன்னு மறையவர்வாழும் * நாங்கைக்
காவளம்பாடிமேய கண்ணனைக்கலியன்சொன்ன *
பாவளம்பத்தும்வல்லார் பார்மிசையரசராகி *
கோவிளமன்னர்தாழக் குடைநிழல்பொலிவர்தாமே. (௧0)

தாவளந்து மண் உரு முனை படமல்லர்மூத்து ஏவிளம்சந்தம் மாவளம்கண்ணூர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௭-வது, கண்ணார்கடல்.



திருவெள்ளக்குளம் கண்ணன்விஷயம்.

கலிவிருத்தம்.

தேசியராகம்-ஆதிதாளம்.

⁂ கண்ணார்கடல்போல் திருமேனிகரியாய் *
நண்ணார்முனை வென்றிகொள்வார்மன்னுநாங்கூர் *
திண்ணார்மதிள்சூழ் திருவெள்ளக்குளத்துள்
அண்ணா * அடியேனிடரைக்களையாயே. (௧)
கொந்தார்துளவமலர் கொண்டணிவானே *
நந்தாதபெரும்புகழ் வேதியர்நாங்கூர் *
செந்தாமரைநீர்த் திருவெள்ளக்குளத்துள்
எந்தாய் * அடியேனிடரைக்களையாயே. (௨)
குன்றால்குளிர்மாரிதடுத்துகந்தானே *
நன்றாயபெரும்புகழ்வேதியர்நாங்கூர் *
சென்றார்வணங்கும் திருவெள்ளக்குளத்துள்
நின்றாய் * நெடியாயடியேனிடர்நீக்கே. (௩)
கானார்கரிகொம்பதொசித்தகளிறே *
நானாவகைநல்லவர்மன்னியநாங்கூர் *
தேனார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்து
ளானாய் * அடியேனுக்கருள்புரியாயே. (௪)
⁂ வேடார்திருவேங்கடம்மேயவிளக்கே *
நாடார்புகழ்வேதியர் மன்னியநாங்கூர் *
சேடார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்தாய் *
பாடாவருவேன் வினையாயினபாற்றே. (௫)
கல்லால்கடலையணைகட்டியுகந்தாய் *
நல்லார்பலர்வேதியர் மன்னியநாங்கூர்ச் *
செல்வா, திருவெள்ளக்குளத்துறைவானே *
எல்லாவிடரும்கெடுமாறருளாயே. (௬)
கோலால்நிரைமேய்த்தவெங்கோவலர்கோவே *
நாலாகியவேதியர் மன்னியநாங்கூர் *
சேலார்வயல்சூழ் திருவெள்ளக்குளத்துள்
மாலே * எனவல்வினைதீர்த்தருளாயே. (௭)

வாராகமதாகி யிம்மண்ணையிடந்தாய் *
நாராயணனே நல்லவேதியர்நாங்கூர் *
சீரார்பொழில்சூழ் திருவெள்ளக்குளத்துள்
ஆராவமுதே * அடியேற்கருளாயே. (அ)
பூவார்திருமாமகள் புல்கியமார்பா *
நாவார்புகழ்வேதியர் மன்னியநாங்கூர்த் *
தேவா, திருவெள்ளக்குளத்துறைவானே *
ஆவாஅடியானிவனென்றருளாயே. (கூ)
‡‡ நல்லன்புடைவேதியர் மன்னியநாங்கூர் *
செல்வன்திருவெள்ளக்குளத்துறைவானை *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை *
வல்லரெனவல்லவர் வானவர்தாமே. (க0)

கண் கொந்து குன்று கான் வேடு கல் கோல் வாராகம் பூவார் நல்லன்பு கவளம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, கவளயானை.



திருப்பார்த்தன்பள்ளி தாமரையாள்கேள்வன்விஷயம்.

தாயார்பாசுரம்.

கலிவிருத்தம்.

தந்யாசிராகம்-அடதாளம்.

‡‡ கவளயானைகொம்பொசித்தகண்ணனென்றும் * காமருசீர்க்
குவளைமேகமன்னமேனி கொண்டகோனென்னானையென்றும் *
தவளமாடநீடுநாங்கைத் தாமரையாள்கேள்வனென்றும் *
பவளவாயாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (க)
கஞ்சன்விட்டவெஞ்சினத்த களிறடர்த்தகாளையென்றும் *
வஞ்சமேவிவந்தபேயி னுயிரையுண்டமாயனென்றும் *
செஞ்சொலாளர்நீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி*
பஞ்சியன்னமெல்லடியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (உ)
அண்டர்கோனென்னானையென்றும் ஆயர்மாதர்கொங்கைபுல்கு
‡ செண்டனென்றும்*நான்மறைகள் தேடியோடும்செல்வனென்றும் *
வண்டுலவுபொழில்கொள்நாங்கை மன்னுமாயனென்றென்றோதி *
பண்டுபோலென்றென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (ங)
கொல்லையானாள் பரிசழிந்தாள் கோல்வளையார்தம்முகப்பே *
மல்லைமுந்நீர்தட்டிலங்கை கட்டழித்தமாயனென்றும் *
செல்வம்மல்குமறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பல்வளையாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (ச)

---

‡ செண்டன் - ஸ்பாவன்.

அரக்கராவிமாள அன்றாழ்கடல்சூழிலங்கைசெற்ற *
குரக்கரசனென்றும் கோலவில்லியென்றும் * மாமதியை
நெருக்குமாடநீடுநாங்கை நின்மலனென்றென்றோதி *
பரக்கழிந்தாளென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௫)

ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்தநாதனென்றும் * ‡ நானிலஞ்சூழ்
வேலையன்னகோலமேனிவண்ணனென்றும் * மேலெழுந்து
சேலுகளும்வயல்கொள்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பாலின்நல்லமென்மொழியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௬)

நாடியென்றனுள்ளங்கொண்டநாதனென்றும் * நான்மறைகள்
தேடியென்றுங்காணமாட்டாச் செல்வனென்றும்*சிறைகொள்வண்டு
சேடுலவுபொழில்கண்நாங்கைத்தேவதேவனென்றென்றோதி *
பாடகம்சேர்மெல்லடியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௭)

உலகமேத்துமொருவனென்றும், ஒண்சுடரோடும்பரெய்தா *
நிலவுமாழிப்படையனென்றும் நேசனென்றும் * தென்திசைக்குத்
திலதமன்னமறையோர்நாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பலருமேசவென்மடந்தை பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௮)

கண்ணனென்றும், வானவர்கள்காதலித்துமலர்கள் தூவும் *
எண்ணனென்றுமின்பனென்று மேழுலகுக்காதியென்றும் *
திண்ணமாடநீடுநாங்கைத் தேவதேவனென்றென்றோதி *
பண்ணினன்னமென்மொழியாள் பார்த்தன்பள்ளிபாடுவாளே. (௯)

⁂ பாருள்நல்லமறையோர்நாங்கைப்பார்த்தன்பள்ளிச்செங்கண்மாலை
வார்கொள்நல்லமுலைமடவாள்பாடலைத் தாய்மொழிந்தமாற்றம் *
கூர்கொள்நல்லவேல்கலியன் கூறுதமிழ்பத்தும்வல்லார் *
ஏர்கொள்நல்லவைகுந்தத்து ளின்பநாளுமெய்துவாரே. (௧0)

கவளக்கஞ்ச னண்டர்கொல்லை அரக்கர்ஞாலம் நாடிஉலகம் கண்ணன் பாருள் நும்மை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



**௯-வது, நும்மை.**



திருவிந்தளூர் பரிமளரங்கன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**கேதாரராகம்-ரூபகதாளம்.**

⁂ நும்மைத்தொழுதோம் நுந்தம்பணிசெய்திருக்கும்நும்மடியோம்*
இம்மைக்கின்பம்பெற்றோ மெந்தாயிந்தளூரீரே
எம்மைக்கடிதாக்கருமமருளி ஆவாவென்றிரங்கி *
நம்மையொருகால்காட்டிநடந்தால் நாங்களுய்யோமே. (௧)

‡ நால் நிலம் - நெய்தல், மருதம், முல்லை, குறிஞ்சி.

‡ சிந்தைதன்னுள்நீங்காதிருந்ததிருவே ! மருவினிய
மைந்தா ! * அந்தணாலிமாலே ! சோலைமழகளிறே *
நந்தாவிளக்கின்சுடரே ! நறையூர்நின்றநம்பீ * என்
எந்தா யிந்தளூரா யடியேற்கிறையுமிரங்காயே. (௨)

பேசுகின்றதிதுவே வையமீரடியாலளந்த *
† மூசிவண்டுமுரலும்கண்ணிமுடியீர் * உம்மைக்காணும்
ஆசையென்னும்கடலில்வீழ்ந்திங்கயர்த்தோம் * அயலாரும்
ஏசுகின்றதிதுவேகாணு மிந்தளூரீரோ. (௩)

ஆசைவழுவாதேத்துமெமக்கிங்கிழுக்காய்த்து - * அடியோர்க்குத்
தேசமறியவுமக்கேயாளாய்த்திரிகின்றோமுக்கு *
காசினொளியில்திகழும்வண்ணம்காட்டீர் * எம்பெருமான்
வாசிவல்லீரிந்தளூரீர் ! வாழ்ந்தேபோம்நீரே. (௪)

தீயெம்பெருமான் நீரெம்பெருமான் திசையுமிருநிலனு
மாய் * எம்பெருமானாகிநின்றா லடியோம்காணோமால் *
தாயெம்பெருமான் தந்தைதந்தையாவீர் * அடியோமுக்
கேயெம்பெருமானல்லீரோநீ ரிந்தளூரீரோ. (௫)

சொல்லாதொழியகில்லேன், அறிந்தசொல்லில் * ‡ நும்மடியார்
எல்லாரோடுமொக்க வெண்ணியிருத்தீரடியேனை*
நல்லாரறிவீர், தீயாரறிவீர் நமக்கிவ்வுலகத்து - ¶ *
எல்லாமறிவீரீதேயறிவீ ரிந்தளூரீரோ. (௬)

மாட்டீரானீர்பணிநீர்கொள்ள எம்மைப்பணியறியா
வீட்டீர் * இதனைவேறேசொன்னோ மிந்தளூரீரோ *
காட்டீரானீர் நுந்தமடிக்கள், காட்டில் * உமக்கிந்த
நாட்டேவந்துதொண்டரான நாங்களுய்யோமே. (௭)

முன்னைவண்ணம்பாலின்வண்ணம் முழுதும்நிலைநின்ற*
பின்னைவண்ணம்கொண்டல்வண்ணம் வண்ணமெண்ணுங்கால் *
பொன்னின்வண்ணம்மணியின்வண்ணம் புரையும்திருமேனி
இன்னவண்ணமென்றுகாட்டீ ரிந்தளூரீரே. (௮)

எந்தைதந்தைதம்மானென் றென்றெமரேழளவும் § *
வந்துநின்றதொண்டரோர்க்கே வாசிவல்லீரால் *
சிந்தைதன்னுள்முந்திநிற்றிர், சிறிதும்திருமேனி *
இந்தவண்ணமென்றுகாட்டீ ரிந்தளூரீரே. (௯)

† மூசுகை - மொய்க்கை. ‡ "உம்மடியார்" என்றும் பாடம். ¶ "உலகத்தில்" என்றும்பாடம். § "தம்மானென்றெமரேழேழளவும்" என்றும்பாடம்.

⁂ ஏரார்பொழில்சூழ்ந்தளூரி லெந்தைபெருமானை *
காரார்புறவில்மங்கைவேந்தன் கலியனொலிசெய்த *
சீராரின்சொல்மாலைகற்றுத் திரிவாருலகத்து - *
ஆராரவரேயமரர்க்கென்று மமரராவாரே. (௧௦)

நம் சிந்தை பேசு ஆசை தீச் சொல்லா மாட்டீர் முன் எந்தை ஏரார் ஆய்ச்சியர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௧௦-வது, ஆய்ச்சியர்.



திருவெள்ளியங்குடி கோலவில்லிராமன்விஷயம்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**மோஹனராகம்-அடதாளம்.**

⁂ ஆய்ச்சியரழைப்பவெண்ணெயுண்டொருகாலாலிலைவளர்ந்தவெம்பெருமான் *
பேய்ச்சியைமுலையுண்டிணைமருதிறுத்துப்பெருநிலமளந்தவன்கோயில் *
காய்த்தநீள்கமுகும்கதலியும்தெங்கு மெங்குமாம்பொழில்களினடுவே *
வாய்த்தநீர்பாயும்மண்ணியின்தென்பால் திருவெள்ளியங்குடியதுவே. (௧)

ஆநிரைமேய்த்தன் றலைகடலடைத்திட் டரக்கர்தம்சிரங்களையுருட்டி*
கார்நிறைமேகம்கலந்ததோருருவக் கண்ணனூர்கருதியகோயில் *
பூநிரைச்செருந்திபுன்னைமுத்தரும்பிப்பொதும்பிடைவரிவண்டுமிண்டி
தேனிரைத்துண்டங்கின்னிசைமுரலும் திருவெள்ளியங்குடியதுவே.

கடுவிடமுடையகாளியன்தடத்தைக்கலக்கிமுன்னலக்கழித்து- *அவ
ன்றன்,படமிறப்பாய்ந்துபன்மணிசிந்தப்பல்நடம்பயின்றவன்கோயில்
படவரவல்குல்பாவைநல்லார்கள் பயிற்றியநாடகத்தொலிபோய் *
† அடைபுடைதழுவியண்டநின்றதிரும் திருவெள்ளியங்குடியதுவே.

கறவைமுன்காத்துக்கஞ்சனைக்காய்ந்த காளமேகத்திருவுருவன் *
பறவைமுன்னுயர்த்துப்பாற்கடல்துயின்ற பரமனூர்பள்ளிகொள்கோயில் *
துறைதுறைதோறும்பொன்மணிசிதறும்தொகுதிரைமண்ணியின்தென்பால்
செறிமணிமாடக்கொடிகதிரணவும் திருவெள்ளியங்குடியதுவே. (௪)

பாரினையுண்டுபாரினையுமிழ்ந்து பாரதம்கையெறிந்து - * ஒருகால்
தேரினையூர்ந்துதேரினைத்துரந்த செங்கண்மால்சென்றுறைகோயில் *
ஏர்நிரைவயலுள்வாளைகள்மறுகி யெமக்கிடமன்றிதென்றெண்ணி *
சீர்மலிபொய்கைசென்றணைகின்ற திருவெள்ளியங்குடியதுவே. (௫)

காற்றிடைப்‡பூளைகரந்தனவரந்தையுறக் கடலரக்கர்தம்சேனை *
கூற்றிடைச்செல்லக்கொடுங்கணைதுரந்தகோலவில்லிராமன்றன்கோயில் *
ஊற்றிடைநின்றவாழையின்கனிகளூழ்த்துவீழ்ந்தனவுண்டுமண்டி *
சேற்றிடைக்கயல்களுகள்திகழ்வயல்சூழ் திருவெள்ளியங்குடியதுவே.

† அடைபுடை; அஹோராத்ரம், ‡ பூளை - ஓர்வகைப்பூண்டு.

ஒள்ளியகருமம்செய்வனென்றுணர்ந்த † மாவலிவேள்வியில்புக்கு *
தெள்ளியகுறளாய்மூவடிகொண்டு திக்குறவளர்ந்தவன்கோயில் *
அள்ளியம்பொழில்வாயிருந்துவாழ்குயில்க ளரியரியென்றவையழைப்ப *
‡ வெள்ளியார்வணங்கவிரைந்தருள்செய்வான் திருவெள்ளியங்குடியதுவே. ()

முடியுடையமரர்க்கிடர்செய்யுமசுரர்தம்பெருமானை * அன்றரியாய்
மடியிடைவைத்து$மார்வைமுன்கீண்டமாயனூர்மன்னியகோயில் *
படியிடைமாடத்தடியிடைத்தூணில் பதித்தபன்மணிகளினொளியால் *
விடிபகலிரவென்றறிவரிதாய திருவெள்ளியங்குடியதுவே. (அ)

குடிகுடியாகக்கூடிநின்றமரர் குணங்களேபிதற்றிநின்றேத்த *
அடியவர்க்கருளியரவணைத்துயின்ற வாழியானமர்ந்துறைகோயில் *
கடியுடைக்கமலமடியிடைமலரக் கரும்பொடுபெருஞ்செந்நெலசைய *
வடிவுடையன்னம்பெடையொடுஞ்சேரும் வயல்வெள்ளியங்குடியதுவே. (கூ)

⁂பண்டுமுனேனமாகியன்றொருகால் பாரிடந்தெயிற்றினில்கொண்டு *
தெண்டிரைவருடப்பாற்கடல்துயின்றதிருவெள்ளியங்குடியானை *
வண்டறைசோலைமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
கொண்டிவைபாடுந்தவமுடையார்க ளாள்வரிக்குரைகடலுலகே. ()

ஆய்ச்சி ஆநிரை கடுக் கறவை பார் காற்று ஒள்ளிய முடி குடி பண்டு அறிவது.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

# அஞ்சாம்பத்து.

## க-வது, அறிவது.

திருப்புள்ளம்பூதங்குடி வல்விலிராமன்விஷயம்.

அறிவதற்கு துர்லபனான வாமனன்வாஸஸ்தாநம்புள்ளம்
பூதங்குடி யென்கிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**பந்துவராளிராகம்-ரூபகதாளம்.**

⁂ அறிவதரியானனைத்துலகுமுடையா னென்னையாளுடையான் *
§ குறியமாணுருவாகிய கூத்தன்மன்னியமருமிடம் *
நறியமலர்மேல்சுரும்பார்க்க எழிலார்மஞ்ஞைநடமாட *
பொறிகொள்சிறைவண்டிசைபாடும் புள்ளம்பூதங்குடிதானே. (க)

கள்ளக்குறளாய்மாவலியைவஞ்சித் துலகம்கைப்படுத்து *
பொள்ளைக்கரத்தபோதகத்தின் துன்பம்தவிர்த்தபுனிதனிடம் *
பள்ளச்செறுவில்கயலுகளப் பழனக்கழனியதனுள்போய் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடும் புள்ளம்பூதங்குடிதானே. (உ)

---

† "உணர்ந்து" என்றுபாடாந்தரம். ‡ வெள்ளியார் - சுக்ரன்; ருத்ரனுமாம். $ "மார்வம்" என்றும் பாடம். § "குறியமாணியுருவாய்" என்றும் பாடம்.

மேவாவரக்கர்தென்னிலங்கை வேந்தன்வீயச்சரம்துரந்து *
மாவாய்பிளந்துமல்லடர்த்து மருதம்சாய்த்தமாலதிடம் *
காவார்தெங்கின்பழம்வீழக் கயல்கள்பாயக்குருகிரியும் *
பூவார்கழனியெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (௩)

வெற்பால்மாரிபழுதாக்கி விறல்வாளரக்கர்தலைவன்றன் *
† வற்பார்திரடோள்ஐநான்கும் துணித்தவல்விலிராமனிடம் *
‡ கற்பார்புரிசைசெய்குன்றம் கவினார்கூடம்மாளிகைகள் *
பொற்பார்மாடமெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (௪)

மையார்தடங்கண்கருங்கூந்த லாய்ச்சிமறையவைத்ததயிர் *
நெய்யார்பாலோடமுதுசெய்த நேமியங்கைமாயனிடம் *
செய்யார் § ஆரலிரைகருதிச் செங்கால்நாரைசென்றணையும் *
பொய்யாநாவில்மறையாளர் புள்ளம்பூதங்குடிதானே. (௫)

மின்னினன்னநுண்மருங்குல் வேயேய்தடந்தோள்மெல்லியற்கா *
மன்னுசினத்தமழவிடைகளேழன்றடர்த்தமாலதிடம் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல்வரிவண்டிசைபாட *
புன்னைபொன்னேய்தாதுதிர்க்கும் புள்ளம்பூதங்குடிதானே. (௬)

குடையாவிலங்கல்கொண்டேந்தி மாரிபழுதாநிரைகாத்து *
சடையானோடவடல்வாணன் தடந்தோள்துணித்ததலைவனிடம் *
குடியாவண்டுகள்ளுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும் *
புடையார்கழனியெழிலாரும் புள்ளம்பூதங்குடிதானே. (௭)

கறையார்நெடுவேல்மறமன்னர் வீயவிசயன்தேர்கடவி *
இறையான்கையில்நிறையாத முண்டம்நிறைத்தவெந்தையிடம் *
மறையால்முத்தீயவைவளர்க்கும் மன்னுபுகழால்வண்மையால் *
பொறையால்மிக்கவந்தணர்வாழ் புள்ளம்பூதங்குடிதானே. (௮)

துன்னிமன்னும்விண்ணொடும் தோன்றுதிருளாய்மூடியநாள் *
அன்னமாகியருமறைகளருளிச்செய்தவமலனிடம் *
மின்னுசோதிநவமணியும் வேயின்முத்தும்சாமரையும் *
பொன்னும்பொன்னிகொணர்ந்தலைக்கும் புள்ளம்பூதங்குடிதானே. ()

‡‡ கற்றுமறித்துக்காளியன்றன் சென்னிநடுங்கநடம்பயின்ற *
பொற்றாமரையாள்தன்கேள்வன் புள்ளம்பூதங்குடிதன்மேல் *
கற்றார்பரவும்மங்கையர்கோன் காரார்புயற்கைக்கலிகன்றி *
சொல்தானீரைந்திவைபாடச் சோரநில்லாதுயர்தானே. (௧௦)

அறிவது கள்ளம் மேவா வெற்பால் மையார் மின்னின் குடை கறை துன்னி கற்று தாம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† வற்பு வலி. ‡ கற்பு - அழகு, தொழில். § ஆரல் - ஓர்வகைமீன்.

## உ-வது, தாந்தம்.



திருக்கடலூர் வையங்காத்தபெருமாள்விஷயம்.

ஆஶ்ரிதபரதந்த்ரனாய் மகாராஜாவான க்ருஷ்ணனூர்போலே நிரதிஶயபோக்யமாயிருந்தது கூடலூரென்கிற திவ்யதேஶமென்று அத்தை யநுபவிக்கிறார்.

கலிவிருத்தம்.

**அபநபராகம்-ஆதிதாளம்.**

‡‡ தாம்தம்பெருமையறியார் * தூது
வேந்தர்க்காய வேந்தரூர்போல் *
¶ காந்தள்விரல் மென்கலைநன்மடவார் *
கூந்தல்கமழும் கூடலூரே. (க)

செறும் † திண்டிமிலேறுடைய * பின்னை
பெறும்தண்கோலம் பெற்றாரூர்போல் *
நறுஞ் § தண்டீன்தேனுண்டவண்டு *
குறிஞ்சிபாடும் கூடலூரே. (உ)

பிள்ளையுருவாய்த் தயிருண்டு - * அடியே
னுள்ளம்புகுந்த வொருவரூர்போல் *
கள்ளநாரைவயலுள் * கயல்மீன்
கொள்ளைகொள்ளும் கூடலூரே. (ங)

கூற்றேருருவில்குறளாய் * நிலநீ
ரேற்றானெந்தைபெருமானூர்போல் *
சேற்றேருழவர் கோதைப்போதூண் *
கோல்தேன்முரலும் கூடலூரே. (ச)

தொண்டர்பரவச் சுடர்சென்றணவ *
அண்டத்தமரு மடிகளூர்போல் *
வண்டலலையுள் கெண்டைமிளிர *
கொண்டலதிரும் கூடலூரே. (ரு)

‡ தக்கன்வேள்வி தகர்த்ததலைவன் *
துக்கம்துடைத்த துணைவரூர்போல் *
எக்கலிடுநுண்மணல்மேல் * எங்கும்
கொக்கின்பழம்வீழ் கூடலூரே. (சு)

கருந்தண்கடலும் மலையுமுலகும் *
அருந்துமடிக ளமருமூர்போல் *
பெருந்தண்முல்லைப்பிள்ளையோடி *
குருந்தம்தழுவும் கூடலூரே. (எ)

¶ காந்தள் - செங்காந்தள். † திண்திமில். § தண்தீன். ‡ தக்கன்-தக்ஷன்; "தக்ஷாத்வரத்வம் ஸன்" என்று ருத்ரனுக்குப்பேர்.

கலைவாழ்பிணையோடணையும் * திருநீர்
மலைவாழெந்தைமருவுமூர்போல் *
இலைதாழ்தெங்கின்மேல்நின்று - * இளநீர்
குலைதாழ்கிடங்கின் கூடலூரே. (அ)
பெருகுகாதலடியேன் * உள்ள
முருகப்புகுந்தவொருவரூர்போல் *
அருகுகைதைமலர * கெண்டை
குருகென்றஞ்சும் கூடலூரே. (கூ)
✻ காவிப்பெருநீர்வண்ணன் * கண்ணன்
மேவித்திகழும் கூடலூர்மேல் *
கோவைத்தமிழால் கலியன்சொன்ன *
பாவைப்பாடப் பாவம்போமே. (க0)

தாம் செறும் பிள்ளை கூற்றேர் தொண்டர் தக்கன் கருந்தண் கலை பெருகு காவி வென்றி.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௩-வது, வென்றி.

திருவெள்ளறைபுண்டரீகாக்ஷன்விஷயம்.

ஆஸ்ரிதரக்ஷணத்துக்காகத்திருவெள்ளறையில்நின்றஸ்வாமி ஆஸ்ரிதவிரோதி நிவர்த்தகனென்ற திருவடிகளிற் கைங்கர்யத்தை நாம்பெறும்படி க்ருபைபண்ணவேணுமென்கிறார்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**சங்கராபரணராகம்-ஆதிதாளம்.**

✻வென்றிமாமழுவேந்திமுன்மண்மிசைமன்னரைமூவெழுகால் [யே*
கொன்றதேவ * நின்குரைகழல் தொழுவதோர்வகையெனக்கருள்புரி
மன்றில்மாம்பொழில்நுழைதந்து மல்லிகைமௌவலின்போதலர்த்தி*
தென்றல்மாமணம்கமழ்தரவரு திருவெள்ளறைநின்றானே. (க)
வசையில்நான்மறைகெடுத்தவம்மலரயற்கருளி * முன்பரிமுகமாய்
இசைகொள்வேதநூலென்றிவைபயந்தவனே யெனக்கருள்புரியே *
உயர்கொள்மாதவிப்போதொடுலாவிய மாருதம்வீதியின்வாய் *
திசையெல்லாம்கமழும்பொழில்சூழ் திருவெள்ளறைநின்றானே. (உ)
வெய்யனுயுலகேழுடன்நலிந்தவ னுடலகமிருபிளவா *
கையில்நீளுகிர்ப்படையதுவாய்த்தவனே யெனக்கருள்புரியே *
மையினார்தருவராலினம்பாய வண்தடத்திடைக்கமலங்கள் *
தெய்வநாறுமொண்பொய்கைகள்சூழ் திருவெள்ளறைநின்றானே. (௩)
வாம்பரியுகமன்னர்தமுயிர்செக ஐவர்கட்கரசளித்த *
காம்பினார்திருவேங்கடப்பொருப்ப ! நின்காதலையருளெனக்கு *
மாம்பொழில்தளிர்கோதியமடக்குயில் வாயதுதுவர்ப்பெய்த *
தீம்பலங்கனிதேனதுநுகர் திருவெள்ளறைநின்றானே. (ச)

மானவேலொண்கண்மடவரல் மண்மகளழுங்கமுந்நீர்ப்பரப்பில் *
ஏனமாகியன்றிருநிலமிடந்தவனே யெனக்கருள்புரியே *
கானமாமுல்லைக்கழைக்கரும்பேறி வெண்முறுவல்செய்தலர்கின்ற *
தேனின்வாய்மலர்முருகுகுக்கும் திருவெள்ளறைநின்றானே. (ரு)
பொங்குநீள்முடியமரர்கள்தொழுதெழஅமுதினைக்கொடுத்தளிப்பான்
அங்கோராமையதாகியவாதி ! நின்னடிமையையருளெனக்கு *
தங்குபேடையோடூடியமதுகரம் தையலார்குழலணைவான் *
திங்கள்தோய்சென்னிமாடம்சென்றணை திருவெள்ளறைநின்றானே.()
ஆறினோடொருநான்குடை நெடுமுடியரக்கன்றன்சிரமெல்லாம் *
வேறுவேறுகவில்லதுவளைத்தவனே யெனக்கருள்புரியே *
மாறில்சோதியமரதகப்பாசடைத் தாமரைமலர்வார்ந்த *
தேறல்மாந்திவண்டின்னிசைமுரல் திருவெள்ளறைநின்றானே. (எ)
முன்னிவ்வேழுலகுணர்வின்றியிருள்மிக வும்பர்கள்தொழுதேத்த *
அன்னமாகியன்றருமறைபயந்தவனே யெனக்கருள்புரியே *
மன்னுகேதகைசூதகமென்றிவை வனத்திடைச்சுரும்பினங்கள் *
தென்னவென்றுவண்டின்னிசைமுரல் திருவெள்ளறைநின்றானே. ()
ஆங்குமாவலிவேள்வியிலிரந்துசென் றகலிடமுழுதினையும் *
பாங்கினால்கொண்டபரம் ! நிற்பணிந்தெழுவேனெனக்கருள்புரியே *
ஓங்குபிண்டியின்செம்மலரேறி வண்டுழிதர * மாவேறித்
தீங்குயில்மிழற்றும்படப்பைத் திருவெள்ளறைநின்றானே. (கூ)
⁂ மஞ்சுலாமணிமாடங்கள்சூழ் திருவெள்ளறையதன்மேய *
அஞ்சநம்புரையும்திருவுருவனை யாதியையமுதத்தை *
நஞ்சுலாவியவேல்வலவன் கலிகன்றிசொல்லையிரண்டும் *
எஞ்சலின்றிநின்றேத்தவல்லா ரிமையோர்க்கரசாவர்களே. (கo)

வென்றி வசை வெய்ய வாம்பரி மானவேல் பொங்காறு முன்னுங்கு மஞ்சுந்தி.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௪-வது, வுந்தி.

திருவரங்கம் ஸ்ரீரங்கநாதன்விஷபம்.

சதுர்முகஸ்ரஷ்டாவான நித்யஸூரிநாதனுக்குத் தென்னரங்கம் வாஸஸ்தானமென்னுநிற்பர்களென்று இனியராகிறார்.

நெடிலடி ஆசிரியவிருத்தம்.

**ஸஹானாராகம் - அடதாளம்.**

⁂ உந்திமேல்நான்முகனைப்படைத்தா னுலகுண்டவ
னெந்தைபெம்மான் * இமையோர்கள்தாதைக்கிடமென்பரால் *
சந்தினோடுமணியும்கொழிக்கும் புனல்காவிரி *
அந்திபோலும்நிறத்தார்வயல்சூழ் தென்னரங்கமே. (க)

வையமுண்டாலிலைமேவுமாயன் * மணிநீண்முடிப்
பைகொள்நாகத்தணையான் பயிலுமிடமென்பரால் *
தையல்நல்லார்குழல்மாலையும் மற்றவர்தடமுலை *
செய்யசாந்தும்கலந்திழிபுனல்சூழ் தென்னரங்கமே. (௨)

பண்டிவ்வையமளப்பான்சென்று மாவலிகையில்நீர்
கொண்ட * ஆழித்தடக்கைக் குறளனிடமென்பரால் *
வண்டுபாடும்மதுவார்புனல் வந்திழிகாவிரி
அண்டநாறும்பொழில்சூழ்ந் தழகார்தென்னரங்கமே. (௩)

விளைத்தவெம்போர் விறல்வாளரக்கன்நகர்பாழ்பட *
வளைத்தவல்வில்தடக்கையவனுக் கிடமென்பரால் *
துளைக்கையானைமருப்பு மகிலும்கொணர்ந்துந்தி * முன்,
திளைக்கும்செல்வப்புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. (௪)

வம்புலாம்கூந்தல்மண்டோதரிகாதலன் வான்புக *
அம்புதன்னால்முனிந்த வழகனிடமென்பரால் *
உம்பர்கோனுமுலகேழும் வந்தீண்டிவணங்கும் * நல்
செம்பொனாரும்மதிள்சூழ்ந் தழகார்தென்னரங்கமே. (௫)

கலையுடுத்தவகலல்குல் வன்பேய்மகள்தாயென *
முலைகொடுத்தாளுயிருண்டவன் வாழுமிடமென்பரால்
குலையெடுத்தகதலிப் பொழிலூடும்வந்துந்தி * முன்
அலையெடுக்கும்புனல்காவிரிசூழ் தென்னரங்கமே. (௬)

கஞ்சன்நெஞ்சும்கடுமல்லரும் சகடமும்காலினால் *
துஞ்சவென்றசுடராழியான் வாழுமிடமென்பரால் *
மஞ்சுசேர்மாளிகை நீடகில்புகையும் * மறையோர்
செஞ்சொல்வேள்விப்புகையும்கமழும் தென்னரங்கமே. (௭)

ஏனமீனாமையோ டரியும்சிறுகுறளுமாய் *
தானுமாய தரணித்தலைவனிடமென்பரால் *
வானும்மண்ணும்நிறையப்புகுந்தீண்டிவணங்கும் * நல்
தேனும்பாலும்கலந்தன்னவர்சேர் தென்னரங்கமே. (௮)

சேயனென்றும்மிகப்பெரியன் நுண்ணேர்மையினாயவிம்
மாயையை * ஆருமறியாவகையானிடமென்பரால் *
வேயின்முத்தும்மணியும்கொணர்ந் தார்புனல்காவிரி *
ஆயபொன்மாமதிள்சூழ்ந் தழகார்தென்னரங்கமே. (௯)

‡‡ அல்லிமாதரமரும்திருமார்வனரங்கத்தை *
கல்லின்மன்னுமதிள் மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
நல்லிசைமாலைகள் நாலிரண்டுமிரண்டுமுடன் *
வல்லவர்தாமுலகாண்டு பின்வானுலகாள்வரே. (௧௦)

உந்தி வையம் பண்டு விளைத்த வம்பு கலை கஞ்சன் ஏனம் சேயன் அல்லி வெருவாதாள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு-வது, வெருவாதாள்.

இதுவுமது.

*தாயார்பாசுரம்.*

*அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.*

**காம்போதிராகம்-ஆதிதாளம்.**

✻✻வெருவாதாள்வாய்வெருவி வேங்கடமேவேங்கடமேயென்கின்றாளால் *
மருவாளாலென்குடங்கால்வாணெடுங்கண் துயில்மறந்தாள் * வண்டார்கொ
ஒருவாளன்வானவர்தமுயிராள ளொலிதிரைநீர்ப்பெளவங்கொண்ட [ண்ட
திருவாளன் * என்மகளைச்செய்தனக ளெங்ஙனம்நான்சிந்திக்கேனே. (க)

கலையாளாவகலல்குல்கனவளையும்கையாளாவென்செய்கேன்நான் *
விலையாளாவடியேனை வேண்டுதியோவேண்டாயோவென்னும் * மெய்ய
மலையாளன்வானவர்தம்தலையாளன் மராமரமேழெய்தவென்றிச்
சிலையாளன் * என்மகளைச்செய்தனக ளெங்ஙனம்நான்சிந்திக்கேனே. (உ)

மானையமென்னோக்கி வாணெடுங்கண்ணீர்மல்கும்வளையும்சோரும் *
தேனையநறுந்துழா யலங்கலின்திறம்பேசியுறங்காள்காண்மின் *
கானயன், கடிமனையில்தயிருண்டு நெய்பருகநந்தன்பெற்ற
ஆனையன் * என்மகளைச்செய்தனக ளம்மனைமீரறிகிலேனே. (ங)

தாய்வாயில்சொற்கேளாள் தன்னாயத்தோடணையாள், தடமென்கொங்கை
யே * ஆரச்சாந்தணியா ளெம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
பேய்மாயமுலையுண்டிவ்வுலகுண்ட பெருவயிற்றன்பேசில்நங்காய் *
மாமாயனென்மகளைச்செய்தனகள் மங்கைமீர்மதிக்கிலேனே. (ச)

பூண்முலைமேல்சாந்தணியாள்பொருகயல்கண்மையெழுதாள்பூவைபேணாள் *
ஏணறியாளெத்தனையும் எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
நாள்மலராள்நாயகனாய் நாமறியவாய்ப்பாடிவளர்ந்தநம்பி *
ஆண்மகனாயென்மகளைச்செய்தனக ளம்மனைமீரறிகிலேனே. (ரு)

தாதாடுவனமாலை தாரானோவென்றென்றேதளர்ந்தாள்காண்மின் *
யாதானுமொன்றுரைக்கி லெம்பெருமான்திருவரங்கமென்னும் * பூமேல்
மாதாளன், குடமாடி, மதுசூதன், மன்னர்க்காய்முன்னம்சென்ற
தூதாளன் * என்மகளைச்செய்தனக ளெங்ஙனம்நான்சொல்லுகேனே. (சு)

வாராளுமிளங்கொங்கை வண்ணம்வேறாயினவாறெண்ணாள் * எண்ணில்
பேராளன்பேரல்லால்பேசாள் இப்பெண்பெற்றேனென்செய்கேன்நான் *
தாராளன்தண்குடந்தைநகராளன் ஐவர்க்காயமரிலுய்த்த
தேராளன் * என்மகளைச்செய்தனக ளெங்ஙனம்நான்செப்புகேனே.()

உறவாதுமிலளென்றென் றொழியாதுபலரேசுமலராயிற்றால் *
மறவாதேயெப்பொழுதும் மாயவனேமாதவனேயென்கின்றாளால் *
பிறவாதபேராளன் பெண்ணாளன்மண்ணாளன்விண்ணோர்தங்கள்
அறவாளன் * என்மகளைச்செய்தனக ளம்மனைமீரறிகிலேனே. (அ)

பந்தோடுகழல்மருவாள்பைங்கிளியும்பாலூட்டாள் பாவைபேணாள் *
வந்தானோதிருவரங்கன் வாரானோவென்றென்றேவளையும்சோரும் *
சந்தோகன்பௌழியன்ஐந்தழலோம்புதைத்திரியன்சாமவேதி *
† அந்தோவந்தென்மகளைச்செய்தனகளம்மனைமீரறிகிலேனே. (கூ)

⁂ சேலுகளும்வயல்புடைசூழ்திருவரங்கத்தம்மானைச்சிந்தைசெய்த*
நீலமலர்க்கண்மடவாள்நிறைவழிவைத் தாய்மொழிந்தவதனை*நேரார்
காலவேல்பரகாலன் கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
மாலைசேர்வெண்குடைக்கீழ் மன்னவராய்ப்பொன்னுலகில்வாழ்வர்தாமே. ()

வெருவு கலை மான் தாய் பூண் தாதாடு வாரா னூறவு பந்து சேல் கைம்மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## கூ-வது, கைம்மானம்.

திருத்தென்னரங்கம் ஸ்ரீரங்கநாதன்விஷயம்.
விடாய்த்தவிடத்திலே தண்ணீர் கொடுப்பாரைப்போலே ஆர்த்தரான
வவ்விடத்திலே காட்சி கொடுக்கக் கண்டநுபவிக்கிறார்.

கலிவிருத்தம்.

பைரவிராகம்-நபகதாளம்.

⁂ கைம்மானமழகளிற்றைக் கடற்கிடந்தகருமணியை *
மைம்மானமரதகத்தை மறையுரைத்ததிருமாலை *
எம்மானை எனக்கென்றுமினியானை, பனிகாத்த
அம்மானை * யான்கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே. (க)

⁂ பேரானைக்குறுங்குடியெம்பெருமானை * திருத்தண்கா
லூரானைக் கரம்பனூருத்தமனை * முத்திலங்கு
காரார்திண்கடலேழும் மலையேழிவ்வுலகேழுண்டு *
ஆராதென்றிருந்தானைக் கண்டதுதென்னரங்கத்தே. (உ)

ஏனாகியுலகிடந்தன் றிருநிலனும்பெருவிசும்பும் *
தானாயபெருமானை, தன்னடியார்மனத்தென்றும் *
தேனாகியமுதாகித்திகழ்ந்தானை, மகிழ்ந்தொருகால்
ஆனாயனானானை * கண்டதுதென்னரங்கத்தே. (ந)

‡ வளர்ந்தவனைத்தடங்கடலுள், வலியுருவில்திரிசகடம் *
தளர்ந்துதிரவுதைத்தவனைத், தரியாதன்றிரணியனைப்
பிளந்தவனை * பெருநிலமீரடிநீட்டிப்பண்டொருநாள்
அளந்தவனை * யான்கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே. (ச)

நீரழலாய்நெடுநிலனாய்நின்றானை * அன்றரக்க
னூரழலாலுண்டானைக் கண்டார்பின்காணமே *
பேரழலாய்ப்பெருவிசும்பாய்ப் பின்மறையோர்மந்திரத்தின் *
ஆரழலாலுண்டானைக் கண்டதுதென்னரங்கத்தே. (ரு)

† "அந்தோ என்பொன்மகளை" என்று பாடாந்தரம். ‡ வளர்ந்தவனை-கண்வளர்ந்தவனை.

தஞ்சினத்தைத்தவிர்த்தடைந்தார்தவநெறியை * தரியாது
கஞ்சனைக்கொன்றன்றுலகமுண்டுமிழ்ந்தகற்பகத்தை *
வெஞ்சினத்தகொடுந்தொழிலோன் விசையுருவையசைவித்த *
அஞ்சிறைப்புட்பாகனை, யான்கண்டதுதென்னரங்கத்தே. (சு)

சிந்தனையைத்தவநெறியைத் திருமாலை * பிரியாது
வந்தெனதுமனத்திருந்தவடமலையை * வரிவண்டார்
கொந்தணைந்தபொழில்கோவ லுலகளப்பானடிநிமிர்த்த
வந்தணனை * யான்கண்டதணிநீர்த்தென்னரங்கத்தே. (எ)

துவரித்தவுடையவர்க்கும் தூய்மையில்லாச்சமணர்க்கும் *
அவர்கட்கங்கருளில்லாவருளானை * தன்னடைந்த
எமர்கட்குமடியேற்கு மெம்மார்க்குமெம்மனைக்கும் *
அமரர்க்கும்பிரானாரைக், கண்டதுதென்னரங்கத்தே. (அ)

பொய்வண்ணம்மனத்தகற்றிப் புலனைந்தும்செலவைத்து *
மெய்வண்ணம்நினைந்தவர்க்கு மெய்ந்நின்றவித்தகனை *
மைவண்ணம்கருமுகில்போல் திகழ்வண்ணமரதகத்தின் *
அவ்வண்ணவண்ணனை, யான்கண்டதுதென்னரங்கத்தே. (கூ)

✽✽ ஆமருவிநிரைமேய்த்த வணியரங்கத்தம்மானை *
காமருசீர்க்கலிகன்றி யொலிசெய்தமலிபுகழ்சேர் *
நாமருவுதமிழ்மாலை நாலிரண்டோடிரண்டினையும் *
தாமருவிவல்லார்மேல் சாராதீவினைதானே. (க0)

கைம்மானம் பேரானை எனுகி வளர்ந்த நீர் தம் சிந்தனை துவர் பொய் ஆமருவி பண்டை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, பண்டை.



திருவரங்கமாநகரம் ஸ்ரீரங்கநாதன்விஷயம்.
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
சாவேரிராகம்-ஆதிதாளம்.

✽✽பண்டைநான்மறையும்வேள்வியும் கேள்விப்பதங்களும்பதங்களின்பொரு
பிண்டமாய்விரிந்தபிறங்கொளியனலும் பெருகியபுனலொடுநிலனும்* [ளும்*
கொண்டல்மாருதமும்குரைகடலேழு மேழுமாமலைகளும்விசும்பும் *
அண்டமும்தானாய்நின்றவெம்பெருமா னரங்கமாநகரமர்ந்தானே.(க)

இந்திரன்பிரமனீசனென்றிவர்களெண்ணில்பல்குணங்களேயியற்ற *
தந்தையும்தாயும்மக்களும் மிக்கசுற்றமும்சுற்றிநின்றகலாப்
பந்தமும் * பந்தமறுப்பதோர்மருந்தும்பான்மையும், பல்லுயிர்க்கெல்லாம் *
அந்தமும்வாழ்வுமாயவெம்பெருமா னரங்கமாநகரமர்ந்தானே. (உ)

மன்னுமாநிலனும்மலைகளும்கடலும் வானமும்தானவருலகும் *
துன்னுமாயிருளாய்த்துலங்கொளிசுருங்கித் தொல்லைநான்மறைகளும்மறைய
பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கிப் பிறங்கிருள்நிறங்கெட*ஒருநாள்
அன்னமாயன்றங்கருமறைபயந்தா னரங்கமாநகரமர்ந்தானே. (௩)

மாயிருங்குன்றமொன்றுமத்தாக மாசுணமதனொடுமளவி *
பாயிரும்பௌவம் ‡ பகடுவிண்டலறப் படுதிரைவிசும்பிடைப்படர *
சேயிருவிசும்பும்திங்களும்சுடரும் தேவரும்தாமுடன்திசைப்ப *
ஆயிரந்தோளாலலைகடல்கடைந்தா னரங்கமாநகரமர்ந்தானே. (௪)

எங்ஙனேயுய்வர்தானவர்நினைந்தா லிரணியனிலங்குபூணகலம் *
பொங்குவெங்குருதிபொன்மலைபிளந்து பொழிதருமருவியொத்திழிய *
வெங்கண்வாளெயிற்றோர்வெள்ளிமாவிலங்கல் விண்ணுறக்கனல்விழித்தெழு
அங்ஙனேயொக்கவரியுருவானா னரங்கமாநகரமர்ந்தானே. [ந்தது *

ஆயிரம்குன்றம் † சென்றதொக்கனைய அடல்புரைவெழிறிகழ்திரடோள் § *
ஆயிரம்துணியவடல்மழுப்பற்றி மற்றவனகல்விசும்பணைய *
ஆயிரம்பெயராலமரர்சென்றிறைஞ்ச அறிதுயிலலைகடல்நடுவே *
ஆயிரம்சுடர்வாயரவணைத்துயின்றா னரங்கமாநகரமர்ந்தானே. (௬)

சுரிகுழல்கனிவாய்த்திருவினைப்பிரித்த கொடுமையில்கடுவிசையரக்கன் *
எரிவிழித்திலங்குமணிமுடிபொடிசெய் திலங்கைபாழ்படுப்பதற்கெண்ணி *
வரிசிலைவளையவடுசரம்துரந்து மறிகடல்நெறிபட * மலையால்
அரிகுலம்பணிகொண்டலைகடலடைத்தான ரங்கமாநகரமர்ந்தானே.()

ஊழியாயோமத்துச்சியா யொருகாலுடையதேரொருவனாய் * உலகில்
$ சூழிமால்யானைத்துயர்கெடுத்திலங்கை மலங்கவன்றடுசரந்துரந்து *
பாழியால்மிக்கபார்த்தனுக்கருளிப் பகலவனொளிகெட * பகலே
ஆழியாலன்றங்காழியைமறைத்தா னரங்கமாநகரமர்ந்தானே. (௮)

பேயினார்முலையூண்பிள்ளையாயொருகால் பெருநிலம்விழுங்கியதுமிழ்ந்த
வாயனாய் * மாலாயாலிலைவளர்ந்து மணிமுடிவானவர்தமக்குச்
சேயனாய் * அடியோர்க்கணியனாய்வந்தென் சிந்தையுள்வெந்துயரறுக்கும் *
ஆயனாயன்றுகுன்றமொன்றெடுத்தா னரங்கமாநகரமர்ந்தானே. (௯)

⁂பொன்னுமாமணியும்முத்தமும்சுமந்து பொருதிரைமாநதிபுடைசூழ்ந்து-*
அன்னம்மாடுலவுமலைபுனல்சூழ்ந்த வரங்கமாநகரமர்ந்தானை *
மன்னுமாமாடமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
பன்னியபனுவல்பாடுவார்நாளும் பழவினைபற்றறுப்பாரே. (௧0)

பண்டை இந்திரன் மன்னு மாயிரும் எங்ஙனே ஆயிரம் சுரி யூழி பேய் பொன் ஏழை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ பகடுவிண்டு அலற - யானைபிளிறுமாப்போலேகோஷிக்க. † சென்ற தொக்கனைய = தொக்குச்சென்றதனைய - திரண்டுசென்றாப்போலே, § எழில்திகழ் திரள்தோள். $ சூழி - முகப்பட்டம்.

## அ-வது, ஏழையேதலன்.

இதுவுமது.

விஷயச பலதையும் சாத்ரவமும் நிக்ருஷ்டஜந்மத்தையுமுடைய குறைப்
பெருமாளை இவற்றைநினையாதே தயைபண்ணி மற்றுமவனுக்கு வி
சேஷகடாக்ஷத்தை மேலேப்ரஸரிக்கவிட்டு பிராட்டியையுன்
தோழியென்றும் நீஎன் தம்பியென்றுஞ்சொல்லி அவ்வ
ளவில்விடாதே சந்தோஷத்தோடே நீ எனக்கு ப்ரா
ண சகன்கிடாய் நீ இங்கிருவென்று அவனை
ஆதரித்து நீ சொன்னசொற்கள் மனதி
ற்பட்டு உன் திருவடிகளை ஆஶ்ரயித்
தே னென்கிறார்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தந்யாசிராகம்-ஆதிதாளம்.

ஏழையேதலன்கீழ்மகனென்ன
திரங்கி மற்றவர்க்கின்னருள்சுரந்து *
மாழைமான்மடநோக்கியுன்தோழி
யும்பியெம்பியென்றொழிந்திலை * உகந்து
தோழன்நீயெனக்கிங்கொழியென்ற
சொற்கள்வந் தடியேன்மனத்திருந்திட
ஆழிவண்ண ! நின்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (க)

வாதமாமகன்மற்கடம்விலங்கு
மற்றோர்சாதியென்றொழிந்திலை * உகந்து
காதலாதரம்கடலினும்பெருகச்செய்
தகவினுக்கில்லைகைம்மாறென்று *
கோதில்வாய்மையினாயொடுமுடனே
யுண்பனானென்றவொண்பொருள் - * எனக்கு
மாதல்வேண்டுமென்றடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (உ)

கடிகொள்பூம்பொழில்காமருபொய்கை
வைகு தாமரைவாங்கியவேழம் *
முடியும்வண்ணமோர்முழுவலிமுதலை
பற்ற மற்றதுநின்சரண்நினைப்ப *
கொடியவாய்விலங்கினுயிர்மலங்கக்
கொண்டசீற்றமொன்றுண்டுளதறிந்து - * உன்
அடியனேனும்வந்தடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (ங)

நஞ்சுசோர்வதோர்வெஞ்சினவரவம்
வெருவிவந்துநின்சரணெனச்சரணாய் *
நெஞ்சிற்கொண்டு நின்னஞ்சிறைப்பறவைக்
கடைக்கலம்கொடுத்தருள்செய்ததறிந்து *
வெஞ்சொலாளர்கள்நமன்றமர்கடியர்
கொடியசெய்வனவுள * அதற்கடியேன்
அஞ்சிவந்துநின்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (௪)

மாகமாநிலம்முழுதும்வந்திறைஞ்சும்
மலரடிக்கண்டமாமறையாளன் *
தோகைமாமயிலன்னவரின்பம்
துற்றிலாமையிலத்தஇங்கொழிந்து *
போகம்நீயெய்திப்பின்னும்நம்மிடைக்கே
போதுவாயென்றபொன்னருள் * எனக்கு
மாகவேண்டுமென்றடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (௫)

மன்னுநான்மறைமாமுனிபெற்ற
மைந்தனை மதியாதவெங்கூற்றந்
தன்னையஞ்சி * நின்சரணெனச்சரணாய்த்
தகவில்காலனையுகமுனிந்தொழியா *
பின்னையென்றும்நின்திருவடிப்பிரியா
வண்ண மெண்ணியபேரருள் * எனக்கு
மன்னதாகுமென்றடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (௬)

ஓதுவாய்மையும் † உவனியப்பிறப்பும்
உனக்குமுன்தந்தவந்தணனொருவன் *
காதலென்மகன்புகலிடங்காணேன்
கண்டுநீதருவாயெனக்கென்று *
கோதில்வாய்மையினானுனைவேண்டிய
குறைமுடித் தவன்சிறுவனைக்கொடுத்தாய் *
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (௭)

வேதவாய்மொழியந்தணனொருவன்
எந்தைநின்சரணென்னுடைமனைவி *
காதல்மக்களைப்பயத்தலும்காணாள்
கடியதோர்தெய்வங்கொண்டொளிக்குமென்றழைப்ப *

† உவனியம் - உபநயநம்.

ஏதலார்முன்னேயின்னருளவர்க்குச்
செய்துன்மக்கள்மற்றிவரென்றுகொடுத்தாய் *
ஆதலால்வந்துன்னடியிணையடைந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (அ)

‡‡ துளங்குநீண்முடி ‡ அரசர்தம்குரிசில்
தொண்டைமன்னவன்திண்டிறலொருவற்கு - *
உளங்கொளன்பினோடின்னருள்சுரந்
தங்கொடுநாழிகையேழுடனிருப்ப *
வளங்கொள்மந்திரம்மற்றவர்க்கருளிச்
செய்தவாறடியேனறிந்து - * உலக
மளந்தபொன்னடியேயடைந்துய்ந்தேன்
அணிபொழில்திருவரங்கத்தம்மானே. (கூ)

‡‡ மாடமாளிகைசூழ்திருமங்கை
மன்னனொன்னலர்தங்களைவெல்லும்
ஆடல்மாவலவன்கலிகன்றி
அணிபொழில்திருவரங்கத்தம்மானை *
நீடுதொல்புகழாழிவல்லானை
எந்தையைநெடுமாலைநினைந்த
பாடல்பத்திவைபாடுமின்தொண்டீர்
பாட † நும்மிடைப்பாவம்நில்லாவே. (க0)

ஏழை வாதம் கடி நஞ்சு மாக மன்னு ஒது வேதம் துளங்கு மாடம் கை

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, கையிலங்கு.



### திருப்பேர்நகர் அப்பக்குடத்தான்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அடாணாராகம்-ஜம்பைதாளம்.

‡‡ கையிலங்காழி § சங்கன் கருமுகில்திருநிறத்தன் *
பொய்யிலன்மெய்யன் தன்தாளடைவரேலடிமையாக்கும் *
செய்யலர்கமலமோங்கு செறிபொழில்தென்திருப்பேர் *
பையரவணையான்நாமம் பரவிநானுய்ந்தவாறே. (க)

வங்கமார்கடல்களேழும் மலையும்வானகமும்மற்றும் *
அங்கண்மாஞாலமெல்லா மமுதுசெய்துமிழ்ந்தவெந்தை *
திங்கள்மாமுகிலணவு செறிபொழில்தென்திருப்பேர் *
எங்கள்மாலிறைவன்நாம மேத்திநானுய்ந்தவாறே. (உ)

---

‡ அரசர்தம்குரிசில் - ராஜாக்களுக்குராஜா. ‡ "நும்முடை" என்றும் பாடம். § "சங்கம்" என்றும் பாடாந்தரம்.

ஒருவனையுந்திப்பூமே லோங்குவித்தாகந்தன்னால் *
ஒருவனைச்சாபம்நீக்கி யும்பராளென்றுவிட்டான் *
பெருவரைமதிள்கள்சூழ்ந்த பெருநகரரவணைமேல் *
கருவரைவண்ணன் $ தென்பேர் கருதிநானுய்ந்தவாறே. (ங)

ஊனமர்தலையொன்றேந்தி யுலகெல்லாம்திரியுமீசன் *
ஈனமர்சாபம்நீக்காயென்ன வொண்புனலையீந்தான் *
தேனமர்பொழில்கள்சூழ்ந்த செறிவயல்தென்திருப்பேர் *
வானவர்தலைவன்நாமம் வாழ்த்திநானுய்ந்தவாறே. (ச)

வக்கரன்வாய்முன்கீண்ட மாயனேஎன்றுவானோர்
புக்கு - * அரண்தந்தருளாயென்ன, பொன்னாகத்தானை *
நக்கரியுருவமாகி நகங்கிளர்ந்திடந்துகந்த *
சக்கரச்செல்வன்தென்பேர் தலைவன்தாளடைந்துய்ந்தேனே. (ரு)

விலங்கலால்கடலடைத்து விளங்கிழைபொருட்டு * வில்லால்
இலங்கைமாநகர்க்கிறைவ னிருபதுபுயம்துணித்தான் *
நலங்கொள்நான்மறைவல்லார்க ளோத்தொலியேத்தக்கேட்டு *
மலங்குபாய்வயல்திருப்பேர் மருவிநான்வாழ்ந்தவாறே. (சு)

வெண்ணெய்தானமுதுசெய்ய வெகுண்டுமத்தாய்ச்சியோச்சி *
கண்ணியார்குறுங்கயிற்றால் கட்ட ‡ வெட்டென்றிருந்தான் *
திண்ணமாமதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள் * வேலை
வண்ணனார்நாமநாளும் வாய்மொழிந்துய்ந்தவாறே. (எ)

அம்பொனாருலகமேழு மறியஆய்ப்பாடிதன்னுள் *
கொம்பனார்பின்னைகோலம் கூடுதற்கேறுகொன்றான் *
செம்பொனார்மதிள்கள்சூழ்ந்த தென்திருப்பேருள் * மேவும்
எம்பிரான்நாமநாளு மேத்திநானுய்ந்தவாறே. (அ)

நால்வகைவேதமைந்து வேள்வியாறங்கம்வல்லார் *
மேலைவானவரில்மிக்க வேதியராதிகாலம் *
சேனுகள்வயல்திருப்பேர்ச் செங்கண்மாலோடும்வாழ்வார் *
சீலமாதவத்தர்சிந்தை யாளியென்சிந்தையானே. (கூ)

‡‡ வண்டறைபொழில்திருப்பேர் வரியரவணையில்பள்ளி
கொண்டு - * உறைகின்றமாலைக், கொடிமதிள்மாடமங்கை *
திண்டிறல்தோள்கலியன் செஞ்சொலால்மொழிந்தமாலை *
கொண்டிவைபாடியாடக் கூடுவார்நீள்விசும்பே. (கo)

கை வங்க மொருவ னூன் வக்கரன் விலங்கல் வெண்ணெ யம்பொன் நால்வகை வண்டறை நீது.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



$ "தன்பேர்" என்றுபாடாந்தரம். ‡ வெட்டென்றிருக்கை - இசைந்திருக்கை.

## கO-வது, தீதறு.



நந்திபுரவிண்ணகரம்நாதன்விஷயம்.
அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
சுருட்டிராகம்-ஜம்பைதாளம்.

‡‡ தீதறுநிலத்தொடெரிகாலினொடு நீர்கெழுவிசும்புமவையாய் *
மாசறுமனத்தினொடுறக்கமொடிறக்கையவையாயபெருமான் *
தாய் ‡ செறவுளைந்துதயிருண்டுகுடமாடு தடமார்வர்தகைசேர் *
நாதனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. (க)

உய்யும்வகையுண்டுசொனசெய்யிலுலகேழுமொழியாமைமுனநாள் *
மெய்யினளவேயமுதுசெய்யவல ஐயனவன்மேவுநகர்தான் *
மையவரிவண்டுமதுவுண்டுகிளையோடு மலர்கிண்டியதன்மேல் *
§ நைவளம்நவிற்றுபொழில் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. (உ)

உம்பருலகேழுகடலேழுமலையேழுமொழியாமைமுனநாள் *
தம்பொன்வயிறுாளவுமுண்டவையுமிழ்ந்த தடமார்வர்தகைசேர் *
வம்புமலர்கின்றபொழில்பைம்பொன் வருதும்பிமணிகங்குல்வயல்சூழ்
நம்பனுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. (ங)

பிறையினொளியெயிறிலகமுறுகியெதிர்பொருதுமெனவந்தவசுரர் *
இறைகளவைநெறுநெறெனவெறியவவர்வயிறழலநின்றபெருமான் *
சிறைகொள்மயில்குயில்பயிலமலர்களுக அளிமுரலஅடிகொள்நெடுமா
நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே.

மூளவெரிசிந்திமுனிவெய்தி யமர்செய்துமெனவந்தவசுரர் *
தோளுமவர்தாளுமுடியோடுபொடியாகநொடியாமளவெய்தான் *
வாளும்வரிவில்லும்வளையாழிகதைசங்கமிவையங்கையுடையான் *
நாளுமுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. (ரு)

தம்பியொடுதாமொருவர்தன்துணைவிகாதல்துணையாகமுனநாள் *
வெம்பியெரிகானகமுலாவுமவர்தா மினிதுமேவுநகர்தான் *
கொம்புகுதிகொண்டுகுயில்கூவமயிலாலு மெழிலார்புறவுசேர் *
நம்பியுறைகின்றநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே. (சு)

தந்தைமனமுந்துதுயர்நந்த இருள்வந்தவிறல்நந்தன்மதலை *
எந்தையிவனென்றமரர்கந்தமலர்கொண்டுதொழநின்றநகர்தான் *
மந்தமுழவோசைமழையாகவெழுகார் மயில்களாடுபொழில்சூழ் *
நந்திபணிசெய்தநகர் நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே. (எ)

எண்ணில்நினைவெய்தியினியில்லையிறையென்றுமுனியாளர் * திருவார்
பண்ணில்மலிகீதமொடுபாடியவராடலொடுகூட * எழிலார்
மண்ணிலிதுபோலநகரில்லையெனவானவர்கள்தாமலர்கள்தூய் *
நண்ணியுறைகின்றநகர்நந்திபுரவிண்ணகரம் நண்ணுமனமே. (அ)

‡ "சிற" என்று சிலஸ்ரீகோசங்கள்; சீறஎன்பது சிறஎனக்குறுகிற்று.
§ நைவளம் - ஓர்பண்,

வங்கமலிபௌவமதுமாமுகடினுச்சிபுகமிக்கபெருநீர் *
அங்கமழியாரவனதாணைதலைசூடுமடியாரறிதியேல் *
பொங்குபுனலுந்துமணிகங்குலிருள்சீறுமொளியெங்குமுளதால் *
நங்கள்பெருமானுறையும் நந்திபுரவிண்ணகரம்நண்ணுமனமே. (கூ)

நறைசெய்பொழில்மழைதவழும் நந்திபுரவிண்ணகரம்நண்ணியுறையும் *
உறைகொள்புகராழிசுரிசங்கமவையங்கைபுடையானை * ஒளிசேர்
கறைவளரும்வேல்வல்லகலியனொலிமாலையிவையைந்துமைந்தும் *
முறையிலிவைபயிலவலவடியவர்கள்கொடுவினைகள்முழுதகலுமே. ()

தீதுய்யு மூம்பர் பிறை மூள தம்பி தந்தை எண்ணில் வங்கம் நறைசெய் வண்டு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

# ஆறும்பத்து.

## க-வது, வண்டுணு.

### திருவிண்ணகரம் உப்பலியப்பன்விஷயம்.

கலித்தாழிசை.

புன்னுகவராளிராகம்-ஆதிதாளம்.

வண்டுணுநறுமலரின்டைகொண்டு- பண்டைநம்வினைகெடவென்று* அடி
தொண்டருமமரரும்பணியநின் றங்-கண்டமோடகலிடமளந்தவனே *[மேல்
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (க)

அண்ணல்செய்தலைகடல்கடைந்ததனுள்கண்ணுதல்நஞ்சுண்ணக்கண்டவனே
விண்ணவரமுதுணவமுதில்வரும் - பெண்ணமுதுண்டவெம்பெருமா
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் * [னே
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே, (உ)

குழல்நிறவண்ண ! நின்கூறுகொண்ட-தழல்நிறவண்ணன்நண்ணார்நகரம்
விழ * நனிமலைசிலைவளைவுசெய்துஅங்-கழல்நிற அம்பதுவானவனே*
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (ரு)

நிலவொடுவெய்யில்நிலவிருசுடரும்-உலகமுமுயிர்களுமுண்டொருகா
லைதருகுழவியினுருவினையா-யலைகடலாலிலைவளர்ந்தவனே * [ல்
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (ச)

பாரெழுகடலெழுமலையெழுமாய்ச்-சீர்கெழுமிவ்வுலகேழுமெல்லாம் *
ஆர்கெழுவயிற்றினிலடக்கிநின் றங்-கோரெழுத்தோருருவானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (ரு)

கார்கெழுகடல்களும்மலைகளுமா-யேர்கெழுமுலகமுமாகி* முத
ஸார்களுமறிவருநிலையினையாய்ச்-சீர்கெழுநான்மறையானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (௬)

உருக்குறுநறுநெய்கொண்டாரழலில்-இருக்குறுமந்தணர்சந்தியின்வாய் *
பெருக்கமொடமரர்களமரநல்கும்-இருக்கினிலின்னிசையானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (எ)

காதல்செய்திளையவர்கலவிதரும்-வேதனைவினையதுவெருவுதலாம் *
ஆதலினுனதடியணுகுவன்நான்- போதலர்நெடுமுடிப்புண்ணியனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையை விண்ணகர்மேயவனே. (அ)

சாதலும்பிறத்தலுமென்றிவற்றைக்-காதல்செய்யாதுனகழலடைந்தேன் *
ஓதல்செய்நான்மறையாகியும்ப-ராதல்செய்மூவுருவானவனே *
ஆண்டாயுன்னைக்காண்பதோ ரருளெனக்கருளுதியேல் *
வேண்டேன்மனைவாழ்க்கையைவிண்ணகர்மேயவனே. (௯)

பூமருபொழிலணிவிண்ணகர்மேல் *
காமருசீர்க்கலிகன்றிசொன்ன *
பாமருதமிழிவைபாடவல்லார் *
வாமனனடியிணைமருவுவரே. (௰)

வண்டு அண்ணல்குழல் நிலவுபார்கார் உருக்குகாதல்சாதல்பூமருபொறுத்
தேன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, பொறுத்தேன்.



இதுவுமது.

கலிவிருத்தம்.

நாதநாமக்கிரியைராகம்-ஆதிதாளம்.

பொறுத்தேன்புன்சொல்நெஞ்சில்பொருளின்பமெனவிரண்டும்
இறுத்தேன் * ஐம்புலன்கட்கடனாயினவாயிலொட்டி
அறுத்தேன் * ஆர்வச்செற்றமவைதன்னைமனத்தகற்றி
வெறுத்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (க)

மறந்தேனுன்னைமுன்னம் மறந்தமதியின்மனத்தால் *
இறந்தேனெத்தனையு மதனாலிடும்பைக்குழியில் *
பிறந்தேயெய்த்தொழிந்தேன் பெருமான்திருமார்பா ! *
சிறந்தேன்நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே. (உ)

மானேய்நோக்கியர்தம் வயிற்றுக்குழியிலுழைக்கும் *
† ஊனேராக்கைதன்னை யுதவாமையுணர்ந்துணர்ந்து*
வானேமாநிலமே வந்துவந்தென்மனத்திருந்த
தேனே * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (௩)

பிறிந்தேன்பெற்றமக்கள் பெண்டிரென்றிவர்பின்னுதவா
தறிந்தேன் * நீபணித்தவருளென்றுமொள்வாளுருவி
எறிந்தேன் * ஐம்புலன்களிடர்தீரவெறிந்துவந்து
செறிந்தேன் * ‡ நின்னடிக்கே திருவிண்ணகர்மேயவனே. (௪)

§ பாண்டேன்வண்டறையுங்குழலார்கள் பல்லாண்டிசைப்ப *
ஆண்டார்வையமெல்லா மரசாகி * முன்னாண்டவரே
மாண்டாரென்றுவந்தார், அந்தோ! மனைவாழ்க்கைதன்னை
வேண்டேன் *நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (௫)

கல்லாவைம்புலன்களவைகண்டவாறு செய்யகில்லேன் *
மல்லாமல்லருள்மல்லர்மாள மல்லடர்த்த
மல்லா * மல்லலம்சீர்மதிள்நீரிலங்கையழித்த
வில்லா * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (௬)

வேறுயானிரந்தேன் வெகுளாதுமனக்கொளெந்தாய் *
ஆறுவெந்நரகத் தடியேனையிடக்கருதி *
கூறுவைவர்வந்துகுமைக்கக் குடிவிட்டவரை *
தேறுதுன்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (௭)

தீவாய்வல்வினையா ருடனின்றுசிறந்தவர்போல் *
மேவாவெந்நரகத் திடருற்றுவிரைந்துவந்தார் *
மூவா! வானவர்தம்முதல்வா - மதிகோள்விடுத்த
தேவா * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (௮)

போதார்தாமரையாள் புலவிக்குலவானவர்தம்
கோதா * கோதில்செங்கோல் குடைமன்னரிடைநடந்த
தூதா * தூமொழியாய் சுடர்போலென்மனத்திருந்த
வேதா * நின்னடைந்தேன் திருவிண்ணகர்மேயவனே. (௯)

‡‡ தேனார்பூம்புறவில் திருவிண்ணகர்மேயவனை *
வானாரும்மதில்சூழ் வயல்மங்கையர்கோன்*மருவார்
ஊனார்வேல்கலிய னொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
கோனாய் வானவர்தம்கொடிமாநகர்கூடுவரே. (௧௦)

பொறுத்தேன் மறமானேய் பிறிபாண்டேன் கல்லாவேறுதீவாய் போதார்தேனார் துறப்பேன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† "ஊனேயாக்கைதன்னை" என்று முந்தினபாடம். ‡ "நின்னடைந்தேன்" என்றும் சில ஸ்ரீகோசங்கள். § பாண்-தேன்.

## ௩-வது, துறப்பேன்.

இதுவுமது.
கலிவிருத்தம்.
ஆநந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

⁂ துறப்பேனல்லேனின்பம்; துறவாது * நின்னுருவம்
மறப்பேனல்லே னென்றும்மறவாது * யானுலகில்
பிறப்பேனாகவெண்ணேன், பிறவாமைப்பெற்றது * நின்
திறத்தேனாதன்மையால் திருவிண்ணகரானே. (க)

துறந்தேனார்வச்செற்றச் சுற்றம்துறந்தமையால் *
சிறந்தேன்நின்னடிக்கே யடிமைதிருமாலே *
அறந்தானாய்த்திரிவா யுன்னையென்மனத்தகத்தே *
திறம்பாமல்கொண்டேன் திருவிண்ணகரானே. (உ)

மானேய்நோக்குநல்லார் மதிபோல்முகத்துலவும் *
ஊனேய்கண்வாளிக் குடைந்தோட்டந்துன்னடைந்தேன் *
கோனே ! குறுங்குடியுள் குழகா ! திருநறையூர்த்
தேனே ! வருபுனல்சூழ் திருவிண்ணகரானே. (௩)

சாந்தேந்துமென்முலையார் தடந்தோள்புணரின்பவெள்ளத்
தாழ்ந்தேன், * அருநரகத்தழுந்தும்பயன்படைத்தேன் *
போந்தேன்புண்ணியனே யுன்னையெய்தியென்தீவினைகள்
தீர்ந்தேன் * நின்னடைந்தேன் திருவிண்ணகரானே. (௪)

மற்றோர்தெய்வமெண்ணே னுன்னையென்மனத்துவைத்துப்
பெற்றேன் * பெற்றதுவும் பிறவாமையெம்பெருமான் *
வற்றாநீள்கடல்சூ ழிலங்கையிராவணனைச்
செற்றாய் * கொற்றவனே ! திருவிண்ணகரானே. (௫)

மையொண்கருங்கடலும் நிலனுமணிவரையும் *
செய்யசுடரிரண்டு மிவையாய்நின்னை * நெஞ்சில்
உய்யும்வகையுணர்ந்தே னுண்மையாலினி * யாதுமற்றோர்
தெய்வம்பிறிதறியேன் திருவிண்ணகரானே. (௬)

வேறேகூறுவதுண் டடியேன்விரித்துரைக்கு
மாறே * நீபணியாதடை நின்திருமனத்து *
கூறேன்நெஞ்சுதன்னால் குணங்கொண்டு * மற்றோர்தெய்வம்
தேறேனுன்னையல்லால் திருவிண்ணகரானே. (எ)

முளிந்தீய்ந்தவெங் † கடத்து ‡ மூரிப்பெருங்களிற்றால் *
விளிந்தீய்ந்த $ மாமரம்போல் வீழ்ந்தாரைநினையாதே *
அளிந்தோர்ந்தசிந்தை நின்பாலடியேற்கு * வானுலகம்
தெளிந்தேயென்றெய்துவது திருவிண்ணகரானே. (அ)

---

† கடம் - பாலைநிலம். ‡ மூரி- மிடுக்கு. $ மாமரம் - பெரியமரம்.

சொல்லாய்திருமார்வா ! உனக்காகித்தொண்டுபட்ட
நல்லேனை * வினைகள்நலியாமைநம்புநம்பீ *
† மல்லா ! குடமாடி ! மதுசூதனே ! உலகில்
சொல்லாநல்லிசையாய் ! திருவிண்ணகரானே. (கூ)

⁂ தாரார்மலர்க்கமலத் தடஞ்சூழ்ந்ததண்புறவில் *
சீரார்நெடுமருகில் திருவிண்ணகரானை *
காரார்புயல்தடக்கைக் கலியனொலிமாலை *
ஆராரிவைவல்லா ரவர்க்கல்லல்நில்லாவே. (க0)

துறப்பேன் துறமானேய் சாந்துமற்றோர் மை வேறேமுளிந்து சொல் தாரார்கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, கண்ணும்சுழன்று.



### திருநறையூர் நம்பிவிஷயம்.

கலிநிலைத்துறை.

**பந்துவராளிராகம்-ஜம்பைதாளம்.**

⁂ கண்ணும்சுழன்று பீளையோடீளைவந்தேங்கினால் *
பண்ணின்மொழியார் பையநடமினென்னுதமுன் *
விண்ணும்மலையும்வேதமும் வேள்வியுமாயினான் *
நண்ணுநறையூர்நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (க)

கொங்குண்குழலார் கூடியிருந்துசிரித்து * நீர்
இங்கென்னிருமி யெம்பால்வந்ததென்றிகழாதமுன் *
திங்களெரிகால் செஞ்சுடராயவன்தேசுடை *
நங்கள்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (உ)

கொங்கார்குழலார் கூடியிருந்துசிரித்து * எம்மை
எங்கோலம்ஐயா ! என்னினிக்காண்பதென்னுதமுன் *
செங்கோல்வலவன் தான்பணிந்தேத்தித்திகழூமூர் *
நங்கோன்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே!. (ஙு)

கொம்புமரவமும்வல்லியும்வென்ற நுண்ணேரிடை *
வம்புண்குழலார் வாசலடைத்திகழாதமுன் *
செம்பொன்கமுகினந்தான் கனியும்செழும்சோலைசூழ் *
நம்பனறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே!. (ச)

விலங்கும்கயலும் வேலுமொண்காவியும்வென்றகண் *
சலம்கொண்டசொல்லார்தாங்கள் சிரித்திகழாதமுன் *
மலங்கும்வராலும் வாளையும்பாய்வயல்சூழ்தரு *
நலங்கொள்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (ரு)

---

† "மல்லார்" என்று முந்தினபாடம்.

மின்னேரிடையார் வேட்கையைமாற்றியிருந்து - *
என் ? நீரிரும் யெம்பால்வந்ததென்றிகழாதமுன் *
தொன்னீரிலங்கைமலங்க † விலங்கெரியூட்டினன் *
நன்னீர்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (சு)

வில்லேர்நுதலார்வேட்கையைமாற்றிச்சிரித்து * - இவன்
பொல்லான்திரைந்தானென்னும் புறனுரைகேட்பதன்முன் *
சொல்லார்மறைநான்கோதி யுலகில்நிலாயவர் *
நல்லார்நறையூர்நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (எ)

வாளொண்கண்ணல்லார் தாங்கள்மதநனென்றார்தம்மை *
‡ கேண்மின்க ளீளையோடெங்குகிழவனென்னுதமுன் *
வேள்வும்விழவும் வீதியிலென்றுமறாதவூர் *
நாளுநறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. ! (அ)

கனிசேர்ந்திலங்குநல்வாயவர் காதன்மைவிட்டிட *
குனிசேர்ந்துடலம் கோலில்தளர்ந்திளையாதமுன் *
பனிசேர்விசும்பில் பால்மதிகோள்விடுத்தானிடம் *
நனிசேர்நறையூர் நாம்தொழுதுமெழுநெஞ்சமே. (கூ)

⁂ பிறைசேர்நுதலார் பேணுதல்நம்மையிலாதமுன் *
நறைசேர்பொழில்சூழ் நறையூர்தொழுநெஞ்சமேயென்ற *
கறையார்நெடுவேல்மங்கையர்கோன் கலிகன்றிசொல் *
மறவாதுரைப்பவர் வானவர்க்கின்னரசாவரே. (க0)

கண் கொங்குண் கொங்கார் கொம்பு விலங்கு மின் வில் வாள் கனி பிறை கலங்க.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு- வது, கலங்க.



இதுவுமது.

கலிநிலைத்துறை.

சேஞ்சுருட்டிராகம்-அடதாளம்.

⁂ கலங்கமுந்நீர்கடைந்தமுதங்கொண்டு-*இமையோர்
துலங்கல்தீர நல்குசோதிச்சுடராய *
வலங்கையாழியிடங்கைச்சங்க முடையானூர் *
நலங்கொள்வாய்மை யந்தணர்வாழும்நறையூரே. (க)

முனையார்சீயமாகி யவுணன்முரண்மார்வம் *
புனைவாளுகிரால் போழ்படவீர்ந்தபுனிதனூர் *
சினையார்தேமாம் செந்தளிர்கோதிக்குயில்கூவும் *
$ நனையார்சோலைசூழ்ந் தழகாயநறையூரே. (உ)

† "விலங்கு" என்றும் "இலங்கு" என்றும்பாடம். ‡ "கேள் உங்கள்" என்று பாடாந்தரம், கேள்-கேள்வன் $ நனை - மொட்டு.

ஆனைப்புரவித் தேரொடுகாலாளணிகொண்ட *
சேனைத்தொகையைச்சாடி யிலங்கைசெற்றானூர் *
மீனைத்தழுவிவீழ்ந்தெழும் மள்ளர்க்கலமர்ந்து *
¶ நானப்புதலிலாமையொளிக்கும் நறையூரே. (௩)

உறியார்வெண்ணெயுண் டுரலோடும்கட்டுண்டு *
வெறியார்கூந்தல் பின்னைபொருட்டுஆன்வென்றானூர் *
பொறியார்மஞ்ஞை பூம்பொழில்தோறும்நடமாட *
நறுநாண்மலர்மேல் வண்டிசைபாடும்நறையூரே. (௪)

விடையேழ்வென்று மென்தோளாய்ச்சிக்கன்பனாய் *
நடையால்நின்றமருதம்சாய்த்த நாதனூர் *
பெடையோடன்னம் பெய்வளையார்தம்பின்சென்று *
நடையோடியலி நாணியொளிக்கும்நறையூரே. (௫)

பகுவாய்வன்பேய்கொங்கைசுவைத் தாருயிருண்டு *
புகுவாய்நின்ற போதகம்வீழப்பொருதானூர் *
நெகுவாய்நெய்தல் பூமதுமாந்தி * கமலத்தின்
நகுவாய்மலர்மே லன்னமுறங்கும்நறையூரே. (௬)

முந்துநூலும்முப்புரிநூலும் முன்னீந்த *
† அந்தணாளன்பிள்ளையை யந்நான்றளித்தானூர் *
பொந்தில்வாழும்பிள்ளைக்காகிப் புள்ளோடி *
$ நந்துவாரும் பைம்புனல்வாவிநறையூரே. (௭)

வெள்ளைப்புரவித்தேர் விசையர்க்காய் விறல்வியூகம்
விள்ள * சிந்துக்கோன்விழவூர்ந்த விமலனூர் *
கொள்ளைக்கொழுமீனுண் குருகோடிப்பெடையோடும் *
நள்ளக்கமலத்தேறலுகுக்கும் நறையூரே. (௮)

⁂ பாரையூரும்பாரந்தீரப் பார்த்தன்றன்
தேரையூரும் * தேவதேவன்சேருமூர் *
தாரையூரும்தண்தளிர்வேலிபுடைசூழ *
நாரையூரும் நல்வயல்சூழ்ந்தநறையூரே. (௯)

⁂ தாமத்துளபநீண்முடிமாயன்தான்நின்ற *
நாமத்திரள் மாமாளிகைசூழ்ந்தநறையூர்மேல் *
காமக்கதிர்வேல்வல்லான் கலியனொலிமாலை *
சேமத்துணையாம் செப்புமவர்க்குத்திருமாலே. (௧௰)

கலங்க முனை ஆனை உறி விடை பகுவாய் முந்து வெள்ளைபாரை தாமத் தம்பாரம்.

௦

திருமங்கையாழ்வார் திருவடிகளே சரணம்.



¶ நானம்- மஞ்சள். † அந்தணாளன் என்றது-ஸாந்தீபினி. $நந்து-நத்தை.

## ரு-வது, அம்பரம்.



இதுவுமது.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தோடிராகம்-ஆதிதாளம்.

⁂ அம்பரமும்பெருநிலனும்திசைகளெட்டும்
அலைகடலும்குலவரையு முண்டகண்டன் *
கொம்பமரும்வடமரத்தினிலைமேல்பள்ளி
கூடினான்திருவடியேகூடகிற்பீர் *
வம்பவிழும் செண்பகத்தின்வாசமுண்டு
மணிவண்டுவகுளத்தின் மலர்மேல்வைகு *
செம்பியன்கோச்செங்கணான் சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (க)

கொழுங்கயலாய்நெடுவெள்ளங் கொண்டகாலம்
குலவரையின்மீதோடி யண்டத்தப்பால் *
எழுந்தினிதுவிளையாடு மீசனெந்தை
யிணையடிக்கீழினிதிருப்பீர்; இனவண்டாலும் *
உழும்செறுவில்மணிகொணர்ந்து கரைமேல்சிந்தி
யுலகெல்லாம்சந்தநமுமகிலுங்கொள்ள *
செழும்பொன்னிவளங்கொடுக்கும் சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (உ)

பவ்வநீருடையாடையாகச்சுற்றிப்
பாரகலம்திருவடியாப்பவனம்மெய்யா *
செவ்விமாதிரமெட்டும்தோளாஅண்டம்
திருமுடியாநின்றான்பால் செல்லகிற்பீர் *
கவ்வைமாகளிறுந்தி விண்ணியேற்றக்
கழல்மன்னர்மணிமுடிமேல் காகமேற *
தெய்வவாள்வலங்கொண்ட சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (௩)

பைங்கணாளரியுருவாய் வெருவநோக்கிப்
பருவரத்தோளிரணியனைப்பற்றிவாங்கி *
அங்கைவாளுகிர் நுதியாலவனதாகம்
அங்குருதிபொங்குவித்தா னடிக்கீழ்நிற்பீர் *
வெங்கண்மாகளிறுந்தி விண்ணியேற்ற
விறல்மன்னர்திறலழிய வெம்மாவுய்த்த *
செங்கணான்கோச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (ச)

அன்றுலகமூன்றினையு மளந்துவேறோ
ரரியுருவாயிரணியன தாகங்கீண்டு *
வென்றவனைவிண்ணுலகில் செலவுய்த்தாற்கு
விருந்தாவீர் ! மேலெழுந்துவிலங்கல்பாய்ந்து *
பொன்சிதறிமணிகொணர்ந்து கரைமேல்சிந்திப்
புலம்பரந்துநிலம்பரக்கும் பொன்னிநாடன் *
தென்தமிழன்வடபுலக்கோன் சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (ரு)

தன்னுமல தன்னுருவம் பயந்ததானாய்த்
தயங்கொளிசேர்மூவுலகும் தானாய்வானாய் *
தன்னாலேதன்னுருவில் மூர்த்திமூன்றாய்த்
தானாயனாயினான் சரணென்றுய்வீர் *
மின்னாடுவேலேந்து விளைந்தவேளை
விண்ணேறத்தனிவேலுய்த் துலகமாண்ட *
தென்னாடன்குடகொங்கன் சோழன்சேர்ந்த
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (சு)

முலைத்தடத்தநஞ்சுண்டு துஞ்சப்பேய்ச்சி
முதுதுவரைக்குலபதியாக் காலிப்பின்னே *
இலைத்தடத்தகுழலூதி யாயர்மாதர்
இனவளைகொண்டானடிக்கீ ழெய்தகிற்பீர் *
மலைத்தடத்தமணிகொணர்ந்து வையமுய்ய
வளங்கொடுக்கும்வருபுன லம்பொன்னிநாடன் *
சிலைத்தடக்கைக்குலச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (எ)

முருக்கிலங்குகனித்துவர்வாய்ப் பின்னைகேள்வன்
மன்னெல்லாம்முன்னவியச் சென்று * வென்றிச்
செருக்களத்துத்திறலழியச் செற்றவேந்தன்
சிரந்துணித்தான்திருவடிநும் சென்னிவைப்பீர் *
இருக்கிலங்குதிருமொழிவா யெண்டோளீசற்கு -
எழில்மாடமெழுபதுசெய் துலகமாண்ட *
திருக்குலத்துவளச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (அ)

தாராளன்தண்ணரங்க வாளன்பூமேல்
தனியாளன்முனியாளரேத்தநின்ற
பேராளன் * ஆயிரம்பேருடையவாளன்
பின்னைக்குமணவாளன் பெருமைகேட்பீர் *
பாராளரவரிவரென் றழுந்தையேற்றப்
படைமன்னருடல்துணியப் பரிமாவுய்த்த *
தேராளன்கோச்சோழன் சேர்ந்தகோயில்
திருநறையூர்மணிமாடம் சேர்மின்களே. (கூ)

⁂ செம்மொழிவாய்நால்வேத வாணர்வாழும்
திருநறையூர்மணிமாடச் செங்கண்மாலை *
பொய்ம்மொழியொன்றில்லாத மெய்ம்மையாளன்
புலமங்கைக்குலவேந்தன் புலமையார்ந்த *
அம்மொழிவாய்க்கலிகன்றி யின்பப்பாடல்
பாடுவார்வியனுலகில் நமனூர்பாடி *
வெம்மொழிகேட்டஞ்சாதே மெய்ம்மைசொல்லில்
விண்ணவர்க்குவிருந்தாகும் பெருந்தக்கோரே. (க0)

அம்பரம் கொழுப்பல்லவம் பைங்கணன்று தன்னாலே மூலை முருக்கு தாராளன் செம்மொழி ஆளும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, ஆளும்பணியும்.



திருநறையூர் நம்பிவிஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அரபிராகம்-நபகதாளம்.

⁂ ஆளும்பணியுமடியேனைக்கொண்டான் விண்டநிசாசரரை *
தோளும்தலையும்துணிவெய்தச்சுடுவெஞ்சிலைவாய்ச்சரந்துரந்தான் *
¶ வேளும்சேயுமனையாரும் வேற்கணாரும்பயில்வீதி *
நாளும்விழவினொலியோவா நறையூர்நின்றநம்பியே. (க)

முனியாய்வந்துமூவெழுகால் முடிசேர்மன்னருடல்துணிய *
தனிவாய்மழுவின்படையாண்ட தாரார்தோளான், வார்புறவில் *
பனிசேர்முல்லைபல்லரும்பப் † பானலொருபால்கண்காட்ட *
‡ நனிசேர்கமலமுகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. (உ)

தெள்ளார்கடல்வாய்விடவாயச் சினவாளரவில்துயிலமர்ந்து *
துள்ளாவருமான்வீழ வாளிதுரந்தானிரந்தான்மாவலிமண் *
புள்ளார்புறவில்பூங்காவி புலன்கொள்மாதர்கண்காட்ட *
நள்ளார்கமலமுகங்காட்டும் நறையூர்நின்றநம்பியே. (ங)

ஒளியாவெண்ணெயுண்டானென்றுரலோடாய்ச்சியொண்கயிற்றால் *
விளியாவார்க்கவாப்புண்டு விம்மியழுதான், மென்மலர்மேல் *
களியாவண்டுகள்ளுண்ணக் காமர்தென்றலலர்தூற்ற *
நளிர்வாய்முல்லைமுறுவலிக்கும் நறையூர்நின்றநம்பியே. (ச)

வில்லார்விழவில்வடமதுரை விரும்பிவிரும்பா மல்லடர்த்து *
கல்லார்திரடோள்கஞ்சனைக்காய்ந்தான் பாய்ந்தான்காளியன்மேல் *
சொல்லார்சுருதிமுறையோதிச் சோமுச்செய்யும்தொழிலினோர் *
நல்லார்மறையோர்பலர்வாழும் நறையூர்நின்றநம்பியே. (ரு)

¶ வேள் - மந்மதன்; சேய் - ஸுப்ரம்ஹண்யன். † பானல் - ஓர்வகை நெய்தற்பூ. ‡ "நனிசேர்வயலுள் முத்தலைக்கும்" என்று முந்தினபாடம்.

வள்ளிகொழுநன்முதலாய மக்களோடுமுக்கணன் [தான் *
வெள்கியோட * விறல்வாணன்வியன்தோள்வனத்தைத்துணித்துகந்
பள்ளிகமலத்திடைப்பட்ட பகுவாயலவன்முகம்நோக்கி *
நள்ளியூடும்வயல்சூழ்ந்த நறையூர்நின்றநம்பியே. (சு)

மிடையாவந்தவேல்மன்னர் வீயவிசயன்தேர்கடவி *
குடையாவரையொன்றெடுத் தாயர்கோவாய்நின்றான் கூராழிப்
படையான் * வேதநான் கைந்துவேள்வி யங்கமாறிசையேழ் *
நடையாவல்லவந்தணர்வாழ் நறையூர்நின்றநம்பியே. (எ)

பந்தார்விரலாள்பாஞ்சாலிகூந்தல்முடிக்கப் பாரதத்து *
† கந்தார்களிற்றுக்கழல்மன்னர் கலங்கச்சங்கம்வாய்வைத்தான் *
செந்தாமரைமேலயனோடு சிவனுமனையபெருமையோர் *
நந்தாவண்கைமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியே. (அ)

ஆறும்பிறையுமரவமும் ‡ அடம்பும் சடைமேலணிந்து- * உடலம்
நீறும்பூசியேறூரு மிறையோன்சென்றுகுறையிரப்ப *
மாறொன்றில்லாவாசநீர் வரைமார்வகலத்தளித்துகந்தான் *
நாறும்பொழில்சூழ்ந்தழகாய நறையூர்நின்றநம்பியே. (கூ)

⁂ நன்மையுடையமறையோர்வாழ் நறையூர்நின்றநம்பியை
கன்னிமதிள்சூழ்வயல்மங்கைக் கலியனொலிசெய்தமிழ்மாலை *
பன்னியுலகில்பாடுவார் பாடுசாராபழவினைகள் *
மன்னியுலகமாண்டுபோய் வானோர்வணங்கவாழ்வாரே. (க0)

ஆளும் முனிதெள்ளாரொளிவில் வள்ளிமிடைபந்து ஆறுநன்மைமான்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, மான்கொண்ட.

இதுவுமது.

கலிவிருத்தம்.

பைரவிராகம்-ஜம்பைதாளம்.

⁂ மான்கொண்டதோல்மார்வில் மாணியாய் * மாவலிமண்
தான்கொண்டு தாளாலளந்தபெருமானை *
தேன்கொண்டசாரல் திருவேங்கடத்தானை *
நான்சென்றுநாடி நறையூரில்கண்டேனே. (க)

முந்நீரைமுன்னாள்கடைந்தானை * மூழ்த்தநாள்
அந்நீரைமீனாயமைத்தபெருமானை *
தென்னாலிமேயதிருமாலை யெம்மானை *
நன்னீர்வயல்சூழ் நறையூரில்கண்டேனே. (உ)

† கந்தார்களிறு—கந்து-கந்தமாய், மதஜலகந்தத்தால் மிக்கிருக்கிறகளிறு. ‡ அடம்பு - அடப்பம்பூ:—ஓர்வகை கடம்பமரத்தின்பூ.

தூவாயபுள்ளூர்ந்துவந்து, துறைவேழம் *
மூவாமைநல்கி முதலைதுணித்தானை *
தேவாதிதேவனைச் செங்கமலக்கண்ணனை *
நாவாயுளானை நறையூரில்கண்டேனே. (ங)

ஓடாவரியா யிரணியனையூனிடந்த *
சேடார்பொழில்சூழ் திருநீர்மலையானை *
வாடாமலர்த்துழாய் மாலைமுடியானை *
நாடோறும்நாடி நறையூரில்கண்டேனே. (ச)

கல்லார்மதிள்சூழ் கடியிலங்கைக்காரரக்கன் *
வல்லாகங்கீள வரிவெஞ்சரம்துரந்த *
வில்லானை, செல்வவிபீடணற்குவேறாக *
நல்லானை, நாடி நறையூரில்கண்டேனே. (ரு)

உம்பருலகோடுயிரெல்லாம் * உந்தியில்
வம்புமலர்மேல்படைத்தானை, மாயோனை *
அம்பன்னகண்ணா ளசோதைதன்சிங்கத்தை *
நம்பனைநாடி நறையூரில்கண்டேனே. (சா)

கட்டேறுநீள்சோலைக் காண்டவத்தைத்தீமூட்டி
விட்டானை * மெய்யமமர்ந்தபெருமானை *
மட்டேறுகற்பகத்தை மாதர்க்காய் * வண்துவரை
நட்டானைநாடி நறையூரில்கண்டேனே. (எ)

மண்ணின்மீபாரங்கெடுப்பான் * மறமன்னர்
† பண்ணின்மேல்வந்த படையெல்லாம் * பாரதத்து
விண்ணின்மீதேற விசயன்தேரூர்ந்தானை *
நண்ணிநான்நாடி நறையூரில்கண்டேனே. (அ)

⁂ பொங்கேறுநீள்சோதிப் பொன்னாழிதன்னோடும் *
சங்கேறுகோலத் தடக்கைப்பெருமானை *
கொங்கேறுசோலைக் குடந்தைக்கிடந்தானை *
நங்கோனைநாடி நறையூரில்கண்டேனே. (கூ)

⁂ மன்னுமதுரை வசுதேவர்வாழ்முதலை *
நன்னறையூர்நின்றநம்பியை * வம்பவிழ்தார்
கன்னவிலும்தோளான் கலியனொலிவல்லார் *
பொன்னுலகில்வானவர்க்குப் $ புத்தேளிராகுவரே. (கU)

மான்முந்நீர் தூவாய் ஓடாகல்லும்பர் கட்டேறு மண்பொங்கு மன்னுபெடை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† பண்ணின்மேல்-யுத்தப்பண்போட்டே. $ புத்தேளிர்-தைவங்கள்.

## கூ-வது, பெடையடர்த்த.

திருநறையூர் நம்பிவிஷயம்.
கலிவிருத்தம்.
யமுனகல்யாணிராகம்-ரூபகதாளம்.

⁂ பெடையடர்த்தமடவன்னம் பிரியாது * மலர்க்கமலம்
மடலெடுத்துமதுநுகரும் வயலுடுத்ததிருநறையூர் *
முடையடர்த்தசிரமேந்தி மூவுலகும்பலிதிரிவோன் *
இடர்கெடுத்ததிருவாள னிணையடியேயடைநெஞ்சே. (க)

கழியாரும்கனசங்கம் கலந்தெங்கும்நிறைந்தேறி *
வழியாரமுத்தீன்று வளங்கொடுக்கும்திருநறையூர்
பழியாரும்விறலரக்கன் பருமுடிகளவைசிதற *
அழலாரும்சரந்துரந்தா னடியிணையேயடைநெஞ்சே. (உ)

சுளைகொண்டபலங்கனிகள் தேன்பாய * கதலிகளின்
† திளைகொண்டபழம் ¶ கெழுமு திகழ்சோலைத்திருநறையூர் *
‡ வளைகொண்டவண்ணத்தன் பின்தோன்றல், மூவுலகோடு - *
அளைவெண்ணெயுண்டான்ற னடியிணையேயடைநெஞ்சே. (ங)

§ துன்றோளித்துகில்படலம் துன்னியெங்கும்மாளிகைமேல் *
நின்றாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
மன்றாரக்குடமாடி வரையெடுத்துமழைதடுத்த *
குன்றாரும்திரடோளன் குரைகழலேயடைநெஞ்சே. (ச)

அகில்குறடும்சந்தனமு மம்பொன்னும்மணிமுத்தும் *
மிகக்கொணர்ந்துதிரையுந்தும் வியன்பொன்னித்திருநறையூர் *
பகல்கரந்தசுடராழிப்படையான் * இவ்வுலகேழும்
புகக்கரந்ததிருவயிற்றன் பொன்னடியேயடைநெஞ்சே. (ரு)

பொன்முத்துமரியுகிரும் புழைக்கைம்மாகரிக்கோடும்
மின்னத்தண்திரையுந்தும் வியன்பொன்னித்திருநறையூர் *
மின்னொத்தநுண்மருங்குல் மெல்லியலை * திருமார்வில்
மன்னத்தான்வைத்துகந்தான் மலரடியேயடைநெஞ்சே. (சா)

சீர்தழைத்தகதிர்ச்செந்நெல் செங்கமலத்திடையிடையின் *
பார்தழைத்துக்கரும்போங்கிப் பயன்விளைக்கும்திருநறையூர் *
கார்தழைத்ததிருவுருவன் கண்ணபிரான்விண்ணவர்கோன் *
தார்தழைத்ததுழாய்முடியன் தளிரடியேயடைநெஞ்சே. (எ)

⁂ குலையார்ந்தபழுக்காயும் பசுங்காயும்பாளைமுத்தும் *
தலையார்ந்தவிளங்கமுகின் தடஞ்சோலைத்திருநறையூர் *
மலையார்ந்தகோலஞ்சேர் மணிமாடம்மிகமன்னி *
நிலையாரநின்றான்றன் நீள்கழலேயடைநெஞ்சே. (அ)

---

† திளைகொண்ட - பருத்த. ¶ கெழுமுதல்-நெருங்கல். ‡ வளைகொண்டவண்ணத்தன் - நம்பிமூத்தபிரான். § ஒளி - ஒழுங்கு.

மறையாரும்பெருவேள்விக் கொழும்புகைப்போய்வளர்ந்து * எங்கும்
நிறையாரவான்மூடும் நீள்செல்வத்திருநறையூர் *
பிறையாருஞ்சடையானும் பிரமனுமுன்தொழுதேத்த *
இறையாகிநின்றான்றன் னிணையடியேயடைநெஞ்சே. (கூ)

✻✻ திண் $ களகமதிள்புடைசூழ் திருநறையூர்நின்றானை *
வண் § களகநிலவெறிக்கும் வயல்மங்கைநகராளன் *
பண்களகம்பயின்றசீர்ப் பாடலிவைபத்தும்வல்லார் *
விண்களகத்திமையவராய் வீற்றிருந்துவாழ்வாரே. (கO)

பெடை கழி சுனை துன்று அகில் பொன் சீர் குல மறை திண் கிடந்த.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## கO-வது, கிடந்தநம்பி.

திருநறையூர் நம்பிவிஷயம்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**கமாசுராகம்-திரிபுடைதாளம்.**

✻✻ கிடந்தநம்பிகுடந்தைமேவிக் கேழலாயுலகை
யிடந்தநம்பி * எங்கள்நம்பி யெறிஞராணழிய *
கடந்தநம்பிகடியாரிலங்கை, உலகையீரடியால் *
நடந்தநம்பிநாமம்சொல்லில் நமோநாராயணமே. (க)

விடந்தானுடையவரவம்வெருவச் செருவில்முனநாள் * முன்
தடந்தாமரைநீர்ப்பொய்கைபுக்கு மிக்கதாடாளன் *
இடந்தான்வையம்கேழலாகி, உலகையீரடியால் *
நடந்தானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. (உ)

பூணுதனலும்தறுகண்வேழம் மறுக * வளைமருப்பைப்
பேணான்வாங்கியமுதம் † கொண்டபெருமான்திருமார்வன் *
பாணுவண்டுமுரலுங்கூந்த லாய்ச்சிதயிர்வெண்ணெய் *
நாணாதுண்டான்நாமம்சொல்லில் நமோநாராயணமே. (ங)

கல்லார்மதிள்சூழ் கச்சிநகருள்நச்சி * பாடகத்துள்
எல்லாவுலகும்வணங்க விருந்தவம்மான் * இலங்கைக்கோன்
வல்லாளாகம்வில்லால்முனிந்த வெந்தை * விபீடணற்கு
நல்லானுடையநாமம்சொல்லில் நமோநாராயணமே. (ச)

குடையாவரையால் நிரைமுன்காத்தபெருமான் * மருவாத
விடைதானேழும்வென்றான் கோவல்நின்றான் * தென்னிலங்கை
அடையாவரக்கர்வீயப்பொருது மேவிவெங்கூற்றம் *
நடையாவுண்ணக்கண்டான்நாமம் நமோநாராயணமே. (ரு)

---

$ களகம் - அன்னம், செந்நெற்கதிர். § களகம் - சாந்து. † கொண்டா-ப்ரீதி பூர்வகமாகக்கொண்ட.

கான ‡ எண்கும்குரங்கும் முசுவும்படையா * அடலரக்கர்
மானமழித்துநின்ற வென்றியம்மான் * எனக்கென்றும்
தேனும்பாலுமமுதுமாய திருமால்திருநாமம் *
நானும்சொன்னேன்நமருமுரைமின் நமோநாராயணமே. (௬)

நின்றவரையும்கிடந்தகடலும் திசையுமிருநிலனும் *
ஒன்றுமொழியாவண்ணமெண்ணி நின்றவம்மானார் *
குன்றுகுடையாவெடுத்த வடிகளுடையதிருநாமம் *
நன்றுகாண்மின்தொண்டீர்சொன்னேன் நமோநாராயணமே. (எ)

கடுங்கால்மாரிகல்லேபொழிய அல்லேயெமக்கென்று
படுங்கால் * நீயேசரணென் றாயரஞ்சவஞ்சாமுன் *
நெடுங்கால்குன்றம்குடையொன்றேந்தி நிரையைச்சிரமத்தால் *
நடுங்காவண்ணம்காத்தான்நாமம் நமோநாராயணமே. (அ)

பொங்குபுணரிக்கடல்சூழாடை நிலமாமகள்மலர்மா
மங்கை * பிரமன்சிவனிந்திரன்வானவர் நாயகராய *
எங்களடிக ளிமையோர்தலைவருடையதிருநாமம் *
நங்கள்வினைகள்தவிரவுரைமின் நமோநாராயணமே. (௯)

‡‡ வாவித்தடஞ்சூழ்மணிமுத்தாற்று நறையூர்நெடுமாலை *
நாவில்பரவிநெஞ்சில்கொண்டு நம்பிநாமத்தை *
காவித்தடங்கண்மடவார்கேள்வன் கலியனொலிமாலை *
மேவிச்சொல்லவல்லார்பாவம் நில்லாவீயுமே. (௧0)

கிடந்தவிடம் பூண்கல் குடைகானம் நின்ற கடும் பொங்குவாவிகறவா.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



# ஏழாம்பத்து.



## க-வது, கறவாமடநாகு.



திருநறையூர் நம்பிவிஷயம்.

கலிவிருத்தம்.

முகாரிராகம்-ரூபகதாளம்.

‡‡ கறவாமடநாகு தன்கன்றுள்ளினுப்போல் *
மறவாதடியே னுன்னையேயழைக்கின்றேன் *
நறவார்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பி *
பிறவாமையெனைப்பணி யெந்தைபிரானே. (க)

‡ எண்கு - கரடி.

வற்றுமுதுநீரொடு மால்வரையேழும் *
துற்றுகமுன் துற்றிய தொல்புகழோனே *
அற்றேனடியே னுன்னையேயழைக்கின்றேன் *
பெற்றேனருள்தந்திடு எனெந்தைபிரானே. (உ)
தாரேன்பிறர்க் குன்னருளென்னிடைவைத்தாய் *
ஆரேனதுவே பருகிக்களிக்கின்றேன் *
காரேய்கடலேமலையே திருக்கோட்டி
யூரே * உகந்தாயை யுகந்தடியேனே. (ங)
புள்வாய்பிளந்தபுனிதா என்றழைக்க *
உள்ளேநின்றென் னுள்ளங் குளிருமொருவா *
கள்வா ! கடன்மல்லைக்கிடந்தகரும்பே ! *
வள்ளாலுன்னை யெங்ஙனம்நான்மறக்கேனே. (ச)
வில்லேர்நுதல் வேல்நெடுங்கண்ணியும்நீயும் *
கல்லார்கடுங்கானம் திரிந்தகளிறே *
நல்லாய்நரநாரணனே யெங்கள்நம்பி *
சொல்லாயுன்னை யான்வணங்கித்தொழுமாறே. (ரு)
பனியேய் ‡ பரங்குன்றின்பவளத்திரளே *
முனியேதிருமூழிக் களத்துவிளக்கே *
இனியாயதொண்டரோம் பருகின்னமுதாய
கனியே * உன்னைக்கண்டுகொண்டுய்ந்தொழிந்தேனே. (சு)
கதியேலில்லை நின்னருளல்லதெனக்கு *
நிதியே ! திருநீர்மலைநித்திலத்தொத்தே ! *
பதியேபரவித்தொழும் தொண்டர்தமக்குக்
கதியே * உன்னைக்கண்டுகொண் டுய்ந்தொழிந்தேனே. (எ)
அத்தாவரியே யென்றுன்னையழைக்க *
பித்தாவென்றுபேசுகின்றார் பிறரென்னை *
முத்தே மணிமாணிக்கமே முளைக்கின்ற
வித்தே * உன்னையெங்ஙனம்நான்விடுகேனே ?. (அ)
தூயாய்சுடர்மாமதிபோ லுயிர்க்கெல்லாம் *
தாயாயளிக்கின்றதண்டாமரைக்கண்ணா *
ஆயாவலைநீருலகேழும்முன்னுண்ட
வாயா * உன்னையெங்ஙனம்நான்மறக்கேனே. (கூ)
‡‡ வண்டார்பொழில்சூழ் நறையூர்நம்பிக்கு - * என்றும்
தொண்டாய்க்கலியனொலிசெய்தமிழ்மாலை *
தொண்டீரிவைபாடுமின் பாடிநின்றாட *
உண்டேவிசும்பு உந்தமக்கில்லைதுயரே. (க0)

கறவா வற்று தாரேன் புள் வில் பனி கதி அத்தா தூயாய் வண்டார் புள்ளாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ பரங்குன்று - ஹிமவானில் திருப்பிரிதி.

## உ-வது, புள்ளாயேனமுமாய்.

திருநறையூர் நம்பிவிஷயம்.
கலிவிருத்தம்.
கேதாரகௌளராகம்-ஆதிதாளம்.

புள்ளாயேனமுமாய்ப்புகுந்து - * என்னையுள்ளங்கொண்ட
கள்வாவென்றலும்என்கண்கள்நீர்கள்சோர்தருமால் *
உள்ளேநின்றுருகி நெஞ்சமுன்னையுள்ளியக்கால் *
நள்ளேனுன்னையல்லால் நறையூர்நின்றநம்பியோ. (க)

ஓடாவாளரியினுருவாய்மருவி * என்றன்
மாடேவந்தடியேன் மனங்கொள்ளவல்லமைந்தா *
பாடேன்தொண்டர்தம்மைக் கவிதைப்பனுவல்கொண்டு *
நாடேனுன்னையல்லால் நறையூர்நின்றநம்பியோ. (உ)

எம்மானுமெம்மனையு மென்னைப்பெற்றொழிந்ததற்பின் *
அம்மானுமம்மனையு மடியேனுக்காகிநின்ற *
நன்மானவொண்சுடரே நறையூர்நின்றநம்பி * உன்
மைம்மானவண்ணமல்லால் மகிழ்ந்தேத்தமாட்டேனே. (ங)

சிறியாயோர்பிள்ளையுமா யுலகுண்டோராலிலைமேல்
உறைவாய் * என்னெஞ்சினுள்ளே யுறைவாய், உறைந்ததுதான் *
அறியாதிருந்தறியேனடியேன், அணிவண்டுகிண்டும் *
நறைவாரும்பொழில்சூழ் நறையூர்நின்றநம்பியோ. (ச)

நீண்டாயைவானவர்கள் நினைந்தேத்திக்காண்பரிதால் *
ஆண்டாயென்றாதரிக்கப் படுவாய்க்குநானடிமை
பூண்டேன் * என்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நாண்தானுனக்கொழிந்தேன் நறையூர்நின்றநம்பியோ. (ரு)

எந்தாதைதாதையப்பா லெழுவர்பழவடிமை
வந்தார் * என்னெஞ்சினுள்ளே வந்தாயைப்போகலொட்டேன் *
அந்தோ ! என்னாருயிரே ! அரசே யருளெனக்கு *
நந்தாமல்தந்தவெந்தாய் ! நறையூர்நின்றநம்பியோ !. (சு)

மன்னஞ்சவாயிரந்தோள் மழுவில்துணித்தமைந்தா ! *
என்னெஞ்சத்துள்ளிருந் திங்கினிப்போய்ப்பிறரொருவர் *
வன்னெஞ்சம்புக்கிருக்க வொட்டேன் வளைத்துவைத்தேன் *
நன்னெஞ்ச † வன்னம்மன்னும் நறையூர்நின்றநம்பியோ. (எ)

எப்போதும்பொன்மலரிட் டிமையோர்தொழுது * தங்கள்
கைப்போதுகொண்டிறைஞ்சிக் கழல்மேல்வணங்கநின்றாய் *
இப்போதென்னெஞ்சினுள்ளே புகுந்தாயைப்போகலொட்டேன் *
நல்போதுவண்டுகிண்டும் நறையூர்நின்றநம்பியோ. (அ)

---

† அன்னம் - பிராட்டி.

ஊனேராக்கைதன்னை † யுழந்தோம்பிவைத்தமையால் *
யானுயென்றனக்கா யடியேன்மனம்புகுந்த
தேனே * தீன்கரும்பின்தெளிவே என்சிந்தைதன்னால் *
நானேயெய்தப்பெற்றேன் நறையூர்நின்றநம்பியோ. (௯)

⁂ நன்னீர்வயல்புடைசூழ் நறையூர்நின்றநம்பியை *
‡ கல்நீரமால்வரைத்தோள் கலிகன்றி மங்கையர்கோன் *
சொல்நீரசொல்மாலைசொல்லுவார்கள் * சூழ்விசும்பில்
நன்னீர்மையால்மகிழ்ந்து நெடுங்காலம்வாழ்வாரே. (௧0)

புள் ஒடா எம்மான் சிறியாய் நீண்டாய் எந்தாதை மன் எப்போ ஊனே நன்னீர் சினவில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௩-வது, சினவில்.

திருநறையூர் நம்பிவிஷயம்.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

மோஹனராகம்-ரூபகதாளம்.

⁂ சினவில்செங்கணரக்கருயிர்மாளச்
செற்றவில்லியென்று கற்றவர்தந்தம்
மனமுட்கொண்டு - * என்றுமெப்போதும்
நின்றேத்தும்மாமுனியை, மரமேழெய்த மைந்தனை *
$ நனவில்சென்றார்க்கும் நண்ணற்கரியானை
நானடியேன்நறையூர்நின்றநம்பியை *
கனவில்கண்டேனின்றுகண்டமையாலென்
கண்ணிணைகள்களிப்பக்களித்தேனே. (௧)

தாய்நினைந்தகன்றேயொக்க வென்னையும்
தன்னையேநினைக்கச்செய்து, தானெனக்
காய் * நினைந்தருள்செய்யுமப்பனை
அன்றிவ்வையகமுண்டுமிழ்ந்திட்ட
வாயனை * மகரக்குழைக்காதனை
மைந்தனை மதிள்கோவலிடைகழி
யாயனை * அமரர்க்கரியேற்றை யென்
னன்பனையன்றி யாதரியேனே. (௨)

வந்தநாள்வந்தென்நெஞ்சிடங்கொண்டான்
மற்றோர்நெஞ்சறியான் * அடியேனுடைக்
சிந்தையாய்வந்து § தென்புலர்க்கென்னைச்
சேர்கொடா னிதுசிக்கெனப்பெற்றேன் *

† உழந்து ஓம்பி - ப்ரயாஸப்பட்டு வளர்த்து. ‡ கல் - த்வநி. $ நனவு-கனவுக்கு எதிர்த்தட்டு : - ஜாகரிதாதெளிவு. § தென்புலர் - யமபடர்.

கொந்துலாம்பொழில்சூழ்குடந்தைத்தலைக்
  கோவினை, குடமாடியகூத்தனை *
எந்தையையெந்தைதந்தைதம்மானை
  எம்பிரானையெத்தால்மறக்கேனே. (௩)

உரங்களாலியன்றமன்னர்மாளப்
  பாரதத்தொருதே ரைவர்க்காய்ச்சென்று - *
இரங்கியூர்ந்தவர்க்கின்னருள்செய்யும்
  எம்பிரானை, வம்பார்புனல்காவிரி *
அரங்கமாளியென்னாளிவிண்ணாளி
  ஆழிசூழிலங்கைமலங்கச்சென்று *
சரங்களாண்டதண்டாமரைக்கண்ணனுக்
  கன்றி யென்மனம்தாழ்ந்துநில்லாதே. (௪)

ஆங்குவெந்நரகத்தழுந்தும்போ தஞ்சே
  லென்றடியேனையங்கேவந்து
தாங்கு * தாமரையன்னபொன்னாரடி
  யெம்பிரானை * உம்பர்க்கணியாய்நின்ற
வேங்கடத்தரியைப்பரிகீறியை
  வெண்ணெயுண் டுரலினிடையாப்புண்ட
தீங்கரும்பினை * தேனை நன்பாலினை
  யன்றி யென்மனம்சிந்தைசெய்யாதே. (௫)

எட்டனைப்பொழுதாகிலு மென்று
  மென்மனத்தகலாதிருக்கும்புகழ் *
தட்டலர்த்தபொன்னே யலர்கோங்கின்
  தாழ்பொழில்திருமாலிருஞ்சோலையங்
கட்டியை * கரும்பீன்றவின்சாற்றைக்
  காதலால்மறைநான்குமுன்னோதிய
பட்டனை * பரவைத்துயிலேற்றை யென்
  பண்பனையன்றிப் பாடல்செய்யேனே. (௬)

பண்ணினின்மொழியாழ்நரம்பில்பெற்ற
  பாலையாகியிங்கேபுகுந்து - * என்
கண்ணும்நெஞ்சும்வாயுமிடங்கொண்டான்
  கொண்டபின்மறையோர்மனந்தன்னுள் *
விண்ணுளார்பெருமானையெம்மானை
  வீங்குநீர்மகரம்திளைக்கும்கடல்
வண்ணன் * மாமணிவண்ணனெம்மண்ணல்
  வண்ணமேயன்றி வாயுரையாதே. (௭)

இனியெப்பாவம்வந்தெய்தும்சொல்லீர்
 எமக்கிம்மையேயருள்பெற்றமையால் * அடும்
‡ துனியைத்தீர்த்தின்பமேதருகின்றதோர்
 தோற்றத்தொன்னெறியை * வையம்தொழப்படும்
முனியை, வானவரால்வணங்கப்படும்
 முத்தினைப் பத்தர்தாம்நுகர்கின்றதோர்
கனியை * காதல்செய்தென் னுள்ளங்கொண்ட
 கள்வனை யின்றுகண்டுகொண்டேனே. (அ)
என்செய்கேனடியேனுரையீர் இதற்கென்று
 மென்மனத்தேயிருக்கும்புகழ் *
தஞ்சையாளியைப் பொன்பெயரோன்
 நெஞ்சமன்றிடந்தவனை, தழலேபுரை *
மின்செய்வாளரக்கன்நகர்பாழ்படச்
 சூழ்கடல்சிறைவைத்து, இமையோர்தொழும் *
பொன்செய்மால்வரையை மணிக்குன்றினை
 யன்றி யென்மனம்போற்றியென்னாதே. (௯)
‡‡ தோடுவிண்டலர்பூம்பொழில்மங்கையர்
 தோன்றல் வாள்கலியன் திருவாலி
நாடன் * நன்னறையூர்நின்றநம்பிதன்
 நல்லமாமலர்ச்சேவடிசென்னிச்
சூடியும் தொழுதுமெழுந்தாடியும்
 தொண்டர்கட்கவன் சொன்னசொல்மாலை *
பாடல்பத்திவை பாடுமின்தொண்டீர்
 பாடநும்மிடைப்பாவம்நில்லாவே. (௧0)

சினவில் தாய் வந்த உரங்கள் ஆங்கு எட்டனை பண்ணின் இனி யென் செய்கேன் தோடு கண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ௪-வது, கண்சோர.

திருச்சேறை சாரநாதப்பெருமாள்விஷயம்.
அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
அசாவேரிராகம்-அடதாளம்.

‡‡ கண்சோரவெங்குருதிவந்திழிய வெந்தழல்போல்கூந்தலாளை *
மண்சேரமுலையுண்டமாமதலாய் வானவர்தம்கோவேயென்று *
விண்சேருமிளந்திங்களகடுரிஞ்சு மணிமாடமல்கு * செல்வத் [ரே.
தண்சேறையெம்பெருமான் தாள்தொழுவார் காண்மினென் தலைமேலா
அம்புருவவரிநெடுங்க ணலர்மகளைவரையகலத்தமர்ந்து * மல்லல் [ம்
கொம்புருவவிளங்கனிமேலிளங்கன்றுகொண்டெறிந்தகூத்தர்போலா
வம்பலரும்தண்சோலைவண்சேறை வானுந்துகோயில்மேய * [ருரே.
எம்பெருமான்தாள்தொழுவா ரெப்பொழுதுமென்மனத்தேயிருக்கின்

‡ துனி - துக்கம்; ப்ராப்திப்ரதிபந்தகமான கர்மங்கள்.

மீதோடிவாளெயிறு மின்னிலகமுன்விலகுமுருவினனை *
காதோடுகொடிமூக்கன்றுடனறுத்த கைத்தலத்தாவென்றுநின்று *
தாதோடுவண்டலம்பும் தண்சேறையெம்பெருமான் தாளையேத்தி *
போதோடுபுனல்தூவும்புண்ணியரேவிண்ணவரில்பொலிகின்றாரே. ()

தேராளும்வாளரக்கன்தென்னிலங்கைவெஞ்சமத்துப்பொன்றிவீழ *
போராளும்சிலையதனால்பொருகணைகள்போக்குவித்தாயென்று*நாளு
தாராளும்வரைமார்பன் தண்சேறையெம்பெருமானும்பராளும் * [ம்
பேராளன்பேரோதும்பெரியோரை யொருகாலும்பிரிகிலேனே. (ச)

வந்திக்கும்மற்றவர்க்கும் மாசுடம்பில்வல்லமணர்தமக்குமல்லேன் *
முந்திச்சென்றரியுருவாயிரணியனைமுரணழித்தமுதல்வர்க்கல்லால் *
சந்தப்பூமலர்ச்சோலைத்தண்சேறையெம்பெருமான்தாளை * நாளும்
சிந்திப்பார்க்கென்னுள்ளம்தேனூறியெப்பொழுதும்தித்திக்குமே. ()

பண்டேனமாயுலகையன்றிடந்த பண்பாளாவென்றுநின்று * [றேன்
தொண்டானேன்திருவடியேதுணையல்லால் துணையிலேன்சொல்கின்
வண்டேந்தும்மலர்ப்புறவில்வண்சேறையெம்பெருமானடியார்தம்மை
கண்டேனுக்கிதுகாணீரென் நெஞ்சும்கண்ணிணையும்களிக்குமாறே.()

பைவிரியும்வரியரவில்படுகடலுள் துயிலமர்ந்தபண்பாவென்றும் *
மைவிரியும்மணிவரைபோல் மாயவனேயென்றென்றும், வண்டார்நீலம் *
செய்விரியும்தண்சேறையெம்பெருமான் திருவடியைச்சிந்தித்தேற்கு - *என்
ஐயறிவும்கொண்டானுக் காளானார்க்காளாமென்னன்புதானே. (எ)

உண்ணாதுவெங்கூற்றம் ஓவாதுபாவங்கள்சேரா * மேலை
விண்ணோரும்மண்ணோரும்வந்திறைஞ்சும் மென்தளிர்போலடியினானை
பண்ணாரவண்டியம்பும்பைம்பொழில்சூழ்தண்சேறையம்மான்றன்னை
கண்ணாரக்கண்டுருகிக் கையாரத்தொழுவாரைக்கருதுங்காலே. (அ)

கள்ளத்தேன்பொய்யகத்தேனாதலால்போதொருகால்கவலையென்னும்*
வெள்ளத்தேற்கென்கொலோ, விளைவயலுள்கருநீலம் * களைஞர்தாளால்
தள்ளத்தேன்மணநாறும்தண்சேறையெம்பெருமான்தாளை * நாளும்
உள்ளத்தேவைப்பாருக் கிதுகாணீரென்னுள்ளமுருகுமாறே. (கூ)

⁂ பூ § மாண்சேர்கருங்குழலார்போல்நடந்துவயல்நின்றபெடையோடு*அன்
தேமாவினின்னிழலில்கண்டுயிலும்தண்சேறையம்மான்றன்னை * [னம்
‡ வாமாந்தேர்ப்பரகாலன்கலிகன்றியொலிமாலைகொண்டுதொண்டீர் * [றே.
தூமாண்சேர்பொன்னடிமேல்சூட்டுமின் நும்துணைக்கையால்தொழுதுநின்

கண் அம்பு மீதோடி தேராளும் வந்தி பண்டு பைவிரி உண்ணாது கள்ளம் பூமாண் தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



§ மாண்பு - அழகு. ‡ வாமாந்தேர்—வாம் - தாவிவருகிற, மா-குதிரை பூண்ட, தேர்.

## ரு-வது, தந்தைகால்.



*திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.*
*அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.*
**சௌராஷ்டிரராகம்-அடதாளம்.**

⁂ தந்தைகாலில்பெருவிலங்குதாளவிழ * நள்ளிருட்கண்வந்த
எந்தைபெருமானார் மருவிநின்றவூர்போலும் *
முந்திவானம்மழைபொழியும் மூவாவுருவில்மறையாளர் *
அந்திமூன்றுமனலோம்பு மணியார்வீதியழுந்தூரே. (க)
பாரித்தெழுந்தபடைமன்னர்தம்மையாள * பாரதத்துத்
தேரில்பாகனாயூர்ந்த தேவதேவனூர்போலும் *
நீரில்பணைத்தநெடுவாளைக் கஞ்சிப்போனகுருகினங்கள் *
‡ ஆரல்கவுளோடருகணையு மணியார்வயல்சூழழுந்தூரே. (உ)
செம்பொன்மதிள்சூழ்தென்னிலங்கைக்கிறைவன்சிரங்கள்ஐயிரண்டும்
§ உம்பர்வாளிக்கிலக்காக வுதிர்த்தவுரவோனூர்போலும் *
கொம்பிலார்ந்தமாதவிமேல் கோதிமேய்ந்தவண்டினங்கள் *
அம்பராவும்கண்மடவார் $ ஐம்பாலணையுமழுந்தூரே. (ங)
வெள்ளத்துள்ளோராலிலைமேல்மேவியடியேன்மனம்புகுந்து * என்
உள்ளத்துள்ளும்கண்ணுள்ளும் நின்றார்நின்றவூர்போலும் *
புள்ளுப்பிள்ளைக்கிரைதேடிப் போனகாதல்பெடையோடும் *
அள்ளல்செறுவில்கயல்நாடு மணியார்வயல்சூழழுந்தூரே. (ச)
பகலுமிரவும்தானேயாய்ப் பாரும்விண்ணும்தானேயாய் *
நிகரில்சுடராயிருளாகி நின்றார்நின்றவூர்போலும் *
துகிலின்கொடியும்தேர்த்துகளும் துன்னிமாதர்கூந்தல்வாய் *
அகிலின்புகையால்முகிலேய்க்கு மணியார்வீதியழுந்தூரே. (ரு)
ஏடிலங்குதாமரைபோல் செவ்வாய்முறுவல்செய்தருளி *
¶ மாடுவந்தென்மனம்புகுந்து நின்றார்நின்றவூர்போலும் *
நீடுமாடத்தனிச்சூலம்போழ்க் கொண்டல்துளிதூவ *
ஆடலரவத்தார்போவா அணியார்வீதியழுந்தூரே. (சு)
மாலைப்புகுந்துமலரணைமேல்வைகி யடியேன்மனம்புகுந்து - என்
நீலக்கண்கள்பனிமல்கநின்றார் நின்றவூர்போலும் *
வேலைக்கடல்போல்நெடுவீதிவிண்தோய† சுதைவெண்மணிமாடத்து-
ஆலைப்புகையாலழல்கதிரை மறைக்கும்வீதியழுந்தூரே. (எ)
வஞ்சிமருங்குலிடைநோவ மணந்துநின்றகனவகத்து -* என்
நெஞ்சுநிறையக்கைகூப்பி நின்றார்நின்றவூர்போலும் *
பஞ்சியன்னமெல்லடிநற்பாவைமார்கள் * ஆடகத்தின்
அம்சிலம்பினார்ப்போவா அணியார்வீதியழுந்தூரே. (அ)

---

‡ ஆரல்-சிறுமீனை, கவுளோடு-கதுப்பில்கொண்டு. § உம்பர்வாளி-ப்ரஹ்மாஸ்த்ரம். $ ஐம்பால்—கந்தம், மது, மார்த்தவம், ஸ்நிக்ததை, இருட்சி, ஆக அஞ்சுவகையான மயிர்முடி. ¶ மாடு-அருகு. † சுதை-சுண்ணம்பு.

என்னைம்புலனுமெழிலுங்கொண் டிங்கேநெருனலெழுந்தருளி *
பொன்னங்கலைகள்மெலிவெய்தப் போனபுனிதரூர்போலும் *
மன்னுமுதுநீரரவிந்தமலர்மேல் வரிவண்டிசைபாட *
அன்னம்பெடையோடுடன்நாடு மணியார்வயல்சூழழுந்தூரே. (௯)

⁂ நெல்லில்குவளைக்கண்காட்ட நீரில்குமுதம்வாய்காட்ட *
அல்லிக்கமலமுகங்காட்டும் கழனியழுந்தூர்நின்றானை *
வல்லிப்பொதும்பில்குயில்கூவும் மங்கைவேந்தன்பரகாலன் *
சொல்லில்பொலிந்ததமிழ்மாலை சொல்லப்பாவம்நில்லாவே. (௧0)

தந்தை பாரித்துச் செம்பொன் வெள்ளத்து பகலேடு மாலை வஞ்சி என் நெல்லில் சிங்கம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௯-வது, சிங்கமதாய்.



### திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.

கலிவிருத்தம்.

**மத்தியமாவதிராகம்-ரூபகதாளம்.**

⁂ சிங்கமதாயவுணன் திறலாகம் முன்கீண்டுகந்த *
சங்கமிடத்தானைத் தழலாழிவலத்தானை *
செங்கமலத்தயனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அங்கமலக்கண்ணனை அடியேன்கண்டுகொண்டேனே. (௧)

கோவானார்மடியக் கொலையார்மழுக்கொண்டருளும் *
மூவாவானவனை முழுநீர்வண்ணனை * அடியார்க்கு
ஆ! ஆ! என்றிரங்கித் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
தேவாதிதேவனை யான்கண்டுகொண்டுதிளைத்தேனே. (௨)

உடையானை யொலிநீருலகங்கள்படைத்தானை *
விடையானோடவன்று விறலாழிவிசைத்தானை *
அடையார்தென்னிலங்கையழித்தானை அணியழுந்தூர்
உடையானை * அடியேனடைந்துய்ந்துபோனேனே. (௩)

குன்றால்மாரிதடுத்தவனைக் குலவேழமன்று
பொன்றாமை * அதனுக்கருள்செய்தபோரேற்றை *
அன்றாவின்நறுநெய்யமர்ந்துண்ண அணியழுந்தூர்
நின்றானை * அடியேன்கண்டுகொண்டுநிறைந்தேனே. (௪)

கஞ்சனைக்காய்ந்தானை கண்ணமங்கையுள்நின்றானை *
வஞ்சனப்பேய்முலையூ டுயிர்வாய்மடுத்துண்டானை *
செஞ்சொல்நான்மறையோர் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அஞ்சனக்குன்றந்தன்னை யடியேன்கண்டுகொண்டேனே. (௫)

பெரியானையமரர்தலைவற்கும் பிரமனுக்கும் *
† உரியானையுகந்தானவனுக்கு முணர்வதனுக்
கரியானை * அழுந்தூர்மறையோர்களடிபணியும்
கரியானை * அடியேன்கண்டுகொண்டு களித்தேனே. (௬)

திருவாழ்மார்வன்றன்னைத் திசைமண்ணீரெரிமுதலா *
உருவாய்நின்றவனை யொலிசேரும்மாருதத்தை *
அருவாய்நின்றவனைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கருவார்கற்பகத்தைக் கண்டுகொண்டுகளித்தேனே. (எ)

நிலையாளாகவென்னையுகந்தானை * நிலமகள்தன்
முலையாள்வித்தகனை முதுநான்மறைவீதிதொறும் *
அலையாரும்கடல்போல்முழங்கும்தென்னழுந்தையில்மன்னிநின்ற *
கலையார்சொற்பொருளைக் கண்டுகொண்டுகளித்தேனே. (அ)

⁂ பேரானைக்குடந்தைப்பெருமானை * இலங்கொளிசேர்
வாரார்வனமுலையாள் மலர்மங்கைநாயகனை *
ஆராவின்னமுதைத் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
காரார்கருமுகிலைக் கண்டுகொண்டுகளித்தேனே. (௯)

⁂ திறல்முருகனனையார் தென்னழுந்தையில்மன்னிநின்ற *
அறமுதல்வனவனை அணியாலியர்கோன் * மருவார்
கறைநெடுவேல்வலவன் கலிகன்றிசொல்ஐயிரண்டும் *
முறைவழுவாமைவல்லார் முழுதாள்வர்வானுலகே. (கO)

சிங்கம் கோ உடையான் குன்றல் கஞ்சன் பெரியான் திரு நிலை பேரான் திறல் திரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, திருவுக்கும்.



### திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சேஞ்சுருட்டிராகம்-ரூபகதாளம்.

திருவுக்கும்திருவாகியசெல்வா !
தெய்வத்துக்கரசே ! செய்யகண்ணா ! *
உருவச்செஞ்சுடராழிவல்லானே !
உலகுண்டவொருவா ! திருமார்பா ! *
ஒருவற்காற்றியுய்யும்வகையென்றால்
உடனின்றைவரென்னுள்புகுந்து - * ஒழியா
தருவித்தின்றிட அஞ்சிநின்னடைந்தேன்
அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. (க)

† உரியானையுகந்தான்—ஆனை உரியை-ஆனைத்தோலை, உகந்த ருத்ரன்.

பந்தார்மெல்விரல்நல்வளைத்தோளி
    பாவைபூமகள்தன்னொடுமுடனே
வந்தாய் * என்மனத்தேமன்னிநின்றாய்
    மால்வண்ணா ! மழைபோலொளிவண்ணா ! *
சந்தோகா ! பௌழியா ! தைத்திரியா !
    சாமவேதியனே ! நெடுமாலே *
அந்தோ ! நின்னடியன்றிமற்றறியேன்
    அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. (உ)

நெய்யாராழியும்சங்கமுமேந்தும்
    நீண்டதோளுடையாய் * அடியேனைச்
செய்யாதவுலகத்திடைச்செய்தாய்
    சிறுமைக்கும்பெருமைக்குமுள்புகுந்து *
பொய்யாலைவரென்மெய்குடியேறிப்
    போற்றிவாழ்வதற்கஞ்சிநின்னடைந்தேன் *
ஐயா ! நின்னடியன்றிமற்றறியேன்
    அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே !. (ங)

பரனே ! பஞ்சவன்பவுழியன்சோழன்
    பார்மன்னர்மன்னர்தாம்பணிந்தேத்தும்
வரனே * மாதவனே ! மதுசூதா ! மற்றோர்
    நல்துணைநின்னலாலிலேன்காண் *
நரனே ! நாரணனே ! திருநறையூர்நம்பீ !
    எம்பெருமான் ! உம்பராளும்
அரனே * ஆதிவராகமுன்னானாய் !
    அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே. (ச)

விண்டான்விண்புகவெஞ்சமத்தரியாய்ப்
    பரியோன்மார்வகம்பற்றிப்பிளந்து *
பண்டானுய்யவோர்மால்வரையேந்தும்
    பண்பாளா ! பரனே ! பவித்திரனே ! *
கண்டேன்நான் கலியுகத்ததன்தன்மை
    கருமமாவது மென்றனக்கறிந்தேன் *
அண்டா ! நின்னடியன்றிமற்றறியேன்
    அழுந்தூர்மேல்திசை நின்றவம்மானே. (ரு)

தோயாவின்தயிர்நெய்யமுதுண்ணச்
    சொன்னார்சொல்லிநகும்பரிசே * பெற்ற
தாயாலாப்புண்டிருந்தழுதேங்கும்
    தாடாளா ! தரையோர்க்கும்விண்ணோர்க்கும்
சேயாய் * கிரேததிரேததுவாபர
    கலியுகமிவைநான்குமுனானாய் *
ஆயாநின்னடியன்றி மற்றறியேன்
    அழுந்தூர்மேல்திசை நின்றவம்மானே. (சா)

கறுத்துக்கஞ்சனையஞ்சமுனிந்தாய்
　　கார்வண்ணா ! கடல்போல் † ஒளி ‡ வண்ணா *
இறுத்திட்டான் விடையேழும்முன்வென்றாய்
　　எந்தா யந்தரமேழுமுனாய் *
பொறுத்துக்கொண்டிருந்தால்பொறுக்கொணா
　　போகமேநுகர்வான்புகுந்து - * ஐவர்
அறுத்துத்தின்றிடவஞ்சி நின்னடைந்தேன்
　　அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே !. (எ)

நெடியானே கடி $ ஆர்கலிநம்பீ !
　　நின்னையேநினைந்திங்கிருப்பேனை *
கடியார்காளைய ரைவர்புகுந்து
　　காவல்செய்தவக்காவலைப்பிழைத்து *
குடிபோந்துன்னடிக்கீழ்வந்துபுகுந்தேன்
　　கூறைசோறிவைதந்தெனக்கருளி *
அடியேனைப்பணியாண்டுகொ ளெந்தாய் !
　　அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே !. (அ)

கோவா யைவரென்மெய்குடியேறிக்
　　கூறைசோறிவை தாவென்றுகுமைத்துப்
போகார் * நானவரைப்பொறுக்ககிலேன்
　　புனிதா ! புட்கொடியாய் ! நெடுமாலே ! *
தீவாய்நாகணையில் துயில்வானே !
　　திருமாலே ! இனிச்செய்வதொன்றறியேன் *
§ ஆவா வென்றடியேற்கிறையிரங்காய்
　　அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானே!. (கூ)

⁂ அன்னமன்னுபைம்பூம்பொழில்சூழ்ந்த
　　அழுந்தூர்மேல்திசைநின்றவம்மானை *
கன்னிமன்னுதிண்டோள்கலிகன்றி
　　ஆலிநாடன் மங்கைக்குலவேந்தன் *
சொன்னவின்தமிழ் நன்மணிக்கோவை
　　தூயமாலையிவைபத்தும்வல்லார் *
மன்னிமன்னவராயுலகாண்டு மான
　　வெண்குடைக்கீழ்மகிழ்வாரே. (கO)

திருப் பந்தார் நெய் பரனே விண் தோயாக் கறுத்து நெடியானே கோவாய் அன்னம் செங்கமலம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† ஒளி-நிறம். ‡ வண்ணம்-ஸ்வபாவம். $ ஆர்கலி-கடல். § ஆ ! ஆ ! என்று.

## அ-வது, செங்கமலம்.

திருவழுந்தூர் ஆமருவியப்பன்விஷயம்.
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
பியாகடைராகம்-ஆதிதாளம்.

‡‡ செங்கமலத்திருமகளும் புவியும்செம்பொன்
திருவடியினிணைவருடமுனிவரேத்த *
வங்கமலிதடங்கடலுள நந்தனென்னும்
வரியரவினணைத்துயின்றமாயோன்காண்மின் *
எங்குமலிநிறைபுகழ்நால்வேதம்ஐந்து
வேள்விகளும்கேள்விகளுமியன்றதன்மை *
அங்கமலத்தயனனையார் பயிலும்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (க)

முன்னிவ்வுலகேழுமிருள்மண்டியுண்ண
முனிவரொடுதானவர்கள் திசைப்ப * வந்து
பன்னுகலைநால்வேதப்பொருளையெல்லாம்
பரிமுகமாயருளியவெம்பரமன்காண்மின் *
செந்நெல்மலிகதிர்க்கவரி வீசச்சங்க
மவைமுரலச் செங்கமலமலரையேறி *
அன்னமலிபெடையோடு மமரும்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (உ)

† குலத்தலையமதவேழம்பொய்கைபுக்குக்
கோள்முதலைபிடிக்கஅதற்கனுங்கிநின்று *
‡ நிலத்திகழும்மலர்ச்சுடரேசோதீயென்ன
நெஞ்சிடர்தீர்த்தருளியவென்நிமலன்காண்மின் *
மலைத்திகழ்சந்தகில்கனகமணியும்கொண்டு
வந்துந்திவயல்கள்தோறும் மடைகள்பாய *
அலைத்துவரும்பொன்னிவளம் பெருகும்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (ங)

சிலம்புமுதல்கலனணிந்தோர்செங்கண்குன்றம்
திகழ்ந்ததெனத்திருவுருவம்பன்றியாகி *
இலங்குபுவிமடந்தைதனை யிடந்துபுல்கி
எயிற்றிடைவைத்தருளியவெம்மீசன்காண்மின் *
புலம்புசிறைவண்டொலிப்பப் § பூகம்தொக்க
$ பொழில்கடொறும்குயில்கூவமயில்களால *
அலம்புதிரைப்புனல்புடைசூழ்ந் தழகார்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (ச)

---

† குலத்தலைய-நல்ல ஆகரத்திற்பிறந்த. ‡ நிலா என்பது நில எனக்குறுகிற்று. § பூகம்-கமுகு. $ "பொழில்தோறும்" என்றும் பாடம்.

சினமேவுமடலரியினுருவமாகித்
திறல்மேவுமிரணியனதாகம்கீண்டு *
மனமேவுவஞ்சனையால்வந்தபேச்சி
மாளவுயிர்வவ்வியவெம் மாயோன்காண்மின் *
இனமேவுவரிவளைக்கையேந்தும்கோவை
யேய்வாயமரதகம்போல்கிளியினின்சொல் *
அனமேவுநடைமடவார் பயிலும்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (௫)

வானவர்தம்துயர்தீரவந்துதோன்றி
மாணுருவாய்மூவடிமாவலியைவேண்டி *
தானமரவேழுலகுமளந்தவென்றித்
தனிமுதல்சக்கரப்படையென்தலைவன்காண்மின் *
தேனமரும்பொழில்தழுவுமெழில்கொள்வீதிச்
செழுமாடமாளிகைகள்கூடந்தோறும் *
ஆனதொல்சீர்மறையாளர் பயிலும்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (௬)

பந்தணைந்தமெல்விரலாள்சீதைக்காகிப்
பகலவன்மீதியங்காதவிலங்கைவேந்தன் *
அந்தமில்திண்கரம்சிரங்கள்புரண்டுவீழ
அடுகணையாலெய்துகந்தவம்மான்காண்மின் *
செந்தமிழும்வடகலையும்திகழ்ந்தநாவர்
திசைமுகனேயனையவர்கள், செம்மைமிக்க *
அந்தணர்தமாகுதியின் புகையார்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (௭)

கும்பமிகுமதவேழம் குலையக்கொம்பு
பறித்து மழவிடையடர்த்துக் குரவைகோத்து *
வம்பவிழும்மலர்க்குழலாளாய்ச்சிவைத்த
தயிர்வெண்ணெயுண்டுகந்தமாயோன்காண்மின் *
செம்பவளமரதகநன்முத்தம்காட்டத்
திகழ்பூகம்கதலிபலவளம்மிக்கெங்கும் *
அம்பொன்மதிள்பொழில் புடைசூழ்ந்தழகார்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (௮)

ஊடேறுகஞ்சனொடுமல்லும்வில்லும்
ஒண்கரியுமுருள்சகடுமுடையச்செற்ற *
நீடேறுபெருவலித்தோளுடையவென்றி
நிலவுபுகழ்நேமியங்கைநெடியோன்காண்மின் *

சேடேறுபொழில்தழுவுமெழில்கொள்வீதித்
திருவிழவில்மணியணிந்ததிண்ணைதோறும் *
‡ ஆடேறுமலர்க்குழலார் பயிலுஞ்செல்வத்
தணியழுந்தூர்நின்றுகந்தவமரர்கோவே. (கூ)

⁂ பன்றியாய்மீனாகி யரியாய்ப்பாரைப்
படைத்துக்காத்துண்டுமிழ்ந்தபரமன்றன்னை *
அன்றமரர்க்கதிபதியுமயனுஞ்சேயும்
அடிபணியவணியழுந்தூர்நின்றகோவை *
கன்றிநெடுவேல்வலவனாலிநாடன்
கலிகன்றியொலிசெய்தவின்பப்பாடல் *
ஒன்றினொடுநான்குமோரைந்தும்வல்லார்
ஒலிகடல்சூழுலகாளுமும்பர்தாமே. (கo)

செங்கமல முன் குலச் சிலம்பு சின வான் பந்து கும்ப மூடேறு பன்றி கள்ளம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, கள்ளம்மனம்.



திருச்சிறுபுலியூர் அருள்மாகடல்நாயகன்விஷயம்.
கலிவிருத்தம்.
அபநுபராகம்-ஆதிதாளம்.

⁂ கள்ளம்மனம்விள்ளும்வகை கருதிக்கழல்தொழுவீர் *
வெள்ளம்முதுபரவைத்திரைவிரிய * கரையெங்கும்
தெள்ளும்மணிதிகழும் சிறுபுலியூர்ச்சலசயனத்
துள்ளும் * எனதுள்ளத்துள்ளுமுறைவாரையுள்ளீரே. (க)

தெருவில்திரிசிறுநோன்பியர் செஞ்சோற்றொடுகஞ்சி
மருவி * பிரிந்தவர்வாய்மொழிமதியாதுவந்தடைவீர் *
திருவில்பொலிமறையோர் சிறுபுலியூர்ச்சலசயனத்து - *
உருவக்குறளடிகளடி யுணர்மினுணர்வீரே. (உ)

பறையும்வினைதொழுதுய்மின்நீர் பணியுஞ்சிறுதொண்டீர் ! *
அறையும்புனலொருபால் வயலொருபால் பொழிலொருபால் *
சிறைவண்டினமறையும் சிறுபுலியூர்ச்சலசயனத்
துறையும் * இறையடியல்ல தொன்றிறையுமறியேனே. (ங)

வானார்மதிபொதியுஞ்சடை $ மழுவாளியொடொருபால் *
தானாகியதலைவனவ னமரர்க்கதிபதியாம் *
தேனார்பொழில்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனத்
தானாயனது * அடியல்லதொன்றறியேனடியேனே. (ச)

‡ ஆடு-பரிமளம். $ மழுவாளி-ருத்ரன்.

நந்தாநெடுநரகத்திடை நணுகாவகை * நாளும்
எந்தாயெனவிமையோர்தொழுதேத்துமிடம் * எறிநீர்ச்
செந்தாமரைமலரும் சிறுபுலியூர்ச்சலசயனத்து - *
அந்தாமரைபடியா யுனதடியேற்கருள்புரியே. (ரு)

முழுநீலமுமலராம்பலு மரவிந்தமும்விரவி *
கழுநீரொடுமடவாரவர் கண்வாய்முகமலரும் *
செழுநீர்வயல்தழுவும் சிறுபுலியூர்ச்சலசயனம் *
தொழுநீர்மையதுடையா ரடிதொழுவார்துயரிலரே. (சு)

⁂ சேயோங்குதண்திருமாலிருஞ்சோலைமலையுறையும்
மாயா * எனக்குரையாயிது மறைநான்கினுளாயோ *
தீயோம்பு கைமறையோர்ச் சிறுபுலியூர்ச்சலசயனத்
தாயோ * உனதடியார்மனத்தாயோ வறியேனே. (எ)

மையார்வரிநீலம் மலர்க்கண்ணார்மனம்விட்டிட்டு - *
உய்வானுனகழலேதொழுதெழுவேன் * கிளிமடவார்
செவ்வாய்மொழிபயிலும் சிறுபுலியூர்ச்சலசயனத்து - *
ஐவாயரவணைமேலுறையமலா ! அருளாயே. (அ)

⁂ கருமாமுகிலுருவா கனலுருவா புனலுருவா *
பெருமால்வரையுருவா பிறவுருவா நினதுருவா *
திருமாமகள்மருவும் சிறுபுலியூர்ச்சலசயனத்து - *
அருமாகடலமுதே யுனதடியேசரணமே. (கூ)

⁂ சீரார்நெடுமறுகில் சிறுபுலியூர்ச்சலசயனத்து - *
ஏரார்முகில்வண்ணன்றன்னை யிமையோர்பெருமானை *
காரார்வயல்மங்கைக்கிறை கலியனொலிமாலை *
பாராரிவைபரவித்தொழப் பாவம்பயிலாவே. (க0)

கள்ளம் தெருவில் பறை வான் நந்தா முழு சேயோங்கு மையார் கரு சீரார் பெரும்புற.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## க0-வது, பெரும்புறக்கடல்.



திருக்கண்ணமங்கை பக்தவத்ஸலபிரான்விஷயம்.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

தோடிராகம்-அடதாளம்.

⁂ பெரும்புறக்கடலையடலேற்றினைப்
பெண்ணையாணை * எண்ணில்முனிவர்க்
கருள்தரும்தவத்தை முத்தின்திரள்கோவையைப்
பத்தராவியை நித்திலத்தொத்தினை *

அரும்பினையலரை யடியேன்மனத்தாசையை
அமுதம்பொதி யின்சுவை *
கரும்பினைக், கனியைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (க)

மெய்ந்நலத்தவத்தைத் திவத்தைத்தரும்
மெய்யைப்பொய்யினை, கையிலோர்சங்குடை *
மைந்நிறக்கடலைக்கடல் வண்ணனைமாமலை
ஆலிலைப்பள்ளிகொள்மாயனை *
நென்னலைப்பகலையிற்றைநாளினை
நாளையாய்வருந்திங்களையாண்டினை *
கன்னலைக்கரும்பினிடைத்தேறலைக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (உ)

எங்களுக்கருள் செய்கின்றவீசனை
வாசவார்குழலாள் § மலைமங்கைதன்
பங்கனை * பங்கில்வைத்துகந்தான்றன்னைப்
பான்மையைப்பனிமாமதியந்தவழ் *
மங்குலைச், சுடரைவடமாமலை
யுச்சியை, நச்சிநாம்வணங்கப்படும்
கங்குலை * பகலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (ஙு)

பேய்முலைத்தலநஞ்சுண்டபிள்ளையைத்
தெள்ளியார்வணங்கப்படுந்தேவனை *
மாயனைமதிள் கோவலிடைகழி
மைந்தனையன்றி யந்தணர்சிந்தையு
ளீசனை * இலங்கும் சுடர்ச்சோதியை
யெந்தையையெனக் கெய்ப்பினில்வைப்பினை *
காசினைமணியைச் சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (ச)

⁂ ஏற்றினையிமயத்துளெம்மீசனை
யிம்மையைமறுமைக்குமருந்தினை *
ஆற்றலைஅண்டத் தப்புறத்துய்த்திடு
மையனைக்கையி லாழியொன்றேந்திய
கூற்றினை * குருமாமணிக்குன்றினை
நின்றவூர்நின்ற நித்திலத்தொத்தினை
காற்றினைப்புனலைச்சென்றுநாடிக்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (ரு)

§ மலைமங்கை - பார்வதி.

துப்பனைத்துரங்கம்படச் சீறியதோன்றலைச்
சுடர்வான்கலன்பெய்ததோர்
செப்பினை * திருமங்கைமணாளனைத்
தேவனைத்திகழும் பவளத்தொளி
யொப்பனை * உலகேழினையூழியை
ஆழியேந்தியகை யனைஅந்தணர்
கற்பினை * கழுநீர்மலரும்வயல்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (சு)

திருத்தனைத்திசைநான்முகன் தந்தையைத்
தேவதேவனைமூவரில்முன்னிய
விருத்தனை * விளங்குஞ்சுடர்ச்சோதியை
விண்ணைமண்ணினைக்கண்ணுதல்கூடிய
$ அருத்தனை * அரியைப் பரிகீறிய
வப்பனைஅப்பிலா ரழலாய்நின்ற
கருத்தனை * களிவண்டறையும்பொழில்
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (எ)

வெஞ்சினக்களிற்றை விளங்காய்வீழக்
கன்றுவீசியவீசனை * பேய்மகள்துஞ்ச
நஞ்சுச்வைத்துண்டதோன்றலைத்
தோன்றல்வாளரக்கன்கெடத்தோன்றிய
நஞ்சினை * அமுதத்ினைநாதனை
நச்சுவாருச்சிமேல் நிற்குநம்பியை *
கஞ்சனைத்துஞ்சவஞ்சித்தவஞ்சனைக்
கண்ணமங்கையுள்கண்டுகொண்டேனே. (அ)

பண்ணினைப்பண்ணில்நின்றதோர்பான்மையைப்
பாலுள்நெய்யினை மாலுருவாய்நின்ற
விண்ணினை * விளங்குஞ்சுடர்ச்சோதியை
வேள்வியைவிளக்கினொளிதன்னை *
மண்ணினைமலையையலை நீரினைமாலை
மாமதியை மறையோர்தங்கள்
கண்ணினை * கண்களாரளவும்நின்று
கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனே. (கூ)

‡ கண்ணமங்கையுள் கண்டுகொண்டேனென்று
காதலால்கலிகன்றியுரைசெய்த *
வண்ணவொண்டமிழொன்பதோடொன்றிவை
வல்லராயுரைப்பார், மதியம்தவழ் *

---

$ அருத்தன் - அர்த்தபாகன்.

விண்ணில்விண்ணவராய்மகிழ்வெய்துவர்
மெய்ம்மைசொல்லில்வெண்சங்கமொன்றேந்திய
கண்ண ! * நின்றனக்குங்குறிப்பாகில்
கற்கலாம்கவியின்பொருள்தானே. (க0)

பெரு மெய் எங்கள் பேய் எற்றின் துப்பன் திருத்தன் வெஞ்சினப் பண கண்ணமங்கை சிலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

# எட்டாம்பத்து.

## க-வது, சிலையிலங்கு.

திருக்கண்ணபுரம் சௌரிராசப்பெருமாள்விஷயம்.
அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
காம்பூஜிராகம்-நுபகதாளம்.

‡‡சிலையிலங்குபொன்னாழிதிண்படைதண்டொண்சங்கமென்கின்றாளால் *
மலையிலங்குதோள்நான்கேமற்றவனுக்கெற்றேகாணென்கின்றாளால் *
முலையிலங்குபூம்பயலைமுன்போட அன்போடியிருக்கின்றாளால் *
கலையிலங்குமொழியாளர் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

‡‡செருவரைமுன்னாசறுத்தசிலையன்றோ கைத்தலத்ததென்கின்றாளால் *
பொருவரைமுன்போர்தொலைத்தபொன்னாழிமற்றொருகையென்கின்றாளால்
ஒருவரையும்நின்னொப்பாரொப்பிலாவென்னப்பாவென்கின்றாளால்*
கருவரைபோல்நின்றானைக்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

துன்னுமாமணிமுடிமேல் துழாயலங்கல்தோன்றுமாலென்கின்றாள் *
மின்னுமாமணிமகரகுண்டலங்கள் வில்வீசுமென்கின்றாளால் *
பொன்னின்மாமணியார மணியாகத்திலங்குமாலென்கின்றாளால் *
கன்னிமாமதிள்புடைசூழ்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.

தாராயதண்டுளபவண்டுழுத வரைமார்பனென்கின்றாளால் *
போரானைக்கொம்பொசித்தபுட்பாகனென்னம்மானென்கின்றாளால்*
ஆரானும்காண்மின்கள் அம்பவளம் வாயவனுக்கென்கின்றாளால் *
கார்வானம்நின்றதிரும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ.()

அடித்தலமும்தாமரையேஅங்கைகளும்பங்கயமேயென்கின்றாளால் *
முடித்தலமும்பொற்பூணு மென்நெஞ்சத்துள்ளகலாதென்கின்றாளால் *
வடித்தடங்கண்மலரவளோ வரையாகத்துள்ளிருப்பாளென்கின்றாளால் *
கடிக்கமலம்கள்ளுகுக்கும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ. (ரு)

பேராயிரமுடையபேராளன் பேராளனென்கின்றாளால் *
ஏரார்கனமகரகுண்டலத்த னெண்தோளனென்கின்றாளால் *
நீரார்மழைமுகிலே நீள்வரையேயொக்குமாலென்கின்றாளால் *
காரார்வயலமரும் கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ. (சு)

செவ்வரத்தவுடையாடையதன்மேலோர் ‡ சிவளிகைக்கச்சென்கின்றாளால்*
அவ்வரத்தவடியிணையுமங்கைகளும் பங்கயமேயென்கின்றாளால் *
மைவளர்க்கும்மணியுருவம்மரதகமோ மழைமுகிலோவென்கின்றாளால் *
கைவளர்க்குமழலாளர்கண்ணபுரத் தம்மானைக்கண்டாள்கொலோ.()

கொற்றப்புள்ளொன்றேறிமன்றாடே வருகின்றானென்கின்றாளால் *
வெற்றிப்போரிந்திரற்குமிந்திரனே யொக்குமாலென்கின்றாளால் *
பெற்றக்காலவனாகம்பெண்பிறந்தோமுய்யோமோவென்கின்றாளால்*
கற்றநூல்மறையாளர்கண்ணபுரத் தம்மானைக்கண்டாள்கொலோ.(அ)

வண்டமரும்வநமாலைமணிமுடிமேல் மணநாறுமென்கின்றாளால் *
உண்டிவர்பாலன்பெனக்கென் றொருகாலும்பிரிகிலேனென்கின்றாளால் *
பண்டிவரைக்கண்டறிவதெவ்வூரில் யாமென்றேபயில்கின்றாளால் *
கண்டவர்தம்மனம்வழங்குங்கண்ணபுரத்தம்மானைக்கண்டாள்கொலோ. (க)

‡‡ மாவளருமென்னோக்கிமாதராள் மாயவனைக்கண்டாளென்று *
காவளரும்கடிபொழில்சூழ்கண்ண புரத்தம்மானைக்கலியன்சொன்ன*
பாவளரும்தமிழ்மாலைபன்னியநூ லிவையைந்துமைந்தும் வல்லார் *
பூவளரும்கற்பகம்சேர்பொன்னுலகில் மன்னவராய்ப்புகழ்தக்கோரே.

சிலை செறு துன்னு தார் அடிப் பேர் செவ்வரத்த கொற்ற வண்டு மாவளரும் தெள்ளியீர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, தெள்ளியீர்.



இதுவுமது.
கலிவிருத்தம்.
சைந்தவிராகம்-அடதாளம்.

‡‡ தெள்ளியீர்தேவர்க்கும் தேவர்திருத்தக்கீர் *
வெள்ளியீர்வெய்யவிழுநிதிவண்ணர் * ஓ !
துள்ளிநீர்க்கண்ணபுரம் தொழுதாளிவள்
கள்வியோ * கைவளைகொள்வதுதக்கதே. (க)

நீணிலாமுற்றத்துநின் றிவள்நோக்கினாள் *
காணுமோகண்ண புரமென்றுகாட்டினாள் *
$ பாணனார்திண்ணமிருக்கவினியிவள்
நாணுமோ * நன்றுநன்றுநறையூரர்க்கே. (உ)

---

‡ சிவளிகைக்கச்சு - கட்டும்கச்சு; பொன்னெழுதினகச்சு. $ பாணன் கடகன்; இங்கு. ஆசார்யனைச் சொல்லுகிறது.

⁂ அருவிசோர்வேங்கடம் நீர்மலையென்றுவாய்
வெருவினாள் * மெய்யம்வினவியிருக்கின்றாள் *
பெருகுசீர்க்கண்ணபுரமென்றுபேசினாள் *
உருகினாள்உள்மெலிந்தாள் இதுவென்கொலோ. (௩)

உண்ணும்நாளில்லை உறக்கமும்தானில்லை *
பெண்மையும்சால நிறைந்திலள்பேதைதான் *
கண்ணனூர்கண்ணபுரம் தொழும்கார்க்கடல் *
வண்ணர்மேல் * எண்ணமிவட்கிதுவென்கொலோ. (௪)

கண்ணனூர்கண்ணபுரம் தொழும்காரிகை *
பெண்மையும்தன்னுடை யுண்மையுரைக்கின்றாள் *
வெண்ணெயுண்டாப்புண்ட வண்ணம்விளம்பினால் *
வண்ணமும்பொன்னிறமாவதொழியுமே. (௫)

வடவரைநின்றும்வந்து * இன்றுகணபுரம்
இடவகைகொள்வதுயாமென்றுபேசினாள் *
மடவரல்மாதரென் பேதையிவர்க்கிவள்
கடவதென் * கண்டுயிலின்றிவர்கொள்ளவே. (௬)

தரங்கநீர்பேசிலும் தண்மதிகாயினும் *
இரங்குமோஎத்தனை நாளிருந்தெள்கினாள் *
துரங்கம்வாய்கீண்டுகந்தானது தொன்மை * ஊர்
அரங்கமேயென்ப திவள்தனக்காசையே. (௭)

தொண்டெல்லாம் நின்னடியேதொழுதுய்யுமா
கண்டு * தான்கணபுரம்தொழப்போயினாள் *
வண்டுலாம்கோதை யென்பேதைமணிநிறம்
கொண்டுதான் * கோயின்மைசெய்வதுதக்கதே. (௮)

முள்ளெயிறேய்ந்தில, கூழைமுடிகொடா *
தெள்ளியளென்பதோர் தேசிலள், என்செய்கேன் ! *
கள்ளவிழ்சோலைக் கணபுரம்கைதொழும்
பிள்ளையை * பிள்ளையென்றெண்ணப்பெறுவரே. (௯)

⁂ கார்மலிகண்ணபுரத்தெம்மடிகளை *
பார்மலிமங்கையர்கோன் பரகாலன்சொல் *
சீர்மலிபாடலிவை பத்தும்வல்லவர் *
நீர்மலிவையத்து நீடுநிற்பார்களே. (க0)

தெள்ளியீர் நீணிலா அருவி உண்ணும் கண்ணன் வட தரங்கம் தொண்டு முள் கார் கரை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, கரையெடுத்த.



திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.
கலிவிருத்தம்.
கேதாரகௌளராகம்-ரூபகதாளம்.

⁂ ¶ கரையெடுத்தசுரிசங்கும் கனபவளத்தெழுகொடியும் *
திரையெடுத்துவருபுனல்சூழ் திருக்கண்ணபுரத்துறையும் *
விரையெடுத்ததுழாயலங்கல் விறல்வரைத்தோள்புடைபெயர *
வரையெடுத்தபெருமானுக் கிழந்தேனென்வரிவளையே. (க)

அரிவிரவுமுகில்கணத்தா லகில்புகையால்வரையோடும் *
தெரிவரியமணிமாடத் திருக்கண்ணபுரத்துறையும் *
வரியரவினணைத்துயின்று மழைமதத்தசிறுதறுகண் *
கரிவெருவமருப்பொசித்தாற் கிழந்தேனென்கனவளையே. (உ)

துங்கமாமணிமாட நெடுமுகட்டின் † சூலிகை * போம்
திங்கள்மாமுகில்துணிக்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
பைங்கண்மால்விடையடர்த்துப் பனிமதிகோள்விடுத்துகந்த *
செங்கண்மாலம்மானுக் கிழந்தேனென்செறிவளையே. (௩)

கணமருவுமயிலகவு கடிபொழில்சூழ்நெடுமறுகில் *
திணமருவுகனமதிள்சூழ் திருக்கண்ணபுரத்துறையும் *
மணமருவுதோளாய்ச்சி யார்க்கப்போய் * உரலோடும்
புணர்மருதமிறநடந்தாற் கிழந்தேனென்பொன்வளையே. (௪)

வாயெடுத்தமந்திரத்தா லந்தணர்தம்செய்தொழில்கள் *
தீயெடுத்துமறைவளர்க்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
தாயெடுத்தசிறுகோலுக் குளைந்தோடித்தயிருண்ட *
வாய்துடைத்தமைந்தனுக் கிழந்தேனென்வரிவளையே. (௫)

மடலெடுத்தநெடுந்தாழை மருங்கெல்லாம்வளர்பவளம் *
திடலெடுத்துச்சுடரிமைக்கும் திருக்கண்ணபுரத்துறையும் *
அடலடர்த்தன்றிரணியனை முரணழியவணியுகிரால் *
உடலெடுத்தபெருமானுக் கிழந்தேனென்னொளிவளையே. (௬)

வண்டமரும்மலர்ப்புன்னை வரிநீழலணிமுத்தம் *
தெண்டிரைகள்வரத்திரட்டும் திருக்கண்ணபுரத்துறையும் *
எண்டிசையுமெழுசுடரு மிருநிலனும்பெருவிசும்பும் *
உண்டுமிழ்ந்தபெருமானுக் கிழந்தேனென்னொளிவளையே. (௭)

கொங்குமலிகருங்குவளை கண்ணாக * தெண்கயங்கள்
செங்கமலமுகமலர்த்தும் திருக்கண்ணபுரத்துறையும் *
வங்கமலிதடங்கடலுள் வரியரவினணைத்துயின்ற *
செங்கமலநாபனுக் கிழந்தேனென்செறிவளையே. (௮)

---

¶ கரை - கோஷம். † சூலிகை - சூலம்.

வாராளுமிளங்கொங்கை நெடும்பணைத்தோள்மடப்பாவை *
சீராளும்வரைமார்வன் திருக்கண்ணபுரத்துறையும் *
பேராளனாயிரம்பே ராயிரவாயரவணைமேல் *
பேராளர்பெருமானுக் கிழந்தேனென்பெய்வளையே. (௯)

‡‡ தேமருவுபொழில்புடைசூழ் திருக்கண்ணபுரத்துறையும்
வாமனனை * மறிகடல்சூழ் வயலாலிவளநாடன் *
காமருசீர்க்கலிகன்றி கண்டுரைத்ததமிழ்மாலை *
நாமருவியிவைபாட வினையாயநண்ணுவே. (க0)

கரை அரி துங்கம் கணம் வாய் மடல் வண்டு கொங்கு வாராளும் தேமருவு விண்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௪-வது, விண்ணவர்தங்கள்.



திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

**கமாசுராகம்-ஆதிதாளம்.**

‡‡ விண்ணவர்தங்கள் பெருமான்திருமார்வன் *
மண்ணவரெல்லாம்வணங்கும் மலிபுகழ்சேர் *
கண்ணபுரத்தெம்பெருமான் கதிர்முடிமேல் *
வண்ணநறுந்துழாய் வந்தூதாய் ‡ கோல்தும்பீ. (க)

வேதமுதல்வன் விளங்குபுரிநூலன் *
பாதம்பரவிப் பலரும்பணிந்தேத்தி *
காதன்மைசெய்யும் கண்ணபுரத்தெம்பெருமான் *
தாதுநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ. (உ)

விண்டமலரெல்லாமூதி நீயென்பெறுதி ? *
அண்டமுதல்வ னமரர்களெல்லாரும் *
கண்டுவணங்கும் கண்ணபுரத்தெம்பெருமான் *
வண்டுநறுந்துழாய் வந்தூதாய்கோல்தும்பீ. (௩)

நீர்மலிகின்றதோர் மீனாயோராமையுமாய் *
சீர்மலிகின்றதோர் சிங்கவுருவாய் *
கார்மலிவண்ணன் கண்ணபுரத்தெம்பெருமான் *
தார்மலிதண்டுழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ. (௪)

ஏரார்மலரெல்லாமூதி நீயென்பெறுதி ? *
பாராருலகம்பரவ, பெருங்கடலுள் *
¶ காராமையான கண்ணபுரத்தெம்பெருமான் *
தாரார்நறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ. (௫)

---

‡ கோல்தும்பி - கோல்களிலும் பணைகளிலும்வைத்த மதுவைப்பானம் பண்ணும்தும்பி. ¶ கார் ஆமை - பெரிய ஆமை.

மார்வில்திருவன் வலனேந்துசக்கரத்தன் *
பாரைப்பிளந்தபரமன் பரஞ்சோதி *
காரில்திகழ் காயாவண்ணன், கதிர்முடிமேல் *
தாரின்நறுந்துழாய் தாழ்ந்தூதாய் கோல்தும்பீ. (சு)

வாமநன்கற்கி மதுசூதன்மாதவன் *
தார்மன்னுதாசரதியாய தடமார்வன் *
காமன்றன் தாதை கண்ணபுரத்தெம்பெருமான் *
தாமநறுந்துழாய் தாழ்ந்தூதாய்கோல்தும்பீ. (எ)

நீலமலர்கள் நெடுநீர்வயல்மருங்கில் *
சாலமலரெல்லா மூதாதே * வாளரக்கர்
காலன்கண்ணபுரத் தெம்பெருமான்கதிர்முடிமேல் *
கோலநறுந்துழாய் கொண்டூதாய்கோல்தும்பீ. (அ)

நந்தன்மதலை நிலமங்கைநல்துணைவன் *
அந்தமுதல்வனமரர்கள் தம்பெருமான் *
கந்தம்கமழ்காயா வண்ணன்கதிர்முடிமேல் *
கொந்துநறுந்துழாய் கொண்டூதாய்கோல்தும்பீ. (கூ)

⁂ வண்டமருஞ்சோலை வயலாலிநன்னாடன் *
கண்டசீர்வென்றிக் கலியனொலிமாலை *
கொண்டல்நிறவண்ணன் கண்ணபுரத்தானை *
தொண்டரோம்பாட நினைந்தூதாய்கோல்தும்பீ. (க0)

விண் வேத விண்ட நீர் ஏரார் மார்வில் வாமநன் நீல நந்தன் வண்டமர் தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு-வது, தந்தைகாலில்.



திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

எதுகுலகாம்போதிராகம்-ஆதிதாளம்.

⁂ தந்தைகாலில்விலங்கறவந்துதோன்றியதோன்றல்பின்*† தமியேன்
சிந்தைபோயிற்று, திருவருளவனிடைப்பெறுமளவிருந்தேனை * [றன்
அந்திகாவலனமுதுறுபசுங்கதி ரவைசுடவதனோடும் *
மந்தமாருதம்வநமுலைதடவந்து வலிசெய்வதொழியாதே. (க)

மாரிமாக்கடல்வளைவணர்க்கிளையவன் வரைபுரைதிருமார்பில் *
தாரினாசையில்போயினநெஞ்சமும் தாழ்ந்ததோர் துணைகாணேன் *
ஊரும்துஞ்சிற்றுலகமும்துயின்ற தொளியவன்விசும்பியங்கும் *
தேரும்போயிற்றுத்திசைகளும்மறைந்தனசெய்வதொன்றறியேனே.()

† தமியன் - தனித்தவன்.

ஆயன்மாயமேயன்றி மற்றென்கையில்வளைகளுமிறைநில்லா *
பேயினாருயிருண்டிடும்பிள்ளை நம்பெண்ணுயிர்க்கிரங்குமோ *
தூயமாமதிக்கதிர்சுடத் துணையில்லை யிணைமுலைவேகின்றதால் *
ஆயன் † வேயினுக்கழிகின்றதுள்ளமுமஞ்சேலென்பாரில்லையே. ()

கயங்கொள்புண்தலைக்களிறுந்து வெந்திறல்கழல்மன்னர்பெரும்போரில் *
மயங்கவெண்சங்கம்வாய்வைத்தமைந்தனும் வந்திலன், மறிகடல்நீர் *
‡ தயங்குவெண்திரைத்திவலைநுண்பனியென்னும்தழல்முகந்திளமுலைமேல்*
இயங்குமாருதம்விலங்கிலென்னுவியையெனக்கெனப்பெறலாமே.(சு)

ஏழுமாமரம்துளைபடச் சிலைவளைத்திலங்கையைமலங்குவித்த
ஆழியான் * நமக்கருளியவருளொடும் பகலெல்லைகழிகின்றதால் *
தோழிநாமிதற்கென்செய்தும் துணையில்லை, சுடர்படுமுதுநீரில் *
ஆழவாழ்கின்றவாவியையடுவதோ ரந்திவந்தடைகின்றதே. (ரு)

முரியும்வெண்திரை § முதுகயம்தீப்பட முழங்கழலெரியம்பின் *
வரிகொள்வெஞ்சிலைவளைவித்த மைந்தனும்வந்திலனென்செய்கேன் *
எரியும்வெங்கதிர் துயின்றது பாவியேனிணைநெடுங்கண் துயிலா *
கரியநாழிகையூழியில்பெரியன கழியுமாறறியேனே. (சு)

கலங்கமாக்கடல்கடைந்தடைத் திலங்கையர்கோனதுவரையாகம்
மலங்க * வெஞ்சமத்தடுசரம்துரந்த வெம்மடிகளும்வாராஞல் *
இலங்குவெங்கதிரிளமதியதனொடும் விடைமணியடும் * ஆயன்
விலங்கல்வேயினதோசையுமா யினிவிளைவதொன்றறியேனே. (எ)

முழுதிவ்வையகம்குறைகெடமறைதலும், $ முனிவனும்முனிவெய்தி*
மழுவினால்மன்னராருயிர்வவ்விய மைந்தனும்வாராஞல் *
ஒழுகுநுண்பனிக்கொடுங்கிய பேடையையடங்கவஞ்சிறைகோலி *
தழுவுநள்ளிருள்தனிமையில்கடியதோர் கொடுவினையறியேனே. (அ)

கனஞ்செய்மாமதிள்கணபுரத்தவனொடும் கனவினிலவன்தந்த *
மனஞ்செயின்பம்வந்துள்புகவெள்கி யெனவளை ¶ நெகவிருந்தேனை*
சினஞ்செய்மால்விடைச்சிறுமணியோசையென்சிந்தையைச்சிந்துவிக்
அனந்தலன்றிலினரிகுரல் பாவியேனுவியையடுகின்றதே. [கும்

‡‡ வார்கொள்மென்முலைமடந்தையர்தடங்கடல்வண்ணனைத்தாள்நய
ஆர்வத்தாலவர்புலம்பியபுலம்பலை யறிந்துமுன்னுரைசெய்த* [ந்து
கார்கொள்பைம்பொழில்மங்கையர்காவலன்கலிகன்றியொலிவல்லார்*
ஏர்கொள்வைகுந்தமாநகர்புக் கிமையவரோடும்கூடுவரே. (க0)

தந்தை மாரி ஆயன் கயம் ஏழு முரி கலங்க முழுது கனஞ்செய் வார்கொள் தொண்டீர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



† வேயினுக்கு - குழலுக்கு. ‡ தயங்குகை - அசைகை. § முதுகயம் - கடல் $ முனிவன் - ஜாமதக்நியபகவான். ¶ நெக - கழல.

## சு-வது, தொண்டர்.

திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.
கலிவிருத்தம்.
நாதநாமக்கிரியைராகம்-ருபகதாளம்.

‡‡ தொண்டருய்யும்வகைகண்டேன் துளங்காவரக்கர்துளங்க * முன்
திண்டோள்நிமிரச்சிலைவளையச் சிறிதேமுனிந்த திருமார்பன்
வண்டார்கூந்தல்மலர்மங்கை வடிக்கண்படந்தைமான்நோக்கம்
கண்டான் * கண்டுகொண்டுகந்த கண்ணபுரம்நாம்தொழுதுமே. (க)

பொருந்தாவரக்கர்வெஞ்சமத்துப் பொன்றவன்றுபுள்ளூர்ந்து *
பெருந்தோள்மாலிதலைபுரளப் பேர்ந்தவரக்கர்தென்னிலங்கை *
இருந்தார்தம்மையுடன்கொண்டங் கெழிலார்பிலத்துப்புக்கொளிப்ப
கருந்தாள்சிலைகைக்கொண்டானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. ()

வல்லியிடையாள்பொருட்டாக மதிள்நீரிலங்கையார்கோவை *
அல்லல்செய்துவெஞ்சமத்து ளாற்றல்மிகுத்தவாற்றலான் *
வல்லாளரக்கர்குலப்பாவை வாடமுனிதன்வேள்வியை *
கல்விச்சிலையால்காத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ஙு)

மல்லைமுந்நீரதர்பட வரிவெஞ்சிலைகால்வளைவித்து *
கொல்லைவிலங்குபணிசெய்யக் கொடியோனிலங்கைபுகலுற்று *
தொல்லைமரங்கள்புகப்பெய்து ‡ துவலைநிமிர்ந்துவானணவ *
கல்லால்கடலையடைத்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ச)

ஆமையாகியரியாகி யன்னமாகி * அந்தணர்தம்
ஓமமாகியூழியாகி † உலகுசூழ்ந்தநெடும்புணரி *
சேமமதிள்சூழிலங்கைக்கோன் சிரமுங்கரமும்துணித்து * முன்
காமன்பயந்தான்கருதுமூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (ரு)

வருந்தாதிருநீமடநெஞ்சே நம்மேல்வினைகள்வாரா * முன்
திருந்தாவரக்கர்தென்னிலங்கை செந்தீயுண்ணச்சிவந்தொருநாள் *
பெருந்தோள்வாணற்கருள்புரிந்து பின்னைமணாளனாகி * முன்
கருந்தாள்களிறென்றொசித்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. ()

இலையார்மலர்ப்பூம்பொய்கைவாய் முதலைதன்னாலடர்ப்புண்டு *
கொலையார்வேழம்நடுக்குற்றுக் குலையவதனுக்கருள்புரிந்தான் *
அலைநீரிலங்கைத்தசக்கிரீவற் கிளையோற்கரசையருளி * முன்
கலைமாச்சிலையாலெய்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (எ)

மாலாய்மனமேயருந்துயரில் வருந்தாதிருநீ * வலிமிக்க
காலார்மருதும்காய்சினத்த கழுத்திற்கதமாக்கழுதையும் *
மாலார்விடையும்மதகரியும் மல்லருயிரும்மடிவித்து *
காலால்சகடம்பாய்ந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (அ)

‡ துவலை-திவலை. † "உவரிசூழ்ந்த" என்று பாடாந்தரம்.

குன்றால்மாரிபழுதாக்கிக் கொடியேரிடையாள்பொருட்டாக *
வன்தாள்விடையேழன்றடர்த்த வானோர்பெருமான், மாமாயன் *
சென்றான் தூதுபஞ்சவர்க்காய்த் திரிகால்சகடம்சினமழித்து *
கன்றால்விளங்காயெறிந்தானூர் கண்ணபுரம்நாம்தொழுதுமே. (கூ)
⁂ கருமாமுகில்தோய்நெடுமாடக் கண்ணபுரத்தெம்மடிகளை *
திருமாமகளாலருள்மாரி செழுநீராலிவளநாடன் *
மருவார்புயல்கைக்கலிகன்றி மங்கைவேந்தனொலிவல்லார் *
இருமாநிலத்துக்கரசாகி யிமையோரிறைஞ்சவாழ்வாரே. (க0)

தொண்டீர் பொருந்தா வல்லி மல்லை ஆமை வருந்தாது இலை மால் குன்றால் கரு வியம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, வியமுடை.



திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

**அபநபராகம்-ஆதிதாளம்.**

⁂ வியமுடைவிடையினமுடைதர * மடமகள்
† குயமிடைதடவரை யகலமதுடையவர் *
நயமுடைநடையன மிளையவர்நடைபயில் *
கயமிடைகணபுர மடிகள்தமிடமே. (க)

இணைமலிமருதினொ டெருதிற ‡ இகல்செய்து *
துணைமலிமுலையவள் மணமிகுகலவியுள் *
மணமலிவிழவினொ டடியவரளவிய *
கணமலிகணபுர மடிகள்தமிடமே. (௨)

புயலுறுவரைமழை பொழிதர * மணிநிரை
மயலுற வரைகுடையெடுவியநெடியவர் *
§ முயல் $ துளர் ¶ மிளைமுயல் துளவளவிளைவயல் *
கயல்துளுகணபுர மடிகள்தமிடமே. (௩)

ஏதலர்நகைசெய விளையவரளைவெணெய் *
போதுசெய்து, அமரியபுனிதர், நல்விரைமலர் *
கோதியமதுகரம் குலவியமலர்மகள் *
காதல்செய்கணபுர மடிகள்தமிடமே. (௪)

தொண்டருமமரரும் முனிவருந்தொழுதெழ *
அண்டமொடகலிடமளந்தவ ரமர்செய்து *
விண்டவர்பட மதிளிலங்கைமுன்னெரியெழ *
கண்டவர்கணபுர மடிகள்தமிடமே. (௫)

† "குயமுடை" என்று பாடாந்தரம். ‡ இகல்-யுத்தம். § முயலல்-யத்னித்தல். $ துளர்-களைக்கொட்டு. ¶ மிளை-சிறுபுதர்.

மழுவியல்படையுடையவனிடம் * மழைமுகில்
தழுவியவுருவினர் திருமகள்மருவிய *
கொழுவியசெழுமலர் முழுசியபறவைபண் *
எழுவியகணபுர மடிகள்தமிடமே. (சு)

பரிதியொடணிமதி பனிவரைதிசைநிலம் *
எரி † தியொடெனவின வியல்வினர்செலவினர் *
சுருதியொடருமறை முறைசொலுமடியவர் *
கருதியகணபுர மடிகள்தமிடமே. (எ)

படிபுல்குமடியிணைபலர்தொழ * மலர்வைகு
கொடிபுல்குதடவரை யகலமதுடையவர் *
முடிபுல்குநெடுவயல் படைசெலவடி * மலர்
கடிபுல்குகணபுர மடிகள்தமிடமே. (அ)

புலமனுமலர்மிசை மலர்மகள்புணரிய *
நிலமகளெனவின மகளிர்களிவரொடும் *
வலமனுபடையுடை மணிவணர் * நிதிகுவை
கலமனுகணபுர மடிகள்தமிடமே. (கூ)

⁂ மலிபுகழ்கணபுரமுடைய வெம்மடிகளை *
வலிகெழுமதிளயல் வயலணிமங்கையர் *
கலியனதமிழிவை விழுமியவிசையினொடு - *
ஒலிசொலுமடியவ ருறுதுயரிலரே. (க0)

வியமிணை புயல் ஏதலர் தொண்டர் மழுப் பரிதி படி புலம் மலிபுகழ் வானோர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, வானோர்.



### திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

சாவேரிராகம்-ரூபகதாளம்.

⁂ வானோரளவும்முதுமுந்நீர்வளர்ந்தகாலம் * வலியுருவில்
மீனாய்வந்துவியந்துய்யக் கொண்டதண்டாமரைக்கண்ணன் *
‡ ஆனாவுருவிலானாய னவனையம்மாவிளைவயலுள் *
கானார்புறவில்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (க)

மலங்குவிலங்குநெடுவெள்ளம்மறுக அங்கோர்வரைநட்டு - *
இலங்குசோதியாரமுத மெய்துமளவோராமையாய் *
விலங்கல்திரியத்தடங்கடலுள் சுமந்துகிடந்தவித்தகனை *
கலங்கல்முந்நீர்க்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (உ)

† தீ-என்றது "தி-எனக்குறுகிற்று. ‡ ஆனா-அழியாத.

பாராரளவும்முதுமுந்நீர்பரந்தகாலம் * வளைமருப்பில்
ஏராருருவத்தேனமா யெடுத்தவாற்றலம்மானை *
கூராராரலிரைகருதிக் குருகுபாயக்கயலிரியும் *
காரார்புறவில்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (௩)

உளைந்தவரியும்மானிடமு முடனாய்த்தோன்றவொன்றுவித்து *
விளைந்தசீற்றம்விண்வெதும்ப வேற்றோனகலம்வெஞ்சமத்து *
பிளந்துவளைந்தவுகிரானைப் பெருந்தண்செந்நெற்குலைதடிந்து *
களஞ்செய்புறவில்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (௪)

தொழுநீர்வடிவில்குறளுருவாய் வந்துதோன்றிமாவலிபால் *
முழுநீர்வையம்முன்கொண்ட மூவாவுருவிலம்மானை *
உழுநீர்வயலுள்பொன்கிளைப்ப வொருபால்முல்லைமுகையோடும் *
கழுநீர்மலரும்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (௫)

வடிவாய்மழுவேபடையாக வந்துதோன்றி * மூவெழுகால்
படியாரரசுகளைகட்ட பாழியானையம்மானை *
குடியாவண்டுகொண்டுண்ணக் கோலநீலம்மட்டுகுக்கும் *
கடியார்புறவில்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (௬)

வையமெல்லாமுடன்வணங்க வணங்காமன்னனாய்த்தோன்றி *
வெய்யசீற்றக்கடியிலங்கை குடிகொண்டோடவெஞ்சமத்து *
செய்தவெம்போர்நம்பரனைச் செழுந்தண்கானல்மணநாறும் *
கைதைவேலிக்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (௭)

ஒற்றைக்குழையும் $ நாஞ்சிலுமொருபால்தோன்றத்தான்தோன்றி *
வெற்றித்தொழிலார்வேல்வேந்தர் விண்பால்செல்ல, வெஞ்சமத்து
செற்றகொற்றத்தொழிலானைச் செந்தீமூன்றுமில்லிருப்ப *
கற்றமறையோர்கண்ணபுரத்தடியேன்கண்டுகொண்டேனே. (௮)

துவரிக்கனிவாய்நிலமங்கை துயர்தீர்ந்துய்ய * பாரதத்துள்
‡ இவரித்தரசர்தடுமாற விருள்நாள்பிறந்தவம்மானை *
உவரியோதம்முத்துந்த வொருபாலொருபாலொண்செந்நெல் *
கவரிவீசும்கண்ணபுரத் தடியேன்கண்டுகொண்டேனே. (௯)

‡‡ மீனோடாமைகேழலரி குறளாய்முன்னுமிராமனாய்த்
தானாய் * பின்னுமிராமனாய்த் தாமோதரனாய்க்கற்கியு
மானான்றன்னை * கண்ணபுரத்தடியன்கலியனொலிசெய்த *
தேனாரின்சொல்தமிழ்மாலை செப்பப்பாவம்நில்லாவே. (௧0)

வான் மலங்கு பாருளை உளைந்த தொழு வடி வையம் ஒற்றை துவரி மீன் கைம்மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



$ நாஞ்சில்-கலப்பை. ‡ இவரிதல்-ஏறுதல்.

## கூ-வது, கைம்மானம்.

திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

மோஹனராகம்-திரிபுடைதாளம்.

‡‡ கைம்மானமதயானை யிடர்தீர்த்தகருமுகிலை *
மைம்மானமணியை யணிகொள்மரதகத்தை *
எம்மானையெம்பிரானை யீசனையென்மனத்துள்
அம்மானை * அடியேனடைந்துய்ந்துபோனேனே. (க)

தருமானமழைமுகிலைப் பிரியாதுதன்னடைந்தார் *
வருமானம்தவிர்க்கும்மணியை அணியுருவில் *
திருமாலையம்மானை யமுதத்தைக்கடற்கிடந்த
பெருமானை * அடியேனடைந்துய்ந்துபிழைத்தேனே. (உ)

விடையேழன்றடர்த்து வெகுண்டுவிலங்கலுற *
படையாலாழி ‡ தட்டப் பரமன்பரஞ்சோதி *
மடையார்நீலம்மல்கும் வயல்சூழ்கண்ணபுரமொன்
றுடையானுக்கு - * அடியேனொருவர்க்குரியேனோ. (ங)

‡‡ மிக்கானை மறையாய்விரிந்தவிளக்கை * என்னுள்
புக்கானைப் புகழ்சேர்பொலிகின்றபொன்மலையை *
தக்கானைக் கடிகைத்தடங்குன்றின்மிசையிருந்த
அக்காரக்கனியை * அடைந்துய்ந்துபோனேனே. (ச)

வந்தாயென்மனத்தே வந்துநீபுகுந்தபின்னை *
எந்தாய்போயறியா யிதுவேயமையாதோ *
கொந்தார்பைம்பொழில்சூழ் குடந்தைக்கிடந்துகந்த
மைந்தா * உன்னையென்றும் மறவாமைப்பெற்றேனே. (ரு)

எஞ்சாவெந்நரகத்தழுந்தி நடுங்குகின்றேற்கு - *
அஞ்சேலென்றடியேனை யாட்கொள்ளவல்லானை *
நெஞ்சேநீநினையாதிறைப்பொழுது மிருத்திகண்டாய் *
மஞ்சார்மாளிகைசூழ் வயலாலிமைந்தனையே. (சா)

பெற்றார்பெற்றொழிந்தார் பின்னும்நின்றடியேனுக்கு - *
உற்றானாய்வளர்த் தென்னுயிராகிநின்றானை *
முற்றாமாமதிகோள்விடுத்தானை யெம்மானை *
எத்தால்யான்மறக்கே னிதுசொல்லென்னேழைநெஞ்சே. (எ)

கற்றார்பற்றறுக்கும் பிறவிப்பெருங்கடலே *
பற்றாவந்தடியேன் பிறந்தேன், பிறந்தபின்னை *
வற்றாநீர்வயல்சூழ் வயலாலியம்மானைப்
பெற்றேன் * பெற்றதுவும்பிறவாமைப்பெற்றேனே. (அ)

---

‡ தட்ட-அடைத்த, மறைத்த.

⁂ கண்ணார்கண்ணபுரம் கடிகைகடிகமழும் *
தண்ணார்தாமரைசூழ் தலைச்சங்கமேல்திசையுள் *
விண்ணோர்நாண்மதியை விரிகின்றவெஞ்சுடரை *
கண்ணாரக்கண்டுகொண்டு களிக்கின்றதிங்கென்றுகொலோ. (கூ)

⁂ செருநீரவேல்வலவன் கலிகன்றிமங்கையர்கோன் *
கருநீர்முகில்வண்ணன் கண்ணபுரத்தானை *
இருநீரின்தமிழின்னிசைமாலைகள்கொண்டுதொண்டீர் *
வருநீர்வையமுய்ய விவைபாடியாடுமினே. (கO)

கைம்மானம் தரு விடை மிக்கான் வந்தா யெஞ்சா பெற்றார் கற்றார் கண்ணார் செரு வண்டார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கO-வது, வண்டார்.



திருக்கண்ணபுரம் சௌரிராஜன்விஷயம்.

கலிவிருத்தம்.

சௌராஷ்டிரராகம்-ரூபகதாளம்.

⁂ வண்டார்பூமாமலர்மங்கை மணநோக்க
முண்டானே * உன்னையுகந்துகந்துன்றனக்கே
தொண்டானேற்கு - * என்செய்கின்றாய்சொல்லு நால்வேதம்
கண்டானே * கண்ணபுரத்துறையம்மானே. (க)

பெருநீரும்விண்ணும் மலையுமுலகேழும் *
ஒருதாராநின்னுளொடுக்கிய நின்னையல்லால் *
வருதேவர்மற்றுளரென் றென்மனத்திறையும்
கருதேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே. (உ)

மற்றுமோர்தெய்வமுளதென் றிருப்பாரோ
டுற்றிலேன் * உற்றதுமுன்னடியார்க்கடிமை *
மற்றெல்லாம்பேசிலும் நின்திருவெட்டெழுத்தும்
கற்று * நான்கண்ணபுரத்துறையம்மானே. (ந)

பெண்ணானள் பேரிளங்கொங்கையினாரழல்போல் *
உண்ணாநஞ்சுண்டுகந்தாயை யுகந்தேன்நான் *
மண்ணாளாவாள்நெடுங்கண்ணிமதுமலராள்
கண்ணாளா * கண்ணபுரத்துறையம்மானே. (ச)

பெற்றாருஞ்சுற்றமுமென் றிவைபேணேன்நான் *
மற்றாரும்பற்றிலே னாதலால்நின்னடைந்தேன் *
உற்றானென்றுள்ளத்துவைத்தருள்செய்கண்டாய் *
கற்றார்சேர்கண்ணபுரத்துறையம்மானே. (ரு)

எத்தியுன்சேவடியெண்ணியிருப்பாரை *
பார்த்திருந்தங்குநமன்றமர்பற்றுது *
சோத்தம்நாமஞ்சுதுமென்றுதொடாமைநீ *
காத்திபோல்கண்ணபுரத்துறையம்மானே. (சு)

வெள்ளைநீர்வெள்ளத்தணைந்தவரவணைமேல் *
துள்ளுநீர்மெள்ளத்துயின்றபெருமானே *
வள்ளலேயுன்றமர்க்கென்றும்நமன்றமர்
கள்ளர்போல் * கண்ணபுரத்துறையம்மானே. (எ)

மாணாகிவையமளந்ததுவும் * வாளவுணன் *
பூணாகம்கீண்டதுவும் மீண்டுநினைந்திருந்தேன் *
பேணாதவல்வினையே னிடரெத்தனையும்
காணேன்நான் * கண்ணபுரத்துறையம்மானே. (அ)

நாட்டினுயென்னை யுனக்குமுன்தொண்டாக *
மாட்டினேனத்தனையேகொண் டென்வல்வினையை *
பாட்டினாலுன்னையென்நெஞ்சத்திருந்தமை
காட்டினாய் * கண்ணபுரத்துறையம்மானே. (கூ)

⁂ கண்டசீர்க்கண்ணபுரத்துறையம்மானை *
கொண்டசீர்த்தொண்டன்கலியனொலிமாலை *
பண்டமாய்ப்பாடுமடியவர்க்கெஞ்ஞான்றும் *
அண்டம்போயாட்சியவர்க்கதறிந்தோமே. (க0)

வண்டார் பெரு மற்று பெண் பெற்றூர் எத்தி வெள்ளை மான் நாட்டினாய் கண்டசீர் வங்கம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

# ஒன்பதாம்பத்து.

## க-வது, வங்கமாமுந்நீர்.

திருக்கண்ணங்குடி சாமளமேனிப்பெருமாள்விஷயம்.
எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.
ஆரபிராகம்-அடதாளம்.

⁂வங்கமாமுந்நீர்வரிநிறப்பெரிய வாளரவினணைமேவி *
சங்கமாரங்கைத்தடமலருந்திச் சாமமாமேனியென்தலைவன் *
அங்கமாறைந்துவேள்விநால்வேத மருங்கலைபயின்று * எரிமூன்றும் [னே.
செங்கையால்வளர்க்கும்துளக்கமில்மனத்தோர் திருக்கண்ணங்குடியுள்நின்று

கவளமாகதத்தகரியுய்யப் பொய்கைக்கராம்கொளக்கலங்கி * உள்நினைந்து
துவளமேல்வந்துதோன்றி வன்முதலைதுணிபடச்சுடுபடைதுரந்தோன் *
குவளைநீள்முளரிகுமுதமொண்கழுநீர் கொய்ம்மலர்நெய்தலொண்கழனி *
திவளும்மாளிகைசூழ்செழுமணிப்புரிசைத் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.
வாதைவந்தடரவானமும்நிலனும் மலைகளுமலைகடல்குளிப்ப *
மீதுகொண்டுகளும்மீனுருவாகி விரிபுனல்வரியகட்டொளித்தோன் *
போதலர்புன்னைமல்லிகைமௌவல் புதுவிரைமதுமலரணைந்து *
சீதவொண்தென்றல்திசைதொறும்கமழும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.
வென்றிசேர்திண்மைவிலங்கல்மாமேனி வெள்ளெயிற்றொள்ளெரித்தறுகண்
பன்றியாயன்றுபார்மகள்பயலை தீர்த்தவன்பஞ்சவர்பாகன் *
ஒன்றலாவுருவத்துஉலப்பில்பல்காலத் துயர்கொடியொளிவளர்மதியம் *
சென்றுசேர்சென்னிச்சிகரநன்மாடத் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (ச)
மன்னவன்பெரியவேள்வியில்குறளாய் மூவடிநீரொடும்கொண்டு *
பின்னுமேழுலகுமீரடியாகப் பெருந்திசையடங்கிடநிமிர்ந்தோன் *
அன்னமென்கமலத்தணிமலர்ப்பீடத் தலைபுனலிலைக்குடைநீழல் *
செந்நெலொண்கவரியசையவீற்றிருக்கும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.()
மழுவினாலவனியரசைமூவெழுகால் மணிமுடிபொடிபடுத்து * உதிரக்
குழுவுவார்புனலுள்குளித்துவெங்கோபம் தவிர்ந்தவன் * குலைமலிகதலிக்
குழுவும்வார்கமுகும்குரவுநற்பலவும் குளிர்தருசூதமாதவியும் *
செழுமையார்பொழில்கள்தழுவுநன்மாடத் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.
வானுளாரவரைவலிமையால்நலியும் மறிகடலிலங்கையார்கோனை *
பானுநேர்சரத்தால்பனங்கனிபோலப் பருமுடியுதிரவில்வளைத்தோன் *
கானுலாமயிலின்கணங்கள்நின்றாடக் கணமுகில்முரசநின்றதிர *
தேனுலாவரிவண்டின்னிசைமுரலும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே. (எ)
அரவுநீள்கொடியோனவையுளாசனத்தை யஞ்சிடாதேயிட * அதற்குப்
பெரியமாமேனியண்டமூடுருவப் பெருதிசையடங்கிடநிமிர்ந்தோன் *
வரையின்மாமணியும்மரதகத்திரளும் வயிரமும்வெதிருதிர்முத்தும் * [னே.
திரைகொணர்ந்துந்திவயல்தொறும்குவிக்கும் திருக்கண்ணங்குடியுள்நின்றா
பன்னியபாரம்பார்மகட்கொழிய பாரதமாபெரும்போரில் *
மன்னர்கள்மடியமணிநெடும்திண்டேர் மைத்துனர்க்குய்த்தமாமாயன் *
துன்னுமாதவியும்சுரபுன்னைப்பொழிலும் சூழ்ந்தெழுசெண்பகமலர்வாய் *
தென்னவென்றளிகள்முரன்றிசைபாடும் திருக்கண்ணங்குடியுள்நின்றானே.()
⁂கலையுலாவல்குல்காரிகைதிறத்துக் கடல்பெரும்படையொடும்சென்று *
சிலையினாலிலங்கைதீயெழச்செற்ற திருக்கண்ணங்குடியுள்நின்றானை *
மலைகுலாமாடமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
உலவுசொல்மாலையொன்பதோடொன்றும் வல்லவர்க்கில்லைநல்குரவே. (க0)

வங்கக் கவளம் வாதை வென்றி மன்னவன் மழு வானுளார் அரவு பன்னிய கலை பொன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, பொன்னிவர்மேனி.

திருநாகைசௌந்தர்யராஜப் பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

சாரங்கராகம்-அதிதாளம்.

பொன்னிவர்மேனிமரதகத்தின் பொங்கிளஞ்சோதியகலத்தாரம்
மின் * இவர்வாயில்நல்வேதமோதும் வேதியர்வானவராவர்தோழீ * [ன்றூர்
என்னையும்நோக்கியென்னல்குலும்நோக்கி யேந்திளங்கொங்கையும்நோக்குகி
அன்னையென்னேக்குமென்றஞ்சுகின்றேனச்சோவொருவரழகியவா.

தோடவிழ்நீலமணங்கொடுக்கும் சூழ்புனல்சூழ்குடந்தைக்கிடந்த *
சேடர்கொலென்றுதெரிக்கமாட்டேன் செஞ்சுடராழியும்சங்குமேந்தி
பாடகமெல்லடியார்வணங்கப் பன்மணிமுத்தொடிலங்குசோதி *
ஆடகம்பூண்டொருநான்குதோளு மச்சோவொருவரழகியவா. (உ)

வேயிருஞ்சோலைவிலங்கல்சூழ்ந்தமெய்யமணாளர் * இவ்வையமெல்லாம்
தாயினநாயகராவர்தோழீ தாமரைக்கண்களிருந்தவாறு *
சேயிருங்குன்றம்திகழ்ந்ததொப்பச் செவ்வியவாகிமலர்ந்தசோதி
ஆயிரம்தோளொடிலங்குபூணு மச்சோவொருவரழகியவா. (ஙு)

வம்பவிழும்துழாய்மாலைதோள்மேல் கையனவாழியும்சங்குமேந்தி*
நம்பர்நம்மில்லம்புகுந்துநின்றார் நாகரிகர்பெரிதுமிளையர்*
செம்பவளமிவர்வாயின்வண்ணம் தேவரிவரதுருவம்சொல்லில்*
அம்பவளத்திரளேயுமொப்ப ரச்சோவொருவரழகியவா* (ச)

கோழியும்கூடலும்கோயில்கொண்டகோவலரேயொப்பர்*குன்றமன்ன
பாழியம்தோளுமோர்நான்குடையர் பண்டிவர்தம்மையும்கண்டறியோம் *
வாழியரோவிவர்வண்ணமெண்ணில் மாகடல்போன்றுளர் * கையில்வெய்ய
ஆழியொன்றேந்தியோர்சங்குபற்றி யச்சோவொருவரழகியவா. (ரு)

வெஞ்சினவேழம்மருப்பொசித்தவேந்தர்கொல், ஏந்திழையார்மனத்தை*
தஞ்சுடையாளர்கொல்யானறியேன் தாமரைக்கண்களிருந்தவாறு*
கஞ்சனையஞ்சமுன்கால்விசைத்தகாளையராவாகண்டார்வணங்கும் *
அஞ்சநமாமலையேயுமொப்ப ரச்சோவொருவரழகியவா, (சு)

பிணியவிழ்தாமரைமொட்டலர்த்தும் பேரருளாளர்கொல்யானறியேன்
பணியுமென்நெஞ்சமிதென்கொல்தோழிபண்டிவர்தம்மையும்கண்டறியோம்*
அணிகெழுதாமரையன்னகண்ணு மங்கையும்பங்கயமேனிவானத்து *
அணிகெழுமாமுகிலேயுமொப்ப ரச்சோவொருவரழகியவா. (எ)

மஞ்சுயர்மாமதிதீண்டநீண்ட மாலிருஞ்சோலைமணாளர்வந்து * என் [ன்*
நெஞ்சுள்ளும்கண்ணுள்ளும்நின்றுநீங்கார் நீர்மலையார்கொல்நினைக்கமாட்டே
மஞ்சுயர்பொன்மலைமேலெழுந்தமாமுகில்போன்றுளர்வந்துகாணீர் *
அஞ்சிறைப்புள்ளுமொன்றேறிவந்தா ரச்சோவொருவரழகியவா.(அ)

எண்டிசையுமெறிநீர்க்கடலு மேழுலகுமுடனேவிழுங்கி *
மண்டியோராலிலைப்பள்ளிகொள்ளும் ஆயர்கொல்மாயமறியமாட்டேன் *
கொண்டல்நன்மால்வரையேயுமொப்பர்கொங்கலர்தாமரைக்கண்ணும்வாயும் *
அண்டத்தமரர்பணியநின்று ரச்சோவொருவரழகியவா. (கூ)

⁑ அன்னமும்கேழலும்மீனுமாய வாதியைநாகையழகியாரை *
கன்னிநன்மாமதிள்மங்கைவேந்தன்காமருசீர்க்கலிகன்றி * குன்று [லார்
இன்னிசையால்சொன்னசெஞ்சொல்மாலை யேழுமிரண்டுமொரொன்றும்வல்
மன்னவராயுலகாண்டு மீண்டும்வானவராய்மகிழ்வெய்துவரே. (க0)

பொன் தோடு வேய் வம்பு கோழி வெஞ்சினம் பிணி மஞ்சுயர் எண்டிசை அன்னம் தன்னை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, தன்னைநைவிக்கிலேன்.



திருப்புல்லாணிகல்யாணஜகந்நாயகன்விஷயம்.

கலிவிருத்தம்.

சங்கராபரணராகம்-ரூபகதாளம்.

⁑ தன்னைநைவிக்கிலேன் வல்வினையேன்தொழுதுமெழு *
பொன்னைநைவிக்குமப்பூஞ் செருந்திமணிநீழல்வாய் *
என்னைநைவித்தெழில் கொண்டகன்றபெருமானிடம்
புன்னைமுத்தம்பொழில்சூழ்ந்தழகாயபுல்லாணியே. (க)

உருகிநெஞ்சேநினைந் திங்கிருந்தென்தொழுதுமெழு *
முருகுவண்டுண்மலர்க்கைதையின் நீழலில்முன்னொருநாள் *
பெருகுகாதன்மையென்னுள்ள மெய்தப்பிரிந்தானிடம் *
பொருதுமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே. (உ)

ஏதுசெய்தால்மறக்கேன் மனமேதொழுதுமெழு *
தாதுமல்குதடஞ்சூழ்பொழில் தாழ்வர்தொடர்ந்து * பின்
பேதைநின்னைப்பிரியேனினி யென்றகன்றானிடம் *
போதுநாளுங்கமழும் பொழில்சூழ்ந்தபுல்லாணியே. (௩)

கொங்குண்வண்டே † கரியாகவந்தான் கொடியேற்கு * முன்
நங்களீசன்நமக்கே பணித்தமொழிசெய்திலன் *
மங்கைநல்லாய்தொழுதுமெழு போயவன்மன்னுமூர் *
பொங்குமுந்நீர்க்கரைக்கே மணியுந்துபுல்லாணியே. (ச)

உணரிலுள்ளம்சுடுமால் வினையேன்தொழுதுமெழு *
‡ துணரிநாழல்நறும்போது நம்சூழ்குழல்பெய்து * பின்
தணரிலாவிதளருமென அன்புதந்தானிடம் *
புணரியோதம்பணிலம் மணியுந்துபுல்லாணியே. (௫)

---

† கரி-ஸாக்ஷி. ‡ துணரி - பூங்கொத்து.

எள்கிநெஞ்சே நினைந்திங்கிருந்தென் தொழுதுமெழு *
வள்ளல்மாயன்மணிவண்ண னெம்மான்மருவுமிடம் *
கள்ளவிழும்மலர்க்காவியும் தூமடல்கைதையும் *
புள்ளுமள்ளல்பழனங்களும் சூழ்ந்தபுல்லாணியே. (சு)

பரவிநெஞ்சேதொழுதுமெழு போயவன்பாலமாய் *
இரவுநாளுமினிக்கண் துயிலாதிருந்தென்பயன்? *
விரவிமுத்தம்நெடுவெண்மணல்மேல்கொண்டு * வெண்டிரை
புரவியன்னப் † புதஞ்செய்து வந்துந்துபுல்லாணியே. (எ)

அலமுமாழிப்படையுமுடையார் நமக்கன்பராய் *
‡ சலமதாகித்தகவொன்றிலர் நாம்தொழுதுமெழு *
உலவுகால்நல்கழியோங்கு தண்பைம்பொழிலூடு * இசை
புலவு $ கானல்களிவண்டினம்பாடு புல்லாணியே. (அ)

ஓதிநாமம்குளித்துச்சிதன்னா லொளிமாமலர் *
பாதநாளும்பணிவோம் நமக்கேநலமாதலில் *
ஆதுதாரானெனிலும்தரு மன்றியுமன்பராய் *
போதுமாதேதொழுது மவன்மன்னுபுல்லாணியே. (கூ)

⁂ இலங்குமுத்தும்பவளக் கொழுந்துமெழில்தாமரை *
புலங்கள்முற்றும்பொழில்சூழ்ந் தழகாயபுல்லாணிமேல் *
கலங்கலில்லாப்புகழான் கலியனொலிமாலை *
வலங்கொள்தொண்டர்க்கிட மாவதுபாடில்வைகுந்தமே. (க0)

தன்னை உருகி ஏது கொங்கு உணரில் எள்கிப் பரவி அலம் ஓதி இலங்கு காவார்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## சு-வது, காவார்.



இதுவுமது.
கலிவிருத்தம்.
**காம்போதிராகம்-அடதாளம்.**

⁂ காவார்மடல்பெண்ணை யன்றிலரிகுரலும் *
ஏவாயினூடியங்கு மெஃகில்கொடிதாலோ *
பூவார்மணம்கமழும் புல்லாணிகைதொழுதேன் *
பாவாயிதுநமக்கோர் பான்மையேயாகாதே. (க)

முன்னம்குறளுருவாய் மூவடிமண்கொண்டளந்த *
மன்னன்சரிதைக்கே மாலாகிப்பொன்பயந்தேன் *
பொன்னம்கழிக்கானல்புள்ளினங்காள், புல்லாணி *
அன்னமாய்நூல்பயந்தார்க் காங்கிதனைச்செப்புமினே. (உ)

---

† புதம் செய்கை-தாவுகை. ‡ சலம்-கபடம். $ கானல்-கடற்கரை.

வவ்வித்துழாய தன்மேல் சென்ற தனிநெஞ்சம் *
செவ்வியறியாது நிற்குங்கொல் * நித்திலங்கள்
பவ்வத்திரையுலவு புல்லாணிகைதொழுதேன் *
தெய்வச்சிலையார்க் கென்சிந்தைநோய்செப்புமினே. (௩)
பரியவிரணியனதாக மணியுகிரால் *
அரியுருவாய்க்கீண்டா னருள்தந்தவா நமக்கு *
பொருதிரைகள்போந்துலவு புல்லாணிகைதொழுதேன் *
அரிமலர்க்கண்ணீர்ததும்ப அம்துகிலும்நில்லாவே. (௪)
வில்லாலிலங்கைமலங்கச் சரம்துரந்த *
வல்லாளன்பின்போன நெஞ்சம்வருமளவும் *
எல்லாருமென்றன்னை யேசிலும்பேசிடினும் *
புல்லாணியெம்பெருமான் பொய்கேட்டிருந்தேனே. (௫)
சுழன்றிலங்குவெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான் *
அழன்றுகொடிதாகி அஞ்சுடரில்தானடுமால் *
செழுந்தடம்பூஞ்சோலைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
இழந்திருந்தேனென்ற னெழில்நிறமும்சங்குமே. (௬)
கனையாரிடிகுரலின் கார்மணியின்நாவாடல் *
தினையேனும்நில்லாது தீயில்கொடிதாலோ *
புனையார்மணிமாடப் புல்லாணிகைதொழுதேன் *
வினையேன்மேல்வேலையும் வெம்தழலேவீசுமே. (௭)
தூம்புடைக்கைவேழம் வெருவமருப்பொசித்த *
பாம்பினணையா னருள்தந்தவாநமக்கு *
பூம்செருந்திபொன்சொரியும் புல்லாணிகைதொழுதேன் *
தேம்பலிளம்பிறையு மென்றனக்கோர்வெந்தழலே. (௮)
வேதமும்வேள்வியும் விண்ணுமிருசுடரும் *
ஆதியுமானா னருள்தந்தவாநமக்கு *
போதலரும்புன்னைசூழ் புல்லாணிகைதொழுதேன் *
ஓதமும்நானு முறங்காதிருந்தேனே. (௯)
⁂ பொன்னலரும்புன்னைசூழ் புல்லாணியம்மானை *
மின்னிடையார்வேட்கை நோய்கூரவிருந்ததனை *
கல்நவிலும்திண்டோள் கலியனொலிவல்லார் *
மன்னவராய்மண்ணாண்டு வானாளுமுன்னுவரே. (௧0)

காவார் முன்னம் வவ்வி பரிய வில் சுழன்று கனை தூம்புடை வேதம் பொன் தவள.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு-வது, தவளவிளம்.



### திருக்குறுங்குடிவைஷ்ணவநம்பிவிஷயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

ஆநந்தபைரவிராகம்-அடதாளம்.

⁂ தவளவிளம்பிறைதுள்ளுமுந்நீர்த்தண்மலர்த்தென்றலோடன்றிலொன்றி
துவள * என்னெஞ்சகம்சோரவீரும் சூழ்பனிநாள்துயிலாதிருப்பேன் * [த்
இவளுமோர்பெண்கொடியென்றிரங்கா ரென்னலமைந்துமுன்கொண்டுபோ
குவளைமலர்நிறவண்ணர்மன்னு குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். [ன

தாதவிழ்மல்லிகைபுல்லிவந்த தண்மதியினிளவாடையின்னே *
ஊதைதிரிதந்துழறியுண்ண வோரிரவுமுறங்கேன் * உறங்கும்
பேதையர்பேதைமையாலிருந்து பேசிலும்பேசுக, பெய்வளையார் *
கோதைநறுமலர்மங்கைமார்வன் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௨)

காலையும்மாலையொத்துண்டு கங்குல்நாழிகையூழியில்நீண்டுலாவும் *
போல்வதோர்தன்மைபுகுந்துநிற்கும்பொங்கழலேயொக்கும்வாடைசொல்லில்
மாலவன்மாமணிவண்ணன்மாயம் மற்றுமுளவவைவந்திடாமுன் *
கோலமயில்பயிலும்புறவில் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௩)

கருமணிபூண்டுவெண்ணாகணைந்து காரிமிலேற்றணர்தாழ்ந்துலாவும் *
ஒருமணியோசையென்னுள்ளந்தள்ள வோரிரவுமுறங்காதிருப்பேன் *
பெருமணிவானவருச்சிவைத்த பேரருளாளன்பெருமை † பேசி *
குருமணிநீர்கொழிக்கும்புறவில் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௪)

‡ திண்டிமிலேற்றின்மணியும்ஆயன் தீங்குழலோசையும்தென்றலோடு *
கொண்டதோர்மாலையுமந்தியீன்ற கோலவிளம்பிறையோடுகூடி *
பண்டையவல்லவிவைநமக்குப் பாவியேனாவியைவாட்டம்செய்யும் *
கொண்டல்மணிநிறவண்ணர்மன்னுகுறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (ரு)

எல்லியும்நன்பகலுமிருந்தே யேசிலுமேசுக, ஏந்திழையார் *
நல்லரவர்திறம்நாமறியோம் நாண்மடமச்சம்நமக்கிங்கில்லை *
வல்லனசொல்லிமகிழ்வரேலும் மாமணிவண்ணனைநாமறவோம் *
கொல்லைவளரிளமுல்லைபுல்குகுறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். ()

செங்கணெடியகரியமேனித் தேவரொருவரிங்கேபுகுந்து - *என்
அங்கமெலியவளைகழல ஆதுகொலோவென்றுசொன்னபின்னை *
ஐங்கணைவில்லிதன்னாண்மையென்னோடாடுமதனையறியமாட்டேன் *
கொங்கலர்தண்பணைசூழ்புறவில்குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.

கேவலமன்றுகடலினோசை கேண்மின்களாயன்கை § ஆம்பல்வந்து- * என்
ஆவியளவுமணைந்துநிற்கு மன்றியும்ஐந்துகணைதெரிந்திட்டு - *
ஏவலங்காட்டியிவனொருவ னிப்படியேபுகுந்தெய்திடாமுன் *
கோவலர்கூத்தன்குறிப்பறிந்து குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (அ)

---

† "பேச" என்று பாடாந்தரம். ‡ திண்திமில். § ஆம்பல்- இலைக்குழல்.

சோத்தெனநின்றுதொழவிரங்கான்தொன்னலங்கொண்டெனக்கு § இன்று தாறும், போர்ப்பதோர்பொற்படம்தந்துபோனான் போயினவூரறியேன்என் கொங்கை, மூத்திடுகின்றனமற்றவன்றன் மொய்யகலமணையாதுவாளா * கூத்தனிமையவர்கோன்விரும்பும் குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின். (௯)

⁂ செற்றவன்தென்னிலங்கைமலங்கத் தேவபிரான்திருமாமகளைப் பெற்றும் * என்நெஞ்சகம்கோயில்கொண்ட பேரருளாளன்பெருமைபேசக் கற்றவன் * காமருசீர்க்கலியன் கண்ணகத்தும்மனத்துமகலாக் கொற்றவன்*முற்றுலகாளிநின்ற குறுங்குடிக்கேயென்னையுய்த்திடுமின்.(௧0)

தவளத் தாதவிழ் காலை கருமணி திண்திமில் எல்லி செங்கண் கேவலம் சோத்தெனச் செற்றவன் அக்கு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௬-வது, அக்கும்புலியின்.



திருக்குறுங்குடிவைஷ்ணவநம்பிவிஷயம்.

கலிவிருத்தம்.

அடாணாராகம்-ரூபகதாளம்.

⁂ அக்கும்புலியினதளுமுடையார் * அவரொருவர்
பக்கம்நிற்கநின்ற பண்பரூர்போலும் *
தக்கமரத்தின்தாழ்சினையேறி * தாய்வாயில்
கொக்கின்பிள்ளைவெள்ளிறவுண்ணும் குறுங்குடியே. (௧)

துங்காரரவத்திரைவந்துலவ* தொடுகடலுள்
பொங்காரரவில்துயிலும் புனிதரூர்போலும் *
செங்காலன்னம்திகழ்தண்பணையில்பெடையோடும் *
கொங்கார்கமலத்தலரில் சேரும்குறுங்குடியே. (௨)

வாழக்கண்டோம்வந்து காண்மின்தொண்டீர்காள் *
கேழல்செங்கண்மாமுகில் வண்ணர்மருவுமூர் *
ஏழைச்செங்கால்இன் துணைநாரைக்கிரைதேடி *
கூழைப்பார்வைக்கார் வயல்மேயும்குறுங்குடியே. (௩)

சிரமுன்ஐந்துமைந்தும்சிந்தச்சென்று-*அரக்கன்
உரமும்கரமும்துணித்த வுரவோனூர்போலும் *
இரவும்பகலுமீன்தேன்முரல * மன்றெல்லாம்
குரவின்பூவே தான்மணநாறும்குறுங்குடியே. (௪)

கவவைக்களிற்றுமன்னர் மாளக்கலிமாந்தேர்
ஐவர்க்காய்*அன்றமரிலுய்த்தானூர்போலும் *
மைவைத்திலங்குகண்ணார்தங்கள் மொழியொப்பான் *
கொவ்வைக்கனிவாய்க் கிள்ளைபேசும்குறுங்குடியே. (௫)

§ இன்றுதாறும் - இன்றளவும்.

தீநீர்வண்ணமாமலர் கொண்டுவிரையேந்தி
தூநீர்பரவித்தொழுமி னெழுமின்தொண்டீர்காள் *
மாநீர்வண்ணர்மருவியுறையுமிடம் * வானில்
கூநீர்மதியைமாடம்தீண்டும் குறுங்குடியே. (௬)

வல்லிச்சிறுநுண்ணிடையாரிடை நீர்வைக்கின்ற *
அல்லல்சிந்தைதவிர அடைமினடியீர்காள் *
சொல்லில்திருவேயனையார் கனிவாயெயிற்றொப்பான் *
கொல்லைமுல்லை மெல்லரும்பீனும் குறுங்குடியே. (௭)

நாராரிண்டைநாண்மலர் கொண்டுநம்தமர்காள் *
ஆராவன்போடெம் பெருமானூரடைமின்கள் *
தாராவாரும்வார்புனல்மேய்ந்து வயல்வாழும் *
கூர்வாய்நாரை பேடையோடாடும்குறுங்குடியே. (௮)

நின்றவினையும்துயரும்கெட மாமலரேந்தி *
சென்றுபணிமினெழுமின் தொழுமின்தொண்டீர்காள் *
என்றுமிரவும்பகலும் வரிவண்டிசைபாட *
குன்றின்முல்லைமன்றிடைநாறும் குறுங்குடியே. (௯)

✠ சிலையாலிலங்கைசெற்றான் மற்றோர்சினவேழம் *
கொலையார்கொம்புகொண்டான் மேயகுறுங்குடிமேல் *
கலையார்பனுவல்வல்லான் கலியனொலிமாலை*
நிலையார்பாடல்பாடப் பாவம்நில்லாவே. (௧0)

அக்கு துங்கார் வாழ சிரமுன் கவ்வை தீநீர் வல்லி நாரார் நின்ற சிலை தந்தை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௭-வது, தந்தைதாய்.



### திருவல்லவாழ்கோலப்பிரான்விஷயம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

தந்யாசிராகம்-ரூபகதாளம்.

✠ தந்தைதாய்மக்களே சுற்றமென்றுற்றவர்பற்றிநின்ற*
பந்தமார்வாழ்க்கையை நொந்துநீபழியெனக்கருதினாயேல்*
அந்தமாயாதியா யாதிக்குமாதியாயாயனாய *
மைந்தனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (௧)

மின்னுமாவல்லியும்வஞ்சியும்வென்றநுண்ணிடைநுடங்கும் *
அன்னமென்னடையினார்கலவியை யருவருத்தஞ்சினாயேல் *
துன்னுமாமணிமுடிப்பஞ்சவர்க்காகிமுன்தூதுசென்ற*
மன்னனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (௨)

பூணுலாமென்முலைப்பாவைமார் பொய்யினைமெய்யிதென்று*
பேணுவார்பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினையேல்*
நீணிலாவெண்குடைவாணனார் வேள்வியில்மண்ணிரந்த*
மாணியார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (௩)

பண்ணுலாமென்மொழிப்பாவைமார்பணைமுலையணைதுநாமென்று *
எண்ணுவாரெண்ணமதொழித்து நீபிழைத்துய்யக்கருதினையேல்*
விண்ணுளார்விண்ணின்மீதியன்ற வேங்கடத்துளார் *வளங்கொள்முந்நீர்
வண்ணனார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (௪)

மஞ்சுதோய்வெண்குடைமன்னராய் வாரணம்சூழவாழ்ந்தார் *
துஞ்சினாரென்பதோர்சொல்லை நீதுயரெனக்கருதினையேல்*
நஞ்சுதோய்கொங்கைமேல் அங்கைவாய்வைத்தவள்நாளையுண்ட *
மைந்தனார்வல்லவாழ்சொல்லு மாவல்லையாய்மருவுநெஞ்சே. (௫)

உருவினார்பிறவிசேருன் பொதிநரம்புதோல்குரம்பையுள்புக்கு - *
அருவிநோய்செய்துநின்றைவர் தாம்வாழ்வதற்கஞ்சினையேல் *
திருவினார்வேதநான் கைந்துதீவேள்வியோடங்கமாறும் *
மருவினார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (௬)

நோயெலாம்பெய்ததோராக்கையை மெய்யெனக்கொண்டு * வாளா
பேயர்தாம்பேசுமப்பேச்சை நீபிழையெனக்கருதினையேல் *
தீயுலாவெங்கதிர்த்திங்களாய் மங்குல்வானாகிநின்ற *
மாயனார்வல்லவாழ்சொல்லுமா வல்லையாய்மருவுநெஞ்சே. (௭)

மஞ்சுசேர்வானெரி நீர்நிலம் காலிவைமயங்கிநின்ற *
அஞ்சுசேராக்கையையரணமன் றென்றுய்யக்கருதினையேல் *
சந்துசேர்மென்முலைப் பொன்மலர்ப்பாவையும்தாமும்நாளும் *
வந்துசேர்வல்லவாழ்சொல்லுமா வல்லையாய்மருவுநெஞ்சே. (௮)

† வெள்ளியார் § பிண்டியார் ‡ போதியாரென்றிவரோதுகின்ற *
கள்ளநூல்தன்னையும் கருமமன்றென்றுய்யக்கருதினையேல் *
தெள்ளியார்கைதொழும்தேவனார் மாமுநீரமுதுதந்த *
வள்ளலார்வல்லவாழ் சொல்லுமாவல்லையாய்மருவுநெஞ்சே. (௯)

‡‡ மறைவலார்குறைவிலா ருறையுமூர்வல்லவாழடிகள்தம்மை *
சிறைகுலாவண்டறைசோலைசூழ் கோலநீளாலிநாடன் *
கறையுலாவேல்வல்லகலியன்வாயொலியிவைகற்றுவல்லார் *
இறைவராயிருநிலம்காவல்பூண்டின்பநன்கெய்துவாரே. (௧0)

தந்தை மின் பூண் பண் மஞ்சு உரு நோய் மஞ்சுசேர் வெள்ளியார் மறை முந்துற.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



---

† வெள்ளியார்-சுக்ரன் : வெள்ளிமலையையுடையருத்ரன். § பிண்டியார்-அசோகமரத்தின்கீழிருக்கும் ஆர்ஹதர், ‡ போதியார்-அரசின்கீழிருக்கும்பவுத்தர்.

## அ-வது, முந்துற.



### திருமாலிருஞ்சோலை அழகர்விஷயம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

சுருட்டிராகம்-அடதாளம்.

⁂ முந்துறவுரைக்கேன் விரைக்குழல்மடவார்கலவியைவிடு, தடுமாறல் *
அந்தரமேழுமலைகடலேழுமாய வெம்மடிகள்தம்கோயில் *
சந்தொடுமணியுமணிமயில்தழையும் தழுவிவந்தருவிகள்நிரந்து *
வந்திழிசாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (க)

இண்டையும்புனலும்கொண்டிடையின்றியெழுமினோதொழுதுமென்று - *
அண்டரும்பரவவரவணைத்துயின்றசுடர் முடிக்கடவுள்தம்கோயில் *
விண்டலர்தாளிவேய்வளர்புறவில்விரைமலர்க்குறிஞ்சியின்நறுந்தேன் *
வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (உ) [இமையோர்

பிணிவளராக்கைநீங்கநின்றேத்தப் பெருநிலமருளில்முன்னருளி *
அணிவளர்குறளாயகலிடமுழுதுமளந்தவெம்மடிகள்தம்கோயில் *
கணிவளர்வேங்கைநெடுநிலமதனில் குறவர்தம்கவணிடைத்துரந்த *
மணிவளர்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (ந)

சூர்மையிலாயபேய்முலைசுவைத்துச் சுடுசரமடுசிலைத்துரந்து *
நீர்மையிலாததாடகைமாள நினைந்தவர்மனம்கொண்டகோயில் *
கார்மலிவேங்கைகோங்கலர்புறவில்கடிமலர்குறிஞ்சியின்நறுந்தேன் *
வார்புனல்சூழ்தண்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (ச)

வணங்கலிலரக்கன்செருக்களத்தவிய மணிமுடியொருபதும்புரள *
அணங்கெழுந்தவன்றன்கவந்தம்நின்றாட அமர்செய்தவடிகள்தம்கோயில் *
பிணங்கலில்நெடுவேய்நுதிமுகம்கிழிப்பப் பிரசம்வந்திழிதர * பெருந்தேன்
மணங்கமழ்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (ரு)

விடங்கலந்தமர்ந்தவரவணைத்துயின்று விளங்கனிக்கிளங்கன்றுவிசிறி *
குடங்கலந்தாடிக்குரவைமுன்கோத்த கூத்தவெம்மடிகள்தம்கோயில் *
தடங்கடல்முகந்துவிசும்பிடைப்பிளிறத் தடவரைக்களிறென்றுமுனிந்து *
மடங்கல்நின்றதிரும்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. ()

தேனுகனாவிபோயுகவங்கோர் செழுந்திரள்பனங்கனியுதிர *
தானுகந்தெறிந்ததடங்கடல்வண்ண ரெண்ணிமுனிடங்கொண்டகோயில் *
வானகச்சோலைமரதகச்சாயல் மாமணிக்கல்லதர்நிறைந்து *
மானுகர்சாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (எ)

புதமிகுவிசும்பில்புணரிசென்றணவப்பொருகடலரவணைத்துயின்று *
பதமிகுபரியின்மிகுசினந்தவிர்த்தபனிமுகில்வண்ணர்தம்கோயில் *
கதமிகுசினத்தகடதடக்களிற்றின் கவுள்வழிகளிவண்டுபருக *
மதமிகுசாரல்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. (அ)

புந்தியில்சமணர்புத்தரொன்றிவர்களொத்தனபேசவுமுகந்திட்டு - *
எந்தைபெம்மானுரிமையவர்தலைவரெண்ணிமுனிடங்கொண்டகோயில் *
சந்தனப்பொழிலின்தாழ்சினைநீழல்தாழ்வரைமகளிர்கள்நாளும் *
மந்திரத்திறைஞ்சும்மாலிருஞ்சோலை வணங்குதும்வாமடநெஞ்சே. ()

⁂ வண்டமர்சாரல்மாலிருஞ்சோலை மாமணிவண்ணரைவணங்கும் *
தொண்டரைப்பரவும்சுடரொளிநெடுவேல்சூழ்வயலாலிநன்னாடன் *
கண்டல்நல்வேலிமங்கையர்தலைவன்கலியன்வாயொலிசெய்தபனுவல்
கொண்டிவைபாடும்தவமுடையார்களாள்வரிக்குரைகடலுலகே.(க0)

முந்துற இண்டை பிணி சூர்மை வணங்கலில் விடம் தேனுகன் புதம் புந்தி வண்டமர் மூவர்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, மூவரில்.



திருமாலிருஞ்சோலை அழகர்விஷயம்.
கலிவிருத்தம்.

கமாசுராகம்-ரூபகதாளம்.

⁂ மூவரில்முன்முதல்வன் முழங்கார்கடலுள்கிடந்து *
பூவலருந்திதன்னுள் புவனம்படைத்துண்டுமிழ்ந்த *
தேவர்கள்நாயகனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
கோவலர்கோவிந்தனைக் கொடியேரிடைகூடுங்கொலோ. (க)

⁂ புனைவளர்பூம்பொழிலார் பொன்னிசூழரங்கநகருள்
முனைவனை * மூவுலகும்படைத்த முதல்மூர்த்திதன்னை *
சினைவளர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்றான் *
கனைகழல்காணுங்கொலோ கயல்கண்ணியெம்காரிகையே. (உ)

உண்டுலகேழினையு மொருபாலகனாலிலைமேல் *
கண்டுயில்கொண்டுகந்த கருமாணிக்கமாமலையை *
திண்டிறல்மாகரிசேர் திருமாலிருஞ்சோலைநின்ற *
அண்டர்தம்கோவினை யின்றணுகுங்கொலென்னாயிழையே. (ஙு)

சிங்கமதாயவுணன்திறலாகம் முன்கீண்டுகந்த *
பங்கயமாமலர்க்கண்பரனை யெம்பரஞ்சுடரை *
திங்கள்நன்மாமுகில்சேர்திருமாலிருஞ்சோலைநின்ற *
நங்கள்பிரானையின்று நணுகுங்கொலென்னன்னுதலே. (ச)

தானவன்வேள்விதன்னில் தனியேகுறளாய்நிமிர்ந்து *
வானகமும்மண்ணகமு மளந்ததிருவிக்கிரமன் *
தேனமர்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
வானவர்கோனையின்று வணங்கித்தொழவல்லள்கொலோ. (ரு)

⁂ நேசமிலாதவர்க்கும் நினையாதவர்க்குமரியான் *
வாசமலர்ப்பொழில்சூழ் வடமாமதுரைப்பிறந்தான் *
தேசமெல்லாம்வணங்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
கேசவனம்பிதன்னைக்கெண்டை யொண்கண்ணிகாணுங்கொலோ. ()

புள்ளினைவாய்பிளந்து பொருமாகரிகொம்பொசித்து *
கள்ளச்சகடுதைத்த கருமாணிக்கமாமலையை *
தெள்ளருவிகொழிக்கும் திருமாலிருஞ்சோலைநின்ற *
வள்ளலைவாணுதலாள் வணங்கித்தொழவல்லள்கொலோ. (எ)

⁂ பார்த்தனுக்கன்றருளிப் பாரதத்தொருதேர்முன்னின்று *
காத்தவன்றன்னைவிண்ணோர் கருமாணிக்கமாமலையை *
தீர்த்தனைப்பூம்பொழில்சூழ் திருமாலிருஞ்சோலைநின்ற *
மூர்த்தியைக்கைதொழவும் முடியுங்கொலென்மொய்குழற்கே. (அ)

⁂ வலம்புரியாழியனை வரையார்திரடோளன்றன்னை *
புலம்புரிநூலவனைப் பொழில்வேங்கடவேதியனை *
சிலம்பியலாறுடைய திருமாலிருஞ்சோலைநின்ற *
நலந்திகழ்நாரணனை நணுகுங்கொலென்நன்னுதலே. (கூ)

⁂ தேடற்கரியவனைத் திருமாலிருஞ்சோலைநின்ற *
ஆடல்பறவையனை யணியாயிழைகாணுமென்று *
மாடக்கொடிமதில்சூழ் மங்கையார்கலிகன்றிசொன்ன *
பாடல்பனுவல்பத்தும் பயில்வார்க்கில்லைபாவங்களே. (க0)

மூவர் புனை உண்டு சிங்கம் தானவன் நேசம் புள் பார்த்தன் வலம்புரி தேடற்கு எங்கள்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## க0-வது, எங்கள்.

திருக்கோட்டியூர் சௌம்யநாராயணன்விஷயம்.

ஆசிரியத்துறை.

எழுநாராகம்-அடதாளம்.

⁂ எங்களெம்மிறையெம்பிரா னிமையோர்க்குநாயகன்* ஏத்தடியவர்
தங்கள்தம்மனத்துப் பிரியாதருள்புரிவான் *
பொங்குதண்ணருவி † புதம்செய்யப்பொன்களேசிதறுமிலங்கொளி *
செங்கமலமலரும் திருக்கோட்டியூரானே. (க)

‡ எவ்வநோய்தவிர்ப்பா னெமக்கிறையின்னகைத்துவர்வாய் * நிலமகள்
செவ்விதோயவல்லான் திருமாமகட்கினியான் *
மௌவல்மாலைவண்டாடும் மல்லிகைமாலையோடுமணந்து * மாருதம்
தெய்வநாறவரும் திருக்கோட்டியூரானே. (உ)

---

† புதம்-அம்புதம் என்றதின் முதற்குறை ; மேகம் என்று பொருள்.

‡ எவ்வம்-துக்கம்.

வெள்ளியான்கரியான் மணிநிறவண்ணன்விண்ணவர்தமக்கிறை * எமக்
கொள்ளியானுயர்ந்தா னுலகேழுமுண்டுமிழ்ந்தான் *
துள்ளுநீர்மொண்டுகொண்டுசாமரைக்கற்றைசந்தநமுந்திவந்தசை *
தெள்ளுநீர்புறவில் திருக்கோட்டியூரானே. (ங)

ஏறுமேறியிலங்குமொண்மழுப்பற்றுமீசற்கிசைந்து * உடம்பிலோர்
கூறுதான்கொடுத்தான் குலமாமகட்கினியான் *
நாறுசெண்பகமல்லிகைமலர் § புல்கி யின்னிளவண்டு * நன்னறும்
தேறல்வாய்மடுக்கும் திருக்கோட்டியூரானே. (ச)

வங்கமாகடல்வண்ணன் மாமணிவண்ணன்விண்ணவர்கோன் * மதுமலர்த்
தொங்கல்நீண்முடியான் நெடியான் † படிகடந்தான் *
மங்குல்தோய்மணிமாடவெண்கொடி ‡ மாகமீதுயர்ந்தேறி *வானுயர்
திங்கள்தானணவும் திருக்கோட்டியூரானே. (ரு)

காவலனிலங்கைக்கிறைகலங்கச் சரம்செலவுய்த்து * மற்றவன்
ஏவலம்தவிர்த்தா னென்னையாளுடையெம்பிரான் *
நாவலம்புவிமன்னர்வந்துவணங்க மாலுறைகின்றதிங்கென *
தேவர்வந்திறைஞ்சும் திருக்கோட்டியூரானே. (சு)

கன்றுகொண்டுவிளங்கனியெறிந்து ஆநிரைக்கழிவென்று * மாமழை
நின்றுகாத்துகந்தான் நிலமாமகட்கினியான் *
குன்றின்முல்லையின்வாசமும் குளிர்மல்லிகைமணமுமளைந்து-* இளந்
தென்றல்வந்துலவும் திருக்கோட்டியூரானே. (எ)

பூங்குருந்தொசித் தானைகாய்ந்தரிமாச்செகுத்து -* அடியேனையாளுகந்து-
ஈங்கென்னுள்புகுந்தா னிமையோர்கள்தம்பெருமான் *
தூங்குதண்பலவின்கனி தொகுவாழையின்கனியொடுமாங்கனி *
தேங்குதண்புனல்சூழ் திருக்கோட்டியூரானே. (அ)

கோவையின்தமிழ்பாடுவார் குடமாடுவார், தடமாமலர்மிசை *
மேவுநான்முகனில் விளங்குபுரிநூலர் *
மேவுநான்மறைவாணர்ஐவகைவேள்வியாறங்கம்வல்லவர்தொழும் *
தேவதேவபிரான் திருக்கோட்டியூரானே. (கூ)

‡‡ ஆலுமாவலவன்கலிகன்றி மங்கையர்தலைவன் * அணிபொழில்
சேல்கள்பாய்கழனித் திருக்கோட்டியூரானை *
நீலமாமுகில்வண்ணனை நெடுமாலையின்தமிழால்நினைந்த * இந்
நாலுமாறும்வல்லார்க் கிடமாகும்வானுலகே. (கO)

எங்கள் எவ்வம் வெள்ளி ஏறு வங்கம் காவலன் கன்று பூங் கோவை ஆலும்ஒருநல்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



§ "புல்லி,, என்றும்பாடம். † படி-பூமி. ‡ மாகம்-மஹாகம்; கம்-ஆகாசம்.

# பத்தாம்பத்து.

## க-வது, ஒருநல்சுற்றம்.

திருநீர்மலை, திருக்கண்ணமங்கை, திருத்தண்கா, திருநாங்கூர் திருவெள்ளறை, திருமெய்யம், திருச்சேறை, திருக்குடந்தை, திருவெஃகா-திருமாலிருஞ்சோலை, திருவிண்ணகர், திருக்கோட்டியூர்-திருநாவாய் பெருமாள்விஷயம்.

கலிவிருத்தம்.

**தற்பார்ராகம்-அடதாளம்.**

‡‡ ஒருநல்சுற்ற மெனக்குயிரொண்பொருள் *
வருநல்தொல்கதி யாகியமைந்தனை *
நெருநல்கண்டது நீர்மலையின்றுபோய்
கருநெல்சூழ்கண்ண மங்கையுள்காண்டுமே. (க)

பொன்னைமாமணியை யணியார்ந்ததோர்
மின்னை * வேங்கடத்துச்சியில்கண்டுபோய் *
என்னையாளுடையீசனை யெம்பிரான்
றன்னை * யாம்சென்றுகாண்டும்தண்காவிலே. (உ)

வேலையாலிலைப் பள்ளிவிரும்பிய *
பாலையாரமுதத்தினை * பைந்துழாய்
மாலைஆலியில்கண்டுமகிழ்ந்துபோய் *
ஞாலமுன்னியைக்காண்டும் நாங்கூரிலே. (ங)

துளக்கமில்சுடரை அவுணனுடல்
பிளக்கும்மைந்தனை பேரில்வணங்கிப்போய் *
அளப்பிலாரமுதை யமரர்க்கருள்
விளக்கினை * சென்றுவெள்ளறைக்காண்டுமே. (ச)

$ சுடலையில்சுடுநீறனமர்ந்ததோர் *
§ நடலைதீர்த்தவனை நறையூர்க்கண்டு - * என்
‡ உடலையுள்புகுந் துள்ளமுருக்கியுண் *
விடலையைச்சென்றுகாண்டும் மெய்யத்துள்ளே. (ரு)

வானையாரமுதம் தந்தவள்ளலை *
தேனைநீள்வயல் சேறையில்கண்டுபோய் *
ஆனைவாட்டியருளு மமரர்தம்
கோனை * யாம்குடந்தைச்சென்றுகாண்டுமே. (சு)

கூந்தலார்மகிழ்கோவலனாய் * வெண்ணெய்
மாந்தழுந்தையில்கண்டுமகிழ்ந்துபோய் *
‡ பாந்தள்பாழியில் பள்ளிவிரும்பிய *
வேந்தனைச்சென்றுகாண்டும் வெஃகாவுளே. (எ)

---

$ சுடலை-ஶ்மஶாநம். § நடலை - துக்கம். ‡ உடலையுள்-சரீரத்துள்? இங்கு, ஐகாரம் அவ்யயம். ‡‡ பர்ந்தள் - பாம்பு.

‡‡ பத்தராவியைப் பான்மதியை * § அணித்
தொத்தைமாலிருஞ் சோலைத்தொழுதுபோய் *
முத்தினைமணியை மணிமாணிக்க
வித்தினை * சென்றுவிண்ணகர்க்காண்டுமே. (அ)

கம்பமாகளிறஞ்சிக்கலங்க * ஓர்
கொம்புகொண்ட குரைகழல்கூத்தனை *
கொம்புலாம்பொழில் கோட்டியூர்க்கண்டுபோய் *
நம்பனைச்சென்றுகாண்டும் நாவாயுளே. (கூ)

$ பெற்றம்மாளியைப் பேரில்மணாளனை *
கற்றநூல் கலிகன்றியுரைசெய்த *
சொல்திறமிவை சொல்லியதொண்டர்கட்கு - *
‡ அற்றமில்லை யண்டமவர்க்காட்சியே. (க0)

ஒரு பொன்வேலை துளக்கம் சுடலை வான் கூந்தல் பத்தர் கம்பம் பெற்றம் இரக்கம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## உ-வது, இரக்கமின்றி.

சக்ரவர்த்தித்திருமகன்விஷயம்.
எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.
**பியாகடைராகம்-அடதாளம்.**

‡‡ இரக்கமின்றியெங்கோன்செய்ததீமை
யிம்மையேயெமக்கெய்திற்றுக்காணீர் *
பரக்காயமின்றுரைத்தென் இராவணன்
பட்டனனினியாவர்க்குரைக்கோம் *
குரக்குநாயகர்கா ளிளங்கோவே!
கோலவல்விலிராமபிரானே *
அரக்கராடழைப் பாரில்லைநாங்க
ளஞ்சினோந்தடம் §§ பொங்கத்தம்பொங்கோ. (க)

பத்துநீண்முடியுமவற்றிரட்டிப்
பாழித்தோளும்படைத்தவன்செல்வம் *
சித்தம்மங்கையர்பால்வைத்துக்கெட்டான்
செய்வதொன்றறியாவடியோங்கள் *
ஒத்ததோளிரண்டுமொருமுடியும்
ஒருவர்தம்திறத்தோமன்றிவாழ்ந்தோம் *
அத்தவெம்பெருமானெம்மைக்கொல்லேல்
அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (உ)

---

§ "மணித்தொத்தை" என்றுபாடாந்தரம். $ "பெற்றமாளிகை,, என்று முந்தினபாடம். இதில், பெற்றமென்று - பெருமையென்றபடி. ‡ அற்றம்-விச்சேதம் §§ பொங்கத்தம்பொங்கோ - தோற்றவர்கள் தோல்வியாலே பறையடிக்க ஆடுவதொருகூத்து ; அந்தஸப்தாநுகாரம்.

தண்டகாரணியம் புகுந்தன்று
 தையலைத்தகவிலியெங்கோமான் *
கொண்டுபோய்ந்துகெட்டான் எமக்கிங்கோர்
 குற்றமில்லைக்கொல்லேல்குலவேந்தே ! *
பெண்டிரால்கெடுமிக்குடிதன்னைப்
 பேசுகின்றதென் ? தாசரதீ ! * உன்
அண்டவாணருகப்பதேசெய்தாய்
 அஞ்சினோம்தடம் பொங்கத்தம்பொங்கோ. (ங)

எஞ்சலிலிலங்கைக்கிறை யெங்கோன்
 றன்னைமுன்பணிந்து - * எங்கள்கண்முகப்பே
நஞ்சுதானரக்கர்குடிக்கென்று
 நங்கையையவன்தம்பியேசொன்னான் *
விஞ்சைவானவர் வேண்டிற்றேபட்டோம்
 வேரிவார்பொழில்மாமயிலன்ன *
† அஞ்சலோதியைக்கொண்டுநடமின்
 அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (ச)

செம்பொன்நீண்முடி யெங்களிராவணன்
 சீதையென்பதோர்தெய்வம்கொணர்ந்து *
வம்புலாம்கடிகாவில்சிறையா
 வைத்ததே குற்றமாயிற்றுக்காணீர் *
கும்பனோடு நிகும்பனும்பட்டான்
 கூற்றம்மானிடமாய்வந்துதோன்றி *
அம்பினாலெம்மைக்கொன்றிடுகின்றது -
 அஞ்சினோம்தடம் பொங்கத்தம்பொங்கோ. (ரு)

ஓதமாகடலைக்கடந்தேறி
 யுயர்கொள்மாக்கடிகாவையிறுத்து *
காதல்மக்களும்சுற்றமும்கொன்று
 கடியிலங்கைமலங்கவெரித்து
தூதுவந்தகுரங்குக்கே உங்கள்
 தோன்றல்தேவியைவிட்டுக்கொடாதே *
§ ஆதர்நின்றுபடுகின்றதந்தோ
 அஞ்சினோம்தடம் பொங்கத்தம்பொங்கோ. (சு)

தாழமின்றிமுந்நீரையந்நான்று
 தகைந்ததேகண்டு * வஞ்சிநுண்மருங்குல்
மாழைமான்மடநோக்கியைவிட்டு
 வாழகில்லாமதியின்மனத்தானை *

---

† அஞ்சலோதி—அஞ்சு-இருட்சி, சுருட்சி, நீட்சி, குளிர்ச்சி, அழகு என்று. அஞ்சுவகைப்பட்ட, அல்-இருண்ட, ஓதி, மயிர்முடியையுடைய பிராட்டி. § ஆதர்-இளிம்பர்.

ஏழையையிலங்கைக்கிறைதன்னை
  யெங்களையொழியக்கொலையவனை *
$ சூழுமானினை மாமணிவண்ணா
  சொல்லினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (எ)

மனங்கொண்டேறும்மண்டோதரிமுதலா
  அங்கயல்கண்ணினார்களிருப்ப *
தனங்கொள்மென்முலைநோக்கமொழிந்து
  தஞ்சமேசிலதாபதரென்று *
புனங்கொள்மென்மயிலைச்சிறைவைத்த
  புன்மையாளன்நெஞ்சில்புகவெய்த *
அனங்கனன்னதிண்டோளெம்மிராமற்கு -
  அஞ்சினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (அ)

புரங்கள்மூன்றுமோர்மாத்திரைப்போதில்
  பொங்கெரிக்கிரைகண்டவனம்பில் *
சரங்களேகொடிதாயடுகின்ற
  சாம்பவானுடன் நிற்கத்தொழுதோம் *
இரங்குநீயெமக்கெந்தைபிரானே
  இலங்குவெங்கதிரோன்சிறுவா *
குரங்குகட்கரசே ! யெம்மைக்கொல்லேல்
  கூறினோம்தடம்பொங்கத்தம்பொங்கோ. (கூ)

⁂ அங்கவ்வானவர்க்காகுலம்தீர
  அணியிலங்கையழித்தவன்றன்னை *
பொங்குமாவலவன்கலிகன்றி
  புகன்றபொங்கத்தங்கொண்டு - * இவ்வுலகினில்
எங்கும்பாடிநின்றாடுமின்தொண்டீர்
  இம்மையேயிடரில்லை * இறந்தால்
தங்குமூரண்டமேகண்டுகொண்மின்
  சாற்றினோம்தடம் பொங்கத்தம்பொங்கோ. (க0)

இரக்கம் பத்து தண்டகா எஞ்சல் செம்பொன் ஓதம் தாழம் மனம் புரம் அங்கு எத்து.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



$ சூழுமானினை - க்ரித்ரிமமான மானை விட்டவனை.

## ௩-வது, எத்துகின்ரேம்.

இதுவுமது.
கலிவிருத்தம்.
கல்யாணிராகம்-திரிபுடைதாளம்.

✠ எத்துகின்ரேம்நாத்தழும்ப இராமன்திருநாமம் *
சோத்தநம்பிசுக்ரீவா வும்மைத்தொழுகின்ரேம் *
வார்த்தைபேசிரேம்மை யுங்கள்வானரம்கொல்லாமே
கூத்தர்போலவாடுகின்ரேம்‡ குழமணிதூரமே. (க)

எம்பிரானேயென்னையாள்வா யென்றென்றலற்ருதே *
அம்பின்வாய்ப்பட்டாற்றகில்லா திந்திரசித்தழிந்தான் *
நம்பி அநுமா சுக்கிரீவா அங்கதனே நளனே *
கும்பகர்ணன்பட்டுப்போனுன் குழமணிதூரமே. (உ)

ஞாலமாளுமுங்கள்கோமா னெங்களிராவணற்கு *
காலனுகிவந்தவா கண்டஞ்சி * கருமுகில்போல்
நீலன்வாழ்க சுடேணன்வாழ்க அங்கதன்வாழ்கவென்று *
கோலமாகவாடுகின்ரேம் குழமணிதூரமே. (௩)

மணங்கள்நாறும்வார்குழலார் மாதர்களாதரத்தை *
புணர்ந்தசிந்தைப்புன்மையாளன் பொன்ற, வரிசிலையால் *
கணங்களுண்ணவாளியாண்ட காவலனுக்கிளையோன் *
குணங்கள்பாடியாடுகின்ரேம் குழமணிதூரமே. (ச)

வென்றிதந்தோம் மானம்வேண்டோம் தானமெமக்காக *
இன்றுதம்மினெங்கள்வாணு ளெம்பெருமான்தமர்காள் *
நின்றுகாணீர்கண்களார நீரெம்மைக்கொல்லாதே *
குன்றுபோலவாடுகின்ரேம் குழமணிதூரமே. (ரு)

கல்லின்முந்நீர்மாற்றிவந்து காவல்கடந்து - * இலங்கை
அல்லல்செய்தானுங்கள்கோமா னெம்மையமர்க்களத்து *
வெல்லகில்லாதஞ்சினேங்காண் வெங்கதிரோன்சிறுவா ! *
கொல்லவேண்டா ஆடுகின்ரேம் குழமணிதூரமே. (சு)

மாற்றமாவதித்தனையே வம்மின் அரக்கருள்ளீர் *
சீற்றம்நும்மேல்தீரவேண்டில் சேவகம்பேசாதே *
ஆற்றல்சான்றதொல்பிறப்பி லநுமனைவாழ்கவென்று *
கூற்றமன்னுர்காண ஆடீர் குழமணிதூரமே. (எ)

கவளயானைப்பாய்புரவித் தேரோடரக்கரெல்லாம்
துவள * வென்றவென்றியாளன்றன் தமர்கொல்லாமே *
தவளமாடநீடயோத்திக் காவலன்றன்சிறுவன் *
குவளைவண்ணன்காண ஆடீர் குழமணிதூரமே. (அ)

---

‡ குழமணிதூரம்-குணலைக்கூத்துப்போலே தோற்ருர்தோல்விக்கீடாக ஆடுவதொருகூத்து: குணலைக்கூத்து- தலைகீழாக ஆடுவதொரு கூத்து.

ஏடொத்தேந்தும்நீணிலைவே ளெங்களிராவணனார்
ஓடிப்போனார் * நாங்களெய்த்தோ முய்வதோர்காரணத்தால் *
சூடிப்போந்தோம் உங்கள்கோமானாணை தொடரேல்மின் *
கூடிக்கூடியாடுகின்றோம் குழமணிதூரமே. (கூ)

⁂ வென்றதொல்சீர்த்தென்னிலங்கைவெஞ்சமத்து - * அன்றரக்கர்
குன்றமன்னாராடியுய்ந்த குழமணிதூரத்தை *
கன்றிநெய்நீர்நின்றவேற்கைக் கலியனொலிமாலை *
ஒன்றுமொன்றுமைந்துமூன்றும் பாடிநின்றாடுமினே. (க0)

எத் தெம்பிரான் ஞாலம் மணம் வென்றி கல்லின் மாற்றம் கவள ஏடு வென்ற சந்தம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ச-வது, சந்தமலர்க்குழல்.



கண்ணன்விஷயம்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

புன்னாகவராளிராகம்-ரூபகதாளம்.

⁂ சந்தமலர்க்குழல்தாழத் தானுகந்தோடித்தனியே
வந்து - * என்முலைத்தடந்தன்னைவாங்கி நின்வாயில்மடுத்து *
நந்தன்பெறப்பெற்றநம்பீ நானுகந்துண்ணுமமுதே ! *
எந்தைபெருமானேயுண்ணா யென்னம்மம்சேமமுண்ணாயே. (க)

வங்கமறிகடல்வண்ணா மாமுகிலேயொக்கும்நம்பீ *
செங்கணெடியதிருவே செங்கமலம்புரைவாயா *
கொங்கைசுரந்திடவுன்னைக் கூவியும்காணாதிருந்தேன் *
எங்கிருந்தாயர்களோடுமென் விளையாடுகின்றாயே. (உ)

திருவில்பொலிந்தவெழிலா ராயர்தம்பிள்ளைகளோடு *
தெருவில்திளைக்கின்றநம்பீ செய்கின்றதீமைகள்கண்டிட்டு - *
உருகியென்கொங்கையின் † தீம்பா லோட்டந்துபாய்ந்திடுகின்ற *
மருவிக்குடங்காலிருந்து வாய்முலையுண்ணநீவாராய். (ங)

மக்கள்பெறுதவம்போலும் வையத்துவாழும்மடவார் *
மக்கள்பிறர்கண்ணுக் கொக்கும்முதல்வா ! மதக்களிறன்னாய் !*
செக்கரிளம்பிறைதன்னைவாங்கி நின்கையில்தருவன் *
ஒக்கலைமேலிருந்தம்ம முகந்தினிதுண்ணநீவாராய். (ச)

மைத்தகருங்குஞ்சிமைந்தா மாமருதூடுநடந்தாய் ! *
வித்தகனே ! விரையாதே வெண்ணெய்விழுங்கும்விகிர்தா ! *
இத்தனைபோதன்றியென்றன் கொங்கைசுரந்திருக்ககில்லா *
உத்தமனே ! அம்மமுண்ணாய் உலகளந்தாயம்மமுண்ணாய். (ரு)

† தீம்பால் - இனியபால்.

பிள்ளைகள்செய்வனசெய்யாய் பேசில்பெரிதும்வலியை *
கள்ளம்மனத்திலுடையை காணவேதீமைகள்செய்தி *
உள்ளமுருகியென்கொங்கை யோட்டந்துபாய்ந்திடுகின்ற *
பள்ளிக்குறிப்புச்செய்யாதே பாலமுதுண்ணநீவாராய். (சு)

தன்மகனாகவன்பேய்ச்சி தான்முலையுண்ணக்கொடுக்க *
வன்மகனாயவளாவிவாங்கி முலையுண்டநம்பீ *
நன்மகளாய்மகளோடு நானிலமங்கைமணாளா *
என்மகனேயம்மமுண்ணு யென்னம்மம்சேமமுண்ணாயே. (எ)

உந்தமடிகள்முனிவர் உன்னைநானென்கையில்கோலால் *
நொந்திடமோதவுங்கில்லேன், உங்கள்தமாநிரையெல்லாம் *
வந்துபுகுதரும்போது வானிடைத்தெய்வங்கள்காண *
அந்தியம்போதங்குநில்லே லாழியங்கையனேவாராய். (அ)

பெற்றத்தலைவனெங்கோமான் பேரருளாளன்மதலாய் *
சுற்றக்குழாத்திளங்கோவே தோன்றியதொல்புகழாளா *
கற்றினந்தோறும்மறித்துக் கானம்திரிந்தகளிறே *
எற்றுக்கென்னம்மமுண்ணாதே யெம்பெருமானிருந்தாயே. (கூ)

⁂ இம்மையிடர்கெடவேண்டி யேங்தெழில்தோள்கலிகன்றி *
செம்மைப்பனுவல்நூல்கொண்டு செங்கணெடியவன்றன்னை *
அம்மமுண்ணென்றுரைக்கின்ற பாடலிவையைந்துமைந்தும் *
மெய்ம்மைமனத்துவைத்தேத்த விண்ணவராகலுமாமே. (க0)

சந்தம் வங்கம் திருவில் மக்கள் மைத்த பிள்ளை தன்மகன் உந்தம்பெற்ற இம்மை பூங்கோதை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

## ரு-வது, பூங்கோதை.

சப்பாணிபருவம்.

கலிவிருத்தம்.

யமுநாகல்யாணிராகம்-ஆதிதாளம்.

⁂ பூங்கோதையாய்ச்சி கடைவெண்ணெய்புக்குண்ண *
ஆங்கவளார்த்துப் புடைக்கப்புடையுண்டு *
ஏங்கியிருந்து சிணுங்கிவிளையாடும் *
ஓங்கோதவண்ணனே சப்பாணி ஒளிமணிவண்ணனேசப்பாணி. (க)

தாயர்மனங்கள் தடிப்ப * தயிர்நெய்யுண்
டேயெம்பிராக்கள் * இருநிலத்தெங்கள்தம்
ஆயரழக * † அடிகளரவிந்த ,
வாயவனேகொட்டாய்சப்பாணி ‡ மாலவனேகொட்டாய்சப்பாணி.

† "அடிகளரவிந்தமாயவனே" என்றுபாடாந்தரம். ‡ "மால்வண்ணனே" என்றுசில வ்யாக்யாந ஸ்ரீகோசங்கள்; கறுத்த நிறத்தை யுடையவனே என்று பொருள்.

தாம்மோருருட்டித்தயிர்நெய்விழுங்கிட்டு *
தாமோதவழ்வினொன் றாய்ச்சியர்தாம்பினால் *
தாம் ‡ மோதரக்கையா லார்க்கத்தழும்பிருந்த *
தாமோதராகொட்டாய்சப்பாணி தாமரைக்கண்ணனேசப்பாணி.(௩)

பெற்றார்தளைகழலப் பேர்ந்தங்கயலிடத்து *
உற்றாரொருவருமின்றியுலகினில் *
மற்றாருமஞ்சப்போய் வஞ்சப்பெண்நஞ்சுண்ட *
கற்றாயனேகொட்டாய்சப்பாணிகார்வண்ணனேகொட்டாய்சப்பாணி

சோத்தெனநின்னைத் தொழுவன்வரந்தர *
பேய்ச்சிமுலையுண்டபிள்ளாய் * பெரியன
ஆய்ச்சியரப்பம்தருவர் * அவர்க்காகச்
சாற்றியோராயிரம்சப்பாணி தடங்கைகளால்கொட்டாய்சப்பாணி.()

கேவலமன்றுன்வயிறு * வயிற்றுக்கு
நான்வலவப்பம்தருவன் * கருவிளைப்
பூவலர்நீண்முடி நந்தன்றன்போரேறே *
கோவலனேகொட்டாய்சப்பாணி குடமாடீகொட்டாய்சப்பாணி. ()

புள்ளினைவாய்பிளந்து பூங்குருந்தம்சாய்த்து *
துள்ளிவிளையாடித் தூங்குறிவெண்ணெயை *
அள்ளியகையா லடியேன்முலைநெருடும் *
பிள்ளைப்பிரான்கொட்டாய்சப்பாணிபேய்முலையுண்டானேசப்பாணி

§ யாயும்பிறரு மறியாதயாமத்து *
மாயவலவைப்பெண் வந்துமுலைதர *
பேயென்றவளைப்பிடித்துயிரையுண்ட *
வாயவனேகொட்டாய்சப்பாணி மால்வண்ணனேகொட்டாய்சப்பா[ணி

கள்ளக்குழவியாய்க் காலால்சகடத்தை *
தள்ளியுதைத்திட்டுத் தாயாய்வருவாளை *
மெள்ளத்தொடர்ந்துபிடித்தாருயிருண்ட $ *
வள்ளலேகொட்டாய்சப்பாணி மால்வண்ணனேகொட்டாய்சப்பாணி

‡‡ காரார்புயல்கைக் கலிகன்றிமங்கையர்கோன் *
பேராளன்நெஞ்சில்பிரியாதிடங்கொண்ட
சீராளா * செந்தாமரைக்கண்ணா * தண்டுழாய்த்
தாராளாகொட்டாய்சப்பாணி தடமார்வாகொட்டாய்சப்பாணி.(௧0)

பூங்கோதை தாயர் தாம்மோர் பெற்றார் சோத்தென கேவலம் புள்யாயும் கள்ளக் காரார் எங்கானும்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



‡ மோதரம்-மோதிரம் என்று வ்யவஹாரம்; படாகை, கணறு என்கிறவற்றை, பிடாகை, கிணறு என்கிறாப்போலே. § யாப்- பெற்றதாய். $ "ஆருயிரையுண்ட" என்றும் பாடம்.

## கூ-வது, எங்கானும்.



மாயன்வெண்ணெயுண்டமாட்சிமை.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

சாவேரிராகம்-அடதாளம்.

எங்கானுமீதொப்பதோர்மாயமுண்டே
நரநாரணனாயுலகத்தறநூல் *
சிங்காமைவிரித்தவனெம்பெருமான்
அதுவன்றியும்செஞ்சுடரும்நிலனும் *
பொங்கார்கடலும்பொருப்பும் நெருப்பும்
நெருக்கிப்புகப் பொன்மிடறத்தனைபோது
அங்காந்தவன் காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (க)

குன்றொன்றுமத்தாவரவமளவிக்
குரைமாகடலைக்கடைந்திட்டு * ஒருகால்
நின்றுண்டைகொண்டோட்டிவன்கூன்நிமிர
நினைந்தபெருமானதுவன்றியும்முன்*
நன்றுண்டதொல்சீர்மகரக்கடலேழ்
மலையேழுலகேழொழியாமைநம்பி *
அன்றுண்டவன்காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (உ)

உளைந்திட்டெழுந்த மதுகைடவர்கள்
உலப்பில்வலியாலவர்பால் * வயிரம்
விளைந்திட்டதென்றெண்ணி விண்ணோர்பரவ
அவர்நாளொழித்தபெருமான்முனநாள் *
வளைந்திட்டவில்லாளி வல்வாளெயிற்று
மலைபோலவுணனுடல்வள்ளுகிரால்
அளைந்திட்டவன் காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (ங)

தளர்ந்திட்டிமையோர்சரண்தாவெனத்தான்
சரணாய்முரணாயவனை * உகிரால்
பிளந்திட்டமரர்க்கருள்செய்துகந்த
பெருமான்திருமால் விரிநீருலகை *
வளர்ந்திட்டதொல்சீர்விறல்மாவலியை
மண்கொள்ளவஞ்சித்தொருமாண்குறளாய் *
அளந்திட்டவன் காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (ச)

நீண்டான்குறளாய் நெடுவானளவும்
அடியார்படுமாழ்துயராயவெல்லாம் *
தீண்டாமைநினைந்திமையோரளவும்
செலவைத்தபிரானதுவன்றியும்முன்
வேண்டாமைநமன்றமரென்தமரை
வினவப்பெறுவாரலரென்று - * உலகேழ்
ஆண்டானவன்காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (ரு)

பழித்திட்டவின்பப்பயன்பற்றறுத்துப்
பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம் *
ஒழித்திட்டவரைத்தனக்காக்கவல்ல
பெருமான்திருமாலதுவன்றியும்முன் *
தெழித்திட்டெழுந்தேயெதிர்நின்றமன்னன்
சினத்தோளவையாயிரமும்மழுவால் *
அழித்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (சு)

படைத்திட்டதிவ்வையமுய்யமுனநாள்
பணிந்தேத்தவல்லார்துயராயவெல்லாம் *
துடைத்திட்டவரைத்தனக்காக்கவென்னத்
தெளியாவறக்கர்திறல்போயவிய *
மிடைத்திட்டெழுந்தகுரங்கைப்படையா
விலங்கல்புகப்பாய்ச்சிவிம்ம * கடலை
அடைத்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (எ)

நெறித்திட்டமென்கூழைநன்னேரிழையோ
டுடனாயவில்லென்னவல்லேயதனை *
இறுத்திட்டவளின்பமன்போடணைந்தித்
டிளங்கொற்றவனாய்த்துளங்காதமுந்நீர்
செறித்திட்டிலங்கைமலங்கவரக்கன்
செழுநீண்முடி தோளொடுதாள்துணிய *
அறுத்திட்டவன்காண்மினின்றாய்ச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (அ)

சுரிந்திட்டசெங்கேழுளைப்பொங்கரிமாத்
துலையப்பிரியாது சென்றெய்தி * எய்தா
திரிந்திட்டிடங்கொண்டடங்காததன்வா
யிருகூறுசெய்தபெருமான்முனநாள் *

வரிந்திட்டவில்லால்மரமேழுமெய்து
மலைபோலுருவத்தொரிராக்கதிமூக்கு — *
அறிந்திட்டவன்காண்மினின்றாச்சியரால்
அளைவெண்ணெயுண்டாப்புண்டிருந்தவனே. (௯)

⁂ நின்றார்முகப்புச்சிறிதும் நினையான்
வயிற்றைநிறைப்பானுறிப்பால்தயிர்நெய் *
அன்றாய்ச்சியர் வெண்ணெய்விழுங்கி யுரலோ
டாப்புண்டிருந்த பெருமானடிமேல் *
நன்றாயதொல்சீர்வயல்மங்கையர்கோன்
கலியனொலிசெய்தமிழ்மாலைவல்லார் *
என்றானுமெய்தாரிடரின்பமெய்தி
யிமையோர்க்குமப்பால் செலவெய்துவரே. (கO)

எங்கான் குன்றுளை தளர் நீண்டான் பழி படை நெறிசுரி நின்றார்மானம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, மானமுடைத்து.



ஆய்ச்சியர் கண்ணனைக்குறித்து முறையிடல்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

கேதாரகௌளராகம்-அடதாளம்.

⁂ மானமுடைத்துங்களாயர்குல மதனால்பிறர்மக்கள்தம்மை *
ஊனமுடையனசெய்யப்பெறாயென் றிரப்பனுரப்பகில்லேன் *
நானுமுரைத்திலேன்நந்தன்பணித்திலன்நங்கைகாள்நானென்செய்கேன் *
தானுமோர்கன்னியுங்கீழையகத்துத் தயிர்கடைகின்றான்போலும். (க)

காலையெழுந்துகடைந்தவிம்மோர்விற்கப்போகிறேன் கண்டேபோனேன்
மாலைநறுங்குஞ்சிநந்தன்மகனல்லால் மற்றுவந்தாருமில்லை *
மேலையகத்துநங்காய்வந்துகாண்மின்கள் வெண்ணெயேயன்றிருந்த
பாலும் பதின்குடம்கண்டிலேன் பாவியானென்செய்கேனென்செய்கேனே.

தெள்ளியவாசிறியான்நங்கைகாள் உறிமேலத்தடாநிறைந்த *
வெள்ளிமலையிருந்தாலொத்தவெண்ணெயை வாரிவிழுங்கியிட்டு *
கள்வனுறங்குகின்றான்வந்துகாண்மின்கள் கையெல்லாம்நெய்*வயிறு
பிள்ளைபரமன்றிவ்வேழுலகும்கொள்ளும் பேதையேனென்செய்கேனே. (௩)

மைந்நம்புவேல்கண்நல்லாள் முன்னம்பெற்றவளைவண்ணநன்மாமே
தன்நம்பிநம்பியுமிங்குவளர்ந்த தவனிவைசெய்தறியான் [னி
பொய்ந்நம்பிபுள்ளுவன் கள்வம்பொதியறை போகின்றவாதவழ்ந்திட்டு-*
இந்நம்பிநம்பியா, ஆச்சியர்க்குய்வில்லை யென்செய்கேனென்செய்கேனே. (௪)

தந்தைபுகுந்திலன்நானிங்கிருந்திலேன் தோழிமாராருமில்லை *
சந்தமலர்க்குழலாள் தனியேவிளையாடுமிடம்குறுகி *
பந்துபறித்துத்துகில்பற்றி * கீறிப் படிறன்படிறுசெய்யும் *
நந்தன்மதலைக்கிங்கென்கடவோம்நங்காய் யென்செய்கேனென்செய்கேனே. ()

மண்மகள்கேள்வன்மலர்மங்கைநாயகன் நந்தன்பெற்றமதலை *
அண்ணலிலைக்குழலூதிநம்சேரிக்கே யல்லுற்றான்வந்தபின்னை *
கண்மலர்ச்சோர்ந்துமுலைவந்து விம்மிக்கமலச்செவ்வாய்வெளுப்ப *
என்மகள்வண்ணமிருக்கின்றவாநங்கா யென்செய்கேனென்செய்கேனே. (சு)

ஆயிரம்கண்ணுடையிந்திரனாருக் கன்றுயர்விழவெடுப்ப *
பாசனநல்லனபண்டிகளால்புகப்பெய்தவனையெல்லாம் *
போயிருந்தங்கொருபூதவடிவுகொண் டுன்மகனின்றுநங்காய் *
மாயனதனையெல்லாம் முற்றவாரிவளைத்துண்டிருந்தான்போலும்.(எ)

தோய்த்ததயிரும்நறுநெய்யும்பாலு மோரோருடம்துற்றிடுமென்று *
ஆய்ச்சியர்கூடியழைக்கவும் நானிதற்கெள்கியிவனைநங்காய் *
சோத்தம்பிரானிவைசெய்யப்பெறாயென்றிரப்பனுரப்பகில்லேன் *
பேய்ச்சிமுலையுண்டபின்னை யிப்பிள்ளையைப்பேசுவதஞ்சுவனே. (அ)

ஈடும்வலியுமுடைய விந்நம்பிபிறந்தவெழுதிங்களில்
ஏடலர்கண்ணியினானைவளர்த்தி யமுனைநீராடப்போனேன் *
சேடன்திருமறுமார்வன்கிடந்து திருவடியால் * மலைபோல்
ஓடும்சகடத்தைச்சாடியபின்னை யுரப்புவதஞ்சுவனே. (கூ)

அஞ்சுவன்சொல்லியழைத்திடநங்கைகா ளாயிரநாழிநெய்யை *
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்றபாகந்தான்வையார்களே *
கஞ்சன்கடியன்† கறவெட்டுநாளி லென்கைவலத்தாதுமில்லை *
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பீ யென்செய்கேனென்செய்கேனே.

அங்கனும்தீமைகள்செய்வர்களோநம்பீ ஆயர்மடமக்களை *
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள்பின்னேசென்றொளித்திருந்து - *
அங்கவர்பூந்துகில்வாரிக் கொண்டிட் டரவேரிடையாரிரப்ப *
மங்கைநல்லீர்வந்துகொள்மினென்று மரமேறியிருந்தாய்போலும். ()

அச்சம்தினைத்தினையில்லையிப்பிள்ளைக் காண்மையும்சேவகமும் *
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக் குரைத்திலன்தானின்றுபோய் *
பச்சிலைப்பூங்கடம்பேறிவிசைகொண்டுபாய்ந்துபுக்கு - * ஆயிரவாய்
நச்சழல்பொய்கையில்நாகத்தினோடு பிணங்கிநீவந்தாய்போலும். (கஉ)

தம்பரமல்லனவாண்மைகளைத் தனியேநின்றுதாம்செய்வரோ *
எம்பெருமானுன்னைப்பெற்றவயிறுடையேனினியானென்செய்கேன்*
அம்பரமேழுமதிருமிடிகுர லங்கனல்செங்கணுடை *
வம்பவிழ்கானத்துமால்விடையோடு பிணங்கிநீவந்தாய்போலும். ()

---

† கறவு - இறை ; கப்பம்.

⁂ அன்னநடைமடவாய்ச்சிவயிறடித்தஞ்ச அருவரைபோல் *
மன்னுகருங்களிற்றருயிர்வவ்விய மைந்தனை, மாகடல்சூழ் *
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன் காமருசீர்க்கலிகன்றி *
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க் கேதுமிடரில்லையே. (கச)

மானம் காலை தெள்ளிமை தந்தை மண்ணுயிரம் தோய்த்த ஈடு அஞ்சுவன் அங்ஙனும் அச்சம் தம்பரம் அன்ன காதில்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, காதில்கடிப்பு.



ஆய்ச்சியின் ஊடல் திறம்.

கலிவிருத்தம்.

உசேனிராகம்-ரூபகதாளம்.

⁂ காதில்கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்து *
தாதுநல்லதண்ணந்துழாய்கொடணிந்து *
போதுமறுத்துப் புறமேவந்துநின்றீர் *
ஏதுக்கிதுவென்னிது வென்னிதுவென்னோ. (க)

துவராடையுடுத்தொருசெண்டுசிலுப்பி *
கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டி *
சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர் *
இவரரரிதுவென்னிது வென்னிதுவென்னோ. (உ)

கருளக்கொடியொன்றுடையீர் தனிப்பாகீர் *
உருளச்சகடமதுறக்கில் † நிமிர்த்தீர் *
மருளைக்கொடுபாடிவந்தில்லம்புகுந்தீர் *
இருளத்திதுவென்னிது வென்னிதுவென்னோ. (ங)

நாமம்பலவுமுடை நாரணநம்பி *
தாமத்துளவம்மிகநாறிடுகின்றீர் *
காமனெனப்பாடிவந் தில்லம்புகுந்தீர் *
ஏமத்திதுவென்னிது வென்னிதுவென்னோ. (ச)

சுற்றும்குழல்தாழச் சுரிகையணைத்து *
மற்றும்பலமாமணி பொன்கொடணிந்து *
முற்றம்புகுந்து முறுவல்செய்துநின்றீர் *
எற்றுக்கிதுவென்னிது வென்னிதுவென்னோ. (ரு)

ஆனாயருமா நிரையுமங்கொழிய *
கூனாயதோர்கொற்றவில் லொன்றுகையேந்தி *
போனாரிருந்தாரையும் பார்த்துப்புகுதீர் *
ஏனோர்கள்முன்னென் னிதுவென்னிதுவென்னோ. (சா)

† உறக்கில் - நித்ராசமயத்தில்

மல்லேபொருத திரடோள்மணவாளீர் *
அல்லேயறிந்தோம் நும்மனத்தின்கருத்தை *
சொல்லாதொழியீர் சொன்னபோதினால்வாரீர் *
எல்லேயிதுவென்னிது வென்னிதுவென்னோ. (எ)

புக்காடரவம் பிடித்தாட்டும்புனிதீர் *
இக்காலங்கள்யாமுமக்கே தொன்றுமல்லோம் *
தக்கார்பலர்தேவிமார் சாலவுடையீர் *
† எக்கேயிதுவென்னிது வென்னிதுவென்னோ. (அ)

ஆடியஞ்சந்தாய் மடவாரொடுநீபோய்
கூடிக்குரவைபிணை கோமளப்பிள்ளாய் *
தேடித்திருமாமகள் மண்மகள்நிற்ப *
ஏடீயிதுவென்னிது வென்னிதுவென்னோ. (கூ)

⁂ அல்லிக்கமலக்கண்ணனை யங்கோராய்ச்சி *
எல்லிப்பொழுதாடிய வூடல்திறத்தை *
கல்லின்மலிதோள் கலியன்சொன்னமாலை *
சொல்லித்துதிப்பாரவர் துக்கமிலரே. (க0)

காதில்துவர் கருநாமம் சுற்றும் ஆனுயர் மல்லே புக்கு ஆடி அல்லி புள்ளுரு.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## கூ-வது, புள்ளுருவாகி.



நற்றாய்கண்ணனைவேண்டல்.

எழுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

செஞ்சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.

⁂ புள்ளுருவாகிநள்ளிருள்வந்த பூதனைமாள * இலங்கை
ஒள்ளெரிமண்டியுண்ணப்பணித்த வூக்கமதனைநினைந்தோ *
கள்ளவிழ்கோதைகாதலுமெங்கள் காரிகைமாதர்கருத்தும் *
பிள்ளைதன்கையில்கிண்ணமேபொக்கப் பேசுவதெந்தைபிரானே. (க)

மன்றில்மலிந்துகூத்துவந்தாடி மால்விடையேழுமடர்த்து -* ஆயர்
அன்றுநடுங்கஆநிரைகாத்த ஆண்மைகொலோவறியேன்நான் *
நின்றபிரானேநீள்கடல்வண்ணா நீயிவள்தன்னைநின்கோயில் *
முன்றிலெழுந்தமுருங்கையில்தேனும் முன்கைவளைகவர்ந்தாயே. (உ)

ஆர்மலியாழிசங்கொடுபற்றி ஆற்றலையாற்றல்மிகுத்து *
கார்முகில்வண்ணாகஞ்சனைமுன்னம் கடந்தநின்கடுந்திறல்தானோ *
நேரிழைமாதைநித்திலத்தொத்தை நெடுங்கடலமுதனையாளை *
ஆழியில்வண்ணாஅங்கையில்வட்டா மிவளெனக்கருதுகின்றாயே. (ங)

† எக்கே - இது என்னகஷ்டமோ.

மல்கியதோளும்மானுரியதளு முடையவர் தமக்குமோர்பாகம் *
நல்கியநலமோநரகனைத்துலைத்த கரதலத்தமதியின்கருத்தோ *
அல்லியங்கோதையணிநிறம்கொண்டுவந்து முன்னேநின்றுபோகாய் *
சொல்லியென்னம்பியிவளைநீ யுங்கள்தொண்டர்கைத்தண்டென்றவாறே.(ச)

செருவழியாதமன்னர்கள்மாளத்தேர்வலங்கொண்டவர்செல்லும் *
அருவழிவானமதர்படக்கண்ட ஆண்மைகொலோவறியேன்நான் *
திருமொழியெங்கள்தேமலர்கோதை சீர்மையைநினைந்திலையந்தோ *
பெருவழிநாவற்கனியிலுமெளிய ளிவளெனப்பேசுகின்றாயே. (ரு)

அரக்கியராகம்புல்லெனவில்லா லணிமதிளிலங்கையார்கோனை *
செருக்கழித்தமரர்பணியமுன்னின்ற சேவகமோசெய்ததின்று *
முருக்கிதழ்வாய்ச்சிமுன்கைவெண்சங்கம்கொண்டுமுன்னேநின்றுபோகாய் *
எருக்கிலைக்காகவெழிமழுவோச்ச லென்செய்வதெந்தைபிரானே.(சு)

ஆழியந்திண்டோரரசர்வந்திறைஞ்ச அலைகடலுலகம்முன்னாண்ட *
பாழியந்தோளோராயிரம்வீழப் படைமழுப்பற்றியவலியோ *
மாழைமென்னோக்கிமணிநிறங்கொண்டுவந்துமுன்னேநின்றுபோகாய்
கோழிவெண்முட்டைக்கென்செய்வதெந்தாய் குறுந்தடிநெடுங்கடல்வண்ணா.

பொருந்தலன் ஆகம்புள்ளுவந்தேற வள்ளுகிரால்பிளந்து- * அன்று
பெருந்தகைக்கிரங்கிவாலியைமுனிந்த பெருமைகொலோசெய்ததின்று *
பெருந்தடங்கண்ணிசுரும்புறுகோதைபெருமையைநினைந்திலைபேசில்*
கருங்கடல்வண்ணாகவுள்கொண்டநீரா மிவளெனக்கருதுகின்றாயே.

நீரழல்வானாய்நெடுநிலங்காலாய்நின்ற நின்நீர்மையைநினைந்தோ *
சீர்கெழுகோதையென்னலதிலளென் றன்னதோர்தேற்றன்மைதானோ *
பார்கெழுபவ்வத்தாரமுதனைய பாவையைப்பாவம்செய்தேனுக்கு - *
ஆரழலோம்புமந்தணன்தோட்டமாக நின்மனத்துவைத்தாயே. (கூ)

⁂ வேட்டத்தைக்கருதாதடியிணைவணங்கி மெய்ம்மைநின்றெம்பெருமானை*
வாள்திறல்தானைமங்கையர்தலைவன் மானவேல்கலியன்வாயொலிகள் *
தோட்டலர்பைந்தார்ச்சுடர்முடியானைப்பழமொழியால்பணிந்துரைத்த *
பாட்டிவைபாடப்பத்திமைபெருகிச் சித்தமும்திருவொடுமிகுமே.(கO)

புள் மன்றில் ஆர் மல்கிய செரு அரக்கியர் ஆழி பொருநீர் வேட்டத் திருத்தாய்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## க0-வது, திருத்தாய்.



பறவைகளைநோக்கி மாயனை யழையெனல்.

வெண்டுறை.

**பரசுராகம்-ஆதிதாளம்.**

⁂ திருத்தாய்செம்போத்தே *
திருமாமகள் தன்கணவன் *
மருத்தார்தொல்புகழ்மாதவனைவர
திருத்தாய்செம்போத்தே. (க)

கரையாய்காக்கைப்பிள்ளாய் *
கருமாமுகில்போல்நிறத்தன் *
உரையார்தொல்புகழுத்தமனைவர
கரையாய்காக்கைப்பிள்ளாய். (உ)

கூவாய்பூங்குயிலே *
குளிர்மாரிதடுத்துகந்த *
மாவாய்கீண்டமணிவண்ணனைவர
கூவாய்பூங்குயிலே. (௩)

கொட்டாய்பல்லிக்குட்டி *
குடமாடியுலகளந்த *
மட்டார்பூங்குழல்மாதவனைவர *
கொட்டாய்பல்லிக்குட்டி. (ச)

சொல்லாய்பைங்கிளியே *
சுடராழிவலனுயர்த்த *
மல்லார்தோள்வடவேங்கடவனைவர *
சொல்லாய்பைங்கிளியே. (ரு)

கோழிகூவென்னுமால் *
தோழிநானென்செய்கேன் *
ஆழிவண்ணர்வரும்பொழுதாயிற்று *
கோழிகூவென்னுமால். (சு)

காமற்கென்கடவேன் *
கருமாமுகில்வண்ணர்க்கல்லால் *
பூமேலைங்கணைகோத்துப்புகுந்தெய்ய
காமற்கென்கடவேன். (எ)

இங்கேபோதுங்கொலோ *
இனவேல்நெடுங்கண்களிப்ப * [மால்
கொங்கார்சோலைக்குடந்தைக்கிடந்த
இங்கேபோதுங்கொலோ. (அ)

இன்னாரென்றறியேன் *
அன்னேயாழியொடும் *
பொன்னார்சார்ங்கமுடையவடிகளை *
இன்னாரென்றறியேன். (கூ)

⁂ தொண்டீர்பாடுமினோ *
சுரும்பார்பொழில்மங்கையர்கோன் *
ஒண்டார்வேல்கலியனொலிமாலைகள் *
தொண்டீர்பாடுமினோ. (க0)

திருக்கரை கூவாய் கொட்டாய் சொல்லாய் கோழி காமற்கு இங்கே இன்னார் தொண்டீர் குன்றம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## பதினோராம் பத்து.

### க-வது, குன்றமொன்றெடுத்து.

தலைவியிரங்கல்.

கலிவிருத்தம்.

கானடராகம்-அதிதாளம்.

‡‡ குன்றமொன்றெடுத்தேந்தி * மாமழை
அன்றுகாத்தவம்மான் * அரக்கரை
வென்றவில்லியார்வீரமேகொலோ *
தென்றல்வந்துதீவீசுமென்செய்கேன். (க)

காரும்வார்பனிக்கடலுமன்னவன் *
தாருமார்வமும்கண்டதண்டமோ *
சோருமாமுகில்துளியுனூடுவந்து - *
$ ஈரவாடைதானீருமென்னையே. (உ)

சங்குமாமையும்தளருமேனிமேல் *
திங்கள்வெங்கதிர்சீறுமென்செய்கேன் *
பொங்குவெண்டிரைப்புணரிவண்ணனார் *
கொங்கலர்ந்ததார்கூவுமென்னையே. (ங)

அங்கோராய்க்குலத்துள் வளர்ந்துசென்று - *
அங்கோர்தாயுருவாகிவந்தவள் *
கொங்கைநஞ்சுண்ட ‡ கோயின்மைகொலோ *
திங்கள்வெங்கதிர்சீறுகின்றதே. (ச)

அங்கோராளரியாய் * அவுணனைப்
பங்கமாவிருகூறுசெய்தவன் *
¶ மங்குல்மாமதிவாங்கவேகொலோ *
பொங்குமாகடல்புலம்புகின்றதே. (ரு)

சென்றுவார்சிலைவளைத்து - * இலங்கையை
வென்றவில்லியார்வீரமேகொலோ *
முன்றில்பெண்ணைமேல் முளரிக்கூட்டகத்து - *
அன்றிலின்குர லடருமென்னையே. (சு)

பூவைவண்ணனார் புள்ளின்மேல்வர *
மேவிநின்றுநான் கண்டதண்டமோ *
வீவிலங்கணைவில்லியம்புகோத்து - *
ஆவியேயிலக்காகவெய்வதே. (எ)

---

$ ஈரவாடை - குளிர்ந்தகாற்று. ‡ கோயின்மை-ஆராய்ச்சியில்லாத செயல் ¶ மங்குல் - ஆகாசம்.

மாலினந்துழாய்வருமென்னெஞ்சகம் *
மாலினந்துழாய்வந்தென்னுள்புக *
கோலவாடையும் கொண்டுவந்ததோர் *
† ஆலிவந்ததாலரிதுகாவலே. (அ)

கெண்டையொண்கணும் துயிலும் * என்நிறம்
பண்டுபண்டுபோலொக்கும் * மிக்கசீர்த்
தொண்டரிட்ட பூந்துளவின்வாசமே *
வண்டுகொண்டுவந்தூதுமாகிலே. (௯)

⁂ அன்றுபாரதத் தைவர்தூதனாய் *
சென்றமாயனைச் செங்கண்மாலினை *
மன்றிலார்புகழ்மங்கைவாள்கலி
கன்றி * சொல்வல்லார்க்கல்லலில்லையே. (க0)

குன்றம் கார் சங்கு அங்கோராய் அங்கோராளரி சென்று பூவைமாலின் கெண்டை அன்று குன்றம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## உ-வது, குன்றமெடுத்து.



தலைவி வருந்தல்.

கலிவிருத்தம்.

கேளிபந்துராகம்-ஆதிதாளம்.

⁂ குன்றமெடுத்துமழைதடுத்து - * இளையாரொடும்
மன்றில்குரவைபிணைந்தமா லென்னைமால்செய்தான் *
முன்றில்தனிநின்ற பெண்ணைமேல்கிடந்தீர்கின்ற *
அன்றிலின்கூட்டைப்பிரிக்ககிற்பவரார்கொலோ. (க)

பூங்குருந்தொசித்து ¶ ஆனைகாய்ந்தரிமாச்செகுத்து - *
ஆங்குவேழத்தின் கொம்புகொண்டு வன்பேய்முலை
வாங்கியுண்ட * அவ்வாயன்நிற்கஇவ்வாயன்வாய் *
ஏங்குவேய்ங்குழ லென்னோடாடுமிளமையே. (உ)

மல்லொடுகஞ்சனும் துஞ்சவென்றமணிவண்ணன் *
அல்லிமலர்த்தண்டுழாய் நினைந்திருந்தேனையே *
எல்லியின்மாருதம்வந்தடு மதுவன்றியும் *
கொல்லைவல்லேற்றின்மணியும் கோயின்மைசெய்யுமே. (௩)

பொருந்துமாமர மேழுமெய்தபுனிதனுர் *
திருந்துசேவடியென் மனத்துநினைதொறும் *
கருந்தண்மாகடல் கங்குலார்க்கும் * அதுவன்றியும்
வருந்தவாடைவரு மிதற்கினியென்செய்கேன். (௪)

† ஆலி - சிறுதுளி. ¶ ஆன் - ரிஷபம்.

அன்னைமுனிவதும் அன்றிலின்குரலீர்வதும் *
மன்னுமறிகடலார்ப்பதும் வளைசோர்வதும் *
பொன்னங்கலையல்கு லன்னமென்னடைப்பூங்குழல் *
பின்னைமணாளர் திறத்தமாயினபின்னையே. (ரு)

ஆழியும்சங்குமுடைய நங்களடிகள்தாம் *
பாழிமையானகனவில் நம்மைப்பகர்வித்தார் *
தோழியும்நானுமொழிய வையம்துயின்றது *
கோழியும்கூகின்றதில்லைக் கூரிருளாயிற்றே. (சு)

காமன்றனக்குமுறையல்லேன் கடல்வண்ணனார் *
மாமணவாளரெனக்குத்தானும் மகன்சொல்லில் *
யாமங்கடோறெரிவீசி மென்னிளங்கொங்கைகள் *
மாமணிவண்ணர்திறத்தவாய் வளர்கின்றவே. (எ)

மஞ்சுறுமாலிருஞ்சோலை நின்றமணாளனார் *
நெஞ்சம்நிறைகொண்டுபோயினார் நினைகின்றிலர் *
வெஞ்சுடர்போய்விடியாம லெவ்விடம்புக்கதோ *
‡ நஞ்சுடலம்துயின்றால் நமக்கினிநல்லதே. (அ)

காமன்கணைக்கோரிலக்கமாய் நலத்தில்மிகு *
பூமருகோல நம்பெண்மைசிந்தித்திராதுபோய் *
தூமலர்நீர்கொடுதோழி நாம்தொழுதேத்தினால் *
கார்முகில்வண்ணரைக் கண்களால்காணலாங்கொலோ. (கூ)

‡‡ வென்றிவிடையுட னேழடர்த்தவடிகளை *
மன்றில்மலிபுகழ்மங்கைமன் கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றவொன்பது முரைப்பவர்தங்கள்மேல் *
என்றும்நில்லாவினை யொன்றும்சொல்லிலுலகிலே. (க0)

குன்றம் பூமல் பொருந் தன்னை ஆழி காமன் மஞ்சுறு காமன்கணை வென்றி மன்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௩-வது, மன்னிலங்கு.



இதுவுமது.

கலிவிருத்தம்.

ஸ்ரீராகம்-ரூபகதாளம்.

மன்னிலங்குபாரதத்துத்தேரூர்ந்து * மாவலியைப்
பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்து * பொருகடல்சூழ்
தென்னிலங்கையீடழித்த தேவர்க்கிதுகாணீர் *
என்னிலங்குசங்கோடெழில்தோற்றிருந்தேனே. (க)

‡ நஞ்சு - நைந்து.

இருந்தானென்னுள்ளத்திறைவன் * கறைசேர்
பருந்தாள்களிற்றுக்கருள்செய்த * செங்கண்
பெருந்தோள்நெடுமாலைப் பேர்பாடியாட *
வருந்தாதென்கொங்கை யொளிமன்னுமன்னே. (உ)

அன்னேயிவனையறிவன் * மறைநான்கும்
முன்னேயுரைத்த முனிவரிவர்வந்து *
பொன்னேய்வளைகவர்ந்து போகார்மனம்புகுந்து - *
என்னேயிவரெண்ணு மெண்ணமறியோமே. (ங)

அறியோமேயென்றுரைக்கலாமே * எமக்கு
வெறியார்பொழில்சூழ் வியன்குடந்தைமேவி *
சிறியானோர்பிள்ளையாய் மெள்ளநடந்திட்டு - *
உறியார்நறுவெண்ணெ யுண்டுகந்தார்தம்மையே. (ச)

தம்மையேநாளும் வணங்கித்தொழுவார்க்கு
தம்மையேயொக்க வருள்செய்வராதலால் *
தம்மையேநாளும் வணங்கித்தொழுதிறைஞ்சி *
தம்மையேபற்று மனத்தென்றும்வைத்தோமே. (ரு)

வைத்தாரடியார்மனத்தினில்வைத்து - இன்பம்
உற்றாரொளிவிசும்பிலோரடிவைத்து - * ஓரடிக்கும்
எய்த்தாதுமண்ணென்றிமையோர் தொழுதிறைஞ்சி *
கைத்தாமரைகுவிக்கும் கண்ணனென்கண்ணனையே. (சு)

கண்ணன்மனத்துள்ளே நிற்கவும் * கைவளைகள்
என்னோகழன்ற இவையென்னமாயங்கள் *
பெண்ணானோம்பெண்மையோம்நிற்க * அவன்மேய
அண்ணல்மலையுமரங்கமும்பாடோமே. (எ)

பாடோமேயெந்தைபெருமானை * பாடிநின்
றாடோமேயாயிரம்பேரானை * பேர்நினைந்து
சூடோமேசூடும்துழாயலங்கள்சூடி * நாம்
கூடோமேகூடக் குறிப்பாகில்நன்னெஞ்சே. (அ)

நன்னெஞ்சேநம்பெருமான் நாளுமினிதமரும் *
அன்னம்சேர்கானலணியாலிகைதொழுது *
முன்னம்சேர்வல்வினைகள்போக முகில்வண்ணன் *
பொன்னம்சேர்சேவடிமேல் போதணியப்பெற்றோமே. (கூ)

⁂ பெற்றாராயிரம்பேரானைப் * பேர்பாடப்
பெற்றான்கலியனொலிசெய் தமிழ்மாலை *
கற்றாரோமுற்றுலகாள்வ ரிவைகேட்க
லுற்றார்க்கு - * உறுதுயரில்லையுலகத்தே. (௧௦)

மன் னிருந்தான் அன்னே அறியோமே தம்மையே வைத்தார் கண்ண ன் பாடோமே நன்னெஞ்சே பெற்றார் நிலை.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௬-வது, நிலையிடம்.



### தசாவதாரங்களின்சிறப்பு.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**அடாணாராகம்-திரிபுடைதாளம்.**

⁂ நிலையிடமெங்குமின்றிநெடுவெள்ளமும்பர் வளநாடுமூடவிமையோர் *
தலையிடமற்றெமக்கோர்சரணில்லையென்ன அரணாவனென்னுமருளால் *
அலைகடல்நீர்குழம்ப அகடாடவோடியகல்வானுரிஞ்ச * முதுகில்
மலைகளைமீதுகொண்டுவருமீனைமாலை மறவாதிறைஞ்சென்மனனே. ()

செருமிகுவாளெயிற்றவரவொன்றுசுற்றித் திசைமண்ணும்விண்ணுமுடனே *
வெருவரவெள்ளைவெள்ளம்முழுதும்குழம்ப இமையோர்கள்நின்றுகடைய *
பருவரையொன்றுநின்றுமுதுகில்பரந்து சுழலக்கிடந்துதுயிலும் *
அருவரையன்னதன்மையடலாமையானதிருமால்நமக்கோரரணே. ()

தீதறுதிங்கள்பொங்குசுடரும்ப ரும்பருலகேழினோடுமுடனே *
மாதிரமண்சுமந்துவடகுன்றுநின்ற மலையாறுமேழுகடலும் *
பாதமர்சூழ்குளம்பினகமண்டலத்தி னொருபாலொடுங்கவளர்சேர் *
ஆதிமுனேனமாகியரணாயமூர்த்தி யதுநம்மையாளுமரசே. (௩)

தளையவிழ்கோதைமாலையிருபால்தயங்க எரிகான்றிரண்டுதறுகண் *
அளவெழவெம்மைமிக்கவரியாகி யன்றுபரியோன்சினங்களவிழ *
வளையுகிராளிமொய்ம்பில்மறவோனதாகம்மதியாதுசென்றொருகிரால்
பிளவெழவிட்டகுட்டமது வையமூடுபெருநீரில்மும்மைபெரிதே. (௪)

வெந்திறல்வாணன்வேள்வியிடமெய்தி யங்கோர்குறளாகிமெய்ம்மையுணர *
செந்தொழில்வேதநாவில்முனியாகிவைய மடிமூன்றிரந்துபெறினும் *
மந்தரமீதுபோகிமதிநின்றிறைஞ்ச மலரோன்வணங்கவளர்சேர் *
அந்தரமேழினூடுசெலவுய்த்தபாத மதுநம்மையாளுமரசே. (௫)

இருநிலமன்னர்தம்மையிருநாலுமெட்டுமொருநாலுமொன்றுமுடனே
செருநுதலூடுபோகியவராவிமங்க மழுவாளில்வென்றதிறலோன் *[ர்
பெருநிலமங்கைமன்னர்மலர்மங்கைநாதர்புலமங்கைகேள்வர்புகழ்சே
பெருநிலமுண்டுமிழ்ந்தபெருவாயராகியவர்நம்மையாள்வர்பெரிதே. ()

இலைமலிபள்ளியெய்தியிதுமாயமென்ன இனமாயமான்பின்*எழில்சேர்
அலைமலிவேல்கணாளையகல்விப்பதற்கோருருவாயமானையமையா *
கொலைமலியெய்துவித்தகொடியோனிலங்கை பொடியாகவென்றியமருள் *
சிலைமலிசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள் திருமால்நமக்கோரரனே.()

முன்னுலகங்களேழுமிருள்மண்டியுண்ண முதலோடுவீடுமறியாது-*
என்னிதுவந்ததென்னவிமையோர் திசைப்பஎழில்வேதமின்றிமறைய
பின்னும்வானவர்க்கும்முனிவர்க்கும்நல்கியிருள்தீர்ந்திவ்வையமகிழ *
அன்னமதாயிருந்தங்கறநூலுரைத்த அதுநம்மையாளுமரசே. (அ)

துணைநிலைமற்றெமக்கோருளதென்றிராது தொழுமின்கள்தொண்டர்தொலைய*
உணமுலைமுன்கொடுத்தவுரவோளதாவியுகவுண்டுவெண்ணெய்மருவி
பணமுலையாயர்மாதருரலோடுகட்ட அதனோடுமோடி, அடல்சேர் *
இணைமருதிற்றுவீழநடைகற்றதெற்றல் வினைபற்றறுக்கும்விதியே. ()

⁂ கொலைகெழுசெம்முகத்தகளிறொன்றுகொன்றுகொடியோனிலங்கைபொ
டியா, சிலைகெழுசெஞ்சரங்கள்செலவுய்த்தநங்கள் திருமாலைவேலைபுடைசூழ்
கலிகெழுமாடவீதிவயல்மங்கைமன்னுகலிகன்றிசொன்னபனுவல் *
ஒலிகெழுபாடல்பாடியுழல்கின்றதொண்டரவராள்வரும்பருலகே. ()

நிலை செரு தீதறு தளை வெந்திறல் இருநிலம் இலைமலி முன் துணை கொலைமான்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ரு-வது, மானமரும்.



எம்பெருமான் திருச்சாழல் அவதாரச்சிறப்புகளை
வினாவிடைகளாகக்கூறல்.

கொச்சகக்கலிப்பா.

கண்டாராகம்-ஆதிதாளம்.

⁂ மானமருமென்னோக்கி வைதேவியின் துணையா *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தான்காணேடீ *
கானமரும்கல்லதர்போய்க் காடுறைந்தபொன்னடிக்கள் *
வானவர்தம்சென்னி மலர்கண்டாய்சாழலே. (க)

தந்தைதளைகழலத்தோன்றிப்போய் * ஆய்ப்பாடி
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்காணேடீ *
நந்தன்குலமதலையாய் வளர்ந்தான்நான்முகற்குத்
தந்தைகாண் * எந்தைபெருமான்காண்சாழலே, (உ)

ஆழ்கடல்சூழ்வையகத்தாரேசப்போய் * ஆய்ப்பாடித்
தாழ்குழலார்வைத்த தயிருண்டான்காணேடீ
தாழ்குழலார்வைத்த தயிருண்டபொன்வயிறு - * இவ்
வேழுலகுமுண்டு மிடமுடைத்தால்சாழலே. (ங)

அறியாதார்க்கானுயனாகிப்போய் * ஆய்ப்பாடி
உறியார்நறுவெண்ணெ யுண்டுகந்தான்காணேடீ
உறியார்நறுவெண்ணெயுண்டுகந்தபொன்வயிற்றுக்கு - *
எறிநீருலகனைத்துமெய்தாதால்சாழலே. (ச)

வண்ணக்கருங்குழ லாய்ச்சியால்மொத்துண்டு *
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டான்காணேடீ
கண்ணிக்குறுங்கயிற்றால் கட்டுண்டானாகிலும் *
எண்ணற்கரிய னிமையோர்க்குஞ்சாழலே. (ரு)

கன்றப்பறைகறங்கக் கண்டவர்தம்கண்களிப்ப *
மன்றில்மரக்கால்கூத்தாடினான்காணேடீ *
மன்றில்மரக்கால்கூத்தாடினானாகிலும் *
என்றுமரியனிமையோர்க்குஞ்சாழலே. (சு)

கோதைவேல்ஐவர்க்காய் மண்ணகலம்கூறிடுவான் *
தூதனாய்மன்னவனால் சொல்லுண்டான்காணேடீ
தூதனாய்மன்னவனால் சொல்லுண்டானாகிலும் *
ஓதநீர்வையகம்முன் னுண்டுமிழ்ந்தான்சாழலே. (எ)

பார்மன்னர்மங்கப் படைதொட்டுவெஞ்சமத்து *
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தான்காணேடீ
தேர்மன்னர்க்காயன்று தேரூர்ந்தானாகிலும் *
தார்மன்னர்தங்கள் தலைமேலான்சாழலே. (அ)

கண்டாரிரங்கக் கழியக்குறளுருவாய் *
வண்தாரான்வேள்வியில் மண்ணிரந்தான்காணேடீ *
வண்தாரான்வேள்வியில் மண்ணிரந்தானாகிலும் *
விண்டேழுலகுக்கும் மிக்கான்காண்சாழலே. (கூ)

⁂ கள்ளத்தால்மாவலியை மூவடிமண்கொண்டளந்தான் *
வெள்ளத்தான்வேங்கடத்தா னென்பரால்காணேடீ *
வெள்ளத்தான் வேங்கடத்தானேலும் * கலிகன்றி
உள்ளத்தினுள்ளே யுளன்கண்டாய்சாழலே. (க0)

மான் தந்தை ஆழ்கட லறியாதார் வண்ணக் கன்றக் கோதை பார்கண் டார்கள்ளம் மைந்நின்ற.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## ௬-வது, மைந்நின்ற.



உலகினரைநோக்கி மாயனை வணங்கிரெனல்.

அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

நீலாம்புரிராகம்-அடதாளம்.

⁂ மைந்நின்றகருங்கடல்வாயுலகின்றி வானவரும்யாமுமெல்லாம் *
நெய்ந்நின்றசக்கரத்தன் திருவயிற்றில் நெடுங்காலம்கிடந்ததோரீர் *
எந்நன்றிசெய்தாரா ஏதிலோர்தெய்வத்தையேத்துகின்றீர் *
செய்ந்நன்றிகுன்றேல்மின் தொண்டர்காளண்டனையேயேத்தீர்களே.

நில்லாதபெருவெள்ளம் நெடுவிசும்பின்மீதோடிமிர்ந்தகாலம் *
மல்லாண்டதடக்கையால் பகிரண்டமகப்படுத்தகாலத்து - * அன்று
எல்லாருமறியாரோ எம்பெருமானுண்டுமிழ்ந்தவெச்சில்தேவர் *
அல்லாதார்தாமுளரே யவனருளேயுலகாவதறியீர்களே. (௨)

நெற்றிமேல்கண்ணானும் நிறைமொழிவாய்நான்முகனும்நீண்டநால்வாய் *
ஒற்றைக்கைவெண்பகட்டி லொருவனையுமுள்ளிட்டவமரரோடும் *
வெற்றிப்போர்க்கடலரையன் விழுங்காமல்தான்விழுங்கியுய்யக்கொண்ட *
கொற்றப்போராழியான்குணம்பரவாச் சிறுதொண்டர்கொடியவாறே. (௩)

பனிப்பரவைத்திரைததும்பப் பாரெல்லாம்நெடுங்கடலேயானகாலம் *
இனிக்களைகணிவர்க்கில்லையென் றுலகமேழினையுமூழில்வாங்கி *
முனித்தலைவன்முழங்கொளிசேர் திருவயிற்றில் வைத்தும்மையுய்யக்கொண்ட
கனிக் † களவத்திருவுருவத்தொருவனையே கழல்தொழுமாகல்லீர்களே. (௪)

பாராரும்காணாமே பரவைமாநெடுங்கடலேயானகாலம் *
ஆரானுமவனுடைய திருவயிற்றில்நெடுங்காலம்கிடந்தது - * உள்ள
தோராதவுணர்விலீ ருணருதிரே லுலகளந்தவும்பர்கோமான் *
பேராளன்பேரானபேர்களாயிரங்களுமேபேசீர்களே. (௫)

பேயிருக்குநெடுவெள்ளம் பெருவிசும்பின்மீகோடிப்பெருகுகாலம் *
தாயிருக்கும்வண்ணமே யும்மைத்தன்வயிற்றிருத்தியுய்யக்கொண்டான் *
போயிருக்கமற்றிங்கோர் புதுத்தெய்வம்கொண்டாடும்தொண்டீர் * பெற்ற
தாயிருக்க மணைவெந்நீராட்டுதிரோமாட்டாததகவற்றீரே. (௬)

மண்ணாடும்விண்ணாடும் வானவரும்தானவருமற்றுமெல்லாம் *
உண்ணாதபெருவெள்ள முண்ணாமல்தான்விழுங்கியுய்யக்கொண்ட *
கண்ணாளன்கண்ணமங்கைநகராளன் கழல்சூடி * அவனையுள்ளத்
தெண்ணாதமானிடத்தை யெண்ணாதபோதெல்லாமினியவாறே. (௭)

மறம்கிளர்ந்துகருங்கடல்நீருரம் துரந்துபரந்தேறியண்டத்தப்பால் *
புறம்கிளர்ந்தகாலத்துப் பொன்னுலகமேழினையுமூழில்வாங்கி *
அறம்கிளர்ந்ததிருவயிற்றி னகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட
நிறம்கிளர்ந்தகருஞ்சோதி நெடுந்தகையைநினையாதார்நீசர்தாமே. ()

---

† களவம் - களாப்பழம்.

அண்டத்தின்முகடழுந்தஅலைமுந்நீர்த்திரைததும்பஆவாவென்று *
தொண்டர்க்குமமரர்க்கும் முனிவருக்குந்தானருளி * உலகமேழும்
உண்டொத்ததிருவயிற்றினகம்படியில்வைத்தும்மையுய்யக்கொண்ட*
கொண்டல்கைமணிவண்ணன் தண்குடந்தைநகர்பாடியாடீர்களே. ()

⁂ தேவரையுமசுரரையுந்திசைகளையுங்கடல்களையும்மற்றும்முற்றும்*
யாவரையுமொழியாமே யெம்பெருமானுண்டுமிழ்ந்ததறிந்துசொன்ன *
காவளரும்பொழில்மங்கைக் கலிகன்றியொலிமாலைகற்றுவல்லார் *
பூவளருந்திருமகளாலருள்பெற்றுப்பொன்னுலகில்பொலிவர்தாமே.()

மை நில்லா நெற்றி பனி பார் பேய் மண் மற மண்டம் தேவர் நீணகம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## எ-வது, நீணகம்.



கண்ணனைக்காணாக் கண்முதலியன பயனிலவெனல்.

கலிவிருத்தம்.

வராளிராகம்-ரூபகதாளம்.

⁂ நீணகம்சுற்றி நெடுவரைநட்டு - ஆழ்கடலைப்
பேணான்கடைந் தமுதம்கொண்டுகந்தபெம்மானை *
பூணாரமார்வனைப் புள்ளூரும்பொன்மலையை *
காணாதார்கண்ணென்றும் கண்ணல்லகண்டாமே. (க)

நீள்வான்குறளுருவாய் நின்றிரந்துமாவலிமண் *
தாளாலளவிட்ட தக்கணைக்குமிக்கானை *
தோளாதமாமணியைத் தொண்டர்க்கினியானை *
கேளாச்செவிகள் செவியல்லகேட்டாமே. (உ)

தூயானைத் தூயமறையானை * தென்னாலி
மேயானை மேவாளுயிருண் டமுதுண்ட
வாயானை * மாலைவணங்கி யவன்பெருமை *
பேசாதார்பேச்சென்றும் பேச்சல்லகேட்டாமே. (ங)

கூடாவிரணியனைக் கூருகிரால்மார்விடந்த *
ஓடாவடலரியை உம்பரார்கோமானை *
தோடார்நறுந்துழாய் மார்வனை * ஆர்வத்தால்
பாடாதார்பாட்டென்றும் பாட்டல்லகேட்டாமே. (ச)

மையார்கடலும் மணிவரையும்மாமுகிலும் *
கொய்யார்குவளையும் காயாவும்போன்றிருண்ட
மெய்யானை * மெய்யமலையானைச் சங்கேந்தும்
கையானை * கைதொழாக்கையல்ல கண்டாமே. (ரு)

கள்ளார்துழாயும் கணவலரும் கூவிளையும் *
முள்ளார்முளரியு மாம்பலுமுன் கண்டக்கால் *
புள்ளாயோரேணமாய்ப் புக்கிடந்தான்பொன்னடிக்கென்று - *
உள்ளாதாருள்ளத்தை யுள்ளமாக்கொள்ளோமே. (சு)

கனையார்கடலும் கருவிளையும்காயாவும்
அனையானை * அன்பினாலார்வத்தால் * என்றும்
சுனையார்மலரிட்டுத் தொண்டராய்நின்று *
நினையாதார்நெஞ்சென்றும் நெஞ்சல்லகண்டாமே. (எ)

வெறியார்கருங்கூந்த லாய்ச்சியர்வைத்த *
உறியார்நறுவெண்ணெய் தானுகந்துண்ட
சிறியானை * செங்கணெடியானைச்சிந்தித்
தறியாதார் * என்றுமறியாதார்கண்டாமே. (அ)

⁂ தேனொடுவண்டாலும் திருமாலிருஞ்சோலை *
தானிடமாக்கொண்டான் தடமலர்க்கண்ணிக்காய் *
ஆன்விடையேழன் றடர்த்தாற் காளானாரல்லாதார் *
மானிடவரல்லரென் றென்மனத்தேவைத்தேனே. (கூ)

⁂ மெய்ந்நின்றபாவமகல * திருமாலைக்
கைந்நின்றவாழியான் சூழும்கழல்சூடி *
கைந்நின்றவேல்கைக் கலியனொலிமாலை *
ஐயொன்றுமைந்து மிவைபாடியாடுமினே. (க0)

நீணகம் நீள்வான் தூயான் கூடா மையார் கள்ளார் கனைவெறி தேன் மெய் மாற்றம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## அ-வது, மாற்றமுள.



நம்பியைநோக்கி உய்யும்வகையருளெனல்.

கலிவிருத்தம்.

மாஞ்சிராகம்-அடதாளம்.

⁂ மாற்றமுளவாகிலும்சொல்லுவன் * மக்கள்
தோற்றக்குழிதோற்றுவிப்பாய்கொலென்றின்னம் *
ஆற்றங்கரைவாழ்மரம்போலஞ்சுகின்றேன் *
நாற்றச்சுவையூறொலியாகியநம்பீ. (க)

சீற்றமுளவாகிலும்செப்புவன் * மக்கள்
தோற்றக்குழிதோற்றுவிப்பாய்கொலென்றஞ்சி *
காற்றத்திடைப்பட்ட கலவர்மனம்போல் *
ஆற்றத்துளங்காநிற்ப னாழிவலவா. (உ)

தூங்கார்பிறவிக்களின்னம்புகப்பெய்து
வாங்காயென்றுசிந்தித்து நானதற்கஞ்சி *
பாம்போடொருகூரையிலேபயின்றாப்போல் *
தாங்காதுள்ளம்தள்ளு மென்தாமரைக்கண்ணா. (ந)

உருவார்பிறவிக்களின்னம்புகப்பெய்து *
திரிவாயென்றுசிந்தித்தியென்றதற்கஞ்சி *
இருபாடெரிகொள்ளியி னுள்ளெறும்பேபோல் *
உருகாநிற்குமென் னுள்ள மூழிமுதல்வா. (ச)

கொள்ளக்குறையாதவிடும்பைக்குழியில் *
தள்ளிப்புகப்பெய்திகொ லென்றதற்கஞ்சி *
வெள்ளத்திடைப்பட்ட நரியினம்போலே *
உள்ளம்துளங்காநிற்ப னூழிமுதல்வா. (ரு)

படைநின்றபைந்தாமரையோடு - * அணிநீலம்
மடைநின்றலரும் வயலாலிமணாளா *
இடையநெறிந்தமரமேயொத்திராமே *
அடையவருளா யெனக்குன்றனருளே. (சு)

வேம்பின்புழு வேம்பன்றியுண்ணாது - * அடியேன்
நான்பின்னு முன்சேவடியன்றிநயவேன் *
தேம்பலிளந்திங்கள்சிறைவிடுத்து - * ஐவாய்ப்
பாம்பினணைப் பள்ளிகொண்டாய்பரஞ்சோதீ. (எ)

⁂ அணியார்பொழில்சூ ழரங்கநகரப்பா *
துணியேனினி நின்னருளல்லதெனக்கு *
மணியேமணிமாணிக்கமே மதுசூதா *
பணியாயெனக்குய்யும்வகை பரஞ்சோதீ. (அ)

⁂ நந்தாநரகத்தழுந்தாவகை * நாளும்
எந்தாய் ! தொண்டரானவர்க்கின்னருள்செய்வாய் *
சந்தோகா தலைவனே தாமரைக்கண்ணா *
அந்தோஅடியேற்கருளாயுன்னருளே. (கூ)

⁂ குன்றமெடுத் தாநிரைகாத்தவன்றன்னை *
மன்றில்புகழ் மங்கைமன்கலிகன்றிசொல் *
ஒன்றுநின்றவொன்பதும் வல்லவர்தம்மேல் *
என்றும்வினையாயின சாரகில்லாவே. (க0)

மாற்றம் சீற்றம் தூங்கார் உருவார் கொள்ளப்படை வேம்பினணியார் நந்தா குன்றம் நிதி.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



# பெரியதிருமொழி ஸம்பூர்ணம்.

ஆக-திருமொழி - க0அ - க்கு - பாட்டு - க0அச.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமானுஜாயநம:

# திருமங்கையாழ்வா ரருளிச்செய்த

# திருக்குறுந்தாண்டகம்.



அறுசீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**தோடிராகம்-ரூபகதாளம்.**

நிதியினைப்பவளத்தூணை நெறிமையால்நினையவல்லார்
கதியினைக்கஞ்சன்மாளக் கண்டுமுன்னண்டமாளும் *
மதியினைமாலைவாழ்த்தி வணங்கியென்மனத்துவந்த *
விதியினைக்கண்டுகொண்ட தொண்டனேன்விடுகிலேனே. (௧)

காற்றினைப்புனலைத்தீயைக் கடிமதிளிலங்கைசெற்ற *
ஏற்றினை * இமயமேய வெழில்மணித்திரளை * இன்ப
ஆற்றினையமுதந்தன்னை யவுணனாருயிரைக்கண்ட
கூற்றினை * குணங்கொண்டுள்ளம்கூறுநீகூறுமாறே. (௨)

பாயிரும்பரவைதன்னுள் பருவரைதிருத்தி * வானோர்க்
காயிருந்தமுதங்கொண்ட வப்பனையெம்பிரானை *
வேயிருஞ்சோலைசூழ்ந்து விரிகதிரிரியநின்ற*
மாயிருஞ்சோலைமேய மைந்தனைவணங்கினேனே. (௩)

கேட்கயானுற்றதுண்டு கேழலாயுலகங்கொண்ட *
பூக்கெழுவண்ணனாரைப் போதரக்கனவில்கண்டு *
வாக்கினால்கருமந்தன்னால் மனத்தினால்சிரத்ததன்னால் *
வேட்கைமீதூரவாங்கி விழுங்கினேற்கினியவாறே. (௪)

இரும்புநன்றுண்டநீர்போ லெம்பெருமானுக்கு -* என்றன்
அரும்பெறலன்புபுக்கிட் டடிமைபூண்டுய்ந்துபோனேன்*
வரும்புயல்வண்ணனாரை மருவியென்மனத்துவைத்து*
கரும்பினின்சாறுபோலப் பருகினேற்கினியவாறே. (௫)

மூவரில்முதல்வனாய வொருவனையுலகங்கொண்ட *
கோவினைக்குடந்தைமேய குருமணித்திரளை * இன்பப்
பாவினைப்பச்சைத்தேனைப் பைம்பொன்னையமரர்சென்னிப்
பூவினை * புகழும்தொண்ட ரென்சொல்லிப்புகழ்வர்தாமே. (௬)

இம்மையைமறுமைதன்னை யெமக்குவீடாகிநின்ற *
மெய்ம்மையைவிரிந்தசோலை வியன்திருவரங்கம்மேய *
செம்மையைக்கருமைதன்னைத் திருமலையொருமையானை *
தன்மையைநினைவாரென்றன் தலைமிசைமன்னுவாரே. (௭)

வானிடைப்புயலைமாலை வரையிடைப்பிரசமீன்ற *
தேனிடைக்கரும்பின்சாற்றைத் திருவினைமருவிவாழார் *
மானிடப்பிறவியந்தோ மதிக்கிலர்கொள்க * தந்தம்
ஊனிடைக்குரம்பைவாழ்க்கைக் குறுதியேவேண்டினாரே. (அ)

உள்ளமோவொன்றிலில்லா தோசையிலெரிநின்றுண்ணும் *
கொள்ளிமேலெறும்புபோலக் குழையுமாலென்றனுள்ளம் *
தெள்ளியீர்தேவர்க்கெல்லாம் தேவராயுலகம்கொண்ட
ஒள்ளியீர் * உம்மையல்லா லெழுமையும்துணையிலோமே. (கூ)

சித்தமும்செவ்வைநில்லா தென்செய்கேன்தீவினையேன் *
பத்திமைக்கன்புடையே னாவதேபணியாயெந்தாய் *
முத்தொளிமரதகமே முழங்கொளிமுகில்வண்ணா என்
அத்தநின்னடிமையல்லால் யாதுமொன்றறிகிலேனே. (க0)

தொண்டெல்லாம்பரவிநின்னைத் தொழுதடிபணியுமாறு
கண்டு * தான்கவலைதீர்ப்பா னாவதேபணியாயெந்தாய் *
அண்டமாயெண்டிசைக்கு மாதியாய்நீதியான *
பண்டமாம்பரமசோதி நின்னையேபரவுவேனே. (கக)

ஆவியையரங்கமாலை யழுக்குடம்பெச்சில்வாயால் *
தூய்மையில்தொண்டனேன்நான் சொல்லினேன்தொல்லைநாமம் *
பாவியேன்பிழைத்தவாறென் றஞ்சினேற்கஞ்சலென்று *
காவிபோல்வண்ணர்வந்தென் கண்ணுளேதோன்றினாரே. (கஉ)

இரும்புநன்றுண்டநீரும் போதரும்கொள்க * என்றன்
அரும்பிணிபாவமெல்லா மகன்றனவென்னைவிட்டு *
சுரும்பமர்சோலைசூழ்ந்த வரங்கமாகோயில்கொண்ட *
கரும்பினைக்கண்டுகொண்டென் கண்ணிணைகளிக்குமாறே. (கஙு)

காவியைவென்றகண்ணார் கலவியேகருதி * நாளும்
பாவியேனாகவெண்ணி யதனுள்ளேபழுத்தொழிந்தேன் *
தூவிசேரன்னமன்னும் சூழ்புனல்குடந்தையானை *
பாவியேன்பாவியாது பாவியேனாயினேனே. (கச)

முன்பொலாவிராவணன்றன் முதுமதிளிலங்கைவேவித்து *
அன்பினாலனுமன்வந்தாங் கடியிணைபணியநின்றார்க்கு *
என்பெலாமுருகியுக்கிட் டென்னுடைநெஞ்சமென்னும் *
அன்பினால்ஞானநீர்கொண் டாட்டுவனடியனேனே. (கரு)

மாயமான்மாயச்செற்று மருதிறநடந்து * வையம்
தாயமாபரவைபொங்கத் தடவரைதிருத்தி * வானோர்க்
கீயுமாலெம்பிரானார்க் கென்னுடைச்சொற்களென்னும் *
தூயமாமாலைகொண்டு சூட்டுவன்தொண்டனேனே. (கசு)

பேசினார்பிறவிநீத்தார் பேருளான்பெருமைபேசி *
ஏசினார்உய்ந்துபோனா ரென்பதிவ்வுலகின்வண்ணம் *
பேசினேனேசமாட்டேன் பேதையேன்பிறவிநீத்தற்கு - *
ஆசையோபெரிதுகொள்க அலைகடல்வண்ணர்பாலே. (கஎ)

இளைப்பினையியக்கம்நீக்கி யிருந்துமுன்னிமையைக்கூட்டி *
அளப்பிலைம்புலனடக்கி யன்பவர்கண்ணேவைத்து *
துளக்கமில்சிந்தைசெய்து தோன்றலும்சுடர்விட்டு - * ஆங்கே
விளக்கினைவிதியில்காண்பார் மெய்மமையைக்காண்கிற்பாரே. (கஅ)

⁂ பிண்டியார்மண்டையேந்திப் பிறர்மனைதிரிதந்துண்ணும் *
உண்டியான்சாபம்தீர்த்த வொருவனூர் * உலகமேத்தும்
கண்டியூரரங்கம்மெய்யம் கச்சிபோமல்லையென்று *
மண்டினார், உய்யிலல்லால் மற்றையார்க்குய்யலாமே. (கக)

⁂ வானவர்தங்கள்கோனும் மலர்மிசையயனும் * நாளும்
தேமலர்தூவியேத்தும் சேவடிச்செங்கண்மாலை *
மானவேல்கலியன்சொன்ன வண்டமிழ்மாலைநாலைந்தும் *
ஊனமதின்றிவல்லா ரொளிவிசும்பாள்வர்தாமே. (உ0)

நிதிகாற்றுப் பாயிரும் கேட்க இரும்பு மூவரிம்மை வானுள்ளம் சித்தம் தொண்டாவி யிரும்பு காவிமுன் மாயப்பேசி யிளைப்பு பிண்டி வானவர்மின்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## திருக்குறுந்தாண்டகம் ஸம்பூர்ணம்.

ஆகூ பாட்டு - உ0.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாயநம:

# திருமங்கையாழ்வா ரருளிச்செய்த

# திருநெடுந்தாண்டகம்.

எண்சீர்க்கழிநெடி லாசிரியவிருத்தம்.

**கல்யாணிராகம்-அடதாளம்.**

மின்னுருவாய்முன்னுருவில்வேதநான்காய்
விளக்கொளியாய்முளைத்தெழுந்ததிங்கள்தானாய் *
பின்னுருவாய்முன்னுருவில்பிணிமூப்பில்லாப்
பிறப்பிலியாயிறப்பதற்கேயெண்ணாது - * எண்ணும்
பொன்னுருவாய்மணியுருவில்பூதமைந்தாய்ப்
புனலுருவாயனலுருவில்திகழுஞ்சோதி *
தன்னுருவாயென்னுருவில்நின்றவெந்தை
தளிர்புரையும்திருவடியென்தலைமேலவே. (க)

**கல்யாணிராகம்-ஆதிதாளம்.**

பாருருவில்நீரெரிகால்விசும்புமாகிப்
பல்வேறுசமயமுமாய்ப்பரந்துநின்ற *
ஏருருவில்மூவருமேயெனநின்ற
விமையவர்தம்திருவுருவேறெண்ணும்போது *
ஓருருவம்பொன்னுருவ மொன்றுசெந்தீ
ஒன்றுமாகடலுருவமொத்துநின்ற *
மூவுருவும்கண்டபோதொன்றாம்சோதி
முகிலுருவமெப்படிகளுருவந்தானே. (உ)

**தோடிராகம்-ரூபகதாளம்.**

திருவடிவில்கருநெடுமால்சேயனென்றும்
திரேதைக்கண்வளையுருவாய்த்திகழ்ந்தானென்றும் *
பெருவடிவில்கடலமுதம்கொண்டகாலம்
பெருமானைக்கருநீலவண்ணன்றன்னை *
ஒருவடிவத்தோருருவென்றுணரலாகா
வூழிதோறூழிநின்றேத்திலல்லால் *
கருவடிவில்செங்கண்ணவண்ணன்றன்னைக்
கட்டுரையேயாரொருவர்காண்கிற்பாரே. (௩)

தோடிராகம்-ஆதிதாளம்.

இந்திரற்கும்பிரமற்குமமுதல்வன்றன்னை
இருநிலம்கால்தீநீர்விண்பூதமைந்தாய் *
செந்திறத்ததமிழோசைவடசொல்லாகித்
திசைநான்குமாய்த் திங்கள்நாயிறாகி *
அந்தரத்தில் தேவர்க்குமறியலாகா
வந்தணனை அந்தணர்மாட்டந்திவைத்த
மந்திரத்தை * மந்திரத்தால்மறவாதென்றும்
வாழுதியேல் வாழலாம்மடநெஞ்சமே. (ச)

தோடிராகம்-திரிபுடைதாளம்.

ஒண்மிதியில்புனலுருவியொருகால்நிற்ப
ஒருகாலுங்காமருசீரவுணனுள்ளத்து *
எண்மதியுங்கடந் தண்டமீதுபோகி
யிருவிசும்பினூடுபோயெழுந்து * மேலைத்
தண்மதியும்கதிரவனும்தவிரவோடித்
தாரகையின்புறந்தடவி யப்பால்மிக்கு *
மண்முழுதுமகப்படுத்துநின்றவெந்தை
மலர்புரையும்திருவடியேவணங்கினேனே. (ரு)

மோஹநராகம்-ஆதிதாளம்.

அலம்புரிந்தநெடுந்தடக்கையமரர்வேந்தன்
அஞ்சிறைப்புள்தனிப்பாகன், அவுணர்க்கென்றும் *
சலம்புரிந்தங்கருளில்லாத்தன்மையாளன்
தானுகந்தவூரெல்லாம் தன்தாள்பாடி *
நிலம்பரந்துவரும் † கலுழிப்பெண்ணையீர்த்த
நெடுவேய்கள்படுமுத்தமுந்தவுந்தி *
புலம்பரந்துபொன்விளைக்கும்பொய்கைவேலிப்
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. (சு)

மோஹநராகம்-ரூபகதாளம்.

வற்புடையவரைநெடுந்தோள்மன்னர்மாள
வடிவாயமழுவேந்தியுலகமாண்டு *
வெற்புடையநெடுங்கடலுள்தனிவேலுய்த்த
வேள்முதலாவென்றானூர்விந்தமேய *
கற்புடையமடக்கன்னிகாவல்பூண்ட
கடிபொழில்சூழ்நெடுமறுகில்கமலவேலி *
பொற்புடையமலையரையன்பணியநின்ற
பூங்கோவலூர்தொழுதும்போதுநெஞ்சே. (எ)

---

† கலுழி - வெள்ளம்.

### தேசியராகம்-ஆதிதாளம்.

⁂ நீரகத்தாய் நெடுவரையினுச்சிமேலாய் !
நிலாத்திங்கள் துண்டத்தாய் ! நிறைந்தகச்சி
ஊரகத்தாய் * ஒண்துறைநீர்வெஃகாவுள்ளாய் !
உள்ளுவாருள்ளத்தாய் ! * உலகமேத்தும்
காரகத்தாய் ! கார்வானத்துள்ளாய் ! கள்வா !
காமருபூம்காவிரியின்தென்பால்மன்னு
பேரகத்தாய் ! * பேராதென்நெஞ்சினுள்ளாய் !
பெருமானுன்திருவடியேபேணினேனே. (அ)

### சங்கராபரணராகம்-ஆதிதாளம்.

வங்கத்தால்மாமணிவந்துந்துமுந்நீர்
மல்லையாய் ! மதிள்கச்சியூராய் ! பேராய் ! *
கொங்குத்தார்வளங்கொன்றையலங்கல்மார்வன்
குலவரையன்மடப்பாவையிடப்பால்கொண்டான் *
பங்கத்தாய்பாற்கடலாய் பாரின்மேலாய்
பனிவரையினுச்சியாய் பவளவண்ணா *
எங்குற்றாயெம்பெருமானுன்னைநாடி
யேழையேனிங்ஙனமேயுழிதருகேனே. (௯)

### சங்கராபரணராகம்-நபகதாளம்.

பொன்னாய் பொழிலேழும்காவல்பூண்ட
புகழானா யிகழ்வாயதொண்டனேன்நான் *
என்னாயென்னாயென்னிலல்லால்
என்றறிவனேழையேன் * உலகமேத்தும்
தென்னாய்வடவாய்குடபாலாய்
குணபாலமதயானையிமையோர்க்கென்றும்
முன்னாய் * பின்னார்வணங்கும்சோதி
திருமூழிக்களத்தாய்முதலானாயே. (க0)

### பந்துவராளிராகம்-அடதாளம்.

பட்டுக்குமயர்த்திரங்கும்பாவைபேணாள்
பனிநெடுங்கண்ணீர்ததும்பப்பள்ளிகொள்ளாள் *
எட்டனைப்போதென்குடங்காலிருக்ககில்லாள்
எம்பெருமான்திருவரங்கமெங்கேயென்னும் *
மட்டுவிக்கிமணிவண்டுமுரலும்கூந்தல்
மடமானை யிதுசெய்தார்தம்மை * மெய்யே
கட்டுவிச்சிசொல்லென்னச்சொன்னாள்நங்காய் *
கடல்வண்ணரிதுசெய்தார்காப்பாராரே. (கக)

பந்துவராளிராகம்-ரூபகதாளம்.

நெஞ்சுருகிக்கண்பனிப்பநிற்கும்சோரும்
நெடிதுயிர்க்குமுண்டறியாளுறக்கம்பேணாள் *
நஞ்சரவில் துயிலமர்ந்தநம்பியென்னும்
வம்பார்பூம்வயலாலிமைந்தாவென்னும் *
அஞ்சிறையபுட்கொடியேயாடும்பாடும்
அணியரங்கமாடுதுமோதோழீயென்னும் *
என்சிறகின்கீழடங்காப்பெண்ணைப்பெற்றேன்
இருநிலத்தோர்பழிபடைத்தேன்ஏபாவமே. (கஉ)

பந்துவராளிராகம்-ஜம்பைதாளம்.

கல்லெடுத்துக்கல்மாரிகாத்தாயென்றும்
காமருபூங்கச்சியூரகத்தாயென்றும் *
வில்லிறுத்துமெல்லியல்தோள்தோய்ந்தாயென்றும்
வெஃகாவில் துயிலமர்ந்தவேந்தேயென்றும் *
மல்லடர்த்துமல்லரையன்றட்டாயென்றும்
மாகீண்டகைத்தலத்தென்மைந்தாவென்றும் *
சொல்லெடுத்துத்தன்கிளியைச்சொல்லேயென்று
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கங)

சாவேரிராகம்-ரூபகதாளம்.

முளைக்கதிரைக்குறுங்குடியுள்முகிலை மூவா
மூவுலகும்கடந்தப்பால்முதலாய்நின்ற *
அளப்பரியவாரமுதையரங்கமேய
வந்தணனை யந்தணர்தம்சிந்தையானை *
விளக்கொளியைமரதகத்தைத்திருத்தண்காவில்
வெஃகாவில்திருமாலைப்பாடக்கேட்டு *
வளர்த்ததனால்பயன்பெற்றேன்வருகவென்று
மடக்கிளியைக்கைகூப்பிவணங்கினாளே. (கச)

சாவேரிராகம்-திரிபுடைதாளம்.

கல்லுயர்ந்தநெடுமதிள்சூழ்கச்சிமேய
களிறென்றும் கடல்கிடந்தகனியேயென்றும் *
அல்லியம்பூமலர்ப்பொய்கைப்பழனவேலி
அணியழுந்தூர்நின்றுகந்தவம்மானென்றும் *
சொல்லுயர்ந்தநெடுவீணைமுலைமேல்தாங்கித்
தூமுறுவல்நகையிறையேதோன்றெனக்கு *
மெல்விரல்கள்சிவப்பெய்தத்தடவியாங்கே
மென்கிளிபோல்மிகமிழற்றுமென்பேதையே. (கரு)

### சாவேரிராகம்-ஜம்பைதாளம்.

⁂ கன்றுமேய்த்தினிதுகந்தகாளாயென்றும்
கடிபொழில்சூழ்கணபுரத்தென்கனியேயென்றும் *
மன்றமரக்கூத்தாடிமகிழ்ந்தாயென்றும்
வடதிருவேங்கடம்மேயமைந்தாவென்றும் *
வென்றசுரர்குலங்களைந்தவேந்தேயென்றும்
விரிபொழில்சூழ்திருநறையூர்நின்றாயென்றும் *
துன்றுகுழல்கருநிறத்தென் துணையேயென்றும்
துணைமுலைமேல்துளிசோரச்சோர்கின்றாளே. (கசு)

### எதுகுலகாம்போதிராகம்-ஜம்பைதாளம்.

பொங்கார்மென்னிளங்கொங்கைபொன்னேபூப்பப்
பொருகயல்கண்ணீரரும்பப்போந்துநின்று *
செங்காலமடப்புறவம்பெடைக்குப்பேசும்
சிறுகுரலுக்குடலுருகிச்சிந்தித்து - * ஆங்கே
தண்காலும்தண்குடந்தைநகரும்பாடித்
தண்கோவலூர்பாடியாடக்கேட்டு *
நங்காய்நங்குடிக்கிதுவோநன்மையென்ன
நறையூரும்பாடுவாள் நவில்கின்றாளே. (கஎ)

### பந்துவராளிராகம்-திரிபுடைதாளம்.

கார்வண்ணம்திருமேனி கண்ணும்வாயும்
கைத்தலமுமடியிணையும் கமலவண்ணம் *
பார்வண்ணமடமங்கைபத்தர்பித்தர்
பனிமலர்மேல்பாவைக்குப் பாவம்செய்தேன் *
ஏர்வண்ணவென்பேதை யென்சொல்கேளாள்
எம்பெருமான் திருவரங்க மெங்கேயென்னும் *
நீர்வண்ணன்நீர்மலைக்கே போவேனென்னும்
இதுவன்றோநிறைவழிந்தார் நிற்குமாறே. (கஅ)

### பந்துவராளிராகம்-ரூபகதாளம்.

முற்றாராவநமுலையாள்பாவைமாயன்
மொய்யகலத்துள்ளிருப்பாளஃதும்கண்டு
அற்றாள் * தன்நிறைவழிந்தாளாவிக்கின்றாள்
அணியரங்கமாடுதுமோதோழீயென்னும் *
பெற்றேன்வாய்ச்சொல்லிறையும் பேசக்கேளாள்
பேர்பாடித்தண்குடந்தை நகரும்பாடி *
பொற்றாமரைக்கயம் நீராடப்போனாள்
பொருவற்றாளென்மகளும் பொன்னுமஃதே. (கசா)

அடாணாராகம்-ஆதிதாளம்.

தேராளும்வாளரக்கன்செல்வம்மாளத்
தென்னிலங்கைமுன்மலங்கச்செந்தீயொல்கி *
போராளனாயிரம்தோள்வாணன்மாளப்
பொருகடலையரண்கடந்துபுக்குமிக்க
பாராளன் * பாரிடந்துபாரையுண்டு
பாருமிழ்ந்துபாரளந்துபாரையாண்ட
பேராளன் * பேரோதும்பெண்ணைமண்மேல்
பெருந்தவத்தளென்றல்லால் பேசலாமே. (உ0)

அடாணாராகம்-திரிபுடைதாளம்.

⁂ மைவண்ணநருங்குஞ்சிகுழல்பின்தாழ
மகரம்சேர்குழையிருபாடிலங்கியாட *
எய்வண்ணவெஞ்சிலையேதுணையா இங்கே
யிருவராய்வந்தாரென்முன்னேநின்றார் *
கைவண்ணம்தாமரைவாய்கமலம்போலும்
கண்ணிணையுமரவிந்தமடியுமஃதே *
அவ்வண்ணத்தவர்நிலைமைகண்டும்தோழீ
அவரைநாம்தேவரென்றஞ்சினோமே. (உக)

ஆனந்தபைரவிராகம்-திரிபுடைதாளம்.

நைவளமொன்றாராயா நம்மைநோக்கா
நாணினார்போலிறையேநயங்கள்பின்னும்
செய்வளவிலென்மனமும்கண்ணுமோடி
யெம்பெருமான்திருவடிக்கீழணைய * இப்பால்
கைவளையும்மேகலையும்காணேன் கண்டேன்
கனமகரக்குழையிரண்டும்நான்குதோளும் *
எவ்வளவுண்டெம்பெருமான்கோயிலென்றேற்கு -
இதுவன்றோவெழிலாலியென்றார்தாமே. (உஉ)

காம்பூஜிராகம்-திரிபுடைதாளம்.

உள்ளூரும்சிந்தைநோயெனக்கேதந்தென்
னொளிவளையும்மாநிறமும் கொண்டாரிங்கே *
தெள்ளூருமிளந்தெங்கின்தேறல்மாந்திச்
சேலுகளும்திருவரங்கம்நம்மூரென்ற *
கள்ளூரும்பைந்துழாய்மாலையானைக்
கனவிடத்தில்யான்காண்பன் கண்டபோது *
புள்ளூரும்கள்வாநீபோகேலென்பன்
என்றாலுமிதுநமக்கோர் புலவிதானே. (உஙு)

வராளிராகம்-ரூபகதாளம்.

இருகையில்சங்கிவைநில்லாவெல்லேபாவம்
இலங்கொளிநீர்பெரும்பௌவம்மண்டியுண்ட *
பெருவயிற்றகருமுகிலேயொப்பர்வண்ணம்
பெருந்தவத்தரருந்தவத்துமுனிவர்சூழ *
ஒருகையில்சங் கொருகைமற்றுழியேந்தி
உலகுண்டபெருவாயரிங்கேவந்து - * என்
பொருகயல்கண்ணீரரும்பப்புலவிதந்து
புனல்ரங்கமூரென்றுபோயினரே. (உச)

பந்துவராளிராகம்-ரூபகதாளம்.

மின்னிலங்குதிருவுருவும்பெரியதோளும்
கரிமுனிந்தகைத்தலமும்கண்ணும்வாயும் *
தன்னலர்ந்தநறுந்துழாய்மலரின்கீழே
தாழ்ந்திலங்குமகரம்சேர்குழையும்காட்டி *
என்னலனுமென்னிறைவுமென்சிந்தையும்
என்வளையும்கொண் டென்னையாளுங்கொண்டு *
பொன்னலர்ந்தநறும்செருந்திப்பொழிலினூடே
புனலரங்கமூரென்றுபோயினரே. (உரு)

கேதாராராகம்-ரூபகதாளம்.

தேமருவுபொழிலிடத்துமலர்ந்தபோதைத்
தேனதனைவாய்மடுத்துன்பெடையும்நீயும் *
பூமருவியினிதமர்ந்துபொறியிலார்ந்த
அறுகாலசிறுவண்டேதொழுதேனுன்னை *
ஆமருவிநிரைமேய்த்தவமரர்கோமான்
அணியழுந்தூர்நின்றானுக்கின்றேசென்று *
நீமருவியஞ்சாதேநின்றோர்மாது
நின்நயந்தாளென் றிறையேயியம்பிக்காணே. (உசு)

சாரங்கராகம்-ரூபகதாளம்.

செங்காலமடநாராயின்றேசென்று
திருக்கண்ணபுரம்புக்கென்செங்கண்மாலுக்கு - *
என்காதலென் துணைவர்க்குரைத்தியாகில்
இதுவொப்பதெமக்கின்பமில்லை * நாளும்
பைங்கானமீதெல்லாமுனதேயாகப்
பழனமீன்கவர்ந்துண்ணத்தருவன் * தந்தால்
இங்கேவந்தினிதிருந்துன்பெடையும்நீயும்
இருநிலத்திலினிதின்பமெய்தலாமே. (உஎ)

மோகநராகம்-அடதாளம்.

தென்னிலங்கையரண்சிதறியவுணன்மாளச்
சென்றுலகமூன்றினையும்திரிந்தோர்தோரால் *

மன்னிலங்குபாரதத்தைமாளவூர்ந்த
வரையுருவின்மாகளிற்றைத்தோழீ * என்றன்
பொன்னிலங்குமுலைக்குவட்டில் பூட்டிக்கொண்டு
போகாமைவல்லேனுய்ப்புலவியெய்தி *
என்னிலங்கமெல்லாம்வந்தின்பமெய்த
எப்பொழுதும்நினைந்துருகியிருப்பன்நானே. (உஅ)

சாற்றுப்பாட்டுக்கள்.

**மோகனராகம்-ஜம்பைதாளம்.**

⁂ அன்றுயர்குலமகளுக்கரையன்றன்னை
அலைகடலைக்கடைந்தடைத்தவம்மான்றன்னை *
குன்றுதவலியரக்கர்கோனைமாளக்
கொடும்சிலைவாய்ச்சரந்துரந்துகுலங்களைந்து
வென்றானை * குன்றெடுத்ததோளினானை
விரிதிரைநீர்விண்ணகரம்மருவிநாளும்
நின்றானை * தண்குடந்தைக்கிடந்தமாலை
நெடியானையடிநாயேன் நினைந்திட்டேனே. (உகூ)

## மங்களம்.

⁂ மின்னுமாமழைதவழும்மேகவண்ணா
விண்ணவர்தம்பெருமானேயருளாயென்று - *
அன்னமாய்முனிவரோடமரரேத்த
அருமறையைவெளிப்படுத்தவம்மான்றன்னை *
மன்னுமாமணிமாடமங்கைவேந்தன்
மானவேல்பரகாலன்கலியன்சொன்ன *
பன்னியநூல்தமிழ்மாலைவல்லார் தொல்லைப்
பழவினையைமுதலரியவல்லார்தாமே. (௩0)

மின்பார்திருவடி இந்திரன் ஒண்மிதி அலம்வற்பு நீர்வங்கம் பொன்பட்டு நெஞ்சுகல் முளைகல்லுயர்ந்தகன்று பொங்குகார்முற்று தோராளும் மைநை வளம் உள்ளூரிருகைமின்தேமருவு செங்கால தென்னிலங்கை அன்றுயர் மின்னுமாவையம்.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



## திருநெடுந்தாண்டகம் ஸம்பூர்ணம்.

ஆ பாட்டு - ௩0.

---

| | | |
|---|---|---|
| பெரியதிருமொழி-பாட்டு | | க0அச |
| திருக்குறுந்தாண்டகம் | ,, | உ0 |
| திருநெடுந்தாண்டகம் | ,, | ௩0 |

ஆ பாட்டு-ககஙௌ.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# பொய்கையாழ்வார் வைபவம்.

𑌤𑍁𑌲𑌾𑌯𑌾𑌂𑌶𑍍𑌰𑌵𑌣𑍇𑌜𑌾𑌤𑌂 𑌕𑌾𑌞𑍍𑌚𑍍𑌯𑌾𑌂𑌕𑌾𑌞𑍍𑌚𑌨𑌵𑌾𑌰𑌿𑌜𑌾𑌤𑍍।
𑌦𑍍𑌵𑌾𑌪𑌰𑍇𑌪𑌾𑌞𑍍𑌚𑌜𑌨𑍍𑌯𑌾𑌂𑌶𑌂 𑌸𑌰𑍋𑌯𑍋𑌗𑌿𑌨𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑍇 ॥

துலாயாம்ஶ்ரவணேஜாதம் காஞ்ச்யாம்காஞ்சநவாரிஜாத் -
த்வாபரேபாஞ்சஜந்யாம்ஶம் ஸரோயோகிநமாஶ்ரயே.

---

"மற்றுள்ளவாழ்வார்களுக்குமுன்னேவந்துதித்து
நற்றமிழால்நூல்செய்துநாட்டையுய்த்த—பெற்றிமையோ
ரென்றுமுதலாழ்வார்களென்னும்பேரிவர்க்கு
நின்றதுலகத்தேநிகழ்ந்து"

என்று சொல்லுகிறபடியே - எல்லா ஆழ்வார்களுக்கும் முதலில் திருவவதரித்தருளுகையாலே முதலாழ்வார்கள் என்னும் பேர்பெற்ற "பொய்கையார், பூதத்தார், பேயாழ்வார்" என்னும் மூவரிலும், முதல் பொய்கையாழ்வார்; ஸர்வேஶ்வரனை ப்ரம்ஹா அஸ்வமேதயாகத்தால் ஆராதித்தவிடமாகையால் "காஞ்சிபுரம்" என்று புகழுற்றதாய், புண்ணியத்தைப் பெருக்கத்தக்க கச்சித்திருவெஃகாவில்பொய்கைபுஷ்கரிணியில் பொற்றுமரைமலரில் துவாபரயுகம்-அகூஉகூ0க-வதான சித்தார்த்தி௵ ஐப்பிசி௴ சுக்லபக்ஷம் அஷ்டமி செவ்வாய்க்கிழமைகூடின திருவோண நக்ஷத்ரத்தில், பாஞ்சஜந்யாம்ஶராய், அயோநிஜராய்த் திருவவதரித்தருளினர்.

இவர் அருளிச்செய்த ப்ரபந்தம் - முதல்திருவந்தாதி.

---

* [இவ்வாழ்வாரும், பூதத்தாழ்வாரும், பேயாழ்வாரும், புஷ்பத்தில் திருவவதரித்து, எம்பெருமானுடைய நிர்ஹேதுக கடாக்ஷத்தாலே, ராஜஸ தாமஸ குணங்களினின்றும் விடப்பட்டு, சுத்தஸத்வ குணமே தலையெடுத்து பகவத்தாஸ்யத்தையுடையராய், அதினலுண்டான ஜ்ஞாந பக்தி வைராக்யங்களையுடையராய், அந்நபாநாதிகளை விட்டு பாலப்பிராயந்துடங்கி பகவத்குணங்களே தாரகமாகவிருந்தார்கள்.

ஸம்ஸாரிகள், இவ்வாழ்வார்களைப்போலன்றியே, உண்டியையும் உடையையும் உகந்து ஶப்தாதிவிஷயங்களில் மிகவும் ப்ரவணராய் பகவத்விமுகராயிருக்கையாலே, அவர்களோடு ஸஹவாஸம்தங்களுக்கு துஸ்ஸஹமாய், ஒருநாளிருந்தவிடத்தில் ஒருநாளிராமல், க்ராமத்துக்கு ஓரிராத்திரியாக இவர்கள் ஒருவரையொருவர் அறியாதே தனித்தனியே வர்த்தித்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படியிருக்கையில், ஸர்வேஶ்வரன், தனக்கு ஆத்மபூதரான இவ்வாழ்வார்களைக்கொண்டு ஜகத்தைத்திருத்தவேணும் என்றுநினைத்து, நெடுங்காலம் மாயையினல் மறைக்கப்பட்ட ஸம்ஸாரிகளுக்கு அஜ்ஞாநமாகிற இருட்டைப்போக்கித் தன்விஷயத்தில் ஜ்ஞாந பக்தி வைராக்யங்களை யுண்டாக்கச் சமயம்பார்த்திருந்தான்.

ஒருநாளிராத்திரியில், இவ்வாழ்வார்கள் மூவரும் திருக்கோவலூரில் ஒரு இடைகழியிலே † கோல்விழுக்காட்டால் வந்துசேர; அவ்வளவிலே பெருமழையும்பெருங்காற்றும்வர, அவற்றைக்கண்டு மழைக்கு ஒதுங்கி ஒரு இடைகழியிலே ஒருவர் புகுந்துகிடக்க; மற்றையவர்வந்து "திறக்கவேணும்" என்ன; "ஒருவர்க்குக்கிடக்க விடம்போருமத்தனை" என்ன; "ஒருவர்கிடந்தவிடம் இருவர்க்கு இருக்

* இந்த வ்ருத்தாந்தத்தை, பூதத்தாழ்வார் வைபவத்தோடும் பேயாழ்வார் வைபவத்தோடும் கூட்டிக்கொள்வது.

† கோல்விழுக்காட்டல் - தற்செயலாக.

கலாங்காணும், திறவும்" என்ன; "ஒருவர் முகம் ஒருவர்பொருத ஸம்ஸாரத்திலே யிப்படி சொன்னவிவர் கேவலரல்லர்" என்று திறக்க; அவரும்புகுந்து இருவருமாக இருக்கிறவளவிலே; மற்றையவரும் வந்து திறக்கச்சொல்ல; "எங்களிருவர்க்கும் இருக்கவிடம் போருமத்தனை" என்ன; "இருவரிருந்தவிடம் மூவர்க்கு நிற்கலாம், திறவும்" என்ன; "இவரும் கேவலரல்லர்" என்று திறக்க; ஒருவர்க்கொருவர் வந்தநபரராய்; "நீரார்? நீரார்?" என்று ஒருவரையொருவர் கேட்க. "நான் பகவானுக்கு ஶேஷபூதன், நான் வாசுதேவனுக்கு தாஸன், நான்ஜ்ஞாநாநந்தமயனான பரமாத்மாவுக்கு ஶேஷபூதன்" என்று தந் தாமுடைய ஸ்வரூபநிர்த்தேஶ ப்ரஸங்கத்தாலே ஒருவர்க்கொருவர் தெரிவித்துக்கொண்டிருந்தார்கள்.

ஸர்வேஶ்வரன் துளவீவனங்களும் தாமரைக்காடுகளும் நிறைந்த விடங்களிலும், ஸ்ரீவைஷ்ணவர்கள் வசிக்குமிடங்களிலும் கிட்டியிருப்பவனாகையால், இத்தருணம்பார்த்து, தன் மார்வைவிட்டுப்பிரியில் ஒருக்ஷணங்கூடத் தரிக்கமாட்டாத பிராட்டியோடுங்கூட, செந்தமிழ்பாடுவாராகிற இவர்களருகே புகுந்து நெருக்கினின்றான். இவர்களும், "நம்மூவரையொழிய வேறுபுக்கு நெருக்குகிறவர்களார்? என்று விளக்கேற்றிப்பார்க்கவேணும்" என்ன; பொய்கையாழ்வாரும் பூதத்தாழ்வாரும் பரபக்தி பரஜ்ஞாநங்களால் தர்ஶித்து, சொன்மாலையாகிற விளக்கேற்றிக்காட்ட, பேயாழ்வார் பரமபக்தியால் அவன் படிகளைக் கண்டு, பொன்னாழியும் புரிசங்கமுமேந்திப் பொன்மேனியோடே திருமகளுடன் நிற்கிற ஸ்ரீமந்நாராயணனுடைய வடிவழகையும் செந்தாமரைக்கண்ணையும் நெஞ்சென்னுமுட்கண்ணாலே யிவர்கள்கண்டு அநுபவித்து அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதியின் மிகுதியாலே "வையந்தகளி" "அன்பேதகளி" "திருக்கண்டேன்" என்கிற திவ்ய ப்ரபந்தங்களை, ஸம்ஸாரிகளும் அதிகரித்து அஜ்ஞாநாந்தகாரம் நீங்கி உஜ்ஜீவிக்கைக்காக, ஞானத்தமிழாக அருளிச்செய்து ப்ரபந்தமாக்கி உபகரித்தருளி ஜகத்தை வாழ்வித்தருளினார்கள்.]



செய்ய துலாவோணத்திற்செகத்துதித்தான்வாழியே
திருக்கச்சிமாநகரஞ்செழிக்கவந்தோன்வாழியே
வையந்தகளிநூறும்வகுத்துரைத்தான்வாழியே
வனசமலர்க்கருவதனில்வளர்ந்தமைந்தன்வாழியே
வெய்யகதிரோன்றன்னைவிளக்கிட்டான்வாழியே
வேங்கடவர்திருமலையைவிரும்புமவன்வாழியே
பொய்கைமுனிவடிவழகும்பொற்பதமும்வாழியே
பொன்முடியுந்திருமுகமுமிப்பூதலத்தில்வாழியே.

பொய்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



    

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

முதலாழ்வார் முதலானோரருளிச்செய்த

# இயற்பா.

பொய்கையாழ்வா ரருளிச்செய்த

## முதற்றிருவந்தாதி.

### தனியன்.

நேரிசை-வெண்பா.

முதலியாண்டா னருளிச்செய்தது.

கைதைசேர்பூம்பொழில்சூழ்கச்சிநகர்வந்துதித்த *
பொய்கைப்பிரான்கவிஞர்போரேறு *—வையத்
தடியவர்கள்வாழ வருந்தமிழ்நூற்றந்தாதி *
படிவிளங்கச்செய்தான் பரிந்து.

சஹானாராகம்-திரிபுடைதாளம்.

⚜ வையம்தகளியா வார்கடலேநெய்யாக *
வெய்யகதிரோன் விளக்காக *—செய்ய
சுடராழியானடிக்கே சூட்டினேன்சொன்மாலை *
இடராழிநீங்குகவேயென்று. (க)

என்றுகடல்கடைந்த தெவ்வுலகம்நீரேற்றது - *
ஒன்றுமதனையுணரேன்நான் *—அன்ற
கடைத்துடைத்துக் கண்படுத்தவாழி * இதுநீ
படைத்திடந்துண்டுமிழ்ந்தபார். (உ)

பாரளவுமோரடிவைத் தோரடியும்பாருடுத்த *
நீரளவும்செல்லநிமிர்ந்ததே *—சூருருவில்
பேயளவுகண்ட பெருமான், அறிகிலேன் *
நீயளவுகண்டநெறி. (௩)

நெறிவாசல்தானேயாய்நின்றானை * ஐந்து
பொறிவாசல்போர்க்கதவம்சாத்தி *—அறிவானும்
ஆலமரநீழ லறம்நால்வர்க்கன்றுரைத்த *
ஆலமமர்கண்டத்தரன். (௪)

அரன்நாரணன்நாமம் ஆன்விடைபுள்ளூர்தி *
உரைநூல்மறையுறையும்கோயில் *—வரைநீர்
கருமமழிப்பளிப்புக் கையதுவேல்நேமி *
உருவமெரி கார்மேனியொன்று. (௫)

ஒன்றுமறந்தறியே னோதநீர்வண்ணனைநான் *
இன்றுமறப்பனோ வேழைகாள் *—அன்று
கருவரங்கத்துட்கிடந்து கைதொழுதேன்கண்டேன் *
திருவரங்கமேயான்திசை. (௬)

திசையும்திசையுறுதெய்வமும் * தெய்வத்
திசையும்கருமங்களெல்லாம் *—அசைவில்சீர்க்
கண்ணன்நெடுமால், கடல்கடைந்த * காரோத
வண்ணன்படைத்தமயக்கு. (௭)

மயங்கவலம்புரிவாய்வைத்து * வானத்
தியங்குமெறிகதிரோன்றன்னை *—முயங்கமருள்
தேராழியால்மறைத்த தென்நீ, திருமாலே *
போராழிக்கையால்பொருது. (௮)

பொருகோட்டோரேனமாய்ப் புக்கிடந்தாய்க்கு - * அன்றுன்
ஒருகோட்டின்மேல் கிடந்ததன்றே *—விரிதோட்ட
சேவடியைநீட்டித் திசைநடுங்கவிண்துளங்க *
மாவடிவில் நீயளந்தமண். (௯)

மண்ணும்மலையும் மறிகடலும்மாருதமும் *
விண்ணும்விழுங்கியதுமெய்யன்பர் *—எண்ணில்
அலகளவுகண்ட சீராழியாய்க்கு - * அன்றிவ்
வுலகளவுமுண்டோ வுன்வாய். (௧0)

வாயவனையல்லது வாழ்த்தாது * கையுலகம்
தாயவனையல்லது தான்தொழா *—பேய்முலைநஞ்
சூணாகவுண்டா னுருவொடுபேரல்லால் *
காணாகண் கேளாசெவி. (௧௧)

செவிவாய்கண்மூக் குடலென்றைம்புலனும் * செந்தீ
புவிகால் நீர்விண்பூதமைந்தும் *—அவியாத
ஞானமும்வேள்வியும் நல்லறமுமென்பரே *
ஏனமாய்நின் றார்க்கியல்வு. (௧௨)

இயல்வாக வீன்துழாயானடிக்கேசெல்ல *
முயல்வாரியலமரர்முன்னம் *—இயல்வாக
நீதியாலோதி நியமங்களால்பரவ *
ஆதியாய்நின்றாரவர். (௧௩)

அவரவர்தாந்தா மறிந்தவாறேத்தி *
இவரிவரெம்பெருமானென்று *—சுவர்மிசைச்
சாத்தியும் வைத்தும்தொழுவர் * உலகளந்த
மூர்த்தியுருவேமுதல். (௧௪)

முதலாவார் ¶ மூவர், அம்மூவருள்ளும் *
முதலாவான் மூரிநீர்வண்ணன் *—முதலாய
நல்லானருளல்லால் நாமநீர்வையகத்து *
பல்லாரருளும்பழுது. (௧௫)

பழுதேபலபகலும் போயினவென்று - * அஞ்சி
அழுதே னரவணைமேல்கண்டு—தொழுதேன் *
கடலோதம்காலலைப்பக் கண்வளரும் * செங்கண்
அடலோதவண்ணரடி. (௧௬)

அடியும்படிகடப்பத் தோள்திசைமேல்செல்ல *
முடியும்விசும்பளந்ததென்பர் *—வடியுகிரால்
ஈர்ந்தா னிரணியனதாகம் * இருஞ்சிறைப்புள்
ளூர்ந்தா னுலகளந்தநான்று. (௧௭)

நான்றமுலைத்தலைநஞ்சுண்டு - * உறிவெண்ணெய்
தோன்றவுண்டான் வென்றிசூழ்களிற்றை—ஊன்றி *
பொருதுடைவுகண்டானும் புள்ளின்வாய்கீண்டானும் *
மருதிடைபோய் மண்ணளந்தமால். (௧௮)

மாலுங்கருங்கடலே என்நோற்றாய் * வையகமுண்
டாலினிலைத்துயின்றவாழியான் *—கோலக்
கருமேனிச் செங்கண்மால்கண்படையுள் * என்றும்
திருமேனிநீதீண்டப்பெற்று. (௧௯)

பெற்றார்தளைகழலப் பேர்ந்தோர்குறளுருவாய் *
செற்றார்படிகடந்தசெங்கண்மால் *—நற்றா
மரைமலர்சேவடியை வானவர்கைகூப்பி *
நிரைமலர்கொண்டு § ஏத்துவரால்நின்று. (௨0)

நின்றுநிலமங்கை நீரேற்றுமூவடியால் *
சென்றுதிசையளந்தசெங்கண்மாற்கு - *—என்றும்
படையாழிபுள்ளூர்தி பாம்பணையான்பாதம் *
அடையாழிநெஞ்சேயறி. (௨௧)

¶ "மூவரே" என்றும்பாடம். § "ஏத்துவராம்" என்று உரையிற்பாடம்.

அறியுமுலகெல்லாம் யானேயுமல்லேன் *
பொறிகொள்சிறையுவணமூர்ந்தாய் *—வெறிகமழும்
காம்பேய்மென்தோளி கடைவெண்ணெயுண்டாயை *
தாம்பேகொண்டார்த்த தழும்பு. (உஉ)

தழும்பிருந்தசார்ங்கநாண் தோய்ந்தவாமங்கை *
தழும்பிருந்ததாள் சகடம்சாடி *—தழும்பிருந்த
பூங்கோதையாள்வெருவப் பொன்பெயரோன்மார்பிடந்த *
வீங்கோதவண்ணர்விரல். (உ௩)

விரலொடுவாய்தோய்ந்த வெண்ணெய்கண்டு - * ஆய்ச்சி
உரலொடுறப்பிணித்தநான்று *—குறலோவா
தேங்கிநினைந் தயலார்காணவிருந்திலையே *
ஓங்கோதவண்ணா வுரை. (உ௪)

உரைமேற்கொண் டென்னுள்ளமோவாது - * எப்போதும்
வரைமேல்மரதகமேபோல *—திரைமேல்
கிடந்தானைக்கீண்டானை * கேழலாய்ப்பூமி
யிடந்தானை யேத்தியெழும். (உ௫)

எழுவார்விடைகொள்வா ரீன்துழாயானை *
வழுவாவகைநினைந்துவைகல்—தொழுவார் *
வினைச்சுடரைநந்துவிக்கும் வேங்கடமே * வானோர்
மனச்சுடரைத்தூண்டும் மலை. (உ௬)

மலையால்குடைகவித்து மாவாய்பிளந்து *
சிலையால்மராமரமேழ்செற்று *—கொலையானைப்
போர்க்கோடொசித்தனவும் பூங்குருந்தம்சாய்த்தனவும் *
கார்க்கோடுபற்றியான்கை. (உ௭)

கையவலம்புரியும்நேமியும் * கார்வண்ணத்
தைய மலர்மகள்நின்னாகத்தாள் *—செய்ய
மறையான்நின் னுந்தியான் மாமதிள்மூன்றெய்த *
இறையான் நின்னாகத்திறை. (உ௮)

இறையும்நிலனு மிருவிசும்புங்காற்றும் *
அறைபுனலும்செந்தீயுமாவான் *—பிறைமருப்பில்
பைங்கண்மால்யானை படுதுயரம்காத்தளித்த *
செங்கண்மால்கண்டாய்தெளி. (உ௯)

தெளிதாக வுள்ளத்தைச்செந்நிறீஇ * ஞானத்
தெளிதாக நன்குணர்வார்சிந்தை *—எளிதாகத்
தாய்நாடுகன்றேபோல் தண்டுழாயானடிக்கே *
போய்நாடிக்கொள்ளும்புரிந்து. (௩0)

புரியொருகைபற்றி யோர்பொன்னாழியேந்தி *
அரியுருவுமாளுருவுமாகி *—எரியுருவ
வண்ணத்தான்மார்பிடந்த மாலடியையல்லால் * மற்
றெண்ணத்தானாமோவிமை. (௩க)

இமையாதகண்ணா லிருளகலநோக்கி *
அமையாப்பொறிபுலன்க ளைந்தும்—நமையாமல் *
ஆகத்தணைப்பா ரணைவரே * ஆயிரவாய்
நாகத்தணையான்நகர். (௩௨)

நகரமருள்புரிந்து நான்முகற்கு * பூமேல்
பகரமறைபயந்த பண்பன்—பெயரினையே *
புந்தியால்சிந்தியா தோதியுருவெண்ணும் *
† அந்தியாலாம்பயனங்கென். (௩௩)

என்னொருவர்மெய்யென்ப ரேழுலகுண்டு – * ஆலிலையில்
முன்னொருவனாயமுகில்வண்ணா *—நின்னுருகிப்
பேய்த்தாய்முலைதந்தாள் பேர்ந்திலளாள் * பேரமர்க்கண்
ஆய்த்தாய்முலைதந்தவாறு. (௩௪)

ஆறியவன்பி லடியார்தமார்வத்தால் *
கூறியகுற்றமாக்கொள்ளல்நீ—தேறி *
நெடியோயடி யடைதற்கன்றே * ஈரைந்து
முடியான்படைத்தமுரண். (௩௫)

§ முரணைவலிதொலைதற்காமன்றே * முன்னம்
தரணிதனதாகத்தானே *—இரணியனைப்
புண்ணிரந்தவள்ளுகிரால் பொன்னாழிக்கையால் * நீ
மண்ணிரந்துகொண்டவகை. (௩௬)

வகையறுநுண்கேள்வி வாய்வார்கள் * நாளும்
புகைவிளக்கும் பூம்புனலுமேந்தி * திசைதிசையின்
வேதியர்கள் சென்றிறைஞ்சும்வேங்கடமே * வெண்சங்கம்
ஊதியவாய்மாலுகந்தவூர். (௩௭)

ஊரும்வரியரவ மொண்குறவர்மால்யானை *
பேரவெறிந்தபெருமணியை *—காருடைய
மின்னென்று புற்றடையும்வேங்கடமே * மேலசுரர்
என்னென்றமாலதிடம். (௩௮)

இடந்ததுபூமி யெடுத்ததுகுன்றம் *
கடந்ததுகஞ்சனைமுன்னஞ்ச *—கிடந்ததுவும்
நீரோதமாகடலே நின்றதுவும்வேங்கடமே *
பேரோதவண்ணர்பெரிது. (௩௯)

† அந்தி - ஸந்த்யாவந்தநம். § முரண் - கோணை - மிடுக்கு.

பெருவில்பகழிக் குறவர்கைச்செந்தீ *
வெருவிப்புனம்துறந்தவேழம் *—இருவிசும்பில்
மீன்வீழக் கண்டஞ்சும்வேங்கடமே * மேலசுரர்
கோன்வீழக் கண்டுகந்தான்குன்று. (௪0)

குன்றனையகுற்றஞ்செய்யினும் குணங்கொள்ளும் *
இன்றுமுதலாகவென்னெஞ்சே *—என்றும்
புறனுரையேயாயினும் பொன்னாழிக்கையான் *
திறனுரையேசிந்தித்திரு. (௪க)

திருமகளும்மண்மகளு மாய்மகளும்சேர்ந்தால் *
திருமகட்கேதீர்ந்தவாறென்கொல் *—திருமகள்மேல்
பாலோதம்சிந்தப் படநாகணைக்கிடந்த *
மாலோதவண்ணர்மனம். (௪உ)

மனமாசுதீரு மருவினையும்சாரா *
தனமாயதானேகைகூடும் *—புனமேய
பூந்துழாயானடிக்கே போதொடுநீரேந்தி *
தாம்தொழாநிற்பார்தமர். (௪௩)

தமருகந்ததெவ்வுருவ மவ்வுருவம்தானே *
தமருகந்ததெப்பேர் மற்றப்பேர் *—தமருகந்த
தெவ்வண்ணம்சிந்தித் திமையாதிருப்பரே *
அவ்வண்ணமாழியானும். (௪௪)

ஆமேயமரர்க்கறிய அதுநிற்க *
நாமேயறிகிற்போம்நன்னெஞ்சே *—பூமேய
மாதவத்தோன்தாள்பணிந்த வாளரக்கன்நீண்முடியை *
பாதமத்தாலெண்ணினான்பண்பு. (௪௫)

பண்புரிந்தநான்மறையோன் சென்னிப்பலியேற்ற *
வெண்புரிநூல்மார்பன்வினைதீர *—புண்புரிந்த
ஆகத்தான் தாள்பணிவார்கண்டீர் * அமரர்தம்
போகத்தால்பூமியாள்வார். (௪௬)

வாரிசுருக்கி மதக்களிறைந்திணையும் *
சேரிதிரியாமல் செந்நிறீஇ *—கூரிய
மெய்ஞ்ஞானத்தாலுணர்வார் காண்பரே * மேலொருநாள்
கைந்நாகம்காத்தான்கழல். (௪எ)

கழலொன்றெடுத்தொருகைசுற்றியோர்கைமேல் *
சுழலும்சுராசுரர்களஞ்ச *—அழலும்
செருவாழியேந்தினான் சேவடிக்கேசெல்ல *
மருவாழிநெஞ்சேமகிழ். (௪அ)

மகிழலகொன்றேபோல் மாறும்பல்யாக்கை *
நெகிழமுயல்கிற்பார்க்கல்லால் *—முகிழ்விரிந்த
சோதிபோல்தோன்றும் சுடர்பொன்நெடுமுடி * எம்
ஆதிகாண்பார்க்குமரிது. (சகூ)

அரியபுலனைந்தடக்கி யாய்மலர்கொண்டு - * ஆர்வம்
புரியபரிசினால்புல்கில் *—பெரியனாய்
மாற்றாதுவீற்றிருந்த மாவலிபால் * வண்கைநீர்
ஏற்றானைக்காண்பதெளிது. (ரு0)

எளிதுவிரண்டடியும் காண்பதற்கு - * என்னுள்ளம்
தெளியத்தெளிந்தொழியும்செவ்வே *—களியில்
பொருந்தாதவனைப் பொரலுற்று - * அரியா
யிருந்தான்திருநாமமெண். (ருக)

எண்மர்பதினொருவ ரீரறுவரோரிருவர் *
வண்ணமலரேந்தி வைகலும் *—நண்ணி
ஒருமாலையால்பரவியோவாது *—எப்போதும்
திருமாலைக்கைதொழுவர்சென்று. (ருஉ)

⁂ சென்றால்குடையா மிருந்தால்சிங்காசனமாம் *
நின்றால்மரவடியாம் நீள்கடலுள் *—என்றும்
புணையாம்மணிவிளக்காம் பூம்பட்டாம்புல்கும்
அணையாம் * திருமாற்கரவு. (ருங)

அரவமடல்வேழம் ஆன்குருந்தம்புள்வாய் *
குரவைகுடமுலைமற்குன்றம் *—கரவின்றி
விட்டிறுத்துமேய்த்தொசித்துக் கீண்டுகோத்தாடி * உண்
டட்டெடுத்தசெங்கணவன். (ருச)

அவன்தம ரெவ்வினையராகினும் * எங்கோ
னவன்தமரே யென்றொழிவதல்லால் *—நமன்தமரால்
ஆராயப்பட் டறியார்கண்டீர் * அரவணைமேல்
பேராயர்க்காட்பட்டார்பேர். (ருரு)

பேரேவரப்பிதற்றலல்லா லெம்பெம்மானை *
ஆரேயறிவா ரதுநிற்க —நேரே
கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் * கண்ணன்
அடிக்கமலந்தன்னை யயன். (ருசு)

அயனின்றவல்வினையை யஞ்சினேனஞ்சி *
உயநின்திருவடியேசேர்வான் *—நயநின்ற
நன்மாலைகொண்டு நமோநாரணவென்னும் *
சொன்மாலைகற்றேன்தொழுது. (ருஎ)

தொழுதுமலர்கொண்டு தூபம்கையேந்தி *
எழுதுமெழுவாழிநெஞ்சே *—பழுதின்றி
மந்திரங்கள்கற்பனவும் மாலடியேகைதொழுவான் *
அந்தரமொன்றில்லையடை. (ருஅ)

அடைந்தவருவினையோ டல்லல்நோய்பாவம் *
மிடைந்தவைமீண்டொழிய வேண்டில் *—நுடங்கிடையை
முன்னிலங்கைவைத்தான் முரணழிய * முன்னொருநாள்
தன்னிலங்கைவைத்தான்சரண். (ருகூ)

சரணமறைபயந்த தாமரையானோடு *
மரணமயமன்னுயிர்கட்கெல்லாம் *—அரணய
பேராழிகொண்ட பிரானன்றிமற்றறியாது - *
ஓராழிசூழ்ந்தவுலகு. (சூ0)

உலகு முலகிறந்தவூழியும் * ஒண்கேழ்
விலகுகருங்கடலும்வெற்பும் *—உலகினில்
செந்தீயும்மாருதமும்வானும் *.திருமால்தன்
புந்தியிலாயபுணர்ப்பு. (சூக)

புணர்மருதினூடுபோய்ப் பூங்குருந்தம்சாத்து *
மணமருவமால்விடையேழ்செற்று *—கணம்வெருவ
ஏழுலகம்தாயனவு மெண்டிசையும்போயினவும் *
சூழரவப்பொங்கணையான்தோள். (சூஉ)

தோளவனையல்லால்தொழா, என்செவியிரண்டும் *
கேளவனதின்மொழியேகேட்டிருக்கும் *—நாநாளும்
கோணைகணையான் குரைகழலேகூறுவதே *
நாணாமைநள்ளேன்நயம். (சூங)

நயவேன்பிறர்பொருளை நள்ளேன்கீழாரோடு - *
உயவேனுயர்ந்தவரோடல்லால் *—வியவேன்
திருமாலையல்லாது தெய்வமென்றேத்தேன் *
வருமாறென்நம்மேல்வினை. (சூச)

வினையாலடர்ப்படார் வெந்நரகில்சேரார் *
தினையேனும்தீக்கதிக்கட்செல்லார் *—நினைதற்
கரியானைச் சேயானை, ஆயிரம்பேர் * செங்கட்
கரியானைக் கைதொழுதக்கால். (சூரு)

காலையெழுந் துலகம்கற்பனவும்கற்றுணர்ந்த *
மேலைத்தலைமறையோர் வேட்பனவும் *—வேலைக்கண்
ஓராழியானடியே யோதுவதுமோர்ப்பனவும் *
பேராழிகொண்டான்பெயர். (சூசூ)

பெயரும்கருங்கடலே நோக்குமாறு - * ஒண்பூ
உயரும்கதிரவனே நோக்கும் *—உயிரும்
தருமனையேநோக்குமொண்டாமரையாள்கேள்வன் *
ஒருவனையேநோக்குமுணர்வு. (கூஎ)

உணர்வாராருன்பெருமை யூழிதோறூழி *
உணர்வாராருன்னுருவந்தன்னை *—உணர்வாரார்
விண்ணகத்தாய்மண்ணகத்தாய் வேங்கடத்தாய் * நால்வேதப்
பண்ணகத்தாய் நீ கிடந்தபால். (கூஅ)

பாலன்றனதுருவா யேழுலகுண்டு - * ஆலிலையின்
மேலன்றுநீவளர்ந்தமெய்யென்பர் *—ஆலன்று
வேலைநீருள்ளதோ விண்ணதோமண்ணதோ *
சோலைசூழ்குன்றெடுத்தாய்சொல்லு. (கூகூ)

சொல்லும்தனையும்தொழுமின், விழுமுடம்பு *
செல்லுந்தனையும்திருமாலை *—நல்லிதழ்
தாமத்தால்வேள்வியால் தந்திரத்தால்மந்திரத்தால் *
நாமத்தாலேத்துதிரேல் நன்று. (எ0)

நன்றுபிணிமூப்புக் கையகற்றிநான்கூழி *
நின்றுநிலமுழுதுமாண்டாலும் *—என்றும்
விடலாழிநெஞ்சமே வேண்டினேன்கண்டாய் *
அடலாழிகொண்டான்மாட்டன்பு. (எக)

அன்பாழியானை யணுகென்னும்நா அவன்றன் *
பண்பாழித்தோள்பரவியேத்தென்னும் *—முன்பூழி
காணானைக்காணென்னும் கண்செவிகேளென்னும் *
பூணாரம்பூண்டான்புகழ். (எஉ)

புகழ்வாய்பழிப்பாய் நீபூந்துழாயானை *
இகழ்வாய்கருதுவாய்நெஞ்சே *—திகழ்நீர்க்
கடலுமலையு மிருவிசும்புங்காற்றும் *
உடலுமுயிருமேற்றான். (எ௩)

ஏற்றான்புள்ளூர்ந்தா னெயிலெரித்தான்மார்விடந்தான் *
நீற்றான்நிழல்மணிவண்ணத்தான் *—கூற்றொருபால்
மங்கையான் பூமகளான்வார்சடையான் * நீண்முடியான்
கங்கையான் நீள்கழலான்காப்பு. (எச)

காப்புன்னையுன்னக் கழியுமருவினைகள் *
ஆப்புன்னையுன்ன வவிழ்ந்தொழியும் *—மூப்புன்னைச்
சிந்திப்பார்க்கில்லை திருமாலே - நின்னடியை
வந்திப்பார்காண்பர்வழி. (எரு)

வழிநின்றுநின்னைத்தொழுவார் * வழுவா
மொழிநின்றமூர்த்தியரேயாவர் *—பழுதொன்றும்
வாராதவண்ணமே விண்கொடுக்கும் * மண்ணளந்த
சீரான் திருவேங்கடம். (எசு)

வேங்கடமும் விண்ணகரும்வெஃகாவும் * அஃகாத
பூங்கிடங்கில் நீள்கோவல்பொன்னகரும் *—நான்கிடத்தும்
நின்றானிருந்தான் கிடந்தான்நடந்தானே *
என்றால்கெடுமாமிடர். (எஎ)

இடரார்படுவா ரெழுநெஞ்சே * வேழம்
தொடர்வான்கொடுமுதலைசூழ்ந்த *—படமுடைய
பைந்நாகப்பள்ளியான் பாதமேகைதொழுதும் *
கொய்ந்நாகப்பூம்போதுகொண்டு. (எஅ)

கொண்டானையல்லால் கொடுத்தாரையார்பழிப்பார் *
§ மண்டாவெனவிரந்து மாவலியை *—ஒண்டாரை
நீரங்கைதோய நிமிர்ந்திலையே * நீள் ‡ விசும்பி
லாரங்கைதோயவடுத்து. (எகூ)

அடுத்த கடும்பகைஞர்க் காற்றேனென்றோடி *
படுத்தபெரும்பாழிசூழ்ந்த—விடத்தரவை *
வல்லாளன்கைக்கொடுத்த மாமேனிமாயவனுக்கு - *
அல்லாதுமாவரோஆள். (அ0)

ஆளமர்வென்றி யடுகளத்துளங்நான்று *
வாளமர்வேண்டிவரைநட்டு *—நீளரவைச்
சுற்றிக்கடைந்தான்பெயரன்றே * தொன்னரகைப்
பற்றிக்கடத்தும்படை. (அக)

படையாரும்வாள்கண்ணார் $ பாரசிநாள் * பைம்பூம்
தொடையலோ டேந்தியதூபம் *—இடையிடையின்
மீன்மாய மாசூணும்வேங்கடமே * மேலொருநாள்
மான்மாயவெய்தான்வரை. (அஉ)

வரைகுடைதோள்காம்பாக ஆநிரைகாத்து - * ஆயர்
நிரைவிடையேழ்செற்றவாறென்னே *—உரவுடைய
நீராழியுள்கிடந்து நேராநிசாசரர்மேல் *
பேராழிகொண்டபிரான். (அங)

பிரானுன்பெருமை பிறரார்அறிவார் *
உராயுலகளந்தநான்று *—வராகத்
தெயிற்றளவு போதாவாறென்கொலோ * எந்தை
அடிக்களவுபோந்தபடி. (அச)

§ மண்தா; ஒண்தாரை. ‡ விசும்பிலார் - பிரமன்முதலானோர். $ பார சிநாள் - துவாதசி.

படிகண்டறிதியே பாம்பணையினான் * புட்
கொடிகண்டறிதியே கூறாய் *—வடிவில்
பொறியைந்துமுள்ளடக்கிப் போதொடுநீரேந்தி *
நெறிநின்றநெஞ்சமேநீ. (அரு)

நீயுந்திருமகளும்நின்றாயால் * குன்றெடுத்துப்
பாயும்பனி § மறைத்தபண்பாளா *—வாசல்
கடைகழியாவுள்புகாக் காமர்பூங்கோவல் *
இடைகழியேபற்றியினி. (அசு)

இனியார்புகுவா ரெழுநரகவாசல் *
முனியாதுமூரித்தாள்கோமின் *—கனிசாயக்
கன்றெறிந்ததோளான் கனைகழலேகாண்பதற்கு *
நன்கறிந்தநாவலம்சூழ்நாடு. (அஎ)

நாடிலும் நின்னடியேநாடுவன் * நாடோறும்
பாடிலும் நின்புகழேபாடுவன் *—சூடிலும்
பொன்னாழியேந்தினான் பொன்னடியேசூடுவேற்கு *
என்னாகிலென்னேயெனக்கு. (அஅ)

எனக்காவாராரொருவரே * எம்பெருமான்
தனக்காவான் தானேமற்றல்லால் *—புனக்காயாம்
பூமேனிகாணப் பொதியவிழும்பூவைப்பூ *
மாமேனிகாட்டும்வரம். (அகூ)

வரத்தால்வலிநினைந்து மாதவநின்பாதம் *
சிரத்தால்வணங்கானாமென்றே *—உரத்தினால்
ஈரரியாய் நேர்வலியோனாயவிரணியனை *
ஓரரியாய்நீயிடந்ததூன். (கூ0)

ஊனக்குரம்பையி னுள்புக்கிருள்நீக்கி *
ஞானச்சுடர்கொளீஇ நாடோறும் *—ஏனத்
துருவாயுலகிடந்த வூழியான்பாதம் *
மருவாதார்க்குண்டாமோவான். (கூக)

வானாகித்தீயாய் மறிகடலாய்மாருதமாய் *
தேனாகிப்பாலாம்திருமாலே *—ஆனாய்ச்சி
வெண்ணெய்விழுங்க நிறையுமே * முன்னொருநாள்
மண்ணையுமிழ்ந்தவயிறு. (கூஉ)

வயிறழலவாளுருவி வந்தானையஞ்ச *
எயிறிலகவாய்மடுத்ததென்நீ *—பொறியுகிரால்
பூவடிவையீடழித்த † பொன்னாழிக்கையா * நின்
சேவடிமேலீடழியச்செற்று. (கூங)

§ "மறுத்த" என்றும்பாடம். † "பொன்னாழிக்கையால்" என்றுபாடாந்தரம்.

செற்றெழுந்துதீவிழித்துச் சென்றவிந்தவேழுலகும் *
மற்றிவையாவென்று வாயங்காந்து *—முற்றும்
‡ மறையவற்குக்காட்டிய மாயவனையல்லால் *
இறையேனுமேத்தாதென்நா. (கூச)

நாவாயிலுண்டே நமோநாரணவென்று - *
ஓவாதுரைக்குமுரையுண்டே *—மூவாத
மாக்கதிக்கண்செல்லும்வகையுண்டே * என்னொருவர்
தீக்கதிக்கட்செல்லுந்திறம். (கூரு)

திறம்பாதென்னெஞ்சமே செங்கண்மால்கண்டாய் - *
அறம்பாவமென்றிரண்டுமாவான் *—புறந்தானிம்
மண்தான் மறிகடல்தான்மாருதந்தான் * வான்தானே
கண்டாய்கடைக்கட்பிடி. (கூசா)

பிடிசேர்களிறளித்தபேராளா * உன்றன்
அடிசேர்ந்தருள்பேற்றாளன்றே *—பொடிசேர்
அனல்கங்கையேற்றா னவிர்சடைமேல்பாய்ந்த *
புனல்கங்கையென்னும் பெயர்ப்பொன். (கூஎ)

பொன்திகழுமேனிப் புரிசடையம்புண்ணியனும் *
நின்றுலகம்தாயநெடுமாலும் *—என்றும்
இருவரங்கத்தால்திரிவரேலும் * ஒருவன்
ஒருவனங்கத்தென்றுமுளன். (கூஅ)

சாற்றுப்பாட்டுக்கள்.

‡‡ உளன்கண்டாய்நன்னெஞ்சே உத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய் *
வெள்ளத்தினுள்ளானும் வேங்கடத்துமேயானும் *
உள்ளத்தினுள்ளானென்றோர். (கூகூ)

‡‡ ஓரடியும்சாடுதைத்த வொண்மலர்சேவடியும் *
ஈரடியுங்காணலாமென்னெஞ்சே *—ஓரடியில்
தாயவனைக்கேசவனைத் தண்டுழாய்மாலைசேர் *
மாயவனையே மனத்துவை. (க00)

தனியன்கம்.—வையம் வாய் நின்று புரி குன்று எளிது உலகு நன்று ஆல் ஊன் அன்பு.

பொய்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



முதற்றிருவந்தாதி ஸம்பூர்ணம்.

பாட்டு - க00.

---

‡ "மறையவர்க்கு" என்று பாடாந்தரம் : மறையவர் - பீஷ்மாதிகள் ; மறையவன் - மார்க்கண்டேயன்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# பூதத்தாழ்வார் வைபவம்.

𑌤𑍁𑌲𑌾𑌧𑌨𑌿𑌷𑍍𑌠𑌾𑌸𑌂𑌭𑍂𑌤𑌂 𑌭𑍂𑌤𑌂 𑌕𑌲𑍍𑌲𑍋𑌲𑌮𑌾𑌲𑌿𑌨𑌃 ‖
𑌤𑍀𑌰𑍇 𑌫𑍁𑌲𑍍𑌲𑍋𑌤𑍍𑌪𑌲𑍇 𑌮𑌲𑍍𑌲𑌾𑌪𑍁𑌰𑍍𑌯𑌾𑌮𑍀𑌡𑍇 𑌗𑌦𑌾𑌂𑌶𑌕𑌂 ‖

துலாதநிஷ்ட்டாஸம்பூதம் பூதம்கல்லோலமாலிநஃ-
தீரேபுல்லோத்பலோமல்லா புர்யாமீடேகதாம்ஶகம்.



இவ்வாழ்வார், திருக்கடல்மல்லையில் குருக்கத்திமலரில், த்வாபரயுகம்-௮௬௨௬0௧-வதான சித்தார்த்தி௵ ஐப்பசிமீ சுக்லபக்ஷம் நவமி புதன்கிழமை கூடின அவிட்டநக்ஷத்ரத்தில், ஸ்ரீகதாம்ஶராய், அயோநிஜராய்த் திருவவதரித்தருளினர்.

*இவர் அருளிச்செய்த ப்ரபந்தம் - இரண்டாந்திருவந்தாதி.*

* * * * * * *

---

அன்பேதகளிநூறுமருளினன்வாழியே
ஐப்பசியிலவிட்டத்திலவதரித்தான்வாழியே
நன்புகழ்சேர்குருக்கத்திநாண்மலரோன்வாழியே
நல்லதிருக்கடன்மல்லைநாதனர்வாழியே
இன்புருகுசிந்தைதிரியிட்டபிரான்வாழியே
எழில்ஞானச்சுடர்விளக்கையேற்றினன்வாழியே
பொன்புரையுந்திருவரங்கர்புகழுரைத்தான்வாழியே
பூதத்தார்தாளிணைகளிப்பூதலத்தில்வாழியே.

*பூதத்தாழ்வார் திருவடிகளேசரணம்.*



---

* இவ்வாழ்வார் வைபவத்தைப் பொய்கையாழ்வார் வைபவத்தில் கண்டுகொள்வது.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பூதத்தாழ்வாரருளிச்செய்த

# இரண்டாந் திருவந்தாதி.



## தனியன்.

நேரிசை-வெண்பா.

திருக்குருகைப்பிரான்பிள்ளா னருளிச்செய்தது.

என்பிறவிதீரவிறைஞ்சினேனின்னமுதா *
அன்பேதகளியளித்தானை *—நன்புகழ்சேர்
சீதத்தார்முத்துக்கள்சேரும் * கடல்மல்லைப்
பூதத்தார்பொன்னங்கழல்.

பைரவிராகம்-திரிபுடைதாளம்.

அன்பேதகளியா ஆர்வமேநெய்யாக *
இன்புருகுசிந்தையிடுதிரியா *—நன்புருகி
ஞானச்சுடர்விளக்கேற்றினேன்நாரணற்கு *
ஞானத்தமிழ்புரிந்தநான். (க)

ஞானத்தால்நன்குணர்ந்து நாரணன்றன்நாமங்கள் *
தானத்தால்மற்றவன்பேர்சாற்றினால் *—வானத்
தணியமர ராக்குவிக்கு மஃதன்றே * நங்கள்
பணியமரர்கோமான்பரிசு. (உ)

பரிசுநறுமலரால்பாற்கடலான்பாதம் *
புரிவார்புகப்பெறுவர்போலாம் *—புரிவார்கள்
தொல்லமரர்கேள்வித் துலங்கொளிசேர்தோற்றத்து *
நல்லமரர்கோமான்நகர். (ங)

நகரிழைத்துநித்திலத்து நாண்மலர்கொண்டு - * ஆங்கே
திகழுமணி வயிரஞ்சேர்த்து *—நிகரில்லாப்
பைங்கமலமேந்திப் பணிந்தேன், பனிமலராள் *
அங்கம்வலங்கொண்டானடி. (ச)

அடிமூன்றிலிவ்வுலக மன்றளந்தாய்போலும் *
அடிமூன்றிரந்தவனிகொண்டாய் *—படிநின்ற
நீரோதமேனி நெடுமாலே * நின்னடியை
யாரோதவல்லாரறிந்து. (ரு)

அறிந்தைந்துமுள்ளடக்கி யாய்மலர்கொண்டு - * ஆர்வம்
செறிந்தமனத்தராய்ச்செவ்வே *—அறிந்தவன்றன்
பேரோதியேத்தும் பெருந்தவத்தோர்காண்பரே *
காரோதவண்ணன்கழல். (சா)

கழலெடுத்துவாய்மடித்துக் கண்சுழன்று * மாற்றார்
அழலெடுத்த சிந்தையராயஞ்ச *—தழலெடுத்த
போராழியேந்தினான் பொன்மலர்ச்சேவடியே *
ஓராழிநெஞ்சேயுகந்து. (எ)

உகந்துன்னைவாங்கி யொளிநிறங்கொள்கொங்கை
அகங்குளிர வுண்ணென்றாளாவி *—உகந்து
முலையுண்பாய்போலே முனிந்துண்டாய் * நீயும்
அலைபண்பா லானமையாலன்று. (அ)

அன்றதுகண்டஞ்சாத ஆய்ச்சியுனக்கிரங்கி *
நின்றுமுலைதந்த விந்நீர்மைக்கு - *—அன்று
வரன்முறையால் நீயளந்தமாகடல்சூழ்ஞாலம் *
பெருமுறையாலெய்துமோபேர்த்து. (கூ)

பேர்த்தனைமாசகடம்பிள்ளையாய் * மண்ணிரந்து
காத்தனை பல்லுயிரும் காவலனே *—ஏத்திய
நாவுடையேன் பூவுடையேன் நின்னுள்ளிநின்றமையால் *
காவடியேன்பட்டகடை. (க0)

கடைநின்றமரர் கழல்தொழுது * நாளும்
இடைநின்றவின்பத்தராவர் *—புடைநின்ற
நீரோதமேனிநெடுமாலே * நின்னடியை
யாரோதவல்லாரவர். (கக)

அவரிவரென்றில்லை யரவணையான்பாதம் *
எவர்வணங்கி யேத்தாதாரெண்ணில் *—பவரும்
செழுங்கதிரோனொண்மலரோன் கண்ணுதலோனன்றே *
தொழுந்தகையார்நாளும்தொடர்ந்து. (கஉ)

தொடரெடுத்தமால்யானை சூழ்கயம்புக்கஞ்சி *
படரெடுத்தபைங்கமலம்கொண்டு - * அன்—றிரட்டுக்
ஆழியான்பாதம்பணிந்தன்றே * வானவர்கோன்
பாழிதா னெய்திற்றுப்பண்டு. (கங)

பண்டிப்பெரும்பதியையாக்கிப் பழிபாவம்
கொண்டு - * இங்குவாழ்வாரைக்கூறுதே *—எண்டிசையும்
பேர்த்தகரநான்குடையான் பேரோதிப்பேதைகாள் *
தீர்த்தகரராமின்திரிந்து. (கச)

திரிந்ததுவெஞ்சமத்துத் தேர்கடவி * அன்று
பிரிந்ததுசீதைதயமான்பின்போய் *—புரிந்ததுவும்
கண்பள்ளிகொள்ளவழகியதே * நாகத்தின்
தண்பள்ளிகொள்வான் றனக்கு. (கரு)

தனக்கடிமைபட்டது தானறியானேலும் *
மனத்தடைய வைப்பதாம்மாலை *—வனத்திடரை
ஏரியாம்வண்ண மியற்றுமிதுவல்லால் *
மாரியார்பெய்கிற்பார்மற்று. (கசு)

மற்றுரியலாவார் வானவர்கோன்மாமலரோன் *
சுற்றும்வணங்கும்தொழிலானை*—ஒற்றைப்
பிறையிருந்தசெஞ்சடையான் பின்சென்று * மாலைக்
குறையிரந்துதான்முடித்தான்கொண்டு. (கஎ)

கொண்டதுலகம் குறளுருவாய்க்கோளரியாய் *
ஒண்டிறலோன்மார்வத்துகிர்வைத்தது - *—உண்டதுவும்
தான்கடந்தவேழுலகே தாமரைக்கண்மாலொருநாள் *
வான்கடந்தான் செய்தவழக்கு. (கஅ)

வழக்கன்றுகண்டாய் வலிசகடம்செற்றாய் *
வழக்கென்றுநீமதிக்கவேண்டா *—குழக்கன்று
தீவிளவின்காய்க்கெறிந்த தீமைதிருமாலே *
பார்விளங்கச்செய்தாய்பழி. (ககூ)

பழிபாவம்கையகற்றிப் பல்காலும்நின்னை *
வழிவாழ்வார் வாழ்வராம்மாதோ ! *—வழுவின்றி
நாரணன்றன்நாமங்கள் நன்குணர்ந்துநன்கேத்தும் *
காரணங்கள்தாமுடையார்தாம். (உ0)

தாமுளரேதம்முள்ளமுள்ளுளதே * தாமரையின்
பூவுளதே யேத்தும்பொழுதுண்டே *—வாமன்
திருமருவு தாள்மருவுசென்னியரே * செவ்வே
அருநரகம்சேர்வதரிது. (உக)

அரியதெளிதாகும் ஆற்றலால்மாற்றி *
பெருகமுயல்வாரைப் பெற்றால் *—கரியதோர்
வெண்கோட்டுமால்யானை வென்றுமுடித்தன்றே *
$ தண்கோட்டுமாமலரால்தாழ்ந்து. (உஉ)

$ ,,தண்தோட்டு,, என்றுபாடாந்தரம்.

தாழ்ந்துவரங்கொண்டு தக்கவகைகளால் *
வாழ்ந்துகழிவாரை வாழ்விக்கும் *—தாழ்ந்த
விளங்கனிக்குக்கன்றெறிந்துவேற்றுருவாய் * ஞாலம்
அளந்தடிக்கீழ் கொண்டவவன். (உ௩)

அவன்கண்டாய்நன்னெஞ்சே யாரருளுங்கேடும் *
அவன்கண்டா யைம்புலனாய்நின்றான் *—அவன்கண்டாய்
காற்றுத்தீநீர்வான் கருவரைமண் * காரோத
சீற்றத்தீயாவானுஞ்சென்று. (உ௪)

சென்றதிலங்கைமேல் செவ்வேதன்சீற்றத்தால் *
கொன்றதிராவணனைக்கூறுங்கால் *—நின்றதுவும்
வேயோங்குதண்சாரல்வேங்கடமே * விண்ணவர்தம்
வாயோங்குதொல்புகழான்வந்து. (உ௫)

வந்தித்தவனை வழிநின்றவைம்பூதம் *
ஐந்துமகத்தடக்கி யார்வமாய் *—உந்திப்
படியமரர்வேலையான் பண்டமரர்க்கீந்த *
படியமரர்வாழும்பதி. (உ௬)

பதியமைந்துநாடிப் பருத்தெழுந்தசிந்தை *
மதியுரிஞ்சி வான்முகட்டுநோக்கி *—கதிமிகுத்தங்
கோல்தேடியோடும் கொழுந்ததேபோன்றதே *
மால்தேடியோடும்மனம். (உ௭)

மனத்துள்ளான்வேங்கடத்தான் மாகடலான் * மற்றும்
நினைப்பரிய நீளரங்கத்துள்ளான் *—எனைப்பலரும்
தேவாதிதேவனெனப்படுவான் * முன்னொருநாள்
மாவாய்பிளந்தமகன். (உ௮)

மகனாகக்கொண்டெடுத்தாள் மாண்பாயகொங்கை *
அகனாரவுண்பனென்றுண்டு *—மகனைத்தாய்
தேறாதவண்ணம்திருத்தினாய் * தென்னிலங்கை
நீறாகவெய்தழித்தாய்நீ. (உ௯)

நீயன்றுலகளந்தாய் நீண்டதிருமாலே *
நீயன்றுலகிடந்தாயென்பரால் *—நீயன்று
காரோதம்முன்கடைந்து பின்னடைத்தாய்மாகடலை
பேரோதமேனிப்பிரான். (௩0)

பிரானென்றுநாளும் பெரும்புலரியென்றும் *
குராநல்செழும்போதுகொண்டு *—வராகத்
தணியுருவன் பாதம்பணியுமவர்கண்டீர் *
மணியுருவம் காண்பார்மகிழ்ந்து. (௩க)

மகிழ்ந்ததுசிந்தை திருமாலே * மற்றும்
மகிழ்ந்ததுன்பாதமேபோற்றி *—மகிழ்ந்த
தழலாழிசங்கமவைபாடியாடும் *
தொழிலாகம்சூழ்ந்து துணிந்து. (ரு௨)

துணிந்ததுசிந்தை துழாயலங்கல் * அங்கம்
அணிந்தவன்பேருள்ளத்துப்பல்கால் *—பணிந்ததுவும்
வேய்பிறங்குசாரல் விறல்வேங்கடவனையே *
வாய்திறங்கள்சொல்லும்வகை. (ருரு)

வகையாலவனி யிரந்தளந்தாய்பாதம் *
புகையால்நறுமலரால்முன்னே *—மிகவாய்ந்த
அன்பாக்கியேத்தி யடிமைப்பட்டேனுனக்கு - *
என்பாக்கியத்தாலினி. (ருச)

இனிதென்பர்காமமதனிலுமாற்ற *
இனிதென்பர்தண்ணீருமெந்தாய் *—இனிதென்று
காமநீர்வேளாது நின்பெருமைவேட்பரேல் *
சேமநீராகும்சிறிது. (ருரு)

சிறியார்பெருமை சிறிதின்கணெய்தும் *
அறியாரும்தாமறியாராவர் *—அறியாமை
மண்கொண்டுமண்ணுண்டு மண்ணுமிழ்ந்தமாயனென்று - *
எண்கொண்டென்னெஞ்சேயிரு. (ருசு)

இருந்தண்கமலத் திருமலரினுள்ளே *
திருந்துதிசைமுகனைத்தந்தாய் *—பொருந்தியநின்
பாதங்களேத்திப் பணியாவேல் * பல்பிறப்பும்
ஏதங்களெல்லாமெமக்கு. (ருஎ)

எமக்கென்றிருநிதிய மேமாந்திராதே *
தமக்கென்றும்சார்வமறிந்து *—நமக்கென்றும்
மாதவனேயென்னும்மனம்படைத்து * மற்றவன்பேர்
ஓதுவதே நாவினாலோத்து. (ருஅ)

ஓத்தின்பொருள்முடிவுமித்தனையே * உத்தமன்பேர்
ஏத்தும்திறமறிமினேழைகாள் *—ஓத்ததனை
வல்லீரேல் நன்றதனைமாட்டீரேல் * மாதவன்பேர்
சொல்லுவதேயோத்தின்சுருக்கு. (ருகூ)

சுருக்காகவாங்கிச் சுலாவிநின்று - * ஐயார்
நெருக்காமுன்நீர்நினைமின்கண்டீர் *—திருப்பொலிந்த
ஆகத்தான் பாதமறிந்தும் * அறியாத
போகத்தாலில்லைபொருள். (சo)

பொருளாலமருலகம் புக்கியலலாகாது - *
அருளாலறமருளுமன்றே *—அருளாலே
$ மாமறையோர்க்கீந்தமணிவண்ணன்பாதமே
நீமறவேல்நெஞ்சேநினை. (சக)

நினைப்பன்திருமாலை நீண்டதோள்காண *
நினைப்பார் ‡ பிறப்பொன்றும்நேரார் *—மனைப்பால்
பிறந்தார்பிறந்தெய்தும் பேரின்பமெல்லாம்
துறந்தார்தொழுதாரத்தோள். (சஉ)

தோளிரண்டெட்டேழும் மூன்றுமுடியனைத்தும் *
தாளிரண்டும்வீழச் சரந்துரந்தான்—தாளிரண்டும்
ஆர்தொழுவார்பாத மவைதொழுவதன்றே * என்
சீர்கெழுதோள் செய்யும்சிறப்பு. (சஙு)

சிறந்தார்க்கெழுதுணையாம் செங்கண்மால்நாமம் *
மறந்தாரைமானிடமா வையேன் *—அறம்தாங்கும்
மாதவனேயென்னும் மனம்படைத்து * மற்றவன்பேர்
ஓதுவதே நாவினுலுள்ளு. (சச)

உளதென்திருமாவா ருண்டில்லையென்று *
தளர்தலதனருகும்சாரார் *—அளவரிய
வேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும் *
பாதத்தான் பாதம்பயின்று. (சரு)

பயின்றதரங்கம் திருக்கோட்டி * பன்னாள்
பயின்றதுவும்வேங்கடமேபன்னாள் *—பயின்ற
தணிதிகழும்சோலை யணிநீர்மலையே *
மணிதிகழும்வண்தடக்கைமால். (சசு)

மாலையரியுருவன் பாதமலரணிந்து *
காலைதொழுதெழுமின் கைகோலி *—ஞாலம்
அளந்திடந் துண்டுமிழ்ந்தவண்ணலைமற்றல்லால் *
உளங்கிடந்தவாற்றலுணர்ந்து. (சஎ)

உணர்ந்தாய்மறைநான்கு மோதினாய்நீதி *
மணந்தாய் மலர்மகள்தோள்மாலே *—மணந்தாய்போய்
வேயிருஞ்சாரல் வியலிருஞாலம்சூழ் *
மாயிருஞ்சோலைமலை. (சஅ)

மலையேழும் மாநிலங்களேழுமதிர *
குலைசூழ்குரைகடல்களேழும் *—முலைசூழ்ந்த
நஞ்சுரத்துப்பெண்ணை நவின்றுண்டநாவனென்று - *
அஞ்சாதென்னெஞ்சேயழை. (சகூ)

$ "மறையோன்,, என்றும், ‡ "பிறப்பென்றும்,, என்றும் பாடாந்தரம்.

அழைப்பன்திருமாலை யாங்கவர்கள்சொன்ன *
பிழைப்பில்பெரும்பெயரேபேசி *—இழைப்பரிய
வாயவனேயாதவனே யென்றவனையார்முகப்பும் *
மாயவனேயென்றுமதித்து. (ரு0)

மதிக்கண்டாய்நெஞ்சே மணிவண்ணன்பாதம் *
மதிக்கண்டாய்மற்றவன்பேர்தன்னை *—மதிக்கண்டாய்
பேராழிநின்று பெயர்ந்துகடல்கடைந்த *
நீராழிவண்ணன்நிறம். (ருக)

நிறங்கரியன்செய்ய நெடுமலராள்மார்வன் *
அறம்பெரிய னாரதறிவார்—மறம்புரிந்த
வாளரக்கன்போல்வானை வானவர்கோன்தானத்து *
நீளிருக்கைக் குய்த்தான்நெறி. (ருஉ)

நெறியார்குழல்கற்றை முன்னின்றுபின்தாழ்ந்து -*
அறியாதிளங்கிரியென்றெண்ணி *—பிரியாது
பூங்கொடிக்கள்வைகும் பொருபுனல்குன்றென்னும்*
வேங்கடமேயாம்விரும்பும்வெற்பு. (ருங)

வெற்பென்றிருஞ்சோலை வேங்கடமென்றிவ்விரண்டும் *
நிற்பென்றுநீமதிக்கும் நீர்மைபோல் *—நிற்பென்
றுளங்கோயி லுள்ளம்வைத்துள்ளினேன் * வெள்ளத்
திளங்கோயில்கைவிடேலென்று. (ருச)

என்றுமறந்தறியே னேழ்பிறப்புமெப்பொழுதும் *
நின்றுநினைப்பொழியா நீர்மைபால் *—வென்றி
அடலாழிகொண்டவறிவனே * இன்பக்
கடலாழிநீயருளிக்காண். (ருரு)

காணக்கழிகாதல் கைமிக்குக்காட்டினால் *
நாணப்படுமென்றால்நாணுமே—* பேணிக்
கருமாலைபொன்மேனிகாட்டாமுன்காட்டும் *
திருமாலைநங்கள்திரு. (ருசு)

திருமங்கைநின்றருளும் தெய்வம்நாவாழ்த்தும் *
கருமம்கடைப்படுமின்கண்டீர் *—உரிமையால்
ஏத்தினோம்பாத மிருந்தடக்கையெந்தைபேர் *
நாற்றிசையும் கேட்டீரேநாம். (ருஎ)

நாம்பெற்றநன்மையும் நாமங்கைநன்னெஞ்சத்து -*
ஓம்பியிருந்தெம்மையோதுவித்து *—வேம்பின்
பொருள்நீர்மையாயினும் பொன்னாழிபாடென்று -*
அருள்நீர்மைதந்தவருள். (ருஅ)

அருள்புரிந்தசிந்தை யடியார்மேல்வைத்து *
பொருள்தெரிந்துகாண்குற்றவப்போது - *—இருள்திரிந்து
நோக்கினேன்நோக்கி நினைந்தேனதொண்கமலம் *
ஓக்கினேனென்னையுமங்கோர்ந்து. (ருகூ)

ஒருருவனல்லை யொளியுருவம்நின்னுருவம் *
ஈருருவனென்ப ரிருநிலத்தோர் *—ஒருருவம்
ஆதியாம்வண்ணமறிந்தாரவர்கண்டீர் *
நீதியால்மண்காப்பார்நின்று. (சூ0)

நின்றதோர்பாதம்நிலம்புதைப்ப * நீண்டதோள்
சென்றளந்ததென்பர் திசையெல்லாம் *—அன்று
கருமாணியாயிரந்தகள்வனே உன்னைப்
பிரமாணித்தார்பெற்றபேறு. (சூக)

பேறொன்றுமுன்னறியேன் பெற்றறியேன்பேதமையால் *
மாறென்றுசொல்லிவணங்கினேன் *—ஏறின்
பெருத்தெருத்தம்கோடொசியப் பெண்நசையின்பின்போய் *
எருத்திறுத்தநல்லாயரேறு. (சூஉ)

ஏறேழும்வென் றடர்த்தவெந்தை * எரியுருவத்
தேறேறிபட்டவிடுசாபம் *—¶ பாறேறி
யுண்ட தலைவாய்நிறையக் கோட்டங்கையொண்குருதி *
கண்டபொருள்சொல்லில்கதை. (சூங)

கதையும்பெரும்பொருளும் கண்ணாநின்பேரே
இதையமிருந்தவையேயேத்தில் *—கதையும்
திருமொழியாய் நின்றதிருமாலே * உன்னைப்
பருமொழியால்காணப்பணி. (சூச)

பணிந்தேன்திருமேனி பைங்கமலம்கையால் *
அணிந்தேனுன்சேவடிமேலன்பாய் *—துணிந்தேன்
புரிந்தேத்தியுன்னைப்புகலிடம்பார்த்து - * ஆங்கே
இருந்தேத்திவாழுமிது. (சூரு)

இதுகண்டாய்நன்னெஞ்சே யிப்பிறவியாவது *
இதுகண்டாயெல்லாம்நாமுற்றது - *—இதுகண்டாய்
நாரணன்பேரோதி நரகத்தருகணையா *
காரணமும்வல்லையேல்காண். (சூசூ)

கண்டேன்திருமேனி யான்கனவில் * ஆங்கவன்கைக்
கண்டேன் கனவிலும்சுடராழி—கண்டேன் *
உறுநோய்வினையிரண்டு மோட்டுவித்து * பின்னும்
மறுநோய்செறுவான்வலி. (சூஎ)

¶ பாறு - கழுகு.

வலிமிக்கவாளெயிற்று வாளவுணர்மாள *
வலிமிக்கவாள்வரைமத்தாக *—வலிமிக்க
வாணுகம்சுற்றி மறுகக்கடல்கடைந்தான் *
கோணுகம்கொம்பொசித்தகோ. (சுஅ)

கோவாகிமாநிலம்காத்து * நங்கண்முகப்பே
மாவேகிச்செல்கின்றமன்னவரும் *—¶ பூமேவும்
செங்கமலநாவியான் சேவடிக்கேயேழ்பிறப்பும் *
தண்கமலமேய்ந்தார்தமர். (சுகூ)

தமருள்ளம்தஞ்சை தலையரங்கம்தண்கால் *
தமருள்ளும்தண்பொருப்புவேலை *—தமருள்ளும்
மாமல்லைகோவல் மதிள்குடந்தையென்பரே *
ஏவல்லவெந்தைக்கிடம். (எ0)

இடங்கைவலம்புரிநின்றார்ப்ப * எரிகான்
றடங்கா ரொடுங்குவித்ததாழி *—விடம்காலும்
தீவாயரவணைமேல்தோன்றல் திசையளப்பான் *
பூவாரடிநிமிர்த்தபோது. (எக)

போதரிந்துவானரங்கள் பூஞ்சுனைபுக்கு - * ஆங்கலர்ந்த
போதரிந்துகொண்டேத்தும்போது - * உள்ளம்—போது
மணிவேங்கடவன்மலரடிக்கேசெல்ல *
அணிவேங்கடவன்பேராய்ந்து. (எஉ)

ஆய்ந்துரைப்பனாயிரம்பே ராதிநடுவந்திவாய் *
வாய்ந்தமலர் தூவிவைகலும் *—ஏய்ந்த
பிறைக்கோட்டுச்செங்கண்கரிவிடுத்தபெம்மான் *
இறைக்காட்படத்துணிந்தயான். (எங)

யானேதவம்செய்தேனேழ்பிறப்புமெப்பொழுதும் *
யானேதவமுடையேனெம்பெருமான் *—யானே
இருந்தமிழ்நன்மாலை யிணையடிக்கேசொன்னேன் *
பெருந்தமிழனல்லேன்பெரிது. (எச)

பெருகுமதவேழம் மாப்பிடிக்குமுன்னின்று - *
இருகணிளமூங்கில்வாங்கி *—அருகிருந்த
தேன்கலந்துநீட்டும் திருவேங்கடம்கண்டீர் *
வான்கலந்தவண்ணன்வரை. (எரு)

வரைச்சந்தனக்குழம்பும் வான்கலனும்பட்டும் *
விரைப்பொலிந்தவெண்மல்லிகையும்—நிரைத்துக்கொண்டு -*
ஆதிக்கண்நின்றவறிவனடியிணையே *
ஓதிப்பணிவதுறும். (எசு)

¶ "பூவேகும்,, என்று பாடாந்தரம்.

உறுங்கண்டாய்நன்னெஞ்சே யுத்தமன்நற்பாதம் *
உறுங்கண்டாயொண்கமலந்தன்னால்—* உறுங்கண்டாய்
ஏத்திப்பணிந்தவன்பேரீரைஞ்ஞூறெப்பொழுதும் *
சாற்றியுரைத்தல்தவம். (எஎ)

தவம்செய்துநான்முகனேபெற்றான் * தரணி
நிவர்ந்தளப்பநீட்டியபொற்பாதம் *—சிவந்ததன்
கையனைத்துமாரக்கழுவினான் * கங்கைநீர்
பெய்தனைத்துப்பேர்மொழிந்துபின். (எஅ)

பின்னின்றுதாயிரப்பக்கேளான் * பெரும்பணைத்தோள்
முன்னின்றுதானிரப்பாள்மொய்மலராள் *—சொல்நின்ற
தோள்நலத்தான்நேரில்லாத்தோன்றல் * அவனளந்த
நீணிலந்தானத்தனைக்கும்நேர். (எகூ)

நேர்ந்தேனடிமை நினைந்தேனதொண்கமலம் *
ஆர்ந்தேனுன்சேவடிமேலன்பாய் *—ஆர்ந்த
அடிக்கோலம்கண்டவர்க்கென்கொலோ * முன்னைப்
படிக்கோலம்கண்டபகல். (அ0)

பகல்கண்டேன் நாரணனைக்கண்டேன் * கனவில்
மிகக்கண்டேன் மீண்டவனைமெய்யே—மிகக்கண்டேன் *
ஊன்திகழுநேமி யொளிதிகழும்சேவடியான் *
வான்திகழும்சோதிவடிவு. (அக)

வடிக்கோலவாள்நெடுங்கண் மாமலராள் * செவ்விப்
படிக்கோலம்கண்டகலாள்பன்னாள் *—அடிக்கோலி
ஞாலத்தாள்பின்னும்நலம்புரிந்ததென்கொலோ *
கோலத்தாலில்லைகுறை. (அஉ)

குறையாகவெஞ்சொற்கள்கூறினேன்கூறி *
மறையாங்கெனவுரைத்தமாலை *—இறையேனும்
ஈயுங்கொலென்றேஇருந்தேனெனைப்பகலும் *
மாயன்கண்சென்றவரம். (அங)

வரம்கருதித்தன்னை வணங்காதவன்மை *
உரம்கருதி § மூர்க்கத்தவனை *—நரம்கலந்த
சிங்கமாய்க்கீண்ட திருவனடியிணையே *
அங்கண்மாஞாலத்தமுது. (அச)

அமுதென்றும்தேனென்று மாழியானென்றும் *
அமுதன்றுகொண்டுகந்தானென்றும் *—அமுதன்ன
சொன்மாலையேத்தித்தொழுதேன், சொலப்பட்ட *
நன்மாலையேத்திநவின்று. (அரு)

§ "மூக்கத்தவன்,, என்றும் பாடம் : மூக்கு - மேனாணிப்பு.

நவின்றுரைத்தநாவலர்கள் நாண்மலர்கொண்டு - * ஆங்கே
பயின்றதனால்பெற்றபயனென்கொல் *—பயின்றார்தம்
மெய்த்தவத்தால்காண்பரிய மேகமணிவண்ணனை * யான்
எத்தவத்தால்காண்பன்கொலின்று. (அசு)

இன்றாவறிகின்றேனல்லேன் * இருநிலத்தைச்
சென்றாங்களந்ததிருவடியை *—அன்று
கருக்கோட்டியுள்கிடந்து கைதொழுதேன்கண்டேன் *
திருக்கோட்டியெந்தைதிறம். (அஎ)

திறம்பிற்றினியறிந்தேன் தென்னரங்கத்தெந்தை *
திறம்பாவழிசென்றார்க்கல்லால் *—திறம்பாச்
செடிநரகைநீக்கித் தான்செல்வதன்முன் * வானோர்
கடிநகரவாசற்கதவு. (அஅ)

† கதவிக்கதஞ்சிறந்த கஞ்சனைமுன்காய்ந்து - *
‡ அதவிப்போர்யானையொசித்து * பதவியாய்ப்
பாணியால்நீரேற்றுப் பண்டொருகால்மாவலியை *
மாணியாய்க்கொண்டிலையேமண். (அகூ)

மண்ணுலகமாளேனே வானவர்க்கும்வானவனாய் *
விண்ணுலகம்தன்னகத்துமேவேனே *—நண்ணித்
திருமாலைச்செங்கணெடியானை * எங்கள்
பெருமானைக் கைதொழுதபின். (கூ0)

பின்னாலருநரகம் சேராமல்பேதுறுவீர் *
முன்னால்வணங்கமுயல்மினோ *—பன்னூல்
$ அளந்தானைக்கார்க்கடல்சூழ்ஞாலத்தை * எல்லாம்
அளந்தானவன்சேவடி. (கூக)

அடியால்முன்கஞ்சனைச்செற்று - * அமரரேத்தும்
படியான் கொடிமேல்புள்கொண்டான் *—நெடியான்றன்
நாமமேயேத்துமின்களேத்தினால் * தாம்வேண்டும்
காமமேகாட்டும்கடிது. (கூஉ)

கடிதுகொடுநரகம் பிற்காலும்செய்கை *
கொடிதென்றதுகூடாமுன்னம் *—வடிசங்கம்
கொண்டானைக் § கூந்தல்வாய்கீண்டானை * கொங்கைநஞ்
சுண்டானையேத்துமினோவுற்று. (கூங)

உற்றுவணங்கித்தொழுமின் * உலகேழும்
முற்றும்விழுங்கும்முகில்வண்ணன் *—பற்றிப்
பொருந்தாதான்மார்விடந்து பூம்பாடகத்துள்
இருந்தானை * ஏத்துமென்னெஞ்சு. (கூச)

† "கதவிக்கதம்சிறந்து" என்று பாடாந்தரம். ‡ அதவி-அடர்த்து.
$ "அளந்தானிக்கார்க்கடல்" என்று உரை. § கூந்தல்-கேசி.

என்னெஞ்சமேயா னென்சென்னியான் * தானவனை
வன்னெஞ்சங்கீண்டமணிவண்ணன் *—முன்னம்சே
யூழியானூழிபெயர்த்தான் * உலகேத்தும்
ஆழியானத்தியூரான். (கூரு)

அத்தியூரான்புள்ளையூர்வான் * அணிமணியின்
துத்திசேர்நாகத்தின்மேல்துயில்வான் *— ‡ முத்தி
மறையாவான் மாகடல்நஞ்சுண்டான்றனக்கும் *
இறையாவானெங்கள் பிரான். (கூசா)

எங்கள்பெருமா னிமையோர்தலைமகன்நீ *
செங்கணெடுமால்திருமார்பா *—பொங்கு
படமூக்கிலாயிரவாய்ப்பாம்பணைமேல்சேர்ந்தாய் *
குடமூக்கில்கோயிலாக்கொண்டு. (கூஎ)

கொண்டுவளர்க்கக் குழவியாய்த்தான்வளர்ந்தது - *
உண்டதுலகேழுமுள்ளொடுங்க *—கொண்டு
குடமாடிக்கோவலனாய்மேவி * என்னெஞ்சம்
இடமாகக்கொண்டவிறை. (கூஅ)

சாற்றுப்பாட்டுக்கள்.

‡‡ இறையெம்பெருமானருளென்று - * இமையோர்
முறைநின்றுமொய்மலர்கள்தூவ *—அறைகழல
சேவடியான்செங்கணெடியான் * குறளுருவாய்
மாவடிவில்மண்கொண்டான் மால். (கூகூ)

‡‡ மாலேநெடியோனே கண்ணனே * விண்ணவர்க்கு
மேலாவியன்துழாய்க்கண்ணியனே *—மேலாய்
விளவின்காய்கன்றினால்வீழ்த்தவனே * என்றன்
அளவன்றால்யானுடையவன்பு. (க00)

தசகம்—அன்பு கடை தாம் பிரான் பொருள் மதி நின்றது
இடங்கை பகல் பின்னால் திரு.

பூதத்தாழ்வார் திருவடிகளேசரணம்.



இரண்டாந்திருவந்தாதி ஸம்பூர்ணம்.

ஆ பாட்டு - க00.

‡ "முத்திமறையாவான்" என்று பாடாந்தரம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# பேயாழ்வார் வைபவம்.

𑌤𑍁𑌲𑌾𑌶𑌤𑌭𑌿𑌷𑌗𑍍𑌜𑌾𑌤𑌂 𑌮𑌯𑍂𑌰𑌪𑍁𑌰𑌿𑌕𑍈𑌰𑌵𑌾𑌤𑍍 ।
𑌮𑌹𑌾𑌨𑍍𑌤𑌂 𑌮𑌹𑌦𑌾𑌖𑍍𑌯𑌾𑌤𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌶𑍍𑌰𑍀𑌨𑌨𑍍𑌦𑌕𑌾𑌂𑌶𑌕𑌮𑍍 ॥

துலாஶதபிஷக்ஜாதம் மயூரபுரிகைரவாத்-
மஹாந்தம்மஹதாக்யாதம் வந்தேஸ்ரீநந்தகாம்ஶகம்.

---

இவ்வாழ்வார், திருமயிலையில் கேசவப்பெருமாள் ஸந்நிதிக்கு அடுத்ததிருக்கிணற்றில், செவ்வல்லிமலரில், த்வாபரயுகம்-௮௬௨௯௦௧வதான சித்தார்த்தி௵ ஐப்பசிமீ சுக்லபக்ஷம் தசமி வியாழக்கிழமை கூடின சதயநக்ஷத்ரத்தில், ஸ்ரீநந்தகாம்ஶராய், அயோநிஜராய்த் திருவவதரித்தருளினார்.

உலகியற்கையில் கண்வையாமல், பகவத்குணாநுபவத்தில் பேயரைப் போல் திரிந்தமையால், இவர்க்கு **பேயாழ்வார்** என்று திருநாமமாயிற்று.

இவர் அருளிச்செய்த ப்ரபந்தம்-மூன்றாந்திருவந்தாதி.

*　*　*　*　*　*

திருக்கண்டேனெனுநூறும் செப்பினான்வாழியே
சிறந்தவைப்பசியிற்சதயம் செனித்தவள்ளல்வாழியே
மருக்கமழும்மயிலைநகர் வாழவந்தோன்வாழியே
மலர்க்கரியநெய்தல்தனில்வந்துதித்தான்வாழியே
நெருக்கிடவேயிடைகழியில் நின்றசெல்வன்வாழியே
நேமிசங்கன்வடிவழகை நெஞ்சில்வைப்போன்வாழியே
பெருக்கமுடன்திருமழிசைப் பிரான்தொழுவோன்வாழியே
பேயாழ்வார்தாளிணை யிப்பெருநிலத்தில்வாழியே.

பேயாழ்வார் திருவடிகளேசரணம்.

---

* இவ்வாழ்வார் வைபவத்தைப் பொய்கையாழ்வார் வைபவத்தில் கண்டுகொள்வது.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

பேயாழ்வாரருளிச்செய்த

# மூன்றாந் திருவந்தாதி.

## தனியன்கள்.

நேரிசை-வெண்பா.

குருகைகாவலப்பனருளிச்செய்தது.

சீராரும்மாடத்திருக்கோவலூரதனுள் *
காரார்கருமுகிலைக்காணப்புக்கு - *—ஓரத்
திருக்கண்டேனென்றுரைத்தசீரான்கழலே *
உரைக்கண்டாய்நெஞ்சேயுகந்து.

---

மோஹநராகம் - திரிபுடைதாளம்.

⁂ திருக்கண்டேன் பொன்மேனிகண்டேன் * திகழும்
அருக்கனணிநிறமுங்கண்டேன் *—செருக்கிளரும்
பொன்னாழிகண்டேன் புரிசங்கங்கைக்கண்டேன் *
என்னாழிவண்ணன்பாலின்று. (க)

இன்றேகழல்கண்டே னேழ்பிறப்புமயானறுத்தேன் *
பொன்றோய்வரைமார்வில்பூந்துழாய் *—அன்று
திருக்கண்டுகொண்ட திருமாலே * உன்னை
மருக்கண்டுகொண்டென்மனம். (உ)

மனத்துள்ளான் மாகடல்நீருள்ளான் * மலராள்
தனத்துள்ளான் தண்டுழாய்மார்வன் *—சினத்துச்
செருநருகச்செற்றுகந்த தேங்கோதவண்ணன் *
வருநரகம்தீர்க்கும்மருந்து. (ங)

மருந்தும்பொருளு மமுதமும்தானே *
திருந்தியசெங்கண்மாலாங்கே *—பொருந்திய
நின்றுலகமுண்டுமிழ்ந்து நீரேற்றுமூவடியால் *
அன்றுலகம்தாயோனடி. (ச)

அடிவண்ணம்தாமரை யன்றுலகம்தாயோன் *
படிவண்ணம்பாற்கடல்நீர்வண்ணம் *—முடிவண்ணம்
ஓராழிவெய்யோ னொளியுமஃதன்றே *
ஆராழிகொண்டாற்கழகு. (ரு)

அழகன்றேயாழியாற் காழிநீர்வண்ணம் *
அழகன்றேயண்டம்கடத்தல் *—அழகன்றே
அங்கைநீரேற்றூர்க் கலர்மேலோன்கால்கழுவ *
கங்கைநீர்கான்றகழல். (சு)

கழல்தொழுதும்வாநெஞ்சே கார்க்கடல்நீர்வேலை *
பொழிலளந்தபுள்ளூர்திச்செல்வன் *—எழிலளந்தங்
கெண்ணற்கரியானை யெப்பொருட்கும்சேயானை *
நண்ணற்கரியானைநாம். (எ)

நாமம்பலசொல்லி நாராயணாவென்று *
நாமங்கைபால்தொழுதும் நன்னெஞ்சே—வா * மருவி
மண்ணுலகமுண்டுமிழ்ந்த வண்டறையும்தண்டுழாய் *
கண்ணனையேகாண்க நங்கண். (அ)

கண்ணுங்கமலம் கமலமேகைத்தலமும் *
மண்ணளந்தபாதமும்மற்றவையே *—எண்ணில்
கருமாமுகில்வண்ணன் கார்க்கடல்நீர்வண்ணன் *
திருமாமணிவண்ணன்தேசு. (கூ)

தேசும்திறலும்திருவுமுருவமும் *
மாசில்குடிப்பிறப்பும் மற்றவையும்—பேசில் *
வலம்புரிந்தவான்சங்கம் கொண்டான்பேரோத *
நலம்புரிந்துசென்றடையும்நன்கு. (க0)

நன்கோது நால்வேதத்துள்ளான் * நறவிரியும்
பொங்கோ தருவிப்புனல்வண்ணன் *—சங்கோதப்
பாற்கடலான் பாம்பணையின்மேலான் * பயின்றுரைப்பான்
நூற்கடலான் நுண்ணறிவினான். (கக)

அறிவென்னும்தாள்கொளுவி ஐம்புலனும்தம்மில் *
செறிவென்னும்திண்கதவம்செம்மி *—மறையென்னும்
நன்கோதி நன்குணர்வார்காண்பரே * நாடோறும்
பைங்கோதவண்ணன்படி. (கஉ)

படிவட்டத்தாமரை பண்டுலகம்நீரேற்று *
அடிவட்டத்தாலளப்ப நீண்ட—முடிவட்டம் *
ஆகாயமூடறுத் தண்டம்போய்நீண்டதே *
மாகாயமாய்நின்றமாற்கு. (க௩)

பாற்பால்மனம்சுழிப்ப மங்கையர்தோள்கைவிட்டு *
நூற்பால்மனம்வைக்கநொய்விதாம் *—நாற்பால
வேதத்தான்வேங்கடத்தான் விண்ணோர்முடிதோயும் *
பாதத்தான்பாதம்பணிந்து. (கச)

பணிந்துயர்ந்தபௌவப் படுதிரைகள்மோத *
பணிந்தபணமணிகளாலே—அணிந்து - * அங்
கனந்தனணைக் கிடக்குமம்மான் * அடியேன்
மனந்தனணைக்கிடக்கும்வந்து. (௧௫)

❀ வந்துதைத்தவெண்டிரைகள் செம்பவளவெண்முத்தம் *
அந்திவிளக்குமணிவிளக்காம் *—எந்தை
ஒருவல்லித்தாமரையா ளொன்றியசீர்மார்வன் *
திருவல்லிக்கேணியான்சென்று. (௧௬)

சென்றநாள்செல்லாத செங்கண்மாலெங்கள்மால் *
என்றநாளெந்நாளும்நாளாகும் *—என்றும்
இறவாதவெந்தை யிணையடிக்கேயாளாய் *
மறவாதுவாழ்த்துகவென்வாய். (௧௭)

வாய்மொழிந்துவாமநனாய் மாவலிபால் * மூவடிமண்
நீயளந்துகொண்டநெடுமாலே *—தாவியநின்
எஞ்சாவிணையடிக்கே யேழ்பிறப்புமாளாகி *
அஞ்சாதிருக்கவருள். (௧௮)

அருளாதொழியுமே யாலிலைமேல் * அன்று
தெருளாதபிள்ளையாய்ச்சேர்ந்தான் *—இருளாத
சிந்தையராய்ச்சேவடிக்கே செம்மலர்தூய்க்கைதொழுது *
முந்தையராய்நிற்பார்க்குமுன். (௧௯)

முன்னுலக முண்டுமிழ்ந்தாய்க்கு - * அவ்வுலகமீரடியால்
பின்னளந்துகோடல்பெரிதொன்றே? *—என்னே!
திருமாலே செங்கணெடியானே * எங்கள்
பெருமானே நீயிதனைப்பேசு. (௨0)

பேசுவா ரெவ்வளவுபேசுவர் * அவ்வளவே
வாசமலர்த்துழாய்மாலையான் *—தேசுடைய
சக்கரத்தான் சங்கினான் சார்ங்கத்தான் * - பொங்கரவ
வக்கரனைக்கொன்றான்வடிவு. (௨௧)

வடிவார்முடிகோட்டி வானவர்கள் * நாளும்
கடியார்மலர்தூவிக் காணும்—படியானை *
செம்மையாலுள்ளுருகிச் செல்வனேநெஞ்சமே *
மெய்ம்மையேகாணவிரும்பு. (௨௨)

விரும்பிவிண்மண்ணளந்த அஞ்சிறையவண்டார்
சுரும்புதுளையில்சென்றாத *—அரும்பும்
புனந்துழாய்மாலையான் பொன்னங்கழற்கே *
மனம்துழாய் மாலாய்வரும். (௨௩)

வருங்காலிருநிலனும் மால்விசும்பும்காற்றும் *
நெருங்குதீ நீருருவுமானுன் *—பொருந்தும்
சுடராழியொன்றுடையான்சூழ்கழலே * நாளும்
தொடராழிநெஞ்சேதொழுது. (௨௪)

தொழுதால்பழுதுண்டே ? தூநீருலகம் *
முழுதுண்டுமொய்குழலாளாய்ச்சி *—விழுதுண்ட
வாயானை மால்விடையேழ்செற்றானை * வானவர்க்கும்
சேயானை நெஞ்சேசிறந்து. (௨௫)

சிறந்தவென்சிந்தையும் செங்கணரவும் *
நிறைந்தசீர்நீள்கச்சியுள்ளும் *—உறைந்ததுவும்
வேங்கடமும்வெஃகாவும் வேளுக்கைப்பாடியுமே *
தாம்கடவார் தண்டுழாயார். (௨௬)

ஆரேதுயருழந்தார் துன்புற்றாராண்டையார் *
காரேமலிந்தகருங்கடலை *—நேரே
கடைந்தானைக் காரணனை, நீரணைமேல் * பள்ளி
அடைந்தானை நாளுமடைந்து. (௨௭)

அடைந்ததரவணைமேல் ஐவர்க்காய் * அன்று
மிடைந்தது பாரதவெம்போர் *—உடைந்ததுவும்
ஆய்ச்சிபால்மத்துக்கே அம்மனே ! வாளெயிற்று *
பேய்ச்சிபாலுண்டபிரான். (௨௮)

பேய்ச்சிபாலுண்டபெருமானைப்பேர்ந்தெடுத்து - *
ஆச்சிமுலைகொடுத்தாளஞ்சாதே *—வாய்த்த
இருளார்திருமேனி யின்பவளச்செவ்வாய் *
தெருளாமொழியானைச்சேர்ந்து. (௨௯)

சேர்ந்ததிருமால் கடல்குடந்தைவேங்கடம் *
நேர்ந்தவென்சிந்தைநிறைவிசும்பும் *—வாய்ந்த
மறைபாடகமனந்தன் வண்டுழாய்க்கண்ணி *
இறைபாடியாயவிவை. (௩0)

இவையவன்கோயி லிரணியனதாகம் *
அவைசெய் தரியுருவமானுன் *—செவிதெரியா
நாகத்தான் நால்வேதத்துள்ளான் * நறவேற்றான்
பாகத்தான் பாற்கடலுள்ளான். (௩௧)

பாற்கடலும்வேங்கடமும் பாம்பும்பனிவிசும்பும் *
நூற்கடலும்நுண்ணூலதாமரைமேல் *—பாற்பட்
டிருந்தார்மனமு மிடமாகக்கொண்டான் *
குருந்தொசித்தகோபாலகன். (௩௨)

பாலகனா யாலிலைமேல்பைய * உலகெல்லாம்
மேலொருநா ளுண்டவனேமெய்ம்மையே *—மாலவனே
மந்தரத்தால் மாநீர்க்கடல்கடைந்து * வானமுதம்
அந்தரத்தார்க்கீந்தாய்நீயன்று. (௩௩)

அன்றிவ்வுலக மளந்தவசைவேகொல் *
நின்றிருந்துவேளுக்கைநீணகர்வாய் *—அன்று
கிடந்தானைக் கேடில்சீரானை * முன்கஞ்சைக்
கடந்தானை நெஞ்சமேகாண். (௩௪)

காண்காணென விரும்புங்கண்கள் * கதிரிலகு
பூண்டா ரகலத்தான்பொன்மேனி *—பாண்கட்
டொழில்பாடி வண்டறையுந்தொங்கலான் * செம்பொற்
கழல்பாடி யாம்தொழுதுங்கை. (௩௫)

கையகனலாழி கார்க்கடல்வாய்வெண்சங்கம் *
வெய்யகதைசார்ங்கம் வெஞ்சுடர்வாள் *—செய்ய
படைபரவைபாழி, பணிநீருலகம் *
அடியளந்தமாயரவற்கு. (௩௬)

அவற்கடிமைபட்டே னகத்தான்புறத்தான் *
உவர்க்குங்கருங்கடல்நீருள்ளான் *—துவர்க்கும்
பவள்வாய்ப்பூமகளும் பன்மணிப்பூணாரம் *
திகழுந்திருமார்வன்தான். (௩௭)

தானே தனக்குவமன் தன்னுருவேயெவ்வுருவும் *
தானே தவவுருவுந்தாரகையும் *—தானே
எரிசுடரும்மால்வரையு மெண்டிசையும் * அண்டத்
திருசுடருமாயவிறை (௩௮)

இறையாய்நிலனாகி யெண்டிசையுந்தானாய் *
மறையாய்மறைப்பொருளாய்வானாய் *—பிறைவாய்ந்த
வெள்ளத்தருவி விளங்கொலிநீர்வேங்கடத்தான் *
உள்ளத்தினுள்ளேயுளன். (௩௯)

உளன்கண்டாய்நன்னெஞ்சே உத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய் *
விண்ணொடுங்கக்கோடுயரும் வீங்கருவிவேங்கடத்தான் *
மண்ணொடுங்கத்தானளந்தமன். (௪0)

மன்னுமணிமுடிநீண் டண்டம்போயெண்டிசையும் *
துன்னுபொழிலனைத்துஞ்சூழ்கழலே *—மின்னை
உடையாகக்கொண் டன்றுலகளந்தான் * குன்றம்
குடையாகஆகாத்தகோ. (௪௧)

கோவலனுயாநிரைகள் மேய்த்துக்குழலூதி *
மாவலனுய்க்கீண்டமணிவண்ணன் *—மேவி
அரியுருவமாகி யிரணியனதாகம் *
தெரியுகிரால்கீண்டான்சினம். (௪௨)

சினமாமதகளிற்றின் திண்மருப்பைச்சாய்த்து *
புனமேயபூமியதனை *—தனமாகப்
பேரகலத்துள்ளொடுக்கும் பேராரமார்வனுர் *
ஓரகலத்துள்ள துலகு. (௪௩)

உலகமுமூழியு மாழியும் * ஒண்கேழ்
அலர்கதிரும்செந்தீயுமாவான் *—பலகதிர்கள்
பாரித்தபைம்பொன் முடியானடியிணைக்கே *
பூரித்தென்னெஞ்சேபுரி. (௪௪)

புரிந்துமதவேழம் மாப்பிடியோடூடி
திரிந்துசினத்தால்பொருது *—விரிந்தசீர்
வெண்கோட்டு முத்துதிர்க்கும்வேங்கடமே * மேலொருநாள்
மண்கோட்டுக்கொண்டான்மலை. (௪௫)

மலைமுகடுமேல்வைத்து வாசுகியைச்சுற்றி *
தலைமுகடுதானொருகைப்பற்றி *—அலைமுகட்
டண்டம்போய்நீர்தெறிப்ப அன்றுகடல்கடைந்தான் *
பிண்டமாய்நின்றபிரான். (௪௬)

நின்றபெருமானே நீரேற்று - * உலகெல்லாம்
சென்றபெருமானே செங்கண்ணு *—அன்று
துரகவாய்கீண்ட துழாய்முடியாய் * நங்கள்
நரகவாய்கீண்டாயும் நீ. (௪௭)

நீயன்றேநீரேற் றுலகமடியளந்தாய் *
நீயன்றேநின்றுநிரைமேய்த்தாய் *—நீயன்றே
மாவாயுரம்பிளந்து மாமருதினூடுபோய் *
தேவாசுரம்பொருதாய்செற்று. (௪௮)

செற்றதுவும்சேரா விரணியனை * சென்றேற்றுப்
பெற்றதுவும்மாநிலம் பின்னைக்காய் *—முற்றல்
மூரியேற்றின்முன்னின்று மொய்ம்பொழித்தாய் * மூரிச்
சுரியேறுசங்கினுய்சூழ்ந்து. (௪௯)

சூழ்ந்ததுழாயலங்கல் சோதிமணிமுடிமால் *
தாழ்ந்தவருவித்தடவரைவாய் *—ஆழ்ந்த
மணிநீர்ச்சுனைவளர்ந்த மாமுதலைகொன்றான் *
அணிநீலவண்ணத்தவன். (௫0)

அவனேயருவரையா லாநிரைகள்காத்தான் *
அவனேயணிமருதம்சாய்த்தான் *—அவனே
கலங்காப்பெருநகரம் காட்டுவான்கண்டீர் *
இலங்காபுரமெரித்தானெய்து. (௫௧)

எய்தான்மராமரமேழு மிராமனாய் *
எய்தானம்மான் § மரியஏந்திழைக்காய் *—எய்ததுவும்
தென்னிலங்கைக்கோன்வீழச் சென்றுகுறளுருவாய் *
முன்னிலம்கைக்கொண்டான்முயன்று. (௫௨)

முயன்றுதொழுநெஞ்சே மூரிநீர்வேலை *
இயன்றமரத்தாலிலையின்மேலான் *—பயின்றங்கோர்
மண்ணலங்கொள்வெள்ளத்து மாயக்குழவியாய் *
தண்ணலங்கல்மாலையான்தாள். (௫௩)

தாளால்சகடமுதைத்துப் பகடுந்தி *
கீளாமருதிடைபோய்க்கேழலாய் *—மீளாது
மண்ணகலம்கீண் டங்கோர்மாதுகந்தமார்வற்கு *
பெண்ணகலம்காதல்பெரிது. (௫௪)

பெரியவரைமார்வில் பேராரம்பூண்டு *
கரியமுகிலிடைமின்போல *—$ திரியுங்கால்
பாணொடுங்கவண்டறையும் பங்கயமே * மற்றவன்றன்
நீணெடுங்கண்காட்டும்நிறம். (௫௫)

நிறம்வெளிதுசெய்து பசிதுகரிதென்று - *
இன்றயுருவம்யாமறியோமெண்ணில் *—நிறைவுடைய
நாமங்கைதானும் நலம்புகழவல்லளே *
பூமங்கைகேள்வன்பொலிவு. (௫௬)

பொலிந்திருண்டகார்வானில் மின்னேபோல்தோன்றி *
மலிந்துதிருவிருந்தமார்வன் *— ¶ பொலிந்து
கருடன்மேல்கொண்ட கரியான்கழலே *
தெருடன்மேல்கண்டாய்தெளி. (௫௭)

தெளிந்தசிலாதலத்தின்மே லிருந்தமந்தி *
அளிந்தகடுவனையேநோக்கி *—விளங்கிய
வெண்மதியம்தாவென்னும்வேங்கடமே * மேலொருநாள்
மண்மதியில்கொண்டுகந்தான்வாழ்வு. (௫அ)

வாழும்வகையறிந்தேன் மைபோல்நெடுவரைவாய் *
தாழுமருவிபோல்தார்கிடப்ப *—சூழும்
திருமாமணிவண்ணன் செங்கண்மால் * எங்கள்
பெருமானடிசேரப் பெற்று. (௫௯)

§ "மறியை" என்று பாடாந்தரம். $ "தெரியுங்கால்" என்று பாடாந்தரம். ¶ "பொலிந்த" என்று பாடாந்தரம்.

பெற்றம்பிணைமருதம் பேய்முலைமாச்சகடம் *
முற்றக்காத்தூடுபோ யுண்டுதைத்து *—கற்றுக்
குணிலைவிளங்கனிக்குக்கொண்டெறிந்தான் * வெற்றிப்
பணிலம்வாய்வைத்துகந்தான்பண்டு. (சுO)

‡‡ பண்டெல்லாம்வேங்கடம் பாற்கடல்வைகுந்தம் *
கொண்டங்குறைவார்க்குக் கோயில்போல் *—வண்டு
வளங்கிளரும்நீள்சோலை வண்பூங்கடிகை *
இளங்குமரன்றன்விண்ணகர். (சுக)

விண்ணகரம்வெஃகா விரிதிரைநீர்வேங்கடம் *
மண்ணகரம்மாமாடவேளுக்கை *—மண்ணகத்த
தென்குடந்தைதேனார் திருவரங்கம்தென்கோட்டி *
தன்குடங்கைநீரேற்றான்தாழ்வு. (சுஉ)

தாழ்சடையும்நீண்முடியு மொண்மழுவும்சக்கரமும் *
சூழரவும்பொன்னாணும் தோன்றுமால் *—சூழும்
திரண்டருவிபாயும் திருமலைமேலெந்தைக்கு - *
இரண்டுருவுமொன்றாயிசைந்து. (சுங)

இசைந்தவரவமும் வெற்பும்கடலும் *
பசைந்தங்கமுது † படுப்ப *—அசைந்து
கடைந்தவருத்தமோ கச்சிவெஃகாவில் *
கிடந்திருந்துநின்றதுவுமங்கு. (சுச)

‡ அங்கற்கிடரின்றி யந்திப்பொழுதத்து *
மங்கவிரணியனதாகத்தை *—பொங்கி
அரியுருவமாய்ப்பிளந்த வம்மானவனே *
கரியுருவம்கொம்பொசித்தான்காய்ந்து. (சுரு)

காய்ந்திருளைமாற்றிக் கதிரிலகுமாமணிகள் *
ஏய்ந்தபணக்கதிர்மேல்வெவ்வுயிர்ப்ப *—வாய்ந்த
மதுகைடவரும் வயிறுருகிமாண்டார்
அதுகேடவர்க்கிறுதியாங்கு. (சுசு)

ஆங்குமலரும்குவியுமாலுந்திவாய் *
ஓங்குகமலத்தினொண்போது *—ஆங்கத்
திகிரிசுடரென்றும் வெண்சங்கம் * வானில்
பகருமதியென்றும்பார்த்து. (சுஎ)

பார்த்தகடுவன் சுனைநீர்நிழற்கண்டு *
பேர்த்தோர்கடுவனெனப்பேர்ந்து *—கார்த்த
களங்கனிக்குக் கைநீட்டும்வேங்கடமே * மேனாள்
விளங்கனிக்குக் கன்றெறிந்தான்வெற்பு. (சுஅ)

† "படைப்ப" என்றும் பாடம். ‡ "அங்கக்கு" என்று பாடாந்தரம்.

வெற்பென்று வேங்கடம்பாடும் * வியன்துழாய்க்
கற்பென்றுசூடும் கருங்குழல்மேல் *—மற்பொன்ற
நீண்டதோள்மால்கிடந்த நீள்கடல் நீராடுவான் *
பூண்டநாளெல்லாம்புகும். (௬௯)

புகுமதத்தால் வாய்பூசிக் கீழ்தாழ்ந்து - * அருவி
உகுமதத்தால் கால்கழுவிக்கையால் *—மிகுமதத்தேன்
விண்டமலர்கொண்டு விறல்வேங்கடவனையே *
கண்டுவணங்கும்களிறு. (௭0)

களிறுமுகில்குத்தக் கையெடுத்தோடி *
ஒளிறுமருப்பொசிகையாளி—பிளிறி
விழ * கொன்றுநின்றதிரும் வேங்கடமே * மேனாள்
குழக்கன்றுகொண்டெறிந்தான்குன்று. (௭௧)

குன்றொன்றினாய குறமகளிர்கோல்வளைக்கை *
சென்றுவிளையாடும் தீங்கழைபோய் *—வென்று
விளங்குமதிகோல்விடுக்கும் வேங்கடமே * மேலை
இளங்குமரர்கோமானிடம். (௭௨)

இடம்வலமேழ்பூண்ட விரவித்தேரோட்டி *
வடமுகவேங்கடத்துமன்னும் *—குடநயந்த
கூத்தனாய்நின்றான் குரைகழலேகூறுவதே *
நாத்தன்னாலுள்ளநலம். (௭௩)

நலமேவலிதுகொல் நஞ்சூட்டுவன்பேய் *
நிலமேபுரண்டுபோய்வீழ * சலமேதான்
வெங்கொங்கையுண்டானை மீட்டாய்ச்சியூட்டுவான் *
தன்கொங்கைவாய்வைத்தாள்சார்ந்து. (௭௪)

சார்ந்தகடுதேய்ப்பத் தடாவியகோட்டுச்சிவாய் *
ஊர்ந்தியங்கும் வெண்மதியினொண்முயலை *—சேர்ந்து
சினவேங்கைபார்க்கும் திருமலையே * ஆயன்
புனவேங்கைநாறும்பொருப்பு. (௭௫)

பொருப்பிடையேநின்றும் புனல்குளித்தும் * ஐந்து
நெருப்பிடையேநிற்கவும் நீர்வேண்டா *—விருப்புடைய
வெஃகாவேசேர்ந்தானை † மெய்ம்மலர்தூய்க்கைதொழுதால் *
அஃகாவேதீவினைகளாய்ந்து. (௭௬)

ஆய்ந்தவருமறையோன் நான்முகத்தோன் நன்குறங்கில் *
வாய்ந்தகுழவியாய்வாளரக்கன் *—ஏய்ந்த
முடிப்போது மூன்றேழென்றெண்ணினான் * ஆர்ந்த
அடிப்போதுநங்கட்கரண். (௭௭)

† "மென்மலர்" என்று பாடாந்தரம்.

அரணும்நமக்கென்று மாழிவலவன் *
முரனுள்வலம்சுழிந்தமொய்ம்பன் *—சரணுமேல்
ஏதுகதியே துநிலை யேதுபிறப்பென்னுதே *
ஓதுகதி † மாயனையேயோர்த்து. (எஅ)

ஓர்த்தமனத்தரா யைந்தடக்கியாராய்ந்து *
பேர்த்தால்பிறப்பேழும் பேர்க்கலாம் *—கார்த்த
விரையார்நறுந்துழாய் வீங்கோதமேனி *
நிரையாரமார்வனையேநின்று. (எகூ)

நின்றெதிராய நிரைமணித்தேர்வாணன்தோள் *
ஒன்றியவீரைஞ்ஞூறுடன் துணிய *—வென்றிலங்கும்
ஆர்படுவான் நேமியரவணையான் * சேவடிக்கே
நேர்படுவான் தான்முயலும்நெஞ்சு. (அ0)

நெஞ்சால் நினைப்பரியனேலும் * நிலைப்பெற்றென்
நெஞ்சமேபேசாய்நினைக்குங்கால் *—நெஞ்சத்துப்
பேராதுநிற்கும் பெருமானையென்கொலோ *
ஓராதுநிற்பதுணர்வு. (அக)

உணரிலுணர்வரிய னுள்ளம்புகுந்து *
புணரிலும் ‡ காண்பரியனுண்மை *—இணரணையக்
கொங்கணைந்துவண்டறையும் தண்டுழாய்க்கோமானை *
எங்கணைந்துகாண்டுமினி. (அ௨)

இனியவன்மாய னெனவுரைப்பரேலும் *
இனியவன்காண்பரியனேலும் *—இனியவன்
கள்ளத்தால்மண்கொண்டு விண்கடந்தபைங்கழலான் *
உள்ளத்தினுள்ளேயுளன். (அ௩)

உளனாய நான்மறையினுட்பொருளை * உள்ளத்
துளனாகத் தேர்ந்துணர்வரேலும் *—உளனாய
வண்டாமரைநெடுங்கண் மாயவனையாவரே *
கண்டாருகப்பர்கவி. (அ௪)

கவியினார்கைபுனைந்து கண்ணார்கழல்போய் *
செவியினார்கேள்வியராய்ச்சேர்ந்தார் *—புவியினார்
போற்றியுரைக்கப் பொலியுமே * பின்னைக்கா
ஏற்றுயிரையட்டானெழில். (அரு)

$ எழில்கொண்டு மின்னுக்கொடியெடுத்து * வேகத்
தொழில்கொண்டுதான்முழங்கித்தோன்றும் *—எழில்கொண்ட
நீர்மேகமன்ன நெடுமால்நிறம்போல *
கார்வானம்காட்டும்கலந்து. (அசு)

---

† "மாதவனை" என்று பாடாந்தரம். ‡ "காண்பரியருண்மை" என்று பாடாந்தரம். $ "எழில்கொண்ட" என்று பாடாந்தரம்.

கலந்துமணியிமைக்குங்கண்ணா * நின்மேனி
மலர்ந்துமரதகமேகாட்டும் *—நலந்திகழும்
கொந்தின்வாய்வண்டறையும் தண்டுழாய்க்கோமானை *
அந்திவான்காட்டுமது. (அஎ)

அதுநன்றிதுதீதென் றையப்படாதே *
மதுநின்றதண்டுழாய் மார்வன் *—பொதுநின்ற
பொன்னங்கழலேதொழுமின் * முழுவினைகள்
முன்னங்கழலும்முடிந்து. (அஅ)

முடிந்தபொழுதில் குறவாணர் * ஏனம்
படிந்துழுசால் பைந்தினைகள்வித்த *—தடிந்தெழுந்த
வேய்ங்கழைபோய் விண்திறக்கும்வேங்கடமே * மேலொருநாள்
தீங்குழல்வாய்வைத்தான்சிலம்பு. (அகூ)

சிலம்புஞ்செறிகழலும் சென்றிசைப்ப * விண்ணா
றலம்பியசேவடிபோய் * அண்டம்—புலம்பியதோள்
எண்டிசையுஞ்சூழ விடம்போதாதென்கொலோ *
வண்டுழாய்மாலளந்தமண். (கூ0)

மண்ணுண்டுபேய்ச்சி முலையுண்டுமாற்றாதாய் *
வெண்ணெய்விழுங்கவெகுண்டு - * ஆய்ச்சி—கண்ணிக்
கயிற்றினாற்கட்டத் தான்கட்டுண்டிருந்தான் *
வயிற்றினோடாற்றாமகன். (கூக)

மகனொருவர்க்கல்லாத மாமேனிமாயன் *
மகனாமவன்மகன்றன்காதல்—மகனை *
சிறைசெய்தவாணன்தோள் செற்றான்கழலே *
நிறைசெய்தென்நெஞ்சேநினை. (கூ௨)

நினைத்துலகிலார்தெளிவார் நீண்டதிருமால் *
அனைத்துலகுமுள்ளொடுக்கி யால்மேல் *—கனைத்துலவு
வெள்ளத்தோர்பிள்ளையாய் மெள்ளத்துயின்றானை *
உள்ளத்தேவைநெஞ்சேயுய்த்து. (கூ௩)

உய்த்துணர்வென்னு மொளிகொள்விளக்கேற்றி *
வைத்தவனைநாடிவலைப்படுத்தேன் *—மெத்தெனவே
நின்றானிருந்தான் கிடந்தானென்னெஞ்சத்து *
பொன்றாமைமாயன்புகுந்து. (கூச)

புகுந்திலங்கு மந்திப்பொழுதத்து - * அரியா
யிகழ்ந்தவிரணியனதாகம் *—சுகிர்ந்தெங்கும்
சிந்தப்பிளர்ந்த திருமால்திருவடியே *
வந்தித்தென்னெஞ்சமேவாழ்த்து. (கூ௫)

வாழ்த்தியவாயராய் வானோர்மணிமகுடம் *
தாழ்த்திவணங்கத்தழும்பாமே *—கேழ்த்த
அடித்தாமரை மலர்மேல்மங்கைமணாளன்
அடித்தாமரையாமலர். (கூசு)

அலரெடுத்தவுந்தியா னுங்கெழிலாய *
மலரெடுத்தமாமேனிமாயன் *—அலரெடுத்த
வண்ணத்தான்மாமலரான் வார்சடையானென்று - * இவர்கட்
கெண்ணத்தானாமோவிமை. (கூஎ)

இமஞ்சூழ்மலையு மிருவிசும்புங்காற்றும் *
அமஞ்சூழ்ந்தறவிளங்கித்தோன்றும் *—நமஞ்சூழ்
நரகத்துநம்மை நணுகாமல்காப்பான் *
துரகத்தைவாய்பிளந்தான்தொட்டு. (கூஅ)

சாற்றுப்பாட்டுக்கள்.

‡‡ தொட்டபடையெட்டும் தோலாதவென்றியான் *
அட்டபுயகரத்தா னஞ்ஞான்று *—குட்டத்துக்
கோள்முதலைதுஞ்சக் குறித்தெறிந்தசக்கரத்தான் *
தாள்முதலேநங்கட்குச்சார்வு. (கூகூ)

‡‡ சார்வுநமக்கென்றும் சக்கரத்தான் * தண்டுழாய்த்
தார்வாழ்வரைமார்பன் தான்முயங்கும் *—காரார்ந்த
வானமருமின்னிமைக்கும் வண்டாமரைநெடுங்கண் *
தேனமரும்பூமேல்திரு. (கOO)

தனியன்.—திரு நன்குபேசுவார் இவைமன்னும் அவனே பண்டு
களிறு நெஞ்சு மண்ணுண்டு நான்முகன்.

பேயாழ்வார் திருவடிகளேசரணம்.



மூன்றுந்திருவந்தாதி ஸம்பூர்ணம்.

ஆக பாட்டு - கOO.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருமழிசையாழ்வார் வைபவம்.

𑌮𑌘𑌾𑌯𑌾𑌂 𑌮𑌕𑌰𑍇 𑌮𑌾𑌸𑍇 𑌚𑌕𑍍𑌰𑌾𑌂𑌶𑌂 𑌭𑌾𑌰𑍍𑌗𑌵𑍋𑌦𑍍𑌭𑌵𑌮𑍍।
𑌮𑌹𑍀𑌸𑌾𑌰𑌪𑍁𑌰𑌾𑌧𑍀𑌶𑌂 𑌭𑌕𑍍𑌤𑌿𑌸𑌾𑌰𑌮𑌹𑌂 𑌭𑌜𑍇॥

மகாயாம்மகரேமாஸே சக்ராம்ஶம்பார்க்கவோத்பவம்|
மஹீஸாரபுராதீஶம் பக்திஸாரமஹம்பஜே||

இவ்வாழ்வார், திருமழிசையில், துவாபரயுகம் - அகூஉகூ0க - வதான சித்தார்த்திஞு தைமீ க்ருஷ்ணபக்ஷம் ப்ரதமை ஞாயிற்றுக்கிழமை கூடின மகாநக்ஷத்ரத்தில், பார்க்கவருக்கும் கநகாவதியாருக்கும் குமாரராகத் திருவவதரித்தருளினூர்.

அத்ரி ப்ருகு வஸிஷ்ட்டர் பார்க்கவர் ஆங்கீரஸர் முதலான மஹர்ஷிகளெல்லாரும் ப்ரம்ஹாவினிடத்திற்சென்று, "பூலோகத்தில் உத்க்ருஷ்டமான க்ஷேத்ரத்தில் நாங்கள் நித்யவாஸம்பண்ண விரும்புகிறேம், அதை நிச்சயித்துச் சொல்லவேணும்" என்று கேட்டார்கள். ப்ரம்ஹாவும், பூமியெல்லாம் ஒருதட்டும் விதேஹபவநக்ஷேத்ரமான திருமழிசையொன்றும் ஒருதட்டுமாய்த் துலேயில்வைத்து நிறுக்க; பூமியை வைத்தபக்கம் அற்பமாய், திருமழிசையை வைத்தெடுத்தபக்கம் கனத்திருக்கக்கண்டு, இதற்கு "மஹிஸாரக்ஷேத்ரம்" என்றுபேரிட்டுநிரூபிக்கையாலே, அந்தரிஷிகளும் அவ்விடத்தை விடாதே நித்யவாஸம்பண்ணிக்கொண்டிருந்தார்கள்.

அவர்களிலே, பார்க்கவமஹர்ஷியென்கிறவர், தீர்க்கஸத்ர யாகத்தில்ஸர்வாந்தர்யாமியான ஸ்ரீமந்நாராயணனை யஜித்துக்கொண் டிருக்கையில், பார்க்கவருடைய பத்நி கர்ப்பிணியாய், பன்னிரண்டு மாஸங்கள் சென்றபின்பு, தைமீ மகாநக்ஷத்ரத்தில் ஸுதர்ஶநாம்ஶமாய் பிண்டாக்ருதியாய் ப்ரஸவித்தாள். ஒருபிண்டம்போல் ரூபங்கள் தோற்றுமல் அவதரிக்கையாலே, பார்க்குவரும் அவர்பத்நியும் அநாதரித்து, ஒருபிரம்பின் புதரின்கீழே பொகட்டுப்போனூர்கள். முட்டைபோல்திரண்ட அந்தபிண்டமும், பெரியபிராட்டியார் அநுக்ரஹத்தாலே பூமியில் ஸுரக்ஷிதமாயிருந்து,

"சிக்கென்றுசின்னக்கால்சீருடைப்பின்கண் ணுயிராய்
ஒக்கவுருப்பாய்ந்தறிவாருண்ணிறைந்தான்"

என்கிறபடியே எல்லா அவயங்களும் பரிபூர்ணமாய், அதிலே ஜீவன் ஸ்புரித்துத்தோற்றி மிகவும் சிசுவான ஆழ்வார், பசிதாஹங்களால் ஈடுபட்டு, முலேப்பால்வேண்டி, ஜநங்களில்லாத காட்டில் பிரம்பின் புதரில் அழுதுகொண்டிருந்தார்.

அவ்வளவில், மஹீஸாரக்ஷேத்ராதிபதியான பெருமாள் அங்கேயெழுந்தருளி, இவர் பசிதாஹம்தீரும்படி குளிரக்கடாக்ஷித்து, ஆராவமுதான தன்விக்ரஹஸேவையைக்காட்டி மறைந்தார். இவரும், அவரைவிட்டுப்பிரிந்து ஸஹிக்கமாட்டாமல் மீளவும் அழத்துடங்கினூர்.

அங்கே, **திருவாளன்** என்றொருவன் பிரம்பு அறுக்கப்போய், அவ்விடத்தில் இவருடைய அழுகைக்குரலைக்கேட்டு, கூடவந்தவர்களுடன் சோதித்து, இவரைக்கண்டு அதிகஸந்தோஷத்துடன் எடுத்துக்கொண்டுவந்து தன் பத்நியான **பங்கயச்செல்வியார்** கையில் கொடுத்தான். அவளும், பிள்ளையில்லாதவளாகையால், அதிகப்ரீதியுடன் எடுத்துக்கொண்டு முலைப்பால்கொடுத்து,—"தத்துக்கொண்டாள்கலோ? தானே பெற்றாள்கொலோ?" என்று ஸந்தேஹிக்கும்படி ஸ்நேஹத்துடன்வளர்க்க வளர்ந்தருளுகிறவிவர், முலைப்பாலுண்கைமுதலான போஜ்யங்களில் ஆசையற்று, எம்பெருமானுடைய குணங்களையே தாரகமாகருடையராய், பேசுவது அழுவது ஒன்றுமின்றிக்கே, மலமூத்ரங்களுமில்லாமல், எல்லா அவயவங்களும் பரிபூர்ணமாய் எழுந்தருளியிருந்தார்.

இந்த ஆச்சரியத்தை, புத்ரனில்லாதவனும் திருமழிசையில் வசிப்பவனும் நான்காம்வர்ணத்தில் பிறந்தவனும் கற்றுணர்ந்தவனுமான ஒருகிழவன்கேட்டு, பாங்காகப் பாலமுதுகாய்ச்சிக்கொண்டு தன்பத்நியுடன் இவரிருந்தவிடத்திற்கு விடியற்காலத்தில்வந்து, இந்தக்குழந்தையின் திவ்ய தேஜஸ்ஸைக்கண்டு மிகவும் ஆச்சரியப்பட்டு, தான் கொண்டுவந்த பாலமுதை ஸமர்ப்பித்து, "இதை அமுதுசெய்தருளவேணும்" என்று ஆழ்வாரை வேண்டிக்கொள்ள; ஆழ்வாரும், அந்தப்பாலமுதை அமுதுசெய்து போகவிட, அவர்களும், அப்படியே பலநாளும் ப்ரீதியுடனே பாலமுதுசெய்வியாநிற்க, ஒருநாள், இவர்களுடைய மநோபாவத்தை ஆழ்வார் அறிந்து, அன்று அவர்கள் கொண்டுவந்தபாலமுதை அமுதுசெய்து, சேஷித்தபாலை, "நீங்கள் இதை ஸ்வீகரியுங்கள், உங்களுக்கு நல்லபுத்திரன் உண்டாவன்" என்று ப்ரஸாதித்தருள; அவர்களும் அப்படியே ஸ்வீகரித்து, யௌவனத்தை அடைந்து, அவன்பத்நியும் கர்ப்பவதியாய், பத்துமாஸம் நிறைந்தவாறே ஒருபிள்ளையைப்பெற்றாள். அப்பிள்ளைக்கு "**கணிகண்ணன்**" என்று திருநாமம்சாத்தி, எல்லாவித்யைகளையும் அதிகரிப்பித்தார்கள்.

பின்பு, ஆழ்வாரும், எழு திருநக்ஷத்ரம் சென்றவாறே அஷ்டாங்க யோகாப்யாஸத்தில் திருவுள்ளமாய், அதற்கு த்யாநவிஷயமான ஜகத்காரண வஸ்துவை அறிகைக்காக, பற்பல சமயங்களையும் புக்குணர்ந்து ஆராய்ந்துபார்த்தவிடத்தில், ஒன்றிலும் ஒருபசையில்லாமல், "இதரவித்தாந்தங்கள் நிலைநில்லா" என்று கைவிட்டு, இப்படி நானூறு திருநக்ஷத்ரம் சென்றவாறே ஸ்ரீவைஷ்ணவராய், எம்பெருமான் பக்கல் ப்ரணவரானார்.

ஸர்வேச்வரனும், தான் பரமபதத்திலும் லீலாவிபூதியிலும் இருக்கிறபடிகளைக் காட்டிக்கொடுத்து, இப்படி உபயவிபூதியுக்தனை தான் முதலில் ப்ரம்ஹாவைப் பிறப்பித்தபடியையும் அந்த ப்ரம்ஹாவுக்கு ஜ்யேஷ்டபுத்ரனாக ருத்ரன்பிறந்தபடியையும், ப்ரகாசிப்பித்தருள; இவரும்,—"நான்முகனை நாராயணன் படைத்தான் - நான்முகனும் தான்முகமாய்ச் சங்கரனைத்தான் படைத்தான்" என்று தன்வாயால் சொல்லும்படி, இவற்றையெல்லாம் இவர் ஸந்தேகமின்றி யறிந்து,

"சாக்கியங்கற்றோம்சமணங்கற்றோமச்சங்கரனார்
ஆக்கியவாகமநூலாராய்ந்தோம்—பாக்கியத்தால்
செங்கட்கரியானைச்சேர்ந்தியாந்தீதிலோம்
எங்கட்கரியதொன்றில"

என்று அநுஸந்தித்தருளி, இதர ஸித்தாந்தங்களை நிவர்த்தித்து, ஜகந்நாதனை ஸ்ரீமந்நாராயணனை த்யாநம்பண்ணிக்கொண்டு, திருமழிசையில்கஜேந்த்ரஸரஸ்ஸின் கரையில்எழுநூறுஸம்வத்ஸரம் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

இப்படியிருக்கையில், ஒருநாள் இவர் நிரந்தரபகவதநுபவத்துடன் கந்தல்களை தைத்துக்கொண்டிருந்தார். அப்போது, ருத்ரன், த்ரிசூலத்தைக்கையில்தரித்துக்கொண்டு வ்ருஷபத்தின்மேலேறி ஆகாசமார்க்கமாய் பார்வதியுடன்செல்லாநின்றான். ஆழ்வார், அதைக்கண்டு அவன்நிழல் தன்மேல்படாமல் ஒதுங்கினார். இதைதம்பதிகளிருவருங்கண்டு நின்று, ருத்ரனைக்குறித்து பார்வதி "இவனாரோஎன்று அறிந்துபோவோம்" என்ன, ருத்ரனும், தன்பத்நியுடன் "இவன் மஹாநுபாவன்., நம்மைக்கணிசியான்" என்ன; "ஆகிலும் அவனைக் கண்டுபோவோம்" என்ன; அவனும் ஸம்மதித்து இவரண்டையில் வந்துநிற்க, இவரும் அவனைக் கண்ணெடுத்துப்பாராமல் உதாஸீநித்திருக்க, அவனும், நாம் வந்துநிற்க நீர்அலக்ஷ்யமாகக் காணலாமோ?" என்ன, இவரும், "உன்னைக்கண்டு எனக்கு என்ன ப்ரயோஜநமுண்டு?" என்ன, அவனும், "நாம் உமக்கு ஒன்றுதரக்கடவதாகவந்தோம்"? என்ன; இவரும், "நமக்கொன்றும்வேண்டா" என்ன; அவனும், "நம்வரவு வ்யர்த்தமாகாமல் உமக்கு இஷ்டமானதைக்கேளும்" என்ன; ஆழ்வாரும், புன்முறுவல் செய்து, "ஆகில், மோக்ஷம்தரவல்லையாகில் தா" என்ன; "அது என்னால் தரக்கடவதன்று, ஸ்ரீமந்நாராயணனாலே" என்ன; "ஆனால் இன்றுசாவாரை நாளைச்சாகும்படி பண்ணவல்லையோ?" என்ன; "அதுவும் கர்மாநுகுணமன்றோ?" என்ன; "ஆனால்என் ஊசியின்பின்னே நூல்வரும்படி வரப்ரதாநம்பண்ணீர்" என்று அபஹஸித்துச்சொல்ல, ருத்ரன்இவ்வார்த்தையைக்கேட்டுக் கோபங்கொண்டு, "இவரையும் ‡ அநங்கனைப்போலே யாக்கக்கடவேன்" என்று, பொறியும் புகையும் கிளம்புகிறதன் நெற்றிக்கண்ணைத் திறந்துவிட, அக்கண்ணில்நின்றும் ஜாஜ்வல்யமாநமாய்ச் சுட்டுக்கொண்டெரிகிற பெருநெருப்பை ஆழ்வார்கண்டு, தம்முடைய வலத்திருவடியின் பெருவிரலில் ஒருகண்ணைத்திறந்துவிட. அக்கண்ணில் அக்நி கோடிஜ்வாலாகல்பமாய் ஜ்வலித்துக்கொண்டு கிளம்ப; சம்புவும், ஆழ்வாருடைய பெருவிரலிலுண்டான ஜ்வாலையைப்பொறுக்கமாட்டாமல், புஷ்கலாவர்த்தகமாகிற ப்ரளயகாலமேகங்களை அக்நிசமிக்கும்படி ஆஜ்ஞாபிக்க; அம்மேகங்களும், மின்னி முழங்கி வில்லிட்டு எல்லாதாபங்களும் அடங்கும்படி ஆகாசாவகாசமடைய நிறைந்து வர்ஷிக்க; அவ்வர்ஷத்தாலே, எரிகிற நெருப்பும் அணைந்து, பெருவெள்ளங்கோக்க; ஆழ்வாரும், அப்பெருமழைக்குச் சலியாமல் பகவதநுபவத்திலேயே மண்டியிருக்கக்கண்டு, அவனும் ஆச்சரியப்பட்டு, இவருக்கு "**பக்திசாரர்**" என்று திருநாமஞ்சாத்தி, அவர் வைபவத்தைக்கொண்டாடி; அம்பரீஷனால் துர்வாஸன் அவமானப்பட்டாப்போலே "பாகவதர்கள் ஸுதுர்ஜயர்" என்று தன் பத்நிக்கு உரைத்துக்கொண்டு, யதாஸ்தாநமே போந்தான்.

பின்பு, ஆழ்வார் முன்புபோலே யோகத்தில் எழுந்தருளியிருக்க; "**சுக்தி ஹாரன்**" என்றொரு அசுரன், புலியின்மேல் ஏறிக்கொண்டு ஆகாசத்திற் செல்லாநின்றான்; ஆழ்வாருடைய யோகப்ரபாவத்தாலே, இவர்மேலே போகமாட்டாமல் புலியும் திமிர்த்துநின்றது; அவ்வசுரனும், இதேதோ!" என்று பார்த்துக்கொண்டு வருமளவில், கீழே மௌநியாய் யோகத்தி லெழுந்தருளியிருக்கும் ஆழ்வாரைக்கண்டு ஆச்சரியப்பட்டு, ஆகாசத்தினின்றும் பூமியில்வந்து, வ்யாக்ரவாகநத்தைவிட்டு இறங்கி, இவரண்டையில்வந்து, "ஓபார்க்கமுநீந்த்ரரே! நீர்தரித்திருக்கும் கந்தலைப்பொகட்டு இந்தக்கவசத்தைதரியும்" என்று ஒருகவசத்தைக்கொடுக்க; இவரும் அதை நிஷேதித்து, தன்ஸங்கல்பத்தாலே ஒப்பற்ற மணிமயமான ஒருகவசத்தை அவனுக்குக்காட்ட; அவனும் வெட்கப்பட்டு, தன்கழுத்திலிருந்த ஆரத்தைவாங்கி "இதை அக்ஷமாலையாக தரியும்" என்று கொடுக்க; இவரும், தன்கழுத்தில் துளசிபத்மாக்ஷமாலையைவாங்கி

‡ அநங்கன் - மன்மதன்.

"இதைப்பாராய்" என்ன: அதுநவரத்நஹாரமாய் விளங்கக்கண்டு, அவனும் "இவர் மஹாபரிபூரணர், மஹாபரிபூரணர்" என்று தெண்டனிட்டு, இவர் வைபவத்தைக் கொண்டாடி, யதாஸ்தாநமே போனான்.

பின்னையும், ஆழ்வார்யோகநிஷ்டரா யெழுந்தருளியிருக்கச்செய்தே, "கொங்கணஸித்தன்" என்று ஒரு ரஸவாதி, இவ்வாழ்வாருடைய வைபவத்தைக்கண்டு, இவருக்குக் காணி கோடியைப் பேதிப்பதான ரஸகுளிகை ஸமர்ப்பிக்க; இவரும் அதை அநாதரித்து "நமக்குவேண்டாம்" என்று, தம்முடைய பொன்னொத்தமேனியின்புழுதியோடே தம் காதிற்குறும்பியை யுருட்டி "இது காணி கோடாகோடியைப் பேதிக்கும்" என்று அவனுக்குக் கொடுத்தருள; அவனும் அப்படியேபரீக்ஷிக்க; அது சொன்னபடிக்கு ஒத்திருக்கையாலே அதிப்ரீதியுடன் ஆழ்வாரைத் தெண்டனிட்டு, தந்யோஹம் என்று க்ருதார்த்தனாய்ப் போனான்.

அநந்தரம், திருமழிசையாழ்வாரும் ஒருகுஹையிற்சென்று யோகத்திலே யெழுந்தருளியிருக்க; அவ்வளவில், பொய்கையார் பூதத்தார் பேயாழ்வார் ஆகிறமுதலாழ்வார்கள் மூவரும் எங்கும் ஸஞ்சரித்துக்கொண்டு வருகையில் சற்றுத்தூரத்தில் ஒரு ஆச்சரியமான திவ்யதேஜஸ்ஸைக்கண்டு, "இதை ஆராயக்கடவோம்" என்று, எங்கும் திரிந்துவந்து, குஹையில் எழுந்தருளியிருந்த பக்திஸாரரைக்கண்டு, "இம்மஹாநுபாவரரோ?" என்று நெஞ்சென்னும் உட்கண்ணால்கண்டு, "பார்க்கவமுநீந்திரரே! ஸுகமேயிருக்கிறீரோ?" என்றுகேட்க; அவரும். "பத்மமாதவீகுஸுமகைரவோத்பவ முனிகளே! நன்றாயிருக்கிறீர்களோ?" என்றுவினவியருளி, அந்யோந்யம் வந்தநபரராய், ஆநந்தக்கண்ணீர்சோர ஒருவரையொருவர் ஆலிங்கித்துக்கொண்டு, மிகவும் ப்ரீதியுடன் யோகத்தில் எழுந்தருளியிருந்து, பின்பு எல்லாரும்மயிலாபுரத்துக்கெழுந்தருளி, பேயாழ்வார் திருவவதரித்தருளினகைரவதீர்த்தத்தின்கரையில் சிலகாலம் யோகத்தி லெழுந்தருளியிருந்து, பார்க்கவமுநீந்த்ரரை அநுவர்த்தித்து அநுமதிகொண்டு முதலாழ்வார்கள் மூவரும்முன்புபோலே பூசஞ்சாரணர்த்தமாக எழுந்தருளினார்கள்.

பின்பு. ஆழ்வார் தம்முடைய திருவவதாரஸ்தலமான திருமழிசைக்கெழுந்தருளி, சாத்துகைக்குத் திருமண்வேண்டி, கல்லி சோதித்தவிடத்தில் திருமண் அகப்படாமல் முசித்துக்கிடக்க; அப்போது, திருவேங்கடமுடையான் இவர்கனவில் எழுந்தருளி, திருமண் இருக்குமிடம் அடையாளமாகக்காட்டியருள, இவரும் அங்கே திருமண் கண்டெடுத்து, பன்னிரண்டுதிருநாமம் சாத்தியருளி, பகவதநுபவம் பண்ணிக்கொண்டு, திருமழிசையிலேயே எழுந்தருளியிருந்தார்.

இப்படி சிலநாள்சென்றபின்பு, "ஸத்யவ்ரதம்" என்றுபேர்பெற்ற கச்சி வெஃகாவுக் கெழுந்தருளி, அங்கே, லக்ஷ்மீபூமிகளாலே ஸேவ்யமாநனாய்க்கொண்டு பெரியதிருவநந்தாழ்வானை திருவணையில் துயிலமர்ந்தவேந்தைஸேவித்து, அவரை, பொய்கையாழ்வாரவதரித்தருளின பொய்கைக்கரையில்த்யாநம்பண்ணிக்கொண்டு, யோகத்தில் எழுநூறு ஸம்வத்ஸரம் எழுந்தருளியிருந்தார்.

அக்காலத்தில், இவரநுக்ரஹத்தால் பிறந்த **கணிகண்ணர்** வந்து இவர் திருவடிகளில் ஆஶ்ரயித்து பகவத் ப்ரவணராயிருந்தார். அப்போது அங்குள்ள ஒருவ்ருத்தைவந்து ஆழ்வாரைஸேவித்து, அவர்திருவடிகளில் பக்தியுக்தையாய், அவரெழுந்தருளியிருந்த விடத்தை நாடோறும் அலங்கரித்துஶுஶ்ரூஷித்துக்கொண்டிருந்தாள். ஒருநாள், யோகத்தி லெழுந்தருளியிருக்கிற இவ்வாழ்வார் திருக்கண்களை விழித்துப்பார்த்து, இவள்செய்கிற ஶுஶ்ரூஷைக்கு மிகவும் உகந்தருளி, அந்தவ்ருத்தையைப்பார்த்து "உனக்குவேண்டின

தைக்கேள், ஒருவரம்தருகிறேன்" என்றருளிச்செய்ய; அவளும், ஆழ்வாரைக் குறித்து "அடியேனுக்கு இந்தக்கிழத்தனம் போம்படி கடாக்ஷித்தருளவேணும்" என்ன; ஆழ்வாரும், "அப்படியே யாகக்கடவது" என்று அவளைக் குளிரக் கடாக்ஷித்தருள; அவளும் யௌவநத்தையடைந்து, தேவஸ்த்ரீபோல்அதிஸுந்தரையானாள். அவ்வளவில், அத்தேசாதிபதியான பல்லவராயன் இவளைக் கண்டு மோகித்து, தனக்குப்பத்நியாகவேணும் என்று ப்ரார்த்திக்க; அவளும் அநுகூலித்து; அவனுடன் அதிமாநுஷபோகங்களை யநுபவித்துக் கொண்டிருந்தாள். பல்லவராயன், தனக்கு ஒருநாளைக்கொருநாள் சரீரம்கிழத்தனத்தை யடையக்கண்டு, இவளைக்குறித்து, "உனக்கு இப்படிப்பட்டயௌவநம் எப்படியுண்டாயிற்று?" என்றுகேட்டான். அவளும், ஆழ்வாரால் தனக்குண்டானபடியை அவனுக்குச்சொல்லி, "நீயும் உன்னகத்தில் தினந்தோறும் உபாதாநம்பண்ணவருகிற கணிகண்ணரை அநுவர்த்தித்து, அவர்புருஷகாரமாக அவராசார்யரான பக்திஸாரரை அநுவர்த்தித்தாயாகில், உனக்கும் இப்படிப்பட்ட யௌவநமுண்டாம்" என்றுசொன்னாள். அப்படியே ராஜாவும் கணிகண்ணரையழைத்து, "உம்மாசார்யரை நாம் ஸேவிக்கவேணும், அவரை நம்பக்கல் அழைத்துக்கொண்டுவாரும்" என்றான். கணிகண்ணரும், "நம்மாசாரியர் ஒருவரகத்துக்கும் எழுந்தருளார், ஒருராஜாக்களையும் கணிசித்துப்பாரார்" என்றுசொன்னார். பின்பு, ராஜாவான பல்லவராயன், தன்னைக் கவிபாடவேணும் என்று கணிகண்ணரை அபேக்ஷித்தான்; இவர், "நான்பகவத்பாகவதவிஷயமொழிய நரஸ்துதிபண்ணி ஒருவரையும் பாடுவதில்லை" என்றார்; "ஆகிலும் நீர் நம்மைப்பாடவேணும்" என்று அவரை நிர்ப்பந்தித்தான்; கணிகண்ணரும்.

"ஆடவர்களெங்ஙனகல்வாரருள்சுரந்து
பாடகமுமூரகமும்பாம்பணையும்—நீடியமால்
நின்றானிருந்தான்கிடந்தானிதுவன்றோ
மன்றார்பொழிற்கச்சிமாண்பு"

என்றுபாடினார். அவனும், நம்மைப்பாடு என்றால் இப்படி சொல்லலாமோ? என்று மிகவும்கோபங்கொண்டு, "ஆகில் நம்மிராச்சியத்தி னின்றும் போம்" என்றான். கணிகண்ணர் சடக்கெனப்புறப்பட்டு தன்னாசார்யரான பக்திஸாரமுனிகள் திருமுன்பேசென்று, தண்டம்ஸமர்ப்பித்து, நடந்தசெய்தியை விண்ணப்பஞ்செய்து, "அடியேன் இவ்விடத்தினின்றும் விடைகொள்ளுகிறேன்" என்ன: ஆழ்வாரும், "நீர் போகிறீராகில் நாமிங்கிருக்கப் போகிறோமோ? நாம்புறப்பட்டால் எம்பெருமான் இங்குக்கண்வளரப் போகிறானோ? அவனெழுந்தருளும்போது அவனுடைய பரிகரபூதரான ப்ரம்ஹா முதலானோர் இங்கிருக்கப்போகிறார்களோ?" என்றருளிச்செய்து, "வெஃகாவில் துயிலமர்ந்த வெம்பெருமானை யெழுப்பிக்கொண்டு வருகிறோம்" என்றுசொல்லி, திருவெஃகாநயினார் திருமுன்பே யெழுந்தருளி, அவரைப்பார்த்து.

"கணிகண்ணன்போகின்றான்காமருபூங்கச்சி
மணிவண்ணாநீகிடக்கவேண்டா—துணிவுடைய
செந்நாப்புலவனும்போகின்றேன்நீயுமுன்றன்
பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்"

என்று விண்ணப்பஞ்செய்ய; அப்படியே சொன்னவண்ணம்செய்து இவர்பின்னேயெழுந்தருள; மற்றும் அத்தேசத்தில் ஆலயங்களில் தேவதைகளும் பின்தொடர எழுந்தருளுகையாலே, சக்ரவர்த்தித்திருமகன் காட்டுக்கெ

ழுந்தருளினபோது ஸ்ரீராமனை விட்டுப்பிரிந்தமையல் திருவயோத்தியைபொலிவையிழந்தாற்போல், காஞ்சீமஹாநகரியில் மரங்களும் நதீ தடாகங்களும்மிகவும்வாடி வடிவழகடங்கி வற்றித்தப்பிப்பதையும், அந்தந்த ஆலயங்களில்தேவதைகள் ஒருவருமின்றியே இருள்மூடி, உதிப்பது அஸ்தமிப்பது தெரியாதே நீளிரவானபடியையும், ராஜாவும் மந்த்ரிகளும் கண்டு, மிகவும் துக்கித்து, இவர்களைப் பின்துடர்ந்து ஓரிரவிருக்கைஎன்கிற ஊரிலே யிவர்களைக்கண்டு காலில்விழுந்து கணிகண்ணரை வேண்டிக்கொண்டார்கள். கணிகண்ணரும், மீண்டெழுந்தருளும்படி ஆழ்வாரை வேண்டிக்கொள்ள; ஆழ்வாரும், மீண்டெழுந்தருளத் திருவுள்ளமாய், ஆஶ்ரிதபரதந்த்ரரான சொன்ன வண்ணஞ்செய்த பெருமாளைப்பார்த்து.

"கணிகண்ணன்போக்கொழிந்தான்காமருபூங்கச்சி
மணிவண்ணாநீகிடக்கவேண்டும்—துணிவுடைய
செந்நாப்புலவனும்போக்கொழிந்தேன்நீயுமுன்றன்
பைந்நாகப்பாய்படுத்துக்கொள்"

என்று விண்ணப்பஞ்செய்தார். அப்படியே சொன்னவண்ணஞ்செய்து, எல்லார்க்கும் ப்ரத்யக்ஷமாம்படி காட்டிக்கொடுத்து, இடத்திருக்கை கீழாகக் கண்வளர்ந்தருளினர். ஆழ்வாரும், அவ்விடத்திலேயே பின்னையுஞ் சிலகாலம் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்

அநந்தரம், ஆழ்வார், அரைக்ஷணம்வஸித்தாலும் வைகுந்தமாநகரைத்தரத்தக்க பெருமையையுடைய **தும்பகோணம்** என்னும் திருக்குடந்தையில் ஏரார்கோலந் திகழக்கிடக்கும் ஆராவமுதனைச் சேவிக்கத்திருவுள்ளமாய் எழுந்தருளும்போது, **பெரும்புலியூர்** என்கிற க்ராமத்திற்சென்று ஒரு திண்ணையிலே யெழுந்தருளியிருந்தார். அத்திண்ணையிலேயிருந்து அத்யயநம்பண்ணுகிற ப்ராம்ஹணர்கள் இவரைக்கண்டு, அத்யயநத்தைத் தவிர்ந்திருக்க, பின்னை அவர்களுக்கு விட்டதறுவாய் தோன்றாமையால் தவறித்தடுமாற, ஆழ்வாரும் அதைக்கண்டு, கறுப்புநெல்லை நகத்தால் பிளந்து குறிப்பால் காட்டியருள, பின்பு அவர்களுக்கு "க்ருஷ்ணு நாம வரீஹீணும் நகநிர்ப்பிந்நம்" என்கிற வாக்யம் தோற்றி, அவர்கள் தெளிந்துவந்து தண்டம் ஸமர்ப்பித்து க்ருதார்த்தரானார்கள்.

பின்னையும், அந்த க்ராமார்ச்சனையான எம்பெருமானும், இவ்வாழ்வார் உபாதாநார்த்தமாக எழுந்தருளுகிற திருவீதிகள்தோறும் அபிமுகமாய்த்திரும்பியருள; இந்த ஆச்சரியத்தை நம்பியார்கண்டு, சில ப்ராம்ஹணருக்குக்காட்ட; அவர்கள் அந்தக்ராமத்தில் யாகம்பண்ணும் பெரும்புலியூரடிகளுக்கு யாகசாலையிற்சென்று இவருடைய ப்ரபாவத்தைச்சொல்ல தீக்ஷிதரும் அதைக்கேட்டு ஆழ்வாரெழுந்தருளியிருக்குமிடத்திற்குவந்து, இவரை ஸேவித்து, தம்முடைய யாகசாலைக்கு எழுந்தருளுவித்துக் கொண்டுபோய், ஆழ்வார்க்கு அக்ரபூஜைபண்ணினர். அங்குள்ள அத்வர்யுமுதலான சடங்கிகள், தர்மபுத்ரர் ராஜஸூயயாகத்தில் க்ருஷ்ணனுக்கு அக்ரபூஜைபண்ணினபோது சிசுபாலன் வாய்வந்தபடி கீழ்மைவசவுகளை வைதாற்போல், ஆழ்வாரைக் கண்டபடி பேசி க்ரோதிக்க; தீக்ஷிதரும், மிகவும் துக்கித்து, ஆழ்வாரைநோக்கி,, "இவர்கள் இப்படி ஏதேனும்பேச நான்கேட்கமாட்டேன்,, என்றுவிண்ணப்பஞ்செய்ய; ஆழ்வாரும், "இனி நம்மை வெளியிடா திருக்கவொண்ணாது, என்று, தமக்கு அந்தர்யாமியான எம்பெருமானைப்பார்த்து.

"அக்கரங்களக்கரங்களென்றுவாவதென்கொலோ
இக்குறும்பைநீக்கியென்னை யீசனுக்கவல்லையேல்
சக்கரங்கொள்கையனேசடங்கர்வாயடங்கிட
உட்கிடந்தவண்ணமேபுறம்பொசிந்துகாட்டிடே"

என்று ஆழ்வார்விண்ணப்பஞ்செய்தருளினர். எம்பெருமானும், பெரிய பிராட்டியாருந்தானுமாய்த் திருவனந்தாழ்வான்மேல் கண்வளர்ந்தருளும்படியை எல்லாருங்கண்டு அநுபவிக்கும்படி ஆழ்வாருடைய திருமேனியிலே ப்ரத்யக்ஷமாக்கி, ஆழ்வார்க்கு ஸாரூப்யத்தைத்தந்தருளினன். முன்புகண்டபடி பேசின சடங்குகளெல்லாரும், ஆழ்வாருடைய ஹ்ருதயத்தில் ப்ரகாசிக்கிற எம்பெருமானுடைய திவ்யமங்களவிக்ரஹத்தை ஸேவித்துத் திருவடிகளில்விழுந்து ஆழ்வாரை ப்ரம்ஹரதம்பண்ணிக்கொண்டாடினர்கள். ஆழ்வாரும். அவர்களுக்கு ஜ்ஞாநப்ரதாநம்பண்ணி, திருக்குடந்தைக்கு எழுந்தருளி, ஆராவமுதனைஸேவித்து, தம்முடைய நூறுஸம்புடங்களையும் காவேரிவெள்ளத்தில் பொகட, நான்முகன்திருவந்தாதியும் திருச்சந்தவிருத்தமும் எதிர்த்துவர. அவற்றையெடுத்துக்கொண்டு, ஆராவமுதாழ்வாருடைய திவ்யமங்கள விக்ரஹத்தைஸேவித்து, "காவிரிக்கரைக்குடந்தையுள் கிடந்தவாறெழுந்திருந்துபேசு" என்று விண்ணப்பஞ்செய்ய; ஆராவமுதாழ்வாரும் அப்படியே உத்யோகிக்க; அந்தஸௌலப்யகுணத்துக்குத்தோற்று, "வாழிகேசனே" என்றுமங்களாசாஸநம்பண்ண; எம்பெருமானும் அப்படியே எத்தாநசாயியாயருள, அந்தவிக்ரஹத்தை த்யாநம்பண்ணிக்கொண்டு இரண்டாயிரத்து முந்நூறு ஸம்வத்ஸரம் யோகத்தில் எழுந்தருளியிருந்தார்.

இப்படி திருமேனியுடனே அந்ந ஆகாரங்களைவிட்டு காய்கிழங்குகளைச் சிறிது அமுதுசெய்து, நாலாயிரத்து எழுநூறு ஸம்வத்ஸரம் பகவதநுபவம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்து, முமுக்ஷுக்களுக்கு, தன்பரமக்ருபையாலே, **நான்முகன்திருவந்தாதி, திருச்சந்தவிருத்தம்** என்கிற திவ்ய ப்ரபந்தங்களை உபகரித்தருளிலோகத்தைவாழ்வித்தருளினர்.

அன்புடனந்தாதிதொண்ணூற்றுறுரைத்தான்வாழியே
அழகாருந்திருமழிசையமர்ந்தபிரான்வாழியே
இன்பமிகுதையில்மகத்திங்குதித்தான்வாழியே
எழிற்சந்தவிருத்தநூற்றிருபதீந்தான்வாழியே
முன்புகத்தில்வந்துதித்தமுனிவர்கோன்வாழியே
முழுப்பொன்னிப்பெருக்கெதிர்சொல் முதிர்கவியோன்வாழியே
நன்புவிநாலாயிரத்தெழுநூறிருந்தான்வாழியே
நங்கள்பத்திசாரரிருநற்பதங்கள்வாழியே.

திருமழிசையாழ்வார் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

மயர்வறமதிநல மருளப்பெற்ற

## திருமழிசையாழ்வாரருளிச்செய்த

# நான்முகன் திருவந்தாதி.

## தனியன்.

நேரிசை-வெண்பா.

சீராமப்பிள்ளையருளிச்செய்தது.

நாராயணன்படைத்தான்நான்முகனை * நான்முகனுக்
கேரார்சிவன்பிறந்தானென்னும்சொல் *—சீரார்
மொழிசெப்பிவாழலாம்நெஞ்சமே * மொய்பூ
மழிசைப்பரனடியேவாழ்த்து.

அடாணராகம் - அடதாளம்.

⁂ நான்முகனை நாராயணன்படைத்தான் * நான்முகனும்
தான்முகமாய்ச் சங்கரனைத்தான்படைத்தான் *—யான்முகமாய்
அந்தாதிமேலிட் டறிவித்தேனாழ்பொருளை *
சிந்தாமல்கொண்மினீர்தேர்ந்து. (௧)

தேருங்கால் தேவனொருவனேயென்றுரைப்பர் *
ஆருமறியாரவன்பெருமை *—ஓரும்
பொருள்முடிவுமித்தனையே யெத்தவம்செய்தார்க்கும் *
அருள்முடிவதாழியான்பால். (௨)

பாலில்கிடந்ததுவும் பண்டரங்கம்மேயதுவும் *
ஆலில்துயின்றதுவுமாரறிவார் *—ஞாலத்
தொருபொருளைவானவர்தம் மெய்ப்பொருளை * அப்பில்
அருபொருளையானறிந்தவாறு. (௩)

ஆறுசடைக்கரந்தானண்டர்கோன்றன்னோடும் *
கூறுடையனென்பதுவும் கொள்கைத்தே *—வேறொருவர்
இல்லாமைநின்றானை யெம்மானை * எப்பொருட்கும்
சொல்லானைச்சொன்னேன்தொகுத்து. (௪)

தொகுத்தவரத்தனைத் தோலாதான்மார்வம் *
வகிர்த்தவளையுகிர்த்தோள்மாலே *—உகத்தில்
ஒருநான்றுநீயுயர்த்தியுள்வாங்கிநீயே *
அருநான்குமானாய்அறி. (௫)

அறியார்சமண ரயர்த்தார்பவுத்தர் *
சிறியார்சிவப்பட்டார்செப்பில் *—வெறியாய
மாயவனைமாலவனை மாதவனையேத்தாதார் *
ஈனவரேயாதலாலின்று. (சு)

இன்றாகநாளையேயாக * இனிச்சிறிதும்
நின்றாக நின்னருளென்பாலதே *—நன்றாக
நானுன்னையன்றியிலேன் கண்டாய் * நாரணனே
நீயென்னையன்றியிலை. (எ)

இலைதுணைமற்றென்னெஞ்சே, ஈசனைவென்ற *
சிலைகொண்டசெங்கண்மால்சேரா *—குலைகொண்ட
ஈரைந்தலையா னிலங்கையையீடழித்த *
கூறம்பனல்லால்குறை. (அ)

குறைகொண்டுநான்முகன் குண்டிகைநீர்பெய்து *
மறைகொண்டமந்திரத்தால்வாழ்த்தி *—கறைகொண்ட
கண்டத்தான்சென்னிமேலேறக்கழுவினான் *
அண்டத்தான்சேவடியையாங்கு. (கூ)

ஆங்காரவாரமதுகேட்டு * அழலுமிழும்
பூங்காரரவணையான்பொன்மேனி *—யாம்காண
வல்லமேயல்லமே மாமலரான்வார்சடையான் *
வல்லரேயல்லரேவாழ்த்து. (க0)

வாழ்த்துகவாய் காண்ககண் கேட்கசெவி * மகுடம்
தாழ்த்துவணங்குமின்கள் தண்மலரால் *—சூழ்த்த
துழாய்மன்னுநீண்முடி யென்தொல்லைமால்தன்னை *
வழாவண்கைகூப்பிமதித்து. (கக)

மதித்தாய்போய்நான்கின் மதியார்போய்வீழ *
மதித்தாய்மதிகோள்விடுத்தாய் *—மதித்தாய்
மடுக்கிடந்தமாமுதலை கோள்விடுப்பான் * ஆழி
விடற்கிரண்டும்போயிரண்டின்வீடு. (கஉ)

வீடாக்கும்பெற்றியறியாது * மெய்வருத்திக்
கூடாக்கிநின்றுண்டுகொண்டுழல்வீர் *—வீடாக்கும்
மெய்ப்பொருள்தான்வேதமுதற்பொருள்தான் *விண்ணவர்க்கு
நற்பொருள்தான் நாராயணன். (கங)

நாராயணனென்னையாளி * நரகத்துச்
சேராமல்காக்குந்திருமால் * தன்—பேரான
பேசப்பெறாதபிணச்சமயர்பேசக்கேட்டு *
ஆசைப்பட்டாழ்வார்பலர். (கச)

பலதேவரேத்தப்படிகடந்தான்பாதம் *
மலரேறவிட்டிறைஞ்சிவாழ்த்த—வலராகில் *
மாற்கண்டன்கண்டவகையே வருங்கண்டீர் *
நீற்கண்டன் கண்டநிலை. (கரு)

நிலைமன்னுமென்னெஞ்சமஃநான்று * தேவர்
தலைமன்னர்தாமேமாற்றாக *—பலமன்னர்
போர்மாளவெங்கதிரோன்மாயப்பொழில்மறைய *
தேராழியால்மறைத்தாரால். (கசு)

ஆலநிழல்கீழறநெறியை * நால்வர்க்கு
மேலையுகத்துரைத்தான் மெய்த்தவத்தோன் *—ஞால
மளந்தானை யாழிக்கிடந்தானை * ஆல்மேல்
வளர்ந்தானைத் தான்வணங்குமாறு. (கஎ)

மாறாயதானவனை வள்ளுகிரால் * மார்விரண்டு
கூறாகக்கீரியகோளரியை *—வேறாக
ஏத்தியிருப்பாரை வெல்லுமே * மற்றவரைச்
சாத்தியிருப்பார் தவம். (கஅ)

தவம்செய்துநான்முகனால் பெற்றவரத்தை *
அவம்செய்தவாழியானன்றே *—உவந்தெம்மைக்
காப்பாய்நீ காப்பதனையாவாய்நீ * வைகுந்த
மீப்பாயுமெவ்வுயிர்க்கும்நீ. (கசு)

நீயேயுலகெல்லாம் நின்னருளேநிற்பனவும் *
நீயேதவத்தேவதேவனும் *—நீயே
எரிசுடரும்மால்வரையுமெண்டிசையும் * அண்டத்
திரிசுடருமாயவிவை. (உ0)

இவையாபிலவாய்திறந்தெரிகான்ற *
இவையாவெரிவட்டக்கண்கள் *—இவையா
வெரிபொங்கிக்காட்டுமிமையோர்பெருமான் *
அரிபொங்கிக்காட்டுமழகு. (உக)

அழகியான்தானே யரியுருவன்தானே *
பழகியான்தாளே பணிமின் *—குழவியாய்த்
தானேழுலகுக்கும் தன்மைக்குந்தன்மையனே *
மீனாயுயிரளிக்கும்வித்து. (உஉ)

வித்துமிடவேண்டுங்கொலோ, விடையடர்த்த *
பத்தியுழவன்பழம்புனத்து *—மொய்த்தெழுந்த
கார்மேகமன்ன கருமால்திருமேனி *
நீர்வானம்காட்டும்நிகழ்ந்து. (உங)

நிகழ்ந்தாய்பால்பொன்பசுப்பு * கார்வண்ணம்நான்கும்
இகழ்ந்தாயிருவரையும்வீயப்—புகழ்ந்தாய் *
சினப்போர்ச்சுவேதனைச் சேனாபதியாய் *
மனப்போர்முடிக்கும்வகை. (உச)

வகையால்மதியாது மண்கொண்டாய் * மற்றும்
வகையால்வருவதொன்றுண்டே *—வகையால்
வயிரம்குழைத்துண்ணும் மாவலிதானென்னும் *
வயிரவழக்கொழித்தாய்மற்று. (உரு)

மற்றுத்தொழுவாரொருவரையும்யானின்மை *
கற்றைச்சடையான்கரிக்கண்டாய் *—எற்றைக்கும்
கண்டுகொள்கண்டாய் கடல்வண்ணா * யானுன்னைக்
கண்டுகொள்கிற்குமாறு. (உசு)

மாறுன்புகுந்தமடநெஞ்சம் * மற்றதுவும்
பேறுகக்கொள்வனோபேதைகாள் *—நீறுடி
தான்காணமாட்டாததாரகலசேவடியை
யான்காணவல்லேற்கிது. (உஎ)

இதுவிலங்கையீடழியக்கட்டியசேது *
இதுவிலங்குவாலியைவீழ்த்ததுவும் *—இதுவிலங்கை
தானொடுங்கவில்நுடங்கத் தண்தாரிராவணனை *
ஊனொடுங்கவெய்தானுகப்பு. (உஅ)

உகப்புருவன்தானே யொளியுருவன்தானே *
மகப்புருவன்தானேமதிக்கில் *—மிகப்புருவம்
ஒன்றுக்கொன்றோசனையான்வீழ * ஒருகணையால்
அன்றிக்கொண்டெய்தானவன். (உகூ)

அவனென்னையாளியரங்கத்து - * அரங்கில்
அவனென்னையெய்தாமல்காப்பான் *—அவனென்ன
துள்ளத்துநின்றுனிருந்தான்கிடக்குமே *
வெள்ளத்தரவணையின்மேல். (ங0)

மேல்நான்முகனரனையிட்டவிடுசாபம்
தான்நாரணனொழித்தான் தாரகையுள் *—வானோர்
பெருமானையேத்தாதபேய்காள் * பிறக்கும்
கருமாயம்பேசில்கதை. (ஙக)

கதைப்பொருள்தான்கண்ணன்திருவயிற்றினுள்ள
உதைப்பளவுபோதுபோக்கின்றி *—வதைப்பொருள்தான்
வாய்ந்தகுணத்துப்படாததடைமினோ *
ஆய்ந்தகுணத்தானடி. (ஙஉ)

அடிச்சகடம்சாடி யரவாட்டி * யானை
பிடித்தொசித்துப் பேய்முலைநஞ்சுண்டு *—வடிப்பவள
வாய்ப்பின்னைதோளிக்கா வல்லேற்றெருத்திருத்து *
கோப்பின்னுமானான்குறிப்பு. (௩௩)

குறிப்பெனக்குக்கோட்டியூர்மேயானையேத்த *
குறிப்பெனக்குநன்மை பயக்க *—வெறுப்பனோ
வேங்கடத்துமேயானை $ மெய்வினைநோயெய்தாமல் *
தான்கடத்தும்தன்மையான்தாள். (௩௪)

⁂ தாளாலுலகமளந்தவசைவேகொல் *
வாளாகிடந்தருளும்வாய்திறவான் *—நீளோதம்
வந்தலைக்கும்மாமயிலைமாவல்லிக்கேணியான் *
ஐந்தலைவாய்நாகத்தணை. (௩௫)

நாகத்தணைக்குடந்தைவெஃகாத்திருவெவ்வுள் *
நாகத்தணையரங்கம்பேரம்பில் *—நாகத்
தணைப்பாற்கடல்கிடக்குமாதிநெடுமால் *
அணைப்பார்கருத்தனாவான். (௩௬)

வானுலவுதீவளிமாகடல்மாபொருப்பு *
தானுலவுவெங்கதிரும்தண்மதியும் *—மேனிலவு
கொண்டல்பெயரும்திசையெட்டும்சூழ்ச்சியும் *
அண்டந்திருமாலகைப்பு. (௩௭)

அகைப்பில்மனிசரையாறுசமயம்
புகைத்தான் * பொருகடல்நீர்வண்ணன் *—உகைக்குமேல்
எத்தேவர்வாலாட்டுமெவ்வாறுசெய்கையும் *
அப்போதொழியுமழைப்பு. (௩௮)

அழைப்பன்திருவேங்கடத்தானைக்காண *
இழைப்பன்திருக்கூடல்கூட *—மழைப்பே
ரருவிமணிவரண்டிவந்திழிய * யானை
வெருவியரவொடுங்கும்வெற்பு. (௩௯)

வெற்பென்றுவேங்கடம்பாடினேன் * வீடாக்கி
நிற்கின்றேன்நின்றுநினைக்கின்றேன் *—கற்கின்ற
நூல்வலையில்பட்டிருந்த நூலாட்டிகேள்வனார் *
கால்வலையில்பட்டிருந்தேன்காண். (௪0)

$ "வெவ்வினைநோய்" என்று பாடாந்தரம்.

காணலுறுகின்றேன் கல்லருவிமுத்துதிர
ஓணவிழவிலொலியதிர *—பேணி
வருவேங்கடவாவென் னுள்ளம்புகுந்தாய் *
திருவேங்கடமதனைச்சென்று. (சக)

சென்றுவணங்குமினோ சேணுயர்வேங்கடத்தை *
நின்றுவினைகெடுக்கும் நீர்மையால் *—என்றும்
கடிக்கமலநான்முகனும் கண்மூன்றத்தானும் *
அடிக்கமலமிட்டேத்துமங்கு. (சஉ)

மங்குல்தோய்சென்னி வடவேங்கடத்தானை *
கங்குல்புகுந்தார்கள் காப்பணிவான் *—திங்கள்
சடையேறவைத்தானும் தாமரைமேலானும்
குடையேறத்தாம்குவித்துக்கொண்டு. (சஙு)

கொண்டுகுடங்கால்மேல் வைத்தகுழவியாய் *
தண்டவரக்கன்தலைதாளால்—பண்டெண்ணி *
போம்குமரன்நிற்கும் பொழில்வேங்கடமலைக்கே *
போம்குமரருள்ளீர்புரிந்து. (சச)

புரிந்துமலரிட்டுப் புண்டரீகப்பாதம் *
பரிந்துபடுகாடுநிற்ப *—தெரிந்தெங்கும்
தானோங்கிநிற்கின்றான் தண்ணருவிவேங்கடமே *
வானோர்க்கும்மண்ணோர்க்கும்வைப்பு. (சரு)

வைப்பன்மணிவிளக்காம் மாமதியை * மாலுக்கென்
றெப்பொழுதும்கைநீட்டும்யானையை *—எப்பாடும்
வேடுவளைக்கக்குறவர் வில்லெடுக்கும்வேங்கடமே *
நாடுவளைத்தாடுதுமேல்நன்று. (சசா)

நன்மணிவண்ணனூ ராளியும்கோளரியும் *
பொன்மணியும்முத்தமும் பூமரமும் *—பன்மணிநீர்
ஓடுபொருதுருளும் கானமும்வானரமும் *
வேடுமுடைவேங்கடம். (சஎ)

வேங்கடமேவிண்ணோர்தொழுவதுவும் * மெய்ம்மையால்
வேங்கடமேமெய்வினைநோய்தீர்ப்பதுவும் *—வேங்கடமே
தானவரைவீழ்த்தன்னாழிப்படைதொட்டு *
வானவரைக்காப்பான்மலை. (சஅ)

மலையாமைமேல்வைத்து வாசுகியைச்சுற்றி *
தலையாமைதானொருகைபற்றி *—அலையாமல்
பீறக்கடைந்த பெருமான்திருநாமம் *
கூறுவதே யாவர்க்கும்கூற்று. (சகூ)

கூற்றமும்சாரா கொடுவினையும்சாரா* தீ
மாற்றமும்சாராவகையறிந்தேன் * ஆற்றங்
கரைக்கிடக்கும் கண்ணன்கடல்கிடக்கும் * மாயன்
உரைக்கிடக்குமுள்ளத்தெனக்கு. (ருo)

எனக்காவாராரொருவரே * எம்பெருமான்
தனக்காவான் தானேமற்றல்லால் *—புனக்காயா
வண்ணனேயுன்னைப் பிறரறியார் * என்மதிக்கு
விண்ணெல்லாமுண்டோவிலை. (ருக)

விலைக்காட்படுவர் விசாதியேற்றுண்பர் *
தலைக்காட்பலிதிரிவர்தக்கோர் *—முலைக்கால்
விடமுண்டவேந்தனையே வேறாகஏத்தாதார் *
கடமுண்டார்கல்லாதவர். (ருஉ)

கல்லாதவரிலங்கைகட்டழித்த * காகுத்த
னல்லாலொருதெய்வம்யானிலேன் *—பொல்லாத
தேவரைத் தேவரல்லாரை * திருவில்லாத்
தேவரைத்தேறேல்மின் தேவு. (ருங)

தேவராய்நிற்குமத்தேவும் * அத்தேவரில்
மூவராய்நிற்கும்முதுபுணர்ப்பும் * யாவராய்
நிற்கின்றதெல்லாம் நெடுமாலென்றோராதார் *
கற்கின்றதெல்லாம்கடை. (ருச)

கடைநின்றமரர் கழல்தொழுது * நாளும்
இடைநின்றவின்பத்தராவர் *—வுடைநின்ற
நீரோதமேனிநெடுமாலே * நின்னடியை
யாரோதவல்லாரவர். (ருரு)

அவரிவரென்றில்லை யனங்கவேள்தாதைக்கு - *
எவருமெதிரில்லைகண்டீர் *—உவரிக்
கடல்நஞ்சமுண்டான் கடனென்று * வாணற்
குடனின்றுதோற்றானொருங்கு. (ருசா)

ஒருங்கிருந்தநல்வினையும் தீவினையுமாவான் *
பெருங்குருந்தம்சாய்த்தவனேபேசில் *—மருங்கிருந்த
வானவர்தாம்தானவர்தாம் தாரகைதான் * என்னெஞ்சம்
ஆனவர்தாமல்லாததென். (ருஎ)

என்னெஞ்சமேயா னிருள்நீக்கியெம்பிரான் *
மன்னஞ்சமுன்னொருநாள் மண்ணளந்தான் *—என்னெஞ்ச
மேயானையில்லாவிடையேற்றான் * வெவ்வினைதீர்த்
தாயானுக்காக்கினேனன்பு. (ருஅ)

அன்பாவவாயாரமுதமாவாய் அடியேனுக்
கின்பாவவாயெல்லாமும்நீயாவாய் *—பொன்பாவை
கேள்வாகிளரொளியென் கேசவனே * கேடின்றி
ஆள்வாய்க்கடியேனுனாள். (ருகூ)

ஆள்பார்த்துழிதருவாய் கண்டுகொளென்று * நின்
தாள்பார்த்துழிதருவேன் தன்மையை *—கேட்பார்க்
கரும்பொருளாய்நின்றவரங்கனே * உன்னை
விரும்புவதேவிள்ளேன்மனம். (சூ0)

மனக்கேதம்சாரா மதுசூதன்றன்னை *
தனக்கேதான்தஞ்சமாக்கொள்ளில் *—எனக்கேதான்
இன்றென்றிநின்றுலகை யேழாணையோட்டினான் *
சென்றொன்றிநின்றதிரு. (சூக)

திருநின்றபக்கம்திறவிதென்றோரார் *
கருநின்றகல்லார்க்குரைப்பர் *—திருவிருந்த
மார்பில்சிரீதரன்றன் வண்டுலவுதண்டுழாய் *
தார்தன்னைச்சூடித்தரித்து. (சூஉ)

தரித்திருந்தேனாகவே தாராகணப்போர் *
விரித்துரைத்தவென்னாகத்துன்னை *—தெரித்தெழுதி
வாசித்தும்கேட்டும் வணங்கிவழிபட்டும் *
பூசித்தும்போக்கினேன்போது. (சூங)

போதானவிட்டிறைஞ்சி யேத்துமினோ * பொன்மகரக்
காதானை யாதிப்பெருமானை *—நாதானை
நல்லானைநாரணனை நம்மேழ்பிறப்பறுக்கும்
சொல்லானை * சொல்லுவதேசூது. (சூச)

சூதாவதென்னெஞ்சத் தெண்ணினேன் * சொன்மாலை
மாதாய ‡ மாலவனைமாதவனை *—யாதானும்
வல்லவாசிந்தித்திருப்பேற்கு * வைகுந்தத்
தில்லையோசொல்லீரிடம். (சூரு)

இடமாவதென்னெஞ்ச மின்றெல்லாம் * பண்டு
படநாகணைநெடியமாற்கு * திடமாக
வையேன்மதுசூடிதன்னோடு - அயனைநான்
வையேனாட்செய்யேன்வலம். (சூசூ)

‡ "மாயவனை" என்றுபாடாந்தரம்.

வலமாகமாட்டாமைதானுக * வைகல்
குலமாகக்குற்றம்தானுக *—நலமாக
நாரணனைநரபதியைஞானப்பெருமானை *
சீரணனையேத்தும்திறம். (சுஎ)

திறம்பேல்மின்கண்டீர் திருவடிதன்நாமம் *
மறந்தும்புறந்தொழாமாந்தரை *—இறைஞ்சியும்
சாதுவராய்ப்போதுமின்களென்றான் * நமனும்தன்
தூதுவரைக்கூவிச்செவிக்கு. (சுஅ)

செவிக்கின்பமாவதுவும் செங்கண்மால்நாமம் *
புவிக்கும்புவியதுவேகண்டீர் *—கவிக்கு
நிறைபொருளாய்நின்றானை நேர்பட்டேன் * பார்க்கில்
மறைப்பொருளுமத்தனையேதான். (சுகூ)

தானொருவனாகித் தரணியிடந்தெடுத்து - *
ஏனொருவனாயெயிற்றில்தாங்கியதும் *—யானொருவன்
இன்றுவறிகின்றே னல்லேன் இருநிலத்தைச்
சென்றுங்கடிப்படுத்தசேய். (எ0)

சேயனணியன் சிறியன்மிகப்பெரியன் *
ஆயன்துவரைக்கோனாய்நின்ற—மாயன் * அன்
றோதியவாக்கதனைக்கல்லார் * உலகத்தில்
ஏதிலராய்மெய்ஞ்ஞானமில். (எக)

இல்லறமில்லேல்துறவறமில்லென்னும் *
சொல்லறமல்லனவும்சொல்லல்ல *—நல்லற
மாவனவும்நால்வேதமாத்தவமும் * நாரணனே
யாவதீதன்றென்பாரார். (எஉ)

ஆரேயறிவாரனைத்துலகுமுண்டுமிழ்ந்த *
பேராழியான்தன் பெருமையை *—கார்செறிந்த
கண்டத்தானெண்கண்ணான்காணான் * அவன்வைந்த
பண்டைத்தானத்தின்பதி. (எங)

பதிபகைஞர்க்காற்றுதுபாய்திரைநீர்ப்பாழி *
மதித்தடைந்தவாளரவந்தன்னை *—மதித்தவன்றன்
வல்லாகத்தேற்றியமாமேனிமாயவனை *
அல்லாதொன்றேத்தாதென்நா. (எச)

நாக்கொண்டுமானிடம்பாடேன் * நலமாகத்
தீக்கொண்டசெஞ்சடையான்சென்று-*என்றும்—பூக்கொண்டு
வல்லவரேத்தமகிழாத * வைகுந்தச்
செல்வனார்சேவடிமேல்பாட்டு. (எடு)

பாட்டும்முறையும்படுகதையும்பல்பொருளும்
ஈட்டியதீயுமிருவிசும்பும் *—கேட்ட
மனுவும்சுருதிமறைநான்கும் * மாயன்
றனமாயையில்பட்ட † தற்பு. (எசு)

தற்பென்னைத்தானறியானேலும் * தடங்கடலைக்
கற்கொண்டு தூர்த்தகடல்வண்ணன் *—எற்கொண்ட
வெவ்வினையும்நீங்க விலங்காமனம்வைத்தான் *
எவ்வினையும்மாயுமால்கண்டு. (எஎ)

கண்டுவணங்கினார்க்கென்னுங்கொல் * காமனுடல்
கொண்டதவத்தாற்குமையுணர்த்த *—வண்டலம்பும்
தாரலங்கல்நீண்முடியான் றன்பெயரேகேட்டிருந்து - *அங்
காரலங்கலானமையாலாய்ந்து. (எஅ)

ஆய்ந்துகொண்டாதிப்பெருமானை * அன்பினால்
வாய்ந்தமனத்திருத்தவல்லார்கள் *—ஏய்ந்ததம்
மெய்குந்தமாகவிரும்புவரே * தாமும்தம்
வைகுந்தம்காண்பார்விரைந்து. (எகூ)

விரைந்தடைமின்மேலொருநாள் வெள்ளம்பரக்க *
கரந்துலகம்காத்தளித்தகண்ணன் *—பரந்துலகம்
பாடின, ஆடினகேட்டு * படுநரக
வீடினவாசற்கதவு. (அ0)

கதவுமனமென்றும்காணலாமென்றும் *
§ குதையும்வினையாவிதீர்ந்தேன் *—விதையாக
நல்தமிழைவித்தி யென்னுள்ளத்தைநீவிளைத்தாய் *
கற்றமொழியாகிக்கலந்து. (அக)

கலந்தானென்னுள்ளத்துக்காமவேள்தாதை *
நலந்தானுமீதொப்பதுண்டே *—அலர்ந்தலர்கள்
இட்டேத்துமீசனும்நான்முகனும் * என்றிவர்கள்
விட்டேத்தமாட்டாதவேந்து. (அஉ)

வேந்தராய்விண்ணவராய் விண்ணாகித்தண்ணளியாய் *
மாந்தராய்மாதராய்மற்றெல்லாமாய் *—சார்ந்தவர்க்குத்
தன்னாற்றான்நேமியான் மால்வண்ணன்தான்கொடுக்கும் *
பின்னால்தான்செய்யும்பிதிர். (அங)

---

† தற்பு - தத்த்வம்: உண்மையென்றபடி,
§ குதைகை - தடுமாறுகை.

பிதிருமனமிலேன் பிஞ்ஞகன்றன்னோடு - *
எதிர்வனவனெனக்குநேரான் *—அதிரும்
கழற்காலமன்னனையே கண்ணனையே * நாளும்
தொழக்காதல்பூண்டேன்தொழில். (அச)

தொழிலெனக்குத்தொல்லை மால்தன்னுமமேத்த *
பொழுதெனக்குமற்றதுவேபோதும் *—கழிசினத்த
வல்லாளன்வானரக்கோன்வாலிமதனழித்த *
வில்லாளன்நெஞ்சத்துளன். (அரு)

உளன்கண்டாய்நன்னெஞ்சே யுத்தமனென்றும்
உளன்கண்டாய் * உள்ளுவாருள்ளத்—துளன்கண்டாய் *
தன்னொப்பான்தானுயுளன்காண்தமியேற்கு - *
என்னொப்பார்க்கீசனிமை. (அசு)

இமயப்பெருமலைபோலிந்திரனூர்க்கிட்ட *
சமையவிருந்துண்டார்காப்பார் *—சமயங்கள்
கண்டானவைகாப்பான் கார்க்கண்டன்நான்முகனோடு - *
உண்டானுலகோடுயிர். (அஎ)

உயிர்கொண்டுடலொழிய வோடும்போதோடி *
அயர்வென்றதீர்ப்பான்பெயர்பாடி*—செயல்தீரச்
சிந்தித்துவாழ்வாரேவாழ்வார் * சிறுசமயப்
பந்தனையார்வாழ்வேல்பழுது. (அஅ)

பழுதாகாதொன்றறிந்தேன் பாற்கடலான்பாதம் *
வழுவாவகைநினைந்துவைகல்—தொழுவாரை *
கண்டிறைஞ்சிவாழ்வார்கலந்தவினைகெடுத்து *
விண்டிறந்துவீற்றிருப்பார்மிக்கு. (அகூ)

வீற்றிருந்துவிண்ணாளவேண்டுவார் * வேங்கடத்தான்
பால்திருந்துவைத்தாரேபன்மலர்கள் * மேல்திருந்து
வாழ்வார்வருமதிபார்த் தன்பினராய் * மற்றவர்க்கே
தாழ்வாயிருப்பார்தமர். (கூ0)

தமராவார்யாவர்க்கும் தாமரைமேலார்க்கும் *
அமரர்க்கும் $ ஆடரவத்தாற்கும் *—அமரர்கள்
தாள்தாமரைமலர்களிட்டிறைஞ்சி * மால்வண்ணன்
தாள்தாமரையடைவோமென்று. (கூக)

$ "ஆடரவார்த்தார்க்கும்" என்று சில ஸ்ரீகோசங்கள்.

என்றுமறந்தறியே னென்னெஞ்சத்தேவைத்து *
நின்றுமிருந்தும்நெடுமாலை *—என்றும்
திருவிருந்தமார்பன்சிரீதரனுக்காளாய் *
கருவிருந்தநாள்முதலாக்காப்பு. (௬௨)

காப்புமறந்தறியேன் கண்ணனேயென்றிருப்பன் *
ஆப்பங்கொழியவும்பல்லுயிர்க்கும் *—ஆக்கை
கொடுத்தளித்தகோனேகுணப்பரனே * உன்னை
விடத்துணியார்மெய்தெளிந்தார்தாம். (௬௩)

மெய்தெளிந்தாரென்செய்யார் வேறானார்நீறாக
கைதெளிந்துகாட்டிக் களப்படுத்து *—பைதெளிந்த
பாம்பினணையாயருளாயடியேற்கு *
வேம்புங்கறியாகுமென்று. (௬௪)

சாற்றுப்பாட்டுக்கள்.

‡‡ என்றேனடிமை யிழிந்தேன்பிறப்பிடும்பை *
ஆன்றேனமரர்க்கமராமை *—ஆன்றேன்
கடனாடும்மண்ணாடும்கைவிட்டு * மேலை
இடநாடுகாணவினி. (௬௫)

‡‡ இனியறிந்தேனீசற்கும்நான்முகற்குந்தெய்வம் *
இனியறிந்தேனெம்பெருமானுன்னை *—இனியறிந்தேன்
காரணன்நீகற்றவைநீ கற்பவைநீ * நற்கிரிசை
நாரணன்நீ நன்கறிந்தேன் நான். (௬௬)

திருமழிசையாழ்வார் திருவடிகளேசரணம்.



தனியன்கம். —நான்முகன் வாழ்த்து இவை மேல் காண் எனக்கு மனக்கேதம் சேயன் கதவு தமர் பொய்.

ஆகப் பாட்டு - ௯௬.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

நம்மாழ்வாரருளிச்செய்தது.

# திருவிருத்தம்.

## தனியன்.

கிடாம்பியாச்சானருளிச்செய்தது.

கருவிருத்தக்குழிநீத்தபின்காமக்கடுங்குழிவீழ்ந்து - *
ஒருவிருத்தம்புக்குழலுறுவீருயிரின் † பொருள்கட்கு - *
ஒருவிருத்தம்புகுராமல் குருகையர்கோனுரைத்த *
திருவிருத்தத்தோரடிகற்றிரீர்திருநாட்டகத்தே.

---

கல்யாணிராகம் - ரூபகதாளம்.

‡‡ பொய்ந்நின்றஞானமும்பொல்லாவொழுக்குமழுக்குடம்பும் *
இந்நின்றநீர்மையினியாமுறாமை * உயிரளிப்பான்
எந்நின்றயோநியுமாய்ப்பிறந்தாயிமையோர்தலைவா
மெய்ந்நின்றுகேட்டருளாய் * அடியேன்செய்யும்விண்ணப்பமே. (க)

செழுநீர்த்தடத்துக்கயல்மிளிர்ந்தாலொப்ப * சேயரிக்கண்
அழுநீர்துளும்பவலமருகின்றன * வாழியரோ
முழுநீர்முகில்வண்ணன்கண்ணன்விண்ணாட்டவர்மூதுவராம்
தொழுநீரிணையடிக்கே * அன்புசூட்டியசூழ்குழற்கே. (உ)

குழல்கோவலர்மடப்பாவையும்மண்மகளும் * திருவும்
நிழல்போல்வனர்கண்டுநிற்குங்கொல்மீளுங்கொல் * தண்ணந்துழாய்
அழல்போலடும்சக்கரத்தண்ணல்விண்ணோர்தொழக்கடவும்
தழல்போல்சினத்த * அப்புள்ளின்பின்போனதனிநெஞ்சமே. (ங)

தனிநெஞ்சம்முன்னவர்புள்ளேகவர்ந்தது * தண்ணந்துழாய்க்
கினிநெஞ்சமிங்குக்கவர்வதுயாமிலம் * நீநடுவே
‡ முனிவஞ்சப்பேய்ச்சிமுலைசுவைத்தான்முடிசூடுதுழாய்ப்
பனிநஞ்சமாருதமே * எம்மதாவிபனிப்பியல்வே. (ச)

பனிப்பியல்வாகவுடையதண்வாடை * இக்காலமிவ்வூர்
பனிப்பியல்வெல்லாம்தவிர்ந்தெரிவீசும் * அந்தண்ணந்துழாய்
பனிப்புயல்சோரும்தடங்கண்ணிமாமைத்திறத்துக்கொலாம்
பனிப்புயல்வண்ணன் * செங்கோலொருநான்றுதடாவியதே. (ரு)

---

† "பொருளுக்கு" என்றும்பாடம். ‡ "முனிநஞ்சப்பேய்ச்சி" என்றும்பாடம்.

தடாவியவம்பும்முரிந்தசிலைகளும்போகவிட்டு *
கடாயனகொண்டொல்கும்வல்லியீதேனும் * அசுரர்மங்கக்
கடாவியவேகப்பறவையின்பாகன்மதனசெங்கோல்
நடாவியகூற்றங்கண்டீர் * உயிர் † காமின்கள்ஞாலத்துள்ளே. (சு)

ஞாலம்பனிப்பச்செறித்து * நன்னீரிட்டுக்கால்சிதைந்து
நீலவல்லேறுபொராநின்றவானமிது * திருமால்
கோலம்சுமந்துபிரிந்தார்கொடுமைகுழறுதண்பூம்
காலங்கொலோவறியேன் * வினையாட்டியேன்காண்கின்றவே. (எ)

காண்கின்றனகளும்கேட்கின்றனகளும்காணில் * இந்நாள்
பாண்குன்றநாடர்பயில்கின்றன * இதெல்லாமறிந்தோம்
மாண்குன்றமேந்தித்தண்மாமலைவேங்கடத்தும்பர்நம்பும்
சேண்குன்றம்சென்று * பொருள்படைப்பான்கற்றதிண்ணனவே. ()

திண்பூஞ்சுடர்நுதிநேமியஞ்செல்வர் * விண்ணாடனைய
வண்பூமணிவல்லியாரேபிரிபவர்தாம் * இவையோ
கண்பூங்கமலம்கருஞ்சுடராடிவெண்முத்தரும்பி
வண்பூங்குவளை * மடமான்விழிக்கின்றமாயிதழே. (கூ)

மாயோன்வடதிருவேங்கடநாட * வல்லிக்கொடிகாள்
நோயோவுரைக்கிலும்கேட்கின்றிலீருரையீர் * நுமது
வாயோஅதுவன்றிவல்வினையேனும்கிளியுமெள்கும்
ஆயோஅடும்தொண்டையோ * அறையோவிதறிவரிதே. (க0)

அரியனயாமின்றுகாண்கின்றன * கண்ணன்விண்ணனையாய்
பெரியனகாதம்பொருட்கோபிரிவென * ஞாலமெய்தற்
குரியனவொண்முத்தும்பைம்பொன்னுமேந்தியோரோகுடங்கை
பெரியனகெண்டைக்குலம் * இவையோவந்துபேர்கின்றவே. (கக)

பேர்கின்றதுமணிமாமை * பிறங்கியள்ளல்பயலை
ஊர்கின்றதுகங்குலூழிகளே * இதெல்லாமினவே
ஈர்கின்றசக்கரத்தெம்பெருமான்கண்ணன்தண்ணந்துழாய்ச்
சார்கின்றநன்னெஞ்சினார் * தந்துபோனதனிவளமே. (கஉ)

தனிவளர்செங்கோல்நடாவு * தழல்வாயரசவியப்
பனிவளர்செங்கோலிருள்வீற்றிருந்தது * பார்முழுதும்
துனிவளர்காதல்துழாயைத்துழாவுதண்வாடைதடிந்
தினிவளைகாப்பவராா * எனையூழிகளீர்வனவே. (கந)

ஈர்வனவேலுமஞ்சேலும் * உயிர்மேல்மிளிர்ந்திவையோ
பேர்வனவோவல்லதெய்வநல்வேள்கணை * பேரொளியே
சோர்வனநீலச்சுடர்விடும்மேனியம்மான்விசும்பூர்
தேர்வன * தெய்வமன்னீரகண்ணோவிச்செழுங்கயலே. (கச)

---

† காமின்கள்-காத்துக்கொள்ளுங்கோள்.

கயலோநுமகண்களென்று களிறுவினவிநிற்றீர் *
அயலோரறியிலுமீதென்னவார்த்தை * கடல்கவர்ந்த
புயலோடுலாம்கொண்டல்வண்ணன்புனவேங்கடத்தெம்மொடும்
பயலோவிலீர் * கொல்லைகாக்கின்றநாளும்பலபலவே. (௧௫)

பலபலவூழிகளாயிடும் * அன்றியோர்நாழிகையைப்
பலபலகூறிட்டகூறாயிடும் * கண்ணன்விண்ணனையாய்ப்
பலபலநாளன்பர்கூடிலும்நீங்கிலும்யாமெலிதும்
பலபலசூழலுடைத்து * அம்மவாழியிப்பாயிருளே. (௧௬)

இருள்விரிந்தாலன்ன * மாநீர்த்திரைகொண்டு, வாழியரோ
இருள்பிரிந்தாரன்பர்தேர்வழிதூரல் * அரவணைமேல்
இருள்விரிநீலக்கருநாயிறுசுடர்கால்வதுபோல்
இருள்விரிசோதி * பெருமானுறையுமெறிகடலே. (௧௭)

கடல்கொண்டெழுந்ததுவானம் * அவ்வானத்தையன்றிச்சென்று
கடல்கொண்டெழுந்தவதனாலிது * கண்ணன்மண்ணும்விண்ணும்
கடல்கொண்டெழுந்தவக்காலங்கொலோபுயற்காலங்கொலோ
கடல்கொண்டகண்ணீர் * அருவிசெய்யாநிற்கும் ‡ காரிகையே. ()

காரிகையார்நிறைகாப்பவர்யாரென்று * கார்கொண்டின்னே
மாரிகையேறியறையிடும்காலத்தும் * வாழியரோ
சாரிகைப்புள்ளரந்தண்ணந்துழாயிறைகூயருளார்
சேரிகையேறும் * பழியாய்விளைந்ததென்சின்மொழிக்கே. (௧௯)

சின்மொழிநோயோகழிபெருந்தெய்வம் * இந்நோயினதென்
றின்மொழிகேட்குமிளந்தெய்வமன்றிது * வேல ! நில்நீ
என்மொழிகேண்மினென்னம்மனைமீருலகேழுமுண்டான்
சொல்மொழி * மாலையந்தண்ணந்துழாய்கொண்டுசூட்டுமினே. (௨௦)

சூட்டுநன்மாலைகள்தூயனவேந்தி * விண்ணோர்கள்நன்னீ
ராட்டியந்தூபம்தராநிற்கவேயங்கு - * ஓர்மாயையினால்
ஈட்டியவெண்ணெய்தொடுவுண்ணப்போந்திமிலேற்றுவன்கூன்
கோட்டிடையாடினைகூத்து - * அடலாயர்தம்கொம்பினுக்கே. (௨௧)

கொம்பார்தழைகைசிறுநாணெறிவிலம் * வேட்டைகொண்டாட்
டம்பார்களிறுவினவுவதையர் * புள்ளூரும்கள்வர்
தம்பாரகத்தென்றுமாடாதன தம்மில்கூடாதன
வம்பார்வினாச்சொல்லவோ *எம்மைவைத்ததிவ்வான்புனத்தே(௨௨)

புனமோபுனத்தயலேவழிபோகுமருவினையேன் *
மனமோமகளிர்நுங்காவல்சொல்லீர் * புண்டரீகத்தங்கேழ்
வனமோரனையகண்ணான்கண்ணன்வானாடமரும்தெய்வத்
தினமோரனையீர்களாய் * இவையோநும்மியல்வுகளே. (௨௩)

‡ "காரிகைக்கே" என்று பாடாந்தரம்.

இயல்வாயினவஞ்சநோய்கொண்டுலாவும் * ஓரோகுடங்கைக்
கயல்பாய்வனபெருநீர்க் † கண்கள்தம்மொடும் * குன்றமொன்ருல்
புயல்வாயினநிரைகாத்த புள்ளூர்திகள்ளூரும்துழாய்க் [க்கே.
கொயல்வாய்மலர்மேல் * மனத்தொடென்னுங்கொலெம் கோல்வளை

எங்கோல்வளைமுதலா * கண்ணன்மண்ணும்விண்ணுமளிக்கும்
செங்கோல்வளைவுவிளைவிக்குமால் * திறல்சேரமரர்
தங்கோனுடையதங்கோனும்பரெல்லாயவர்க்கும்தங்கோன்
நங்கோனுகக்கும்துழாய் * என்செய்யாதினிநானிலத்தே. (உரு)

நானிலம்வாய்க்கொண்டுநன்னீரறமென்றுகோதுகொண்ட *
வேனிலஞ்செல்வன்சுவைத்துமிழ்பாலை * கடந்தபொன்னே
கால்நிலந்தோய்ந்துவிண்ணோர்தொழும்கண்ணன்வெஃகாவுதம்பூம்
தேனிளஞ்சோலையப்பாலது - * எப்பாலைக்கும்சேமத்ததே. (உசு)

சேமம்செங்கோனருளே * செருவாரும்நட்பாகுவரென்
றேமம்பெறவையம்சொல்லும்மெய்யே * பண்டெல்லாமறைகூய்
யாமங்கடோறெரிவீசும்நங்கண்ணனந்தண்ணந்துழாய்த்
தாமம்புனைய * அவ்வாடையீதோவந்துதண்ணென்றதே. (உஎ)

தண்ணந்துழாய்வளைகொள்வதுயாமிழப்போம் * நடுவே
வண்ணம்துழாவியோர்வாடையுலாவும் * வள்வாயலகால்
புள்நந்துழாமேபொருநீர்த்திருவரங்காவருளாய்
எண்ணம்துழாவுமிடத்து - * உளவோபண்டுமின்னன்னவே. (உஅ)

இன்னன்னதூதெம்மையாளற்றப்பட்டிரந்தாளிவளென்று -*
அன்னன்னசொல்லாப்பெடையொடும்போய்வரும் * நீலமுண்ட
மின்னன்னமேனிப்பெருமானுலகில்பெண்தூதுசெல்லா
அன்னன்னநீர்மைகொலோ * குடிச்சீர்மையிலன்னங்களே. (உகூ)

அன்னம்செல்வீரும்வண்டானம்செல் வீரும்தொழுதிரந்தேன் *
முன்னம்செல்வீர்கள்மறவேல்மினோ * கண்ணன்வைகுந்தனோ
டென்னெஞ்சினூரைக்கண்டாலென்னைச்சொல்லியவரிடைநீர்
இன்னஞ்சொல்லீரோ * இதுவோதகவென்றிசைமின்களே. (ஙூ0)

இசைமின்கள்தூதென்றிசைத்தாலிசையிலம் * என்தலைமேல்
அசைமின்களென்றலசையுங்கொலாம் * அம்பொன்மாமணிகள்
திசைமின்மிளிரும்திருவேங்கடத்துவன்தாள் ‡ சிமயம்
மிசை * மின்மிளிரியபோவான்வழிக்கொண்டமேகங்களே. (ஙூக)

மேகங்களோவுரையீர் * திருமால்திருமேனியொக்கும்
யோகங்களுங்களுக்கெவ்வாறுபெற்றீர் * உயிரளிப்பான்
மாகங்களெல்லாம்திரிந்துநன்னீர்கள்சுமந்து, நுந்தம்
ஆகங்கள்நோவ * வருத்தும்தவமாமருள்பெற்றதே. (ஙூஉ)

† "கண்கள் தன்னொடும்" என்றும்சொல்வர். ‡ சிமயம்-சிகரம்.

அருளார்திருச்சக்கரத்தாலகல்விசும்பும்நிலனும் *
இருளார்வினைகெடச்செங்கோல்நடாவுதிர் * ஈங்கோர்பெண்பால்
பொருளோவெனுமிகழ்வோ இவற்றின்புறத்தாளென்றெண்ணோ
தெருளோமரவணையீர் * இவள்மாமைசிதைக்கின்றதே. (௩௩)

சிதைக்கின்றதாழியென்றாழியைச்சீறி * தன் † சீறடியால்
உதைக்கின்றநாயகந்தன்னொடும்மாலே * உனதுதண்டார்
ததைக்கின்றதண்ணந்துழாயணிவானதுவேமனமாய்ப்
பதைக்கின்றமாதின்திறத்து - * அறியேன்செயற்பாலதுவே. (௩௪)

பால்வாய்ப்பிறைப்பிள்ளையொக்கலைக்கொண்டு * பகலிழந்த
மேல்பால்திசைப்பெண்புலம்புறுமாலை * உலகளந்த
மால்பால்துழாய்க்கும்மனமுடையார்க்கும்நல்கிற்றையெல்லாம்
சோல்வான்புகுந்து - * இதுவோர்பனிவாடைதுழாய்கின்றதே. ()

துழாநெடும்சூழிருளென்று * தன்தண்டாரதுபெயரா
எழாநெடுவூழியெழுந்தவிக்காலத்தும் * ஈங்கிவளோ
வழாநெடும்துன்பத்தளென்றிரங்காரம்மனோ, இலங்கைக்
குழாநெடுமாடம் * இடித்தபிரானார்கொடுமைகளே. (௩௬)

கொடுங்கால்சிலையர்நிரைகோளுழவர் * கொலையில்வெய்ய
கடுங்காலிளைஞர்துடிபடும்கவ்வைத்து - * அருவினையேன்
நெடுங்காலமும்கண்ணன்நீண்மலர்ப்பாதம்பரவிப்பெற்ற
தொடுங்காலொசியுமிடை * இளமான்சென்றசூழ்கடமே. (௩எ)

கடமாயினகள்கழித்து * தன்கால்வன்மையால்பலநாள்
தடமாயினபுக்குநீர்நிலைநின்றதவமிதுகொல் *
குடமாடியிம்மண்ணும்விண்ணும்குலுங்கவுலகளந்து
நடமாடியபெருமான் * உருவொத்தனநீலங்களே. (௩அ)

நீலத்தடவரைமேல்புண்டரீகநெடுந்தடங்கள்
போல * பொலிந்தெமக்கெல்லாவிடத்தவும் * பொங்குமுந்நீர்
ஞாலப்பிரான்விசும்புக்கும்பிரான்மற்றும்நல்லோர்பிரான்
கோலம்கரியபிரான் * எம்பிரான்கண்ணின்கோலங்களே. (௩௯)

கோலப்பகல்களிறொன்றுகற்புய்ய * குழாம்விரிந்த
நீலக்கங்குல்களிறெல்லாம்நிறைந்தன * நேரிழையீர்
ஞாலப்பொன்மாதின்மணாளன்துழாய்நங்கள்சூழ்குழற்கே
ஏலப்புனைந்தென்னைமார் * எம்மைநோக்குவதென்றுகொலோ. (௪0)

என்றும்புன்வாடையிதுகண்டறிதும் * இவ்வாறுவெம்மை
ஒன்றுமுருவும்சுவடும்தெரியிலம் * ஓங்கசுரர்
பொன்றும்வகைபுள்ளையூர்வானருளருளாதவிந்நாள்
மன்றில்நிறைபழிதூற்றி * நின்றென்னைவன்காற்றடுமே. (௪௧)

† "சீரடி" என்றும் பாடம்.

வன்காற்றறையவொருங்கேமறிந்துகிடந்தலர்ந்த *
மென்கால்கமலத்தடம்போல்பொலிந்தன * † மண்ணும்விண்ணும்
என்காற்களவின்மைகாண்மினென்பாளுேத்துவான்நிமிர்ந்த
‡ தன்கால்பணிந்தவென்பால் * எம்பிரானதடங்கண்களே. (சஉ)

கண்ணும்செந்தாமரைகையுமவையடியோவவையே *
வண்ணம்கரியதோர்மால்வரைபோன்று * மதிவிகற்பால்
விண்ணும்கடந்தும்பரப்பால்மிக்குமற்றெப்பால்யவர்க்கும்
எண்ணுமிடத்ததுவோ * எம்பிரானதெழில்நிறமே. (சந)

நிறமுயர்கோலமும்பேருமுருவுமிவையிவையென்று - *
அறமுயல்ஞானச்சமயிகள்பேசிலும் * அங்கங்கெல்லாம்
உறவுயர்ஞானச்சுடர்விளக்காய்நின்றதன்றியொன்றும்
பெறமுயன்றாரில்லையால் எம்பிரானபெருமையையே. (சச)

பெருங்கேழலார்தம்பெரும்கண்மலர்ப்புண்டரீகம் * நம்மேல்
ஒருங்கேபிறழவைத்தாரிவ்வகாலம் * ஒருவர்நம்போல்
வரும்கேழ்பவருளரேதொல்லைவாழியஞ்சூழ்பிறப்பும்
மருங்கேவரப்பெறுமே * சொல்லுவாழிமடநெஞ்சமே. (சரு)

மடநெஞ்சமென்றும்தமதென்றும் * ஓர்கருமம்கருதி,
விடநெஞ்சையுற்றார்விடவோவவமையும் * அடிப்பொன்பெயரோன்
தடநெஞ்சம்கீண்டபிரானார்தமதடிக்கீழ்விடப்போய்த்
திடநெஞ்சமாய் * எம்மைநீத்தின்றுதாறும்திரிகின்றதே. (சசு)

திரிகின்றதுவடமாருதம் * திங்கள்வெந்தீமுகந்து
சொரிகின்றது அதுவுமது * கண்ணன்விண்ணூர்தொழவே
¶ சரிகின்றதுசங்கம்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை
விரிகின்றதுமுழுமெய்யும் * என்னுங்கொலென்மெல்லியற்கே. (சஎ)

மெல்லியலாக்கைக்கிருமி * குருவில்மிளிர்தந்தாங்கே
செல்லியசெல்கைத்துலகையென்காணும் * என்னாலும்தன்னைச்
சொல்லியசூழல்திருமாலவன்கவியாதுகற்கேன்,
பல்லியின்சொல்லும்சொல்லா * கொள்வதோவுண்டுபண்டுபண்டே.

பண்டும்பலபலவீங்கிருள்காண்டும் * இப்பாயிருள்போல்
கண்டுமறிவதும்கேட்பதும்யாமிலம் * காளவண்ண
வண்டுண்துழாய்ப்பெருமான்மதுசூதனன்தாமோதரன்,
உண்டுமுமிழ்ந்தும்கடாய * மண்ணேரன்னவொண்ணுதலே. (சகூ)

ஒண்ணுதல்மாமையொளிபயவாமை * விரைந்துநந்தேர்
நண்ணுதல்வேண்டும்வலவ! கடாகின்று * தேன்நவின்ற

† "விண்ணும்மண்ணும்" என்றும்பாடம். ‡ "தன்பால்" என்றுபாடாந்தரம். ¶ "சரிகின்றன" என்றும்பாடம்.

விண்முதல்நாயகன்நீண்முடிவெண்முத்தவாசிகைத்தாய்,
மண்முதல்சேர்வுற்று - * அருவிசெய்யாநிற்கும்மாமலைக்கே. (ரு0)

மலைகொண்டுமத்தாவரவால்சுழற்றியமாயப்பிரான் *
அலைகண்டுகொண்டவமுதம்கொள்ளாதுகடல் * பரதர்
விலைகொண்டுதந்தசங்கமிவைவேரித்துழாய் துணையாய்த்
துலைகொண்டுதாயம்கிளர்ந்து * கொள்வானொத்தழைக்கின்றதே. ()

அழைக்கும்கருங்கடல்†வெண்திரைகைக்கொண்டுபோய் *அலர்வாய்
மழைக்கண்மடந்தையரவணையேற * மண்மாதர்விண்வாய்
அழைத்துப்புலம்பிமுலைமலைமேல்நின்றும்ஆறுகளாய்
மழைக்கண்ணநீர் * திருமால்கொடியானென்றுவார்கின்றதே. (ருஉ)

வாராயினமுலையாளிவள்வானோர்தலைமகனும் *
சீராயினதெய்வநன்னோயிது * தெய்வத்தண்ணந்துழாய்த்
தாராயினும்தழையாயினும்தண்கொம்பதாயினும்கீழ்
வேராயினும் * நின்றமண்ணாயினும்கொண்டுவீசுமினே. (ருங)

வீசும்சிறகால்பறத்தீர் * விண்ணாடுநுங்கட்கெளிது
பேசும்படியன்னபேசியும்போவது * நெய்தொடுவுண்
டேசும்படியன்னசெய்யுமெம்மீசர்விண்ணோர்பிரானார்
மாசின்மலரடிக்கீழ் * எம்மைச்சேர்விக்கும்வண்டுகளே. (ருச)

வண்டுகளோவம்மின், நீர்ப்பூநிலப்பூமரத்திலொண்பூ *
உண்டுகளித்துழல்வீர்க்கொன்றுரைக்கியம் * ஏனமொன்றாய்
மண்துகளாடிவைகுந்தமன்னாள்குழல்வாய்விரைபோல்
விண்டுகள்வாரும் * மலருளவோநும்வியலிடத்தே. (ருரு)

வியலிடமுண்டபிரானார்விடுத்ததிருவருளால் *
உயலிடம்பெற்றுய்ந்தமஞ்சலம்தோழி * ஓர்தண்தென்றல்வந்
தயலிடையாருமறிந்திலரம்பூந்துழாயினின்தேன்
புயலுடைநீர்மையினால் * தடவிற்றென் ‡ புலன்கலனே. (ருசு)

¶ புலக்குண்டலப்புண்டரீகத்தபோர்க்கெண்டை * வல்லியொன்றால்
விலக்குண்டுலாகின்றுவேல்விழிக்கின்றன * கண்ணன்கையால்
மலக்குண்டமுதம்சுரந்த மறிகடல்போன்றவற்றால்
கலக்குண்டநான்றுகண்டார் * எம்மையாரும்கழறலரே. (ருஎ)

கழறலமொன்றேநிலமுழுதாயிற்றும் * ஒருகழல்போய்
நிழல்தரவெல்லாவிசும்புநிறைந்தது * நீண்டவண்டத்
துழறலர்ஞானச்சுடர்விளக்காயுயர்ந்தோரையில்லா
அழறலர்தாமரைக்கண்ணன் * என்னோவிங்களக்கின்றதே. (ருஅ)

† "வெண்திரைக்கே" என்றுபாடாந்தரம். "பொலன்கலனே" என்று பாடாந்தரம். ¶ "பொலக்குண்டலம்" என்றுபாடம்.

அளப்பருந்தன்மையவூழியங்கங்குல் * அந்தண்ணந்துழாய்க்
குளப்பெருங்காதலிற்நீளியவாயுள * ஒங்குமுந்நீர்
வளப்பெருநாடன் மதுசூதனனென்னும்வல்விணையேன்
தளப்பெருநீண்முறுவல் * செய்யவாயதடமுலையே. (ருகூ)

‡‡ முலையோமுழுமுற்றும்போந்தில * மொய்பூங்குழல்குறிய
கலையோவரையில்லைநாவோகுதறும் * கடல்மண்ணெல்லாம்
விலையோமவனமிளிருங்கணிவள்பரமே, பெருமான்
மலையோ * திருவேங்கடமென்றுகற்கின்றவாசகமே. (சூ0)

வாசகஞ்செய்வதுநம்பரமே * தொல்லைவானவர்தம்
நாயகன்நாயகரெல்லாந்தொழுமவன் * ஞாலம்முற்றும்
வேயகமாயினுஞ்சோராவகையிரண்டேயடியால்
தாயவன் * ஆய்க்குலமாய்வந்துதோன்றிற்றுநம்மிறையே. (சூக)

இறையோவிரங்கினுமீங்கோர்பெண்பால் * எனவுமிரங்கா
தறையோவெனநின்றதிரும்கருங்கடல் * ஈங்கிவள்தன்
நிறையோவினியுன்திருவருளாலன்றிக்காப்பரிதால்
முறையோ * அரவணைமேல்பள்ளிகொண்டமுகில்வண்ணனே. (சூஉ)

வண்ணம்சிவந்துள வானாடமரும்குளிர்விழிய *
தண்மென்கமலத்தடம்போல்பொலிந்தன * தாமிவையோ,
கண்ணன்திருமால்திருமுகந்தன்னொடும்காதல்செய்தேற்
கெண்ணம்புகுந்து - * அடியேனொடிக்காலமிருக்கின்றதே. (சூங)

இருக்கார்மொழியால்நெறியிழுக்காமை * உலகளந்த
திருத்தாளிணைநிலத்தேவர்வணங்குவர் * யாமுமவா
ஒருக்காவினையொடுமெம்மொடும்நொந்துகனியின்மையில்
கருக்காய்கடிப்பவர்போல் * திருநாமச்சொல்கற்றனமே. (சூச)

கற்றுப்பிணைமலர்கண்ணின்குலம்வென்று * ஓரோகரும
முற்றுப்பயின்றுசெவியொடுசாவி * உலகமெல்லாம்
முற்றும்விழுங்கியுமிழ்ந்தபிரானார்திருவடிக்கீழ்
உற்றுமுறுதும் * மிளிர்ந்தகண்ணாயெம்மையுண்கின்றவே. (சூரு)

உண்ணாதுறங்காதுணர்வுறுமெத்தனையோகியர்க்கும்
எண்ணாய்மிளிருமியல்வினவாம் * எரிநீர்வளிவான்
மண்ணாகியவெம்பெருமான்றனதுவைகுந்தமன்னாள்
கண்ணாயருவினையேன் * உயிராயினகாவிகளே. (சூசூ)

காவியும்நீலமும்வேலும்கயலும்பலபலவென்று - *
ஆவியின்தன்மையளவல்லபாரிப்பு - * அசுரைச்செற்ற
மாவியம்புள்வல்லமாதவன்கோவிந்தன்வேங்கடம்சேர்
தூவியம்பேடையன்னாள் * கண்களாயதுணைமலரே. (சூஎ)

மலர்ந்தேயொழிந்திலமாலையும் மாலைப்பொன்வாசிகையும் *
புலந்தோய்தழைப்பந்தர் தண்டுறநாற்றி * பொருகடல்சூழ்
நிலம்தாவியவெம்பெருமான் தனதுவைகுந்தமென்னாய்
கலந்தார்வரவெதிர்கொண்டு * வன்கொன்றைகள்கார்த்தனவே. (சுஅ)

காரேற்றிருள்செகிலேற்றின்சுடருக்குளைந்து * வெல்வான்
போரேற்றெதிர்ந்ததுன் தலைமாலை * புவனியெல்லாம்
நீரேற்றளந்தநெடியபிரானருளாவிடுமே
வாரேற்றிளமுலையாய் * வருந்தேலுன்வளைத்திறமே. (சுகூ)

வளைவாய்த்திருச்சக்கரத்தெங்கள்வானவனார்முடிமேல் *
தளைவாய்நறுங்கண்ணித்தண்ணந்துழாய்க்குவண்ணம்பயலை *
விளைவான், மிகவந்துநாள்திங்களாண்டூழிநிற்கவெம்மை
உளைவான்புகுந்து - * இதுவோர்கங்குலாயிரமூழிகளே. (எ0)

ஊழிகளாயுலகேழுமுண்டானென்றிலம் * பழங்கண்
டாழிகளாம்பழவண்ணமென்றேற்கு - * அஃதேகொண்டன்னை
நாழிவளோவென்றும்ஞாலமுண்டான்வண்ணம் சொல்லிற்றென்றும்
தோழிகளோவுரையீர் * எம்மையம்மனைசூழ்கின்றவே. (எக)

சூழ்கின்றகங்குல்சுருங்காவிருளின்கரும் † திணும்பை *
போழ்கின்றதிங்களம்பிள்ளையும்போழ்க * துழாய்மலர்க்கே
தாழ்கின்றநெஞ்சத்தொருதமியாட்டியேன்மாமைக்கின்று
வாழ்கின்றவாறிதுவோ * வந்துதோன்றிற்றுவாலியதே. (எஉ)

வால்வெண்ணில வுலகாரச்சுரக்கும்வெண்திங்களென்னும் *
பால்விண் ‡ சுரவி சுரமுதிர்மாலை * பருதிவட்டம்
போலும்சுடரடலாழிப்பிரான்பொழிலேழளிக்கும்
சால்பின்தகைமைகொலாம் * தமியாட்டிதளர்ந்ததுவே. (எ௩)

தளர்ந்தும்முறிந்தும்வருதிரைப்பாயல் * திருநெடுங்கண்
வளர்ந்துமறிவுற்றும்வையம்விழுங்கியும் * மால்வரையைக்
கிளர்ந்துமறிதரக்கீண்டெடுத்தான்முடிசூடுதுழாய்
அளைந்துண்சிறுபசுந்தென்றல் * அந்தோவந்துலாகின்றதே. (எச)

உலாகின்றகெண்டையொளியம்பு — * எம்மாவியையூடுருவக்
குலாகின்றவெஞ்சிலைவாண்முகத்தீர் * குனிசங்கிடறிப்
புலாகின்றவேலைப்புணரியம்பள்ளியம்மானடியார்
நிலாகின்றவைகுந்தமோ * வையமோநும்நிலையிடமே. (எரு)

இடம்போய்விரிந்திவ்வுலகளந்தானெழிலார்தண்டுழாய்
வடம்போதினையும்மடநெஞ்சமே * நங்கள்வெள்வளைக்கே
விடம்போல்விரிதலிதுவியப்பே வியன்தாமரையின்
தடம்போதொடுங்க * மெல்லாம்பலர்விக்கும்வெண்திங்களே. (எசு)

---

† திணும்பு-செறிவு. ‡ சுறவி - பசு.

திங்களம்பிள்ளைபுலம்பத் தன்செங்கோலரசுபட்ட *
செங்களம்பற்றிநின்றெள்குபுன்மாலை * தென்பாலிலங்கை
வெங்களம்செய்த நம்விண்ணோர்பிரானார் துழாய் துணையா
நங்களைமாமைகொள்வான் * வந்துதோன்றிநலிகின்றதே. (௭௭)

நலியும்நரகனைவீட்டிற்றும் * வாணன் திண்டோள் துணித்த
வலியும்பெருமையும்யான்சொல்லும்நீர்த்தல்ல * மைவரைபோல்
பொலியுமுருவில்பிரானார்புனைபூந்துழாய்மலர்க்கே
மெலியுமடநெஞ்சினார் * தந்துபோயினவேதனையே. (௭௮)

வேதனை வெண்புரிநூலனை * விண்ணோர்பரவநின்ற
நாதனை ஞாலம்விழுங்குமநாதனை * ஞாலம்தத்தும்
பாதனைப் பாற்கடல்பாம்பணைமேல்பள்ளிகொண்டருளும்
சீதனையேதொழுவார் * விண்ணுளாரிலும்சீரியரே. (௭௯)

சீரரசாண்டு தன்செங்கோல்சிலநாள்செலீஇக்கழிந்த *
பாரரசொத்துமறைந்ததுநாயிறு * பாரளந்த
பேரரசே யெம்விசும்பரசே எம்மைநீத்துவஞ்சித்
தோரரசேயருளாய் * இருளாய்வந்துறுகின்றதே. (௮0)

உறுகின்றகன்மங்கள் மேலனவோர்ப்பிலராய் * இவளைப்
பெறுகின்றதாயர் மெய்நொந்துபெறார்கொல் * துழாய்குழல்வாய்
துறுகின்றிலர் தொல்லைவேங்கடமாட்டவும்சூழ்கின்றிலர்
இறுகின்றதாலிவளாகம் * மெல்லாவியெரிகொள்ளவே. (௮௧)

எரிகொள்செந்நாயி றிரண்டுடனேயுதயம்மலைவாய் *
விரிகின்றவண்ணத்தவெம்பெருமான்கண்கள் * மீண்டவற்றுள்
எரிகொள்செந்தீவீழசுரரைப்போலவெம்போலியர்க்கும்
விரிவசொல்லீரிதுவோ * வையமுற்றும்விளரியதே. (௮௨)

விளரிக்குரலன்றில்மென்பெடைமேகின்றமுன்றில்பெண்ணை *
முளரிக்குரம்பையிதுவிதுவாக * முகில்வண்ணன்பேர்
கிளரிக்கிளரிப்பிதற்றும்மெல்லாவியும்நைவுமெல்லாம்
தளரில்கொலோவறியேன் * உய்யலாவதித்தையலுக்கே. (௮௩)

தையல்நல்லார்கள்குழாங்கள்குழியகுழுவினுள்ளும் *
ஐயநல்லார்கள்குழியவிழவினும் * அங்கங்கெல்லாம்
கையபொன்னாழிவெண்சங்கொடும்காண்பானவாவுவன்நான்
மையவண்ணாமணியே * முத்தமேயென்றன்மாணிக்கமே. (௮௪)

மாணிக்கங்கொண்டுகுரங்கெறிவொத்திருளோடுமுட்டி *
ஆணிப்பொன்னன்னசுடர்படுமாலை * உலகளந்த
மாணிக்கமேயென்மரதகமே மற்றொப்பாரையில்லா
ஆணிப்பொன்னே * அடியேனடியாவியடைக்கலமே. (௮௫)

‡ "அன்னா" என்றுபாடாந்தரம்.

அடைக்கலத்தோங்குகமலத்தலாயன்சென்னியென்னும் *
முடைக்கலத்தூண்முன்னரனுக்குநீக்கியை * ஆழிசங்கம்
படைக்கலமேந்தியைவெண்ணெய்க்கன்றாய்ச்சிவன்தாம்புகளால்
புடைக்கலந்தானை * எம்மானையென்சொல்லிப்புலம்புவனே. (அசு)

புலம்புங்கனகுரல்போழ்வாயவன்றிலும் * பூங்கழிபாய்ந்
தலம்புங்கனைகுரல்சூழ்திரையாழியும் * ஆங்கவைநின்
வலம்புள்ளதுநலம்பாடுமிதுகுற்றமாகவையம்
சிலம்பும்படிசெய்வதே * திருமாலித்திருவினையே. (அஎ)

திருமாலுருவொக்கும்மேரு - * அம்மேருவில்செஞ்சுடரோன்
திருமால்திருக்கைத்திருச்சக்கரமொக்கும் * அன்னகண்டும்
திருமாலுருவோடவன்சின்னமேபிதற்றாநிற்பதோர்
திருமால்தலைக்கொண்டநங்கட்கு - * எங்கேவருந்தீவினையே. (அஅ)

தீவினைக்கருநஞ்சை நல்வினைக்கின்னமுதத்தினை *
பூவினைமேவியதேவிமணாளனை * புன்மையெள்கா
தாவினைமேய்க்கும்வல்லாயனை யன்றுலகீரடியால்
தாவினவேற்றையெம்மானை * எஞ்ஞான்றுதலைப்பெய்வனே. (அகூ)

தலைப்பெய்துயானுன்திருவடிச்சூடுந்தகைமையினால் *
நிலைப்பெய்தவாக்கைக்குநோற்றவிர்மாயமும் * மாயம்செவ்வே
நிலைப்பெய்திலாதநிலைமையுங்காண்டோரசுரர்குழாம்
தொலைப்பெய்தநேமியெந்தாய் * தொல்லையூழிசுருங்கலதே. (கூ0)

சுருங்குறிவெண்ணெய்தொடுவுண்டகள்வனை * வையமுற்றும்
ஒருங்குறவுண்டபெருவயிற்றாளனை * மாவலிமாட்
டிருங்குறளாகியிசையவோர்மூவடிவேண்டிச்சென்ற
பெருங்கிறியானையல்லால் * அடியேன்நெஞ்சம்பேணலதே. (கூக)

பேணலமில்லாவரக்கர்முந்நீரபெரும்பதிவாய் *
நீணகர்நீளெரிவைத்தருளாயென்று * நின்னைவிண்ணோர்
† தாள்நிலந்தோய்ந்துதொழுவர்நின்மூர்த்திபல்கூற்றிலொன்று
காணலுமாங்கொலென்றே * வைகல்மாலையும்காலையுமே. (கூஉ)

காலைவெய்யோற்குமுன்னோட்டுக்கொடுத்தகங்குல்குறும்பர் *
மாலைவெய்யோன்பட வையகம்பாவுவர் * அன்னகண்டும்
காலைநன்ஞானத்துறைபடிந்தாடிக் கண்போதுசெய்து
மாலைநன்னாவில்கொள்ளார் * நினையாரவன்மைப்படியே. (கூ௩)

மைப்படிமேனியும்செந்தாமரைக்கண்ணும்வைதிகரே *
மெய்ப்படியாலுன்திருவடிச்சூடும்தகைமையினார் *
எப்படியூராமிலைக்கக் குருட்டாமிலைக்குமென்னும்
அப்படியானும்சொன்னேன் * அடியேன்மற்றுயாதென்பனே. (கூச)

† "கால்நிலம்" என்றும் பாடம்.

✣ யாதானுமோராக்கையில்புக்கு - * அங்காப்புண்டுமோப்பவிழ்ந்தும்
மூதாவியில்தடுமாறுமுயிர்முன்னமே * அதனால்
யாதானும்பற்றிநீங்கும்விரதத்தைநல்வீடுசெய்யும்
மாதாவினைப்பிதுவை * திருமாலைவணங்குவனே. (சுரு)
வணங்குந்துறைகள்பலபலவாக்கி * மதிவிகற்பால்
பிணங்குஞ்சமயம்பலபலவாக்கி * அவையவைதோ
றணங்கும்பலபலவாக்கிநின்மூர்த்திபரப்பிவைத்தாய்
இணங்குநின்னோரையில்லாய் * நின்கண்வேட்கையெழுவிப்பனே. ()
எழுவதும்மீண்டேபடுவதும்பட்டு - * எணையூழிகள்போய்க்
கழிவதும்கண்டுகண்டெள்கலல்லால் * இமையோர்கள்குழாம்
தொழுவதும்சூழ்வதும்செய்தொல்லைமாலைக்கண்ணாரக்கண்டு
கழிவதோர்காதலுற்றார்க்கும் * உண்டோகண்கள் துஞ்சுதலே. (சுஎ)
துஞ்சாமுனிவருமல்லாதவருந்தொடரநின்ற *
எஞ்சாப்பிறவியிடர்கடிவான் * இமையோர்தமக்கும்
தன்சார்விலாததனிப்பெருமூர்த்திதன்மாயம்செவ்வே
நெஞ்சால்நினைப்பரிதால் * வெண்ணெயூணென்னுமீனச்சொல்லே. ()

சாற்றுப்பாட்டுக்கள்.

✣ ஈனச்சொல்லாயினுமாக * எறிதிரைவையம்முற்றும்
ஏனத்துருவாயிடந்தபிரான் * இரும்கற்பகம்சேர்
வானத்தவர்க்குமல்லாதவர்க்கும்மற்றெல்லாயவர்க்கும்
ஞானப்பிரானையல்லாலில்லை * நான்கண்டநல்லதுவே. (சுகூ)
✣ நல்லார்நவில்குருகூர்நகரான் * திருமால்திருப்பேர்
வல்லாரடிக்கண்ணிசூடிய * மாறன்விண்ணப்பஞ்செய்த
சொல்லார்தொடையலிந்நூறும்வல்லாரழுந்தார்பிறப்பாம்
பொல்லாவருவினை * மாயவன்சேற்றள்ளல்பொய்ந்நிலத்தே. (க00)
தசகம்.—பொய்யரிசுட்டிசையென்றும் மலைவாசகமூழியுறு சுருங்குசெக்கர்.

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

திருவிருத்தம் ஸம்பூர்ணம்.

ஆ பாட்டு - க00.

---

நம்மாழ்வாரருளிச்செய்த

# திருவாசிரியம்.

தனியன்.

அருளாளப்பெருமாளெம்பெருமானருளிச்செய்தது.

காசினியோர்தாம்வாழக் கலியுகத்தேவந்துதித்து - *
ஆசிரியப்பாவதனாலருமறை நூல்விரித்தானை *
தேசிகனைப்பராங்குசனைத்திகழ்வகுளத்தாரானை *
மாசடையாமனத்துவைத்து மறவாமல்வாழ்த்துதுமே.

தேசியராகம் - ஆதிதாளம்.

❋ செக்கர்மாமுகிலுடுத்து மிக்கசெஞ்சுடர்ப்
பருதிசூடி * அஞ்சுடர்மதியம்பூண்டு *
பலசுடர்புனைந்தபவளச்செவ்வாய் *
திகழ்பசும்சோதி மரதகக்குன்றம் *
கடலோன்கைமிசைக்கண்வளர்வதுபோல் *
பீதகவாடைமுடிபூண்முதலா *
மேதகுபல்கலனணிந்து * சோதி
வாயவும்கண்ணவும்சிவப்ப * மீதிட்டுப்
பச்சைமேனிமிகப்பகைப்ப *
நச்சுவினைக்கவர்தலையரவினமளியேறி *
எறிகடல்நடுவுளறிதுயிலமர்ந்து *
சிவனயனிந்திரனிவர்முதலனைத்தோர் *
தெய்வக்குழாங்கள்கைதொழக்கிடந்த *
தாமரையுந்தி தனிப்பெருநாயக *
மூவுலகளந்தசேவடியோயே. (க)

உலகுபடைத்துண்டவெந்தை * அறைகழல்
சுடர்ப்பூந்தாமரைசூடுதற்கு - * அவாவா
ருயிருருகியுக்க * நேரியகாத
லன்பிலின்பீன்தேறல் * அமுத
வெள்ளத்தானும்சிறப்புவிட்டு - * ஒருபொருட்
கசைவோரசைக * திருவொடுமருவிய
இயற்கை * மாயாப்பெருவிறலுலகம்
மூன்றினொடு நல்வீடுபெறினும் *
கொள்வதெண்ணுமோ தெள்ளியோர்குறிப்பே. (உ)

குறிப்பில்கொண்டு நெறிப்பட * உலகம்
மூன்றுடன் வணங்குதோன்றுபுகழ், ஆணை *
மெய்பெறநடாயதெய்வம்மூவரில்
முதல்வானாகி * சுடர்விளங்ககலத்து *
வரைபுரைதிரைபொருபெருவரைவெருவர *
உருமுரலொலிமலிநளிர்கடற்பட்வர
வரசு - * உடல்தடவரைசுழற்றிய * தனிமாத்
தெய்வத்தடியவர்க்கினிநாமாளாகவே
யிசையுங்கொல் * ஊழிதோறூழியோவாதே. (ங)

ஊழிதோறூழியோவாது * வாழிய
வென்றுயான்தொழவிசையுங்கொல் *
யாவகையுலகமும்யாவருமில்லா *
மேல்வரும்பெரும்பாழ்காலத்து - * இரும்பொருட்
கெல்லாமரும்பெறல்தனிவித்து - * ஒருதா

ஞகித்தெய்வநான்முகக்கொழுமுளை
யீன்று * முக்கணீசனொடுதேவுபலநுதலி *
மூவுலகம்விளைத்தஉந்தி *
மாயக்கடவுள்மாமுதலடியே. (சு)

மாமுதலடிப்போதொன்றுகவிழ்த்தலர்த்தி *
மண்முழுதுமகப்படுத்து - * ஒண்சுடரடிப்போ
தொன்றுவிண்செலீஇ * நான்முகப்புத்தேள்
நாடுவியந்துவப்ப * வானவர்முறைமுறை
வழிபடநெறீஇ * தாமரைக்காடு
மலர்க்கண்ணொடுகனிவாயுடையது
மாய் * இருநாயிறாயிரம்மலர்ந்தன்ன *
கற்பகக்காவு பற்பலவன்ன *
முடிதோளாயிரம்தழைத்த *
நெடியோய்க்கல்லதுமடியதோவுலகே. (ரு)

ஓஓஉலகினதியல்வே * ஈன்றோளிருக்க
மணநீராட்டி * படைத்திடந்துண்டுமிழ்ந்
தளந்து * தேர்ந்துலகளிக்கும்முதற்பெரும்
கடவுள்நிற்ப * புடைப்பலதானறி
தெய்வம்பேணுதல் * தனாது
புல்லறிவாண்மைபொருந்தக்காட்டி *
கொல்வனமுதலாவல்லனமுயலும் *
இனையசெய்கையின்புதுன்பளி *
தொன்மாமாயப்பிறவியுள்நீங்கா *
பன்மாமாயத்தழுந்துமாநளிர்ந்தே. (சு)

நளிர்மதிச்சடையனும்நான்முகக்கடவுளும் *
தளிரொளியிமையவர்தலைவனும்முதலா *
யாவகையுலகமும்யாவருமகப்பட *
நிலநீர்தீகால்சுடரிருவிசும்பும் *
மலர்சுடர்பிறவும்சிறிதுடன்மயங்க *
ஒருபொருள்புறப்பாடின்றி முழுவது
மகப்படக்கரந்து - * ஓராலிலைச்சேர்ந்தவெம்
பெருமாமாயனையல்லது - *
ஒருமாதெய்வம்மற்றுடையமோயாமே. (எ)

செக்கருலகுகுறிப்பூழி மாமுதல்ஓஓஉலகு நளிர்முயற்றி.
ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



நம்மாழ்வாரருளிச்செய்த
திருவாசிரியம் ஸம்பூர்ணம்.
ஆ பாட்டு - எ.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

நம்மாழ்வாரருளிச்செய்த

# பெரியதிருவந்தாதி.

## தனியன்.

எம்பெருமானாருளிச்செய்தது.

முந்துற்றநெஞ்சேமுயற்றிதரித்துரைத்து
வந்தித்துவாயாரவாழ்த்தி *—சந்த
முருகூரும்சோலைசூழ்மொய்பூம்பொருநல்
குருகூரன்மாறன்பேர்கூறு.

---

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

⁂ முயற்றிசுமந்தெழுந்துமுந்துற்றநெஞ்சே *
இயற்றுவாயெம்மொடுநீகூடி *—நயப்புடைய
நாவீன்தொடைகிளவி யுள்பொதிவோம் * நற்பூவைப்
பூவீன்றவண்ணன்புகழ். (௧)

புகழ்வோம்பழிப்போம்புகழோம்பழியோம் *
இகழ்வோம்மதிப்போம்மதியோம்—இகழோம் * மற்
றெங்கண்மால்செங்கண்மால் சீறல்நீதீவினையோம்
எங்கள்மால்கண்டாயிவை. (௨)

இவையன்றேநல்லஇவையன்றேதீய *
இவையென்றிவையறிவனேலும் *—இவையெல்லாம்
என்னாலடைப்புநீக் கொண்ணா திறையவனே *
என்னால்செயல்பாலதென்? (௩)

என்னில்மிகுபுகழார்யாவரே * பின்னையும்மற்
றெண்ணில்மிகுபுகழேன்யானல்லால் *—என்ன
கருஞ்சோதிக்கண்ணன்கடல்புரையும் * சீலப்
பெருஞ்சோதிக்கென்னெஞ்சாட்பெற்று. (௪)

பெற்றதாய்நீயே பிறப்பித்ததந்தைநீ *
மற்றையாராவாரும்நீபேசில் *—எற்றேயோ
மாயமாமாயவளை மாயமுலைவாய்வைத்த *
நீயம்மாகாட்டும்நெறி. (௫)

நெறிகாட்டிநீக்குதியோ * நின்பால்கருமா
முறிமேனிகாட்டுதியோ * மேனாள்—அறியோமை
என்செய்வானெண்ணினாய்கண்ணனே * ஈதுரையாய்,
என்செய்தாலென்படோம்யாம். (௬)

யாமேயருவினையோம் சேயோம் * என்னெஞ்சினார்
தாமேயணுக்கராய்ச்சார்ந்தொழிந்தார் *—பூமேய
செம்மாதைநின்மார்வில்சேர்வித்து * பாரிடந்த
அம்மா நின்பாதத்தருகு. (எ)

அருகும்சுவடும்தெரிவுணரோம் * அன்பே
பெருகும்மிகவிதுவென்பேசீர் *—பருகலாம்
பண்புடையீர்பாரளந்தீர் பாவியேம்கண்காண்பரிய *
நுண்புடையீர் நும்மைநுமக்கு. (அ)

நுமக்கடியோமென்றென்று நொந்துரைத்தென் * மாலார்
தமக்கவர்தாம்சார்வரியரானால் *—எமக்கினி
யாதானுமாகிடுகாண் நெஞ்சே * அவர்திறத்தே
யாதானும்சிந்தித்திரு. (கூ)

இருநால்வரீரைந்தின்மேலொருவர்எட்டோ
டொருநால்வரோரிருவரல்லால் *—திருமாற்கு
யாமார்வணக்கமார்ஏபாவழ்நன்னெஞ்சே *
நாமாமிகவுடையோம்நாழ். (க0)

நாழாலமர்முயன்றவல்லரக்கனின்னுயிரை *
வாழாவகைவலிதல்நின்வலியே *—ஆழாத
பாருநீவானுநீகாலுநீதீயுநீ *
நீரும்நீயாய்நின்றநீ. (கக)

நீயன்றேயாழ்துயரில்வீழ்விப்பான்நின்றுழன்றாய் *
போயொன்றுசொல்லியென் போநெஞ்சே *—நீயென்றும்
காழ்த்துபதேசம்தரினும்கைக்கொள்ளாய் * கண்ணன்தாள்
வாழ்த்துவதேகண்டாய்வழக்கு. (கஉ)

வழக்கொடுமாறுகொளன் றடியார்வேண்ட *
இழக்கவும்காண்டுமிறைவ—இழப்புண்டே *
எம்மாட்கொண்டாகிலும் யான்வேண்ட வென்கண்கள் *
தம்மால்காட்டுன்மேனிச்சாய். (கங)

சாயால்கரியானை யுள்ளறியாராய்நெஞ்சே *
பேயார்முலைகொடுத்தார்பேயாராய் *—நீயார்போய்த்
தேம்பூண்சுவைத்துஊனறிந்தறிந்தும் * தீவினையாம்
பாம்பார்வாய்கைநீட்டல்பார்த்தி. (கச)

பார்த்தோரெதிரிதான் நெஞ்சே * படுதுயரம்
பேர்த்தோதப்பீடழிவாம் பேச்சில்லை *—ஆர்த்தோதம்
தம்மேனித்தாள்தடவத்தாங்கிடந்து * தம்முடைய
செம்மேனிக்கண்வளர்வார்சீர். (கரு)

சீரால்பிறந்துசிறப்பால்வளராது *
பேர்வாமனுகாக்கால்பேராளா *—மார்பாரப்
புல்கிநீயுண்டுமிழ்ந்தபூமிநீரேற்பரிதே *
சொல்லுநீயாமறியச்சூழ்ந்து. (கசூ)

சூழ்ந்தடியார்வேண்டினக்கால்தோன்றுதுவிட்டாலும் *
வாழ்ந்திடுவர்பின்னும்தம்வாய்திறவார் *—சூழ்ந்தெங்கும்
வாள்வரைகள்போலரக்கன்வன்தலைகள்தாமிடிய *
தாள்வரைவில்லேந்தினார்தாம். (கஎ)

தாம்பாலாப்புண்டாலுமத்தழும்புதானிளக *
பாம்பாலாப்புண்டுபாடற்றாலும் *—சோம்பாதிப்
பல்லுருவையெல்லாம்படர்வித்தவித்தா * உன்
தொல்லுருவையாரறிவார்சொல்லு. (கஅ)

சொல்லில்குறையில்லைச் சூதறியாநெஞ்சமே *
எல்லிப்பகலென்னுதெப்போதும் *—தொல்லைக்கண்
மாத்தானைக்கெல்லாமோரைவரையேமாறாக *
காத்தானைக்காண்டுநீகாண். (ககூ)

காணப்புகிலறிவுகைக்கொண்டநன்னெஞ்சம் *
நாணப்படுமென்றேநாம்பேசில் *—மாணி
யுருவாகிக்கொண்டுலகம்நீரேற்றசீரான் *
திருவாகம்தீண்டிற்றுச்சென்று. (உ0)

சென்றங்குவெந்நரகில்சேராமல்காப்பதற்கு *
இன்றிங்கென்னெஞ்சாலிடுக்குண்ட *—அன்றங்குப்
பாருருவும்பார்வளைத்தநீருருவும்கண்புதைய *
காருருவன்தான்நிமிர்த்தகால். (உக)

காலேபொதத்திரிந்து கத்துவராமினநாள் *
மாலார்குடிபுகுந்தாரென்மனத்தே *—மேலால்
தருக்குமிடம்பாட்டினொடும்வல்வினையார்தாம் * வீற்
றிருக்குமிடம்காணாதிளைத்து. (உஉ)

இளைப்பாயிளையாப்பாய்நெஞ்சமேசொன்னேன் *
இளைக்கநமன்தமர்கள்பற்றி—இளைப்பெய்த *
நாய்தந்துமோதாமல் நல்குவான் நல்காப்பான் *
தாய்தந்தையெவ்வுயிர்க்கும்தான். (உ௩)

தானேதனித்தோன்றல் தன்னளப்பொன்றில்லாதான் *
தானேபிறர்கட்கும்தற்றோன்றல் *—தானே
இளைக்கிற்பார்க்கீழ்மேலாம்மீண்டமைப்பானானால் *
அளக்கிற்பார்பாரின்மேலார்.? (உச)

ஆரானுமாதானுஞ்செய்ய * அகலிடத்தை
ஆராய்ந்ததுதிருத்தலாவதே *—சீரார்
மனத்தலைவன் துன்பத்தைமாற்றினேன் * வானோர்
இனத்தலைவன் கண்ணனால்யான். (உரு)

யானுமென்னெஞ்சுமிசைந்தொழிந்தோம் * வல்வினையைக்
கானும்மலையும்புகக்கடிவான் *—தானோர்
இருளன்னமாமேனியெம்மிறையார்தந்த
அருளென்னும்தண்டாலடித்து. (உசு)

அடியால்படிகடந்தமுத்தோ * அதன்றேல்
முடியால்விசும்பளந்தமுத்தோ *—நெடியாய்ச்
செறிகழல்கள்தாள்நீமிர்த்துச்சென்றுலகமெல்லாம் *
அறிகிலமால்நீயளந்தவன்று. (உஎ)

அன்றேநங்கண்காணு மாழியான்காருருவம் *
இன்றேநாம்காணாதிருப்பதுவும் *—என்றேனும்
கட்கண்ணால்காணாதவவ்வுருவை * நெஞ்சென்னும்
உட்கண்ணேல்காணுமுணர்ந்து. (உஅ)

உணரவொருவர்க்கெளியனேசெவ்வே *
இணரும்துழாயலங்கலெந்தை *—உணரத்
தனக்கெளிய ரெவ்வளவரவ்வளவரானால் *
எனக்கெளியனெம்பெருமானிங்கு. (உக)

இங்கில்லைபண்டுபோல்வீற்றிருத்தல் * என்னுடைய
செங்கண்மால்சீர்க்குஞ்சிறிதுள்ளம் *—அங்கே
மடியடக்கிநிற்பதனில் வல்வினையார்தாம் * மீண்
டடியெடுப்பதன்றோவழகு. (௩0)

அழகுமறிவோமாய் வல்வினையும்தீர்ப்பான் *
நிழலுமடிதாறுமானோம் *—சுழலக்
குடங்கடலைமீதெடுத்துக்கொண்டாடி * அன்றத்
தடங்கடலைமேயார்தமக்கு. (௩க)

தமக்கடிமைவேண்டுவார்தாமோதரனார் *
தமக்கடிமைசெய்யென்றால்செய்யாது *—எமக்கென்றும்
தாம்செய்யும்தீவினைக்கேதாழ்வுறுவர்நெஞ்சினார் *
யான்செய்வதிவ்விடத்திங்கியாது. (௩உ)

யாதானுமொன்றறியில்தன்னுகக்கிலென்கொலோ *
யாதானும்நேர்ந்தணுகாவாறுதான் *—யாதானும்
தேறுமாசெய்யாவசுரர்களை * நேமியால்
பாறுபாறாக்கினான்பால். (௩௩)

பாலாழிநீகிடக்கும்பண்பை * யாம்கேட்டேயும்
காலாழும்நெஞ்சழியும்கண்சுழலும் *—நீலாழிச்
சோதியாயாதியாய் தொல்வினையெம்பால்கடியும் *
நீதியாய்நிற்சார்ந்துநின்று. (ங௪)

நின்றுமிருந்தும்கிடந்தும்திரிதந்தும் *
ஒன்றுமோவாற்றானென்னெஞ்சகலான் *—அன்றங்கை
வன்புடையால்பொன்பெயரோன் வாய்தகர்த்துமார்விடந்தான் *
அன்புடையனன்றேயவன். (ங௫)

அவனுமிவனுமுவனும் * மற்றும்ப
ரவனுமவனென்றிராதே *—அவனும்
அவனேயெனத்தெளிந்து கண்ணனுக்கேதீர்ந்தால் *
அவனேயெவனேலுமாம். (ங௬)

ஆமாறறிவுடையராவதரிதன்றே *
நாமேயதுவுடையோம் நன்னெஞ்சே *—பூமேய்
மதுகரமேதண்டுழாய் மாலாரை * வாழ்த்தா
மதுகரமேயன்பாலமை. (ங௭)

அமைக்கும்பொழுதுண்டேயாராயில்நெஞ்சே *
இமைக்கும்பொழுதுமிடைச்சி—குமைத்திறங்கள் *
ஏசியேயாயினுமீன்துழாய்மாயனையே *
பேசியேபோக்காய்பிழை. (ங௮)

பிழைக்கமுயன்றோமோநெஞ்சமேபேசாய் *
தழைக்கும்துழாய்மார்வன்றன்னை *—அழைத்தொருகால்
போயுபகாரம்பொலியக்கொள்ளாது - * அவன்புகழே
வாயுபகாரம் கொண்டவாய்ப்பு. (ங௯)

வாய்ப்போவிதுவொப்பமற்றில்லைவாநெஞ்சே *
போய்ப்போய்வெந்நரகில்பூவியேல் *—தீப்பால
பேய்த்தாயுயிர்களாய்ப்பாலுண்டு - * அவனுயிரை
மாய்த்தானைவாழ்த்தேவலி. (௪0)

வலியமெனநினைந்துவந்தெதிர்ந்தமல்லர் *
வலியமுடியிடியவாங்கி *—வலியநின்
பொன்னாழிக்கையால் புடைத்திடுதிகீளாதே *
பன்னாளும்நிற்குமிப்பார். (௪க)

பாருண்டான்பாருமிழ்ந்தான் பாரிடந்தான்பாரளந்தான் *
பாரிடமுன்படைத்தானென்பரால் *—பாரிட
மாவானும்தானானலாரிடமே * மற்றொருவர்க்
காவான்புகாவாலவை. (௪௨)

அவயமெனநினைந்து வந்தசுரர்பாலே *
நவையைநளிர்விப்பான்றன்னை *—கவையில்
மனத்துயரவைத்திருந்து வாழ்த்தாதார்க்குண்டோ *
மனத்துயரைமாய்க்கும்வகை. (சங)

வகைசேர்ந்தநன்னெஞ்சும் நாவுடையவாயும் *
மிகவாய்ந்துவீழாவெனிலும் *—மிகவாய்ந்து
மாலைத்தாம்வாழ்த்தாதிருப்பரிதுவன்றே *
மேலைத்தாம்செய்யும்வினை. (சச)

வினையார்தரமுயலும் வெம்மையேயஞ்சி *
தினையாம்சிறிதளவும்செல்ல—நினையாது *
வாசகத்தாலேத்தினேன் வானோர்தொழுதிறைஞ்சும் *
நாயகத்தான்பொன்னடிக்கள்நான். (சரு)

நான்கூறும்கூற்றுவதித்தனையே * நாணும்
தேங்கோதநீருருவன்செங்கண்மால் *—நீங்காத
மாகதியாம்வெந்நரகில் சேராமல்காப்பதற்கு *
நீகதியாநெஞ்சேநினை. (சசு)

நினைத்திறைஞ்சிமானிடவரொன்றிரப்பரென்றே *
நினைத்திடவும்வேண்டாநீநேரே *—நினைத்திறைஞ்ச
எவ்வளவரெவ்விடத்தோர்மாலே * அதுதானும்
எவ்வளவுமுண்டோவெமக்கு. (சஎ)

எமக்கியாம்விண்ணாட்டுக்குச்சமதாம்வீட்டை *
அமைத்திருந்தோமஃதன்றேயாமாறு *—அமைப்பொலிந்த
மென்தோளிகாரணமா வெங்கோட்டேறேழுடனே *
கொன்றானையேமனத்துக்கொண்டு. (சஅ)

கொண்டல்தான்மால்வரைதான் மாகடல்தான்கூரிருள்தான் *
வண்டறாப்பூவைதான்மற்றுத்தான் *—கண்டநாள்
காருருவம்காண்தோறும்நெஞ்சோடும் * கண்ணனார்
பேருருவென்றெம்மைப்பிரிந்து. (சகூ)

பிரிந்தொன்றுநோக்காது தம்முடையபின்னே *
திரிந்துழலும்சிந்தனையார்தம்மை *—புரிந்தொருகால்
ஆவாவெனவிரங்கா ரந்தோவலிதேகொல் *
மாவாய்பிளந்தார்மனம். (ரு0)

மனமாளுமோரைவர் வன்குறும்பர்தம்மை *
சினமாள்வித்தோரிடத்தேசேர்த்து *—புனமேய
தண்டுழாயானடியேதான்காணுமஃதன்றே *
வண்டுழாம்சீரார்க்குமாண்பு. (ருக)

மாண்பாவித்தந்நான்றுமண்ணிரந்தான் * மாயவள்நஞ்
சூண்பாவித்துண்டானதோருருவம் *— காண்பான்நங்
கண்ணவாமற்றொன்றுகாணுறு * சீர்பரவா
துண்ணவாய்தானுறுமோவொன்று. (ருஉ)

ஒன்றுண்டுசெங்கண்மால்யானுரைப்பது - * உன்னடியார்க்
கென்செய்வனென்றேயிருத்திநீ *—நின்புகழில்
வைகுந்தம்சிந்தையிலும்மற்றினிதோ * நீயவர்க்கு
வைகுந்தமென்றருளும்வான். (ருங)

வானோமறிகடலோ மாருதமோதீயகமோ *
கானோவொருங்கிற்றும்கண்டிலமால் *—ஆனீன்ற
கன்றுயரத்தாமெறிந்து காயுதிர்த்தார் தாள்பணிந்தோம் *
வன்துயரையாவாமருங்கு. (ருச)

மருங்கோதமோதும் மணிநாகணையார் *
மருங்கேவரவரியரேலும் *—ஒருங்கே
எமக்கவரைக்காணலா மெப்போதுமுள்ளால் *
மனக்கவலைதீர்ப்பார்வரவு. (ருரு)

வரவாறொன்றில்லையால் வாழ்வினிதால் * எல்லே
ஒருவாறொருவன்புகாவாறு - *—உருமாறும்
ஆயவர்தாம்சேயவர்தா மன்றுலகம்தாயவர்தாம்
மாயவர்தாம்காட்டும்வழி. (ருசு)

வழித்தங்குவல்வினையை மாற்றானோநெஞ்சே *
தழீஇக்கொண்டுபோரவுணன்றன்னை *—சுழித்தெங்கும்
தாழ்விடங்கள்பற்றிப் புலால்வெள்ளம்தானுகள *
வாழ்வடங்கமார்விடந்தமால். (ருஎ)

மாலேபடிச்சோதிமாற்றேல் * இனியுனது
பாலேபோல்சீரில்பழுத்தொழிந்தேன் *—மேலால்
பிறப்பின்மைபெற்றடிக்கீழ்க் குற்றேவலன்று *
மறப்பின்மையான்வேண்டும் மாடு. (ருஅ)

மாடேவரப்பெறுவராமென்றே * வல்வினையார்
காடானுமாதானும்கைக்கொள்ளார் *—ஊடேபோய்ப்
பேரோதம்சிந்துதிரைக்கண்வளரும் * பேராளன்
பேரோதச்சிந்திக்கப்பேர்ந்து. (ருகூ)

பேர்ந்தொன்றுநோக்காது பின்னிற்பாய்நில்லாப்பாய் *
ஈன்துழாய்மாயனையேயென்னெஞ்சே *—பேர்ந்தெங்கும்
தொல்லைமாவெந்நரகில் சேராமல்காப்பதற்கு - *
இல்லைகாண்மற்றோரிறை. (சுO)

இறைமுறையான்சேவடிமேல் மண்ணளந்தவந்நாள் *
மறைமுறையால்வானாடர்கூடி *—முறைமுறையின்
தாதிலகுபூத்தெளித்தாலொவ்வாதே * தாழ்விசும்பின்
மீதிலகித்தான்கிடக்கும்மீன். (சுக)

மீனென்னும்கம்பில்வெறியென்னும்வெள்ளிவேய் *
வானென்னும்கேடிலாவான்குடைக்கு *—தானோர்
மணிக்காம்புபோல்நிமிர்ந்து மண்ணளந்தான் * நங்கள்
பிணிக்காம்பெருமருந்துபின். (சுஉ)

பின்துரக்கும்காற்றிழிந்த சூல்கொண்டல்பேர்ந்தும்போம் *
வன்திரைக்கண்வந்தணைந்தவாய்மைத்தே *—அன்று
திருச்செய்யநேமியான் தீயரக்கிமூக்கும் *
† பருச்செவியுமீர்ந்தபரன். (சுங)

பரனாமவனாதல்பாவிப்பாராகில் *
உரனாலொருமூன்றுபோதும் *—மரமேழன்
றெய்தானைப்புள்ளின்வாய்கீண்டானையே * அமரர்
கைதான்தொழாவேகலந்து. (சுச)

கலந்துநலியும்கடுந்துயரைநெஞ்சே *
மலங்கவடித்துமடிப்பான் *—விலங்கல்போல்
தொன்மாலைக்கேசவனை நாரணனைமாதவனை *
சொன்மாலையெப்பொழுதும்சூட்டு. (சுரு)

சூட்டாயநேமியான்தொல்லரக்கனின்னுயிரை *
மாட்டேதுயரிழைத்தமாயவனை *—ஈட்ட
வெறிகொண்டதண்டுழாய்வேதியனை * நெஞ்சே
அறிகண்டாய்சொன்னேனது. (சுசு)

அதுவோநன்றென் றங்கமருலகோ வேண்டில் *
அதுவோபொருளில்லையன்றே *—அதுவொழிந்து
மண்ணின்றாள்வேனெனிலும் கூடுமடநெஞ்சே *
கண்ணன்தாள்வாழ்த்துவதேகல். (சுஎ)

கல்லும்கனைகடலும் வைகுந்தவானாடும் *
புல்லென்றொழிந்தனகொல் ஏபாவம் *—வெல்ல
நெடியான்நிறங்கரியா னுள்புகுந்துநீங்கான் *
அடியேனதுள்ளத்தகம். (சுஅ)

அகம்சிவந்தகண்ணினராய்வல்வினையராவார் *
முகம்சிதைவராமன்றேமுக்கி *—மிகுந்திருமால்
சீர்க்கடலையுள்பொதிந்தசிந்தனையேன்றன்னை *
ஆர்க்கடலாம்செவ்வேயடர்த்து. (சுகூ)

---

† "பரிச்செவி" யென்றுபாடாந்தரம்.

அடர்பொன்முடியானை யாயிரம்பேரானை *
சுடர்கொள்சுடராழியானை *—இடர்கடியும்
மாதாபிதுவாகவைத்தேனெனதுள்ளே *
யாதாகில்யாதேயினி. (எ0)
இனிநின்றுநின்பெருமையானுரைப்பதென்னே *
தனிநின்றசார்விலாமூர்த்தி *—பனிநீர்
அகத்துலவுசெஞ்சடையானகத்தான் * நான்கு
முகத்தான்நின்னுந்திமுதல். (எக)
முதலாம்திருவுருவம்மூன்றென்பர் * ஒன்றே
முதலாகும்மூன்றுக்குமென்பர்—முதல்வா *
நிகரிலகுகாருருவாநின்னகத்ததன்றே *
புகரிலகுதாமரையின்பூ. (எஉ)
பூவையும்காயாவும்நீலமும்பூக்கின்ற *
காவிமலரென்றும்காண்தோறும் *—பாவியேன்
மெல்லாவிமெய்மிகவேபூரிக்கும் * அவ்வவை
யெல்லாம்பிரானுருவேயென்று. (எங)
என்றுமொருநாளொழியாமை யானிரந்தால் *
ஒன்றுமிரங்காருருக்காட்டார் *—குன்று
குடையாகஆகாத்தகோவலனார் * நெஞ்சே
புடைதான்பெரிதேபுவி. (எச)
புவியுமிருவிசும்பும்நின்னகத்த * நீயென்
செவியின்வழிபுகுந்தென்னுள்ளாய் *—அவிவின்றி
யான்பெரியன்நீபெரியையென்பதனையாரறிவார் *
ஊன்பருகுநேமியாயுள்ளு. (எரு)
உள்ளிலுமுள்ளம்தடிக்கும்வினைப்படலம் *
விள்ளவிழித்துன்னைமெய்யுற்றல் *—உள்ள
உலகளவுயானுமுளனவனென்கொலோ *
உலகளந்தமூர்த்தியுரை. (எசு)
உரைக்கிலோர்சுற்றத்தாருற்றாரென்றாரே *
இரைக்குங்கடற்கிடந்தவெந்தாய் *—உரைப்பெல்லாம்
நின்னன்றிமற்றிலேன்கண்டாய் * எனதுயிர்க்கோர்
சொல்நன்றியாகும்துணை. (எஎ)
துணைநாள்பெருங்கிளையும்தொல்குலமும் * சுற்றத்
திணைநாளுமின்புடைத்தாமேலும் *—கணைநாணில்
ஓவாத்தொழில்சார்ங்கன்தொல்சீரைநன்னெஞ்சே *
ஓவாதவூணாகவுண். (எஅ)
உண்ணாட்டுத்தேசென்றே யூழ்வினையையஞ்சுமே *
விண்ணாட்டையொன்றாகமெச்சுமே *—மண்ணாட்டில்
ஆராகியெவ்விழிவிற்றானாலும் * ஆழியங்கைப்
பேராயற்காளாம்பிறப்பு. (எகூ)

பிறப்பிறப்புமூப்புப் பிணிதுறந்து * பின்னும்
இறக்கவுமின்புடைத்தாமேலும் * மறப்பெல்லாம்
ஏதமேயென்றெல்லாலெண்ணுவனே * மண்ணளந்தான்
பாதமேயேத்தாப்பகல். (அ0)

பகலிராவென்பதுவும்பாவியாது - * எம்மை
இகல்செய்திருபொழுதுமாள்வர் *—தகவாத்
தொழும்பரிவர்சீர்க்கும்துணையிலரென்றோரார்
செழும்பரவைமேயார்தெரிந்து. (அக)

தெரிந்துணர்வொன்றின்மையால் தீவினையேன் * வாளா
இருந்தொழுந்தேன்கீழ்நாள்களெல்லாம் *—கரந்துருவில்
அம்மானையந்நான்றுபின்தொடர்ந்த * ஆழியங்கை
அம்மானையேத்தாதயர்த்து. (அஉ)

அயர்ப்பாயயராப்பாய்நெஞ்சமேசொன்னேன்
உயப்போம்நெறியிதுவேகண்டாய் *—செயல்பால
வல்லவேசெய்கிறுதி நெஞ்சமேயஞ்சினேன் *
மல்லர்நாள்வவ்வினனைவாழ்த்து. (அங)

வாழ்த்தியவனடியைப்பூப்புனைந்து * நின்தலையைத்
தாழ்த்திருகைகூப்பென்றால்கூப்பாத—பாழ்த்தவிதி *
எங்குற்றுயென்றவனையேத்தாதென்னெஞ்சமே *
தங்கத்தானுமேலும்தங்கு. (அச)

தங்காமுயற்றியவாய்த் தாழ்விசும்பின்மீதுபாய்ந்து - *
எங்கேபுக்கெத்தவம்செய்திட்டனகொல் *—பொங்கோதத்
தண்ணம்பால்வேலைவாய்க்கண்வளரும் * என்னுடைய
கண்ணன்பால் நன்னிறங்கொள்கார். (அரு)

சாற்றுப்பாட்டுக்கள்.

⁂ கார்கலந்தமேனியான் கைகலந்தவாழியான் *
பார்கலந்தவல்வயிற்றான் பாம்பணையான் *—சீர்கலந்த
சொல்நினைந்துபோக்காரேல்சூழ்வினையினாழ்துயரை *
என்நினைந்துபோக்குவரிப்போது. (அசு)

⁂ இப்போதுமின்னுமினிச்சிறிதுநின்றாலும் *
எப்போதுமீதேசொல்லென்னெஞ்சே *—எப்போதும்
கைகழலாநேமியான்நம்மேல்வினைகடிவான் *
மொய்கழலேயேத்தமுயல். (அஎ)

முயற்றி நாழ் சென்றழகு வலியமனமிறை யினிப்பக லொருபேர்.

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பெரியதிருவந்தாதி ஸம்பூர்ணம்.

ஆ_ பாட்டு - அசு.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# திருவெழுகூற்றிருக்கை.

## தனியன்கள்.

நேரிசை-வெண்பா.

உடையவரருளிச்செய்தது.

வாழிபரகாலன்வாழிகலிகன்றி *
வாழிகுறையலூர்வாழ்வேந்தன் *—வாழியரோ
மாயோனைவாள்வலியால்மந்திரங்கொள்மங்கையர்கோன் *
தூயோன்சுடர்மானவேல்.

கலித்துறை.

† [சீரார்திருவெழுகூற்றிருக்கையென்னும்செந்தமிழால் *
ஆராவமுதங்குடந்தைப்பிரான்றனடியிணைக்கீழ் *
ஏரார்மறைப்பொருளெல்லாமெடுத்திவ்வுலகுய்யவே *
சோராமற்சொன்னவருள்மாரிபாதம்துணைநமக்கே.]

---

தேசியராகம் - ஆதிதாளம்.

⁂ ஒருபேருந்தியிருமலர்த்தவிசில் *
ஒருமுறையயனையீன்றனை * ஒருமுறை
இருசுடர்மீதினிலியங்கா * மும்மதி
ளிலங்கையிருகால்வளைய * ஒருசிலை
யொன்றியவீரெயிற்றழல்வாய்வாளியி
லட்டனை * மூவடிநானிலம்வேண்டி *
முப்புரிநூலொடுமானுரியிலங்கு
மார்வினில் * இருபிறப்பொருமாணாகி *
ஒருமுறையீரடிமூவுலகளந்தனை *
நாற்றிசைநடுங்கவஞ்சிறைப்பறவை
யேறி * நால்வாய்மும்மதத்திருசெவி
யொருதனிவேழத்தரந்தையை * ஒருநா
ளிருநீர்மடுவுள்தீர்த்தனை * முத்தீ
நான்மறைஐவகைவேள்வி * அறுதொழி

---

† இத்தனியன், இந்தப்ராந்தங்களில் வழங்குவதில்லை.

லந்தணர்வணங்கும்தன்மையை * ஐம்புல
னகத்தினுள்செறுத்து * நான்குடனடக்கி
முக்குணத்திரண்டவையகற்றி * ஒன்றினி
லொன்றிநின்று - * ஆங்கிருபிறப்பறுப்போ
ரறியும்தன்மையை * முக்கண்நாற்றோ
ளைவாயரவோடு - * ஆறுபொதிசடையோ
னறிவரும்தன்மைப்பெருமையுள்நின்றனை *
ஏழுலகெயிற்றினில்கொண்டனை * கூறிய
வறுசுவைப்பயனுமாயினை * சுடர்விடு
மைம்படையங்கையுளமர்ந்தனை * சுந்தர
நாற்றோள்முந்நீர்வண்ண * நின்னீரடி
யொன்றியமனத்தால் * ஒருமதிமுகத்து
மங்கையரிருவருமலரென * அங்கையில்
முப்பொழுதும்வருடவறிதுயிலமர்ந்தனை *
நெறிமுறைநால்வகை வருணமுமாயினை *
மேதகுமைம்பெரும் பூதமும்நீயே *
அறுபதமுரலும் கூந்தல்காரணம் *
ஏழ்விடையடங்கச்செற்றனை * அறுவகைச்
சமயமுமறிவரு நிலையினை * ஐம்பா
லோதியையாகத்திருத்தினை * அறமுதல்
நான்கவையாய்மூர்த்திமூன்றாய் *
இருவகைப்பயனா யொன்றாய்விரிந்து
நின்றனை * குன்றாமதுமலர்ச்சோலை
வண்கொடிப்படப்பை * வருபுனல்பொன்னி
மாமணியலைக்கும் * செந்நெலொண்கழனித்
திகழ்வனமுடுத்த * கற்போர்புரிசை
கனகமாளிகை * நிமிர்கொடிவிசும்பி
லிளம்பிறைதுவக்கும் * ⁂ செல்வம்மல்குதென்
திருக்குடந்தை * அந்தணர்மந்திரமொழியுடன்
வணங்க * ஆடரவமளியிலறிதுயிலமர்ந்த
பரம * நின்னடியிணைபணிவன்
வருமிடரகலமாற்றோவினையே. (க)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



இடங்கொண்டநெஞ்சத்திணங்கிக்கிடப்பன * என்றும்பொன்னித்
தடங்கொண்டதாமரைசூழும்மலர்ந்ததண்பூங்குடந்தை *
விடங்கொண்டவெண்பல்கருந்துத்திசெங்கட்டழலுமிழ்வாய் *
படங்கொண்டபாம்பணைப்பள்ளிகொண்டான்திருப்பாதங்களே.

திருவெழுகூற்றிருக்கை ஸம்பூர்ணம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

# திருமங்கையாழ்வாரருளிச்செய்த
# சிறியதிருமடல்.

## தனியன்.

நேரிசை-வெண்பா.

**பிள்ளைத்திருநறையூரரையரருளிச்செய்தது.**

முள்ளிச்செழு † மலரோ தாரான்முளைமதியம் *
கொள்ளிக்கென் னுள்ளம்கொதியாமே *—வள்ளல்
திருவாளன்சீர்க்கலியன்கார்க்கலியைவெட்டி *
மருவாளன் தந்தான்மடல்.

---

நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

ஸ்ரீ காரார்வரைக்கொங்கை கண்ணார்கடலுடுக்கை *
சீரார்சுடர்சுட்டிச்செங்கலுழிப்பேராற்று (௧)
பேராரமார்வில்பெருமாமழைக்கூந்தல் *
நீராரவேலிநிலமங்கையென்னும் * இப் (௨)
பாரோர்சொலப்பட்ட மூன்றன்றே *—அம்மூன்று
மாராயில்தானே அறம்பொருளின்பமென்று - * (௩)
ஆராரிவற்றினிடையதனையெய்துவார் *
சீராரிருகலையுமெய்துவர் *—சிக்கெனமற் (௪)
றூரானுமுண்டென்பாரென்பதுதானதுவும்
ஓராமையன்றேயுலகத்தார்சொல்லுஞ்சொல் * (௫)
ஓராமையாமாறதுவுரைக்கேன்கேளாமே *
காரார்புரவியேழ்பூண்டதனியாழி * (௬)
தேரார்நிறைகதிரோன்மண்டலத்தைக்கீண்டுபுக்கு - *
ஆராவமுதமங்கெய்தி *—அதினின்றும் (௭)
வாராதொழிவதொன்றுண்டே * அதுநிற்க
ஏரார்முயல்விட்டுக்காக்கைப்பின்போவதே * (௮)
ஏராரிளமுலையீரென்றனக்குற்றதுதான் *
காரார்குழலெடுத்துக்கட்டி *—கதிர்முலையை (௯)
வாராரவீக்கிமணிமேகலைதிருத்தி *
ஆராரயில்வேற்கணஞ்சனத்தின்நீறணிந்து * (௧0)
சீரார்செழும்பந்துகொண்டடியாநின்றேன்நான் *
நீரார்கமலம்போல்செங்கண்மாலென்றொருவன் * (௧௧

---

† "மலரோர்" என்றுமுந்தினபாடம்.

பாரோர்களெல்லாம்மகிழப்பறைகறங்க *
சீரார்குடமிரண்டேந்தி *—செழுந்தெருவே (கஉ)
ஆராரெனச்சொல்லியாடுமதுகண்டு *
ஏராரிளமுலையாரென்னையருமெல்லாரும் * (கங)
வாராயோவென்றார்க்குச்சென்றேனென்வல்வினையால் *
காரார்மணிநிறமுங்கைவளையுங்காணேன்நான் * (கச)
ஆரானுஞ்சொல்லிற்றுங்கொள்ளேன் *—அறிவழிந்து
தீராவுடம்பொடுபேதுறுவேன்கண்டிரங்கி * (கரு)
ஏரார்கிளிக்கிளவியெம்மனைதான்வந்தென்னை *
சீரார்செழும்புழுதிக்காப்பிட்டு *—செங்குறிஞ்சித் (கசு)
தாரார்நறுமாலைசாத்தற்கு * தான்பின்னும்
நேராதனவொன்றுநேர்ந்தாள் *—அதனாலும் (கஎ)
தீராதென்சிந்தைநோய்தீராதென்பேதுறவு *
வாராதுமாமையதுகண்டுமற்றாங்கே * (கஅ)
ஆரானுமூதறியுமம்மனைமார்சொல்லுவார் *
பாரோர்சொலப்படுங்கட்டுப்படுத்திரேல் * (கக)
ஆரானுமெய்ப்படுவனென்றார் *—அதுகேட்டுக்
காரார்குழல்கொண்டைகட்டுவிச்சிகட்டேறி * (உ௦)
சீரார்சுளகில்சிலநெல்பிடித்தெறியா *
வேராவிதிர்விதிராமெய்சிலிராக்கைமோவா * (உக)
பேராயிரமுடையானென்றாள் *—பேர்த்தேயும்
காரார்திருமேனிகாட்டினாள் * கையதுவும் (உஉ)
சீரார்வலம்புரியேயென்றாள் *—திருத்துழாய்த்
தாரார்நறுமாலைகட்டுரைத்தாள்கட்டுரையா * (உங)
நீரேதுமஞ்சேல்மின்நும்மகளைநோய்செய்தான் *
ஆரானுமல்லனறிந்தேனவனைநான் * (உச)
கூரார்வேற்கண்ணீருமக்கறியக்கூறுகேனோ *
ஆராலிவ்வையமடியளப்புண்டதுதான் * (உரு)
ஆராலிலங்கைபொடிபொடியாவீழ்ந்தது * மற்
றாராலேகன்மாரிகாத்ததுதான் *—ஆழிநீ (உசு)
ராரால்கடைந்திடப்பட்டது - * அவன்காண்மின்
ஊராநிரைமேய்த்துலகெல்லாமுண்டுமிழ்ந்தும் * (உஎ)
ஆராததன்மையனாயாங்கொருநாளாய்ப்பாடி *
சீரார்கலையல்குல்சீரடிச்செந்துவர்வாய் * (உஅ)
வாரார்வனமுலையாள்மத்தாரப்பற்றிக்கொண்டு - *
ஏராரிடைநோவஎத்தனையோர்போதுமாய் (உக)

சீரார்தயிர்கடைந்துவெண்ணெய்திரண்டதனை
வேரார்நுதல்மடவாள்வேறோர்கலத்திட்டு * (௩௦)
நாராருறியேற்றிநன்கமையவைத்ததனை *
போரார்வேற்கண்மடவாள்போந்தனையும்பொய்யுறக்கம் * (௩௧)
ஓராதவன்போலுறங்கியறிவுற்று *
தாரார்தடந்தோள்களுள்ளளவும்கைநீட்டி * (௩௨)
ஆராதவெண்ணெய்விழுங்கி *—அருகிருந்த
மோரார்குடமுருட்டிமுன்கிடந்ததானத்தே (௩௩)
ஓராதவன்போல்கிடந்தானைக்கண்டவளும் *
வாராத்தான்வைத்ததுகாணாள் *—வயிறடித்திங் (௩௪)
காரார்புகுதுவார்ஐயரிவரல்லால் *
நீராமிதுசெய்தீரென்றோர்நெடுங்கயிற்றால் * (௩௫)
ஊரார்களெல்லாருங்காணவுரலோடே *
தீராவெகுளியளாய்ச்சிக்கெனவார்த்தடிப்ப * (௩௬)
ஆராவயிற்றினோடாற்றாதான் *—அன்றியும்
நீரார்நெடுங்கயத்தைச்சென்றலைக்கநின்றுரப்பி * (௩௭)
ஓராயிரம்பணவெங்கோவியல்நாகத்தை *
வாராயெனக்கென்றுமற்றதன்மத்தகத்து * (௩௮)
சீரார்திருவடியால்பாய்ந்தான் *—தன்சீதைக்கு
நேராவனென்றோர்நிசாசரிதான்வந்தாளை * (௩௯)
கூரார்ந்தவாளால்கொடிமூக்குங்காதிரண்டும் *
ஈராவிடுத்தவட்குமூத்தோனை *—வெந்நரகம் (௪௦)
சேராவகையேசிலைகுனித்தான் * செந்துவர்வாய்
வாரார்வனமுலையாள்வைதேவிகாரணமா * (௪௧)
ஏரார்தடந்தோளிராவணனை *—ஈரைந்து
சீரார்சிரமறுத்துச்செற்றுகந்தசெங்கண்மால் * (௪௨)
போரார்நெடுவேலோன்பொன்பெயரோனாகத்தை *
கூரார்ந்தவள்ளுகிரால்கீண்டு *—குடல்மாலை (௪௩)
சீரார்திருமார்பின்மேல்கட்டி - * செங்குருதி
சோராக்கிடந்தானைக்குங்குமத்தோள்கொட்டி * (௪௪)
ஆராவெழுந்தானரியுருவாய் *—அன்றியும்
பேர்வாமனனாகியகாலத்து * மூவடிமண் (௪௫)
தாராயெனக்கென்றுவேண்டிச்சலத்தினால் *
நீரேற்றுலகெல்லாம்நின்றளந்தான்மாவலியை * (௪௬)
ஆராதபோரிலசுரர்களும்தானுமாய் *
காரார்வரைநட்டுநாகம்கயிறாக * (௪௭)

பேராமல்தாங்கிக்கடைந்தான் *—திருத்துழாய்த்
தாரார்ந்தமார்வன் தடமால்வரைபோலும் * (௪அ)
போரானைபொய்கைவாய்கோட்பட்டுநின்றலறி
நீரார்மலர்க்கமலம்கொண்டோர்நெடுங்கையால் * (௪௯)
நாராயணா ! ஓ ! மணிவண்ணா ! நாகணையாய் ! *
வாராயென்னாரிடரைநீக்காய் *—எனவெகுண்டு (௫0)
தீராதசீற்றத்தால்சென்றிரண்டுகூறாக *
ஈராவதனையிடர்கடிந்தானெம்பெருமான் * (௫௧)
பேராயிரமுடையான்பேய்ப்பெண்டீர் நும்மகளை *
தீராநோய்செய்தானெனவுரைத்தாள் *—சிக்கெனமற் (௫௨)
றாரானுமல்லாமைகேட்டெங்களம்மனையும் *
போரார்வேற்கண்ணீரவனாகில்பூந்துழாய் * (௫௩)
தாராதொழியுமேதன்னடிச்சியல்லளே * மற்
றாரானுமல்லனேயென்றொழிந்தாள் *—நானவனைக் (௫௪)
காரார்திருமேனிகண்டதுவேகாரணமா *
பேராப்பிதற்றாத்திரிதருவன் * பின்னையும் (௫௫)
ஈராப்புகுதலுமிவ்வுடலைத்தண்வாடை *
சோராமறுக்கும்வகையறியேன் *—சூழ்குழலார் (௫௬)
ஆரானுமேசுவரென்னுமதன்பழியை *
வாராமல்காப்பதற்குவாளாவிருந்தொழிந்தேன் * (௫௭)
வாராய்மடநெஞ்சேவந்து *—மணிவண்ணன்
சீரார்திருத்துழாய்மாலைநமக்கருளி * (௫அ)
தாரான்தருமென்றிரண்டத்திலொன்றதனை *
ஆரானுமொன்னாதார்கேளாமேசொன்னக்கால் * (௫௯)
ஆராயுமேலும்பணிகேட்டதன்றெனிலும் *
போராதொழியாதேபோந்திடுநீயென்றேற்கு * (௬0)
காரார்கடல்வண்ணன்பின்போனநெஞ்சமும் *
வாராதேயென்னைமறந்ததுதான் *—வல்வினையேன் (௬௧)
ஊராருகப்பதேயாயினேன் * மற்றெனக்கிங்
காராய்வாரில்லைஅழல்வாய்மெழுகுபோல் * (௬௨)
நீராயுருகுமென்னாவி *—நெடுங்கண்கள்
ஊராருறங்கிலும்தானுறங்கா * உத்தமன்றன் (௬௩)
பேராயினவேபிதற்றுவன் *—பின்னையும்
காரார்கடல்போலும்காமத்தராயினார் * (௬௪)
ஆரேபொல்லாமையறிவாரதுநிற்க *
ஆரானுமாதானுமல்லளவள்காணீர் * (௬௫)

வாரார்வனமுலைவாசவதத்தையென்று — *
ஆரானும்சொல்லப்படுவாள் *—அவளும்தன் (சுசு)
பேராயமெல்லாமொழியப்பெருந்தெருவே *
தாரார்தடந்தோள்தளைக்காலன்பின்போனாள் * (சுஎ)
ஊராரிகழ்ந்திடப்பட்டாளே *—மற்றெனக்கிங்
காரானும்கற்பிப்பார்நாயகரே * நானவனைக் (சுஅ)
காரார்திருமேனிகாணுமளவும்போய் *
⁂ சீரார்திருவேங்கடமேதிருக்கோவ (சுகூ)
லூரே * மதிள்கச்சியூரகமேபேரகமே *
பேராமருதிறுத்தான்வெள்ளறையேவெஃகாவே * (எ0)
பேராலிதண்கால்நறையூர்திருப்புலியூர் *
⁂ ஆராமம்சூழ்ந்தவரங்கம் *—கணமங்கைக் (எக)
காரார்மணிநிறக்கண்ணனூர்விண்ணகரம் *
சீரார்கணபுரம்சேறைதிருவழுந்தூர் * (எஉ)
காரார்குடந்தைகடிகைகடன்மல்லை *
ஏரார்பொழில்சூழிடவெந்தைநீர்மலை * (எங)
சீராரும்மாலிருஞ்சோலைதிருமோகூர் *—
பாரோர்புகழும்வதரிவடமதுரை * (எச)
ஊராயவெல்லாமொழியாமேநானவனை *
ஓரானைகொம்பொசித்தோரானைகோள்விடுத்த (எரு)
சீரானை * செங்கணெடியானைத்தேன்துழாய்த்
தாரானை * தாமரைபோல்கண்ணனை *—எண்ணருஞ்சீர் (எசு)
பேராயிரமும்பிதற்றி *— ⁂ பெருந்தெருவே
ஊராரிகழிலுமூராதொழியேன்நான். (எஎ)
வாரார்பூம்பெண்ணைமடல். (எஎ௨)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



ஆ வாக்யம்-ககரு-க்கு-பாட்டு-எஎ௨.

ஊராதொழியேனுலகறியவொண்ணுதலீர் *
சீரார்முலைத்தடங்கள்சேரளவும் *—பாரெல்லா
மன்றோங்கிநின்றளந்தான்நின்றதிருநறையூர்
மன்றோங்கவூர்வன்மடல்.

சிறியதிருமடல் ஸம்பூர்ணம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# திருமங்கையாழ்வாரருளிச்செய்த

# பெரியதிருமடல்.

## தனியன்.

நேரிசை-வெண்பா.

பிள்ளைதிருநறையூரரையரருளிச்செய்தது.

பொன்னுலகில்வானவரும் † பூமகளும்போற்றிசெய்யும் *
நன்னுதலீர்நம்பிநறையூரர் *—மன்னுலகில்
என்னிலைமைகண்டுமிரங்காரேயாமாகில் *
மன்னுமடலூர்வன்வந்து.

---

நாதநாமக்கிரியைராகம் - ஆதிதாளம்.

மன்னியபல்பொறிசேராயிரவாய்வாளரவின் *
சென்னிமணிக்குடுமித்தெய்வச்சுடர்நடுவுள் * (க)
மன்னியநாகத்தணைமேலோர்மாமலைபோல் *
மின்னுமணிமகரகுண்டலங்கள்வில்வீச * (உ)
துன்னியதாரகையின்பேரொளிசேராகாசம் *
என்னும்விதானத்தின்கீழால் *—இருசுடரை (ங)
மன்னும்விளக்காகவேற்றி * மறிகடலும்
பன்னுதிரைக்கவரிவீச * நிலமங்கை (ச)
தன்னைமுனநாளளவிட்டதாமரைபோல் *
மன்னியசேவடியைவானியங்குதாரகைமீன் * (ரு)
என்னும்மலர்ப்பிணையலேய்ந்த *—மழைக்கூந்தல்
தென்னனுயர்பொருப்பும்தெய்வவடமலையும் * (சு)
என்னுமிவையேமுலையாவடிவமைந்த *
அன்னநடையவணங்கே *—அடியிணையைத் (எ)
தன்னுடையவங்கைகளால்தான்தடவத்தான்கிடந்து - * ஓர்
உன்னியயோகத்துறக்கம்தலைக்கொண்ட (அ)
பின்னை * தன்னுபிவலயத்துப்பேரொளிசேர் *
மன்னியதாமரைமாமலர்பூத்து - * அம்மலர்மேல் (கூ)
முன்னம்திசைமுகனைத்தான்படைக்க * மற்றவனும்
முன்னம்படைத்தனன்நான்மறைகள் *—அம்மறைதான் (க0)
மன்னுமறம்பொருளின்பம்வீடென்றுலகில் *
நன்னெறிமேம்பட்டனநான்கன்றே *—நான்கினிலும் (கக)

---

† "பூமகனும்" என்று பாடாந்தரம்.

பின்னையதுபின்னைப்பெயர்தருமென்பது - ஓர்
தொன்னெறியைவேண்டுவார்வீழ்கனியுமூழிலையும் * (கஉ)
என்னுமிவையேநுகர்ந்துடலம்தாம்வருந்தி *
துன்னுமிலைக்குரம்பைத்துஞ்சியும் *—வெஞ்சுடரோன் (கங)
மன்னுமழல்நுகர்ந்தும்வண்டடத்தினுட்கிடந்தும் *
இன்னதோர்தன்மையராயீங்குடலம்விட்டெழுந்து * (கச)
தொன்னெறிக்கட்சென்றாரெனப்படும்சொல்லல்லால் *
இன்னதோர்காலத்தினையாரிதுபெற்றார் * (கரு)
என்னவும்கேட்டறிவதில்லை *—உளதென்னில்
மன்னுங்கடுங்கதிரோன்மண்டலத்தின்நன்னடுவுள் * (கசு)
அன்னதோரில்லியினூடுபோய் *—வீடென்னும்
தொன்னெறிக்கட்சென்றாரைச்சொல்லுமின்கள்சொல்லாதே * (கஎ)
அன்னதேபேசுமறிவில்சிறுமனத்து - * ஆங்
கன்னவரைக்கற்பிப்போம்யாமே *—அதுநிற்க (கஅ)
முன்னம்நான்சொன்னவறத்தின்வழிமுயன்ற *
அன்னவர்தாம்கண்டீர்களாயிரக்கண்வானவர்கோன் * (கசு)
பொன்னகரம்புக்கமரர்போற்றிசெப்ப *—பொங்கொளிசேர்
கொன்னவிலும்கோளரிமாத்தான்சுமந்தகோலம்சேர் * (உ0)
மன்னியசிங்காசனத்தின்மேல் *—வாணெடுங்கண்
கன்னியராலிட்டகவரிப்பொதியவிழ்ந்து - * ஆங் (உக)
கின்னிளம்பூந்தென்றலியங்க *—மருங்கிருந்த
மின்னனையநுண்மருங்குல்மெல்லியலார்வெண்முறுவல் * (உஉ)
முன்னம்முகிழ்த்தமுகிழ்நிலாவந்தரும்ப *
அன்னவர்தம்மானோக்கமுண்டாங்கணிமலர்சேர் * (உங)
பொன்னியல்கற்பகத்தின்காடுடுத்தமாடெல்லாம் *
மன்னியமந்தாரம்பூத்தமதுத்திவலை * (உச)
இன்னிசைவண்டமரும்சோலைவாய்மாலைசேர் *
மன்னியமாமயில்போல்கூந்தல் *—மழைத்தடங்கண் (உரு)
மின்னிடையாரோடும்விளையாடிவேண்டிடத்து *
மன்னுமணித்தலத்துமாணிக்கமஞ்சரியின் * (உசு)
மின்னினொளிசேர்பளிங்குவிளிம்படுத்த *
மன்னும்பவளக்கால்செம்பொன்செய்மண்டபத்துள் * (உஎ)
அன்னநடையவரம்பையர்தம்கைவளர்த்த *
இன்னிசையாழ்பாடல்கேட்டின்புற்று - *—இருவிசும்பில் (உஅ)
மன்னுமழைதவழும்வாணிலாநீண்மதிதோய் *
மின்னினொளிசேர்விசும்பூரும்மாளிகைமேல் * (உசு)

மன்னுமணிவிளக்கைமாட்டி *—மழைக்கண்ணார்
பன்னுவிசித்திரமாப்பாப்படுத்தபள்ளிமேல் * (௩0)
துன்னியசாலேகம்சூழ்கதவம்தாள்திறப்ப *
அன்னமுழக்கநெறிந்துக்கவாணிலச் * (௩௧)
சின்னநறுந்தாதுசூடி *—ஓர்மந்தாரம்
துன்னுநறுமலரால்தோள்கொட்டி * கற்பகத்தின் (௩௨)
மன்னுமலர்வாய்மணிவண்டுபின்தொடர *
இன்னிளம்பூந்தென்றல்புகுந்தீங்கிளமுலைமேல் * (௩௩)
நன்னறும்சந்தனச்சேறுபுலர்த்த *—தாங்கரும்சீர்
மின்னிடைமேல்கைவைத்திருந்தேந்திளமுலைமேல் * (௩௪)
பொன்னரும்பாரம்புலம்ப * அகங்குழைந்தாங்
கின்னவுருவிலிமையாத்தடங்கண்ணார் * (௩௫)
அன்னவர்தம்மானோக்கமுண்டாங்கணிமுறுவல் *
இன்னமுதம்மாந்தியிருப்பர் *—இதுவன்றே (௩௬)
அன்னவறத்தின்பயனாவது - * ஒண்பொருளும்
மன்னதிறத்ததேயாதலால் *—காமத்தின் (௩௭)
மன்னும்வழிமுறையேநிற்றுநாம் * மானோக்கி
லன்னநடையாரலரேசவாடவர்மேல் * (௩௮)
மன்னுமடலூராரென்பதோர்வாசகமும் *
தென்னுரையில்கேட்டறிவதுண்டு - *—அதனையாம்தெளியோம் ()
மன்னும்வடநெறியேவேண்டினோம் * வேண்டாதார்
தென்னன்பொதியில்செழூம்சந்தனக்குழம்பின் * (௪0)
அன்னதோர்தன்மையறியாதார் *—ஆயன்வே
யின்னிசையோசைக்கிரங்காதார் * மால்விடையின் (௪௧)
மன்னுமணிபுலம்பவாடாதார் *—பெண்ணைமேல்
பின்னுமவ்வன்றில்பேடைவாய்ச்சிறுகுரலுக்கு - * (௪௨)
உன்னியுடலுருகிநையாதார் *—உம்பர்வாய்த்
துன்னுமதியுகுத்ததூநிலாநீணெருப்பில் * (௪௩)
தம்முடலம்வேவத்தளராதார் *—காமவேள்
மன்னும்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்ய * (௪௪)
பொன்னெடுவீதிபுகாதார் *—தம்பூவணைமேல்
சின்னமலர்க்குழலுமல்குலும்மென்முலையும் * (௪௫)
இன்னிளவாடைதடவத்தாம்கண்டுயிலும் *
பொன்னனையார்பின்னும்திருவுறுக *—போர்வேந்தன் (௪௬)
தன்னுடையதாதைபணியாலரசொழிந்து *
பொன்னகரம்பின்னேபுலம்பவலங்கொண்டு * (௪௭)

மன்னும்வளநாடுகைவிட்டு *—மாதிரங்கள்
மின்னுருவில்விண்டேர்திரிந்துவெளிப்பட்டு * (சஅ)
கல்நிரைந்துதீய்ந்துகழையுடைந்துகால்சுழன்று *
பின்னும்திரைவயிற்றுப்பேயேதிரிந்துலவா * (சகூ)
கொன்னவிலும்வெங்கானத்தூடு *—கொடுங்கதிரோன்
துன்னுவெயில்வறுத்தவெம்பரல்மேல்பஞ்சடியால் * (ரு0)
மன்னனிராமன்பின்வைதேவியென்றுரைக்கும் *
அன்னநடையவணங்குநடந்திலளே *— (ருக)
பின்னும்கருநெடுங்கண்செவ்வாய்ப்பிணைநோக்கில் *
மின்னனையநுண்மருங்குல்வேகவதியென்றுரைக்கும் (ருஉ)
கன்னி * தன்னின்னுயிராம்காதலனைக்காணாது *
தன்னுடையமுன்தோன்றல்கொண்டேகத்தான்சென்று *—அங் ()
கன்னவனைநோக்காதழித்துரப்பி *—வாளமருள்
கன்னவில்தோள்காளையைக்கைப்பிடித்துமீண்டும்போய் * (ருச)
பொன்னவிலுமாகம்புணர்ந்திலளே *—பூங்கங்கை
முன்னம்புனல்பரக்கும்நன்னாடன், மின்னாடும் * (ருரு)
கொன்னவிலும்நீள்வேல்குருக்கள்குலமதலை *
தன்னிகரொன்றில்லாதவென்றித்தனஞ்சயனை * (ருசு)
பன்னகராயன்மடப்பாவை *—பாவைதன்
மன்னியநாணச்சம்மடமென்றிவையகல * (ருஎ)
தன்னுடையகொங்கைமுகநெரிய *—தான்அவன்றன்
பொன்வரையாகம்தழீஇக்கொண்டுபோய் * தனது (ருஅ)
நன்னகரம்புக்குநயந்தினிதுவாழ்ந்ததுவும் *
முன்னுரையில்கேட்டறிவதில்லையே *—சூழ்கடலுள் (ருகூ)
பொன்னகரம்செற்றபுரந்தரனோடொக்கும் *
மன்னவன்வாணனவுணர்க்குவாள்வேந்தன் * (சு0)
தன்னுடையபாவையுலகத்துத்தன்னொக்கும் *
கன்னியரையில்லாக்காட்சியாள் *—தன்னுடைய (சுக)
இன்னுயிர்த்தோழியாலெம்பெருமானீன்துழாய் *
மன்னுமணிவரைத்தோள்மாயவன் *—பாவியேன் (சுஉ)
என்னையிதுவிளைத்தவீரிரண்டுமால்வரைத்தோள் *
மன்னவன்றன்காதலனைமாயத்தால்கொண்டுபோய் * (சுங)
கன்னிதன்பால்வைக்கமற்றவனோடெத்தனையோர் *
மன்னியபேரின்பமெய்தினாள் *—மற்றிவைதா (சுச)
னென்னாலேகேட்டீரேயேழைகாளென்னுரைக்கேன் *
மன்னுமலையரையன்பொற்பாவை *—வாணிலா (சுரு)
மின்னுமணிமுறுவல்செவ்வாயுமையென்னும் *
அன்னநடையவணங்குநுடங்கிடைசேர் * (சுசு)

பொன்னுடம்புவாடப்புலனைந்தும்நொந்தகல *
தன்னுடையகூழைச்சடாபாரம்தான்தரித்து - * ஆங் (சுஎ)
கன்னவருந்தவத்தினூடுபோய் *—ஆயிரந்தோள்
மன்னுகரதலங்கள்மட்டித்து * மாதிரங்கள் (சுஅ)
மின்னியெரிவீசமேலெடுத்தசூழ்கழற்கால் *
பொன்னுலகமேழும்கடந்தும்பர்மேல்சிலும்ப * (சுகூ)
மன்னுகுலவரையும்மாருதமும்தாரகையும் *
தன்னினுடனேசுழலச்சுழன்றாடும் * (எ0)
கொன்னவிலும்மூவிலைவேல்கூத்தன்பொடியாடி *
அன்னவன்றன்பொன்னகலம்சென்றாங்கணைந்திலளே * (எக)
பன்னியுரைக்குங்கால்பாரதமாம் *—பாவியேற்
கென்னுறுநோய்யானுரைப்பக்கேண்மின் * இரும்பொழில்சூழ் (எஉ)
மன்னுமறையோர்திருநறையூர்மாமலைபோல் *
பொன்னியலுமாடக்கவாடம்கடந்துபுக்கு - * (எங)
என்னுடையகண்களிப்பநோக்கினேன் *—நோக்குதலும்
மன்னன்திருமார்பும்வாயுமடியிணையும் * (எச)
பன்னுகரதலமும்கண்களும் *—பங்கயத்தின்
பொன்னியல்காடோர்மணிவரைமேல்பூத்ததுபோல் * (எரு)
மின்னியொளிபடைப்பவீணுணும்தோள்வளையும் *
மன்னியகுண்டலமுமாரமும்நீண்முடியும் * (எசு)
துன்னுவெயில்விரித்தசூளாமணியிமைப்ப *
மன்னுமரகதக்குன்றின்மருங்கே *—ஓர் (எஎ)
இன்னிளவஞ்சிக்கொடியொன்றுநின்றதுதான் *
அன்னமாய்மானாயணிமயிலாயாங்கிடையே * (எஅ)
மின்னுயிளவேயிரண்டாயிணைச்செப்பாய் *
முன்னயதொண்டையாய்க்கெண்டைக்குலமிரண்டாய் * (எகூ)
அன்னதிருவுருவம்நின்றதறியாதே *
என்னுடையநெஞ்சுமறிவுமினவளையும் * (அ0)
பொன்னியலும்மேகலையுமாங்கொழியப்போந்தேற்கு *
மன்னுமறிகடலுமார்க்கும் * மதியுகுத்த (அக)
இன்னிலாவின்கதிருமென்றனக்கேவெய்தாகும் *
தன்னுடையதன்மைத்தவிரத்தானென்கொலோ * (அஉ)
தென்னன்பொதியில்செழுஞ்சந்தின்தாதளைந்து *
மன்னிவ்வுலகைமனங்களிப்பவந்தியங்கும் * (அங)
இன்னிளம்பூந்தென்றலும்வீசுமெரியெனக்கே *
முன்னியபெண்ணைமேல்முள்முளரிக்கூட்டகத்து (அச)
பின்னும்மவ்வன்றில்பேடைவாய்ச்சிறுகுரலும் *
என்னுடையநெஞ்சுக்கோரீர்வாளாமென்செய்கேன் * (அரு)

கன்னவில்தோள்காமன்கருப்புச்சிலைவளைய *
கொன்னவிலும்பூங்கணைகள்கோத்துப்பொதவணைந்து * (அசு)
தன்னுடையதோள்கழியவாங்கி *—தமியேன்மேல்
என்னுடையநெஞ்சேயிலக்காகவெய்கின்றான் * (அஎ)
பின்னிதனைக்காப்பீர்தானில்லையே *—பேதையேன்
கன்னவிலும்காட்டகத்தோர்வல்லிக்கடியலரின் * (அஅ)
நன்னறுவாசமற்றாரானுமெய்தாமே *
மன்னும்வறுநிலத்துவாளாங்குகுத்ததுபோல் * (அகூ)
என்னுடையபெண்மையுமென்நலனுமென்முலையும் *
மன்னுமலர்மங்கைமைந்தன் *—கணபுரத்துப் (கூ0)
பொன்மலைபோல்நின்றவன்றன்பொன்னகலம்தோயாவேல் *
என்னிவைதான்வாளாவெனக்கேபொறையாகி (கூக)
முன்னிருந்துமூக்கின்றுமூவாமைக்காப்பதோர் *
மன்னுமருந்தறிவீரில்லையே *—மால்விடையின் (கூஉ)
துன்னுபிடரெரித்துத்தூக்குண்டு * வன்துடரால்
கன்னியர்கண்மிளிரக்கட்டுண்டு *—மாலைவாய் (கூங)
தன்னுடையநாவொழியாதாடும்தனிமணியின் *
இன்னிசையோசையும்வந்தென்செவிதனக்கே * (கூச)
கொன்னவிலுமெஃகில்கொடிதாய்நெடிதாகும் *
என்னிதனைக்காக்குமாசொல்லீர் *—இதுவிளைத்த (கூரு)
மன்னன்நறுந்துழாய்வாழ்மார்பன் * மாமதிகோள்
முன்னம்விடுத்தமுகில்வண்ணன் *—காயாவின் (கூசு)
சின்னநறும்பூந்திகழ்வண்ணன் * வண்ணம்போ
லன்னகடலைமடியிட்டணைகட்டி * (கூஎ)
மன்னனிராவணனைமாமண்டுவெஞ்சமத்து *
பொன்முடிகள்பத்தும்புரளச்சரந்துரந்து * (கூஅ)
தென்னுலகமேற்றுவித்தசேவகனை *—ஆயிரக்கண்
மன்னவன்வானமும் வானவர்தம்பொன்னுலகும் * (கூகூ)
தன்னுடையதோள்வலியால்கைக்கொண்டதானவனை *
பின்னோரரியுருவமாகியெரிவிழித்து * (க00)
கொன்னவிலும்வெஞ்சமத்துக்கொல்லாதே *—வல்லாளன்
மன்னுமணிக்குஞ்சிபற்றிவரவீர்த்து * (க0க)
தன்னுடையதாள்மேல்கிடாத்தி *—அவனுடைய
பொன்னகலம்வள்ளுகிரால்போழ்ந்துபுகழ்படைத்த * (க0உ)
மின்னிலங்குமாழிப்படைத்தடக்கைவீரனை *
மன்னிவ்வகலிடத்தைமாமுதுநீர்தான்விழுங்க * (க0ங)
பின்னுமோரேனமாய்ப்புக்குவளைமருப்பில் *
கொன்னவிலும்கூர்நுதிமேல்வைத்தெடுத்தகூத்தனை * (க0ச)

மன்னும்வடமலையைமத்தாகமாசுணத்தால் *
மின்னுமிருசுடரும்விண்ணும்பிறங்கொளியும் (க0ரு)
தன்னினுடனேசுழலமலைதிரித்து - * ஆங்
கின்னமுதம்வானவரையூட்டி * அவருடைய (க0சு)
மன்னும்துயர்கடிந்தவள்ளலை *—மற்றன்றியும்
தன்னுருவமாருமறியாமல்தானங்கோர் * (க0எ)
மன்னும்குறளுருவில்மாணியாய் *—மாவலிதன்
பொன்னியலும்வேள்விக்கண்புக்கிருந்து * போர்வேந்தர் (க0அ)
மன்னைமனங்கொள்ளவஞ்சித்துநெஞ்சுருக்கி *
என்னுடையபாதத்தால்யானளப்பமூவடிமண் * (க0கூ)
மன்னுதருகென்றுவாய்திறப்ப *—மற்றவனும்
என்னால்தரப்பட்டதென்றலுமே * அத்துணைக்கண் (கக0)
மின்னார்மணிமுடிபோய்விண்தடவ *—மேலெடுத்த
பொன்னார்கனைகழற்காலேழுலகும்போய்க்கடந்து - * அங் (ககக)
கொன்னவசுரர் துளங்கச்சிலைநீட்டி *
மன்னிவ்வகலிடத்தைமாவலியைவஞ்சித்து * (ககஉ)
தன்னுலகமாக்குவித்ததாளானை *—தாமரைமேல்
மின்னிடையாள்நாயகனை விண்ணகருள்பொன்மலையை * (ககஙு)
பொன்னிமணிகொழிக்கும்பூங்குடந்தைப்போர்விடையை *
தென்னன்குறுங்குடியுள்செம்பவளக்குன்றினை * (ககச)
மன்னியதண்சேறைவள்ளலை *—மாமலர்மே
லன்னம்துயிலுமணிநீர்வயலாலி * (ககரு)
என்னுடையவின்னமுதையெவ்வுள்பெருமலையை *
கன்னிமதிள்சூழ்கணமங்கைக்கற்பகத்தை * (ககசு)
மின்னையிருசுடரைவெள்ளறையுள்கல்லறைமேல்
பொன்னை * மரதகத்தைப் புட்குழியெம்போரேற்றை * (ககஎ)
⁂ மன்னுமரங்கத்தெம்மாமணியை *—வல்லவாழ்
பின்னைமணாளனைப் பேரில்பிறப்பிலியை * (ககஅ)
தொன்னீர்கடல்கிடந்த தோளாமணிச்சுடரை *
என்மனத்துமாலை யிடவெந்தையீசனை * (கககூ)
மன்னும்கடன்மல்லைமாயவனை *—வானவர்தம்
சென்னிமணிச்சுடரைத்தண்கால்திறல்வலியை * (கஉ0)
தன்னைப்பிறரறியாத்தத்துவத்தைமுத்தினை *
அன்னத்தைமீனை யரியையருமறையை * (கஉக)
முன்னிவ்வுலகுண்டமூர்த்தியை *—கோவலூர்
மன்னுமிடைகழியெம்மாயவனை * பேயலரப் (கஉஉ)
பின்னும்முலையுண்டபிள்ளையை *—அள்ளல்வா
யன்னமிரைதேரழுந்தூரெழும்சுடரை * (கஉஙு)

⁂ தென்தில்லைச்சித்திரகூடத்தென்செல்வனை *—
மின்னிமழைதவழும்வேங்கடத்தெம்வித்தகனை * (கஉச)
மன்னனைமாலிருஞ்சோலைமணாளனை *
கொன்னவிலுமாழிப்படையானை *—கோட்டியூ (கஉரு)
ரன்னவுருவிலரியை * திருமெய்யத்
தின்னமுதவெள்ளத்தை யிந்தளூரந்தணனை * (கஉசு)
மன்னுமதிட்கச்சிவேளுக்கையாளரியை *
மன்னியபாடகத்தெம்மைந்தனை *—வெஃகாவி (கஉஎ)
லுன்னியயோகத்துறக்கத்தை * ஊரகத்து
ளன்னவனையட்டபுயகரத்தெம்மானேற்றை * (கஉஅ)
என்னைமனங்கவர்ந்தவீசனை *—வானவர்தம்
முன்னவனை மூழிக்களத்து † விளக்கினை (கஉகூ)
அன்னவனையாதனூராண்டளக்குமையனை *
நென்னலையின்றினைநாளையை *—நீர்மலைமேல் (கங0)
மன்னுமறைநான்குமானானை * புல்லாணித்
தென்னன் தமிழை வடமொழியை * நாங்கூரில் (கஙக)
மன்னுமணிமாடக்கோயில்மணாளனை *
நன்னீர்தலைச்சங்கநாண்மதியை *—நான்வணங்கும் (கஙஉ)
கண்ணனைக்கண்ணபுரத்தானை * தென்னறையூர்
மன்னுமணிமாடக்கோயில்மணாளனை * (கஙங)
கன்னவில்தோள்காளையைக்கண்டாங்குக்கைதொழுது *
என்னிலைமையெல்லாமறிவித்தாலெம்பெருமான் * (கஙச)
தன்னருளுமாகமும்தாரானேல் *—தன்னைநான்
மின்னிடையார்சேரியிலும்வேதியர்கள்வாழ்விடத்தும்* (கஙரு)
தன்னடியார்முன்பும்தரணிமுழுதாளும் *
கொன்னவிலும்வேல்வேந்தர்கூட்டத்தும்நாட்டகத்தும் * (கஙசு)
தன்னிலைமையெல்லாமறிவிப்பன் *—தான்முனநாள்
மின்னிடையாய்ச்சியர்தம்சேரிக்களவின்கண் * (கஙஎ)
துன்னுபடல்திறந்துபுக்கு *—தயிர்வெண்ணெய்
தன்வயிறாரவிழுங்க * கொழுங்கயல்கண் (கஙஅ)
மன்னுமடவோர்கள்பற்றியோர்வான்கயிற்றால் *
பின்னுமுரலோடுகட்டுண்டபெற்றிமையும் * (கஙகூ)
அன்னதோர்பூதமாயாயர்விழவின்கண் *
துன்னுசகடத்தால்புக்கபெருஞ்சோற்றை * (கச0)
முன்னிருந்துமுற்றத்தான்துற்றிய ‡ தெற்றெனவும் *
மன்னர்பெருஞ்சவையுள்வாழ்வேந்தர்தூதனாய் * (கசக)
தன்னையிகழ்ந்துரைப்பத்தான்முனநாள்சென்றதுவும் *
மன்னுபறைகறங்கமங்கையர்தம்கண்களிப்ப * (கசஉ)

† "வளத்தினை" என்றுபாடாந்தரம். ‡ தெற்றெனவு - தெளிவு.

கொன்னவிலும்கூத்தனுய்ப்பெயர்த்தும்குடமாடி *
என்னிவனென்னப்படுகின்றவீடறவும் * (கசரு)
தென்னிலங்கையாட்டி யரக்கர்குலப்பாவை *
மன்னனிராவணன்றன்நல்தங்கை *—வாளெயிற்றுத் (கசச)
துன்னுசுடுசினத்துச்சூர்ப்பண காச்சோர்வெய்தி
பொன்னிறங்கொண்டுபுலர்ந்தெழுந்தகாமத்தால் * (கசரு)
தன்னைநயந்தாளைத்தான்முனிந்துமூக்கரிந்து *
மன்னியதிண்ணெனவும் வாய்த்தமலைபோலும் * (கசசு)
தன்னிகரொன்றில்லாத தாடகையை *—மாமுனிக்காத்
தென்னுலகமேற்றுவித்ததிண்டிறலும் * மற்றிவைதான் (கசஎ)
உன்னியுலவாவுலகறியவூர்வன்நான் *
முன்னிமுளைத்தெழுந்தோங்கியொளிபரந்த * (கசஅ)
மன்னியபூம்பெண்ணைமடல். (கசஅ௯)

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.



ஆக வாக்யம்-உகஎ-க்கு-பாட்டு-கசஅ௯.

நேரிசை-வெண்பா.

என்னிலைமையெல்லாமறிவித்தாலெம்பெருமான் *
தன்னருளுமாகமும்தாரானேல் *—பின்னைப்போய்
ஒண்டுறைநீர்வேலையுலகறியவூர்வன்நான் *
வண்டறைபூம்பெண்ணைமடல்.

† [மண்ணிற்பொடிப்பூசிவண்டிரைக்கும்பூச்சூடி
பெண்ணைமடல்பிடித்துப்பின்னே—அண்ணல்
திருநறையூர்நின்றபிரான்தேர்போகும்வீதி
பொருமறையாய்ச்செல்வம்பொலிந்து.]

## பெரியதிருமடல் ஸம்பூர்ணம்.

| | |
|---|---|
| முதல்திருவந்தாதி | பாட்டு. க00 |
| இரண்டாந்திருவந்தாதி | ,, க00 |
| மூன்றாந்திருவந்தாதி | ,, க00 |
| நான்முகந்திருவந்தாதி | ,, கூசு |
| திருவிருத்தம் | ,, க00 |
| திருவாசிரியம் | ,, எ |
| பெரியதிருவந்தாதி | ,, அஎ |
| திருவெழுகூற்றிருக்கை | ,, க |
| சிறியதிருமடல் | ,, எஎ௯ |
| பெரியதிருமடல் | ,, கசஅ௯ |

ஆக, பாட்டு, அகஎ.

† இத்தனியன், இந்தப்ராந்தங்களில் அநுஸந்திப்பதில்லை.

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமாநுஜாய நம꞉.

# நம்மாழ்வார் வைபவம்.

𑌵𑍃𑌷𑌭𑍇 𑌤𑍁 𑌵𑌿𑌶𑌾𑌖𑌾𑌯𑌾𑌂 𑌕𑍁𑌰𑍁𑌕𑌾𑌪𑍁𑌰𑌿𑌕𑌾𑌰𑌿𑌜𑌮𑍍।
𑌪𑌾𑌣𑍍𑌡𑍍𑌯𑌦𑍇𑌶𑍇 𑌕𑌲𑍇𑌰𑌾𑌦𑍌 𑌶𑌠𑌾𑌰𑌿𑌂 𑌸𑍈𑌨𑍍𑌯𑌪𑌂 𑌭𑌜𑍇॥

வ்ருஷபே து விஶாகாயாம் குருகாபுரிகாரிஜம்-
பாண்ட்யதேஶே கலெளராதெள ஶடாரிம் ஸைந்யவம் பஜே.

---

இவ்வாழ்வார், திருக்குருகையில், கலி - ௪௩ - வது நாள் ப்ரமாதி௵ வைகாசி௴ ௧௨௨ பௌர்ணமி வெள்ளிக்கிழமை கூடின விசாகநக்ஷத்ரம் கற்கடகலக்நத்தில், ஸ்ரீசேநாம்ஶராய், காரியாருக்கும் உடையநங்கையார்க்கும் குமாரராகத் திருவவதரித்தருளினார்.

ஆழ்வார்களெல்லாரையும் அவயவபூதராகவுடையராய். தாம்ரபர்ணியென்னும் பொருநையாற்றின்கரையில் ஸ்ரீநகரியென்று பேர் பெற்ற திருக்குருகூர்க்கு நிர்வாஹகரான நம்மாழ்வார் திருவவதார க்ரமமெங்ஙனே யென்னில்:—

திருவழுதிவளநாடர் என்றொருவர், அவர்குமாரர் அறந்தாங்கியார், அவர்குமாரர் சக்ரபாணியார், அவர்குமாரர் அச்யுதர், அவர்குமாரர் செந்தாமரைக்கண்ணர், அவர்குமாரர் செங்கண்ணர், அவர்குமாரர் பேர்க்காரியார், அவர்குமாரர் காரியார், அவர் குமாரர் மாறன் என்னும் நம்மாழ்வார்; இப்படிஸந்தாநபரம்பரையாக எம்பெருமானுக்கு அடிமைசெய்யும் குலத்திற்பிறந்த பழிப்பில்லாதவராய்த்து இவ்வாழ்வார்.

இத்திருவம்ஶத்தில் போர்க்காரியார், தன்புத்ரரான காரியாருக்கு விவாஹம்பண்ணுவிக்கத் திருவுள்ளமாய், திருவண்பரிசாரத்தில் வைஷ்ணவஸந்தாநிகரான திருவாழ்மார்பர் திருமாளிகையில் காரியாருடன் எழுந்தருளி, "தேவரீர் புத்ரியான உடையநங்கையாரைக் காரியாருக்கு விவாஹம்பண்ணித் தரவேணும்" என்று கேட்க; திருவாழ்மார்பரும் திருவுள்ளமுகந்து உடையநங்கையாரைக் காரியாரு

க்கு உதகபூர்வகமாக ஸமர்ப்பிக்க ; காரியாரும் பாணிக்ரஹணம்பண்ணி, திருவண்பரிசாரத்தில் திருவாழ்மார்பனுன எம்பெருமானைத் திருவடித்தொழுது, பூரணகும்பத்துடன் பலரும்வந்து எதிர்கொள்ளத் திருக்குருகூர்க்கெழுந்தருளி, இல்லறம் என்னும் க்ருஹஸ்த்தாஸ்ரமத்தில் எழுந்தருளியிருந்தார்.

இப்படி சிலநாள்சென்றபின்பு, காரியார் தம் பத்நியாரான உடையநங்கையாரைத் திருக்குருகூரில் நின்றும் திருவண்பரிசாரத்துக்கு அழைத்துக்கொண்டுபோய் மீண்டுவருகையில், திருக்குறுங்குடிக்கு எழுந்தருளி, நம்பியைசேவித்து, "அடியோங்களுக்கு ஒருஸந்தானம்தந்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்க ; நம்பியும், "நாமேவந்துபிறக்கிறோம்" என்று வரப்ரதாநம் பண்ணி, திருமாலைமுதலானதும் ப்ரஸாதித்தருள ; அவர்களும் த்ருப்தராய்த் திருக்குருகூர்க்குத் திரும்பினுர்கள். உடையநங்கையாரும் கர்ப்பவதியாக ; எம்பெருமான்இவரிடத்தில் ஸேனைமுதலியாரை நம்மாழ்வாராகத் திருவவதரிப்பித்தருளினுன். திருவநந்தாழ்வானும், மழையும் வெய்யிலும் இவர்மேல்படாதே யிருக்கும்படியாக, இவர்க்கு முன்னே திருப்புளியாழ்வாராய் வந்தவதரித்தருளினுர்.

ஆழ்வார் திருவவதரித்ததுதொடங்கி, கண்களைவிழித்து முறுவல்செய்து முலையுண்ணுமல் மௌநத்தோடே யெழுந்தருளியிருக்கச்செய்தே, வாட்டமின்றிக்கே பரிபூர்ணராயிருக்கிற இவ்வாச்சரியத்தை மாதாபிதாக்கள்கண்டு ; எம்பெருமான்மேல் பாரத்தைச்சுமத்தி, இவ்வாழ்வார் திருவவதரித்தருளின பன்னிரண்டாநாள், திருச்சங்கணித்துறையையுடைய பொருநலாற்றின் தென்கரையில் பொலிந்துநின்றபிரான் திருமுன்னே இவ்வாழ்வாரை யெடுத்துக்கொண்டுபோய் அவரை ஸேவிக்கப்பண்ணி, இவர்க்கு மாறன் என்று திருநாமம்சாத்தி, திருப்புளியாழ்வாரடியிலே தொட்டிலில்வளர்த்தி, இவரைப் புத்ரனென்றெண்ணுமல் விசேஷப்ரதிபத்திபண்ணி ஸேவித்துக்கொண்டிருக்க ; இவ்வாழ்வார் தாம் திருப்புளியாழ்வாரடியிலே, பதினுறு திருநக்ஷத்ரமளவாக, திருக்கண்களை விழியாமல் மௌநியாய் பத்மாஸநத்தில் ஜ்ஞாநமுத்ரையோடே எழுந்தருளியிருந்தார் இதைத் தாயும்தந்தையும்கண்டு, "இவர் தம்மைப்போல் அதிகாரிகளைக் காணுமையால் உலகத்தாரோடு பேசாதிருக்கிறுர்" என்றறியாதே, "திருக்குறுங்குடிநம்பிக்கு நாம்செய்ததென்" என்று சிந்தைகலங்கி யிருந்தார்கள்.

இப்படி யிருக்கையில், மதுரகவியாழ்வார் திவ்ய தேசங்களைச் சேவிக்க எழுந்தருளாநிற்க, திருவயோத்யைக்கு எழுந்தருளினவளவில், ஒருநாள் ராத்ரி தென்திசையில் ஒரு அப்ராக்ருததிவ்ய தேஜஸ்ஸைக்கண்டு, இது என்? என்றுதிகைத்துநின்று, "ஏதேனும்க்ராமங்கள் வேகிறதோ? காட்டுத்தீயோ? என்று தம்மில்விசாரித்து, அன்று கண்வளர்ந்தருளினர். பின்னையும் இரண்டு மூன்றுநாள் இப்படியே கண்டு, "இது அப்ராக்ருததேஜஸ்ஸா யிருக்கிறது, இதற்குக்காரணத்தை நாம் பரீக்ஷிப்போம்" என்று பகலெல்லாம் கண்வளர்ந்து, ராத்ரி அந்த தேஜஸ்ஸேகுறியாகஅதிகவேகத்துடன்மீண்டெழுந்தருளி புண்ய க்ஷேத்ரங்கள்தோறும் சோதித்துக்கொண்டுவந்து, திருவரங்கப் பெருநகரில் சோதிக்க ; அதற்கும் அப்பாலே தென்திசையிலேயாயிருக்க; பின்னையும் முன்போல் சீக்ரமாக எழுந்தருளி, திருக்குருகூரிற்சென்று, அப்பால் பார்த்துக்காணுமையால் "இது இங்கேயாயிருக்கும்" என்று சோதித்துவந்து, உறங்காப்புளியான திருப்புளியாழ்வாரடியில், பதினாறு வயஸ்ஸுடையராய், கண்களைவிழித்துப் பாராமல் பத்மாஸநத்தில் ஜ்ஞாநமுத்ரையோடே யெழுந்தருளியிருக்கும் பரமாசார்யரான பராங்குசரைப்பார்த்து, "இவர்க்கு சைதந்யமுண்டோ ? காதுகேட்குமோ ? " என்று அறிகைக்காக ஒரு குண்டுகல்லை அவர்முன்னே, திடீர் ! என்று எடுத்துப்பொகட ; இவரும் அவ்வோசையைக்கேட்டு, திடுக்கென்று திருக்கண்களை மலரவிழித்துப்பார்க்க ; மதுரகவிகளும், "இவருக்கு வாக்குண்டோ ? இல்லையோ? " என்றுஅறிகைக்காக, அவரைக்குறித்து, "† செத்தத்தின்வயிற்றில் சிறியதுபிறந்தால் - எத்தைத்தின்றெங்கேகிடக்கும்? " என்றுகேட்க; "அத்தைத்தின்று அங்கேகிடக்கும்" என்று ஆழ்வார் அருளிச்செய்ய. மதுரகவிகள் கேட்டருளி, இவர்ஸர்வஜ்ஞர் ! இம்மஹாநுபாவரை நாம் அநுவர்த்தித்து உஜ்ஜீவிக்கவேண்டும்" என்றுநினைத்து ஆழ்வார் திருவடிகளில் ஆஶ்ரயித்து க்ருதார்த்தராய், ஆழ்வாரைஸ்தாநுபவம்பண்ணிக்கொண்டு எழுந்தருளியிருந்தார்.

† செத்தத்தின் வயிற்றில் சிறியது பிறக்கையாவது—செத்தது என்று- அசித்து : அது எங்ஙனேயென்னில் ; அப்ராணிமத்தாய் ஜடமாயிருக்கையாலே அசித்தைச் சொல்லுகிறது : அதின்வயிற்றில் சிறியது பிறக்கையாவது- சரீரத்தோடே ஆத்மாவுக்குண்டான ஸம்பந்தத்தை : சிறியதாவது - அணுபரிமாணமாயிருக்கிறஆத்மாவைச் சொல்லுகிறது : சரீரத்தோடேஆத்மாவுக்கு ஸம்பந்தமுண்டானல், அதுக்குபோக்யமும் அசித்கதமாயிருக்கிற ஸுகதுக்கங்கள். அத்தைத்தின்று அங்கே கிடக்கையாவது-சரீரகதமாயிருக்கிற ஸுகதுக்காதிகளைபுஜித்துக்கொண்டுசரீரத்தையே ஆஶ்ரயித்துக்கொண்டிருக்கை.

அவ்வளவில், ஸ்ரீவைகுண்டத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமந்நாராயணன் "ஆழ்வாருக்கு எதிர்விழி கொடுக்கவேணும்" என்று திருவுள்ளமாய், பிராட்டியுந் தானுமாய்ப் பெரியதிருவடியின் மேல்வந்து தோன்றி, தன்னுடைய ஸ்வரூப ரூப குண விபூதி சேஷ்டிதங்களையெல்லாம் கண்டு அநுபவிக்கலாம்படி ஆழ்வார்க்கு ஸர்வஜ்ஞமதிநலமருள; ஆழ்வாரும், எம்பெருமானுடைய திவ்யாத்மஸ்வரூபத்தையும் திவ்யமங்களவிக்ரஹத்தையும் திவ்யகுணங்களையும் அநுபவித்து, அவ்வநுபவத்தாலுண்டான ப்ரீதி உள்ளடங்காமையால், இபற்பாவாக, திருவிருத்தம், திருவாசிரியம், பெரியதிருவந்தாதி என்கிற மூன்று திவ்ய ப்ரபந்தங்களால், ரிக் யஜுஸ்ஸு அதர்வணம் என்கிற மூன்றுவேதங்களின் ஸாரார்த்தத்தையும், சரமப்ரபந்தமான திருவாய்மொழியால் ஸாமவேதஸாரார்த்தத்தையும், அருளிச்செய்து, மதுரகவிபோல்வார் திருவுள்ளத்தில் அறியக்கற்று வல்லாராம்படி ப்ரதிஷ்டிப்பித்தருளினார்.

எல்லா திவ்யதேசங்களிலுள்ள எம்பெருமான்களும் திருப்புளியாழ்வாரடிமேலெழுந்தருளி இவ்வாழ்வார்க்கு ஸேவைஸாதித்து, தாங்களும் ஸத்தைபெற்றிருக்கவும் ; நித்யஸூரிகளும் ஸ்வேதத்வீபவாஸிகளும் இவ்வாழ்வாரைக் காண்கைக்காக வந்து நிற்கவும்; அவர்களை ஆழ்வார்ஸேவித்து "பொலிக பொலிக" என்று மங்களாசாஸநம்பண்ணி, இப்படி ஸ்ரீவைஷ்ணவர்களின் வைபவத்தை யறிந்து அநுபவித்த தமக்கு உபயவிபூதியிலும் ஒப்பில்லாத பெருமையையுடையராய், பால்யந் துடங்கி எம்பெருமானுடைய குணங்களையே தாரகமாகவுடையரான இவ்வாழ்வார் ; அர்த்தபஞ்சகத்தையும், ஸாரஜ்ஞகதி மந்த்ரார்த்தத்தையும், சரமப்ரபந்தமான திருவாய்மொழியில் நன்றாகத்தெளியும்படி யருளிச்செய்து, ௩௫-திருநக்ஷத்ரத்துக்குமேல் அவாவற்று வீடுபெற்றருளினார்.

இவர் சடவாயுவை நிராகரித்தமையால் இவர்க்கு சடகோபர் என்றும், பொலிந்துநின்றபிரானால் ப்ரஸாதிக்கப்பட்ட மகிழம்பூமாலையைச் சாத்திக்கொண்டமையால் வகுளாபரணர் என்றும்திருநாமமாயிற்று. இவர்க்கு நம்மாழ்வார் என்று திருநாமமாகைக்கடி— முற்காலத்தில்பெருமாள் எல்லாஆழ்வார்களிற் காட்டிலும் ஆழ்வாரை நம்மாழ்வார் என்று அபிமானித்தருளி, பெரிய திருவத்யயநத்துக்கும் அப்படியே திருமுகமெழுதித் திருநகரிக்கு அனுப்பியருளுவர் என்றுண்டு. அன்றிக்கே, ஒருநாள் மலைநாட்டில் பெருமாளெழுந்தருளினபோது அங்கேமற்றுமுண்டான திருப்பதியிலெம்பெருமான்களும் ஆழ்வாரும்

திரண்டிருக்கக்கண்டு, ஆழ்வார்பக்கல் மிகவும் க்ருபை பண்ணியருளி, "நம்முடைய ஆழ்வார் ! நம்மருகே வாரும்" என்று தம்முடைய திவ்யஸிம்ஹாஸநத்தில் வைத்துக்கொண்டு முத்தின்சட்டை முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்து அருள்செய்தார் என்று மருளிச்செய்வார்கள். அன்றிக்கே, பெரியமுதலியார் இவ்வாழ்வாரிடத்தில் த்வயபுரஸ்ஸரமாக திருவாய்மொழி முதலான ப்ரபந்தங்களையெல்லாம்பெற்று, அதினால்"நம்முடையஆசாரியர்" என்றாற்போல், "நம்முடையஆழ்வார்" என்றாயிற்று அபிமாநித்துக்கொண்டுபோருவது.

அநந்தரம்,ஆழ்வார்க்கு ப்ரதமஶிஷ்யரானமதுரகவிகள்தன் ஆசாரியர் வைபவத்தை கண்ணிநுண்சிறுத்தாம்பு என்கிற திவ்யப்ரபந்தத்தாலே யருளிச்செய்து, அர்ச்சாவதாரரூபமான ஆழ்வார் விக்ரஹத்தையும் ஏறியருளப்பண்ணி, அவர்க்கு நித்ய பக்ஷமாஸ அயந ஸம்வத்ஸர உத்ஸவங்களையெல்லாம் தாழ்வற நடத்திக்கொண்டு மஹோத்ஸவம் கண்டருளப்பண்ணி, "வேதம்தமிழ்செய்தபெருமாள்வந்தார் ! திருவாய்மொழிப்பெருமாள்வந்தார் ! திருநகரிப்பெருமாள் வந்தார் ! திருவழுதிவளநாடர் வந்தார் ! திருக்குருகூர்நகர் நம்பி வந்தார் ! காரிமாறன் வந்தார் ! சடகோபன் வந்தார் ! பராங்குசர்வந்தார்! என்று பல சின்னம் பரிமாற; அவ்வளவில் ஏகம்பநாடன் சிஷ்யர்கள்வந்து, "எங்கள்கம்பனோடு தர்க்கித்துச் சங்கப்பலகை யேறினாலொழிய, வேதம் தமிழ்செய்தபெருமாள் ! என்று விருதுபிடிக்கவொட்டோம்" என்று தடுக்க, மதுரகவிகளும், "அது ந்யாயந்தான், எங்கள் ஆழ்வார் எங்கும்எழுந்தருளார், அவருடையதிவ்யஸூக்திக்குச்சங்கப்பலகை யிடங்கொடுத்ததாகில் அவர்க்கு இடங்கொடுத்ததாம்" என்று சொல்லி; ஒருசிறுமுறியிலே "கண்ணன் கழலிணை" என்று எழுதி, இச்சிறுமுறியைச் சங்கப்பலகையின்மேலேவைக்க; அக்காலத்தில்தென்மதுரையில் கம்பநாடனோடுசேர முந்நூறு தமிழ்ப்புலவர் சங்கப்பலகை யேறியிருக்க, அப்பலகை அவர்களெல்லாரையும் எடுத்துக் கவிழ்த்துப்போட்டு, ஆழ்வார்திவ்யஸூக்திச்சிறுமுறியொன்றையுமே தரித்துக்கொண்டு நிற்க; இதைக்கண்டு ஏகம்பநாடனும் ஆச்சரியப்பட்டு.

ஈயாடுவதோ கருடற்கெதிரே ? இரவிக்கெதிர்மின் மினியாடுவதோ ?
நாயோடுவதோ வுறுமிப்புலிமுன் ? நரிகேசரிமுன்னடையாடுவதோ ?
பேயாடுவதோ வழகூர்வசிமுன் ? பெருமானடிசேர்வகுளாபரணன்
ஓராயிரமாமறையின் தமிழின் ஒருசொற்பொருமோவுலகிற்கவியே ?

என்று ஆழ்வார்விஷயமாகக் கவிசொல்லிஅபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டான். பின்பு, அங்கிருந்த தமிழ்ப்புலவர்கள் தனித்தனியே கவிசொல்லி அபராதக்ஷாபணம் பண்ணிக்கொண்டார்கள்.

ஆனதிருவிருத்தம்நூறுமருளினான்வாழியே
ஆசிரியமேழுபாட்டளித்தபிரான்வாழியே
ஈனமிலந்தாதியெண்பத்தேழீந்தான்வாழியே
இலகுதிருவாய்மொழியாயிரத்தொருநூற்றிரண்டுரைத்தான்வாழியே
வானணியும்மாமாடக்குருகைமன்னன்வாழியே
வைகாசிவிசாகத்தில் வந்துதித்தான்வாழியே
சேனையர்கோனவதாரஞ்செய்தவள்ளல்வாழியே
திருக்குருகைச்சடகோபன் திருவடிகள்வாழியே.

மேதினியில்வைகாசி விசாகத்தோன்வாழியே
வேதத்தைச்செந்தமிழால்விரித்துரைத்தான்வாழியே
ஆதிகுருவாய்ம்புவியிலவதரித்தான்வாழியே
அநவரதம்சேனையர்கோனடிதொழுவோன்வாழியே
நாதனுக்குநாலாயிரமளித்தான்வாழியே
நம்மதுரகவிவணங்கும்நாவீறன்வாழியே
மாதவன்பொற்பாதுகையாய்வளர்ந்தருள்வோன்வாழியே
மகிழ்மாறன்சடகோபன்வையகத்தில்வாழியே.

நம்மாழ்வார் திருவடிகளேசரணம்.



    

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

## நம்மாழ்வாரருளிச்செய்த

# திருவாய்மொழி.

## தனியன்கள்.

நாதமுநிகளருளிச்செய்தது.

𑌭𑌕𑍍𑌤𑌾𑌮𑍃𑌤𑌂 𑌵𑌿𑌶𑍍𑌵𑌜𑌨𑌾𑌨𑍁𑌮𑍋𑌦𑌨𑌂 |
𑌸𑌰𑍍𑌵𑌾𑌰𑍍𑌥𑌦𑌂 𑌶𑍍𑌰𑍀𑌶𑌠𑌕𑍋𑌪𑌵𑌾𑌙𑍍𑌮𑌯𑌮𑍍 ||
𑌸𑌹𑌸𑍍𑌰𑌶𑌾𑌖𑍋𑌪𑌨𑌿𑌷𑌤𑍍𑌸𑌮𑌾𑌗𑌮𑌂 |
𑌨𑌮𑌾𑌮𑍍𑌯𑌹𑌂 𑌦𑍍𑌰𑌾𑌵𑌿𑌡𑌵𑍇𑌦𑌸𑌾𑌗𑌰𑌮𑍍 ||

பக்தாம்ர்தம்விஶ்வஜநாநுமோதநம்
ஸர்வார்த்ததம்ஸ்ரீஶடகோபவாங்மயம்
ஸஹஸ்ரஶாகோபநிஷத்ஸமாகமம்
நமாம்யஹம்த்ராவிடவேதஸாகரம்.

ஈஶ்வரமுநிகளருளிச்செய்தது.

திருவழுதிநாடென்றும் தென்குருகூரென்றும் *
மருவினியவண்பொருநலென்றும் *—அருமறைக
ளந்தாதிசெய்தா னடியிணையேயெப்பொழுதும் *
சிந்தியாய்நெஞ்சே தெளிந்து.

சொட்டைநம்பிகளருளிச்செய்தது.

மனத்தாலும்வாயாலும் வண்குருகூர்பேணும் *
இனத்தாரையல்லா திறைஞ்சேன் *—தனத்தாலும்
ஏதுங்குறைவிலே னெந்தைசடகோபன் *
பாதங்கள்யாமுடைய பற்று.

அனந்தாழ்வானருளிச்செய்தது.

ஏய்ந்தபெருங்கீர்த்தி யிராமாநுசமுநிதன்
வாய்ந்தமலர்ப்பாதம் வணங்குகின்றேன் *—ஆய்ந்தபெரும்
சீரார்சடகோபன் செந்தமிழ்வேதந்தரிக்கும் *
பேராதவுள்ளம்பெற.

பட்டரருளிச்செய்தவை.

வான்திகழும்சோலை மதிளரங்கர்வண்புகழ்மேல்
ஆன்றதமிழ்மறைக ளாயிரமும் *—ஈன்ற
முதல்தாய்சடகோபன் மொய்ம்பால்வளர்த்த *
இதத்தாயிராமாநுசன்.

மிக்கவிறைநிலையும் மெய்யாமுயிர்நிலையும் *
தக்கநெறியும் தடையாகித்—தொக்கியலும்
ஊழ்வினையும்வாழ்வினையு மோதும்குருகையர்கோன் *
யாழினிசைவேதத்தியல்.



## ஸ்ரீ மணவாளமாமுநிகள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருவாய்மொழி நூற்றந்தாதியின்

## தனியன்கள்.

நேரிசை-வெண்பா.

அல்லும்பகலு மனுபவிப்பார்தங்கட்குச்
சொல்லும்பொருளுந் தொகுத்துரைத்தான்—நல்ல
மணவாளமாமுநிவன் மாறன்மறைக்குத்
தணவா நூற்றந்தாதி தான்.

மன்னுபுகழ்சேர் மணவாளமாமுநிவன்
தன்னருளாலுட்பொருள்க டன்னுடனே—சொன்ன
திருவாய்மொழிநூற் றந்தாதியாந்தேனை
ஒருவாதருந்துநெஞ்சே யுற்று.

தனியன்கள் முற்றும்.

ஸ்ரீ
ஸ்ரீமதேராமாநுஜாயநம:

---

ஸாஸ்த்ரஜந்யஜ்ஞாந யோகஜந்யஜ்ஞானங்களைவிட ஆயிரமடங்கதி ஸயித்த
பகவத்ப்ரஸாதஜந்ய தத்வயாதாத்ம்யஜ்ஞாந வித்தமராய், மயர்வறமதிநல
மருளப்பெற்ற ப்ரபந்நஜநகூடஸ்த்தரா யெழுந்தருளி யிருக்கும்
மஹாப்ரபாவரான
**நம்மாழ்வார் திருவாய்மலர்ந்தருளிய**
**ப்ரபந்தங்கள் நான்கனுள் சரமமாய்**
பகவதநுபவ பரீவாஹரூப த்ராவிடவேதஸாகரமான
ஸாமவேதஸாரமாகிய

# திருவாய்மொழி.

---

## முதற்பத்து.

## முதற்றிருவாய்மொழி - உயர்வு.

எம்பெருமானது கல்யாணகுணங்களையும், பரத்வத்தையும்
அருளிச்செய்கிறார்.

---

நாற்சீராய் அளவடி நான்குமொத்திருக்கையாலே - கலிவிருத்தம்.
பண் - முதிர்ந்தகுறிஞ்சி, தாளம் - ஏழொத்து.
**கமாசுராகம் - அதிதாளம்.**

✤உயர்வறவுயர்நல முடையவன்யவனவன் *
மயர்வறமதிநல மருளினன்யவனவன் *
அயர்வறுமமரர்க ளதிபதியவனவன் *
துயரறுசுடரடி தொழுதெழென்மனனே. (க)

மனனகமலமற மலர்மிசையெழுதரும் *
மனனுணர்வளவிலன் பொறியுணர்வவையிலன் *
இனனுணர்முழுநல மெதிர்நிகழ்கழிவினும் *
இனனிலனெனனுயிர் மிகுநரையிலனே. (உ)

இலனதுவுடையனி தெனநினைவரியவன் *
நிலனிடைவிசும்பிடை யுருவினனருவினன் *
புலனொடுபுலனல னொழிவிலன்பரந்த * அந்
நலனுடையொருவனை நணுகினம்நாமே. (ங)

நாமவனிவனுவ னவளிவளுவளெவள் *
தாமவரிவருவ ரதுவிதுவுதுவெது *
வீமவையிவையுவை யவைநலந்தீங்கவை *
ஆமவையாயவை யாய்நின்றவவரே. (௪)

அவரவர்தமதம தறிவறிவகைவகை *
அவரவரிறையவ ரெனவடியடைவர்கள் *
அவரவரிறையவர் குறைவிலரிறையவர் *
அவரவர்விதிவழி யடையநின்றனரே. (௫)

நின்றனரிருந்தனர் கிடந்தனர்திரிந்தனர் *
நின்றிலரிருந்திலர் கிடந்திலர்திரிந்திலர் *
என்றுமோரியல்வின ரெனநினைவரியவர் *
என்றுமோரியல்வொடு நின்றவெந்திடரே. (௬)

திடவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
படர்பொருள்முழுவது மாயவையவைதொறும் *
உடன்மிசையுயிரெனக் கரந்தெங்கும்பரந்துளன் *
சுடர்மிகுசுருதியு ளிவையுண்டசுரனே. (௭)

சுரரறிவருநிலை விண்முதல்முழுவதும் *
வரன்முதலாயவை முழுதுண்டபரபரன் *
புரமொருமூன்றெரித் தமரர்க்குமறிவியந்து *
அரனயனெனவுல கழித்தமைத்துளனே. (௮)

உளனெனிலுளனவ னுருவமிவ்வுருவுகள் *
உளனலனெனிலவ னருவமிவ்வருவுகள் *
உளனெனவிலனென விவகுணமுடைமையில் *
உளனிருதகைமையோ டொழிவிலன்பரந்தே. (௯)

பரந்ததண்பரவையுள் நீர்தொறும்பரந்துளன் *
பரந்தவண்டமிதென நிலவிசும்பொழிவற *
கரந்தசிலிடந்தொறு மிடந்திகழ்பொருடொறும் *
கரந்தெங்கும்பரந்துள னிவையுண்டகரனே. (௧0)

❀கரவிசும்பெரிவளி நீர்நிலமிவைமிசை *
வரனவில்திறல்வலி யளிபொறையாய்நின்ற *
பரனடிமேல்குருகூர்ச்சடகோபன்சொல் *
நிரனிறையாயிரத் திவைபத்தும்வீடே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



உயர்வேபரன்படியை யுள்ளவெலாந்தான்கண்
டுயர்வேதநேர்கொண்டுரைத்து—மயர்வேதும்
வாராமன்மானிடரை வாழ்விக்குமாறன்சொல்
வேராகவேவிளையும் வீடு. (௧)

## உ-வது, வீடு.

இப்படிப்பட்ட பரத்வத்தில் ஸகலரும் ப்ரபத்திபண்ணி உஜ்ஜீவியுங்கோளென்றருளிச்செய்கிறார்.

இருசீராய்க் குறளடி நான்கு மொத்திருக்கையால்-வஞ்சித்துறை.
**பண் - முதிர்ந்தகுறிஞ்சி, தாளம் - ஏழொத்து.**
**சேஞ்சுருட்டிராகம் - அடதாளம்.**

✠ வீடுமின்முற்றவும் *
வீடுசெய்து * உம்முயிர்
வீடுடையானிடை *
வீடுசெய்மினே. † (க)

மின்னின்நிலையில *
மன்னுயிராக்கைகள் *
என்னுமிடத்து - * இறை
யுன்னுமின்நீரே. (உ)

நீர்நுமதென்றிவை *
வேர்முதல்மாய்த்து - * இறை
சேர்மின் * உயிர்க்கத
னேர்நிறையில்லே. (ங)

இல்லதுமுள்ளதும் *
அல்லதவனுரு *
எல்லையிலந்நலம் *
புல்குபற்றற்றே. (ச)

அற்றதுபற்றெனில் *
உற்றதுவீடுயிர் *
செற்றதுமன்னுறில் *
அற்றிறைபற்றே. (ரு)

பற்றிலனீசனும் *
முற்றவும்நின்றனன் *
பற்றிலையாய்* அவன்
முற்றிலடங்கே. (சு)

அடங்கெழில்சம்பத்து - *
அடங்கக்கண்டு - * ஈச
னடங்கெழிலஃதென்று - *
அடங்குகவுள்ளே. (எ)

உள்ளமுரைசெயல் *
உள்ளவிம்மூன்றையும் *
உள்ளிக்கெடுத்து - * இறை
யுள்ளிலொடுங்கே. (அ)

ஒடுங்கவவன்கண் *
ஒடுங்கலுமெல்லாம் *
விடும்பின்னுமாக்கை *
விடும்பொழுதெண்ணே. (கூ)

✠ எண்பெருக்கந்நலத்து - *
ஒண்பொருளீறில *
வண்புகழ்நாரணன் *
திண்கழல்சேரே. (க0)

✠ சேர்த்தடத் * தென்குரு
கூர்ச்சடகோபன்சொல் *
சீர்த்தொடையாயிரத்து - *
ஓர்த்தவிப்பத்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம் ஜீயர் திருவடிகளே சரணம்.

வீடுசெய்துமற்றெவையு மிக்கபுகழ்நாரணன்றாள்
நாடுநலத்தாலடைய நன்குரைக்கும்—நீடுபுகழ்
வண்குருகூர்மாறனிந்த மாநிலத்தோர் தாம்வாழப்
பண்புடனேபாடியருள் பத்து. (உ)

† "வீடிசைமினே" என்றும்சொல்லுவர்.

## ௩-வது, பத்துடை.

—∞✳∞—

ஸர்வேஶ்வரனை யதிநீசனனசேதநன் ஆஶ்ரயிக்கும்படியெங்ஙனேயென்னில்
அடியார்களிடத்தி லவனுக்கிருக்கும்ஸௌலப்யகுணத்தை யருளிச்செய்கிறார்

---

ஐஞ்சீராய் நெடிலடி நான்குமொத்திருக்கையாலே-கலித்துறை;
நேரசை பதினறே நிரையசை பதினேழே என்று
அடியெழுத் தொவ்வாதிருந்தது கட்டளைக்கலித்துறையல்லாமையால்
பண்-நட்டபாஷை, தாளம்-ஏழொத்து.
அபநுபகராகம் - நுபகதாளம்.

⁂ பத்துடையடியவர்க் கெளியவன்பிறர்களுக்கரிய
வித்தகன் * மலர்மகள் விரும்புமநமரும்பெறலடிகள் *
மத்துறுகடைவெண்ணெய் களவினில் † உரவிடையாப்புண்டு — *
எத்திறம் ! உரலினே டிணைந்திருந்தேங்கியவெளிவே. (௧)
எளிவருமியல்வினன் நிலைவரம்பிலபலபிறப்பாய் *
ஒளிவருமுழுநலம் முதலிலகேடிலவீடாம் *
தெளிதருநிலைமைய தொழிவிலன்முழுவதுமிறையோன் *
அளிவருமருளினே டகத்தனன்புறத்தனனமைந்தே. (௨)
அமைவுடையறநெறி முழுவதுமுயர்வறவுயர்ந்து $ *
அமைவுடைமுதல்கெட லொடிவிடையறநிலமதுவாம் *
அமைவுடையமரரும் யாவையும்யாவரும்தானும் *
அமைவுடைநாரணன் மாயையறிபவர்யாரே. (௩)
யாருமோர்நிலைமைய னெனவறிவரியவெம்பெருமான் *
யாருமோர்நிலைமைய னெனவறிவெளியவெம்பெருமான் *
பேருமோராயிரம் பிறபலவுடையவெம்பெருமான்
பேருமோருருவமு முளதில்லையிலதில்லைபிணக்கே. (௪)
பிணக்கறவறுவகைச் சமயமும்நெறியுள்ளியுரைத்த *
கணக்கறுநலத்தன னந்தமிலாதியம்பகவன் *
வணக்குடைத்தவநெறி வழிநின்றுபுறநெறிகளைகட்டு - *
உணக்குமின்பசையற வவனுடையுணர்வுகொண்டுணர்ந்தே. (௫)
உணர்ந்துணர்ந்திழிந்தகன் றுயர்ந்துருவியந்தவிந்நிலைமை *
உணர்ந்துணர்ந்துணரிலு மிறைநிலையுணர்வரிதுயிர்காள் *
உணர்ந்துணர்ந்துரைத்துரைத் தரியயனரனென்னுமிவரை *
உணர்ந்துணர்ந்துரைத்துரைத்திறைஞ்சுமின்மனப்பட்டதொன்றே.
ஒன்றெனப்பலவென வறிவரும்வடிவினுள்நின்ற *
நன்றெழில்நாரணன் நான்முகனரனென்னுமிவரை *
ஒன்றநும்மனத்துவைத் துள்ளினும்மிருபசையறுத்து *
நன்றெனநலஞ்செய்வ தவனிடைநம்முடைநாளே. (எ)

---

† உரவிடை - உரத்த ஏறுபோலச்செருக்கன்; அன்றிக்கே, உதரவிடை;
உதரம் என்றது “உரம்” என்று இடைக்குறைத்தலாய், மார்வென்றபடி.
$ “உயர்ந்த” என்று உரையிற்பாடம்.

நாளுநின்றடுநம பழமையங்கொடுவினையுடனே
மாளும் * ஓர்குறைவில்லைமனனகமலமறக்கழுவி *
நாளுநந்திருவுடை யடிகள்தம்நலங்கழல்வணங்கி ‡ *
மாளுமோரிடத்திலும் வணக்கொடுமாள்வதுவலமே. (அ)

வலத்தனன்திரிபுரமெரித்தவனிடம்பெறத்துந்தித்
தலத்து - * எழுதிசைமுகன் படைத்தநல்லுலகமுந்தானும்
புலப்பட * பின்னும்தன் னுலகத்திலகத்தனன்தானே *
சொலப்புகிலிவைபின்னும் வயிற்றுளவிவையவன்துயக்கே. (கூ)

துயக்கறுமதியில்நன் ஞானத்துளமரரைத்துயக்கும் *
மயக்குடைமாயைகள் வானிலும்பெரியனவல்லன் *
புயற்கருநிறத்தனன் பெருநிலங்கடந்தநல்லடிப்போது - *
அயர்ப்பிலனலற்றுவன் தழுவுவன்வணங்குவனமர்ந்தே. (க0)

⁂ அமரர்கள்தொழுதெழ வலைகடல்கடந்தவன்றன்னை *
அமர்பொழில்வளங்குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள் † *
அமர்சுவையாயிரத் தவற்றினுளிவைபத்தும்வல்லார் *
அமரரோடுயர்விற்சென் றறுவர்தம்பிறவியஞ்சிறையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம் ஜீயர்திருவடிகளேசரணம்.



பத்துடையோர்க்கென்றும் பரனெளியனும்பிறப்பால்
முத்திதருமாநிலத்தீர் மூண்டவன்பால்—பத்திசெயும்
என்றுரைத்தமாறன்ற னின்சொல்லாற்போம்நெடுகச்
சென்றபிறப்பாமஞ் சிறை. (ந)

## ச-வது. அஞ்சிறை.



பிராட்டிதன்மையையடைந்து ஈஶ்வரனுடைய
அபராதஸஹத்வமே ஹேதுவாக்கொண்டு பக்ஷிகளைத்தூதுவிடுகிறார்.

அளவடி நான்குமொத்திருத்தலால் கலிவிருத்தமாம்;
நாலடித்தாழிசையாகவுமாம்.

பண் - நட்டபாஷை, தாளம் - ஏழொத்து.

கண்டாராகம் - அதிதாளம்.

⁂ அஞ்சிறையமடநாராய் அளியத்தாய் * நீயும்நின்
அஞ்சிறையசேவலுமாய் ஆவாவென்றெனக்கருளி *
வெஞ்சிறைப்புள்ளுயர்த்தாற்கென்விடுதூதாய்ச்சென்றக்கால் *
வன்சிறையிலவன்வைக்கில் வைப்புண்டாலென்செய்யுமோ. (க)

‡ வணங்கி என்றது-வணங்க என்றபடி: "வணங்கில்" என்று உரையில் பாடாந்தரம். † "குற்றேவல்" என்னும்பாடாந்தரம், சீருக்கு மிகவும் சேரும்.

என்செய்யதாமரைக்கண் பெருமானார்க்கென்தூதாய் *
என்செய்யுமுறைத்தக்கா லினக்குயில்காள்நீரலிரே
முன்செய்தமுழுவினையால் திருவடிக்கீழ்க்குற்றேவல் *
முன்செய்யமுயலாதே னகல்வதுவோவிதியினமே. (உ)

விதியினால்பெடைமணக்கும் மென்னடையவன்னங்காள் *
மதியினால்குறள்மாணா யுலகிரந்தகள்வர்க்கு *
மதியிலேன்வல்வினையே மாளாதோவென்றொருத்தி *
மதியெல்லாமுள்கலங்கி மயங்குமாலென்னீரே. (ங)

என்னீர்மைகண்டிரங்கி யிதுதகாதென்னாத *
என்னீலமுகில்வண்ணர்க் கென்சொல்லியான்சொல்லுகேனோ *
நன்னீர்மையினியவர்கண் தங்காதென்றொருவாய்சொல் *
நன்னீலமகன்றில்காள் நல்குதிரோநல்கீரோ. (ச)

நல்கித்தான்காத்தளிக்கும் பொழிலேழும்வினையேற்கே *
நல்கத்தானாகாதோ நாரணனைக்கண்டக்கால் *
மல்குநீர்ப்புனல்படப்பை யிரைதேர்வண்சிறுகுருகே *
மல்குநீர்க்கண்ணேற்கோர் வாசகங்கொண்டருளாயே. (ரு)

அருளாதநீரருளி யவராவிதுவராமுன் *
அருளாழிப்புட்கடவீ ரவர்வீதியொருநாளென்று *
அருளாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி
யருள் * ஆழிவரிவண்டே யாமுமென்பிழைத்தோமே. (சா)

என்பிழைகோப்பதுபோலப் பனிவாடையீர்கின்ற † *
என்பிழையேநினைந்தருளி யருளாததிருமாலார்க்கு *
என்பிழைத்தாள்திருவடியின் தகவினுக்கென்றொருவாய்சொல் *
என்பிழைக்குமிளங்கிளியே யான்வளர்த்தநீயலையே. (எ)

நீயலையேசிறு ‡ பூவாய் நெடுமாலார்க்கென்தூதாய் *
நோயெனதுநுவலென்ன நுவலாதேயிருந்தொழிந்தாய் *
சாயலொடுமணிமாமை தளர்ந்தேன்நான் * இனியுனது
வாயலகிலின்னடிசில் வைப்பாரைநாடாயே. (அ)

நாடாதமலர்நாடி நாடோறும்நாரணன்றன் *
வாடாதமலரடிக்கீழ் வைக்கவேவகுக்கின்று *
வீடாடிவீற்றிருத்தல் வினையாற்றதென்செய்வதோ *
ஊடாடுபனிவாடா யுரைத்தீராயெனதுடலே. (கூ)

உடலாழிப்பிறப்புவீ டுயிர் § முதலாமுற்றுமாய் *
கடலாழிநீர்தோற்றி யதனுள்ளேகண்வளரும் *
அடலாழியம்மானைக் கண்டக்காலிதுசொல்லி *
விடலாழிமடநெஞ்சே வினையோமொன்றாமளவே. (கo)

---

† "ஈர்கின்றது" என்றும்பாடம். ‡ பூவை-நாகணவாய்ப்புள்.
§ "முதலாய்" என்று பாடாந்தரம்.

⁑ அளவியன்றவேழுலகத் தவர்பெருமான்கண்ணனை *
வளவயல்சூழ்வண்குருகூர்ச் சடகோபன்வாய்ந்துரைத்த *
அளவியன்றவந்தாதி யாயிரத்துளிப்பத்தின் *
வளவுரையால்பெறலாகும் வானோங்குபெருவளமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம் | ஜீயர்திருவடிகளேசரணம்.



அஞ்சிறையபுட்கடமை யாழியானுக்கு, நீர்
என்செயலைச்சொல்லுமென விரந்து—விஞ்ச
நலங்கியதுமாறனிங்கே நாயகனைத்தேடி
மலங்கியதும்பத்தி வளம். (ச)

---

## ரு-வது, வளவேழ்.



ஈஶ்வரன் தன்னுடையஶீலகுணத்தாலே ஆழ்வாருடையவிஶ்லே
ஷத்தைஸஹிக்கமாட்டாமல் சேர்த்துக்கொண்டதை
யருளிச்செய்கிறார்.

---

அறுசீராய், கழிநெடிலடி நான்குமொத்திருத்தலால்-ஆசிரியவிருத்தம்.

பண் - செருந்தி, தாளம் - ஏழொத்து.

அபநுபராகம் - ஆதிதாளம்.

⁑ வளவேழுலகின்முதலாய வானோரிறையை * அருவினையேன்
களவேழ்வெண்ணெய்தொடுவுண்ட கள்வாவென்பன் * பின்னையும் *
¶ தளவேழ்முறுவல்பின்னைக்காய் வல்லானுயர்தலைவனாய் *
இளவேறேழும்தழுவிய எந்தாயென்பன் ‡ நினைந்துநைந்தே. (க)

நினைந்துநைந்துள்கரைந்துருகி யிமையோர்பலரும்முனிவரும் *
புனைந்தகண்ணிநீர்சாந்தம் புகையோடேந்திவணங்கினால் *
நினைந்தவெல்லாப்பொருள்களுக்கும் வித்தாய்முதலில்சிதையாமே *
மனஞ்செய்ஞானத்துன்பெருமை மாசூணாதோமாயோனே. (உ)

மாயோனிகளாய்நடைகற்ற வானோர்பலரும்முனிவரும் *
நீயோனிகளைப்படையென்று நிறைநான்முகனைப்படைத்தவன் *
சேயோனெல்லாவறிவுக்கும் திசைகளெல்லாம்திருவடியால்
தாயோன் * எல்லாவெவ்வுயிர்க்கும் தாயோன்தானோருருவனே. (ங)

தானோருருவேதனிவித்தாய் தன்னில்மூவர்முதலாய *
வானோர்பலரும்முனிவரும் மற்றும்மற்றும்முற்றுமாய் *
தானோர்பெருநீர்தன்னுள்ளே தோற்றியதனுள்கண்வளரும் *
வானோர்பெருமான்மாமாயன் வைகுந்தனெம்பெருமானே. (ச)

---

¶ தளவு-முல்லை. ‡ இனைந்து என்றும் பாடம். இனைதல்-வருந்துதல்.

மானேய் † நோக்கிமடவாளை மார்வில்கொண்டாய்மாதவா *
கூனேசிதையவுண்டைவில் நிறத்தில்தெறித்தாய்கோவிந்தா *
வானார்சோதிமணிவண்ணா மதுசூதாநீயருளாய் * உன்
தேனேமலரும்திருப்பாதம் சேருமாறுவினையேனே. (௫)

வினையேன்வினைதீர்மருந்தானாய் விண்ணோர்தலைவா! கேசவா *
மனைசேராயர்குலமுதலே மாமாயனேமாதவா *
சினையேய்தழையமராமரங்க ளேழுமெய்தாய்சிரீதரா *
இனையாயினையபெயரினா யென்றுனைவனடியேனே. (௬)

அடியேன்சிறியஞானத்த னறிதலார்க்குமரியானை *
கடிசேர்தண்ணந்துழாய்க்கண்ணி புனைந்தான்றன்னைக்கண்ணனை *
செடியாராக்கைபடியாரைச் சேர்தல்தீர்க்கும்திருமாலை *
அடியேன்காண்பானலற்றுவ னிதனில்மிக்கோரயர்வுண்டே. (௭)

உண்டாயுலகேழ்முன்னமே யுமிழ்ந்துமாயையால்புக்கு *
உண்டாய்வெண்ணெய்சிறுமனிச ‡ ருவலையாக்கைநிலையெய்தி *
மண்டான்சோர்ந்ததுண்டேலும் மனிசர்க்காகும் $ பீர் * சிறிதும்
அண்டாவண்ணம்மண்கரைய நெய்யூண்மருந்தோமாயோனே. (௮)

மாயோம்தீயவலைவலைப் பெருமாவஞ்சப்பேய்வீய *
தூயகுழவியாய்விடப்பா லமுதாவமுதுசெய்திட்ட
மாயன் * வானோர்தனித்தலைவன் மலராள்மைந்தனெவ்வுயிர்க்கும்
தாயோன் * தம்மானென்னம்மா னம்மாமூர்த்தியைச்சார்ந்தே. (௯)

சார்ந்தவிருவல்வினைகளும் சரித்துமாயப்பற்றறுத்து *
தீர்ந்துதன்பால்மனம்வைக்கத் திருத்திவீடுதிருத்துவான் *
ஆர்ந்தஞானச்சுடராகி யகலம்கீழ்மேலளவிறந்து *
நேர்ந்தவுருவாயருவாகு மிவற்றினுயிராம்நெடுமாலே. (௪0)

‡‡ மாலேமாயப்பெருமானே மாமாயனேயென்றென்று *
மாலேயேறிமாலருளால் மன்னுகுருகூர்ச்சடகோபன் *
பாலேய்தமிழரிசைகாரர் பத்தர்பரவுமாயிரத்தின்
பாலே * பட்டவிவைபத்தும் வல்லார்க்கில்லை § பரிவதே. (௪௪)

ஆழ்வார்திருவடிகளேசரணம் ஜீயர்திருவடிகளேசரணம்.



வளமிக்கமால்பெருமை மன்னுயிரின்றன்மை
உளமுற்றங்கூடுருவ வோர்ந்து—தளர்வுற்று
நீங்கநினைமாறனைமால் நீடிலகுசீலத்தால்
பாங்குடனேசேர்த்தான் பரிந்து. (௫)

---

† "நோக்கின்" என்றும்பாடம். ‡ உவலை-ஹேயம். $ பீர்- வெளுப்பு. § பரிவது- துக்கம்.

## கூ-வது, பரிவதில்.

ஈஶ்வரனிடத்தி லிப்படிப்பட்ட குணமிருப்பதை யறியாமல்ஆத்மாக்கள் நரகத்தையடைவது அந்யாயமென்று, ஈஶ்வரன் துராராத்யனன்று எல்லாருமாஶ்ரயித் துஜ்ஜீவியுங்கோ ளென்கிறுர்.

முச்சீராய், சிந்தடி நான்குமொத்திருத்தலால் - வஞ்சிவிருத்தம்.
பண் - முதிர்ந்தகுறிஞ்சி, தாளம் - ஏழொத்து.
நாதநாமக்கிரியைராகம் - அடதாளம்.

‡‡ பரிவதிலீசனைப்பாடி *
விரிவதுமேவலுறுவீர் *
பிரிவகையின்றிநன்னீர்தூய்*
‡ புரிவதுவும்புகைபூவே. (க)

$ மதுவார்தண்ணந்துழாயான் *
முதுவேதமுதல்வனுக்கு-*
எதுவேதென்பணி * என்னு
ததுவேயாட்செய்யுமீடே. (உ)

ஈடுமெடுப்புமிலீசன் *
மாடுவிடாதென்மனனே *
பாடுமென்நாவவன்பாடல் *
ஆடுமெனங்கமணங்கே. (ங)

அணங்கெனவாடுமெனங்கம் *
வணங்கிவழிபடுமீசன் *
பிணங்கியமரர்பிதற்றும் *
குணங்கெழுகொள்கையினனே.()

கொள்கைகொளாமையிலாதான் *
எள்கலிராகமிலாதான் *
விள்கைவிள்ளாமைவிரும்பி *
உள்கலந்தார்க்கோரமுதே. (ரு)

அமுதமமரர்கட்கீந்த *
நிமிர்சுடராழிநெடுமால் *
அமுதிலுமாற்றவினியன் *
நிமிர்திரைநீள்கடலானே. (சு)

நீள்கடல்சூழிலங்கைக்கோன் *
தோள்கள்தலைதுணிசெய்தான் *
தாள்கள்தலையில்வணங்கி *
நாள்கடலைக்கழிமினே. (எ)

கழிமின்தொண்டீர்கள்கழித்துத்
தொழுமின்* அவனைத்தொழுதால்
வழிநின்றவல்வினைமாள்வித்து *
அழிவின்றியாக்கம்தருமே. (அ)

தருமவரும்பயனாய *
திருமகளார்தனிக்கேள்வன் *
பெருமையுடையபிரானார் *
இருமைவினைகடிவாரே. (கூ)

கடிவார்தீயவினைகள் *
நொடியாருமளவைக்கண் *
கொடியாவடுபுள்ளுயர்த்த *
வடிவார்மாதவனாரே. (க0)

‡‡ மாதவன்பால்சடகோபன் *
தீதவமின்றியுரைத்த *
ஏதமிலாயிரத்திப்பத்து-*
ஓதவல்லார்பிறவாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம் ஜீயர்திருவடிகளேசரணம்.



பரிவதிலீசன்படியைப் பண்புடனேபேசி
அரியனல னாராதனைக்கென்—றுரிமையுடன்
ஓதியருண்மாற னொழிவித்தானிவ்வுலகில்
பேதையர்கடங்கள் பிறப்பு. (கூ)

‡ "புரிவதுமாவதுபூவே" என்று பாடமாய், தேடவெளியபூ|என்றுசொல்லுவாருமுளர். $ "வதுவார்"|என்றுபாடாந்தரம் : 'வது'என்பது 'வதுவை' என்றதின் கடைக்குறை : வதுவை - மணம்.

## எ-வது, பிறவித்துயர்.



ஸ்வாராத்யனான ஈஶ்வரனுடையஆராதநம் ஸுகரூபமாயிருக்குமென்று அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண் - வியந்தம், தாளம் - ஏழொத்து.
மத்யமாவதிராகம் - அடதாளம்.

⁂ பிறவித்துயரற ஞானத்துள்நின்று *
துறவிச்சுடர்விளக்கம் தலைப்பெய்வார் *
அறவனையாழிப் படையந்தணனை *
மறவியையின்றி மனத்துவைப்பாரே. (க)
வைப்பாம்மருந்தா மடியரை * வல்வினைத்
துப்பாம்புலனைந்தும் துஞ்சக்கொடானவன் *
எப்பால்யவர்க்கும் நலத்தாலுயர்ந்துயர்ந்து - *
அப்பாலவனெங்க ளாயர்கொழுந்தே. (உ)
ஆயர்கொழுந்தா யவரால்புடையுண்ணும் *
மாயப்பிரானையென் மாணிக்கச்சோதியை *
தூயவமுதைப் பருகிப்பருகி * என்
மாயப்பிறவி மயர்வறுத்தேனே. (ங)
மயர்வறவென்மனத்தே மன்னினான்றன்னை *
உயர்வினையேதரு மொண்சுடர்க்கற்றையை *
அயர்விலமரர்க ளாதிக்கொழுந்தை * என்
இசைவினையென்சொல்லி யான்விடுவேனோ. (ச)
விடுவேனோவென் விளக்கையென்னாவியை *
நடுவேவந்துய்யக் கொள்கின்றநாதனை *
தொடுவேசெய்திள வாய்ச்சியர்கண்ணினுள் *
விடவேசெய்து விழிக்கும்பிரானையே. (ரு)
பிரான்பெருநிலங் கீண்டவன் * பின்னும்
விராய்மலர்த்துழாய் வேய்ந்தமுடியன் *
மராமரமெய்த மாயவன் * என்னு
ளிரானெனில்பின்னை யானொட்டுவேனோ. (சு)
யானொட்டியென்னு ளிருத்துவமென்றிலன் *
தானொட்டிவந்தென் தனிநெஞ்சைவஞ்சித்து-*
ஊனொட்டிநின்றென் னுயிரில்கலந்து - * இயல்
வானொட்டுமோஇனி யென்னைநெகிழ்க்கவே. (எ)
என்னைநெகிழ்க்கிலு மென்னுடைநன்னெஞ்சந்
தன்னை * அகல்விக்கத் தானுங்கில்லானினி *
பின்னைநெடும்பணைத் தோள்மகிழ்பீடுடை *
முன்னையமரர் முழுமுதலானே. (அ)

---

"முழுமுதல்தானே" என்று பாடாந்தரம்.

அமரர்முழுமுத லாகியவாதியை *
அமரர்க்கமுதீந்த வாயர்கொழுந்தை *
அமரவழும்பத் துழாவியென்னாவி *
அமரத்தழுவிற் றினியகனுமோ. (கூ)

அகலிலகலு மணுகிலணுகும் *
புகலுமரியன் பொருவல்லனெம்மான் *
நிகரிலவன்புகழ் பாடியிளைப்பிலம் *
பகலுமிரவும் படிந்துகுடைந்தே. (க0)

⁂ குடைந்துவண்டுண்ணும் துழாய்முடியானை *
அடைந்ததென் குருகூர்ச்சடகோபன் *
மிடைந்தசொல்தொடையாயிரத்திப்பத்து - *
உடைந்துநோய்களை யோடுவிக்குமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம் ஜீயர் திருவடிகளேசரணம்.



பிறவியற்றுநீள்விசும்பிற் பேரின்பமுய்க்கும்
திறமளிக்குஞ்சீலத் திருமால்—அறவினியன்
பற்றுமவர்க்கென்று பகர்மாறன்பாதமே
உற்றதுணையென்றுளமே யோடு. (எ)

---

## அ-வது, ஓடும்புள்.



ஸ்வரூபமான ஆஶ்ரயணமுடைய ஈஶ்வரன் கரணத்ரயத்தாலுங் கிட்டமாட்டாத சேதநரிடத்தில் ஆர்ஜவ குணத்தோடே ஆஶ்ரிதஸம்ஶ்லேஷம் பண்ணிக்கொண்டிருப்பானென்று அருளிச்செய்கிறார்.

---

குறளடிவஞ்சித்துறை, பண்-இந்தளம், தாளம்-ஏழொத்து.

தேசியராகம் - ஆதிதாளம்.

⁂ ஓடும்புள்ளேறி *
சூடும்தண்டுழாய் *
நீடுநின்றவை *
ஆடுமம்மானே. (க)

அம்மானாய்ப்பின்னும் *
எம்மாண்புமானான் *
வெம்மாவாய்கீண்ட *
செம்மாகண்ணனே. (உ)

கண்ணாவானென்றும் *
மண்ணோர்விண்ணோர்க்கு *
தண்ணார்வேங்கட *
விண்ணோர்வெற்பனே. (ங)

வெற்பையொன்றெடுத்து-*
‡ ஒற்கமின்றியே *
நிற்குமம்மான்சீர் *
கற்பன்வைகலே. (ச)

---

‡ ஒற்கம் - ஒடுக்கம்.

வைகலும்வெண்ணெய் *
கைகலந்துண்டான் *
பொய்கலவாது-*என்
மெய்கலந்தானே. (ரு)
கலந்தென்னாவி *
நலங்கொள்நாதன் *
புலன்கொள்மாணாய் *
நிலங்கொண்டானே. (சு)
கொண்டானேழ்விடை *
உண்டானேழ்வையம் *
தண்டாமஞ்செய்து * என்
எண்டானானானே. (எ)
ஆனானாயன் *
மீனோடேனமும் *
தானானானென்னில் *
தானாயசங்கே. (அ)
சங்குசக்கரம் *
அங்கையில்கொண்டான் *
எங்கும்தானாய *
நங்கள்நாதனே. (கூ)
நாதன் ஞாலங்கொள்
பாதன் * என்னம்மான் *
ஓதம்போல்கிளர் *
வேதநீரனே. (க0)
⁂ நீர்புரைவண்ணன் *
சீர்சடகோபன் *
நேர்தலாயிரத்து-*
ஓர்தலிவையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம் ஜீயர்திருவடிகளேசரணம்.



ஓடுமனஞ்செய்கையுரை பொன்றினில்லாதாருடனே
கூடிநெடுமாலடிமை கொள்ளுநிலை—நாடறிய
ஓர்ந்தவன்றன்செம்மை யுரைசெய்தமாறனென
ஏய்ந்துநிற்கும்வாழ்வாமிவை. (அ)

## கூ-வது, இவையுமவையும்.



ஆர்ஜவகுணாநுஸந்தாநம்பண்ணின தம்மிடத்திலீச்வரன் ஸாத்மிக்க ஸாத்மிக்க ஸர்வாவயவ ஸம்ச்லேஷம் பண்ணின அநுபவரஸத்தை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண் - கொல்லி, தாளம் - ஏழொத்து.
மோஹநராகம் - அதிதாளம்.

⁂ இவையுமவையுமுவையு மிவருமவருமுவரும் *
யவையும்யவரும்தன்னுள்ளே யாகியுமாக்கியும்காக்கும் *
அவையுள்தனிமுதலெம்மான் கண்ணபிரானென்னமுதம் *
சுவையன்திருவின்மணாள னென்னுடைச்சூழலுளானே. (க)
சூழல்பலபலவல்லான் தொல்லையங்காலத்துலகை *
கேழலொன்றாகியிடந்த கேசவனென்னுடையம்மான் *
வேழமருப்பையொசித்தான் விண்ணவர்க்கெண்ணலரியான் *
ஆழநெடுங்கடல்சேர்ந்தா னவனென்னருகலிலானே. (உ)
அருகலிலாயபெருஞ்சீ ரமரர்களாதிமுதல்வன் *
கருகியநீலநன்மேனி வண்ணன்செந்தாமரைக்கண்ணன் *
பொருசிறைப்புள்ளுவந்தேறும் பூமகளார்தனிக்கேள்வன் *
ஒருகதியின்சுவைதந்திட் டொழிவிலனென்னோடுடனே. (ந)

உடனமர்காதல்மகளிர் திருமகள்மண்மகளாயர்
மடமகள் * என்றிவர்மூவ ராளுமுலகமும்மூன்றே *
உடனவையொக்கவிழுங்கி யாலிலைச்சேர்ந்தவனெம்மான் *
கடல்மலிமாயப்பெருமான் கண்ணனென்னொக்கலையானே. (ச)

ஒக்கலைவைத்துமுலைப்பா லுண்ணென்றுதந்திடவாங்கி *
செக்கஞ்செகவன்றவள்பா லுயிர்செகவுண்டபெருமான் *
நக்கபிரானோடயனு மிந்திரனும்முதலாக *
ஒக்கவும்தோற்றியவீசன் மாயனென்னெஞ்சினுளானே. (ரு)

மாயனென்னெஞ்சினுள்ளான் மற்றும்யவர்க்குமதுவே $ *
காயமும்சீவனும்தானே காலுமெரியுமவனே *
சேயனணியன்யவர்க்கும் சிந்தைக்கும்கோசரமல்லன் *
தூயன்துயக்கன்மயக்க னென்னுடைத்தோளிணையானே. (சு)

தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர்முடிமேலும் *
தாளிணைமேலும்புனைந்த தண்ணந்துழாயுடையம்மான் *
கேளிணையொன்றுமிலாதான் கிளரும்சுடரொளிமூர்த்தி *
நாளணைந்தொன்றுமகலா னென்னுடைநாவினுளானே. (எ)

நாவினுள்நின்றுமலரும் ஞானக்கலைகளுக்கெல்லாம் *
ஆவியுமாக்கையும்தானே அழிப்போடளிப்பவன்தானே *
பூவியல்நால்தடந்தோளன் பொருபடையாழிசங்கேந்தும் *
காவிநன்மேனிக்கமலக் கண்ணனென்கண்ணினுளானே. (அ)

கமலக்கண்ணனென்கண்ணினுள்ளான் காண்பனவன்கண்களாலே *
அமலங்களாகவிழிக்கும் ஐம்புலனுமவன்மூர்த்தி *
கமலத்தயன்நம்பிதன்னைக் கண்ணுதலானொடும்தோற்றி *
அமலத்தெய்வத்தோ டுலகமாக்கியென்நெற்றியுளானே. (கூ)

நெற்றியுள்நின்றென்னையாளும் நிரைமலர்ப்பாதங்கள்சூடி *
கற்றைத்துழாய்முடிக்கோலக் கண்ணபிரானைத்தொழுவார் *
ஒற்றைப்பிறையணிந்தானும் நான்முகனுமிந்திரனும் *
மற்றையமரருமெல்லாம் வந்தெனதுச்சியுளானே. (க0)

⁂ உச்சியுள்ளேநிற்கும்தேவ தேவற்குக்கண்ணபிராற்கு *
இச்சையுள்செல்லவுணர்த்தி வண்குருகூர்ச்சடகோபன் *
இச்சொன்னவாயிரத்து ளிவையுமோர்பத்தெம்பிராற்கு *
நிச்சலும்விண்ணப்பம்செய்ய நீள்கழல்சென்னிபொருமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம் ஜீயர்திருவடிகளேசரணம்.



இவையறிந்தோர்தம்மளவி லீசனுவந்தாற்ற
அவயவங்கடோறு மணையும்—சுவையதனைப்
பெற், றார்வத்தான்மாறன் பேசினசொற்பேச, மால்
பொற்றாணஞ்சென்னி பொரும். (கூ)

$ "அஃதே" என்றும்பாடம்.

## ௧0-வது, பொருமா நீள்.



ஸர்வேஶ்வரன்பண்ணின ஸர்வாங்க ஸம்ஶ்லேஷத்துக்கு ஹேதுவேதா கிலும் தம்மிடத்திலே யுண்டோ வென்று விசாரித்து ஒருஹேதுவும் இல்லாமையாலே ஈஶ்வரனுடைய நிர்ஹேதுக உபகாரித்வத்தை அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண் -தக்கராகம், தாளம்—ஏழொத்து
பைரவிராகம் - ஆதிதாளம்.

✽✽ பொருமாநீள்படை யாழிசங்கத்தொடு *
திருமாநீள்கழ லேழுலகும்தொழ *
ஒருமாணிக்குற ளாகிநிமிர்ந்த * அக்
கருமாணிக்கமென் கண்ணுள தாகுமே. (௧)

கண்ணுள்ளேநிற்கும் காதன்மையால்தொழில் *
எண்ணிலும்வருமென் னினிவேண்டுவம் *
மண்ணும்நீரு மெரியும்நல்வாயுவும் *
விண்ணுமாய்விரியு மெம்பிரானையே. (௨)

எம்பிரானையெந்தை தந்தைதந்தைக்கும்
தம்பிரானை * தண்டாமரைக்கண்ணனை *
கொம்பராவு நுண்ணேரிடைமார்வனை *
எம்பிரானைத்தொ ழாய்மடநெஞ்சமே. (௩)

நெஞ்சமேநல்லை நல்லைஉன்னைப்பெற்றால்
என்செய்யோம் * இனி யென்னகுறைவினம் *
மைந்தனை மலராள்மணவாளனை *
துஞ்சும்போதும் விடாதுதொடர்கண்டாய். (௪)

கண்டாயேநெஞ்சே கருமங்கள்வாய்க்கின்று - * ஓர்
எண்டானுமின்றியே வந்தியலுமாறு - *
உண்டானையுலகேழு மோர்மூவடி
கொண்டானை * கண்டு கொண்டனைநீயுமே. (௫)

நீயும்நானுமிந் நேர்நிற்கில் * மேல்மற்றோர்
நோயும்சார்கொடான் நெஞ்சமேசொன்னேன் *
தாயும்தந்தையுமா யிவ்வுலகினில் *
வாயுமீசன் மணிவண்ணனெந்தையே. (௬)

எந்தையேயென்று மெம்பெருமானென்றும் *
சிந்தையுள்வைப்பன் சொல்லுவன்பாவியேன் *
எந்தையெம்பெருமானென்று வானவர்
சிந்தையுள்வைத்து * சொல்லும்செல்வனையே. (௭)

செல்வநாரண னென்றசொல்கேட்டலும் *
மல்கும்கண்பனி நாடுவன்மாயமே *
அல்லுநன்பகலு மிடைவீடின்றி *
நல்கியென்னை விடான்நம்பிநம்பியே. (அ)

⁂ நம்பியைத்தென் குறுங்குடிநின்ற * அச்
செம்பொனேதிக ழும்திருமூர்த்தியை
உம்பர்வானவ ராதியஞ்சோதியை *
எம்பிரானையென் சொல்லிமறப்பனோ. (கூ)

மறப்பும்ஞானமும் நானொன்றுணர்ந்திலன் *
மறக்குமென்றுசெந் தாமரைக்கண்ணொடு *
மறப்பறவென்னுள்ளே மன்னினான்றன்னை *
மறப்பனோவினி யானென்மணியையே. (க0)

⁂ மணியைவானவர் கண்ணனைத்தன்னதோ
ரணியை * தென்குரு கூர்ச்சடகோபன் * சொல்
பணிசெயாயிரத் துள்ளிவைபத்துடன் *
தணிவிலர்கற்ப ரேல்கல்விவாயுமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



முதற்பத்து - ஸம்பூர்ணம்.

பொருமாழிசங்குடையோன் பூதலத்தேவந்து
தருமாறேரேதுவறத் தன்னைத்—திரமாகப்
பார்த்துறைசெய்மாறன் பதம்பணிகவென்சென்னி
வாழ்த்திடுகவென்னுடைய வாய். (க0)

## இரண்டாம்பத்து.



### க-வது, வாயுந்திரை.



பாத்வஸௌலப்ய ஸௌந்தர்யங்களை யநுபவித்து அந்தவஸ்துபாஹ்யஸம்ஶ்லேஷயோகமாகவேணுமென்று ஆசைப்பட்டு அஃதகப்படாமையால் ஆர்த்திமிகுந்து ஆழ்வார் தாமொருபிராட்டி அவஸ்தையையடைந்து, அசேதநங்களையும் திர்யக்குகளையும் தம்மோடே ஸமதுஃகிகளாகவெண்ணித் தந்நிமித்தமாகப் ப்ரலாபித்ததை அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண் - புறநீர்மை, தாளம் - இடையொத்து.
எதுகலகாம்போதிராகம் - ஆதிதாளம்.

⁂ வாயும்திரையுகளும் கானல்மடநாராய் ! *
ஆயுமமருலகும்துஞ்சிலும் நீதுஞ்சாயால் *
நோயும்பயலைமையும் மீதூரவெம்மேபோல் *
நீயும்திருமாலால் நெஞ்சம்கோட்பட்டாயே. (க)

கோட்பட்டசிந்தையையாய்க் கூர்வாயவன்றிலே ! *
சேட்பட்டயாமங்கள் சேராதிரங்குதியால் *
ஆட்பட்டவெம்மேபோல் நீயும் * அரவணையான்
தாட்பட்டதண்டுழாய்த் தாமம்காமுற்றாயே. (உ)

காமுற்றகையறவோ டெல்லே ! இராப்பகல் *
நீமுற்றக்கண்டுயிலாய் நெஞ்சுருகியேங்குதியால் *
தீமுற்றத்தென்னிலங்கை யூட்டினான்தாள்நயந்த *
யாமுற்றதுற்றாயோ வாழிகனைகடலே !. (ங)

கடலும்மலையும்விசும்பும் துழாயெம்போல் *
சுடர்கொளிராப்பகல் துஞ்சாயால்தண்வாடாய் ! *
அடல்கொள்படையாழி யம்மானைக்காண்பான்நீ *
உடலம்நோயுற்றாயோ வூழிதோறாழியே. (ச)

ஊழிதோறூழி யுலகுக்குநீர்கொண்டு *
தோழியரும்யாமும்போல் நீராய்நெகிழ்கின்ற *
வாழியவானமே ! நீயும்மதுசூதன் *
பாழிமையில்பட்டவன்கண் பாசத்தால்நைவாயே. (ரு)

நைவாயவெம்மேபோல் நாண்மதியே ! நீயிந்நாள் *
மைவானிருளகற்றாய் மாழாந்துதேம்புதியால் *
ஐவாயரவணைமே லாழிப்பெருமானார் *
மெய்வாசகம்கேட்டுன் மெய்நீர்மைதோற்றாயே. (சு)

தோற்றோம்மடநெஞ்ச மெம்பெருமான்நாரணற்கு * எம்
ஆற்றாமைசொல்லி யழுவோமை * நீநடுவே *
வேற்றோர்வகையில் கொடிதாயெனையூழி *
மாற்றாண்மைநிற்றியோ வாழிகனையிருளே !. (எ)

இருளின்திணிவண்ணம் மாநீர்க்கழியேபோய் *
மருளுற்றிராப்பகல் துஞ்சிலும்நீதுஞ்சாயால் *
உருளும்சகடமுதைத்தபெருமானார் *
அருளின்பெருநசையா லாழாந்துநொந்தாயே. (அ)

நொந்தாராக்காதல்நோய் மெல்லாவியுள்ளுலர்த்த *
நந்தாவிளக்கமே! நீயுமளியத்தாய் ‡ *
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாயெம்பெருமான் *
அந்தாமத்தண்டுழா யாசையால்வேவாயே. (கூ)

வேவாராவேட்கைநோய் மெல்லாவியுள்ளுலர்த்த *
ஓவாதிராப்பக லுன்பாலேவீழ்த்தொழிந்தாய் *
மாவாய்பிளந்து மருதிடைபோய்மண்ணளந்த *
மூவா ! முதல்வா ! இனியெம்மைச்சோரேலே. (கO)

‡ அளியத்தாய்-அருமந்தநீ-எல்லாராலும் கிருபைபண்ணத்தக்க நீயென்றபடி.

⁂ சோராதவெப்பொருட்கு மாதியாம்சோதிக்கே *
ஆராதகாதல் குருகூர்ச்சடகோபன் *
ஓராயிரம்சொன்ன வவற்றுளிவைபத்தும் *
சோரார்விடார்கண்டீர் வைகுந்தம்திண்ணனவே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



வாயுந்திருமால் மறையநிற்கவாற்றாமை
போய்விஞ்சிமிக்குப் புலம்புதலாய்—ஆய
அறியாதவற்றோ டணைந்தழுதமாறன்
செறிவாரைநோக்குந் திணிந்து. (கக)

---

## உ-வது, திண்ணன்வீடு.



இந்த ஆர்த்திபோக்குகைக்கு ஈஶ்வரன் ஸாந்நித்யம்பண்ணி நிற்கையாலே அந்த ஆர்த்தியெல்லாம்போய் ஸகல கல்யாணகுண ஸம்ருத்திஹேதுவான பரத்வம் அவதாரத்திலுண்டென்று பரோபதேஶம் பண்ணினதை யருளிச்செய்கிறார்.

---

வஞ்சிவிருத்தம், பண் - தக்கராகம், தாளம் - ஏழொத்து.

சுருட்டிராகம் - ரூபகதாளம்.

⁂ திண்ணன்வீடு முதல்முழுதுமாய் *
எண்ணின்மீதிய னெம்பெருமான் *
மண்ணும்விண்ணுமெல்லா முடனுண்ட * நங்
கண்ணன்கண்ணல்ல தில்லையோர்கண்ணே. (க)

ஏபாவம்பரமே யேழுலகும் *
ஈபாவஞ்செய் தருளாலளிப்பாரார் *
மாபாவம்விட அரற்குப்பிச்சைபெய் *
கோபாலகோளரி யேறன்றியே. (உ)

ஏறனைப்பூவனைப் பூமகள்தன்னை *
வேறின்றிவிண்தொழத் தன்னுள்வைத்து *
மேல்தன்னைமீதிட நிமிர்ந்துமண்கொண்ட *
மால்தனில்மிக்குமோர் தேவுமுளதே. (ங)

தேவுமெப் பொருளும்படைக்க *
பூவில்நான் முகனைப்படைத்த *
தேவனெம் பெருமானுக்கல்லால் *
பூவும்பூசனையும் தகுமே. (ச)

தகும்சீர்த் தன்தனிமுதலினுள்ளே *
மிகும்தேவு மெப்பொருளும்படைக்க *
தகும்கோலத் தாமரைக்கண்ணனெம்மான் *
மிகும்சோதி மேலறிவார்யவரே. (ரு)

யவரும்யாவையு மெல்லாப்பொருளும் *
கவர்வின்றித் தன்னுளொடுங்கநின்ற *
பவர்கொள்ஞான வெள்ளச்சுடர்மூர்த்தி *
அவரெம்மாழி யம்பள்ளியாரே. (சா)

பள்ளியாலிலை யேழுலகும்கொள்ளும் *
வள்ளல் வல்வயிற்றுப்பெருமான் *
உள்ளுளா ரறிவார் * அவன்றன்
கள்ளமாய மனக்கருத்தே. (எ)

கருத்தில்தேவு மெல்லாப்பொருளும் *
வருத்தித்தமாயப் பிரானையன்றி * ஆரே
திருத்தித்திண்ணிலை மூவுலகும் * தம்முள்
இருத்திக்காக்கு மியல்வினரே. (அ)

கார்க்குமியல்வினன் கண்ணபெருமான் *
சேர்க்கைசெய்து தன்னுந்தியுள்ளே *
வாய்த்ததிசைமுக னிந்திரன்வானவர் *
ஆக்கினான் தெய்வவுலகுகளே. (கூ)

கள்வா ! எம்மையு மேழுலகும் * நின்
னுள்ளேதோற்றிய இறைவவென்று *
வெள்ளேறன்நான்முக னிந்திரன்வானவர் *
புள்ளூர்திகழல் பணிந்தேத்துவரே. (க0)

✣ ஏத்தவேழுலகுங் கொண்டகோலக்
கூத்தனை * குருகூர்ச்சடகோபன்சொல் *
வாய்த்தவாயிரத்துள் ளிவைபத்துடன் *
ஏத்தவல்லவர்க் கில்லையோருனமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



திண்ணிதாமாறன் றிருமால்பரத்துவத்தை
நண்ணியவதாரத்தே நன்குரைத்த—வண்ணமறிந்
தற்றார்கள்யாவ ரவரடிக்கேயாங்கவர்பால்
உற்றாரைமேலிடா த்ரன். (கஉ)

## ௩-வது, ஊனில்வாழ்.

ஈஶ்வரன் ஸாந்நித்யம் பண்ணுகையில் ப்ரகாஶமாக பரத்வத்தை அருளிச்செய்து இந்த பகவதநுபவத்துக்கு ஸம்ஸாரிகள் ஸஹாயரன்றென்று இதற்குஸஹாயபூதரான நித்ய ஸூரிகளோடே எப்போதுகூடப்போகிறேமென்கிறப் பிரார்த்தனையை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து.
முகாரிராகம் - அடதாளம்.

ஊனில்வாழுயிரே ! நல்லைபோஉன்னைப்பெற்று *
வானுளார்பெருமான் மதுசூதனென்னம்மான் *
தானும்யானுமெல்லாம் தன்னுள்ளேகலந்தொழிந்தோம் *
தேனும்பாலும்நெய்யும் கன்னலுமமுதுமொத்தே. (க)

ஒத்தார்மிக்காரை யிலையாயமாமாயா *
ஒத்தாயெப்பொருட்கு முயிராய் * என்னைப்பெற்ற
அத்தாயாய்த்தந்தையா யறியாதனவறிவித்த
அத்தா * நீசெய்தன அடியேனறியேனே. (உ)

அறியாக்காலத்துள்ளே யடிமைக்கணன்புசெய்வித்து *
அறியாமாமாயத் தடியேனைவைத்தாயால் *
அறியாமைக்குறளாய் நிலம்மாவலிமூவடியென்று *
அறியாமைவஞ்சித்தா யெனதாவியுள்கலந்தே. (௩)

எனதாவியுள்கலந்தபெரு நல்லுதவிக்கைம்மாறு *
எனதாவிதந்தொழிந்தே னினிமீள்வதென்பதுண்டே *
எனதாவியாவியும்நீ பொழிலேழுமுண்டவெந்தாய் *
எனதாவியார்யானார் தந்தநீகொண்டாக்கினையே. (௪)

இனியார்ஞானங்களா லெடுக்கலெழாதவெந்தாய் *
கனிவார்வீட்டின்பமே யென்கடல்படாவமுதே *
தனியேன்வாழ்முதலே பொழிலேழுமேனமொன்றாய் *
நுனியார்கோட்டில்வைத்தா யுன்பாதம்சேர்ந்தேனே. (௫)

சேர்ந்தார்தீவினைகட் கருநஞ்சைத்திண்மதியை *
தீர்ந்தார்தம்மனத்துப் பிரியாதவருயிரை *
சோர்ந்தேபோகல்கொடாச் சுடரைஅரக்கியைமூக்
கீர்ந்தாயை * அடியேனடைந்தேன் முதல்முன்னமே. (௬)

முன்நல்யாழ்பயில்நூல் நரம்பின்முதிர்சுவையே *
பன்னலார்பயிலும் பரனேபவித்திரனே *
கன்னலேயமுதே கார்முகிலேயென்கண்ணா *
நின்னலாலிலேன்காண் என்னைநீகுறிக்கொள்ளே. (எ)

குறிக்கொள்ஞானங்களா லெனையூழிசெய்தவமும் *
கிறிக்கொண்டிப்பிறப்பே சிலநாளிலெய்தினன்யான் *
உறிக்கொண்டவெண்ணெய்பா லொளித்துண் ணுமம்மான்பின் *
நெறிக்கொண்டநெஞ்சனாய்ப் பிறவித்துயர்கடிந்தே. (அ)

கடிவார்தண்ணந்துழாய்க் கண்ணன்விண்ணவர்பெருமான் *
படிவானமிறந்த பரமன்பவித்திரன்சீர் *
செடியார்நோய்கள்கெடப் படிந்துகுடைந்தாடி *
அடியேன்வாய்மடுத்துப் பருகிக்களித்தேனே. (௯)

களிப்பும்கவர்வுமற்றுப் பிறப்புப்பிணிமூப்பிறப்பற்று *
ஒளிக்கொண்டசோதியமா யுடன்கூடுவதென்றுகொலோ *
துளிக்கின்றவானிந்நிலம் சுடராழிசங்கேந்தி *
அளிக்கின்றமாயப்பிரா னடியார்கள்குழாங்களையே. (௧0)

⁂ குழாங்கொள்பேரரக்கன் குலம்வீயமுனிந்தவனை *
குழாங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த *
குழாங்கொளாயிரத்து ளிவைபத்துமுடன்பாடி *
குழாங்களாயடியீருடன் கூடிநின்றாடுமினே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஊனமறவேவந் துள்கலந்தமாலினிமை
யானதனுபவித்தற் காந்துணையா—வானில்
அடியார்குழாங்கூட வாசையுற்றமாறன்
அடியாருடனெஞ்சே யாடு. (௩௩)

---

## ௪-வது, ஆடியாடி.



ப்ரார்த்தனை வித்தியாதபடியினாலே இவ்வாழ்வார்ஒருபிராட்டியவஸ்தை யடைந்து மோஹித்திருக்கையில் அந்த நர்யகியினுடைய அவஸ்தையைத் தாய்சொல்லுகிறதாக அருளிச்செய்கிறார்.

---

வஞ்சிவிருத்தம், பண் - நாட்டம், தாளம்-ஏழொத்து.
எழுகல்யாணிராகம் - திரிபுடைதாளம்.

⁂ ஆடியாடி யகம்கரைந்து * இசை
பாடிப்பாடிக் கண்ணீர்மல்கி * எங்கும்
நாடிநாடி நரசிங்காவென்று *
வாடிவாடு மிவ்வாணுதலே. (௧)

வாணுதலிம்மடவரல் * உம்மைக்
காணுமாசையுள் நைகின்றாள் * விறல்
வாணனாயிரந்தோள் துணித்தீர் * உம்மைக்
காண நீரிரக்கமிலீரே. (௨)

இரக்கமனத்தோ டெரியணை *
அரக்குமெழுகு மொக்குமிவள் *
இரக்கமெழீ ரிதற்கென்செய்கேன் *
அரக்கனிலங்கை செற்றீருக்கே. (௩)

இலங்கைசெற்றவனே யென்னும் * பின்னும்
வலங்கொள்புள்ளுயர்த்தா யென்னும் * உள்ளம்
மலங்கவெவ்வுயிர்க்கும் * கண்ணீர்மிகக்
கலங்கிக்கைதொழும் நின்றிவளே. (௪)

இவளிராப்பகல்வாய் வெரீஇ * தன
குவளையொண்கண்ணீர் கொண்டாள் * வண்டு
திவளும்தண்ணந் துழாய்கொடீர் * என
தவளவண்ணர் தகவுகளே. (௫)

தகவுடையவனே யென்னும் * பின்னும்
மிகவிரும்பும்பிரா னென்னும் * என
தகவுயிர்க்கமுதே யென்னும் * உள்ளம்
உகவுருகி நின்றுள்ளுளே. (௬)

உள்ளுளாவி யுலர்ந்துலர்ந்து * என
வள்ளலேகண்ணனே யென்னும் * பின்னும்
வெள்ளநீர்க்கிடந்தா யென்னும் * என
கள்விதான்பட்ட வஞ்சனையே. (௭)

வஞ்சனேயென்னும் கைதொழும் * தன
நெஞ்சம்வேவ நெடிதுயிர்க்கும் * விறல்
கஞ்சனைவஞ்சனை செய்தீர் * உம்மைத்
தஞ்சமென்றிவள் பட்டனவே. (௮)

பட்டபோதெழு போதறியாள் விரை
மட்டலர் தண்டுழா யென்னும் * சுடர்
வட்டவாய்நுதி நேமியீர் * நும
திட்டமென்கொ லிவ்வேழைக்கே. (௯)

ஏழைபேதை யிராப்பகல் * தன
கேழிலொண்கண்ணீர் கொண்டாள் * கிளர்
வாழ்வைவேவிலங்கை செற்றீர் * இவள்
மாழைநோக்கென்றும் வாட்டேன்மினே. ௧0)

வாட்டமில்புகழ் வாமனனை * இசை
கூட்டிவண்சடகோபன் சொல் * அமை
பாட்டோராயிரத்திப் பத்தால் * அடி
சூட்டலாகு மந்தாமமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



ஆடிமகிழ்வானி லடியார்குழாங்களுடன்
கூடியின்பமெய்தாக் குறையதனால்—வாடிமிக
அன்புற்றார் தந்நிலைமை யாய்ந்துரைக்கமோகித்துத்
துன்புற்றான்மாற னந்தோ. (௧௪)

## ௫-வது, அந்தாமத்தன்பு.

இவ்வார்த்தி போக்குகைக்கு ஈஶ்வரன் ஸம்ஶ்லேஷிக்கையாலே அந்ததாபம் நிவர்த்தியாய் ஈஶ்வரனுடைய திவ்யபூஷண திவ்யாயுத திவ்யாவயவ ஸௌந்தர்யத்தையும் நித்யஸூரி ஸேவையையும் அநுஸந்தித்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண் - சீகாமரம், தாளம்-நடையொத்து.
பைரவிராகம்.- ஆதிதாளம்.

‡‡ அந்தாமத்தன்புசெய் தென்னாவிசேரம்மானுக்கு - *
அந்தாம ‡ வாழ்முடிசங் காழிநூலாரமுள
செந்தாமரைத்தடங்கண் செங்கனிவாய்செங்கமலம் *
செந்தாமரையடிக்கள் செம்பொன்திருவுடம்பே. (௧)

திருவுடம்புவான்சுடர் செந்தாமரைகண்கைகமலம் *
திருவிடமேமார்வ மயனிடமேகொப்பூழ் *
ஒருவிடமுமெந்தை பெருமாற்கரனேயோ *
ஒருவிடமொன் றின்றி யென்னுள்கலந்தானுக்கே. (௨)

என்னுள்கலந்தவன் செங்கனிவாய்செங்கமலம் *
மின்னும்சுடர்மலைக்குக் கண்பாதம்கைகமலம் *
மன்னுமுழுவேழுலகும் வயிற்றினுள *
தன்னுள்கலவாத தெப்பொருளும்தானில்லையே. (௩)

எப்பொருளும்தானாய் மரதகக்குன்றமொக்கும் *
அப்பொழுதைத்தாமரைப்பூக் கண்பாதங்கைகமலம் *
எப்பொழுதும்நாள்திங்க ளாண்டூழியூழிதொறும் *
அப்பொழுதைக்கப்பொழு தென்னாராவமுதமே. (௪)

ஆராவமுதமா யல்லாவியுள்கலந்த *
காரார்கருமுகில்போ லென்னம்மான்கண்ணனுக்கு *
நேராவாய்செம்பவளம்கண்பாதம்கைகமலம் *
பேராரநீண்முடிநாண் பின்னுமிழைபலவே. (௫)

பலபலவேயாபரணம் பேரும்பலபலவே *
பலபலவேசோதிவடிவு பண்பெண்ணில் *
பலபலகண்டுண்டு கேட்டுற்றுமோந்தின்பம் *
பலபலவேஞானமும் பாம்பணைமேலாற்கேயோ. (௬)

---

‡ 'வாழ்முடி' என்றும், 'வாள்முடி' என்றும் பிரித்தருளிச்செய்வர்.

பாம்பணைமேல்பாற்கடலுள் பள்ளியமர்ந்ததுவும் *
காம்பணைதோள்பின்னைக்கா ஏறுடனேழ்செற்றதுவும் *
தேம்பணையசோலை மராமரமேழெய்ததுவும் *
பூம்பிணையதண்டுழாய்ப் பொன்முடியம்போரேறே. (எ)
பொன்முடியம்போரேற்றை யெம்மானைநால்தடந்தோள் *
தன்முடிவொன்றில்லாத தண்டுழாய்மாலையனை *
என்முடிவுகாணாதே யென்னுள்கலந்தானை *
சொல்முடிவுகாணேன்நான் சொல்லுவதென்சொல்லீரே. (அ)
சொல்லீரென்னம்மானை யென்னுவியாவிதனை *
எல்லையில்சீரென் கருமாணிக்கச்சுடரை *
நல்லவமுதும் பெறற்கரியவீடுமாய் *
அல்லிமலர்விரையொத் தாணல்லன்பெண்ணல்லனே. (கூ)
ஆணல்லன்பெண்ணல்ல னல்லாஅலியுமல்லன் *
காணலுமாகானுள னல்லனில்லையல்லன் *
பேணுங்கால்பேணுமுருவாகு மல்லனுமாம் *
கோணைபெரிதுடைத் தெம்பெம்மானைக்கூறுதலே. (க0)
⁂ கூறுதலொன்றுராக் குடக்கூத்தவம்மானை *
கூறுதலேமேவிக் குருகூர்ச்சடகோபன் *
கூறினவந்தாதி யோராயிரத்துளிப்பத்தும் *
கூறுதல்வல்லாருளரேல் கூடுவர்வைகுந்தமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



அந்தாமத்தன்பா லடியார்களோடிறைவன்
வந்தாரத்தான்கலந்த வண்மையினால்—சந்தாபம்
தீர்ந்தசடகோபன் திருவடிக்கேநெஞ்சமே
வாய்ந்தவன்பைநாடோறும் வை. (கரு)

## சு-வது, வைகுந்தா.



ஸாந்நித்யம்பண்ணின எம்பெருமானிடத்திலே ஆழ்வார் அதிநைச்யஞ்
செய்ய, அதைப்பார்த்து ஆழ்வார் தம்மைவிட்டுப் பிரிவரோ
என்று ஈஶ்வரனதிசங்கைபண்ண, ஆழ்வார் உம்மை
யொருக்காலும்விடத்தக்கதில்லை யென்றபின்பு
ஈஶ்வரனுக் கதிசங்கை நீங்கினதை
யருளிச்செய்கிறார்.

ஆசிரியத்துறை, பண் — பழந்தக்கராகம், தாளம் - ஏழொத்து.
ஆநந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

⁂ வைகுந்தாமணிவண்ணனேயென்பொல்லாத்திருக்குறளாவென்னு
வைகும்வைகல்தோறு மமுதாயவானேறே * [ள்மன்னி
செய்குந்தாவருந்தீமையுன்னடியார்க் குத்தீர்த்தசுரர்க்குத்தீமைகள்
செய்குந்தா * உன்னைநான் பிடித்தேன்கொள்சிக்கெனவே, (க)

சிக்கெனச்சிறிதோரிடமும் புறப்படாத்தன்னுள்ளே * உலகுகள்
ஒக்கவேவிழுங்கிப் புகுந்தான்புகுந்ததற்பின் *
மிக்கஞானவெள்ளச்சுடர்விளக்காய்த் துளக்கற்றமுதமாய் * எங்கும்
பக்கநோக்கறியானென் பைந்தாமரைக்கண்ணனே. (௨)

தாமரைக்கண்ணனைவிண்ணோர் பரவுந்தலைமகனை * துழாய்விரைப்
பூமருவுகண்ணி யெம்பிரானைப்பொன்மலையை *
நாமருவிநன்கேத்தியுள்ளிவணங்கி நாம்மகிழ்ந்தாட * நாவலர்
பாமருவிநிற்கத்தந்த பான்மையேய்வள்ளலே. (௩)

வள்ளலேமதுசூதனா ! என்மரதகமலையே * உனைநினைந்
தெள்கல்தந்தவெந்தா யுன்னையெங்ஙனம்விடுகேன் *
வெள்ளமேபுரைநின்புகழ் குடைந்தாடிப்பாடிக்களித்துகந்துகந்து *
உள்ளநோய்களெல்லாம்துரந் துய்ந்துபோந்திருந்தே. (௪)

உய்ந்துபோந்தென் னுலப்பிலாதவெந்தீவினைகளைநாசஞ்செய்து * உன
தந்தமிலடிமையடைந்தேன் விடுவேனோ *
ஐந்துபைந்தலையாடரவணைமேவிப் பாற்கடல்யோகநித்திரை *
சிந்தைசெய்தவெந்தா யுன்னைச்சிந்தைசெய்துசெய்தே. (௫)

உன்னைச்சிந்தைசெய்துசெய்துன்நெடுமாமொழியிசைபாடியாடி *என்
முன்னைத்தீவினைகள் முழுவேரரிந்தனன்யான் *
உன்னைச்சிந்தையினாலிகழ்ந்த விரணியனகல்மார்வங்கீண்ட * என்
முன்னைக்கோளரியே முடியாததென்னெனக்கே. (௬)

முடியாததென்னெனக்கேலினி முழுவேழுலகுமுண்டான் * உகந்துவ
தடியேனுள்புகுந்தா னகல்வானுமல்லனினி * [ந்
செடியார்நோய்களெல்லாம்துரந் தெமர்கீழ்மேலெழுபிறப்பும் *
விடியாவெந்நரகத்தென்றும் சேர்தல்மாறினரே. (௭)

மாறிமாறிப்பலபிறப்பும்பிறந் தடியையடைந்துள்ளந்தேறி *
ஈறிலின்பத்திருவெள்ளம் யான்மூழ்கினன் *
பாறிப்பாறியசுரர்தம் பல்குழாங்கள்நீறெழ * பாய்பறவையொன்
றேறிவீற்றிருந்தாயுன்னை யென்னுள்நீக்கேலெந்தாய். (௮)

எந்தாய் ! தண்திருவேங்கடத்துள்நின்றாய் ! இலங்கைசெற்றாய் * மராமரம்
பைந்தாளேழுருவவொரு வாளிகோத்தவில்லா *
கொந்தார்தண்ணந்துழாயினாயமுதே ! உன்னையென்னுள்ளேகுழைத்தவெம்
மைந்தா * வானேறே யினியெங்குப்போகின்றதே. (௯)

போகின்றகாலங்கள்போயகாலங்கள்போகுகாலங்கள்*தாய்தந்தையுயி
ராகின்றாய் யுன்னைநானடைந்தேன்விடுவேனோ *
பாகின்றதொல்புகழ்மூவுலகுக்கும் நாதனே! பரமா! * தண்வேங்கட
மேகின்றாய் தண்டுழாய்விரைநாறுகண்ணியனே. (௧௦)

✤ கண்ணித்தண்ணந்துழாய்முடிக் கமலத்தடம்பெருங் [ன்ன *
கண்ணனை * புகழ்நண்ணித்தென்குருகூர்ச் சடகோபன்மாறன்சொ
எண்ணில்சோர்விலந்தாதியாயிரத்துள்ளிவையுமோர்பத்திசையொடும்
பண்ணில்பாடவல்லாரவர் கேசவன்தமரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



வைகுந்தன்வந்து கலந்ததற்பின்வாழ்மாறன்
செய்கின்றநைச்சியத்தைச் சிந்தித்து—நைகின்ற,
தன்மைதனைக்கண்டுன்னைத் தான்விடேனென்றுரைக்க
வன்மையடைந்தான் கேசவன். (கசு)

---

## எ-வது, கேசவன்.



ஈஶ்வரனுக்குத் தம்விஷயத்திலுண்டான ப்ரீதியானது தம்முடைய
ஸம்பந்த ஸம்பந்திகளிலும் உண்டானது கண்டு மிகவும் ப்ரீத
ராய்த்வாதஶநாமப்ரதிபாத்யனான ஸர்வேஶ்வரனுடைய
ஸம்பந்தத்தாலே தம்முடைய ஏழேழுதலைமு
றையோரும் க்ருதார்த்தரானார்க
ளென்கிறார்.

---

கலித்துறை, பண்-தக்கராகம், தாளம்-ஏழொத்து.
கல்யாணிராகம் - ரூபகதாளம்.

✤ கேசவன்தமர்கீழ்மே லெமரேழெழுபிறப்பும் *
மாசதிரிதுபெற்று நம்முடைவாழ்வுவாய்க்கின்றவா
ஈசனென்கருமாணிக்கமென் செங்கோலக்கண்ணன்விண்ணோர்
நாயகன் * எம்பிரா னெம்மான்நாராயணனாலே. (க)

நாரணன்முழுவேழுலகுக்கும் நாதன்வேதமயன்
காரணம்கிரிசை கருமமிவைமுதல்வனெந்தை *
சீரணங்கமரர்பிறர் பலரும்தொழுதேத்தநின்று *
வாரணத்தைமருப்பொசித்த பிரானென்மாதவனே. (உ)

மாதவனென்றதேகொண் டென்னையினியிப்பால்பட்டது *
யாதவங்களும்சேர்கொடேனென் றென்னுள்புகுந்திருந்து *
தீதவம்கெடுக்குமமுதம் செந்தாமரைக்கட்குன்றம் *
கோதவமிலென்கன்னற்கட்டி யெம்மானென்கோவிந்தனே. (ங)

கோவிந்தன்குடக்கூத்தன் கோவலனென்றென்றேகுனித்து
தேவும்தன்னையும் பாடியாடத்திருத்தி *.என்னைக்கொண்டென்
பாவந்தன்னையும்பாறக்கைத் தெமரேழெழுபிறப்பும் *
மேவும்தன்மையமாக்கினான் வல்லனெம்பிரான்விட்டுவே. (ச)

விட்டிலங்குசெஞ்சோதித் தாமரைபாதம்கைகள்கண்கள் *
விட்டிலங்குகருஞ்சுடர் மலையேதிருவுடம்பு *
விட்டிலங்குமதியம்சீர் சங்குசக்கரம்பருதி *
விட்டிலங்குமுடியம்மான் மதுசூதனன்தனக்கே. (ரு)

மதுசூதனையன்றிமற்றிலேனென் றெத்தாலும்கருமமின்றி *
துதிசூழ்ந்தபாடல்கள்பாடியாட நின்றூழியூழிதொறும் *
எதிர்சூழல்புக்கெனைத்தோர்பிறப்புமெனக்கேயருள்கள்செய்ய *
விதிசூழ்ந்ததாலெனக்கேலம்மான் திரிவிக்கிரமனையே. (சு)

திரிவிக்கிரமன்செந்தாமரைக்க ணெம்மானென்செங்கனிவாய் *
உருவில்பொலிந்தவெள்ளைப் பளிங்குநிறத்தனனென்றென் * றுள்ளிப்
பரவிப்பணிந்து பல்லூழியூழிநின்பாதபங்கயமே *
மருவித்தொழும்மனமேதந்தாய் வல்லைகாணென்வாமனனே. (எ)

வாமனனென்மரதகவண்ணன் தாமரைக்கண்ணினன் *
காமனைப்பயந்தாய் * என்றென்றுன்கழல்பாடியேபணிந்து *
தூமனத்தனனாய்ப் பிறவித்துழதிநீங்க * என்னைத்
தீமனங்கெடுத்தா யுனக்கென்செய்கேனென்சிரீதரனே. (அ)

சிரீஇதரன்செய்யதாமரைக்கண் ணனென்றென் றிராப்பகல்வாய்
வெரீஇ * அலமர்ந்துகண்கள்நீர்மல்கி வெவ்வுயிர்த்துயிர்த்து *
மரீஇயதீவினைமாளவின்பம்வளர வைகல்வைகல்
இரீஇ * உன்னையென்னுள்வைத்தனை யென்னிருடீகேசனே. (கூ)

இருடீகேசனெம்பிரா னிலங்கையரக்கர்குலம் *
முருடுதீர்த்தபிரானெம்மா னமரர்பெம்மானென்றென்று *
தெருடியாகில்நெஞ்சேவணங்கு திண்ணமறியறிந்து *
மருடியேலும்விடேல்கண்டாய் நம்பிபற்பநாபனையே. (க0)

பற்பநாப னுயர்வறவுயரும்பெருந்திறலோன்
எற்பரனென்னையாக்கிக் கொண்டெனக்கேதன்னைத்தந்த
கற்பகம் * என்னமுதம் கார்முகில்போலும்வேங்கடநல்
வெற்பன் * விசும்போர்பிரா னெந்தைதாமோதரனே. (கக)

தாமோதரனைத்தனிமுதல்வனை ஞாலமுண்டவனை *
ஆமோதரமறிய வொருவர்க்கென்றேதொழுமவர்கள் *
தாமோதரனுருவாகிய சிவற்கும்திசைமுகற்கும் *
ஆமோதரமறிய எம்மானையென்னாழிவண்ணனையே. (கஉ)

‡‡ வண்ணமாமணிச்சோதியை யமரர்தலைமகனை *
கண்ணனைநெடுமாலைத் தென்குருகூர்ச்சடகோபன் *
பண்ணியதமிழ்மாலை யாயிரத்துள்ளிவைபன்னிரண்டும் *
பண்ணில்பன்னிருநாமப் பாட்டண்ணல்தாளணைவிக்குமே. (கங)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



கேசவனுலெந்தமர்கள் கீழ்மேலெழுபிறப்பும்
தேசடைந்தாரென்று சிறந்துரைத்த—வீசுபுகழ்
மாறன்மலரடியே மன்னுயிர்க்கெல்லாமுய்கைக்
காறென்றுநெஞ்சே யணை. (கஎ)

---

## அ-வது, அணைவது.

ஈஶ்வரன் தன்ஸம்பந்த ஸம்பந்திகளிலும் வ்யாமோஹம் பண்ணினது கண்டு ஸம்ஸாரிகளையும் தன்னுடைய ஸம்பந்திகளாகப்பண்ண வேணுமென்று அவர்களுக்கு அவனுடைய மோக்ஷப்ரதத்வத்தை அருளிச்செய்கிறார்.

---

கலிவிருத்தம், பண் - இந்தளம், தாளம்- ஏழொத்து.
சௌராஷ்டிரராகம் - அடதாளம்.

⁂ அணைவதரவணைமேல் பூம்பாவையாகம்
புணர்வது-*இருவரவர்முதலுந்தானே *
இணைவனுமெப்பொருட்கும் வீடுமுதலாம் *
புணைவன் பிறவிக்கடல்நீந்துவார்க்கே. (க)

நீந்தும்துயர்ப்பிறவி யுட்பட மற்றெவ்வெவையும் *
நீந்தும்துயரில்லா வீடுமுதலாம் *
பூந்தண்புனல்பொய்கை யானையிடர்கடிந்த *
பூந்தண்டுழா யென்தனிநாயகன்புணர்ப்பே. (உ)

புணர்க்குமயனு மழிக்குமரனும் *
புணர்த்ததன்னுந்தியோ டாகத்துமன்னி *
புணர்த்ததிருவாகித் தன்மார்வில்தான்சேர் *
புணர்ப்பன்பெரும்புணர்ப் பெங்கும்புலனே. (ங)

புலனைந்துமேயும் பொறியைந்துநீங்கி *
நலமந்தமில்லதோர் நாடுபுகுவீர் *
அலமர்ந்துவீய வசுரரைச்செற்றான் † *
பலமுந்துசீரில் படிமினோவாதே. (ச)

ஓவாத்துயர்ப்பிறவி யுட்படமற்றெவ்வெவையும் *
மூவாத்தனிமுதலாய் மூவுலகும்காவலோன் *
மாவாகியாமையாய் மீனாகிமானிடமாம் *
தேவாதிதேவபெருமா னென்தீர்த்தனே. (ரு)

தீர்த்தனுலகளந்த சேவடிமேல்பூந்தாமம்
சேர்த்தியவையே சிவன்முடிமேல்தான்கண்டு *
பார்த்தன்தெளிந்தொழிந்த பைந்துழாயான்பெருமை *
பேர்த்துமொருவரால் பேசக்கிடந்ததே ? (சு)

---

† "அசுரைச்செற்றான்" என்று சில ஸ்ரீகோசங்களிற்பாடம்.

கிடந்திருந்துநின்றளந்து கேழலாய்க்கீழ்புக்
கிடந்திடும் * தன்னுள்கரக்குமுமிழும் *
தடம்பெருந்தோளாரத்தழுவும் பாரென்னும்
மடந்தையை * மால்செய்கின்றமாலார்காண்பாரே ? (எ)
காண்பாராரெம்மீசன் கண்ணனையென்காணுமாறு - *
ஊண்பேசி லெல்லாவுலகுமோர்துற்றாற்றா *
சேண்பாலவீடோ வுயிரோமற்றெப்பொருட்கும் *
ஏண்பாலும்சோரான் பரந்துளனுமெங்குமே. (அ)
எங்குமுளன்கண்ண னென்றமகனைக்காய்ந்து - *
இங்கில்லையாலென் றிரணியன் தூண்புடைப்ப *
அங்கப்பொழுதே யவன்வீயத்தோன்றிய * என்
சிங்கப்பிரான்பெருமை யாராயும்சீர்மைத்தே ? (௯)
சீர்மைகொள்வீடு சுவர்க்கநரகீறு *
ஈர்மைகொள்தேவர்நடுவா மற்றெப்பொருட்கும் *
வேர்முதலாய்வித்தாய்ப் பரந்துதனிநின்ற *
கார்முகில்போல்வண்ணனென் கண்ணனைநான்கண்டேனே (க0)
கண்டலங்கள்செய்ய கருமேனியம்மானை *
வண்டலம்பும்சோலை வழுதிவளநாடன் *
பண்டலையில்சொன்னதமி ழாயிரத்திப்பத்தும்வல்லார் *
விண்டலையில்வீற்றிருந் தாள்வரெம்மாவீடே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



அணைந்தவர்கடம்முடனே யாயனருட்காளாம்
குணந்தனையேகொண்டுலகைக் கூட்ட—இணங்கிமிக
மாசிலுபதேசஞ்செய் மாறன்மலரடியே
வீசுபுகழெம்மா வீடு. (கஅ)

## ௯-வது, எம்மாவீடு.



ஈஸ்வரன் ஆழ்வாருக்கும் அவருடைய ஸம்பந்த ஸம்பந்திகளுக்கும் மோக்ஷம் ப்ரஸாதித்தற்குஉத்யோகமாயிருக்கையில் என் ப்ரீதிக்காக மோக்ஷம் ப்ரஸாதிக்க வேண்டாம் உம்முடைய ப்ரீதியினாலே ப்ரஸாதித்தருள வேண்டுமென்று கைங்கர்ய நிஷ்கர்ஷைபண்ணினதை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண்-முதிர்ந்தகுறிஞ்சி, தாளம்-எழொத்து.
ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

⁂ எம்மாவீட்டுத் திறமும்செப்பம் * நின்
செம்மாபாதபற்புத் தலைசேர்த்தொல்லை *
கைம்மா துன்பம் கடிந்தபிரானே *
அம்மாவடியேன் வேண்டுவதீதே. (க)

ஈதேயானுன்னைக் கொள்வதெஞ்ஞான்றும் * என்
மைதோய்சோதி மணிவண்ணவெந்தாய் *
எய்தாநின்கழல் யானெய்த * ஞானக்
கைதா காலக்கழிவுசெய்யேலே. (உ)

செய்யேல்தீவினையென் றருள்செய்யும் * என்
கையார்சக்கரக் கண்ணபிரானே *
ஐயார்கண்டமடைக்கிலும் நின்கழல்
எய்யாதேத்த * அருள்செய்யெனக்கே. (௩)

எனக்கேயாட்செய் யெக்காலத்துமென்று - * என்
மனக்கேவந் திடைவீடின்றிமன்னி *
தனக்கேயாக வெனைக்கொள்ளுமீதே *
எனக்கேகண்ணனை யான்கொள்சிறப்பே. (௪)

சிறப்பில்வீடு சுவர்க்கநரகம் *
இறப்பிலெய்துகவெய்தற்க * யானும்
பிறப்பில் பல்பிறவிப்பெருமானை *
மறப்பொன்றின்றி யென்றும்மகிழ்வேனே. (௫)

மகிழ்கொள்தெய்வ முலோகமலோகம் *
மகிழ்கொள்சோதி மலர்ந்தவம்மானே *
மகிழ்கொள்சிந்தை சொல்செய்கைகொண்டு - * என்றும்
மகிழ்வுற்றுன்னை வணங்கவாராயே. (௬)

வாராயுன் திருப்பாதமலர்க்கீழ் *
பேராதேயான் வந்தடையும்படி
தாராதாய் * உன்னையென்னுள்வைப்பிலென்றும்
ஆராதாய் * எனக்கென்றுமெக்காலே. (எ)

எக்காலத்தெந்தையா யென்னுள்மன்னில் * மற்
றெக்காலத்திலும் யாதொன்றும்வேண்டேன் *
மிக்கார்வேத விமலர்விழுங்கும் * என்
அக்காரக்கனியே உன்னையானே. (அ)

யானேயென்னை யறியகிலாத *
யானேயென்றனதே யென்றிருந்தேன் *
யானேநீயென் னுடைமையும்நீயே *
வானேயேத்து மெம்வானவரேறே. ‡ (௯)

ஏறேலேழும்வென் றேர்கொளிலங்கையை *
நீறேசெய்த நெடுஞ்சுடர்ச்சோதி *
தேறேலென்னையுன் பொன்னடிச்சேர்த்தொல்லை *
வேறேபோக எஞ்ஞான்றும்விடலே. (௧0)

‡ "எத்துமவ்வானவரேறே" என்று உரையின்பாடம்.

✤✤ விடலில்சக்கரத் தண்ணலை * மேவல்
விடலில்வண்குருகூர்ச் சடகோபன்சொல் *
கெடலிலாயிரத்துள் ளிவைபத்தும் *
கெடலில்வீடுசெய்யும் கிளர்வார்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



எம்மாவீடும்வேண்டா வென்றனக்குன்றாளிணையே
அம்மாவமையுமென வாய்ந்துரைத்த—நம்முடைய
வாழ்முதலாமாறன் மலர்த்தாளிணைசூடிக்
கீழ்மையற்றுநெஞ்சே கிளர். (கக)

## க0-வது, கிளரொளி.



முன்னிஷ்கர்ஷித்த கைங்கர்யஸித்திக்குத் திருமாலிருஞ்சோலைத்
திருமலையை யாஶ்ரயிக்கவேண்டுமென்று
அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து.
கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.

✤✤ கிளரொளியிளமை கெடுவதன்முன்னம் *
வளரொளிமாயோன் மருவியகோயில் *
வளரிளம்பொழில்சூழ் மாலிருஞ்சோலை!*
¶ தளர்விலராகில் சார்வதுசதிரே. (க)
சதிரிளமடவார் தாழ்ச்சியைமதியாது *
அதிர்குரல்சங்கத் தழகர்தம்கோயில்
மதிதவழ்குடுமி மாலிருஞ்சோலை *
பதியதுவேத்தி யெழுவதுபயனே. (உ)
பயனல்லசெய்து பயனில்லைநெஞ்சே *
புயல்மழைவண்ணர் புரிந்துறைகோயில் *
மயல்மிகுபொழில்சூழ் மாலிருஞ்சோலை *
அயன்மலையடைவததுகருமமே. (௩)
கருமவன்பாசம் கழித்துழன்றுய்யவே *
பெருமலையெடுத்தான் பீடுறைகோயில் *
வருமழைதவழும் மாலிருஞ்சோலை *
திருமலையதுவே யடைவதுதிறமே. (௪)
திறமுடைவலத்தால் தீவினைபெருக்காது *
அறமுயலாழிப் படையவன்கோயில் *
மறுவில்வண்சுனைசூழ் மாலிருஞ்சோலை *
புறமலைசாரப் போவதுகிறியே. (௫)

¶ "தளர்விலராகிச்சார்வது" என்று ஈடு ஒழிந்த வ்யாக்யாநங்களின் பாடம்.

கிறியெனநினைமின் கீழ்மைசெய்யாதே *
உறியமர்வெண்ணெ யுண்டவன்கோயில் *
மறியொடுபிணைசேர் மாலிருஞ்சோலை *
நெறிபடவதுவே நினைவதுநலமே. (௬)

நலமெனநினைமின் நரகழுந்தாதே *
நிலமுனமிடந்தான் நீடுறைகோயில் *
மலமறுமதிசேர் மாலிருஞ்சோலை *
வலமுறையெய்தி மருவுதல்வலமே. (௭)

வலம்செய்துவைகல் வலங்கழியாதே *
வலம்செய்யும் ஆயமாயவன் கோயில் *
வலம்செய்யும்வானோர் மாலிருஞ்சோலை *
வலம்செய்துநாளும் மருவுதல்வழக்கே. (௮)

வழக்கெனநினைமின் வல்வினைமூழ்காது *
‡ அழக்கொடியட்டா னமர்பெருங்கோயில் *
மழக்களிற்றினஞ்சேர் மாலிருஞ்சோலை *
தொழக்கருதுவதே துணிவதுசூதே. (௯)

சூதென்றுகளவும் சூதும்செய்யாதே *
வேதமுன்விரித்தான் விரும்பியகோயில் *
மாதுறுமயில்சேர் மாலிருஞ்சோலை *
போதவிழ்மலையே புகுவதுபொருளே. (கO)

‡‡ பொருளென்றிவ்வுலகம் படைத்தவன்புகழ்மேல் *
மருளில்வண்குருகூர் வண்சடகோபன் *
தெருள்கொள்ளச்சொன்ன வோராயிரத்துளிப்பத்து-*
அருளுடையவன்தா ளணைவிக்கும்முடித்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.



இரண்டாம்பத்து - ஸம்பூர்ணம்

---

கிளரொளிசேர் கீழுரைத்தபேறுகிடைக்க
வளரொளிமால்சோலை மலைக்கே—தளர்வறவே
நெஞ்சைவைத்துச்சேருமெனு நீடுபுகழ்மாறன்றாள்
முன்செலுத்துவோமெம் முடி. (உO)

---

‡ அழக்கொடி=அழம் - பேய், கொடி - பெண்; பூதனையைச் சொல்லுகிறது.

# மூன்றாம்பத்து.

## க-வது, முடிச்சோதி.

*திருமாலிருஞ்சோலையிலே யெழுந்தருளியிருக்கிற அழகருடைய திவ்ய மங்களவிக்ரஹ திவ்யாபரண திவ்யஸௌந்தர்யங்களை அனுபவித்ததை யருளிச்செய்கிறார்.*

கலிவிருத்தம், பண் - இந்தளம், தாளம்-நடையொத்து.

குண்டக்கிரியைராகம் - ரூபகதாளம்.

⁂ முடிச்சோதியாயுனது முகச்சோதிமலர்ந்ததுவோ *
அடிச்சோதிநீநின்ற தாமரையாயலர்ந்ததுவோ *
படிச்சோதியாடையொடும் பல்கலனாய் * நின்பைம்பொன்
கடிச்சோதிகலந்ததுவோ திருமாலேகட்டுரையே. (க)

கட்டுரைக்கில்தாமரை நின்கண்பாதங்கையொவ்வா *
சுட்டுரைத்தநன்பொன் னுன்திருமேனியொளியொவ்வாது
ஒட்டுரைத்தஇவ்வுலகுன்னைப் புகழ்வெல்லாம்பெரும்பாலும் *
† பட்டுரையாய்ப்புற்கென்றே காட்டுமால்பரஞ்சோதி. (உ)

பரஞ்சோதிநீபரமாய் நின்னிகழ்ந்துபின் * மற்றோர்
பரஞ்சோதியின்மையில் படியோவிநிகழ்கின்ற *
பரஞ்சோதிநின்னுள்ளே படருலகம்படைத்த * எம்
பரஞ்சோதிகோவிந்தா பண்புரைக்கமாட்டேனே. (௩)

மாட்டாதேயாகிலு மிம்மலர்தலைமாஞாலம் * நின்
மாட்டாயமலர்புரையும் திருவுருவம்மனம்வைக்க *
மாட்டாதபலசமய மதிகொடுத்தாய் * மலர்த்துழாய்
மாட்டேநீமனம் ‡ வைத்தாய் மாஞாலம்வருந்தாதே. (௪)

வருந்தாதவருந்தவத்த மலர்கதிரின்சுடருடம்பாய் *
வருந்தாதஞானமாய் வரம்பின்றிமுழுதியன்றாய் *
வருங்காலம்நிகழ்காலம் கழிகாலமாய் * உலகை
ஒருங்காகவளிப்பாய்சீ ரெங்குலக்கவோதுவனே, (௫)

ஓதுவாரோத்தெல்லா மெவ்வுலகத்தெவ்வெவையும் *
சாதுவாய்நின்புகழின் தகையல்லால்பிறிதில்லை *
போதுவாழ்புனந்துழாய் முடியினாய் * பூவின்மேல்
மாதுவாழ்மார்பினா யென்சொல்லியான்வாழ்த்துவனே. (௬)

† பட்டுரை—பட்டது உரைக்கை-நெஞ்சில்தோன்றிற்றுச்சொல்லுகை: அவாசகமென்றபடி. புற்கு-புன்மை. ‡ "வைத்தால்" என்று உரையின்பாடம்.

வாழ்த்துவார்பலராக நின்னுள்ளேநான்முகனை *
மூழ்த்தநீருலகெல்லாம் படையென்றுமுதல்படைத்தாய் *
கேழ்த்தசீரரன்முதலாக் கிளர்தெய்வமாய்க்கிளர்ந்து *
சூழ்த்தமரர்துதித்தா லுன்தொல்புகழ்மாசூணுதே. (எ)

மாசூணச்சுடருடம்பாய் மலராதுகுவியாது *
மாசூணுஞானமாய் முழுதுமாய்முழுதியன்றாய் *
மாசூணுவான்கோலத் தமரர்கோன்வழிப்பட்டால் *
மாசூணுவுன்பாத மலர்ச்சோதிமழுங்காதே. (அ)

மழுங்காதவைநுதிய சக்கரநல்வலத்தையாய் *
தொழுங்காதல்களிறளிப்பான் புள்ளூர்ந்துதோன்றினையே *
மழுங்காதஞானமே படையாக * மலருலகில்
† தொழும்பாயார்க்களித்தாலுன் சுடர்ச்சோதிமறையாதே. (கூ)

மறையாயநால்வேதத் துள்நின்றமலர்ச்சுடரே *
முறையாலிவ்வுலகெல்லாம் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தாய் *
பிறையேறுசடையானும் நான்முகனுமிந்திரனும் *
இறையாதலறிந்தேத்த வீற்றிருத்தலிதுவியப்பே. (க0)

வியப்பாயவியப்பில்லா மெஞ்ஞானவேதியனை *
சயப்புகழார்பலர்வாழும் தடங்குருகூர்ச்சடகோபன் *
துயக்கின்றித்தொழுதுரைத்த வாயிரத்துளிப்பத்தும் *
உயக்கொண்டுபிறப்பறுக்கு மொலிமுந்நீர்ஞாலத்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



முடியார்திருமலையில் மூண்டுநின்றமாறன்
அடிவாரந்தன்னிலழகர்—வடிவழகைப்
பற்றிமுடியு மடியும்படிகலனும்
முற்றுமநுபவித்தான் முன். (உக)



## உ-வது, முந்நீர்ஞாலம்.



இப்படிஅழகருடைய திவ்யஸௌந்தர்யத்தை பரிபூர்ணமாகத்தநுபவிக்கைக்கு அஶக்தரா யவ்வஶக்திக்கு ஹேது தம்முடைய கரணசங்கோசமென்று ஆழ்வார் வ்யாமோஹப்பட்டு நிற்க, ஸர்வேஶ்வரன் (யதோவாசோநிவர்த்தந்தே) இதில் நித்யஸூரிகளுக்கும் அபரிச்சேத்யமானதென ஸ்பாவம் இதற்குஹேது கரணஸங்கோசமென்று வ்யாமோஹப்படவேண்டாம் திருமலையிலே ஸர்வஸூலபனாய் நிற்கிறவென்னை யநுபவியுமென்று வ்யாமோஹந்தீர்த்ததனை அருளிச்செய்கிறார்.

† தொழும்பு - அடிமை.

கலிவிருத்தம், பண் - சீகாமரம், தாளம் - ஏழொத்து.

முகாரிராகம் - அடதாளம்.

⁂ $ முந்நீர்ஞாலம்படைத்த வெம்முகில்வண்ணனே *
அந்நாள்நீதந்த வாக்கையின்வழியுழல்வேன் *
வெந்நாள்நோய்வீய வினைகளைவேரறப்பாய்ந்து - *
எந்நாள்யானுன்னை யினிவந்துகூடுவனே. (௧)

வன்மாவையமளந்த எம்மாமனு * நின்
பன்மாமாயப்பல்பிறவியில் படிகின்றயான் *
தொன்மாவல்வினைத்தொடர்களைமுதலரிந்து *
நின்மாதாள்சேர்ந்து நிற்பதெஞ்ஞான்றுகொலோ. (௨)

கொல்லாமாக்கோல் கொலைசெய்து * பாரதப்போர்
எல்லாச்சேனையு மிருநிலத்தவித்தவெந்தாய்! *
பொல்லாவாக்கையின் புணர்வினையறுக்கலறு *
சொல்லாய்யானுன்னைச் சார்வதோர்சூழ்ச்சியே. (௩)

சூழ்ச்சிஞானச் சுடரொளியாகி * என்றும்
ஏழ்ச்சிக்கேடின்றி யெங்கணும்நிறைந்தவெந்தாய் *
தாழ்ச்சிமற்றெங்கும் தவிர்ந்துநின்தாளிணைக்கீழ்
வாழ்ச்சி * யான்சேரும் வகையருளாய்வந்தே. (௪)

வந்தாய்போலேவந்து மென்மனத்தினைநீ *
சிந்தாமல்செய்யா யிதுவேயிதுவாகில் *
கொந்தார்காயாவின் கொழுமலர்திருநிறத்த
வெந்தாய் * யானுன்னை யெங்குவந்தணுகிற்பனே. (௫)

கிற்பன்கில்லேனென்றிலன் முனநாளால் *
அற்பசாரங்க ளவைசுவைத்தகன்றொழிந்தேன் *
பற்பல்லாயிர முயிர்செய்தபரமா * நின்
நற்பொற்சோதித்தாள் நணுகுவதெஞ்ஞான்றே. (௬)

எஞ்ஞான்றுநாமிருந் திருந்திரங்கிநெஞ்சே *
மெய்ஞ்ஞானமின்றி வினையியல்பிறப்பழுந்தி *
எஞ்ஞான்றுமெங்கு மொழிவறநிறைந்துநின்ற *
மெஞ்ஞானச்சோதிக் கண்ணனைமேவுதுமே. (௭)

மேவுதுன்பவினைகளை விடுத்துமிலேன் *
ஓவுதலின்றி யுன்கழல்வணங்கிற்றிலேன் *
பாவுதொல்சீர்க்கண்ணா என்பரஞ்சுடரே *
கூவுகின்றேன்காண்பா னெங்கெய்தக்கூவுவனே. (௮)

$ முந்நீர் - ஆற்றுநீர், ஊற்றுநீர், வர்ஷஜலம்.
என்று மூன்றுவகைப்பட்டநீர்.

கூவிக்கூவிக் கொடுவினைத்தூற்றுள்நின்று *
பாவியேன்பலகாலம் வழிதிகைத்தலமருகின்றேன் *
மேவியன்றாநிரைகாத்தவனுலகமெல்லாம்
தாவியவம்மானை * எங்கினித்தலைப்பெய்வனே. (௯)

தலைப்பெய்காலம் நமன்றமர்பாசம்விட்டால் *
அலைப்பூணுண்ணு மவ்வல்லலெல்லாமகல *
கலைப்பல்ஞானத்தென் கண்ணனைக்கண்டுகொண்டு *
நிலைப்பெற்றென்னெஞ்சம் பெற்றதுநீடுயிரே. (௧0)

‡‡ உயிர்களெல்லா வுலகமுமுடையவனை *
குயில்கொள்சோலைத் தென்குருகூர்ச்சடகோபன் *
† செயிரில்சொல்லிசைமாலை யாயிரத்துளிப்பத்தும் *
உயிரின்மேலாக்கை யூனிடையொழிவிக்குமே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



முன்னமழகரெழில் மூழ்குங்குருகையர்கோன்
இன்னவளவென்ன வெனக்கரிதாய்த்—தென்னக்
கரணக்குறையின் கலக்கத்தைக்கண்ணன்
ஒருமைப்படுத்தா னொழித்து. (௨௨)

---

## ௩-வது, ஒழிவில்காலம்.



*திருவேங்கடமுடையான் திருவடிகளிலே ஸகலவித கைங்கர்ய ப்ரார்த்தனையை யருளிச்செய்கிறார்.*

---

கலிவிருத்தம், பண் -பழந்தக்கராகம், தாளம் - ஏழொத்து.

**சௌராஷ்டிரராகம் - அடதாளம்.**

‡‡ ஒழிவில்காலமெல் லாமுடனாய்மன்னி *
வழுவிலாவடிமை செய்யவேண்டும்நாம் *
தெழிகுரலருவித் திருவேங்கடத்து - *
எழில்கொள்சோதி யெந்தைதந்தைதந்தைக்கே, (௧)

எந்தைதந்தைதந்தை தந்தைதந்தைக்கும்
முந்தை * வானவர் வானவர்கோனொடும் *
சிந்துபூமகிழும் திருவேங்கடத்து - *
அந்தமில்புகழ்க் காரெழிலண்ணலே. (௨)

அண்ணல்மாய னணிகொள்செந்தாமரைக்
கண்ணன் * செங்கனி வாய்க்கருமாணிக்கம் *
‡ தெண்ணிறைச்சுனைநீர்த் திருவேங்கடத்து - *
எண்ணில்தொல்புகழ் வானவரீசனே. (௩)

---

† செயிர் - குற்றம் : அதாவது - லக்ஷணக்குறை. ‡ "தெண்ணிறச்சுனை நீர்" என்று உரையின்பாடம்.

ஈசன்வானவர்க் கென்பனென்றால் * அது
தேசமோதிரு வேங்கடத்தானுக்கு *
நீசனேன்நிறை வொன்றுமிலேன் * என்கண்
பாசம்வைத்த பரஞ்சுடர்ச்சோதிக்கே. (ச)

சோதியாகியெல்லா வுலகும்தொழும் *
ஆதிமூர்த்தியென்று லளவாகுமோ *
வேதியர்முழு வேதத்தமுதத்தை *
தீதில்சீர்த் திருவேங்கடத்தானையே. (ரு)

வேம் ‡ க்கடங்கள் மெய்ம்மேல்வினைமுற்றவும் *
தாங்கள் தங்கட்கு நல்லனவேசெய்வார் *
வேங்கடத்துறை வார்க்குநமவென்ன
லாம்கடமை * அதுசுமந்தார்கட்கே. (சா)

சுமந்துமாமலர் நீர்சுடர்தீபம்கொண்டு - *
அமர்ந்துவானவர் வானவர்கோனொடும் *
நமன்றெழும் திருவேங்கடம்நங்கட்கு *
சமன்கொள்வீடு தரும்தடங்குன்றமே. (எ)

⁑ குன்றமேந்திக் குளிர்மழைகாத்தவன் *
அன்றுஞால மளந்தபிரான் * பரன்
சென்றுசேர்திரு வேங்கடமாமலை *
ஒன்றுமேதொழ நம்வினையோயுமே. (அ)

ஓயுமூப்புப் பிறப்பிறப்பு * பிணி
வீயுமாறுசெய் வான்திருவேங்கடத்
தாயன் * நாண்மல ராமடித்தாமரை *
வாயுள்ளும்மனத் துள்ளும்வைப்பார்கட்கே. (கூ)

வைத்தநாள்வரை யெல்லைகுறுகிச்சென்று - *
எய்த்திளைப்பதன் முன்னமடைமினோ *
பைத்தபாம்பணையான் திருவேங்கடம் *
மொய்த்தசோலைமொய் பூந்தடம்தாழ்வரே. (க0)

⁑ தாள்பரப்பி மண்தாவியவீசனை *
நீள்பொழில்குரு கூர்ச்சடகோபன்சொல் *
கேழிலாயிரத் திப்பத்தும்வல்லவர் *
வாழ்வர்வாழ்வெய்தி ஞாலம்புகழவே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



‡ கடம்-கடனாய். ரிணத்ரயத்தைச் சொல்லுகிறது.

ஒழிவில்லாக்கால முடனாகிமன்னி
வழுவிலாவாட்செய்ய மாலுக்—கெழுசிகர
வேங்கடத்தைப்பாரித்த மிக்கநலஞ்சேர்மாறன்
பூங்கழலைநெஞ்சே புகழ். (௨௬)

## ௪-வது, புகழும்.



ஸகலவித கைங்கர்ய உத்யோகத்துக்கு அநுகுணமாக ஸர்வேஶ்வரன் ஸர்வாத்மதன்மையைக்காட்ட அங்கேஸர்வவித கைங்கர்யத்தையும் பண்ணுகைக்கிச்சித்து அதற்கு அஶக்தராய் ஸர்வேஶ்வரன் பண்ணினமாத்ரமே போதுமென்கிற வார்த்தையாலே வாசிககைங்கர்யம் பண்ணினதை யருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம், பண் - நாட்டம், தாளம்-ஒன்பதொத்து.
எழுநகல்யாணிராகம் - ரூபகதாளம்.

‡‡ புகழுநல்லொருவனென்கோ ¶ பொருவில்சீர்ப்பூமியென்கோ *
திகழும்தண்பரவையென்கோ தீயென்கோவாயுவென்கோ *
நிகழுமாகாசமென்கோ நீள்சுடரிரண்டுமென்கோ *
இகழ்விலிவ்வனைத்துமென்கோ கண்ணனைக்கூவுமாறே. (௧)
கூவுமாறறியமாட்டேன் குன்றங்களனைத்துமென்கோ *
மேவுசீர்மாரியென்கோ விளங்குதாரகைகளென்கோ *
நாவியல்கலைகளென்கோ ஞானநல்லாவியென்கோ *
பாவுசீர்க்கண்ணனெம்மான் பங்கயக்கண்ணனையே. (௨)
பங்கயக்கண்ணனென்கோ பவளச்செவ்வாயனென்கோ *
அங்கதிரடியனென்கோ அஞ்சநவண்ணனென்கோ *
செங்கதிர்முடியனென்கோ திருமறுமார்வனென்கோ *
சங்குசக்கரத்தனென்கோ சாதிமாணிக்கத்தையே. (௩)
சாதிமாணிக்கமென்கோ $சவிகொள்பொன்முத்தமென்கோ *
சாதிநல்வயிரமென்கோ § தவிவில்சீர்விளக்கமென்கோ *
ஆதியஞ்சோதியென்கோ ஆதியம்புருடனென்கோ *
ஆதுமில்காலத்தெந்தை யச்சுதனமலனையே. (௪)
அச்சுதனமலனென்கோ அடியவர்வினைகெடுக்கும் *
நச்சுமாமருந்தமென்கோ நலங்கடலமுதமென்கோ *
அச்சுவைக்கட்டியென்கோ அறுசுவையடிசிலென்கோ *
நெய்ச்சுவைத்தேறலென்கோ கனியென்கோபாலென்கேனோ. (௫)
பாலென்கோநான்குவேதப் பயனென்கோ * சமயநீதி
நூலென்கோநுடங்குகேள்வியிசையென்கோ * இவற்றுள்நல்ல
மேலென்கோவினையின்மிக்க பயனென்கோ * கண்ணனென்கோ
மாலென்கோமாயனென்கோ வானவராதியையே. (௬)

¶ என்கோ - என்பேனோ. $ சவி - ஒளி. § தவிவு - விச்சேதம்.

வானவராதியென்கோ வானவர்தெய்வமென்கோ *
வானவர்போகமென்கோ வானவர்முற்றுமென்கோ *
ஊனமில்செல்வமென்கோ வூனமில்சுவர்க்கமென்கோ *
ஊனமின்மோக்கமென்கோ வொளிமணிவண்ணனையே. (௭)

ஒளிமணிவண்ணனென்கோ வொருவனென்றேத்தநின்ற *
நளிர்மதிச்சடையனென்கோ நான்முகக்கடவுளென்கோ *
அளிமகிழ்ந்துலகமெல்லாம் படைத்தவையேத்தநின்ற *
களிமலர்த்துளவனெம்மான் கண்ணனைமாயனையே. (௮)

கண்ணனைமாயன்றன்னைக் கடல்கடைந்தமுதங்கொண்ட *
அண்ணலையச்சுதனை யனந்தனையனந்தன்றன்மேல் *
நண்ணிநன்குறைகின்றானை ஞாலமுண்டுமிழ்ந்தமாலை *
எண்ணுமாறறியமாட்டேன் யாவையும்யவரும்தானே. (௯)

யாவையும்யவரும்தானா யவரவர்சமயந்தோறும் *
தோய்விலன்புலனைந்துக்கும் சொலப்படானுணர்வில்மூர்த்தி *
ஆவிசேருயிரினுள்ளா லாதுமோர்பற்றிலாத *
பாவனையதனைக்கூடி லவனையும்கூடலாமே. (௧0)

✤ கூடிவண்டறையும்தண்டார் கொண்டல்போல்வண்ணன்றன்னை *
மாடலர்பொழில்குருகூர் வண்சடகோபன்சொன்ன *
பாடலோராயிரத்து ளிவையுமொருபத்தும்வல்லார் *
வீடிலபோகமெய்தி விரும்புவரமரர்மொய்த்தே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



புகழொன்றுமாலைப் பொருள்களுந்தானாய்
நிகழ்கின்றநேர்காட்டிநிற்க—மகிழ்மாறன்
எங்குமடிமைசெய விச்சித்துவாசிகமாய்
அங்கடிமைசெய்தான் மொய்ம்பால். (௨௬)

## ௫-வது, மொய்ம்மாம்.



பகவத்கைங்கர்யத்தில் ஆதரமுடைய ஆழ்வார் பகவத்கைங்கர்யம் பண்ணுகிறபேரைக் கொண்டாடினதும் அல்லாதபேரை நிந்தித்ததும் அருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண் - சீகாமரம், தாளம் - இடையொத்து.
நாதநாமக்கிரியைராகம் - அடதாளம்.

✤ மொய்ம்மாம்பூம்பொழில்பொய்கை முதலைச்சிறைபட்டுநின்ற *
கைம்மாவுக்கருள்செய்த கார்முகில்போல்வண்ணன்கண்ணன் *
எம்மானைச்சொல்லிப்பாடி யெழுந்தும்பறந்தும்துள்ளாதார் *
தம்மால்கருமமென்சொல்லீர் தண்கடல்வட்டத்துள்ளீரே. (௧)

தண்கடல்வட்டத்துள்ளாரைத் தமக்கிரையாத்தடிந்துண்ணும் *
திண்கழல்காலசுரர்க்குத் தீங்கிழைக்குந்திருமாலை *
பண்கள் தலைக்கொள்ளப்பாடிப் பறந்தும்குனித்துழலாதார் *
மண்கொளுலகில்பிறப்பார் வல்வினைமோதமலைந்தே. (உ)

மலையையெடுத்துக்கல்மாரி காத்துப்பசுநிரை தன்னை *
தொலைவுதவிர்த்தபிரானைச் சொல்லிச்சொல்லிநின்றெப்போதும் *
‡ தலையினோடாதனம்தட்டத் தடுகுட்டமாய்ப்பறவாதார் *
அலைகொள்நரகத்தழுந்திக் கிடந்துழைக்கின்ற $ வம்பரே. (௩)

வம்பவிழ்கோதைபொருட்டா மால்விடையேழுமடர்த்த *
செம்பவளத்திரள்வாயன் சிரீதரன்தொல்புகழ்பாடி *
கும்பிடுநட்டமிட்டாடிக் † கோகுகட்டுண்டுழலாதார் *
தம்பிறப்பால்பயனென்னே சாதுசனங்களிடையே. (ச)

சாதுசனத்தைநலியும் கஞ்சனைச்சாதிப்பதற்கு *
ஆதியஞ்சோதியுருவை யங்குவைத்திங்குப்பிறந்த *
வேதமுதல்வனைப்பாடி வீதிகள்தோறுந்துள்ளாதார் *
ஓதியுணர்ந்தவர்முன்னா என்சவிப்பார்மனிசரே. (௫)

மனிசரும்மற்றும்முற்றுமாய் மாயப்பிறவிபிறந்த *
தனியன்பிறப்பிலிதன்னைத் தடங்கடல்சேர்ந்தபிரானை *
கனியைக்கரும்பினின்சாற்றைக் கட்டியைத்தேனையமுதை *
முனிவின்றியேத்திக்குனிப்பார் முழுதுணர்நீர்மையினாரே. (௬)

நீர்மையில் நூற்றுவர்வீய ஐவர்க்கருள்செய்துநின்று *
பார்மல்குசேனையவித்த பரஞ்சுடரைநினைந்தாடி *
நீர்மல்குகண்ணினராகி நெஞ்சம்குழைந்துநையாதே *
ஊன்மல்கிமோடுபருப்பா ருத்தமர்கட்கென்செய்வாரே. (௭)

வார்புனலந்தணருவி வடதிருவேங்கடத்தெந்தை *
பேர்பலசொல்லிப்பிதற்றிப் பித்தரென்றேபிறர்கூற *
ஊர்பலபுக்கும்புகாது முலோகர்சிரிக்கநின்றாடி *
ஆர்வம்பெருகிக்குனிப்பா ரமரர்தொழப்படுவாரே. (அ)

அமரர்தொழப்படுவானை யனைத்துலகுக்கும்பிரானை *
அமரமனத்தினுள்யோகு புணர்ந்தவன்றன்னோடொன்றாக *
அமரத்துணியவல்லார்களொழிய அல்லாதவரெல்லாம் *
அமரநினைந்தெழுந்தாடி யலற்றுவதேகருமமே. (௯)

‡ தலையினோடு ஆதனம்தட்ட - ஆதனத்தோடு - தறையிலே, தலைதட்ட.
$ வம்பர் - (யமபடர்க்குப்) புதியர்.

† கோகு - அடைவுகேடு, உகட்டு - தலைமண்டையிட்டு : "கோகுகொட்டு" என்றும்பாடம் ; - கோகுகொட்டுண்கை - ஆரவாரங்கொட்டுகை.

கருமமும்கருமபலனுமாகிய காரணன்றன்னை *
திருமணிவண்ணனைச் செங்கண்மாலினைத்தேவபிரானை *
ஒருமைமனத்தினுள்வைத் துள்ளங்குழைந்தெழுந்தாடி *
பெருமையும்நாணும்தவிர்ந்து பிதற்றுமின்பேதைமைதீர்ந்தே. (க0)

✻ தீர்ந்தவடியவர்தம்மைத் திருத்திப்பணிகொள்ளவல்ல *
ஆர்ந்தபுகழச்சுதனை யமரர்பிரானையெம்மானை *
வாய்ந்தவளவயல்சூழ் தண்வளங்குருகூர்ச்சடகோபன் *
நேர்ந்தவோராயிரத்திப்பத் தருவினைநீறுசெய்யுமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



மொய்ம்பாருமாலுக்கு முன்னடிமைசெய்துவப்பால்
அன்பாலாட்செய்பவரை யாதரித்தும்—அன்பிலா
மூடரைநிந்தித்து மொழிந்தருளுமாறன்பால்
தேடரியபத்திநெஞ்சே செய். (உ௫)

---

## கூ-வது, செய்யதாமரை.



கைங்கர்யத்துக்கு பரவ்யூஹ விபவாந்தர்யாமிகளைக்காட்டில் அர்ச்சாவதாரமே சுலபவிஷயத்வமென்றதை யருளிச்செய்கிறார்.

---

எழுசீராசிரியவிருத்தம், பண்-தக்கராகம், தாளம் - ஏழொத்து.
சௌராஷ்டிரராகம் - அடதாளம்.

✻ செய்யதாமரைக்கண்ணனு யுலகேழுமுண்டவவன்கண்டீர் *
வையம்வானம்மனிசர்தெய்வம் மற்றும்மற்றும்மற்றும்முற்றுமாய் *
செய்யசூழ்சுடர்ஞானமாய் வெளிப்பட்டிவைபடைத்தான்*பின்னும்
மொய்கொள்சோதியோடாயின னொருமூவராகியமூர்த்தியே. (க)

மூவராகியமூர்த்தியை முதல்மூவர்க்குமுதல்வன்றன்னை *
சாபமுள்ளனநீக்குவானைத் தடங்கடல்கிடந்தான்றன்னைத் *
தேவதேவனைத்தென்னிலங்கை யெரியெழச்செற்றவில்லியை *
பாவநாசனைப் பங்கயத்தடங்கண்ணனைப்பரவுமினோ. (உ)

பரவிவானவரேத்தநின்ற பரமனைப்பரஞ்சோதியை *
குரவைகோத்தகுழகனை மணிவண்ணனைக்குடக்கூத்தனை *
அரவமேறியலைகடலமரும் துயில்கொண்டவண்ணலை *
இரவுநன்பகலும்விடாதென்று மேத்துதல்மனம்வைம்மினோ. (ந)

வைம்மின்நும்மனத்தென்று யானுரைக்கின்றமாயவன்சீர்மையை *
எம்மனோர்களுரைப்பதென் ? அதுநிற்கநாடொறும் * வானவர்
தம்மையாளுமவனும் நான்முகனும்சடைமுடியண்ணலும் *
செம்மையாலவன்பாதபங்கயம் சிந்தித்தேத்தித்திரிவரே. (ச)

திரியும்காற்ரோடகல்விசும்பு திணிந்தமண்கிடந்தகடல் *
எரியும்தீயோடிருசுடர்தெய்வம் மற்றும்மற்றும்முற்றுமாய் *
கரியமேனியன்செய்யதாமரைக்கண்ணன்கண்ணன்விண்ணோரிறை *
சுரியும்பல்கருங்குஞ்சியெங்கள் சுடர்முடியண்ணல்தோற்றமே. (௫)

தோற்றக்கேடவையில்லவனுடையா னவனொருமூர்த்தியாய் *
சீற்றத்தோடருள்பெற்றவனடிக்கீழ் புகநின்றசெங்கண்மால் *
நாற்றத்தோற்றச்சுவையொலி † உறலாகிநின்ற * எம்வானவ
ரேற்றையேயன்றி மற்றொருவரையானிலேனெழுமைக்குமே. (௬)

எழுமைக்குமெனதாவிக்கின் னமுதத்தினை * எனதாருயிர்
கெழுமியகதிர்ச்சோதியை மணிவண்ணனைக்குடக்கூத்தனை *
விழுமியவமரர்முனிவர்விழுங்கும் கன்னல்கனியினை *
தொழுமின்தூயமனத்தரா யிறையும்நில்லாதுயரங்களே. (௭)

துயரமேதருதுன்பவின்ப வினைகளாயவைபல்லனாய் *
உயரநின்றதோர்சோதியா யுலகேழுமுண்டுமிழ்ந்தான்றன்னை *
அயரவாங்குநமன்றமர்க் கருநஞ்சினையச்சுதன்றன்னை *
தயரதற்குமகன்றன்னையன்றி மற்றிலேன்தஞ்சமாகவே. (௮)

தஞ்சமாகியதந்தைதாயொடு தானுமாயவையல்லனாய் *
எஞ்சலிலமரர்குலமுதல் மூவர்தமுள்ளுமாதியை *
அஞ்சிநீருலகத்துள்ளீர்க ளவனிவனென்றுகூழேன்மின் *
நெஞ்சினால்நினைப்பான் யவனவனாகும்நீள்கடல்வண்ணனே. (௯)

கடல்வண்ணன்கண்ணன் விண்ணவர்கருமாணிக்கமெனதாருயிர்
படவரவினணைக்கிடந்த பரஞ்சுடர், பண்டுநூற்றுவர் *
அடவரும்படைமங்க ஐவர்கட்காகிவெஞ்சமத்து * அன்றுதேர்
கடவியபெருமான்கனைகழல் காண்பதென்றுகொல்கண்களே. (௧௦)

⁂ கண்கள்காண்டற்கரியனாய்க் கருத்துக்குநன்றுமெளியனாய்
மண்கொள்ஞாலத்துயிர்க்கெல்லா மருள்செய்யும்வானவரீசனை *
பண்கொள்சோலைவழுதிநாடன் குருகைக்கோன்சடகோபன்சொல்
பண்கொளாயிரத்திப்பத்தால்பத்த ராகக்கூடும்பயிலுமினே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



செய்யபரத்துவமாய்ச் சீரார்வியூகமாய்த்
துய்யவிபவமுமாய்த் தோன்றிவற்றுள்—எய்துமவர்க்
கிந்நிலத்திலர்ச்சாவ தாரமெளிதென்றான்
பன்னுதமிழ்மாறன் பயின்று. (௨௩)

---

† உறல் - ஸ்பர்சம்.

## எ-வது, பயிலும்சுடரொளி.

*பகவத்கைங்கர்யம் பண்ணுகிறபேர்கள் நமக்கு ஸ்வாமிகளென்று பாகவதசேஷத்வ மருளிச்செய்கிறார்.*

கலித்துறை, பண் – நாட்டம், தாளம் - ஏழொத்து.
ஸஹானராகம்-அடதாளம்.

பயிலும்சுடரொளிமூர்த்தியைப் பங்கயக்கண்ணனை *
பயிலவினிய நம்பாற்கடல்சேர்ந்தபரமனை *
பயிலும்திருவுடையார் யவரேலுமவர்கண்டீர் *
பயிலும்பிறப்பிடைதோறெம்மையாளும்பரமரே. (க)

ஆளும்பரமனைக்கண்ணனை யாழிப்பிரான்றன்னை *
தோளுமோர்நான்குடைத் தூமணிவண்ணனெம்மான்றன்னை *
தாளும்தடக்கையும்கூப்பிப் பணியுமவர்கண்டீர் *
நாளும்பிறப்பிடைதோறெம்மையாளுடைநாதரே. (உ)

நாதனைஞாலமும்வானமு மேத்தும்நறுந்துழாய்ப்
போதனை * பொன்னெடும் சக்கரத்தெந்தைபிரான்றன்னை *
பாதம்பணியவல்லாரைப் பணியுமவர்கண்டீர்
ஓதும்பிறப்பிடைதோறெம்மையாளுடையார்களே. (ங)

உடையார்ந்தவாடையன் கண்டிகையன்உடைநாணினன் *
புடையார்பொன்நூலினன் பொன்முடியன், மற்றும்பல்கலன் *
நடையாவுடைத்திருநாரணன் தொண்டர்தொண்டர்கண்டீர் *
இடையார்பிறப்பிடைதோறெமக்கெம்பெருமக்களே. (ச)

பெருமக்களுள்ளவர் தம்பெருமானை * அமரர்கட்
கருமையொழிய அன்றாரமுதூட்டியவப்பனை *
பெருமைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் *
வருமையுமிம்மையும் நம்மையளிக்கும்பிராக்களே. (ரு)

அளிக்கும்பரமனைக்கண்ணனை யாழிப்பிரான்றன்னை *
துளிக்குநறுங்கண்ணித் தூமணிவண்ணனெம்மான்றன்னை *
ஒளிக்கொண்டசோதியை யுள்ளத்துக்கொள்ளுமவர்கண்டீர் *
சலிப்பின்றியாண்டெம்மைச் சன்மசன்மாந்தரங்காப்பரே. (சு)

சன்மசன்மாந்தரங்காத் தடியார்களைக்கொண்டுபோய் *
தன்மைபெறுத்தித் தன்தாளிணைக்கீழ்க்கொள்ளுமப்பனை *
தொன்மைபிதற்றவல்லாரைப் பிதற்றுமவர்கண்டீர் *
நன்மைபெறுத்தெம்மை நாளுய்யக்கொள்கின்றநம்பரே. (எ)

நம்பனைஞாலம்படைத்தவனைத் திருமார்வனை *
உம்பருலகினில்யார்க்கு முணர்வரியான்றன்னைக் *
கும்பிநரகர்களேத்துவரேலு மவர்கண்டீர் *
எம்பல்பிறப்பிடைதோறெம்தொழுகுலம்தாங்களே. (அ)

குலந்தாங்குசாதிகள் நாலிலும்கீழிழிந்து * எத்தனை
நலந்தானிலாத சண்டாளசண்டாளர்களாகிலும் *
வலந்தாங்குசக்கரத்தண்ணல் மணிவண்ணற்காளென்றுள்
கலந்தார் * அடியார் தம்மடியாரெம்மடிகளே. (௯)
அடியார்ந்தவையமுண் டாலிலையன்னவசஞ்செய்யும் *
படிவாதுமில்குழவிப் படியெந்தைபிரான்றனக்கு - *
அடியாரடியார்தம் மடியாரடியார்தமக் *
கடியாரடியார்தம் * அடியாரடியோங்களே. (௧0)
⁂ அடியோங்குநூற்றுவர்வீய அன்றைவர்க்கருள்செய்த
நெடியோனை * தென்குருகூர்ச் சடகோபன்குற்றேவல்கள் *
அடியார்ந்தவாயிரத்துள் ளிவைபத்தவன்தொண்டர்மேல்
முடிவு * ஆரக்கற்கிற்கில் சன்மம்செய்யாமைமுடியுமே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பயிலுந்திருமால் பதந்தன்னினெஞ்சம்
தயலுண்டுநிற்குந் ததியர்க்—கியலுடனே
ஆளானார்க்காளாகு மாறனடியதனில்
ஆளாகார்சன்ம முடியா. (உஎ)

---

## அ-வது, முடியானே.



பாகவதஸேஷத்வம் ப்ரதிபாதித்த ஆழ்வார் இந்த பாகவத ஸேஷத்வம் பரஸ்பர போதநத்துக்கு உபயுக்தமாகாமல் பகவத் குணஸ்மாரகமாய் அக்குணநுபவத்தில் ஒரோரிந்த்ரியமேபஞ்சேந்திரியக்ருத்யங்களை யாசைப்பட்டதென அருளிச்செய்கிறார்.

---

கலிவிருத்தம், பண் - இந்தளம், தாளம் - ஏழொத்து
ஆனந்தபைரவிராகம்-ஆதிதாளம்.

⁂ முடியானே மூவுலகும்தொழுதேத்தும்சீ
ரடியானே * ஆழ்கடலைக் கடைந்தாய்புள்ளூர்
கொடியானே * கொண்டல்வண்ணாஅண்டத்தும்பரில்
நெடியானே * என்றுகிடக்குமென்னெஞ்சமே. (௧)
நெஞ்சமேநீணகராக விருந்தவென்
தஞ்சனே * தண்ணிலங்கைக் கிறையைச்செற்ற
நஞ்சனே * ஞாலங்கொள்வான் குறளாகிய
வஞ்சனே * என்னுமெப்போதுமென்வாசகமே. (௨)
வாசகமேயேத்த வருள்செய்யும்வானவர்தம்
நாயகனே * நாளிளந் திங்களைக்கோள்விடுத்து *
வேயகம்பால்வெண்ணெய் தொடுவுண்டவானாயர்
தாயவனே * என்று தடவுமென்கைகளே. (௩)

கைகளாலாரத் தொழுதுதொழுதுன்னை *
வைகலும்மாத்திரைப்போது மோர்வீடின்றி
பைகொள்பாம்பேறி யுறைபரனே * உன்னை
மெய்கொள்ளக்காண விரும்புமென்கண்களே. (ச)

கண்களால்காண வருங்கொலென்றாசையால் *
மண்கொண்டவாமன னேறமகிழ்ந்துசெல் *
பண்கொண்டபுள்ளின் சிறகொலிபாவித்து *
திண்கொள்ளவோர்க்கும் கிடந்தென்செவிகளே. (ரு)

செவிகளாலார நின்கீர்த்திக்கனியென்னும்
கவிகளே * காலப்பண் டேனுரைப்பத்துற்று *
புவியின்மேல்பொன்னெடும் சக்கரத்துன்னையே *
அவிவின்றியாதரிக்கு மெனதாவியே. (சா)

ஆவியேயாரமுதே யென்னையாளுடை *
தூவியம்புள்ளுடையாய் சுடர்நேமியாய் *
பாவியேன்நெஞ்சம் புலம்பப்பலகாலும் *
கூவியும்காணப்பெறே னுனகோலமே. (எ)

கோலமேதாமரைக் கண்ணதோரஞ்சந
நீலமே * நின்றெனதாவியையீர்கின்ற
சீலமே * சென்று செல்லாதனமுன்னிலாம்
காலமே * உன்னை யெந்நாள்கண்டுகொள்வனே. (அ)

கொள்வன்நான்மாவலி மூவடிதாவென்ற
கள்வனே * கஞ்சனை வஞ்சித்துவாணனை
உள்வன்மைதீர * ஓராயிரம்தோள் துணித்த
புள்வல்லாய் * உன்னை யெஞ்ஞான்றுபொருந்துவனே. (கூ)

பொருந்தியமாமருதி னிடைபோயவெம்
பெருந்தகாய் * உன்கழல்காணியபேதுற்று *
வருந்திநான்வாசக மாலைகொண்டு * உன்னையே
இருந்திருந்தெத்தனைகாலம் புலம்புவனே. (க0)

⁂ புலம்புசீர்ப்பூமி யளந்தபெருமானை *
நலங்கொள்சீர் நன்குருகூர்ச்சடகோபன் * சொல்
வலங்கொண்டவாயிரத்துள் ளிவையுமோர்பத்
திலங்குவான் * யாவருமேறுவர்சொன்னாலே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



முடியாதவாசை மிகமுற்றுகரணங்கள்
அடியார்தமைவிட் டவன்பால்—படியா, வொன்
றொன்றின்செயல்விரும்ப வுள்ளதெலாந்தாம்விரும்பத்
துன்னியதேமாறன்றன் சொல். (உஅ)

## ௯-வது, சொன்னால்.



பகவத்குணாநுபவத்திலே ஆசையுடைய ஆழ்வார் லௌகிகரைப்பார்த்து இதரஸ்தோத்ரம்பண்ணினால் லேதுண்டாகிறது என்றேடேகூட ஸ்ரீயஃபதியை ஸ்தோத்திரம்பண்ணினால் ஸர்வாபீஷ்டங்களு முண்டாமென்றதை யருளிச்செய்கிறார்.

---

கலித்துறை, பண் - முதிர்ந்தகுறிஞ்சி, தாளம்-ஏழொத்து.
ஸஹானராகம் - ஆதிதாளம்.

‡‡ சொன்னால்விரோதமிது, ஆகிலும்சொல்லுவன்கேண்மினோ *
என்நாவிலின்கவி யானொருவர்க்கும்கொடுக்கிலேன் *
தென்னாதெனாவென்று வண்டுமுரல்திருவேங்கடத்து *
என்னானையென்னப்ப னெம்பெருமானுளனாகவே. (௧)

உளனாகவேயெண்ணித் தன்னையொன்றாகத்தன்செல்வத்தை *
வளனாமதிக்கு மிம்மானிடத்தைக்கவிபாடியென் ? *
குளனார்கழனிசூழ் கண்ணன்குறுங்குடிமெய்ம்மையே *
உளனாயவெந்தையை யெந்தைபெம்மானையொழியவே. (௨)

ஒழிவொன்றில்லாத பல்லூழிதோறூழிநிலாவ * போம்
வழியைத்தரும்நங்கள் வானவரீசனைநிற்கப்போய் *
கழியமிகநல்லவான்கவிகொண்டு புலவீர்காள் *
இழியக்கருதி யோர்மானிடம்பாடலென்னாவதே. (௩)

என்னாவதெத்தனை நாளைக்குப்போதும்புலவீர்காள்
மன்னாமனிசரைப்பாடிப் படைக்கும்பெரும்பொருள் *
மின்னார்மணிமுடி விண்ணவர்தாதையைப்பாடினால் *
தன்னாகவேகொண்டு சன்மஞ்செய்யாமையுங்கொள்ளுமே. (௪)

கொள்ளும்பயனில்லைக் குப்பைகிளர்த்தன்னசெல்வத்தை *
வள்ளல்புகழ்ந்து நும்வாய்மையிழக்கும்புலவீர்காள் *
கொள்ளக்குறைவிலன் வேண்டிற்றெல்லாம்தரும்கோதில் * என்
வள்ளல்மணிவண்ணன்றன்னைக் கவிசொல்லவம்மினோ. (௫)

வம்மின்புலவீர் நும்மெய்வருத்திக்கைசெய்துய்மினோ *
இம்மன்னுலகினில் செல்வரிப்போதில்லைநோக்கினோம் *
நும்மின்கவிகொண்டு நும்நுமிட்டாதெய்வமேத்தினால் *
செம்மின்சுடர்முடி யென்திருமாலுக்குச்சேருமே. (௬)

சேரும்கொடைபுகழெல்லையிலானை * ஓராயிரம்
பேருமுடையபிரானையல்லால் மற்றுயான்கிலேன் *
மாரியனையகை மால்வரையொக்கும்திண்டோளென்று *
பாரிலோர் ‡ பற்றையைப் பச்சைப்பசும்பொய்கள்பேசவே. (௭)

---

‡ பற்றை-முளைத்தெழுந்து. தேய்ந்துபோம் சிறுதூறு; தூறு-த்ருணம்.

வேயின்மலிபுரைதோளி பின்னைக்குமணாளனை *
ஆயபெரும்புக ழெல்லையிலாதனபாடிப்போய் *
காயம்கழித்து அவன்தாளிணைக்கீழ்ப்புகுங்காதலன் *
மாயமனிசரையென் சொல்லவல்லேனென்வாய்கொண்டே. (அ)
வாய்கொண்டுமானிடம் பாடவந்தகவியேனல்லேன் *
ஆய்கொண்டசீர்வள்ள லாழிப்பிரானெனக்கேயுளன் *
சாய்கொண்டவிம்மையும்சாதித்து வானவர்நாட்டையும் *
நீகண்டுகொள்ளென்று வீடும்தரும்நின்றுநின்றே. (கூ)
நின்றுநின்றுபலநாளுய்க்கு மிவ்வுடல்நீங்கிப்போய் *
சென்றுசென்றாகிலும்கண்டு சன்மங்கழிப்பானெண்ணி *
ஒன்றியொன்றியுலகம்படைத்தான் கவியாயினேற்கு - *
என்றுமென்றுமினி மற்றொருவர்கவியேற்குமே. (க0)
⁂ ஏற்கும்பெரும்புகழ் வானவரீசன்கண்ணன்றனக்கு - *
ஏற்கும்பெரும்புகழ் வண்குருகூர்ச்சடகோபன்சொல் *
ஏற்கும்பெரும்புக ழாயிரத்துள்ளிவையுமோர்பத்து - *
ஏற்கும்பெரும்புகழ் சொல்லவல்லார்க்கில்லைசன்மமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



சொன்னவில்வாழ்புலவீர் சோறுகூறைக்காக
மன்னுதமானிடரை வாழ்த்துதலால்—என்னுகும்
என்னுடனேமாதவனை யேத்துமெனுங்குருகூர்
மன்னருளான்மாறுஞ் சன்மம். (உகூ)

---

## க0-வது, சன்மம்பலபல.



இதரஸ்துதி பண்ணுகிற கவிகளை பகவத்விஷயத்திலே ப்ரவர்த்திக்கும்படி உத்யோகித்துஅவர்கள்புத்தி திரும்பாதபடியாலே அவர்கள்போலன்றி ஸகல ப்ரகாரத்தாலும் ஸர்வேஶ்வரன் ஆஶ்ரயிக்கையாலே தமக்கொருகுறையின்றி ஸர்வாபீஷ்டமுண்டாச்சுதென அருளிச்செய்கிறார்.

---

அறுசீராசிரியவிருத்தம், பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து.

அடாணராகம் - திரிபுடைதாளம்.

⁂ சன்மம்பலபலசெய்து வெளிப்பட்டுச்சங்கொடுசக்கரம்வில் *
ஒண்மையுடையவுலக்கையொள்வாள் தண்டுகொண்டுபுள்ளூர்ந்து * உலகில்
வன்மையுடையவரக்க ரசுரரைமாளப்படைபொருத *
நன்மையுடையவன்சீர் பரவப்பெற்றநானோர்குறைவிலனே. (க)
குறைவில்தடங்கடல்கோளரவேறித்தன் கோலச்செந்தாமரைக்கண்
உறைபவன்போலவோர்யோகுபுணர்ந்த வொளிமணிவண்ணன்கண்ணன் *
கறையணிமூக்குடைப்புள்ளைக்கடாவி யசுரரைக்காய்ந்தவம்மான் *
நிறைபுகழேத்தியும்பாடியுமாடியும்யானொருமுட்டிலனே. (உ)

முட்டில்பல்போகத்தொருதனிநாயகன் மூவுலகுக்குரிய *
கட்டியைத்தேனையமுதை நன்பாலைக்கனியைக்கரும்புதன்னை *
மட்டவிழ்தண்ணந்துழாய்முடியானை வணங்கியவன்திறத்துப்
பட்டபின்னை * இறையாகிலும் யானென்மனத்துப்பரிவிலனே. (௩)

பரிவின்றிவாணனைக்காத்துமென்றன்றுபடையோடும்வந்தெதிர்ந்த *
திரிபுரம்செற்றவனும்மகனும் பின்னுமங்கியும்போர்தொலைய *
பொருசிறைப்புள்ளைக்கடாவிய மாயனையாயனைப்பொற்சக்கரத்
தரியினை * அச்சுதனைப்பற்றி யானிறையேனுமிடரிலனே. (௪)

இடரின்றியேயொருநாளொருபோழ்தி லெல்லாவுலகும்கழிய *
படர்புகழ்பார்த்தனும் வைதிகனுமுடனேறத்திண்டேர்கடவி *
சுடரொளியாய்நின்ற தன்னுடைச்சோதியில்வைதிகன்பிள்ளைகளை *
உடலொடும்கொண்டு கொடுத்தவனைப்பற்றி யொன்றும்துயரிலனே.()

துயரில்சுடரொளிதன்னுடைச்சோதி நின்றவண்ணம்நிற்கவே *
துயரில்மலியும்மனிசர்பிறவியில் தோன்றிக்கண்காணவந்து *
துயரங்கள்செய்து தன்தெய்வநிலையுலகில்புகவுய்க்குமம்மான் *
துயரமில்சீர்க்கண்ணன்மாயன்புகழ்துற்றயானோர்துன்பமிலனே.(௬)

துன்பமுமின்பமுமாகிய செய்வினையாயுலகங்களுமாய் *
இன்பமில்வெந்நரகாகி இனியநல்வான்சுவர்க்கங்களுமாய் *
மன்பல்லுயிர்களுமாகிப் பலபலமாயமயக்குக்களால் *
இன்புறுமிவ்விளையாட்டுடையானைப்பெற் றேதுமல்லலிலனே. (௭)

அல்லலிலின்பமளவிறந்தெங்கு மழகமர்சூழொளியன்
அல்லிமலர்மகள்போகமயக்குக்க ளாகியும்நிற்குமம்மான் * [ய்
எல்லையில்ஞானத்தன் ஞானமஃதேகொண்டெல்லாக்கருமங்களும்செ
எல்லையில்மாயனைக்கண்ணனைத்தாள்பற்றி யானோர்துக்கமிலனே. (௮)

துக்கமில்ஞானச்சுடரொளிமூர்த்தி துழாயலங்கல்பெருமான் *
மிக்கபன்மாயங்களால்விகிருதம்செய்து வேண்டுமுருவுகொண்டு *
நக்கபிரானோடயன்முதலாக எல்லாருமெவையும் * தன்னுள்
ஒக்கவொடுங்கவிழுங்கவல்லானைப்பெற் றொன்றும்தளர்விலனே. (௯)

தளர்வின்றியேயென்றுமெங்கும் பரந்ததனிமுதல்ஞானமொன்றாய் *
அளவுடையைம்புலன்க ளறியாவகையாலருவாகிநிற்கும் *
வளரொளியீசனைமூர்த்தியைப் பூதங்களைந்தையிருசுடரை *
கிளரொளிமாயனைக்கண்ணனைத் தாள்பற்றியானென்றும்கேடிலனே.

⁑⁑ கேடில்விழுப்புகழ்க்கேசவனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பாடலோராயிரத்துளிவையுமொருபத்தும் பயிற்றவல்லார்கட்கு*அவ
நாடுநகரமும்நன்குடன்காண நலனிடையூர்திபண்ணி * [ன்
வீடும்பெறுத்தித்தன்மூவுலகுக்கும் தருமொருநாயகமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



மூன்றும்பத்து - ஸம்பூர்ணம்.

---

சன்மம்பலசெய்து தானிவ்வுலகளிக்கும்
நன்மையுடைமால்குணத்தை நாடோறும்—இம்மையிலே
ஏத்துமின்பம்பெற்றே னெனுமாறனையுலகீர்
நாத்தழும்பவேத்துமொரு நாள். (ஙூ0)

---

# நான்காம்பத்து.



## க-வது, ஒருநாயகம்.



பகவதாஶ்ரயணத்தால் தமக்கொருகுறையில்லையென்ற ஆழ்வார் அந்ய ருடைய குறையுந்தீர்க்க வுத்யோகித்து இஹலோக ஐஶ்வர்யமும் ஸ்வர்க்காதி போகமும் அஸ்திரம், கைவல்யாநுபவமல்பம், பகவதநுபவமே நிரபாயமான பரமபுருஷார்த்தமென்று பரோபதேஶம் பண்ணினதை அருளிச்செய்கிறார்.

---

கலிவிருத்தம், பண் - நாட்டம், தாளம்-ஏழொத்து.
சுருட்டிராகம் - திரிபுடைதாளம்.

⁑⁑ ஒருநாயகமா யோடவுலகுடனாண்டவர் *
கருநாய்கவர்ந்தகாலர் சிதைகியபானையர் *
பெருநாடுகாண இம்மையிலேபிச்சை தாம்கொள்வர் *
திருநாரணன்தாள் காலம்பெறச்சிந்தித்துய்மினோ. (க)

உய்மின்திறைகொணர்ந் தென்றுலகாண்டவர் * இம்மையே
தம்மின்சுவைமடவாரைப் பிறர்கொள்ளத்தாம்விட்டு *
வெம்மினொளிவெயில் கானகம்போய்க்குமைதின்பர்கள் *
செம்மின்முடித்திருமாலை விரைந்தடிசேர்மினோ. (உ)

அடிசேர்முடியினராகி யரசர்கள்தாம்தொழ *
இடிசேர்முரசங்கள் முற்றத்தியம்பவிருந்தவர் *
பொடிசேர்துகளாய்ப் போவர்களாதலில்நொக்கென *
கடிசேர்துழாய்முடிக் கண்ணன்கழல்கள்நினைமினே. (௩)

நினைப்பான்புகில் கடலெக்கலில்நுண்மணலில்பலர் *
எனைத்தோருகங்களு மிவ்வுலகாண்டுகழிந்தவர் *
மனைப்பால்மருங்கற மாய்தலல்லால்மற்றுக்கண்டிலம் *
பனைத்தாள்மதகளிறட்டவன் பாதம்பணிமினே. (௪)

பணிமின்திருவருளென்னும் அஞ்சிதப்பைம்பூம்பள்ளி *
அணிமென்குழலா ரின்பக்கலவியமுதுண்டார் *
துணிமுன்புநாலப் பல்லேழையர்தாமிழிப்பச்செல்வர் *
மணிமின்னுமேனி நம்மாயவன்பேர்சொல்லிவாழ்மினே. (ரு)

வாழ்ந்தார்கள்வாழ்ந்தது மாமழைமொக்கலில்மாய்ந்துமாய்ந்து *
ஆழ்ந்தாரென்றல்லா லன்றுமுதலின்றறுதியா *
வாழ்ந்தார்கள்வாழ்ந்தே நிற்பரென்பதில்லை, நிற்குறில்
ஆழ்ந்தார்கடல்பள்ளி யண்ணலடியவராமினே. (சு)

ஆமின்சுவையவை யாறோடடிசிலுண்டார்ந்தபின் *
தூமென்மொழிமடவாரிரக்கப் பின்னும்துற்றுவார் *
ஈமினெமக்கொருதுற்றென் றிடறுவராதலில் *
கோமின்துழாய்முடி யாதியஞ்சோதிகுணங்களே. (எ)

குணங்கொள்நிறைபுகழ்மன்னர் கொடைக்கடன்பூண்டிருந்து *
இணங்கியுலகுடனாக்கிலு மாங்கவனையில்லார் *
மணங்கொண்டபோகத்து மன்னியுமீள்வர்கள்மீள்வில்லை *
பணங்கொளரவணையான் திருநாமம்படிமினே. (அ)

படிமன்னுபல்கலன்பற்றோடறுத்து ஐம்புலன்வென்று *
செடிமன்னுகாயம்செற்றார்களு மாங்கவனையில்லார் *
குடிமன்னுமின்சுவர்க்கமெய்தியு மீள்வர்கள்மீள்வில்லை
கொடிமன்னுபுள்ளுடை யண்ணல்கழல்கள்குறுகுமினே. (கூ)

குறுகமிகவுணர்வத்தொடுநோக்கி யெல்லாம்விட்ட *
இறுகலிறப்பென்னும் ஞானிக்குமப்பயனில்லையேல் *
சிறுகநினைவதோர்பாசமுண்டாம் பின்னும்வீடில்லை *
மறுகலிலீசனைப்பற்றி விடாவிடில்வீடஃதே. (க0)

⁑ அஃதேயுய்யப்புகுமாறென்று கண்ணன்கழல்கள்மேல் *
கொய்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்குற்றேவல் † *
செய்கோலத்தாயிரம்சீர்த் தொடைப்பாடலிவைபத்தும் *
அஃகாமல்கற்பவ ராழ்துயர்போயுய்யப்பாலரே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



ஒருநாயகமா யுலகுக்குவானோர்
இருநாட்டிலேறியுய்க்கு மின்பம்—திரமாகா
மன்னுயிர்ப்போகந்தீது மாலடிமையேயினிதாம்
பன்னியிவைமாறனுரைப் பால். (ஙக)

---

## உ-வது, பாலனாய்.



முன்சொன்ன பரோபதேசமும் வ்யர்த்தமாய்ப்போகையாலே தாம் பகவத்விஷயத்தில் மிகவுமபிநிவேசத்தையடைந்து முன்புசெய்த அவதாரங்களெல்லாம்இப்பொழுது தமக்குக்காட்டவேண்டுமென்கிறதை அருளிச்செய்கிறார்.

---

கலிவிருத்தம், பண் -நட்டபாஷை, தாளம் - ஒன்பதொத்து.

ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

⁑பாலனாயேழுலகுண்டு பரிவின்றி *
ஆலிலையன்னவசஞ்செய்யு மண்ணலார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
மாலுமால் * வல்வினையேன் மடவல்லியே. (க)

வல்லிசேர் நுண்ணிடை யாய்ச்சியர்தம்மொடும் *
‡ கொல்லைமைசெய்து குரவைபிணைந்தவர் *
நல்லடிமேலணி நாறுதுழாயென்றே
சொல்லுமால் * சூழ்வினையாட்டியேன் பாவையே. (உ)

பாவியல்வேத நன்மாலைபலகொண்டு *
தேவர்கள்மாமுனிவ ரிறைஞ்சநின்ற *
சேவடிமேலணி செம்பொன்துழாயென்றே
கூவுமால் * கோள்வினையாட்டியேன் கோதையே. (ங)

கோதிலவண்புகழ் கொண்டுசமயிகள் *
பேதங்கள்சொல்லிப் பிதற்றும்பிரான்பரன் *
பாதங்கள்மேலணி பைம்பொன்துழாயென்றே
ஓதுமால் * ஊழ்வினையேன் தடந்தோளியே. (ச)

---

† "கொய்பூம்பொழில் குருகூர்ச்சடகோபன் குற்றேவல்கள்" என்று உரையின்பாடம். ‡ கொல்லைமை - வரம்பழிந்த செயல்.

தோளிசேர்பின்னைபொருட் டெருதேழ்தழீஇக்
கோளியார் * கோவலனார் குடக்கூத்தனார் *
தாளிணைமேலணி தண்ணந்துழாயென்றே
நாளுநாள் * நைகின்றதால் என்றன்மாதரே. (௫)

மாதர்மாமண்மடந்தை பொருட்டேனமாய் *
ஆதியங்காலத் தகலிடம்கீண்டவர் *
பாதங்கள்மேலணி பைம்பொற்றுழாயென்றே
ஓதுமால் * எய்தின ளென்றன்மடந்தையே. (௬)

மடந்தையை வண்கமலத்திருமாதினை *
தடங்கொள்தார்மார்பினில்வைத்தவர் தாளின்மேல் *
வடங்கொள்பூந்தண்ணந் துழாய்மலர்க்கேயிவள்
மடங்குமால் * வாணுதலீரென் மடக்கொம்பே. (௭)

கொம்புபோல்சீதைபொருட்டிலங்கைநகர் *
அம்பெரியுய்த்தவர் தாளிணைமேலணி *
வம்பவிழ்தண்ணந் துழாய்மலர்க்கேயிவள்
நம்புமால் * நானிதற் கென்செய்கேன்நங்கைமீர். (௮)

நங்கைமீர்நீரும் ஓர்பெண்பெற்றுநல்கினீர் *
எங்ஙனேசொல்லுகேன் யான்பெற்றவேழையை *
சங்கென்னும்சக்கரமென்னும் துழாயென்னும் *
இங்ஙனேசொல்லு மிராப்பகலென்செய்கேன். (௯)

என்செய்கேனென்னுடைப் பேதையென்கோமளம் *
என்சொல்லு மென்வசமுமல்லள்நங்கைமீர் *
மின்செய்பூண்மார்பினன் கண்ணன்கழல்துழாய் *
பொன்செய்பூண் மென்முலைக்கென்றுமெலியுமே. (௧0)

⁂ மெலியுநோய்தீர்க்கும் நங்கண்ணன்கழல்கள்மேல் *
மலிபுகழ்வண்குருகூர்ச் சடகோபன்சொல் *
ஒலிபுகழாயிரத் திப்பத்தும்வல்லவர் *
மலிபுகழ்வானவர்க்காவர் நற்கோவையே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

பாலரைப்போற்சீழ்கிப் பரனளவில்வேட்கையால்
காலத்தாற்றேசத்தாற் கைகழிந்த—சால
அரிதானபோகத்தி லாசையுற்றுநைந்தான்
குருகூரில்வந்துதித்தகோ. (௩௨)

## ௩-வது, கோவை.

ஆழ்வார் அர்த்தித்தபடியே ஏககாலத்தில் அவதாரங்களையெல்லாங்காட்ட ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண் - தக்கேசி, தாளம் - ஏழொத்து.
ஆரபிராகம் - ஆதிதாளம்.

கோவைவாயாள்பொருட் டேற்றினெருத்தமிறுத்தாய் * மதிளிலங்கைக்
கோவைவீயச்சிலைகுனித்தாய் குலநல்யானைமருப்பொசித்தாய் *
பூவைவீயாநீர்தூவிப் போதால்வணங்கேனேலும் * நின்
பூவைவீயாமேனிக்குப் பூசும்சாந்தென்னெஞ்சமே. (க)

பூசும்சாந்தென்னெஞ்சமே புனையும்கண்ணியெனதுடைய *
வாசகம்செய்மாலையே வான்பட்டாடையுமஃதே *
தேசமானவணிகலனு மென்கைகூப்புச்செய்கையே *
ஈசன்ஞாலமுண்டுமிழ்ந்த எந்தையேகமூர்த்திக்கே. (உ)

ஏகமூர்த்தியிருமூர்த்தி மூன்றுமூர்த்திபலமூர்த்தி
யாகி * ஐந்துபூதமா யிரண்டுசுடராயருவாகி *
நாகமேறிநடுக்கடலுள் துயின்றநாராயணனே * உன்
ஆகமுற்றுமகத்தடக்கி யாவியல்லல்மாய்த்ததே. (௩)

மாய்த்தலெண்ணிவாய்முலைதந்த மாயப்பேயுயிர்
மாய்த்த * ஆயமாயனே வாமநனேமாதவா *
பூத்தண்மாலைகொண் டுன்னைப்போதால்வணங்கேனேலும் * நின்
பூத்தண்மாலைநெடுமுடிக்குப் புனையும்கண்ணியெனதுயிரே. (ச)

கண்ணியெனதுயிர் காதல்கனகச்சோதிமுடிமுதலா
எண்ணில்பல்கலன்களு மேலுமாடையுமஃதே *
நண்ணிமூவுலகும் நவிற்றும்கீர்த்தியுமஃதே *
கண்ணனெம்பிரானெம்மான் காலசக்கரத்தானுக்கே. (ரு)

காலசக்கரத்தொடு வெண்சங்கம்கையேந்தினாய் *
ஞாலமுற்றுமுண்டுமிழ்ந்த நாராயணனேயென்றென்று *
ஓலமிட்டுநானழைத்தா லொன்றும்வாராயாகிலும் *
கோலமாமென்சென்னிக் குன்கமலமன்னகுரைகழலே. (சு)

குரைகழல்கள்நீட்டி மண்கொண்டகோலவாமனா
குரைகழல்கைகூப்புவார்கள் கூடநின்றமாயனே *
விரைகொள்பூவும்நீரும்கொண் டேத்தமாட்டேனேலும் * உன்
உரைகொள்சோதித்திருவுருவ மென்னதாவிமேலதே. (எ)

என்னதாவிமேலையா யேர்கொளேழுலகமும் *
துன்னிமுற்றுமாகிநின்ற சோதிஞானமூர்த்தியாய் *
உன்னதென்னதாவியு மென்னதுன்னதாவியும் *
இன்னவண்ணமேநின்றா யென்றுரைக்கவல்லேனே. (அ)

உரைக்கவல்லேனல்லே னுன்னுலப்பில்கீர்த்திவெள்ளத்தின் *
கரைக்கணென்றுசெல்வன்நான் † காதல்மையலேறினேன் *
புரைப்பிலாதபரம்பரனே பொய்யிலாதபரஞ்சுடரே *
இரைத்துநல்லமேன்மக்களேத்த யானுமேத்தினேன். (௯)

யானுமேத்தியேழுலகும் முற்றுமேத்தி * பின்னையும்
தானுமேத்திலும் தன்னையேத்தவேத்தவெங்கெய்தும் *
தேனும்பாலுங்கன்னலு மமுதுமாகித்தித்திப்ப *
யானுமெம்பிரானையே யேத்தினேன்யானுய்வானே. (௧0)

⁂ உய்வுபாயம்மற்றின்மைதேறிக் கண்ணனொண்கழல்கள்மேல் *
செய்யதாமரைப்பழனத் தென்னன்குருகூர்ச்சடகோபன் *
பொய்யில்பாடலாயிரத்து ளிவையும்பத்தும்வல்லார்கள் *
வையம்மன்னிவீற்றிருந்து விண்ணுமாள்வர் ‡ மண்ணூடே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



கோவானவீசன் குறையெல்லாந்தீரவே
ஓவாதகாலத்து வாதிதனை—மேவிக்
கழித்தடையக்காட்டிக் கலந்தகுணமாறன்
வழுத்துதலால்வாழ்ந்ததிந்த மண். (௩௩)

---

## ௪-வது, மண்ணை.



அவதாரங்களைக்காட்டி மறைந்தபடியாலேஆழ்வார் நாயகிதன்மையை யடைந்து மோஹித்து ஸம்பந்திஸத்ருஶவஸ்துக்களைப் பார்த்துக் கதறுகிறாளென்று தாய்சொல்லுவதாக வருளிச்செய்கிறார்.

---

அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரியவிருத்தம்.

பண் - பஞ்சமம், தாளம் - இடையொத்து.

பிலஹரிராகம் - அடதாளம்.

⁂ மண்ணையிருந்துதுழாவி வாமனன்மண்ணிதுவென்னும்
விண்ணைத்தொழுதவன் மேவுவைகுந்தமென்றுகைகாட்டும் *
கண்ணையுள்நீர்மல்கநின்று கடல்வண்ணனென்னுமன்னே ! * என்
பெண்ணைப்பெருமயல்செய்தார்க்கென்செய்கேன்பெய்வளையீரே. (௧)

---

† "கரைக்கணின்ற செல்லநான்" என்று பாடாந்தரம்; அப்போது, "கரைக்கண் - செல்ல-நின்ற-நான்" என்று அந்வயம்.

‡ "மண்ணோடே" என்றுஉரையின்பாடம்.

பெய்வளைக்கைகளைக்கூப்பிப் பிரான்கிடக்கும்கடலென்னும்
செய்யதோர்ஞாயிற்றைக்காட்டிச் சிரீதரன்மூர்த்தியீதென்னும் *
நையும்கண்ணீர்மல்கநின்று நாரணனென்னுமன்னே ! * என்
தெய்வவுருவில்சிறுமான் செய்கின்றதொன்றறியேனே. (உ)

அறியும்செந்தீயைத்தழுவி யச்சுதனென்னும், மெய்வேவாள் *
எறியும்தண்காற்றைத்தழுவி யென்னுடைக்கோவிந்தனென்னும் *
வெறிகொள்துழாய்மலர்நாறும் வினையுடையாட்டியேன்பெற்ற *
செறிவளைமுன்கைச்சிறுமான் செய்கின்றதென்கண்ணுக்கொன்றே.()

ஒன்றியதிங்களைக்காட்டி யொளிமணிவண்ணனேயென்னும் *
நின்றகுன்றத்தினைநோக்கி நெடுமாலேவாவென்றுகூவும் *
நன்றுபெய்யும்மழைகாணில் நாரணன்வந்தானென்றாலும் *
என்றினமையல்கள்செய்தா ரென்னுடைக்கோமளத்தையே. (ச)

கோமளவான்கன்றைப்புல்கிக் கோவிந்தன்மேய்த்தனவென்னும் *
போமிளநாகத்தின்பின்போ யவன்கிடக்கையீதென்னும் *
ஆமளவொன்றுமறியே னருவினையாட்டியேன்பெற்ற *
கோமளவல்லியைமாயோன் மால்செய்துசெய்கின்றகூத்தே. (ரு)

கூத்தர்குடமெடுத்தாடில் கோவிந்தனாமெனாவோடும் *
வாய்த்தகுழலோசைகேட்கில் மாயவனென்றுமையாக்கும் *
ஆய்ச்சியர்வெண்ணெய்கள்காணி லவனுண்டவெண்ணெயீதென்னும்
பேய்ச்சிமுலைசுவைத்தார்க் கென்பெண்கொடியேறியபித்தே. (சு)

ஏறியபித்தினோ டெல்லாவுலகுகண்ணன்படைப்பென்னும் *
நீறுசெவ்வேயிடக்காணில் நெடுமாலடியாரென்றோடும் *
நாறுதுழாய்மலர்காணில் நாரணன்கண்ணியீதென்னும்
தேறியும்தேறாதுமாயோன் † திறத்தனளேயித்திருவே. (எ)

திருவுடைமன்னரைக்காணில் திருமாலைக்கண்டேனேயென்னும் *
உருவுடைவண்ணங்கள்காணி லுலகளந்தானென்றுதுள்ளும் *
கருவுடைத்தேவில்களெல்லாம் கடல்வண்ணன்கோயிலேயென்னும் *
வெருவிலும்வீழ்விலு $ மோவாக் கண்ணன்கழல்கள்விரும்புமே. (அ)

விரும்பிப்பகவரைக்காணில் வியலிடமுண்டானேயென்னும் *
கரும்பெருமேகங்கள்காணில்கண்ணனென்றேறப்பறக்கும் *
பெரும்புலவாநிரைகாணில் பிரானுளனென்றுபின்செல்லும் *
அரும்பெறல்பெண்ணினைமாயோ னலற்றியயர்ப்பிக்கின்றானே. (கூ)

அயர்க்கும் § சுற்றும்பற்றிநோக்கும்அகலவேநீணோக்குக்கொள்ளும்*
வியர்க்கும்மழைக்கண்துளும்ப வெவ்வுயிர்க்கொள்ளும்மெய்சோரும்
பெயர்த்தும்கண்ணாவென்றுபேசும் பெருமானேவாவென்றுகூவும் *
மயல்பெருங்காதலென்பேதைக்கென்செய்கேன்வல்வினையேனே.(கo)

† "திறத்தினளே" என்றும் பாடம். $ "ஓவாள்" என்று உரை. § "சுற்றும்பற்றி நோக்கி" என்று ஆறாயிரப்படியின்பாடம்.

⁂ வல்வினைதீர்க்குங்கண்ணனை வண்குருகூர்ச்சடகோபன் *
சொல்வினையால்சொன்னபாட லாயிரத்துள்ளிவைபத்தும் *
நல்வினையென்றுகற்பார்கள் ‡ நலனிடைவைகுந்தம்நண்ணி *
தொல்வினைதீரவெல்லாரும் தொழுதெழவீற்றிருப்பாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



மண்ணுலகின்முன்கலந்து மாற்பிரிகையான்மாறன்
பெண்ணிலைமையாய்க்காதற் பித்தேறி—எண்ணிடின்முன்
போலிமுதலான பொருளையவனுய்நினைந்து
மேல்விழுந்தான்மையறனில் வீறு. (௩௪)

## ரு-வது, வீற்றிருந்து.



அந்த மோஹந்தீரும்படி ஸர்வேஸ்வரன் நித்யஸூரிகளோடே கூடஸாந்நித்யம் பண்ணுகையில் மங்களாஶாஸநம்பண்ணி ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண் - இந்தளம்-குறிஞ்சி, தாளம்-ஒன்பதொத்து.

தோடிராகம் - ரூபகதாளம்.

⁂ வீற்றிருந்தேழுலகும் தனிக்கோல்செல்ல வீவில்சீர் *
ஆற்றல்மிக்காளுமம்மானை வெம்மாபிளந்தான்றன்னை *.
போற்றியென்றேகைகளாரத் தொழுது சொல்மாலைகள் *
ஏற்றநோற்றேற் கினி யென்னகுறையெழுமையுமே. (க)

மையகண்ணாள் மலர் மேலுறைவாளுறைமார்பினன் *
செய்யகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்றன்னை *
மொய்யசொல்லாலிசைமாலைக ளேத்தி யுள்ளப்பெற்றேன் *
வெய்யநோய்கள்முழுதும் வியன்ஞாலத்துவீயவே. (உ)

வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தநம்மச்சுதன் *
வீவில்சீரன்மலர்க்கண்ணன் விண்ணோர்பெருமான்றன்னை *
வீவில்காலமிசைமாலைக ளேத்தி மேவப்பெற்றேன் *
வீவிலின்பம்மிக எல்லைநிகழ்ந்தனன்மேவியே ¶. (௩)

மேவிநின்றுதொழுவார் வினைபோகமேவும்பிரான் *
தூவியம்புள்ளுடைப்பா னடலாழியம்மான்றன்னை *
நாவியலாலிசைமாலைகளேத்தி நண்ணப்பெற்றேன் *
ஆவியென்னாவியை யானறியேன்செய்தவாற்றையே. (௪)

‡ "நலனுடை" என்றுபாடாந்தரம். ¶ "நிகழ்ந்தனமேவியே" என்றுஉரை.

ஆற்றநல்லவகைகாட்டுமம்மானை * அமரர்தம்
ஏற்றையெல்லாப்பொருளும்விரித்தானை யெம்மான்றன்னை *
மாற்றமாலைபுனைந்தேத்தி நாளும்மகிழ்வெய்தினேன் *
காற்றில்முன்னம்கடுகி வினைநோய்கள்கரியவே. (ரு)

கரியமேனிமிசை வெளியநீறுசிறிதேயிடும் *
பெரியகோலத்தடங்கண்ணன் விண்ணோர்பெருமான்றன்னை *
உரியசொல்லாலிசை மாலைகளேத்தி யுள்ளப்பெற்றேற்கு - *
அரியதுண்டோவெனக்கின்றுதொட்டுமினியென்றுமே. (சு)

என்றுமொன்றாகியொத்தாரும்மிக்கார்களும் * தன்றனக்
கின்றிநின்றானை யெல்லாவுலகுமுடையான்றன்னை *
குன்றமொன்றால்மழைகாத்தபிரானைச் சொன்மாலைகள் *
நன்றுசூட்டும்விதியெய்தின மென்னகுறைநமக்கே. (எ)

நமக்கும்பூவின்மிசைநங்கைக்கு மின்பனை * ஞாலத்தார்
தமக்கும்வானத்தவர்க்கும்பெருமானை * தண்டாமரை
சுமக்கும்பாதப்பெருமானைச் சொன்மாலைகள் * சொல்லுமா
றமைக்கவல்லேற் கினியாவர்நிகரகல்வானத்தே. (அ)

வானத்தும்வானத்துள்ளும்பரும் மண்ணுள்ளும்மண்ணின்கீழ்த்
தானத்தும் * எண்டிசையும்தவிராதுநின்றான்றன்னை *
கூனற்சங்கத்தடக்கையவனைக் குடமாடியைவானக்
கோனை * கவிசொல்லவல்லேற் கினிமாறுண்டே. (கூ)

உண்டுமுமிழ்ந்தும்கடந்துமிடந்தும் கிடந்துநின்றும் *
கொண்டகோலத்தொடுவீற்றிருந்து மணங்கூடியும் *
கண்டவாற்றால் தனதேயுலகெனநின்றான்றன்னை *
வண்டமிழ்நூற்கநோற்றே னடியார்க்கின்பமாரியே. (க0)

‡‡ மாரிமாறாததண்ணம்மலை வேங்கடத்தண்ணலை *
வாரிமாறாதபைம்பூம்பொழில்சூழ் குருகூர்நகர் *
காரிமாறன்சடகோபன் சொல்லாயிரத்திப்பத்தால் *
† வேரிமாறாதபூமேலிருப்பாள் வினைதீர்க்குமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



வீற்றிருக்குமால்விண்ணில் மிக்கமயல்தன்னை
ஆற்றுதற்காத்தன்பெருமை யானதெல்லாம்—தோற்றவந்து
நன்றுகலக்கப்போற்றி நன்குகந்துவீறுரைத்தான்
சென்றதுயர்மாறன் தீர்ந்து. (ருரு)

---

† வேரி - பரிமளம்.

## ௬-வது, தீர்ப்பாரை.



*ஸாந்நித்யம்பண்ணின ஈஶ்வரன் அந்தர்ஹிதனாகையாலே ஆழ்வார் மோஹிக்க, இதரதேவதாவேஶமென்று க்ஷுத்ரதேவதாராதநம்பண்ணுவதை பரிஹரித்துபகவந்நாமஸங்கீர்த்தநமும் ஸ்ரீவைஷ்ணவ ஸ்ரீபாததூள்களும் இதற்கு பரிஹாரமென்று ஆப்தஸகி சொல்ல அப்படியேபரிஹாரம்பண்ண மோஹந் தீர்ந்ததை அருளிச்செய்கிறார்.*



*கலித்துறை பண்-சீகாமரம்,பழந்தக்கராகம்,தாளம்-இடையொத்து.*

பந்துவராளிராகம்-அடதாளம்.

⁂ தீர்ப்பாரையாமினி யெங்ஙனம்நாடுதுமன்னைமீர் *
ஓர்ப்பாலிவ்வொண்ணுத லுற்ற நன்னோயிதுதேறினோம் *
போர்ப்பாகுதான்செய் தன்றைவரைவெல்வித்த * மாயப்போர்த்
தேர்ப்பாகனார்க் கிவள்சிந்தைதுழாய்த்திசைக்கின்றதே. (௧)

திசைக்கின்றதேயிவள்நோ யிதுமிக்கபெருந்தெய்வம் *
இசைப்பின்றி நீரணங்காடு மிளந்தெய்வமன்றிது *
திசைப்பின்றியே சங்குசக்கரமென்றிவள்கேட்க * நீர்
இசைக்கிற்றிராகில் நன்றேயில்பெறுமிதுகாண்மினே. (௨)

இதுகாண்மினன்னைமீ ரிக்கட்டுவிச்சிசொற்கொண்டு * நீர்
எதுவானும்செய் தங்கோர்கள்ளுமிறைச்சியும்தூவேல்மின் *
மதுவார்துழாய்முடி மாயப்பிரான்கழல்வாழ்த்தினால் *
அதுவேயிவளுற்றநோய்க்கு மருமருந்தாகுமே. (௩)

மருந்தாகுமென் றங்கோர்மாயவலவைசொற்கொண்டு * நீர்
கருஞ்சோறும்மற்றைச் செஞ்சோறும்களனிழைத்தென்பயன் *
ஒருங்காகவே யுலகேழும்விழுங்கியுமிழ்ந்திட்ட *
பெருந்தேவன்பேர்சொல்லகிற்கி லிவளைப்பெறுதிரே. (௪)

இவளைப்பெறும்பரி சிவ்வணங்காடுதலன்றந்தோ ! *
குவளைத்தடங்கண்ணும் கோவைச்செவ்வாயும்பயந்தனள் *
கவளக்கடாக்களிறட்டபிரான் திருநாமத்தால் *
தவளப்பொடிக்கொண்டு நீரிட்டிடுமின்தணியுமே. (௫)

தணியும் ‡ பொழுதில்லை நீரணங்காடுதிரன்னைமீர் *
பிணியுமொழிகின்றதில்லைப் பெருகுமிதுவல்லால் *
மணியிலணிநிறமாயன்தமரடி நீறுகொண்டு
அணியமுயலில் * மற்றில்லைகண்டீரிவ்வணங்குக்கே. (௬)

‡ "பொழுதின்றி" என்று உரை.

அணங்குக்கருமருந்தென் றங்கோராடும்கள்ளும்பராய் *
¶ சுணங்கையெறிந்து நுந்தோள்குலைக்கப்படுமன்னைமீர் *
உணங்கல்கெடக் கழுதையுதடாட்டம்கண்டென்பயன் *
வணங்கீர்கள் மாயப்பிரான்தமர்வேதம்வல்லாரையே. (எ)
வேதம்வல்லார்களைக்கொண்டு விண்ணோர்பெருமான்திருப்
பாதம்பணிந்து * இவள்நோயிதுதீர்த்துக்கொள்ளாதுபோய் *
ஏதம்பறைந்தல்லசெய்து கள்ளூடுகலாய்த்தூய் *
கீதமுழவிட்டு நீரணங்காடுதல்கீழ்மையே. (அ)
கீழ்மையினாலங்கோர் கீழ்மகனிட்டமுழவின்கீழ்
நாழ்மைபலசொல்லி நீரணங்காடும்பொய்காண்கிலேன் *
ஏழ்மைப்பிறப்புக்குஞ்சேம மிந்நோய்க்குமீதேமருந்து - *
ஊழ்மையில்கண்ணபிரான் கழல்வாழ்த்துமினுன்னித்தே. (கூ)
உன்னித்துமற்றொருதெய்வம்தொழாளவனையல்லால் *
நும்மிச்சைசொல்லி நும்தோள்குலைக்கப்படுமன்னைமீர் *
மன்னப்படும்மறைவாணனை வண்டுவராபதி
மன்னனை * ஏத்துமி னேத்துதலும்தொழுதாடுமே. (க0)
⁂ தொழுதாடித்தூமணிவண்ணனுக்காட்செய்து நோய்தீர்ந்த *
வழுவாததொல்புகழ் வண்குருகூர்ச்சடகோபன் * சொல்
வழுவாதவாயிரத்துள் ளிவைபத்துவெறிகளும் *
தொழுதாடிப்பாடவல்லார் துக்கசீலமிலர்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



தீர்ப்பாரிலாதமயல் தீரக்கலந்துமால்
ஓர்ப்பாதுமின்றி யுடன்பிரிய—நேர்க்க
அறிவழிந்துற்றுரு மறக்கலங்கப்பேர்கேட்
டறிவுபெற்றான்மாறன் சீலம். (ஙகூ)

## எ-வது, சீலமில்லா.



மோஹந்தெளிந்து திவ்யமங்களவிக்ரஹத்தைக் காட்டவேண்டுமென்று அஹோராத்ரம் விழித்தமையை அருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண்-பழந்தக்கராகம், தாளம்-ஏழொத்து.
கண்டாராகம் - ஆதிதாளம்.

⁂ சீலமில்லாச்சிறியனேலும் செய்வினையோபெரிதால் *
ஞாலமுண்டாய்ஞானமூர்த்தி நாராயணாவென்றென்று *
காலந்தோறும்யானிருந்து கைதலைபூசலிட்டால் *
கோலமேனிகாணவாராய் கூவியும்கொள்ளாயே. (க)

¶ "துணங்கை" என்று உரையில் பாடாந்தரம்.

கொள்ளமாளாவின்பவெள்ளம் கோதிலதந்திடும் * என்
வள்ளலேயோ வையங்கொண்டவாமனாவோவென்றென்று *
நள்ளிராவும்நன்பகலும் நானிருந்தோலமிட்டால் *
கள்ளமாயாவுன்னை யென்கண்காணவந்தீயாயே. (௨)

ஈவிலாததீவினைகளெத்தனைசெய்தனன்கொல் *
தாவிவையங்கொண்டவெந்தாய் தாமோதராவென்றென்று *
கூவிக்கூவிநெஞ்சுருகிக் கண்பனிசோரநின்றால் *
பாவிநீயென்றொன்றுசொல்லாய் பாவியேன்காணவந்தே. (௩)

காணவந்தென்கண்முகப்பே தாமரைக்கண்பிறழ *
ஆணிசெம்பொன்மேனியெந்தாய் நின்றருளாயென்றென்று *
நாணமில்லாச்சிறுதகையேன் நானிங்கலற்றுவதென் ? *
பேணிவானோர்காணமாட்டாப் பீடுடையப்பனையே. (௪)

அப்பனேயடலாழியானே ஆழ்கடலைக்கடந்த
துப்பனே * உன்தோள்கள்நான்கும் கண்டிடக்கூடுங்கொலென்று *
எப்பொழுதும்கண்ணீர்கொண் டாவிதுவர்ந்துவர்ந்து *
இப்பொழுதேவந்திடாயென் றேழையேன்நோக்குவனே. (௫)

நோக்கிநோக்கியுன்னைக்காண்பான் யானெனதாவியுள்ளே *
நாக்குநீள்வன், ஞானமில்லை நாடோறுமென்னுடைய *
ஆக்கையுள்ளுமாவியுள்ளு மல்லபுறத்தினுள்ளும் *
நீக்கமின்றியெங்கும்நின்றாய் நின்னையறிந்தறிந்தே. (௬)

அறிந்தறிந்துதேறித்தேறி யானெனதாவியுள்ளே *
நிறைந்தஞானமூர்த்தியாயை நின்மலமாகவைத்து *
பிறந்தும்செத்தும்நின்றிடரும் பேதைமைதீர்ந்தொழிந்தேன் *
நறுந்துழாயின்கண்ணியம்மா நானுன்னைக்கண்டுகொண்டே. (௭)

கண்டுகொண்டென்கைகளார நின்திருப்பாதங்கள்மேல் *
எண்டிசையுமுள்ளபூக்கொண் டேத்தியுகந்துகந்து *
தொண்டரோங்கள்பாடியாடச் சூழ்கடல்ஞாலத்துள்ளே *
வண்டுழாயின்கண்ணிவேந்தே வந்திடகில்லாயே. (௮)

இடகிலேனொன்றட்டகில்லேன் ஐம்புலன்வெல்லகில்லேன் *
கடவனாகிக்காலந்தோறும்பூப்பறித்தேத்தகில்லேன் *
மடவன்நெஞ்சம்காதல்கூர வல்வினையேனயர்ப்பாய் *
தடவுகின்றேனெங்குக்காண்பன் சக்கரத்தண்ணலையே. (௯)

சக்கரத்தண்ணலேயென்று தாழ்ந்துகண்ணீர்ததும்ப *
பக்கம்நோக்கிநின்றலர்ந்தேன் பாவியேன்காண்கின்றிலேன் *
மிக்கஞானமூர்த்தியாய வேதவிளக்கினை * என்
தக்கஞானக்கண்களாலே கண்டுதழுவுவனே. (௧௦)

⁂ தழுவிநின்றகாதல்தன்னால் தாமரைக்கண்ணன்றன்னை *
குழுவுமாடத்தென்குருகூர் மாறன்சடகோபன் * சொல்
வழுவிலாதவொண்தமிழ்க ளாயிரத்துளிப்பத்தும் *
தழுவப்பாடியாடவல்லார் வைகுந்தமேறுவரே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



சீலமிகுகண்ணன் றிருநாமத்தா லுணர்ந்து
மேலவன்றன்மேனிகண்டு மேவுதற்குச்—சால
வருந்தியிரவும்பகலு மாறுமற்கூப்பிட்
டிருந்தனனே தென்குருகூரேறு. (௩எ)

---

## அ-வது, ஏறாளும்.



கூப்பிட்டும் வாராதபடியாலே இந்தஸர்வேஶ்வரனுக்கு உபேக்ஷாவிஷ யமான ஆத்மாத்மீயங்கள் தமக்குவேண்டாமென் றருளிச்செய்கிறார்.

---

கலிவிருத்தம், நாலடித்தாழிசையுமாம்;
பண் - நாட்டம், தாளம் - ஏழொத்து.
ஸாரங்கராகம்-அடதாளம்.

⁂ ஏறாளுமிறையோனும் திசைமுகனும்திருமகளும் *
கூறாளுந்தனியுடம்பன் குலங்குலமாவசுரர்களை *
நீறாகும்படியாக நிருமித்துப்படைதொட்ட *
மாறாளன்கவராத மணிமாமைகுறைவிலமே. (க)

மணிமாமைகுறைவில்லா மலர்மாதருறைமார்வன் *
அணிமானத்தடவரைத்தோ ளடலாழித்தடக்கையன் *
பணிமானம்பிழையாமே யடியேனைப்பணிகொண்ட *
மணிமாயன்கவராத மடநெஞ்சால்குறைவிலமே. (உ)

மடநெஞ்சால்குறைவில்லா மகள்தாய்செய்தொருபேய்ச்சி *
விடநஞ்சமுலைசுவைத்த மிகுஞானச்சிறுகுழவி *
படநாகத்தணைக்கிடந்த பருவரைத்தோள்பரம்புருடன் *
நெடுமாயன்கவராத நிறைவினால்குறைவிலமே. (௩)

நிறைவினால்குறைவில்லா நெடும்பணைத்தோள்மடப்பின்னை *
பொறையினால்முலையணைவான் பொருவிடையேழடர்த்துகந்த *
கறையினார் துவருடுக்கை கடையாவின்கழிகோல்கை *
சறையினார்கவராத தளிர்நிறத்தால்குறைவிலமே. (௪)

தளிர்நிறத்தால்குறைவில்லாத் தனிச்சிறையில்விளப்புற்ற *
கிளிமொழியாள்காரணமாக் கிளரரக்கன்நகரெரித்த *
களிமலர்த்துழாயலங்கல் கமழ்முடியன், கடல்ஞாலத்து *
அளிமிக்கான்கவராத அறிவினால்குறைவிலமே. (௫)

அறிவினால்குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய *
நெறியெல்லாமெடுத்துரைத்த நிறைஞானத்தொருமூர்த்தி *
குறியமாணுருவாகிக் கொடுங்கோளால்நிலங்கொண்ட *
கிறியம்மான்கவராத கிளரொளியால்குறைவிலமே. (௬)

கிளரொளியால்குறைவில்லா அரியுருவாய்க்கிளர்ந்தெழுந்து *
கிளரொளியவிரணியன தகல்மார்பம்கிழித்துகந்த *
வளரொளியகனலாழி வலம்புரியன் * மணிநீல
வளரொளியான்கவராத வரிவளையால்குறைவிலமே. (௭)

வரிவளையால்குறைவில்லாப் பெருமுழக்காலடங்காரை *
எரியழலம்புகவூதி யிருநிலமுன் துயர்தவிர்த்த *
தெரிவரியசிவன்பிரம னமரர்கோன்பணிந்தேத்தும் *
விரிபுகழான்கவராத மேகலையால்குறைவிலமே. (௮)

மேகலையால்குறைவில்லா மெலிவுற்றவகலல்குல் *
போகமகள்புகழ்த்தந்தை விறல்வாணன் புயம்துணித்து *
நாகமிசைத்துயில்வான்போ லுலகெல்லாம்நன்கொடுங்க *
யோகணைவான்கவராத வுடம்பினால்குறைவிலமே. (௯)

உடம்பினால்குறைவில்லா வுயிர்பிரிந்தமலைத்துண்டம் *
கிடந்தனபோல்துணிபலவா வசுரர்குழாம்துணித்துகந்த *
தடம்புனலசடைமுடியன் தனியொருகூறமர்ந்துறையும் *
உடம்புடையான்கவராத வுயிரினால்குறைவிலமே. (௰)

⁂ உயிரினால்குறைவில்லா வுலகேழ்தன்னுள்ளொடுக்கி *
தயிர்வெண்ணெயுண்டானைத் தடங்குருகூர்ச்சடகோபன் *
செயிரில்சொல்லிசைமாலை யாயிரத்துளிப்பத்தால் *
வயிரம்சேர்பிறப்பறுத்து வைகுந்தம்நண்ணுவரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



ஏறுதிருவுடைய வீசனுகப்புக்கு
வேறுபடிலென்னுடைமை மிக்கவுயிர்—தேறுங்கால்
என்றனக்கும்வேண்டா வெனுமாறன்றாளைநெஞ்சே
நந்தமக்குப்பேறாக நண்ணு. (௩௮)

## ௯-வது, நண்ணாதார்.

உன் விஶ்லேஷமானாலும் ஸஹிக்கிறேமொழிய உன்னிடத்தில் விமுகரான ஜீவரைப் பார்க்கமாட்டோம் இந்ததேஹம் விடும்படிசெய்ய வேண்டுமென்று சுவாமியைப்ப்ரார்த்தித்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், நாலடித்தாழிசையுமாம்;
பண் - நட்டபாஷை, தாளம் — இடையொத்து.
தந்நியாசிராகம் - ருபகதாளம்.

நண்ணாதார்முறுவலிப்ப நல்லுற்றார்கரைந்தேங்க *
எண்ணாராத்துயர்விளைக்கு மிவையென்னவுலகியற்கை *
கண்ணாளாகடல்கடைந்தா யுனகழற்கேவரும்பரிசு *
தண்ணாவா தடியேனைப் பணிகண்டாய்சாமாறே. (க)

சாமாறும்கெடுமாறும் தமருற்றார்தலைத்தலைப்பெய்து *
ஏமாறிக்கிடந்தலற்று மிவையென்னவுலகியற்கை *
ஆமாறொன்றறியேன்நா னரவணையாயம்மானே *
கூமாறேவிரைகண்டா யடியேனைக்குறிக்கொண்டே. (உ)

கொண்டாட்டும்குலம்புனைவும் தமருற்றார்விழுநிதியும் *
வண்டார்பூங்குழலாளும் மனையொழியவுயிர்மாய்தல் *
கண்டாற்றேனுலகியற்கை கடல்வண்ணா * அடியேனைப்
பண்டேபோல்கருதாதுன் னடிக்கேகூய்ப்பணிகொள்ளே. (ங)

கொள்ளென்றுகிளர்ந்தெழுந்த பெருஞ்செல்வம்நெருப்பாக *
கொள்ளென்றுதமமூடு மிவையென்னவுலகியற்கை *
வள்ளலேமணிவண்ணா உனகழற்கேவரும்பரிசு *
வள்ளல்செய்தடியேனை யுனதருளால்வாங்காயே. (ச)

வாங்குநீர்மலருலகில் நிற்பனவும்திரிவனவும் *
ஆங்குயிர்கள்பிறப்பிறப்புப் பிணிமூப்பால்தகர்ப்புண்ணும் *
ஈங்கிதன்மேல்வெந்நரக மிவையென்னவுலகியற்கை *
வாங்கெனைநீமணிவண்ணா அடியேனைமறுக்கேலே. (ரு)

மறுக்கிவல்வலைப்படுத்திக் குமைத்திட்டுக்கொன்றுண்பர் *
அறப்பொருளையறிந்தோரா ரிவையென்னவுலகியற்கை *
வெறித்துளவமுடியானே வினையேனையுனக்கடிமை
அறக்கொண்டாய் * இனியென்னாரமுதே கூயருளாயே. (சு)

ஆயேயிவ்வுலகத்து நிற்பனவும்திரிவனவும் *
நீயேமற்றொருபொருளு மின்றிநீநின்றமையால் *
நோயேமூப்பிறப்பிறப்புப் பிணியேயென்றிவையொழிய *
கூயேகொள்ளடியேனைக் கொடுவுலகம்காட்டேலே. (எ)

காட்டிநீகரந்துமிழும் நிலநீர்தீவிசும்புகால் *
ஈட்டிநீவைத்தமைத்த இமையோர்வாழ்தனிமுட்டை *
§ கோட்டையினில்கழித்தென்னை யுன்கொழுஞ்சோதியுயரத்து *
கூட்டரியதிருவடிக்க ளெஞ்ஞான்றுகூட்டுதியே. (அ)

கூட்டுதிநின் குரைகழல்க ளிமையோரும்தொழாவகைசெய்து - *
ஆட்டுதிநீயரவணையா யடியேனுமதுவறிவன் † *
வேட்கையெல்லாம்விடுத்தென்னை யுன்திருவடியேசுமந்துழல *
கூட்டரியதிருவடிக்கண் கூட்டினைநான்கண்டேனே. (௯)

கண்டுகேட்டுற்றுமோந்துண்டுழலும் ஐங்கருவி
கண்டவின்பம் * தெரிவரிய வளவில்லாச்சிற்றின்பம் *
ஒண்டொடியாள்திருமகளும் நீயுமேநிலாநிற்ப *
கண்டசதிர்கண்டொழிந்தே னடைந்தேனுன்திருவடியே. (௧0)

⁂ திருவடியைநாரணனைக் கேசவனைப்பரஞ்சுடரை *
திருவடிசேர்வதுகருதிச் செழுங்குருகூர்ச்சடகோபன் *
திருவடிமேலுரைத்ததமி ழாயிரத்துளிப்பத்தும் *
திருவடியேயடைவிக்கும் திருவடிசேர்ந்தொன்றுமினே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



நண்ணாதுமாலடியை நானிலத்தேவல்வினையால்
எண்ணாராத்துன்பமுறு மிவ்வுயிர்கள்—தண்ணிமையைக்
கண்டிருக்க மாட்டாமற் கண்கலங்குமாறனருள்
உண்டுநமக்குற்றதுணை யொன்று. (௩௯)

## ௧0-வது, ஒன்றும்.



பின்னும் தேவதாந்தரபரரான சேதனரிடத்தில் க்ருபையாலே ஸ்ரீமந்நாராயணனே பரஞைகயாலே தேவதாந்தரத்தை விட்டு ஜகத்காரணபூதனை ஸர்வேஶ்வரனை யாஶ்ரயியுங்கோளென்றுபரோபதேசம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண்-நாட்டம், தாளம்-ஏழொத்து.
சுருட்டிராகம் - ரூபகதாளம்.

⁂ ஒன்றுந்தேவுமுலகுமுயிரும்மற்றும் யாதுமில்லா
அன்று * நான்முகன்றன்னொடு தேவருலகோடுயிர்படைத்தான் *
குன்றம்போல்மணிமாடநீடு திருக்குருகூரதனுள் *
நின்றவாதிப்பிரான்நிற்க ‡ மற்றைத்தெய்வம்நாடுதிரே. (௧)

§ "கோட்டையினை" என்று உரை. † "அஃதறிவன்" என்றும் சொல்லுவர். ‡ "மற்றெறத்தெய்வம்" என்றும் காண்கிறது.

நாடிநீர்வணங்குந்தெய்வமு மும்மையுமுன்படைத்தான் *
வீடில்சீர்ப்புகழாதிப்பிரா னவன்மேவியுறைகோயில் *
மாடமாளிகைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
பாடியாடிப்பரவிச்சென்மின்கள் பல்லுலகீர்பரந்தே. (௨)

பரந்ததெய்வமும்பல்லுலகும்படைத் தன்றுடனேவிழுங்கி *
கரந்துமிழ்ந்துகடந்திடந்தது கண்டும்தெளியகில்லீர் *
சிரங்களாலமரர்வணங்கும் திருக்குருகூரதனுள் *
பரன்திறமன்றிப்பல்லுலகீர் தெய்வம்மற்றில்லைபேசுமினே. (௩)

பேசநின்றசிவனுக்கும் பிரமன்றனக்கும்பிறர்க்கும்
நாயகனவனே * கபாலநன்மோக்கத்துக்கண்டுகொள்மின் *
தேசமாமதிள்சூழ்ந்தழகாய திருக்குருகூரதனுள் *
ஈசன்பாலோரவம்பறைத லென்னாவதிலிங்கியர்க்கே. (௪)

‡‡ இலிங்கத்திட்டபுராணத்தீரும் சமணரும்சாக்கியரும் *
§ வலிந்துவாதுசெய்வீர்களும் மற்றுநுந்தெய்வமுமாகிநின்றான் *
மலிந்துசெந்நெல்கவரிவீசும் திருக்குருகூரதனுள் *
பொலிந்துநின்றபிரான்கண்டீரொன்றும் பொய்யில்லைபோற்றுமினே.

போற்றிமற்றோர்தெய்வம் பேணப்புறத்திட்டும்மையின்னே *
தேற்றிவைத்ததெல்லீரும்வீடுபெற்று லுலகில்லையென்றே *
சேற்றில்செந்நெல்கமலமோங்கு திருக்குருகூரதனுள் *
ஆற்றவல்லவன்மாயம்கண்டீ ரதறிந்தறிந்தோடுமினே. (௬)

ஓடியோடிப்பலபிறப்பும்பிறந்து மற்றோர்தெய்வம் *
பாடியாடிப்பணிந்து பல்படிகால்வழியேறிக்கண்டீர் *
கூடிவானவரேத்தநின்ற திருக்குருகூரதனுள் *
ஆடுபுட்கொடியாதிமூர்த்திக் கடிமைபுகுவதுவே, (௭)

புக்கடிமையினால்தன்னைக்கண்ட மார்க்கண்டேயனவனை *
நக்கபிரானுமன்றுய்யக்கொண்டது நாராயணனருளே *
கொக்கலர்தடந்தாழைவேலித் திருக்குருகூரதனுள் *
மிக்கவாதிப்பிரான்நிற்க மற்றைத்தெய்வம்விளம்புதிரே. (௮)

விளம்புமாறுசமயமு மவையாகியும்மற்றும்தன்பால் *
அளந்துகாண்டற்கரியனாகிய வாதிப்பிரானமரும் *
வளங்கொள்தண்பணைசூழ்ந்தழகாய திருக்குருகூரதனை *
உளங்கொள்ஞானத்துவைம்மி னும்மையுய்யக்கொண்டுபோகுறிலே.

உறுவதாவதெத்தேவுமெவ்வுலகங்களும் மற்றும்தன்பால் *
மறுவில்மூர்த்தியோடொத் தித்தனையும்நின்றவண்ணம்நிற்கவே *
செறுவில்செந்நெல்கரும்பொடோங்கு திருக்குருகூரதனுள் *
குறியமாணுருவாகிய நீள் குடக்கூத்தனுக்காட்செய்வதே. (௧0)

§ "மலிந்து" என்று உரையின்பாடம்,

⁂ ஆட்செய்தாழிப்பிரானைச்சேர்ந்தவன் வண்குருகூர்நகரான் *
நாட்கமழ்மகிழ்மாலைமார்பினன் மாறன்சடகோபன் *
வேட்கையால்சொன்னபாட லாயிரத்துளிப்பத்தும்வல்லார் *
மீட்சியின்றிவைகுந்தமாநகர் மற்றதுகையதுவே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



நான்காம்பத்து - ஸம்பூர்ணம்.

---

ஒன்றுமிலைத்தேவிவ் வுலகம்படைத்தமால்
அன்றியெனயாரு மறியவே—நன்றாக
மூதலித்துப்பேசியருள் மொய்ம்மகிழோன்தாள்தொழவே
காதலிக்குமென்னுடைய கை. (சo)

---

# அஞ்சாம்பத்து.



## க-வது, கையார்.

பக்தியில்லாமல்பக்தன்போல் வஞ்சகோக்திகள் சொல்லிபாஹ்யவிஷயங்களிலே ப்ரவணனான வெனக்கு ஸ்வானுபவத்தை யுபகரித்தானென்று உபகார ஸ்ம்ருதி பண்ணினதையருளிச்செய்கிறார்.

---

கலித்துறை, பண் - குறிஞ்சி, தாளம் — ஏழொத்து.

முகாரிராகம் - அடதாளம்.

⁂ கையார்சக்கரத் தென் கருமாணிக்கமேயென்றென்று *
பொய்யேகைம்மைசொல்லிப் புறமேபுறமேயாடி *
மெய்யேபெற்றொழிந்தேன் விதிவாய்க்கின்று காப்பாரார் *
ஐயோ ! கண்ணபிரான் அறையோ ! இனிப்போனாலே. (க)

போனாய்மாமருதின்நடுவே யென்பொல்லாமணியே *
தேனேயின்னமுதே யென்றென்றேசில † கூத்துச்சொல்ல *
தானேயெம்பெருமா னவனென்னாகியொழிந்தான் *
வானேமாநிலமே மற்றுமுற்றுமென்னுள்ளனவே. (உ)

உள்ளனமற்றுளவாப் புறமேசிலமாயஞ்சொல்லி *
வள்ளல்மணிவண்ணனே யென்றென்றேயுன்னையும்வஞ்சிக்கும் *
கள்ளமனம்தவிர்ந்தேயுன்னைக் கண்டுகொண்டுய்ந்தொழிந்தேன் *
வெள்ளத்தணைக்கிடந்தா யினியுன்னைவிட்டென்கொள்வனே. (ஙு)

---

† "கூற்றுச்சொல்ல" என்று உரை. "கூத்துச்செல்ல" என்று பாடாந்தரம்.

என்கொள்வனுன்னைவிட்டென்னும் வாசகங்கள்சொல்லியும் *
வன்கள்வனேன்மனத்தைவலித்துக் கண்ணநீர்கரந்து *
நின்கணெருங்கவைத்தே யெனதாவியைநீக்ககில்லேன் *
என்கண்மலினமறுத் தென்னைக்கூவியருளாய்கண்ணனே. (ச)

கண்ணபிரானை விண்ணோர்கருமாணிக்கத்தையமுதை *
நண்ணியும்நண்ணகில்லேன் நடுவேயோருடம்பிலிட்டு *
திண்ணமழுந்தக்கட்டிப் பலசெய்வினைவன்கயிற்றால் *
புண்ணைமறையவரிந் தென்னைப்போரவைத்தாய்புறமே. (ரு)

புறமறக்கட்டிக்கொண் டிருவல்வினையார்குமைக்கும் *
முறைமுறையாக்கைபுகலொழியக் கண்டுகொண்டொழிந்தேன் *
நிறமுடைநால்தடந்தோள் செய்யவாய்செய்யதாமரைக்கண் *
அறமுயலாழியங்கைக் கருமேனியம்மான்றன்னையே. (சு)

அம்மானாழிப்பிரா னவனெவ்விடத்தான்யானார் *
எம்மாபாவியர்க்கும் விதிவாய்க்கின்றுவாய்க்கும்கண்டீர் *
கைம்மாதுன்பொழித்தாயென்று கைதலைபூசலிட்டே *
மெய்ம்மாலாயொழிந்தே னெம்பிரானுமென்மேலானே. (எ)

மேலாத்தேவர்களும் நிலத்தேவரும்மேவித்தொழும் *
மாலார்வந்தினநா ளடியேன்மனத்தேமன்னினார் *
சேலேய்கண்ணியரும் பெருஞ்செல்வமும்நன்மக்களும்
மேலாத்தாய்தந்தையு மவரேயினியாவரே. (அ)

ஆவாரார்துணையென் றலைநீர்க்கடலுளழுந்தும்
நாவாய்போல் * பிறவிக்கடலுள்நின்று நான்துளங்க *
தேவார்கோலத்தொடும் திருச்சக்கரம்சங்கினொடும் *
ஆவாவென்றருள்செய் தடியேனொடுமானானே. (கூ)

ஆனானானுடையானென் றஃதேகொண்டுகந்துவந்து *
தானேயின்னருள்செய் தென்னைமுற்றவும்தானானான் *
மீனாயாமையுமாய் நரசிங்கமுமாய்க்குறளாய் *
கானாரேனமுமாய்க் கற்கியாமின்னம்கார்வண்ணனே. (க0)

⁂ கார்வண்ணன்கண்ணபிரான் கமலத்தடங்கண்ணன்றன்னை *
ஏர்வளவொண்கழனிக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
சீர்வண்ணவொண்டமிழ்க ளிவையாயிரத்துளிப்பத்தும் *
ஆர்வணத்தாலுரைப்பா ரடிக்கீழ்புகுவார்பொலிந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



கையாரும்சக்கரத்தோன் காதலன்றிக்கேயிருக்கப்
பொய்யாகப்பேசும் புறனுரைக்கு—மெய்யான
பேற்றையுபகரித்த பேரருளின்றன்மைதனைப்
போற்றினனேமாறன் பொலிந்து. (சக)

## உ-வது, பொலிக.

தம்முடைய உபதேசத்தால் ஶிக்ஷிதரான சேதநரையும் தம்முடையப்ரபாவத்தைப் பார்க்கவந்த நித்யஸூரிகளையும் பார்த்து மங்களாஶாஸநம் பண்ணினதை யருளிச்செய்கிறார்.

---

அறுசீராசிரியவிருத்தம், பண்-சீகாமரம், தாளம்-இடையொத்து.

கல்யாணிராகம் - திரிபுடைதாளம்.

பொலிகபொலிகபொலிக போயிற்றுவல்லுயிர்ச்சாபம் *
நலியும்நரகமும்நைந்த நமனுக்கிங்கியாதொன்றுமில்லை *
கலியும்கெடும்கண்டுகொள்மின் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
மலியப்புகுந்திசைபாடியாடி யுழிதரக்கண்டோம். (க)

கண்டோம்கண்டோம்கண்டோம் கண்ணுக்கினியனகண்டோம் *
தொண்டீரெல்லீரும்வாரீர் தொழுதுதொழுதுநின்றார்த்தும் *
வண்டார்தண்ணந்துழாயான் மாதவன்பூதங்கள்மண்மேல் *
பண்டான்பாடிநின்றாடிப் பரந்துதிரிகின்றனவே. (உ)

திரியும்கலியுகம்நீங்கித் தேவர்கள்தாமும்புகுந்து *
பெரியகிதயுகம்பற்றிப் பேரின்பவெள்ளம்பெருக *
கரியமுகில்வண்ணனெம்மான் கடல்வண்ணன்பூதங்கள்மண்மேல் *
இரியப்புகுந்திசைபாடி யெங்குமிடங்கொண்டனவே. (ங)

இடங்கொள்சமயத்தையெல்லா மெடுத்துக்களைவனபோலே *
தடங்கடல்பள்ளிப்பெருமான் றன்னுடைப்பூதங்களேயாய் *
கிடந்துமிருந்துமெழுந்தும் கீதம்பலபலபாடி *
நடந்தும்பறந்தும்குனித்தும் நாடகம்செய்கின்றனவே. (ச)

செய்கின்றதென்கண்ணுக்கொன்றே யொக்கின்றதிவ்வுலகத்து *
வைகுந்தன்பூதங்களேயாய் மாயத்தினாலெங்கும்மன்னி:*
ஐயமொன்றில்லை யரக்கரசுரர்பிறந்தீருள்ளீரேல் *
உய்யும்வகையில்லைதொண்டீ ரூழிபேர்த்திடும்கொன்றே. (ரு)

கொன்றுயிருண்ணும்விசாதி பகைபசிதீயனவெல்லாம் *
நின்றிவ்வுலகில்கடிவான் நேமிப்பிரான்தமர்போந்தார் *
நன்றிசைபாடியும்துள்ளியாடியும் ஞாலம்பரந்தார் *
சென்றுதொழுதுய்மின்தொண்டீர் சிந்தையைச்செந்நிறுத்தியே. (சு)

நிறுத்திநும்முள்ளத்துக்கொள்ளும்தெய்வங்களும்மையுய்யக்கொள் *
மறுத்துமவனோடேகண்டீர் மார்க்கண்டேயனும்கரியே *
கறுத்தமனமொன்றும்வேண்டா கண்ணனல்லால்தெய்வமில்லை *
இறுப்பதெல்லாமவன்மூர்த்தியா யவர்க்கேயிறுமினே. (எ)

இறுக்குமிறையிறுத்துண்ண வெவ்வுலகுக்குந்தன்மூர்த்தி *
நிறுத்தினன்தெய்வங்களாக வத்தெய்வநாயகன்றானே *
மறுத்திருமார்வனவன்றன் பூதங்கள்கீதங்கள்பாடி *
வெறுப்பின்றிஞாலத்துமிக்கார் மேவித்தொழுதுய்மினீரே. (அ)

மேவித்தொழுதுய்மினீர்கள் வேதப்புனிதவிருக்கை *
நாவிற்கொண்டச்சுதன்றன்னை ஞானவிதிபிழையாமே *
பூவில்புகையும்விளக்கும் சாந்தமுநீரும்மலிந்து *
மேவித்தொழுமடியாரும் பகவரும்மிக்கதுலகே. (கூ)

மிக்கவுலகுகள்தோறும் மேவிக்கண்ணன்திருமூர்த்தி *
நக்கபிரானோடயனுமிந்திரனும்முதலாக *
தொக்கவமரர்குழாங்க ளெங்கும்பரந்தனதொண்டர் *
ஒக்கத்தொழுகிற்றிராகில் கலியுகமொன்றுமில்லையே. (க0)

⁂ கலியுகமொன்றுமின்றிக்கே தன்னடியார்க்கருள்செய்யும் *
மலியும்சுடரொளிமூர்த்தி மாயப்பிரான்கண்ணன்றன்னை *
கலிவயல்தென்னங்குருகூர்க் காரிமாறன்சடகோபன் *
ஒலிபுகழாயிரத்திப்பத் துள்ளத்தைமாசறுக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பொலிகபொலிகவென்று பூமகள்கோன்றொண்டர்
மலிவுதனைக்கண்டுகந்து வாழ்த்தி—உலகில்
திருந்தாதார்தம்மைத் திருத்தியமாறன்சொல்
மருந்தாகப்போகுமனமாசு. (சஉ)

## கூ-வது, மாசறுசோதி.



எங்கும் பகவத்விஶ்லேஷத்தை ஸ்மரித்துக்கொண்டு அதனாலே நாயகி தன்மையையடைந்துலோகத்தார் நிந்திக்கிறதையும் மடலூரும்படி உத்யோகித்ததையுமருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண்-நட்டபாஷை, தாளம்-ஏழொத்து.
**பியாகடைராகம் - திரிபுடைதாளம்.**

⁂ மாசறுசோதி யென்செய்யவாய்மணிக்குன்றத்தை *
ஆசறுசீலனை யாதிமூர்த்தியைநாடியே *
பாசறவெய்தி யறிவிழந்தெனைநாளையம் *
ஏசறுமூரவர்கவ்வை தோழீயென்செய்யுமே. (க)

என்செய்யுமூரவர்கவ்வைதோழீ யினிநம்மை *
என்செய்யதாமரைக்கண்ண னென்னைநிறைகொண்டான் *
முன்செய்யமாமையிழந்து மேனிமெலிவெய்தி *
என்செய்யவாயுங்கருங்கண்ணும் பயப்பூர்ந்தவே. (உ)

ஊர்ந்தசகட முதைத்தபாதத்தன் * பேய்முலை
சார்ந்துசுவைத்தசெவ்வாய னென்னைநிறைகொண்டான் *
பேர்ந்தும்பெயர்ந்து மவனோடன்றியோர்சொல்லிலேன் *
தீர்ந்தவென்தோழீ யென்செய்யுமூரவர்கவ்வையே. (௩)

ஊரவர்கவ்வையெருவிட் டன்னைசொல்நீர் † படுத்து *
ஈரநெல்வித்திமுளைத்த நெஞ்சப்பெருஞ்செயுள் *
பேரமர்காதல் கடல்புரையவிளைவித்த *
காரமர்மேனி நங்கண்ணன் தோழீகடியனே. (௪)

கடியன்கொடியன்நெடியமா லுலகங்கொண்ட
அடியன் * அறிவருமேனிமாயத்தன் * ஆகிலும்
கொடியவென்னெஞ்ச'மவனென்றேகிடக்குமெல்லே ! *
துடிகொளிடைமடத்தோழீ அன்னையென்செய்யுமே. (ரு)

அன்னையென்செய்யிலெ னூரென்சொல்லிலென்தோழிமீர் *
என்னையினியுமக்காசையில்லை யகப்பட்டேன் *
முன்னையமரர்முதல்வன் வண்டுவராபதி
மன்னன் * மணிவண்ணன் வாசுதேவன்வலையுளே. (௬)

வலையுளகப்படுத்தென்னை நன்னெஞ்சம்கூவிக்கொண்டு *
அலைகடல்பள்ளி $ யம்மானை யாழிப்பிரான்றன்னை *
கலைகொளகலல்குல்தோழீ நம்கண்களால்கண்டு *
தலையில்வணங்கவுமாங்கொலோ தையலார்முன்பே. (எ)

பேய்முலையுண்டுசகடம்பாய்ந்து மருதிடை
போய்முதல்சாய்த்து * புள்வாய்பிளந்துகளிறட்ட *
தூமுறுவல்தொண்டைவாய்ப்பிரானை யெந்நாள்கொலோ *
யாமுறுகின்றதுதோழீ அன்னையர்நாணவே. (அ)

நாணுநிறையும்கவர்ந்தென்னை நன்னெஞ்சம்கூவிக்கொண்டு *
சேணுயர்வானத்திருக்கும் தேவபிரான்றன்னை *
ஆணையென்தோழி யுலகுதோறலர்தூற்றி * ஆம்
கோணைகள்செய்து குதிரியாய்மடலூர்துமே. (௯)

மாமடலூர்ந்து மெய்ம்மாழியங்கைப்பிரானுடை *
தூமடல்தண்ணந்துழாய் மலர்கொண்டுசூடுவோம் *
யாமடமின்றித் தெருவுதோறயல்தையலார் *
நாமடங்காப்பழிதூற்றி நாடுமிரைக்கவே. (௧0)

† "மடுத்து" என்றும் பாடம். $ "எம்மானை" என்று உரை.

⁂ இரைக்குங்கருங்கடல்வண்ணன் கண்ணபிரான்றன்னை *
விரைக்கொள்பொழில் ‡ குருகூர்ச்சடகோபன்சொன்ன *
நிரைக்கொளந்தாதி யோராயிரத்துளிப்பத்தும் *
உரைக்கவல்லார்க்கு வைகுந்தமாகுந்தம்மூரெல்லாம். (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



மாசறுசோதிகண்ணன் வந்துகலவாமையால்
ஆசைமிகுந்துபழிக் கஞ்சாம—லேசறவே
மண்ணில்மடலூர மாறனொருமித்தா
னுண்ணாடுங்கத்தான்பிறந்த வூர். (சங)

---

## ச-வது, ஊரெல்லாம்.



*மடலூர்தற்கு அஶக்யமாய் அந்தகாராக்ராந்தமான இரவில் ஆழ்வார் அத்யந்தம் துக்கப்பட்டதை யருளிச்செய்கிறார்.*

---

கலிவிருத்தம், நாலடித்தாழிசையுமாம்;

பண் - புறநீர்மை, தாளம் - நடையொத்து.

**கண்டாராகம் - திரிபுடைதாளம்.**

⁂ ஊரெல்லாம்துஞ்சி யுலகெல்லாம்நள்ளிருளாய் *
நீரெல்லாம்தேறி யோர்நீளிரவாய்நீண்டதால் *
பாரெல்லாமுண்ட நம்பாம்பணையான்வாரானால் *
ஆரெல்லே ! வல்வினையே னாவிகாப்பாரினியே. (க)
ஆவிகாப்பாரினியா ராழ்கடல்மண்விண்மூடி *
மாவிகாரமா யோர்வல்லிரவாய்நீண்டதால் *
காவிசேர்வண்ண னென் கண்ணனும்வாரானால் *
பாவியேன்நெஞ்சமே நீயும்பாங்கல்லையே. (உ)
நீயும்பாங்கல்லைகாண் நெஞ்சமேநீளிரவும் *
ஓயும்பொழுதின்றி யூழியாய்நீண்டதால் *
காயும்கடுஞ்சிலையென் காகுத்தன்வாரானால் *
மாயும்வகையறியேன் வல்வினையேன்பெண்பிறந்தே. (ங)
பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர்காண்கிலேனென்று *
ஒண்சுடரோன் வாராதொளித்தான் * இம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வா யெங்காரேறுவாரானால் *
எண்பெரியசிந்தைநோய் தீர்ப்பாரரென்னையே. (ச)
ஆரென்னையாராய்வா ரன்னையரும்தோழியரும் *
நீரென்னேயென்னாதே நீளிரவும்துஞ்சுவரால் *
காரன்னமேனி நங்கண்ணனும்வாரானால் *
பேரென்னைமாயாதால் வல்வினையேன்பின்நின்றே. (ரு)

---

‡ "குருகூரவர் சடகோபன்" என்று உரை.

பின்னின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதடுமால் *
முன்னின்றிராவூழி கண்புதையமூடிற்றால் *
மன்னின்றசக்கரத் தெம்மாயவனும்வாரானால் *
† இந்நின்றநீளாவி காப்பாராரிவ்விடத்தே. (சா)

காப்பாராரிவ்விடத்துக் கங்கிருளின் நுண்டுளியாய் *
சேட்பாலதூழியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன்தோன்றானால் *
தீப்பாலவல்வினையேன் தெய்வங்காளென்செய்கேனோ. (எ)

தெய்வங்காளென்செய்கே னோரிரவேழூழியாய் *
மெய்வந்துநின் றெனதாவிமெலிவிக்கும் *
கைவந்தசக்கரத் தென்கண்ணனும்வாரானால் *
தைவந்ததண்டென்றல் வெஞ்சுடரில்தானடுமே. (அ)

வெஞ்சுடரில்தானடுமால் வீங்கிருளின் நுண்டுளியாய் *
அஞ்சுடரவெய்யோ னணிநெடுந்தேர்தோன்றாதால் *
செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால் *
நெஞ்சிடர்தீர்ப்பாரினியார் நின்றுருகுகின்றேனே. (கூ)

நின்றுருகுகின்றேனேபோல நெடுவானம் *
$ சென்றுருகி நுண்டுளியாய்ச் செல்கின்றகங்குல்வாய் *
அன்றொருகால் வையமளந்தபிரான்வாரானென்று *
ஒன்றொருகால்சொல்லா துலகோஉறங்குமே. (க0)

⁂ உறங்குவான்போல் யோகுசெய்தபெருமானை *
சிறந்தபொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொல் *
நிறங்கிளர்ந்தவந்தாதி யாயிரத்துளிப்பத்தால் *
இறந்துபோய் வைகுந்தம்சேராவாறெங்ஙனேயோ. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஊரெல்லாந்தமட லூரவுமொண்ணுதபடி
கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்று—பேராமல்
தீதுசெய்யமாறன் திருவுளத்திற்சென்றதுயர்
ஓதுவதிங்கெங்ஙனே யோ. (சச)

---

† "என்னின்ற" என்று உரையில் பாடாந்தரம்.

$ "உறுகுநுண்துளி" என்று உரை.

## ரு-வது, எங்ஙனேயோ.



*அதன்பின்சூர்யோதயமாய் திருக்குறுங்குடிநம்பி ப்ரத்யக்ஷமாகாநிற்க தத்ப்ரவணரான ஆழ்வாரைப்பார்த்து தாய்விலக்கியும் அவனிடத்தில் தன்மனது லக்நமாயிருக்கிறது நீகோபிக்கவேண்டாமென்றருளிச்செய்கிறார்.*

---

அறுசீராசிரியவிருத்தம், பண்-கைசிகம், தாளம்-ஏழொத்து.
செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

✠✠ எங்ஙனேயோவன்னைமீர்கா ளென்னைமுனிவதுநீர் *
நங்கள்கோலத்திருக்குருங்குடிநம்பியை நான்கண்டபின் *
சங்கினோடும்நேமியோடும் தாமரைக்கண்களோடும் *
செங்கனிவாயொன்றினோடும் செல்கின்றதென்னெஞ்சமே. (க)

என்னெஞ்சினால்நோக்கிக்காணீ ரென்னைமுனியாதே *
தென்னன்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
மின்னுநூலும்குண்டலமும் மார்வில்திருமறுவும் *
மன்னுபூணும்நான்குதோளும் வந்தெங்கும்நின்றிடுமே. (உ)

நின்றிடும்திசைக்கும்நையுமென் றன்னையரும்முனிதிர் *
குன்றமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
வென்றிவில்லும்தண்டும்வாளும் சக்கரமும்சங்கமும் *
நின்றுதோன்றிக்கண்ணுள்நீங்கா நெஞ்சுள்ளும்நீங்காவே. (ங)

நீங்கநில்லாக்கண்ணநீர்களென் றன்னையரும்முனிதிர் *
தேன்கொள்சோலைத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
பூந்தண்மாலைத்தண்டுழாயும் பொன்முடியும்வடிவும் *
பாங்குதோன்றும்பட்டும்நாணும் பாவியேன்பக்கத்தவே. (ச)

பக்கம்நோக்கிநிற்கும்நையுமென் றன்னையரும்முனிதிர் *
தக்ககீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
தொக்கசோதித்தொண்டைவாயும் நீண்டபுருவங்களும் *
தக்கதாமரைக்கண்ணும் பாவியேனுவியின்மேலனவே. (ரு)

மேலும்வன்பழிநங்குடிக்கிவளென் றன்னைகாணகொடாள் *
சோலைசூழ்தண்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
கோலநீள்கொடிமூக்கும் தாமரைக்கண்ணும்கனிவாயும் *
நீலமேனியும்நான்குதோளு மென்னெஞ்சம்நிறைந்தனவே. (சு)

நிறைந்தவன்பழிநங்குடிக்கிவளென் றன்னைகாணகொடாள் *
சிறந்தகீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
நிறைந்தசோதிவெள்ளஞ்சூழ்ந்த நீண்டபொன்மேனியொடும் *
நிறைந்தென்னுள்ளேநின்றொழிந்தான் நேமியங்கையுளதே. (எ)

கையுள்நன்முகம்வைக்குமையுமென் றன்னையரும்முனிதிர் *
மைகொள்மாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
செய்யதாமரைக்கண்ணுமல்குலும் சிற்றிடையும்வடிவும் *
† மொய்யநீள்குழல்தாழ்ந்ததோள்களும் பாவியேன்முன்னிற்குமே.()

முன்னின்றுயென்று தோழிமார்களுமன்னையரும்முனிதிர் *
மன்னுமாடத்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
சென்னிநீண்முடியாதியாய வுலப்பிலணிகலத்தன் *
கன்னல்பாலமுதாகிவந் தென்னெஞ்சம்கழியானே. (கூ)

கழியமிக்கதோர்காதலளிவளென் றன்னைகாணகொடாள் *
வழுவில்கீர்த்தித்திருக்குறுங்குடிநம்பியை நான்கண்டபின் *
குழுமித்தேவர்குழாங்கள் கைதொழச்சோதிவெள்ளத்தினுள்ளே *
எழுவதோருருவென்னெஞ்சுள்ளெழு மார்க்குமறிவரிதே. (க0)

⁂ அரிவரியபிரானை யாழியங்கையனையேயலற்றி *
நறியநன்மலர்நாடி நன்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
குறிகொளாயிரத்துள்ளிவைபத்தும் திருக்குறுங்குடியதன்மேல் *
அறியக்கற்றுவல்லார்வைட்டணவ ராழ்கடல்ஞாலத்துள்ளே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



எங்ஙனேநீர்முனிவ தென்னையினிநம்பியழ
கிங்ஙனேதோன்றுகின்ற தென்முன்னே—அங்ஙன்
உருவெளிப்பாடா வுரைத்ததமிழ்மாறன்
கருதுமவர்க்கின்பக் கடல். (சரு)

## சு-வது, கடல்.



பாவநாப்ரத்யக்ஷம் போகையில்மிகவும் ஆர்த்தியையடைந்து கோபிகைகள் க்ருஷ்ணலீலைகளை யனுபவித்தாற்போல் பகவத்லீலைகளையநுகரித்து தரித்ததை யருளிச்செய்கிறார்.

---

எண்சீராசிரியவிருத்தம், பண்-சீகாமரம், தாளம்-ஏழொத்து.
எதுகுலகாம்போதிராகம் - அதிதாளம்.

⁂ கடல்ஞாலம்செய்தேனும்யானேயென்னும்
கடல்ஞாலமாவேனும்யானேயென்னும் *
கடல்ஞாலம்கொண்டேனும்யானேயென்னும்
கடல்ஞாலம்கீண்டேனும்யானேயென்னும்
கடல்ஞாலமுண்டேனும்யானேயென்னும்
கடல்ஞாலத்தீசன்வந்தேறக்கொலோ *
கடல்ஞாலத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
கடல்ஞாலத்தென்மகள்கற்கின்றவே. (க)

---

† "மொய்கொள்" என்னும் பாடாந்தரம் உரைக்கு மிகவும் சேரும்.

கற்கும்கல்விக்கெல்லையிலனேயென்னும்
கற்கும்கல்வியாவேனும்யானேயென்னும் *
கற்கும்கல்விசெய்வேனும்யானேயென்னும்
கற்கும்கல்விதீர்ப்பேனும்யானேயென்னும் *
கற்கும்கல்விச்சாரமும்யானேயென்னும்
கற்கும்கல்விநாதன்வந்தேறக்கொலோ *
கற்கும்கல்வியீர்க்கிவையென்சொல்லுகேன்
கற்கும்கல்வியென்மகள்காண்கின்றவே. (உ)

காண்கின்றநிலமெல்லாம்யானேயென்னும்
காண்கின்றவிசும்பெல்லாம்யானேயென்னும் *
காண்கின்றவெந்தீயெல்லாம்யானேயென்னும்
காண்கின்றவிக்காற்றெல்லாம்யானேயென்னும் *
காண்கின்றகடலெல்லாம்யானேயென்னும்
காண்கின்றகடல்வண்ணனேறக்கொலோ *
காண்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
காண்கின்றவென்காரிகைசெய்கின்றவே. (ங)

செய்கின்ற † கிதியெல்லாம்யானேயென்னும்
செய்வானின்றனகளும்யானேயென்னும் *
செய்துமுன்னிறந்தவும்யானேயென்னும்
செய்கைப்பயனுண்பேனும்யானேயென்னும் *
செய்வார்களைச்செய்வேனும்யானேயென்னும்
செய்யகமலக்கண்ணனேறக்கொலோ *
செய்யவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
செய்யகனிவாயிளமான்திறத்தே. (ச)

திறம்பாமல்மண்காக்கின்றேன்யானேயென்னும்
திறம்பாமல்மலையெடுத்தேனேயென்னும் *
திறம்பாமலசுரரைக்கொன்றேனேயென்னும்
திறங்காட்டியன்றைவரைக்காத்தேனேயென்னும் *
திறம்பாமல்கடல்கடைந்தேனேயென்னும்
திறம்பாதகடல்வண்ணனேறக்கொலோ *
திறம்பாதவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
திறம்பாதென்திருமகளெய்தினவே. (ரு)

இனவேய்மலையேந்தினேன்யானேயென்னும்
இனவேறுகள்செற்றேனும்யானேயென்னும் *
இனவான்கன்றுமேய்த்தேனும்யானேயென்னும்
இனவாநிரைகாத்தேனும்யானேயென்னும் *
இனவாயர்தலைவனும்யானேயென்னும்
இனத்தேவர்தலைவன்வந்தேறக்கொலோ *

† கிதி - க்ரியை.

இனவேற்கண்நல்லீர்க்கிவையென்சொல்லுகேன்
இனவேற்கண்ணியென்மகளுற்றனவே. (சு)

உற்றார்களெனக்கில்லையாருமென்னும்
உற்றார்களெனக்கிங்கெல்லாருமென்னும் *
உற்றார்களைச்செய்வேனும்யானேயென்னும்
உற்றார்களையழிப்பேனும்யானேயென்னும் *
‡ உற்றார்களுக்குற்றேனும்யானேயென்னும்
உற்றாரிலிமாயன்வந்தேறக்கொலோ *
உற்றீர்கட்கென்சொல்லிச்சொல்லுகேன்யான்
உற்றென்னுடைப்பேதையுரைக்கின்றவே. (எ)

உரைக்கின்றமுக்கட்பிரான்யானேயென்னும்
உரைக்கின்றதிசைமுகன்யானேயென்னும் *
உரைக்கின்றவமரரும்யானேயென்னும்
உரைக்கின்றவமரர்கோன்யானேயென்னும் *
உரைக்கின்றமுனிவரும்யானேயென்னும்
உரைக்கின்றமுகில்வண்ணனேறக்கொலோ *
உரைக்கின்றவுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
உரைக்கின்றவென்கோமளவொண்கொடிக்கே. (அ)

கொடியவினையாதுமிலனேயென்னும்
கொடியவினையாவேனும்யானேயென்னும் *
கொடியவினைசெய்வேனும்யானேயென்னும்
கொடியவினைதீர்ப்பேனும்யானேயென்னும் *
கொடியானிலங்கைசெற்றேனேயென்னும்
கொடியபுள்ளுடையவனேறக்கொலோ *
கொடியவுலகத்தீர்க்கிவையென்சொல்லுகேன்
கொடியேன்கொடியென்மகள்கோலங்களே. (கூ)

கோலங்கொள்சுவர்க்கமும்யானேயென்னும்
கோலமில்நரகமும்யானேயென்னும் *
கோலந்திகழ்மோக்கமும்யானேயென்னும்
கோலங்கொளுயிர்களும்யானேயென்னும் *
கோலங்கொள்தனிமுதல்யானேயென்னும்
கோலங்கொள்முகில்வண்ணனேறக்கொலோ *
கோலங்கொளுலகத்தீர்க்கென்சொல்லுகேன்
கோலந்திகழ்கோதையென்கூந்தலுக்கே. (க0)

‡‡ கூந்தல்மலர்மங்கைக்கும்மண்மடந்தைக்கும்
குலவாயர்கொழுந்துக்கும்கேள்வன்றன்னை *

‡ "உற்றார்கட்குற்றேனும்" என்றும் சொல்லுவர்.

வாய்ந்தவழுதிவளநாடன்மன்னு
குருகூர்ச்சடகோபன்குற்றேவல்செய்து - *
ஆய்ந்ததமிழ்மாலையாயிரத்துள்
ளிவையுமோர்பத்தும்வல்லார் * உலகில்
ஏந்துபெருஞ்செல்வத்தராய்த்திருமா
லடியார்களைப்பூசிக்கநோற்றூர்களே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



கடல்ஞாலத்தீசனைமுன் காணாமல்நொந்தே
உடனவநுகரிக்க லுற்றுத்—திடமாக
வாய்ந்தவனைத்தான்பேசும் மாறனுரையதனை
ஆய்ந்துரைப்பாராட்செய நோற்றூர். (சகூ)

---

## எ-வது, நோற்றநோன்பு.



அவ்வநுகாராவஸ்தைபோய் உன்னைவிட்டிருக்கமாட்டேன் உன் திருவடிகளே யெனக்கு உபாயமென்று வானமாமலைப்பெருமாளிடத்தில் ப்ரபத்தி பண்ணினதை யருளிச்செய்கிறார்.

---

முதலடியும் மூன்றுமடியும் எழுசீராய், அயலடியும் ஈற்றடியும் நாற்சீரான ஆசிரியத்துறை, பண்-சீகாமரம், தாளம்-ஏழொத்து.

**சாவேரிராகம் - ஆதிதாளம்.**

‡‡நோற்றநோன்பிலேன் நுண்ணறிவிலேனாகிலுமினியுன்னைவிட்டு* ஒன்றும்
ஆற்றகிற்கின்றிலே னரவினணையம்மானே *
சேற்றுத்தாமரைசெந்நெலூடுமலர் சிரீவரமங்கலநகர் *
வீற்றிருந்தவெந்தா யுனக்குமிகையல்லேனங்கே. (க)

அங்குற்றேனல்லேனிங்குற்றேநல்லேனுன்னைக்காணுமவாவில்வீழ்ந்து* நான்
எங்குற்றேனுமல்லே னிலங்கைசெற்றவம்மானே *
திங்கள்சேர்மணிமாடநீடு சிரீவரமங்கலநகருறை *
சங்குசக்கரத்தாய் தமியேனுக்கருளாயே. (உ)

கருளப்புட்கொடிசக்கரப்படை வானநாடவெங்கார்முகில்வண்ணா *
பொருளல்லாதவென்னைப்பொருளாக்கி யடிமைகொண்டாய் *
தெருள்கொள்நான்மறைவல்லவர்பலர்வாழ் சிரீவரமங்கலநகர்க்கு-*
அருள்செய்தங்கிருந்தா யறியேனொருகைம்மாறே. (ங)

மாறுசேர்படைநூற்றுவர்மங்கவோரைவர்க்காயன்றுமாயப்போர்பண்ணி *
நீறுசெய்தவெந்தாய் நிலங்கீண்டவம்மானே *
தேறுஞானத்தர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
ஏறிவீற்றிருந்தா யுன்னை யெங்கெய்தக்கூவுவனே. (ச)

எய்தக்கூவுதலாவதேயெனக்கு § எவ்வதெவ்வத்துளாயுமாய்நின்று *
கைதவங்கள்செய்யும் கருமேனியம்மானே *
செய்தவேள்வியர்வையத்தேவரறாச் சிரீவரமங்கலநகர் *
கைதொழவிருந்தா யதுநானும்கண்டேனே. (ரு)

⁂ஏனமாய்நிலங்கீண்டவென்னப்பனே! கண்ணா!என்றுமென்னையாளுடை*
வானநாயகனே ! மணிமாணிக்கச்சுடரே ! *
தேனமாம்பொழில் தண்சிரீவரமங்கலத்தவர் கைதொழவுறை *
வானமாமலையே யடியேன்தொழவந்தருளே. (சு)

வந்தருளியென்னெஞ்சிடங்கொண்ட வானவர்கொழுந்தே * உலகுக்
முந்தைத்தாய்தந்தையே முழுவேழுலகமுண்டாய் * [கோர்
செந்தொழிலவர்வேதவேள்வியறாச் சிரீவரமங்கலநகர் *
அந்தமில்புகழா யடியேனையகற்றேலே. (எ)

அகற்றநீவைத்த மாயவல்லைம்புலன்களாமவைநன்கறிந்தனன் *
அகற்றியென்னையும்நீ அரும்சேற்றில்வீழ்த்திகண்டாய் *
பகற்கதிர்மணிமாடநீடு சிரீவரமங்கைவாணனே * என்றும்
புகற்கரியவெந்தாய் புள்ளின்வாய்பிளந்தானே. (அ)

புள்ளின்வாய்பிளந்தாய்மருதிடைபோயின யெருதேழடர்த்த * என்
கள்ளமாயவனே கருமாணிக்கச்சுடரே *
தெள்ளியர்திருநான்மறைகள்வல்லார் மலிதண்சிரீவரமங்கை *
உள்ளிருந்தவெந்தா யருளாயுய்யுமாறெனக்கே. (கூ)

ஆறெனக்குநின்பாதமேசரணாகத்தந்தொழிந்தாய் * உனக்கோர்கைம்
மாறுநானொன்றிலே னெனதாவியுமுனதே *
சேறுகொள்கரும்பும்பெருஞ்செந்நெலும் மலிதண்சிரீவரமங்கை *
நாறுபூந்தண்டுழாய்முடியாய் தெய்வநாயகனே. (க0)

⁂ தெய்வநாயகன்நாரணன் திருவிக்கிரமனடியிணைமிசை *
கொய்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன் *
செய்தவாயிரத்துள்ளிவை தண்சிரீவரமங்கைமேயபத்துடன் *
வைகல்பாடவல்லார் வானோர்க்காராவமுதே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



நோற்றநோன்பாதியிலே னுன்றனைவிட்டாற்றகில்லேன்
பேற்றுக்குபாயமுன்றன் பேரருளே—சாற்றுகின்றேன்
இங்கெனிலையென்னு மெழில்மாறன்சொல்வல்லார்
அங்கமரர்க்காரா வமுது. (சஎ)

---

§ எவ்வ - எவ்வகைப்பட்ட, தெவ்வம் - சத்ருஸமூஹம்.

## அ-வது, ஆருவமுதே.

பலஸித்தியாகாமையால் ஆராவமுதாழ்வாரிடத்தில்
ஆக்ரந்தநம்பண்ணி ப்ரபத்திபண்ணினதை
யருளிச்செய்கிருர்.

அறுசீராசிரியவிருத்தம், பண்-காந்தாரம், தாளம்-ஏழொத்து.
தந்யாசிராகம் - ஆதிதாளம்.

ஆராவமுதேயடியேனுடலம் நின்பாலன்பாயே *
நீராயலைந்துகரையவுருக்கு கின்றநெடுமாலே *
சீரார்செந்நெல்கவரிவீசும் செழுநீர்த்திருக்குடந்தை *
ஏரார்கோலந்திகழக்கிடந்தாய் கண்டேனெம்மானே. (க)

எம்மானேயென்வெள்ளைமூர்த்தி யென்னையாள்வானே *
எம்மாவுருவும்வேண்டுமாற்ரு லாவாயெழிலேறே *
செம்மாகமலஞ்செழுநீர்மிசைகண் மலருந்திருக்குடந்தை *
அம்மாமலர்க்கண்வளர்கின்ருனே யென்நான்செய்கேனே. (உ)

என்நான்செய்கேன்யாரேகளைக ணென்னையென்செய்கின்ருய் *
உன்னாலல்லால்யாவராலு மொன்றுங்குறைவேண்டேன் *
கன்னார்மதிள்சூழ்குடந்தைக்கிடந்தா யடியேனருவாணுள் *
சென்னாளெந்நாளந்நாளுனதாள் பிடித்தேசெலக்காணே. (ங)

செலக்காண்கிற்பார்காணுமளவும் செல்லும்கீர்த்தியாய் *
உலப்பிலானே யெல்லாவுலகுமுடையவொருமூர்த்தி *
நலத்தால்மிக்கார்குடந்தைக்கிடந்தா யுன்னைக்காண்பான்நான்
அலப்பாய் * ஆகாசத்தைநோக்கி யழுவன்தொழுவனே. (ச)

அழுவன்தொழுவனாடிக்காண்பன் பாடியலற்றுவன் *
தழுவல்வினையால்பக்கம்நோக்கி நாணிக்கவிழ்ந்திருப்பன் *
செழுவொண்பழனக்குடந்தைக்கிடந்தாய் செந்தாமரைக்கண்ணு *
தொழுவனேனையுனதாள் சேரும்வகையேசூழ்கண்டாய். (ரு)

சூழ்கண்டாயென்தொல்லைவினையையறுத் துன்னடிசேரும்
ஊழ்கண்டிருந்தே * தூராக்குழிதூர்த் தெனைநாளகன்றிருப்பன் *
வாழ்தொல்புகழார்குடந்தைக்கிடந்தாய் வானேர்கோமானே *
யாழினிசையேயமுதேயறிவின் பயனேயரியேறே. (சு)

அரியேறேயென்னம்பொற்சுடரே செங்கட்கருமுகிலே *
எரியேபவளக்குன்றே நாற்ருேளெந்தாயுனதருளே *
பிரியாவடிமையென்னைக்கொண்டாய் குடந்தைத்திருமாலே *
தரியேனினியுன்சரணந்தந் தென்சன்மங்களையாயே. (எ)

⁂ களைவாய்துன்பம்களையாதொழிவாய் களைகண்மற்றிலேன் *
வளைவாய்நேமிப்படையாய் குடந்தைக்கிடந்தமாமாயா *
தளராவுடலமெனதாவி சரிந்துபோம்போது †
இளையாதுனதாளொருங்கப்பிடித்துப் போதவிசைநீயே. (அ)

இசைவித்தென்னையுன்தாளிணைக்கீ ழிருத்துமம்மானே *
அசைவிலமரர்தலைவர்தலைவா ஆதிப்பெருமூர்த்தி *
திசைவில்வீசும்செழுமாமணிகள் சேரும்திருக்குடந்தை *
அசைவிலுலகம்பரவக்கிடந்தாய் காணவாராயே. (கூ)

வாராவருவாய்வருமென்மாயா மாயாமூர்த்தியாய் *
ஆராவமுதாயடியேனுவி யகமேதித்திப்பாய் *
தீராவினைகள்தீரவென்னையாண்டாய் திருக்குடந்தை
ஊரா * உனக்காட்பட்டு மடியேனின்னமுழல்வேனோ. (க0)

⁂ உழலையென்பில்பேய்ச்சிமுலையூ டவளையுயிருண்டான் *
கழல்களவையேசரணாகக்கொண்ட குருகூர்ச்சடகோபன் *
குழலில்மலியச்சொன்ன வோராயிரத்துளிப்பத்தும் *
மழலைதீரவல்லார் காமர்மானேய்நோக்கியர்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஆராவமுதாழ்வா ராதரித்தபேருகளைத்
தாராமையாலே தளர்ந்துமிகத்—தீராத
ஆசையுடனற்றமை பேசியலமந்தான்
மாசறுசீர் மாறனெம்மான். (சஅ)



## கூ-வது, மானேய்நோக்கு.



ஆராவமுதாழ்வாரிடத்திலும் பலஷித்தியடையாமல், இத்திருப்பதிக்குப் போகவேண்டுமென்று திருநகரி பாஹ்யோத்யாநபர்யந்தமும் வந்த விடாயால் விடாய்த்துவிழுந்து ஸகியோடே அந்த திருவல்லவாழ்ஸ்வாமியை என்றடைவேனென் றருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண்—பஞ்சமம், தாளம்-ஏழொத்து.
முகாரிராகம் - அடதாளம்.

⁂ மானேய்நோக்குநல்லீர் வைகலும்வினையேன்மெலிய *
வானார்வண்கமுகும் மதுமல்லிகைகமழும் *
தேனார்சோலைகள்சூழ் திருவல்லவாழுறையும்
கோனாரை * அடியேனடிகூடுவதென்றுகொலோ. (க)

என்றுகொல்தோழிமீர்கா ளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ *
பொன்திகழ்புன்னைமகிழ் புதுமாதவிமீதணவி *
தென்றல்மணங்கமழும் திருவல்லவாழ்நகருள்
நின்றபிரான் * அடிநீறடியோங்கொண்டு சூடுவதே. (உ)

சூடுமலர்க்குழலீர் துயராட்டியேனைமெலிய *
பாடுநல்வேதவொலி பரவைத்திரைபோல்முழங்க *
மாடுயர்ந்தோமப்புகைகமழும் தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் கழல்காண்டுங்கொல்நிச்சலுமே. (ங)

நிச்சலும்தோழிமீர்கா ளெம்மைநீர்நலிந்தென்செய்தீரோ *
பச்சிலைநீள்கமுகும் பலவும்தெங்கும்வாழைகளும் *
மச்சணிமாடங்கள்மீதணவும் தண்திருவல்லவாழ் *
நச்சரவினணைமேல் நம்பிரானதுநன்னலமே. (ச)

நன்னலத்தோழிமீர்காள் நல்லவந்தணர்வேள்விப்புகை *
மைந்நலங்கொண்டுயர்விண்மறைக்கும் தண்திருவல்லவாழ் *
கன்னலங்கட்டிதன்னைக் கனியையின்னமுதன்னை *
என்னலங்கொள்சுடரை யென்றுகொல்கண்கள்காண்பதுவே. (ரு)

காண்பதெஞ்ஞான்றுகொலோ வினையேன்கனிவாய்மடவீர் *
பாண்குரல்வண்டினொடு பசுந்தென்றலுமாகியெங்கும் *
சேண்சினையோங்குமரச் செழுங்கானல்திருவல்லவாழ் *
மாண்குறள்கோலப்பிரான் மலர்த்தாமரைப்பாதங்களே. (சு)

பாதங்கள்மேலணிபூந்தொழக்கூடுங்கொல் பாவைநல்லீர் *
ஓதநெடுந்தடத்து ளுயர்தாமரைசெங்கழுநீர் *
மாதர்கள்வாண்முகமும் கண்ணுமேந்தும்திருவல்லவாழ் *
நாதனிஞ்ஞாலமுண்ட நம்பிரான்றன்னைநாடொறுமே. (எ)

நாடொறும்வீடின்றியே தொழக்கூடுங்கொல்நன்னுதலீர் *
ஆடுறுதீங்கரும்பும் விளைசெந்நெலுமாகியெங்கும் *
மாடுறுபூந்தடஞ்சேர் வயல்சூழ்தண்திருவல்லவாழ் *
நீடுறைகின்றபிரான் நிலந்தாவியநீள்கழலே. (அ)

கழல்வளைபூரிப்பயாங்கண்டு கைதொழக்கூடுங்கொலோ *
குழலென்னயாழுமென்ன குளிர்சோலையுள்தேனருந்தி
மழலைவரிவண்டுகளிசைபாடும் திருவல்லவாழ் *
சுழலில்மலிசக்கரப்பெருமானது தொல்லருளே. (கூ)

தொல்லருள்நல்வினையால் சொலக்கூடுங்கொல்தோழிமீர்காள் *
தொல்லருள்மண்ணும்விண்ணும் தொழநின்றதிருநகரம் *
நல்லருளாயிரவர் நலனேந்தும்திருவல்லவாழ் *
நல்லருள்நம்பெருமான் நாராயணன்நாமங்களே. (க0)

⁂ நாமங்களாயிரமுடைய நம்பெருமானடிமேல் *
சேமங்கொள்தென்குருகூர்ச் சடகோபன்தெரிந்துரைத்த *
நாமங்களாயிரத்து ளிவைபத்தும்திருவல்லவாழ் *
சேமங்கொள்தென்னகர்மேல் செப்புவார்சிறந்தார்பிறந்தே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



மாநலத்தால் மாறன் றிருவல்லவாழ் புகப்போய்த்
தானிளைத்து வீழ்ந்தவ்வூர் தன்னருகில்—மேன்லங்கித்
துன்பமுற்றுச்சொன்ன சொலவுகற்பார்தங்களுக்குப்
பின்பிறக்க வேண்டாபிற. (சக)

---

## க0-வது, பிறந்தவாறும்.



அச்சாவதாரத்தில் பலவித்தியாகாமையாலே அவதாரங்களில்ப்ரவேஶித்து குணாநுபவத்தில் மநோசைதில்யம்வாராமற் செய்யவேண்டுமென்று எம்பெருமானை ப்ரார்த்தித்ததை யருளிச்செய்கிறார்.

---

ஆசிரியத்துறை, பண்-காந்தாரம், தாளம்-ஏழொத்து.
மோஹநராகம்-ஆதிதாளம்.

⁂ பிறந்தவாறும்வளர்ந்தவாறும் பெரியபாரதம்கைசெய்து * ஐவர்க்குத்
திறங்கள்காட்டியிட்டுச் செய்துபோனமாயங்களும் *
† நிறந்தனூடுபுக்கெனதாவியை நின்றுநின்றுருக்கியுண்கின்ற * இச்
சிறந்தவான்சுடரே யுன்னையென்றுகொல்சேர்வதுவே. (க)

‡ வதுவைவார்த்தையுளேறுபாய்ந்ததும் மாயமாவினைவாய்பிளந்ததும் *
மதுவைவார்குழலார் குரவைபிணைந்தகுழகும் * அதுவிது
உதுவென்னலாவனவல்ல வென்னையுன்செய்கைநைவிக்கும் *
முதுவையமுதல்வா வுன்னையென்றுதலைப்பெய்வனே. (உ)

பெய்யும்பூங்குழல்பேய்முலையுண்டபிள்ளைத்தேற்றமும் *பேர்ந்தோர்சாடிறச்
செய்யபாதமொன்றால் செய்தநின்திருச்சேவகமும் *
நெய்யுண்வார்த்தையுளன்னைகோல்கொள்ள நீயுன்தாமரைக்கண்கள்நீர்மல்க
பையவேநிலையும்வந் தென்னெஞ்சையுருக்குங்களே. (ங)

கள்ளவேடத்தைக்கொண்டுபோய்ப் புரம்புக்கவாறும் * கலந்தசுரரை
உள்ளம்பேதம்செய்திட் டுயிருண்டவுபாயங்களும் *
வெள்ளநீர்ச்சடையானும் நின்னிடைவேறலாமைவிளங்கநின்றதும் *
உள்ளமுள்குடைந் தென்னுயிரையுருக்கியுண்ணுமே. (ச)

---

† நிறம்-மர்மமான ஹ்ருதயப்ரதேசம். ‡ வதுவை-விவாஹம்.

உண்ணவானவர்கோனுக் காயரொருப்படுத்தவடிசிலுண்டதும் *
வண்ணமால்வரையையெடுத்து மழைகாத்ததும் *
மண்ணைமுன்படைத்துண்டுமிழ்ந்து கடந்திடந்துமணந்தமாயங்கள் *
எண்ணுந்தோறுமென்னெஞ்செரிவாய்மெழுகொக்குநின்றே. (ரு)

நின்றவாறுமிருந்தவாறும் கிடந்தவாறும்நினைப்பரியன *
ஒன்றலாவுருவா யருவாய நின்மாயங்கள் *
நின்றுநின்றுநினைகின்றேனுன்னையெங்ஙனம்நினைகிற்பன் * பாவியேற்
கொன்றுநன்குரையா யுலகமுண்டவொண்சுடரே. (சு)

ஒண்சுடரோடிருளுமாய் நின்றவாறுமுண்மையோடின்மையாய்வந்து * என்
கண்கொளாவகைநீ கரந்தென்னைச்செய்கின்றன *
எண்கொள்சிந்தையுள்நைகின்றேனென்கரியமாணிக்கமே * என்கண்கட்குத்
திண்கொள்ளவொருநா ளருளாயுன்திருவுருவே. (எ)

திருவுருவுகிடந்தவாறும் கொப்பூழ்செந்தாமரைமேல் * திசைமுகன்
கருவுள்வீற்றிருந்து படைத்திட்டகருமங்களும் *
பொருவிலுன்தனிநாயகமவைகேட்குந்தோறுமென்னெஞ்சம்நின்றுநெக்கு *
அருவிசோரும்கண்ணீ ரென்செய்கேனடியேனே. (அ)

அடியைமூன்றையிரந்தவாறுமங்கே நின்றுழ்கடலும்மண்ணும்விண்
முடியவீரடியால் முடித்துக்கொண்டமுக்கியமும் * [ணும்
நொடியுமாறவைகேட்குந்தோறு மென்னெஞ்சம்நின்றனக்கேகரைந்துகும் *
கொடியவல்வினையே னுன்னையென்றுகொல்கூடுவதே. (கூ)

கூடிநீரைக்கடைந்தவாறு மமுதம்தேவருண்ண * அசுரரை
வீடும்வண்ணங்களே செய்துபோனவித்தகமும் *
ஊடுபுக்கெனதாவியை யுருக்கியுண்டிடுகின்ற * நின்றன்னை
நாடும்வண்ணம்சொல்லாய் நச்சுநாகணையானே. (க0)

⁂ நாகணைமிசைநம்பிரான் சரணேசரண்நமக்கென்று*நாடொறும் *
ஏகசிந்தையனுக் குருகூர்ச்சடகோபன்மாறன் *
ஆகநூற்றவந்தாதி யாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார் *
மாகவைகுந்தத்து மகிழ்வெய்துவர்வைகலுமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



அஞ்சாம்பத்து - ஸம்பூர்ணம்.

பிறந்துலகங்காத்தளிக்கும்பேரருட்கண்ணுவுன்
சிறந்தகுணத்தாலுருகுஞ்சீலத்—திறந்தவிர்ந்து
சேர்ந்தநுபவிக்குநிலைசெய்யென்றசீர்மாறன்
வாய்ந்தபதத்தேமனமேவ்வகு. (ரு0)

# ஆறும்பத்து.

## க-வது, வைகல்பூங்கழிவாய்.

*அவதாரங்களாலும் இஷ்டஸித்தியில்லாமல் பின்னையும் அர்ச்சாவதாரங்களிலேயிறங்கி திருவண்டூர்ஸ்வாமி விஷயமாகபக்ஷிகளைத் தூது விட்டதை யருளிச்செய்கிறார்.*

கலித்துறை, பண்-நட்டராகம், தாளம்-ஏழொத்து.
அசாவேரிராகம் - ஆதிதாளம்.

✠ வைகல்பூங்கழிவாய் வந்துமேயுங்குருகினங்காள் *
செய்கொள்செந்நெலுயர் திருவண்வண்டூருறையும் *
கைகொள்சக்கரத் தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
கைகள்கூப்பிச்சொல்லீர் வினையாட்டியேன்காதன்மையே. (க)

காதல்மென்பெடையோ டுடன்மேயுங்கருநாராய் *
வேதவேள்வியொலிமுழங்கும் தண்டிருவண்வண்டூர் *
நாதன்ஞாலமெல்லாமுண்ட நம்பெருமானைக்கண்டு *
பாதம்கைதொழுதுபணியீ ரடியேன்திறமே. (உ)

திறங்கள்ாகியெங்கும் செய்களூடுழல்புள்ளினங்காள் *
சிறந்தசெல்வம்மல்கு திருவண்வண்டூருறையும் *
கறங்குசக்கரக்கைக் கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
இறங்கிநீர்தொழுதுபணியீ ரடியேனிடரே. (ங)

இடரில்போகம்மூழ்கி யிணைந்தாடும்மடவன்னங்காள் *
விடலில்வேதவொலிமுழங்கும் தண்திருவண்வண்டூர் *
கடல்மேனிப்பிரான் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
உடலமநைநதொருத்தி யுருகுமென்றுணர்த்துமினே. (ச)

உணர்த்தலூடலுணர்ந் துடன்மேயும்மடவன்னங்காள் *
திணர்த்தவண்டல்கள்மேல் சங்குசேரும்திருவண்வண்டூர் *
புணர்த்தபூந்தண்டுழாய்முடி நம்பெருமானைக்கண்டு *
புணர்த்தகையினரா யடியேனுக்கும் போற்றுமினே. (ரு)

போற்றியானிரந்தேன் புன்னைமேலுறைபூங்குயில்காள் *
சேற்றில்வாளைதுள்ளும் திருவண்வண்டூருறையும் *
ஆற்றலாழியங்கை யமரர்பெருமானைக்கண்டு *
மாற்றங்கொண்டருளீர் மையல்தீர்வதொருவண்ணமே. (சு)

ஒருவண்ணம்சென்றுபுக் கெனக்கொன்றுரையொண்கிளியே *
செருவொண்பூம்பொழில்சூழ் செக்கர்வேலைத்திருவண்வண்டூர் *
கருவண்ணம்செய்யவாய் செய்யகண்செய்யகைசெய்யகால் *
செருவொண்சக்கரம்சங் கடையாளம்திருந்தக்கண்டே. (எ)

திருந்தக்கண்டெனக்கொன்றுரையா யொண்சிறுபூவாய் *
செருந்திநாழல்மகிழ் புன்னைசூழ்தண்டிருவண்வண்டூர் *
பெருந்தண்தாமரைக்கண் பெருநீண்முடிநால்தடந்தோள் *
கருந்திண்மாமுகில்போல் திருமேனியடிகளையே. (அ)

அடிகள்கைதொழு தலர்மேலசையுமன்னங்காள் *
விடிவைசங்கொலிக்கும் திருவண்வண்டூருறையும் *
கடியமாயன்தன்னைக் கண்ணனைநெடுமாலைக்கண்டு *
கொடியவல்வினையேன் திறம்கூறுமின்வேறுகொண்டே. (கூ)

வேறுகொண்டும்மையானிரந்தேன் வெறிவண்டினங்காள் *
தேறுநீர்ப்பம்பை வடபாலைத்திருவண்வண்டூர் *
மாறில்போரரக்கன் மதிள்நீறெழச்செற்றுகந்த *
ஏறுசேவகனுர்க்கென்னையுமுளளென்மின்களே. (க0)

⁂ மின்கொள்சேர்புரிநூல்குறளாயகல்ஞாலம்கொண்ட *
வன்கள்வனடிமேல் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
பண்கொளாயிரத்துள்ளிவைபத்தும் திருவண்வண்டூர்க்கு - *
இன்கொள்பாடல்வல்லார் மதனர்மின்னிடையவர்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



வைகல்திருவண்வண்டூர் வைகுமிராமனுக்கென்
செய்கைதனைப்புள்ளினங்காள்செப்புமெனக்—கைகழிந்த
காதலுடன்றூதுவிடுங்காரிமாறன்கழலே
மேதினியீர்நீர்வணங்குமின். (ருக)



## உ-வது, மின்னிடைமடவார்.



தூதிகோக்தியால் ஸர்வேஶ்வரன் விளம்பித்து வருகையாலே உமக்கு வேண்டினஸ்த்ரீகளிருக்க இங்கேவரவேண்டாமென்று ப்ரணய கலஹத்தாலே திரஸ்காரம்பண்ணினதையருளிச் செய்கிறார்.



அறுசீராசிரியத்துறை, பண்-சீகாமரம், தாளம்-ஏழொத்து.
சோகவராளிராகம் - ஆதிதாளம்.

⁂ மின்னிடைமடவார்கள்நின்னருள்சூடுவார்முன்புநானதஞ்சுவன் *
மன்னுடையிலங்கை யரண்காய்ந்தமாயவனே *
உன்னுடைய † சுண்டாயம்நானறிவனினியதுகொண்டுசெய்வதென்
என்னுடையபந்தும்கழலும் தந்துபோகுநம்பீ. (க)

† சுண்டாயம் - வஞ்சகம் - ஸ்வார்த்த பரத்வம்.

போகுநம்பியுன்தாமரைபுரைகண்ணிணையும்செவ்வாய்முறுவலும் *
ஆகுலங்கள்செய்ய அழிதற்கேநோற்றோமேயாம் *
தோகைமாமயிலார்கள்நின்னருள்சூடுவார்செவியோசைவைத்தெழ *
ஆகள்போகவிட்டுக் குழலூதுபோயிருந்தே. (உ)

போயிருந்துநின்புள்ளுவ மறியாதவர்க்குரைநம்பீ * நின்செய்ய
வாயிருங்கனியும் கண்களும்விபரீதமிந்நாள் *
வேயிரும்தடம்தோளினா ரித்திருவருள்பெறுவார்யவர்கொல் *
மாயிரும்கடலைக்கடைந்த பெருமானாலே. (௩)

ஆலினீளிலையேழுலகமுண் டன்று நீகிடந்தாய் * உன்மாயங்கள்
மேலைவானவருமறியா ரினியெம்பரமே ? *
வேலினேர்தடங்கண்ணினார் விளையாடுசூழலைச்சூழவேநின்று *
காலிமேய்க்கவல்லா யெம்மைநீகழறேலே. (௪)

கழறேல்நம்பீஉன் ‡ கைதவம்மண்ணும்விண்ணும் நன்கறியும் * திண்சக்கர
நிழறுதொல்படையா யுனக்கொன் றுணர்த்துவன்நான் *
மழறுதேன்மொழியார்கள் நின்னருள்சூடுவார்மனம்வாடிநிற்க * எம்
குழறுபூவையொடும் கிளியோடும்குழகேலே. (ரு)

குழகியெங்கள் $ குழமணன்கொண்டுகோயின்மைசெய்துகன்மமொன்றில்லை
பழகியாமிருப்போம் பரமேயித்திருவருள்கள் *
அழகியாரிவ்வுலகுமூன்றுக்கும் தேவிமைதகுவார்பலருளர் *
கழகமேறேல்நம்பீ உனக்குமிளைதேகன்மமே. (சு)

கன்மமன்றெங்கள்கையில் பாவைபறிப்பது, கடல்ஞாலமுண்டிட்ட *
நின்மலாநெடியா யுனக்கேலும்பிழைபிழையே *
வன்மமேசொல்லியெம்மைநீவிளையாடுதி அதுகேட்கில்
¶ என்னைமார் தன்மபாவமென்னாரொருநான்றுதடிபிணக்கே. (எ)

பிணக்கியாவையும்யாவரும் பிழையாமல்பேதித்தும்பேதியாததோர்
கணக்கில்கீர்த்திவெள்ளக் கதிர்ஞானமூர்த்தியினாய் * [மை *
இணக்கியெம்மையெந்தோழிமார் விளையாடப்போதுமினென்னைப்போந்தோ
உணக்கிநீவளைத்தா லென்சொல்லாருகவாதவரே. (அ)

உகவையால்நெஞ்சமுள்ளுருகி யுன்தாமரைத்தடங்கண்விழிகளின் *
அகவலைப்படுப்பா னழித்தாயுன்திருவடியால் *
தகவுசெய்திலைஎங்கள்சிற்றிலும் யாமடுசிறுசோறுங்கண்டு * நின்
முகவொளிதிகழ முறுவல்செய்துநின்றிலையே. (கூ)

நின்றிலங்குமுடியினா யிருபத்தோர்காலரசுகளைகட்ட *
வென்றிநீண்மழுவா வியன்ஞாலமுன்படைத்தாய் *
இன்றிவ்வாயர்குலத்தைவீடுய்யத்தோன்றிய கருமாணிக்கச்சுடர் *
நின்றன்னால்நலிவேபடுவோமென்று மாய்ச்சியோமே. (க0)

---

‡ கைதவம் - க்ர்த்ரிமம் - பொய். $ குழமணன் - மரப்பாச்சி. ¶ என், ஐம்மார் - ஆணுடன்பிறந்தார்; தமயன்மார்.

⁂ ஆய்ச்சியாகியவன்னையாலன்றுவெண்ணெய்வார்த்தையுள் * சீற்றமுண்டு
கூத்தவப்பன்றன்னைக் குருகூர்ச்சடகோபன் * [மு
ஏத்தியதமிழ்மாலை யாயிரத்துளிவையுமோர்பத்திசையொடும் *
நாத்தன்னால்நவிலவுரைப்பார்க்கில்லை நல்குரவே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



மின்னிடையார்சேர்கண்ணன் மெத்தெனவந்தானென்று
தன்னிலைபோய்ப்பெண்ணிலையாய்த்தான் றள்ளி—உன்னுடனே
கூடேனென் றாடுங்குருகையர்கோன்றாடொழவே
நாடோறுநெஞ்சமே நல்கு. (ருஉ)

---

## ௩-வது, நல்குரவும்.



ப்ரணயகலஹத்தில் விருத்தமாயிருக்கிற தம்மை விருத்த விபூதிகனான ஸர்வேஶ்வரன் கைக்கொண்டதை அருளிச்செய்கிறார்.

---

கலித்துறை, பண் - நட்டராகம், தாளம் - நடையொத்து.

உசேனிராகம் - ரூபகதாளம்.

⁂ நல்குரவும்செல்வும் நரகும்சுவர்க்கமுமாய் *
வெல்பகையும்நட்பும் விடமுமமுதமுமாய் *
பல்வகையும்பரந்த பெருமானென்னையாள்வானை *
செல்வம்மல்குகுடித் திருவிண்ணகர்க்கண்டேனே. (க)

கண்டவின்பம்துன்பம் கலக்கங்களுட்தேற்றமுமாய்
தண்டமும்தண்மையும் தழலும்நிழலுமாய் *
கண்டுகொள்தற்கரிய பெருமானென்னையாள்வானூர் *
தெண்திரைப்புனல்சூழ் திருவிண்ணகர்நன்னகரே. (உ)

நகரமும்நாடுகளும் ஞானமும்மூடமுமாய் *
நிகரில்சூழ்சுடராயிருளாய் நிலனாய்விசும்பாய் *
சிகரமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
புகர்கொள்கீர்த்தியல்லாலில்லை யாவர்க்கும்புண்ணியமே. (௩)

புண்ணியம்பாவம் புணர்ச்சிபிரிவென்றிவையாய் *
எண்ணமாய்மறப்பா யுண்மையாயின்மையாயல்லனாய் *
திண்ணமாடங்கள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
கண்ணநின்னருளே கண்டுகொண்மின்கள்கைதவமே. (௪)

கைதவம்செம்மைகருமைவெளுமையுமாய் *
மெய்பொய்யிளமை முதுமைபுதுமைபழமையுமாய் *
செய்ததிண்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
பெய்தகாவுகண்டீர் பெருந்தேவுடைமூவுலகே. (௫)

மூவுலகங்களுமா யல்லனுயுகப்பாய்முனிவாய் *
பூவில்வாழ்மகளாய்த் தவ்வையாய்ப்புகழாய்ப்பழியாய் *
தேவர்மேவித்தொழும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
பாவியேன்மனத்தே யுறைகின்றபரஞ்சுடரே. (சு)

பரஞ்சுடருடம்பா யழுக்குப்பதித்தவுடம்பாய்
கரந்தும்தோன்றியும்நின்றும் கைதவங்கள்செய்தும் * விண்ணோர்
சிரங்களால்வணங்கும் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
வரங்கொள்பாதமல்லாலில்லை யாவர்க்கும்வன்சரணே. (எ)

வன்சரண்சுரர்க்கா யசுரர்க்குவெங்கூற்றமுமாய் *
தன்சரண்நிழற்கீ ழுலகம்வைத்தும்வையாதும் *
தென்சரண்திசைக்குத் திருவிண்ணகர்ச்சேர்ந்தபிரான் *
என்சரணென்கண்ண னென்னையாளுடையென்னப்பனே. (அ)

என்னப்பனெனக்கா ‡ யிகுளாயென்னைப்பெற்றவளாய் *
பொன்னப்பன்மணியப்பன் முத்தப்பனென்னப்பனுமாய் *
மின்னப்பொன்மதிள்சூழ் திருவிண்ணகர்ச்சேர்ந்தவப்பன் *
தன்னொப்பாரில்லப்பன் தந்தனன்தனதாள்நிழலே. (கூ)

நிழல்வெய்யில்சிறுமைபெருமை குறுமைநெடுமையுமாய் *
சுழல்வனநிற்பன மற்றுமாயவையல்லனுமாய் *
மழலைவாய்வண்டுவாழ் திருவிண்ணகர்மன்னுபிரான் *
கழல்களன்றி மற்றோர்களைகணிலம்காண்மின்களே. (க0)

‡‡ காண்மின்களுலகீரென்று கண்முகப்பேநிமிர்ந்த *
தாளிணையன்றன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
ஆணையாயிரத்துத் திருவிண்ணகர்ப்பத்தும்வல்லார் *
கோணையின்றி விண்ணோர்க்கென்றுமாவர்குரவர்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



நல்லவலத்தானம்மைச் சேர்த்தோன்முன்னண்ணுரை
வெல்லும்விருத்த விபூதியனென்—றெல்லையறத்
தானிருந்துவாழ்த்துந் தமிழ்மாறன்சொல்வல்லார்
வானவர்க்குவாய்த்த குரவர். (ருங)



‡ இகுள்-இகுளை என்பதின் கடைக்குறை. தோழி என்று பொருள். செவிலித்தாய் என்று அருளிச்செய்வர். செவிலித்தாய்-தாய்க்குத்தோழி.

## ச-வது; குரவையாய்ச்சியர்.

அவ்வாறு கூட்டிக்கொண்ட க்ருஷ்ணனுடைய குரவைமுதலான லீலைகளும் அநுசந்தித்து ப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண்-தக்கராகம், தாளம்-ஏழொத்து.
யமுனகல்யாணிராகம் - ஆதிதாளம்.

‡‡ குரவையாய்ச்சியரோடுகோத்ததும் குன்றமொன்றேந்தியதும் *
உரவுநீர்ப்பொய்கைநாகம்காய்ந்தது முட்படமற்றும்பல *
அரவில்பள்ளிப்பிரான்தன் மாயவினைகளையேயலற்றி *
இரவுநன்பகலும் † தவிர்கில மென்னகுறைவெனக்கே. (க)

கேயத்தீங்குழலூதிற்றும்நிரைமேய்த்ததும், கெண்டையொண்கண்*
வாசப்பூங்குழல்பின்னைதோள்கள்மணந்ததும் மற்றும்பல *
மாயக்கோலப்பிரான்றன் செய்கைநினைந்துமனம்குழைந்து *
நேயத்தோடுகழிந்தபோ தெனக்கெவ்வுலகம்நிகரே. (உ)

நிகரில்மல்லரைச்செற்றதும் நிரைமேய்த்ததும் * நீணெடுங்கைச்
சிகரமாகளிறட்டது மிவைபோல்வனவும்பிறவும் *
புகர்கொள்சோதிப்பிரான்றன் செய்கைநினைந்துபுலம்பி * என்றும்
நுகரவைகல்வைகப்பெற்றே னெனக்கென்னினிநோவதுவே. (ங)

நோவவாய்ச்சியுரலோடார்க்க விரங்கிற்றும் * வஞ்சப்பெண்ணைச்
சாவப்பாலுண்டது மூர்சகடமிறச்சாடியதும் *
தேவக்கோலப்பிரான்றன் செய்கைநினைந்துமனங்குழைந்து *
மேவக்காலங்கள்கூடினே னெனக்கென்னினிவேண்டுவதே. (ச)

வேண்டித்தேவரிரக்கவந்துபிறந்ததும் வீங்கிருள்வாய் *
பூண்டன்றன்னைபுலம்பப்போ யங்கோராய்க்குலம்புக்கதும் *
காண்டலின்றிவளர்ந்து கஞ்சனைத்துஞ்சவஞ்சம்செய்ததும்
ஈண்டுநானலற்றப்பெற்றே னெனக்கென்னஇகலுளதே. (ரு)

இகல்கொள்புள்ளைப்பிளந்தது மிமிலேறுகள்செற்றதுவும் *
உயர்கொள்சோலைக்குருந்தொசித்தது முட்படமற்றும்பல *
அகல்கொள்வையமளந்தமாய னென்னப்பன்றன்மாயங்களே *
பகலிராப்பரவப்பெற்றே னெனக்கென்னமனப் ‡ பரிப்பே. (சு)

மனப்பரிப்போடழுக்கு மானிடசாதியில்தான்பிறந்து *
தனக்குவேண்டுருக்கொண்டு தான்றனசீற்றத்தினைமுடிக்கும் *
புனத்துழாய்முடிமாலைமார்ப னென்னப்பன்றன்மாயங்களே *
நினைக்கும்நெஞ்சுடையே னெனக்கினியார்நிகர்நீணிலத்தே. (எ)

† "தவிர்கிலமென்னகுறைநமக்கே" என்று உரையின்பாடம். தவிர்கிலனென்ன குறைவெனக்கே" என்றும் பாடஞ் சொல்லுவர்.

‡ பரிப்பு-பரிவு-துக்கம்.

நீணிலத்தொடுவான்வியப்ப நிறைபெரும்போர்கள்செய்து *
வாணனாயிரம்தோள் துணித்ததுமுட்படமற்றும்பல *
மாணியாய்நிலங்கொண்டமாய னென்னப்பன்றன்மாயங்களே *
காணும்நெஞ்சுடையே னெனக்கினியென்னகலக்கமுண்டே. (அ)

கலக்கவேழ்கடலேழ்மலை யுலகேழும்கழியக்கடாய் *
உலக்கத்தேர்கொடுசென்றமாயமு முட்படமற்றும்பல *
வலக்கையாழியிடக்கைச்சங்க மிவையுடைமால்வண்ணனை *
மலக்குநாவுடையேற்கு மாறுளதோவிம்மண்ணின்மிசையே. (கூ)

மண்மிசைப்பெரும்பாரம்நீங்க வோர்பாரதமாபெரும்போர்
பண்ணி * மாயங்கள்செய்து சேனையைப்பாழ்படநூற்றிட்டுப்போய் *
விண்மிசைத்தனதாமமேபுக மேவியசோதிதன்தாள் *
நண்ணிநான்வணங்கப்பெற்றே னெனக்கார்பிறர்நாயகரே. (க0)

⁂ நாயகன்முழுவேழுலகுக்குமாய் முழுவேழுலகும் * தன்
வாயகம்புகவைத் துமிழ்ந்தவையாயவையல்லனுமாம் *
கேசவனடியிணைமிசைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தூயவாயிரத்திப்பத்தால் பத்தராவர்துவளின்றியே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



குரவைமுதலாங் கண்ணன்கோலச்செயல்கள்
இரவுபகலென்னும லென்றும்—பரவுமனம்
பெற்றேனென்றேகளித்துப் பேசும்பராங்குசன்றன்
சொற்றேனினெஞ்சே துவள். (ருச)

---

## ரு-வது, துவளில்.



பகவதநுபவத்தா லொருப்ரீதிவிசேஷம் வந்து அதினாலே நாயகிதன்மையடைந்து தொலைவில்லிமங்கலஸ்வாமியிடத்தில் அதிப்ராவண்யம்பிறந்திருக்க அதுகண்டுதாய்மார்கோபிக்க இப்ப்ராவண்யத்தைப் போக்கப்போகாது இவளிடத்தி லாசைவிடுங்களென்று தோழிமார்கள் தாய்மாரோடு சொல்லுஞ்சொல்லாக வருளிச்செய்கிறார்.

---

எழுசீராசிரியவிருத்தம், பண்-பஞ்சமம், தாளம்-ஏழொத்து.
**சங்கராபரணராகம் - ஆதிதாளம்.**

⁂ துவளில்மாமணிமாடமோங்கு தொலைவில்லிமங்கலம்தொழு
மிவளை * நீரினியன்னைமீ ருமக்காசையில்லைவிடுமினோ *
தவளவொண்சங்குசக்கரமென்றும் தாமரைத்தடங்கணென்றும் *
குவளையொண்மலர்க்கண்கள்நீர்மல்க நின்றுநின்றுகுமிறுமே. (க)

குமிறுமோசைவிழவொலித்துலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு - *
அமுதமென்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் *
திமிர்கொண்டாலொத்துநிற்கும் மற்றிவள்தேவதேவபிரானென்றே
நிமியும்வாயொடுகண்கள்நீர்மல்க நெக்கொசிந்துகரையுமே. (உ)

கரைகொள்பைம்பொழில்தண்பணைத் துலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு - *
உரைகொளின்மொழியாளை நீருமக்காசையின்றியகற்றினீர் *
திரைகொள்பௌவத்துச்சேர்ந்ததும் திசைஞாலம்தாவியளந்ததும் *
நிரைகள்மேய்த்ததுமேபிதற்றி நெடுங்கண்ணீர்மல்கநிற்குமே. (ரு)

நிற்கும்நான்மறைவாணர்வாழ் துலைவில்லிமங்கலம்கண்டபின் *
† அற்கமொன்றுமறவுறுள் மலிந்தாள்கண்டீரிவளன்னைமீர் *
கற்கும்கல்வியெல்லாம் கருங்கடல்வண்ணன்கண்ணபிரானென்றே *
‡ ஒற்கமொன்றுமில ளுகந்துகந்துள்மகிழ்ந்துகுழையுமே. (சு)

குழையும்வாள்முகத்தேழையைத்துலைவில்லிமங்கலம்கொண்டுபுக்கு
இழைகொள்சோதிச்செந்தாமரைக்கண்பிரா னிருந்தமைகாட்டினீர் *
மழைபெய்தாலொக்கும்கண்ணநீரினொடன்றுதொட்டும்§ மையாந்து * இவள்
நுழையும்சிந்தையளன்னைமீர் தொழுமத்திசையுற்றுநோக்கியே. (ரு)

நோக்கும்பக்கமெல்லாம் கரும்பொடுசெந்நெலோங்குசெந்தாமரை *
வாய்க்கும்தண்பொருநல் வடகரைவண் துலைவில்லிமங்கலம் *
நோக்குமேலத்திசையல்லால் மறுநோக்கிலள், வைகல்நாடொறும் *
வாய்க்கொள்வாசகமும் மணிவண்ணன்நாமமேயிவளன்னைமீர். (சு)

அன்னைமீரணிமாமயில் சிறுமானிவள்நம்மைக்கைவலிந்து - *
எனவார்த்தையும்கேட்குறுள் துலைவில்லிமங்கலமென்றல்லால் *
முன்னம்நோற்றவிதிகொலோ முகில்வண்ணன்மாயங்கொலோ * அவன்
சின்னமும்திருநாமமு மிவள்வாயனகள்திருந்தவே. (எ)

திருந்துவேதமும்வேள்வியும் திருமாமகளிரும்தாம் * மலிந்
திருந்துவாழ்பொருநல் வடகரைவண் துலைவில்லிமங்கலம் *
கருந்தடங்கண்ணிகைதொழுதவந்நாள் துடங்கியிந்நாடொறும் *இருந்
திருந்தரவிந்தலோசநவென்றென்றே நைந்திரங்குமே. (அ)

இரங்கிநாடொறும்வாய்வெரீஇ யிவள்கண்ணநீர்களலமர *
மரங்களுமிரங்கும்வகை மணிவண்ணவோவென்றுகூவுமால் *
துரங்கம்வாய்பிளந்தானுறை துலைவில்லிமங்கலமென்று * தன்
கரங்கள்கூப்பித்தொழு மவ்வூர்த்திருநாமங்கற்றதற்பின்னையே. (கூ)

பின்னைகொல்? நிலமாமகள்கொல்? திருமகள்கொல்பிறந்திட்டாள் *
என்னமாயங்கொலோ இவள்நெடுமாலென்றேநின்றுகூவுமால் *
முன்னிவந்தவனின்றிருந்துறையும் துலைவில்லிமங்கலம்
சென்னியால்வணங்கும் * அவ்வூர்த்திருநாமம்கேட்பதுசிந்தையே. ()

† அற்கம்-அடக்கம். ‡ ஒற்கம் - ஒடுக்கம்: லஜ்ஜை. § மையாந்து - மயங்கி.

‡‡ சிந்தையாலும்சொல்லாலும் செய்கையினுலும்தேவபிரானையே *
தந்தைதாயென்றடைந்த வண்குருகூரவர்சடகோபன் *
முந்தையாயிரத்துள்ளிவை தூலவில்லிமங்கலத்தைச்சொன்ன *
செந்தமிழ்பத்தும்வல்லா ரடிமைசெய்வார்திருமாலுக்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



துவளறுசீர்மால்திறத்துத் தொன்னலத்தால்நாளும்
துவளறுதன்சீலமெல்லாஞ் சொன்னுன்—துவளறவே
முன்னமநுபவத்தில் மூழ்கிநின்றமாறனதில்
மன்னுமுவப்பால்வந்த மால். (ருரு)

## கூ-வது, மாலுக்கு.



இவ்வண்ணம் வ்யாமோஹப்பட்டாலும் அநுபவம் வித்தியாதபடியால் அந்தவிரஹார்த்தியால் மிகவும் க்ருசையாய்ப்பெண்ணுக்கு ஆபரணங்களும் காந்திமுதலானவைகளும் நழுவிப்போயிற்றென்று தாய்சொல்லுஞ்சொல்லாக வருளிச்செய்கிருர்.

கலிவிருத்தம், பண்-முதிர்ந்தகுறிஞ்சி, தாளம்-ஏழொத்து.
காபிராகம் -ரூபகதாளம்.

‡‡ மாலுக்கு வையமளந்தமணாளற்கு *
நீலக்கருநிற மேகநியாயற்கு *
கோலச்செந்தாமரைக்கண்ணற்கு — * என்கொங்கல
ரேலக்குழலி யிழந்ததுசங்கே. (க)

சங்குவில்வாள்தண்டு சக்கரக்கையற்கு *
செங்கனிவாய்ச்செய்ய தாமரைக்கண்ணற்கு *
கொங்கலர்தண்ணந்துழாய் முடியானுக்கு * என்
மங்கையிழந்தது மாமைநிறமே. (உ)

நிறங்கரியானுக்கு நீடுலகுண்ட *
திறம்கிளர்வாய்ச் சிறுக்கள்வரவற்கு *
† கறங்கியசக்கரக் கையவனுக்கு * என்
பிறங்கிருங்கூந்த லிழந்ததுபீடே. (ங)

பீடுடைநான்முகனைப் படைத்தானுக்கு *
மாடுடைவையமளந்த மணாளற்கு *
நாடுடைமன்னர்க்குத் ‡ தூதுசெல்நம்பிக்கு * என்
பாடுடையல்குலிழந்ததுபண்பே. (ச)

† கறங்குகை - சுழலுகை. ‡ "தூதுசெய்" என்று உரையின்பாடம்.

பண்புடைவேதம் பயந்தபரனுக்கு *
மண்புரைவையமிடந்த வராகற்கு *
தெண்புனல்பள்ளியெந் தேவபிரானுக்கு * என்
கண்புனேகோதை யிழந்ததுகற்பே. (ரு)

கற்பகக்காவன நற்பலதோளற்கு *
பொற்சுடர்க்குன்றன்ன பூந்தண்முடியற்கு *
நற்புலதாமரை நாண்மலர்க்கையற்கு * என்
விற்புருவ * கொடி தோற்றதுமெய்யே. (சு)

மெய்யமர்பல்கலன் நன்கணிந்தானுக்கு *
பைய்ரவினணைப் பள்ளியினானுக்கு *
கையொடுகால்செய்ய கண்ணபிரானுக்கு * என்
தையலிழந்தது தன்னுடைச்சாயே. (எ)

சாயக்குருந்தமொசித்த தமியற்கு *
மாயச்சகடமுதைத்த மணாளற்கு *
பேயைப்பிணம்படப் பாலுண்பிரானுக்கு * என்
வாசக்குழலி யிழந்ததுமாண்பே. (அ)

மாண்பமைகோலத் தெம்மாயக்குறளற்கு *
சேண்சுடர்க்குன்றன்ன செஞ்சுடர்மூர்த்திக்கு *
காண்பெருந்தோற்றத் தெங்காகுத்தநம்பிக்கு * என்
பூண்புனைமென்முலே தோற்றதுபொற்பே. (கூ)

பொற்பமைநீண்முடி பூந்தண்டுழாயற்கு *
மற்பொருதோளுடை மாயப்பிரானுக்கு *
நிற்பனபல்லுருவாய் நிற்குமாயற்கு * என்
கற்புடையாட்டி யிழந்ததுகட்டே. (க0)

⁂ கட்டெழில்சோலை நல்வேங்கடவாணனை *
கட்டெழில்தென்குருகூர்ச் சடகோபன்சொல் *
கட்டெழிலாயிரத் திப்பத்தும்வல்லவர் *
கட்டெழில்வானவர் போகமுண்பாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



மாலுடனே தான்கலந்து வாழப்பெறுமையால்
சாலநைந்து தன்னுடைமை தானடயக்—கோலியே
தானிகழவேண்டாமற் றன்னைவிடல்சொல்மாறன்
ஊனமறுசீர்நெஞ்சே யுண். (ருசு)

## எ-வது, உண்ணுஞ்சோறு.

இவ்வண்ணஞ் சொன்னதாயானவள் மூர்ச்சித்திருக்கையாலே பெண்ணானவள் மோஹந்தெளிந் தெழுந்திருந்து எனக்கு தாரகபோஷகபோக்யமெல்லாங் கண்ணனேயென்று திருக்கோளூர்க்கே போகையில் தாய்தெளிந்தெழுந்திருந்து தன்பெண் திருக்கோளூர்க்குப்போனது நிச்சயமென்றுதாய்சொல்லுஞ்சொல்லாக அருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண்-பழஞ்சுரம், தாளம்- ஏழொத்து.

காம்பூஜிராகம் - ஆதிதாளம்.

✠ உண்ணுஞ்சோறுபருகுநீர் தின்னும்வெற்றிலையுமெல்லாம்
கண்ணன் * எம்பெருமானென்றென்றே கண்கள் ¶ நீர்கள்மல்கி *
மண்ணினுள வன்சீர் வளம்மிக்கவனூர்வினவி *
திண்ணமென்னிளமான்புகு மூர்திருக்கோளூரே. (க)

ஊரும்நாடுமுலகமும் தன்னைப்போல் * அவனுடைய
பேரும்தார்களுமேபிதற்றக் கற்புவானிடறி
சேருநல்வளஞ்சேர் பழனத்திருக்கோளூர்க்கே *
போருங்கொலுரையீர் கொடியேன்கொடிபூவைகளே. (உ)

பூவைபைங்கிளிகள்பந்து தூதைபூம்புட்டில்கள் *
யாவையுந்திருமால் திருநாமங்களேகூவியெழும் * என்
பாவைபோயினித்தண்பழனத் திருக்கோளூர்க்கே *
கோவைவாய்துடிப்பமழைக்கண் ணொடென்செய்யுங்கொலோ. (ங)

கொல்லையென்பர்கொலோ குணம்மிக்கனளென்பர்கொலோ *
சில்லைவாய்ப்பெண்டுகளயற் சேரியுள்ளாருமெல்லே ! *
செல்வம்மல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
மெல்லிடைநுடங்கவிளமான் செல்லமேவினளே. (ச)

மேவிநைந்துநைந்துவிளை யாடலுறாளென்சிறுத்
தேவிபோய் * இனித்தன்திருமால் திருக்கோளூரில் *
பூவியல்பொழிலும் தடமுமவன்கோயிலுங்கண்டு *
ஆவியுள்குளிரஎங்ஙனே யுகக்குங்கொலின்றே. (ரு)

இன்றெனக்குதவாதகன்ற விளமானினிப்போய் *
தென்திசைத்திலதமனைய திருக்கோளூர்க்கே
சென்று * தன்திருமால்திருக்கண்ணும் செவ்வாயுங்கண்டு *
நின்றுநின்றுநையும் நெடுங்கண்கள்பனிமல்கவே. (சு)

---

¶ "நீர்மல்கி" என்றும் பாடம்.

மல்குநீர்க்கண்ணொடுமைய லுற்றமனத்தனளாய் *
அல்லுநன்பகலும்நெடுமா லென்றழைத்தினிப்போய் *
செல்வம்மல்கியவன்கிடந்த திருக்கோளூர்க்கே *
ஒல்கியொல்கிநடந்தெங்ஙனே புகுங்கொலோசிந்தே. (எ)

ஒசிந்தநுண்ணிடைமேல்கையை வைத்துநொந்துநொந்து *
கசிந்தநெஞ்சினளாய்க்கண்ண நீர்துளும்பச்செல்லுங்கொல் *
ஒசிந்தவொண்மலராள்கொழு நன்திருக்கோளூர்க்கே *
கசிந்தநெஞ்சினளாயெம்மை நீத்தஎம்காரிகையே. (அ)

காரியம்நல்லனகளவைகாணி லென்கண்ணனுக்கென்று *
ஈரியாயிருப்பாளிதெல்லாம் கிடக்கவினிப்போய் *
சேரிபல்பழிதூவியிரைப்பத் திருக்கோளூர்க்கே *
நேரிழைநடந்தாளெம்மை யொன்றும்நினைத்திலளே. (கூ)

நினைக்கிலேன்தெய்வங்காள் நெடுங்கணிளமானினிப்போய் *
அனைத்துலகுமுடைய அரவிந்தலோசனனை *
தினைத்தனையும்விடாளவன் சேர்திருக்கோளூர்க்கே *
மனைக்குவான்பழியும்நினையாள் செல்லவைத்தனளே. (க0)

✽ வைத்தமாநிதியாம் மதுசூதனையேயலற்றி *
கொத்தலர்பொழில்சூழ்குரு கூர்ச்சடகோபன்சொன்ன
பத்துநூற்றுளிப்பத்தவன் சேர்திருக்கோளூர்க்கே *
சித்தம்வைத்துரைப்பார் திகழ்பொன்னுலகாள்வாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



உண்ணுஞ்சோறுதி யொருமூன்றுமெம்பெருமான்
கண்ணனென்றேநீர்மல்கிக் கண்ணிணைகள்—மண்ணுலகில்
மன்னுதிருக்கோளூரில் மாயன்பாற்போமாறன்
பொன்னடியேநந்தமக்குப் பொன். (ருஎ)

## அ-வது, பொன்னுலகு.



திருக்கோளூர்க்குப் போகிறேமென்று பலஹானியாலேபோகமாட்டாமலே நடுவே அருகிருந்த பக்ஷிகளைக்குறித்து உங்களுக்கு உபயவிபூதியுந் தருகிறோம் என்னவஸ்தையைப் பரமபதநாதனுக்குச் சொல்லுங்களென்றருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண்-குறிஞ்சி, தாளம்- ஏழொத்து.
துசாவந்திராகம் - ஆதிதாளம்.

✽ பொன்னுலகாளீரோ புவனிமுழுதாளீரோ *
நன்னலப்புள்ளினங்காள்வினையாட்டியேன்நானிறந்தேன் *
முன்னுலகங்களெல்லாம்படைத்த முகில்வண்ணன்கண்ணன் *
என்னலங்கொண்டபிரான்றனக் கென்நிலைமையுரைத்தே. (க)

மையமர்வாள்நெடுங்கண் மங்கைமார்முன்பென்
கையிருந்து * நெய்யமரின்னடிசில் நிச்சல்பாலொடுமேவீரோ *
கையமர்சக்கரத் தென்கனிவாய்ப்பெருமானைக்கண்டு *
மெய்யமர்காதல்சொல்லிக் கிளிகாள்விரைந்தோடிவந்தே. (உ)

ஓடிவந்தென்குழல்மே லொளிமாமலரூதீரோ *
கூடியவண்டினங்காள் குருநாடுடைஐவர்கட்காய் *
ஆடியமாநெடுந்தேர் படைநீறெழச்செற்றபிரான் *
சூடியதண்டுளபமுண்ட தூமதுவாய்கள்கொண்டே. (ங)

தூமதுவாய்கள்கொண்டுவந் தென்முல்லைகள்மேல்தும்பிகாள் *
பூமதுவுண்ணச்செல்லில் வினையேனைப்பொய்செய்தகன்ற *
மாமதுவார்தண்டுழாய்முடி வானவர்கோனைக்கண்டு *
யாமிதுவோதக்கவா றென்னவேண்டும்கண்டீர்நுங்கட்கே. (ச)

நுங்கட்கியானுரைக்கேன் வம்மின்யான்வளர்த்தகிளிகாள் *
வெங்கண்புள்ளூர்ந்துவந்து வினையேனைநெஞ்சங்கவர்ந்த *
செங்கட்கருமுகிலைச் செய்யவாய்ச்செழுங்கற்பகத்தை *
எங்குச்சென்றாகிலும்கண் டிதுவோதக்கவாறென்மினே. (ரு)

என்மினுநூல்மார்வ னென்கரும்பெருமானென்கண்ணன் * தன்
மன்னுநீள்கழல்மேல் தண்டுழாய்நமக்கன்றிநல்கான் *
கன்மின்களென்றும்மையான் கற்பியாவைத்தமாற்றம்சொல்லி *
சென்மின்கள்தீவினையேன் வளர்த்தசிறுபூவைகளே. (சு)

பூவைகள்போல்நிறத்தன் புண்டரீகங்கள்போலும்கண்ணன் *
யாவையும்யாவருமாய் நின்றமாயனென்னாழிப்பிரான் *
மாவைவல்வாய்பிளந்த மதுசூதற்கென்மாற்றம்சொல்லி *
பாவைகள்தீர்க்கிற்றிரே வினையாட்டியேன்பாசறவே. (எ)

பாசறவெய்தியின்னேவினையே னெனையூழிநைவேன் *
ஆசறுதூவிவெள்ளைக்குருகே † அருள்செய்தொருநாள் *
மாசறுநீலச்சுடர்முடி வானவர்கோனைக்கண்டு *
ஏசறும்நும்மையல்லால் மறுநோக்கிலள்பேர்த்துமற்றே. (அ)

பேர்த்துமற்றோர்களைகண் வினையாட்டியேன்நானொன்றிலேன் *
நீர்த்திரைமேலுலவி யிரைதேரும் ‡ புதாவினங்காள் *
கார்த்திரள்மாமுகில்போல் கண்ணன்விண்ணவர்கோனைக்கண்டு *
வார்த்தைகள்கொண்டருளியுரையீர் வைகல்வந்திருந்தே. (கூ)

வந்திருந்தும்முடைய மணிச்சேவலும்நீருமெல்லாம் *
அந்தரமொன்றுமின்றி யலர்மேலசையுமன்னங்காள் *
என்திருமார்வற்கென்னை யின்னவாறிவள்காண்மினென்று *
மந்திரத்தொன்றுணர்த்தியுரையீர் மறுமாற்றங்களே. (க0)

† "அருள்செய்யொருநாள்" என்று உரை. ‡ புதா - பெருநாரை.

⁂ மாற்றங்களாய்ந்துகொண்டு மதுசூதபிரானடிமேல் *
நாற்றங்கொள்பூம்பொழில்சூழ் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தோற்றங்களாயிரத்து ளிவையுமொருபத்தும்வல்லார் *
ஊற்றின்கண் நுண்மணல்போ லுருகாநிற்பர்நீராயே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பொன்னுலகுபூமியெல்லாம் புள்ளினங்கட்கேவழங்கி
என்னிடரைமாலுக் கியம்புமென—மன்னுதிரு
நாடுமுதற்றந்து நல்கிவிடுமாறனையே
நீடுலகீர்போய்வணங்குநீர். (ருஅ)

---

## கூ-வது, நீராய்நிலனாய்.



தூதுவிட்டும் வாராமையால் தன்னழைத்தல் கேட்குமவர்களெல்லாம் நீராயுருகும்படி ஸர்வேஶ்வரனுக்கும் பரமபதத்தில்நிற்கவும் அஸஹ்யமாகும்படி ஆழ்வாரழைத்ததை அருளிச்செய்கிறார்.

---

கலித்துறை, பண்-காந்தாரம், தாளம்-ஏழொத்து.

சாவேரிராகம் - ஆதிதாளம்.

நீராய்நிலனாய்த் தீயாய்க்காலாய்நெடுவானாய் *
சீரார்சுடர்களிரண்டாய்ச் சிவனாயயனானாய் *
கூரார்ஆழிவெண்சங்கேந்திக் கொடியேன்பால்
வாராய் * ஒருநாள், மண்ணும்விண்ணும்மகிழவே. (க)

மண்ணும்விண்ணும்மகிழக் குறளாய்வலங்காட்டி *
மண்ணும்விண்ணும்கொண்ட மாயவம்மானே *
நண்ணியுனைநான் கண்டுகந்துகூத்தாட *
நண்ணியொருநாள் ஞாலத்தூடேநடவாயே. (உ)

ஞாலத்தூடேநடந்துநின்றும் கிடந்திருந்தும் *
சாலப்பலநா ளுகந்தோறுயிர்கள்காப்பானே *
கோலத்திருமாமகளோ டுன்னைக்கூடாதே *
சாலப்பலநா ளடியேனின்னம்தளர்வேனோ. (ங)

தளர்ந்தும்முறிந்தும் சகடவசுரருடல்வேறா *
பிளந்துவீயத் திருக்காலாண்டபெருமானே *
கிளர்ந்துபிரமன்சிவ னிந்திரன்விண்ணவர்சூழ *
விளங்கவொருநாள் காணவாராய்விண்மீதே. (ச)

விண்மீதிருப்பாய்மலைமேல்நிற்பாய் கடல்சேர்ப்பாய் *
மண்மீதுழல்வா யிவற்றுளெங்கும்மறைந்துறைவாய் *
எண்மீதியன்ற புறவண்டத்தாயெனதாவி *
உண்மீதாடி யுருக்காட்டாதேயொளிப்பாயோ. (ரு)

பாயோரடிவைத்ததன்கீழ்ப் பரவைநிலமெல்லாம்
† தாய் * ஓரடியா லெல்லாவுலகும்தடவந்த
மாயோன் * உன்னைக்காண்பான் வருந்தியெனைநாளும் *
தீயோடுடன்சேர் மெழுகாயுலகில்திரிவேனோ. (சு)

உலகில்திரியும்கருமகதியா யுலகமாய் *
உலகுக்கேயோருயிருமானாய் புறவண்டத்து *
அலகில்பொலிந்த திசைபத்தாயவருவேயோ *
அலகில்பொலிந்த அறிவிலேனுக்கருளாயே. (எ)

அறிவிலேனுக்கருளா யறிவாருயிரானாய் *
வெறிகொள்சோதிமூர்த்தி யடியேன்நெடுமாலே *
கிறிசெய்தென்னைப்புறத்திட் டின்னம்கெடுப்பாயோ *
பிறிதொன்றறியாவடியே னாவிதிகைக்கவே. (அ)

ஆவிதிகைக்க ஐவர்குமைக்கும்சிற்றின்பம் *
பாவியேனைப் பலநீகாட்டிப்படுப்பாயோ *
தாவிவையம்கொண்ட தடந்தாமரைகட்கே *
கூவிக்கொள்ளும்கால மின்னம்குறுகாதோ. (கூ)

குறுகாமீளா இறுதிகூடா, எனையூழி *
சிறுகாபெருகா அளவிலின்பம்சேர்ந்தாலும் *
மறுகாலின்றி மாயோனுனக்கேயாளாகும் *
சிறுகாலத்தையுறுமோ அந்தோ ! தெரியிலே. (க0)

‡‡ தெரிதல்நினைத லெண்ணலாகாதிருமாலுக்கு - *
உரியதொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *
தெரியச்சொன்ன வோராயிரத்துளிப்பத்தும் *
உரியதொண்டராக்கு முலகமுண்டாற்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



நீராகிக்கேட்டவர்க ணெஞ்சழியமாலுக்கும்
ஏரார்விசும்பி லிருப்பரிதா—வாராத
காதலுடன்கூப்பிட்ட காரிமாறன்சொல்லை
ஓதிடவேயுய்யு முலகு. (ருகூ)

† தாய் - தாவி.

## ௧0-வது, உலகமுண்ட.

ஆழ்வார் ஆக்ருந்தம் பண்ண உம்முடைய பொருட்டே பரமபதத்தை விட்டுஇதுவே பரமபதமாக்கிக்கொண்டு திருமலையிலேவந்திருக்கி றோமென்ன அலர்மேல்மங்கைநாய்ச்சியாரைபுருஷகாரமாக்கி க்கொண்டு திருவேங்கடமுடையானை ப்ரபத்திசெய்த தை யருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம், பண்-பழம்பஞ்சுரம், தாளம்-ஏழொத்து.
நாதநாமக்கிரியைராகம்-அதிதாளம்.

‡‡ உலகமுண்டபெருவாயா வுலப்பில்கீர்த்தியம்மானே *
நிலவும்சுடர்சூழொளிமூர்த்தி நெடியாயடியேனாருயிரே *
திலதமுலகுக்காய்நின்ற திருவேங்கடத்தெம்பெருமானே *
குலதொலடியேனுனபாதம் கூடுமாறுகூறாயே. (௧)

கூறாய்நீறாய்நிலனாகிக் கொடுவல்லசுரர்குலமெல்லாம் *
சீறாவெரியும்திருநேமிவல்வா தெய்வக்கோமானே *
சேறார்சுனைத்தாமரைசெந்தீமலரும் திருவேங்கடத்தானே *
ஆறாவன்பிலடியே னுன்னடிசேர்வண்ணமருளாயே. (௨)

வண்ணமருள்கொளணிமேகவண்ணா மாயவம்மானே *
எண்ணம்புகுந்துதித்திக்குமமுதே யிமையோரதிபதியே *
தெண்ணலருவிமணிபொன்முத்தலைக்கும் திருவேங்கடத்தானே *
அண்ணலேயுன்னடிசேர $ அடியேற்காவாவென்னாயே. (௩)

ஆவாவென்னாதுலகத்தையலைக்கு மசுரர்வாணாள்மேல் *
தீவாய்வாளிமழைபொழிந்தசிலையா திருமாமகள்கேள்வா
தேவா * சுரர்கள்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே *
பூவார்கழல்களருவினையேன் பொருந்துமாறுபுணராயே. (௪)

புணராநின்றமரமேழன்றெய்த வொருவில்வலவாவோ *
புணரேய்நின்றமரமிரண்டின் நடுவேபோனமுதல்வாவோ *
திணரார்மேகமெனக்களிருசேரும் திருவேங்கடத்தானே *
திணரார்சார்ங்கத்துனபாதம் சேர்வதடியேனெந்நாளே. (௫)

எந்நாளேநாம்மண்ணளந்த விணைத்தாமரைகள்காண்பதற்கென்று — *
எந்நாளும்நின்றிமையோர்களேத்தி யிறைஞ்சியினமினமாய் *
மெய்ந்நாமனத்தால்வழிபாடுசெய்யும் திருவேங்கடத்தானே *
மெய்ந்நானெய்தியெந்நா ளுன்னடிக்களடியேன்மேவுவதே. (௬)

அடியேன்மேவியமர்கின்றவமுதே யிமையோரதிபதியே *
கொடியாவடுபுள் ளுடையானே கோலக்கனிவாய்ப்பெருமானே *
செடியார்வினைகள்தீர்மருந்தே திருவேங்கடத்தெம்பெருமானே *
நொடியார்பொழுதுமுனபாதம் காணநோலாதாற்றேனே. (௭)

$ "அடியோர்க்கு" என்று உரை.

நோலாதாற்றேனுனபாதம் காணவென்று நுண்ணுணர்வில் *
நீலார்கண்டத்தம்மானும் நிறைநான்முகனுமிந்திரனும் *
சேலேய்கண்ணார்பலர்சூழவிரும்பும் திருவேங்கடத்தானே *
மாலாய்மயக்கியடியேன்பால் வந்தாய்போலேவாராயே. (அ)

வந்தாய்போலேவாராதாய் வாராதாய்போல்வருவானே *
செந்தாமரைக்கட்செங்கனிவாய் நால்தோளமுதேயெனதுயிரே *
சிந்தாமணிகள்பகரல்லைப்பகல்செய் திருவேங்கடத்தானே *
அந்தோ ! அடியேனுனபாத மகலகில்லேனிறையுமே. (௯)

⁂ அகலகில்லேனிறையுமென் றலர்மேல்மங்கையுறைமார்பா *
நிகரில்புகழாயுலகமூன்றுடையா யென்னையாள்வானே *
நிகரிலமரர்முனிக்கணங்கள்விரும்பும் திருவேங்கடத்தானே *
புகலொன்றில்லாவடியே னுன்னடிக்கீழமர்ந்துபுகுந்தேனே. (௧0)

⁂ அடிக்கீழமர்ந்துபுகுந்தடியீர் வாழ்மினென்றென்றருள்கொடுக்கும்
படிக்கேழில்லாப்பெருமானைப் பழனக்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்துத் திருவேங்கடத்துக்கிவைபத்தும் *
பிடித்தார்பிடித்தார்வீற்றிருந்து பெரியவானுள்நிலாவுவரே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஆறும்பத்து - ஸம்பூர்ணம்.

உலகுய்யமால்நின்ற வுயர்வேங்கடத்தே
அலர்மகளைமுன்னிட்டவன்றன்—மலரடியே
வன்சரணாய்ச்சேர்ந்த மகிழ்மாறன்றாளிணையே
உன்சரணாய்நெஞ்சமே யுள். (௬0)

---

# ஏழாம்பத்து.



## க-வது, உண்ணிலாவிய.



ப்ரபத்திபண்ணினும் ப்ரபந்தபரிஸமாப்தி நிமித்தமாக ஈஶ்வரன்பலத்தைக் கொடாமல் விளம்பிக்க மிகவுமார்த்தராய் தன்றிருவடிகள் சேராதபடிக்கு இன்னு மிந்த்ரியங்களாலே எத்தனைநாள்பாதிப்பிப்பனோவென்று ஆக்ருந்தநம்பண்ணினதை யருளிச் யருளிச்செய்கிறார்.

---

ஆசிரியத்துறை, பண்-பழம்பஞ்சுரம், தாளம்-ஏழொத்து.

ஸாரங்கராகம் - அதிதாளம்.

⁂ உண்ணிலாவியவைவரால்குமைதீற்றி யென்னையுன்பாதபங்கயம் *
நண்ணிலாவகையே நலிவானின்னமெண்ணுகின்றாய் *
எண்ணிலாப்பெருமாயனே யிமையோர்களேத்துமுலகமூன்றுடை *
அண்ணலேயமுதே யப்பனேயென்னையாள்வானே. (௧)

என்னையாளும்வன்கோ வோரைந்திவைபெய்திராப்பகல்மோதுவித்திட்டு- *
உன்னைநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
கன்னலேயமுதேகார்முகில்வண்ணனே கடல்ஞாலம்காக்கின்ற *
மின்னுநேமியினாய் வினையேனுடைவேதியனே. (௨)

வேதியாநிற்குமைவரால் வினையேனைமோதுவித்து - * உன்திருவடிச்
சாதியாவகைநீ தடுத்தென்பெறுதியந்தோ *
ஆதியாகியகலிடம்படைத் துண்டுமிழ்ந்துகடந்திடந்திட்ட *
சோதிநீண்முடியாய் தொண்டனேன்மதுசூதநனே. (௩)

சூதுநானறியாவ்கை சுழற்றியோரைவரைக்காட்டி * உன்னடிப்
போதுநானணுகாவகை செய்துபோதிகண்டாய் *
யாதும்யாவருமின்றிநின்னகம்பாலொடுக்கி யோராலினீளிலை *
மீதுசேர்குழவி வினையேன்வினைதீர்மருந்தே. (௪)

தீர்மருந்தின்றியைந்துநோயடும்செக்கிலிட்டுத் திரிக்குமைவரை *
நேர்மருங்குடைத்தாவடைத்து நெகிழ்ப்பானொக்கின்றாய் *
ஆர்மருந்தினியாகுவா ரடலாழியேந்தியசுரர்வன்குலம் *
வேர்மருங்கறுத்தாய் விண்ணுளார்பெருமானேயோ. (௫)

விண்ணுளார்பெருமாற்கடிமைசெய்வாரையும்செறும்ஐம்புலனிவை *
மண்ணுளென்னைப்பெற்றா லென்செய்யாமற்றுநீயும்விட்டால் *
பண்ணுளாய்கவிதன்னுளாய்பத்தியினுள்ளாய்பரமீசனே * வந்தென்
கண்ணுளாய்நெஞ்சுளாய்சொல்லுளா யொன்றுசொல்லாயே. (௬)

ஒன்றுசொல்லி † ஒருத்தினில்நிற்கிலாத வோரைவர்வன்கயவரை *
என்றுயான்வெல்கிற்ப னுன்திருவருளில்லையேல் *
அன்றுதேவரசுரர்வாங்க அலைகடலரவமளாவி * ஓர்
குன்றம்வைத்தவெந்தாய் கொடியேன்பருகின்னமுதே. (௭)

இன்னமுதெனத்தோன்றி யோரைவர்யாவரையும்மயக்க * நீவைத்த
‡ முன்னமாயமெல்லாம் முழுவேரரிந்து - * என்னையுன்
சின்னமும்திருமூர்த்தியும்சிந்தித்தேத்திக் கைதொழவேயருளெனக்கு
என்னம்மா ! என்கண்ணா ! இமையோர்தம்குலமுதலே!. (௮)

குலமுதலடும்தீவினைக் கொடுவன்குழியினில்வீழ்க்குமைவரை *
வலமுதல்கெடுக்கும் $ வரமேதந்தருள்கண்டாய் *
நிலமுதலினியெவ்வுலகுக்கும் நிற்பனசெல்வனவென * பொருள்
பலமுதல்படைத்தாய் என்கண்ணா ! என்பரஞ்சுடரே!. (௯)

என்பரஞ்சுடரேயென்றுன்னையலற்றி யுன்னிணைத்தாமரைகட்கு - *
அன்புருகிநிற்கு மதுநிற்கச்சுமடுதந்தாய் *
வன்பரங்களெடுத்து ஐவர்திசைதிசைவலித்தெற்றுகின்றனர் *
முன்பரவைகடைந்த முதங்கொண்டமூர்த்தீயோ!. (௧0)

† "ஒருத்தனில்" என்று பாடாந்தரம். ‡ "முன்னை" என்றும்பாடம். $ "வலமே" என்று உரை.

⁂கொண்டமூர்த்தியோர்மூவராய்க்குணங்கள்படைத்தளித்துக்கெடுக்கும் * அப், புண்டரீகக்கொப்பூழ்ப்புனற்பள்ளி யப்பனுக்கே * தொண்டர் தொண்டர்தொண்டர்தொண்டன்சடகோபன்சொல்லாயிரத்துளிப்பத்தும்* கண்டுபாடவல்லார்வினைபோம் கங்குலும்பகலே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



உண்ணிலாவைவருட னிருத்தியிவ்வுலகில்
எண்ணிலாமாய னெனேநலிய—வெண்ணுகின்றான்
என்றுநினைந்தோலமிட்ட வின்புகழ்சேர்மாறனெனக்
குன்றிவிடுமேபவக் கங்குல். (சுக)

## உ-வது, கங்குலும்பகலும்.



இவ்வண்ணமழைத்த ஆழ்வார் மோஹித்திருக்கத் திருத்தாயார் பெரிய பெருமாளைக்குறித்து இந்நாயகி விஷயமாகஎதுஸங்கல்பித்திருக்கிறீரென்று கேட்பதாக வருளிச்செய்கிறார்.

ஆசிரியவிருத்தம், பண்-தக்கராகம், தாளம்— ஒன்பதொத்து.
நீலாம்புரிராகம் - ஆதிதாளம்.

⁂ கங்குலும்பகலும்கண்டுயிலறியாள் கண்ணநீர்கைகளாலிறைக்கும் *
சங்குசக்கரங்களென்றுகைகூப்பும் தாமரைக்கண்ணென்றேதளரும் *
எங்ஙனேதரிக்கேனுன்னைவிட்டென்னு மிருநிலம்கைதுழாவிருக்கும் *
செங்கயல்பாய்நீர்த்திருவரங்கத்தா யிவள்திறத்தென்செய்கின்றாயே. (க)

என்செய்கின்றாயென்தாமரைக்கண்ணாவென்னும் கண்ணீர்மல்கவிருக்கும் *
என்செய்கேனெறிநீர்த்திருவரங்கத்தாயென்னும்வெவ்வுயிர்த்துயிர்த்துருகும்
முன்செய்தவினையேமுகப்படாயென்னும்முகில்வண்ணா தகுவதோவென்னும்
முன்செய்திவ்வுலகமுண்டுமிழ்ந்தளந்தாயென்கொலோமுடிகின்றதிவட்கே.()

வக்கிலளிறையும்மணிவண்ணாவென்னும் வானமேநோக்கும்மையாக்கும் *
உட்குடையசுராருயிரெல்லாமுண்ட வொருவனேயென்னுமுள்ளுருகும் *
கட்கிலீயுன்னைக்காணுமாறருளாய் காகுத்தாகண்ணனேயென்னும் *
திட்கொடிமதிள்சூழ்திருவரங்கத்தா யிவள்திறத்தென்செய்திட்டாயே. (௩)

இட்டகாலிட்ட ‡ கைகளாயிருக்கு மெழுந்துலாமயங்கும்கைகூப்பும் *
கட்டமேகாதலென்றுமூர்ச்சிக்கும் கடல்வண்ணாகடியைகாணென்னும் *
வட்டவாய்நேமிவலங்கையாவென்னும் வந்திடாயென்றென்றேமயங்கும் *
சிட்டனேசெழுநீர்த்திருவரங்கத்தா யிவள்திறத்தென்சிந்தித்தாயே. (௪)

சிந்திக்கும்திசைக்கும்தேறும்கைகூப்பும் திருவரங்கத்துள்ளாயென்னும்
வந்திக்கும் * ஆங்கேமழைக்கண்ணீர்மல்கவந்திடாயென்றென்றேமயங்கும் *
அந்திப்போதவுணனுடலிடந்தானே யலைகடல்கடைந்தவாரமுதே *
சந்தித்துன்சரணம்சார்வதேவலித்த தையலைமையல்செய்தானே. (௫)

† "தகவிதோ" என்று பாடாந்தரம். ‡ "கையளாய்" என்றும்பாடம்.

மையல்செய்தென்னை மனம்கவர்ந்தானேயென்னும் மாமாயனேயென்னும் *
செய்யவாய்மணியேயென்னும்தண்புனல்சூழ்திருவரங்கத்துள்ளாயென்னும்*
வெய்யவாள்தண்டுசங்குசக்கரம்வில்லேந்தும் விண்ணோர்முதலென்னும் *
பைகொள்பாம்பணையாயிவள்திறத்தருளாய்பாவியேன்செயற்பாலதுவே. (௬)

பாலதுன்பங்களின்பங்கள்படைத்தாய் பற்றிலார்பற்றநின்றானே *
காலசக்கரத்தாய்கடலிடங்கொண்ட கடல்வண்ணாகண்ணனேயென்னும் *
சேல்கொள்தண்புனல்சூழ்திருவரங்கத்தாயென்னும்என்தீர்த்தனேயென்னும்
கோலமாமழைக்கண்பனிமல்கவிருக்கும் என்னுடைக்கோமளக்கொழுந்தே. ()

கொழுந்துவானவர்கட்கென்னும் குன்றேந்திக்கோநிரைகாத்தவனென்னும் *
அழுந்தொழுமாவியனலவெவ்வுயிர்க்கு மஞ்சநவண்ணனேயென்னும் *
எழுந்துமேல்நோக்கியிமைப்பிலளிருக்கு மெங்ஙனேநோக்குகேனென்னும் *
செழுந்தடம்புனல்சூழ்திருவரங்கத்தாயென்செய்கேனென்திருமகட்கே. (அ)

⁂ என்திருமகள்சேர்மார்வனேயென்னும் என்னுடையாவியேயென்னும் *
நின்திருவெயிற்றாலிடந்துநீகொண்ட நிலமகள்கேள்வனேயென்னும் *
அன்றுருவேழும்தழுவிநீகொண்ட ஆய்மகளன்பனேயென்னும்
தென்திருவரங்கம்கோயில்கொண்டானே தெளிகிலேன்முடிவிவள்தனக்கே.

முடிவிவள்தனக்கொன்றறிகிலேனென்னும் மூவுலகாளியேயென்னும் *
கடிகமழ்கொன்றைச்சடையனேயென்னும் நான்முகக்கடவுளேயென்னும் *
வடிவுடைவானோர்தலைவனேயென்னும் வண்திருவரங்கனேயென்னும் *
அடியடையாதாள்போலிவளணுகியடைந்தனள் முகில்வண்ணனடியே. (௧0)

⁂ முகில்வண்ணனடியையடைந்தருள்சூடியுய்ந்தவன்மொய்புனல்பொருநல்
துகில்வண்ணத்தூநீர்ச்சேர்ப்பன் வண்பொழில்சூழ்வண்குருகூர்ச்சடகோபன்
முகில்வண்ணனடிமேல்சொன்ன சொன்மாலையாயிரத்திப்பத்தும்வல்லார் *
முகில்வண்ணவானத்திமையவர்சூழவிருப்பர் பேரின்பவெள்ளத்தே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



கங்குல்பகலரதிகை விஞ்சிமோகமுற
அங்கதனைக்கண்டோ ரரங்கரைப்பார்—திங்கிவள்பால்
என்செயநீரெண்ணுகின்ற தென்னுநிலைசேர்மாறன்
அஞ்சொலுறநெஞ்சுவெள்ளை யாம். (௬௨)

---

## ௩-வது, வெள்ளைச்சுரிசங்கு.



தாய் ப்ரஸங்கவஸாத்பண்ணின நம்பெருமாள் கீர்த்தனத்தால் ஆழ்வார் மோஹத்தைவிட்டு கிட்டவிருக்கிற திருப்பேரையில் திருப்பதிக்குபோவேனென்று உத்யோகிக்கு .மளவில் தாய்தவிர்க்க வீரத்தாலும் போவேனென்று சொன்னதை அருளிச்செய்கிறார்.

---

ஆசிரியவிருத்தம், பண்-நட்டபாஷை, தாளம்-ஏழொத்து.
ஆனந்தபைரவிராகம் - அதிதாளம்.

⁂ வெள்ளைச்சுரிசங்கொடாழியேந்தித் தாமரைக்கண்ணனென்னெஞ்சினூடே *புள்ளைக்கடாகின்றவாற்றைக்காணீரென்சொல்லிச்சொல்லுகேனன்னைமீர்காள் * வெள்ளச்சுகமவன்வீற்றிருந்தவேதவொலியும்விழாவொலியும் *
பிள்ளைக்குழா, விளையாட்டொலியுமறாத் திருப்பேரையில்சேர்வன்நானே.(௧)

கானக்கருங்குழல்தோழிமீர்கா ளன்னையர்காளயற்சேரியீர்காள் *
நானித்தனிநெஞ்சம்காக்கமாட்டே னென்வசமன்றிராப்பகல்போய் *
தேன்மொய்த்தபூம்பொழில்தண்பணைசூழ் தென்திருப்பேரையில்வீற்றிருந்த
வானப்பிரான்மணிவண்ணன்கண்ணன் செங்கனிவாயின்திறத்ததுவே. (உ)

செங்கனிவாயின்திறத்ததாயும் செஞ்சுடர்நீண்முடித்தாழ்ந்ததாயும் *
சங்கொடுசக்கரம்கண்டுகந்தும் தாமரைக்கண்களுக்கற்றுத்தீர்ந்தும் *
திங்களும்நாளும்விழாவறாத தென்திருப்பேரையில்வீற்றிருந்த *
நங்கள்பிரானுக்கென்னெஞ்சம்தோழீ நாணும்நிறையுமிழந்ததுவே. (ந)

இழந்தவெம்மாமைதிறத்துப்போன என்னெஞ்சினாருமங்கே [எங்கும்
ஒழிந்தார் * உழந்தினியாரைக்கொண்டென்னுசாகோஓதக்கடலொலிபோல *
எழுந்தநல்வேதத்தொலிநின்றோங்குதென்திருப்பேரையில்வீற்றிருந்த * [தே.
முழங்குசங்கக்கையன்மாயத்தாழ்ந்தே னன்னையர்காளென்னை யென்முனிந்

முனிந்துசகடமுதைத்துமாயப்பேய்முலையுண்டு மருதிடைபோய் *
கனிந்தவிளவுக்குக்கன்றெறிந்தகண்ணபிரானுக்கென்பெண்மைதோற்றேன் *
முனிந்தினியென்செய்தீரன்னைமீர்காள் முன்னியவன்வந்துவீற்றிருந்த *
கனிந்தபொழில்திருப்பேரையிற்கே காலம்பெறவென்னைக்காட்டுமினே. (ரு)

காலம்பெறவென்னைக்காட்டுமின்கள் காதல்கடலில்மிகப்பெரிதால் *
நீலமுகில்வண்ணத்தெம்பெருமான்நிற்குமுன்னே வந்தென்கைக்குமெய்தான்
ஞாலத்தவன்வந்துவீற்றிருந்த நான்மறையாளரும்வேள்வியோவா *
கோலச்செந்நெற்கள்கவரிவீசும் கூடுபுனல்திருப்பேரையிற்கே. (சு)

பேரெயில்சூழ்கடல்தென்னிலங்கை செற்றபிரான்வந்துவீற்றிருந்த *
பேரையிற்கேபுக்கென்னெஞ்சம்நாடிப்பேர்த்து வரவெங்கும்காணமாட்டேன்
ஆரையினியிங்குடையம்தோழீ யென்னெஞ்சம்கூவவல்லாருமில்லை * [னே.
ஆரையினிக்கொண்டென்சாதிக்கின்ற தென்னெஞ்சம்கண்டதுவேகண்டே

கண்டதுவேகொண்டெல்லாருங்கூடிக்கார்க்கடல்வண்ணனோடெந்திறத்துக்
கொண்டு * அலர்தூற்றிற்றது முதலாக்கொண்டவென்காதலுரைக்கில்தோ
மண்டிணிஞாலமுமேழ்கடலும் நீள்விசும்புங்கழியப்பெரிதால் * [ழீ *
தெண்டிரைசூழ்ந்தவன்வீற்றிருந்த தென்திருப்பேரையில்சேர்வன்சென்றே.

சேர்வன்சென்றென்னுடைத் தோழிமீர்காளன்னையர்கா ளென்னைத்தேற்ற
வேண்டா *, நீர்களுரைக்கின்றதென்னிதற்கு † நெஞ்சுநிறைவுமெனக்கிங்கில்
லை *, கார்வண்ணன்கார்க்கடல்ஞாலமுண்டகண்ணபிரான்வந்துவீற்றிருந்த *
ஏர்வளவொண்கழனிப்பழனத் தென்திருப்பேரையில்மாநகரே. (கூ)

நகரமும்நாடும்பிறவும்தேர்வேன் நாணெனக்கில்லையென்தோழிமீர்காள் *
சிகரமணிநெடுமாடநீடு தென்திருப்பேரையில்வீற்றிருந்த *
மகரநெடுங்குழைக்காதன்மாயன் நூற்றுவரையன்றுமங்கநூற்ற *
நிகரில்முகில்வண்ணன்நேமியானென்னெஞ்சம் கவர்ந்தெனையூழியானே. ()

† "என்னெஞ்சும்" என்றும் பாடம்.

‡‡ஊழிதோறூழியுருவும்பேரும்செய்கையும்வேறவன்வையங்காக்கும்
ஆழிநீர்வண்ணனையச்சுதனை யணிகுருகூர்ச்சடகோபன்சொன்ன *
கேழிலந்தாதியோராயிரத்து ளிவைதிருப்பேரையில்மேயபத்தும் *
ஆழியங்கையனையேத்தவல்லாரவ ரடிமைத்திறத்தாழியாரே. (௧௧)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



வெள்ளியநாமங்கேட்டு விட்டகன்றபின்மோகம்
தெள்ளியமால்தென்திருப்பேர் சென்றுபுக—உள்ளமங்கே
பற்றிநின்றதன்மை பகருஞ்சடகோபர்க்
கற்றவர்கடாமாழி யார். (௫௩)

## ௪-வது, ஆழியெழ.



விப்லேஷ வ்யஸநத்திலிருக்க, ஈப்வரன் தன்னவதாரவிஜயங்க
ளெல்லாவற்றையுங் காட்டத் தரித்தவையெல்லாம் அநுஸந்
தித்ததை யருளிச்செய்கிறார்.

கலிவிருத்தம், பண்—காந்தாளம், தாளம்-ஏழொத்து.

மோஹநராகம் - அடதாளம்.

‡‡ ஆழியெழச் சங்கும்வில்லுமெழ * திசை
வாழியெழத்தண்டும்வாளுமெழ * அண்டம்
மோழையெழ முடிபாதமெழ * அப்பன்
ஊழியெழ வுலகங்கொண்டவாறே. (௧)

ஆறுமலைக்கெதிர்ந்தோடுமொலி * அர
வூறுசுலாய் மலைதேய்க்குமொலி * கடல்
மாறுசுழன்றழைக்கின்றவொலி * அப்பன்
சாறுபடவமுதங்கொண்டநான்றே. (௨)

நான்றிலவேழ்மண்ணும் தானத்தவே * பின்னும்
நான்றிலவேழ்மலை தானத்தவே * பின்னும்
நான்றிலவேழ்கடல்தானத்தவே * அப்பன்
ஊன்றியிடந்தெயிற்றில் கொண்டநாளே. (௩)

நாளுமெழ நிலநீருமெழ * விண்ணும்
கோளுமெழ எரிகாலுமெழ * மலை
தாளுமெழச் சுடர்தானுமெழ * அப்பன்
† ஊளியெழவுலகமுண்டவூணே. (௪)

---

† ஊளி பசி, உறுஞ்சின ஓசை என்னவுமாம்.

ஊனுடைமல்லர் ததர்ந்தவொலி * மன்னர்
ஆனுடைச்சேனை நடுங்குமொலி * விண்ணுள்
ஏனுடைத்தேவர் வெளிப்பட்டவொலி * அப்பன்
காணுடைப்பாரதம் ‡ கையறைபோழ்தே. (ரு)

போழ்துமெலிந்த புன்செக்கரில் * வான்திசை
சூழுமெழுந் துதிரப்புனலா * மலை
கீழ்துபிளந்த சிங்கமொத்ததால் அப்பன்
ஆழ்துயர்செய் தசுரரைக்கொல்லுமாறே. (சு)

மாறுநிரைத்திரைக்கும் சரங்கள் * இன
நூறுபிணம்மலைபோல்புரள * கடல்
ஆறுமடுத்துதிரப்புனலா * அப்பன்
நீறுபடவிலங்கைசெற்றநேரே. (எ)

நேர்சரிந்தான்கொடிக் § கோழிகொண்டான் * பின்னும்
நேர்சரிந்தானெரியுமனலோன் * பின்னும்
நேர்சரிந்தான் முக்கண்மூர்த்திகண்டீர் * அப்பன்
நேர்சரிவாணன் திண்டோள்கொண்டவன்றே. (அ)

அன்றுமண்ணீரெரிகால் விண்மலைமுதல் *
அன்றுசுடரிரண்டுபிறவும் * பின்னும்
அன்றுமழையுயிர்தேவும்மற்றும் * அப்பன்
அன்றுமுதலுலகம்செய்ததுமே. (கூ)

மேய்நிரைகீழ்புக மாபுரள * சுனை
வாய்நிறைநீர்பிளிறிச்சொரிய * இன
† ஆநிரைபாடியங்கேயொடுங்க * அப்பன்
தீமழைகாத்துக்குன்றமெடுத்தானே. (கo)

‡‡ குன்றமெடுத்தபிரானடியாரொடும் *
ஒன்றிநின்றசடகோபனுரைசெயல் *
நன்றிபுனைந்த ஓராயிரத்துள்ளிவை *
வென்றிதரும்பத்தும் மேவிக்கற்பார்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



ஆழிவண்ணன்றன்விசய மானவைமுற்றுங்காட்டி
வாழிதனலென்று மகிழ்ந்துநிற்க—ஊழிலவை
தன்னையின்றுபோற்கண்டு தானுரைத்தமாறன்சொல்
பன்னுவரேநல்லது கற்பார். (சுச)

‡ "கையெறி" என்றும்பாடம். §கோழி-மயில். † "ஆய்நிரை" என்று உரை.

## ரு-வது, கற்பார்.

விஜயாபதாநங்களுக்கு மூலமான ராமக்ருஷ்ணாத் யவதாரங்களைவிட்டு சேதநர் இதரதேவதைகளை யாஶ்ரயித்துக்கெட்டுப்போகிறார்களெ ன்று ஆச்சர்யப்பட்டுத் தாம் பகவத்குணாநுபவத்தால் ப்ரீதரா னதை யருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண்-நாட்டராகம், தாளம்-ஏழொத்து.
ஸஹானாராகம் - அடதாளம்.

⁂ கற்பாரிராமபிரானையல்லால் மற்றும்கற்பரோ *
புற்பாமுதலாப் புல்லெறும்பாதியொன்றின்றியே *
நற்பாலயோத்தியில்வாழும் சராசரம்முற்றவும் *
நற்பாலுக்குய்த்தனன் நான்முகனார்பெற்றநாட்டுளே. (க)

நாட்டில்பிறந்தவர் நாரணற்காளன்றியாவரோ *
நாட்டில்பிறந்து படாதனபட்டுமனிசர்க்கா *
நாட்டைநலியுமரக்கரை நாடித்தடிந்திட்டு *
நாட்டையளித்துய்யச்செய்து நடந்தமைகேட்டுமே. (உ)

கேட்பார்கள் கேசவன்கீர்த்தியல்லால் மற்றும்கேட்பரோ
கேட்பார்செவிசுடு கீழ்மைவசவுகளேவையும் *
சேட்பால்பழம்பகைவன் சிசுபாலன் * திருவடி
தாட்பாலடைந்த தன்மையறிவாரையறிந்துமே. (௩)

தன்மையறிபவர்தாம் அவற்காளன்றியாவரோ *
பன்மைப்படர்பொருளாதுமில்பாழ்நெடுங்காலத்து *
நன்மைப்புனல்பண்ணி நான்முகனைப்பண்ணி * தன்னுள்ளே
தொன்மைமயக்கிய தோற்றியசூழல்கள்சிந்தித்தே. (ச)

சூழல்கள்சிந்திக்கில் மாயன்கழலன்றிச்சூழ்வரோ *
ஆழப்பெரும்புனல்தன்னுளழுந்தியஞாலத்தை *
தாழப்படாமல் தன்பாலொருகோட்டிடைத்தான்கொண்ட *
கேழல்திருவுருவாயிற்றுக் கேட்டுமுணர்ந்துமே. (ரு)

கேட்டுமுணர்ந்தவர் கேசவற்காளன்றியாவரோ *
வாட்டமிலாவண்கை மாவலிவாதிக்கவாதிப்புண்டு *
ஈட்டங்கொள்தேவர்கள் சென்றிரந்தார்க்கிடர்நீக்கிய *
கோட்டங்கைவாமனனாய்ச் செய்தகூத்துக்கண்டுமே. (சா)

கண்டும்தெளிந்தும்கற்றார் கண்ணற்காளன்றியாவரோ *
வண்டுண்மலர்த்தொங்கல் மார்க்கண்டேயனுக்குவாழுநாள் *
இண்டைச்சடைமுடியீசனுடன்கொண்டுசாச்செல்ல *
கொண்டங்குத்தன்னொடும்கொண் டுடன்சென்றதுணர்ந்துமே. (எ)

செல்லவுணர்ந்தவர் செல்வன்றன்சீரன்றிக்கற்பரோ *
எல்லையிலாதபெருந்தவத்தால் பலசெய்மிறை *
அல்லலமரரைச்செய்யு மிரணியனாகத்தை *
மல்லலரியுருவாய்ச்செய்த மாயமறிந்துமே. (அ)

மாயமறிபவர் மாயவற்காளன்றியாவரோ *
தாயம்செறுமொருநூற்றுவர்மங்க வோரைவர்க்காய் *
தேசமறியவோர்சாரதியாய்ச்சென்று சேனையை
நாசம்செய்திட்டு * நடந்தநல்வார்த்தையறிந்துமே. (கூ)

⁂ வார்த்தையறிபவர் மாயவற்காளன்றியாவரோ *
போர்த்தபிறப்பொடுநோயொடுமூப்பொடு:† இறப்பிவை
பேர்த்து * பெருந்துன்பம்வேரறநீக்கித் தன்தாளின்கீழ்ச்
‡ சேர்த்து * அவன்செய்யும்சேமத்தையெண்ணித்தெளிவுற்றே. (கO)

⁂ தெளிவுற்றுவீவின்றிநின்றவர்க் கின்பக்கதிசெய்யும் *
தெளிவுற்றகண்ணனைத் தென்குருகூர்ச்சடகோபன்சொல் *
தெளிவுற்றவாயிரத்து ளிவைபத்தும்வல்லாரவர் *
தெளிவுற்றசிந்தையர் பாமருமூவுலகத்துள்ளே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



கற்றோர்கருதும் விசயங்களுக்கெல்லாம்
பற்றாம்விபவகுணப் பண்புகளை—உற்றுணர்ந்து
மண்ணிலுள்ளோர்தம்மிழவை வாய்ந்துரைத்தமாறன்சொல்
பண்ணிலினிதானதமிழ்ப் பா. (சுரு)

## சு-வது, பாமருமூவுலகு.



குணாநுபவம்பண்ணி அப்படிப்பட்ட ஈஶ்வரனை ப்ரத்யக்ஷீகரிக்கவேண்டு மென்றாசைப்பட்டு லபியாமையால் எப்போழ்து உம்மையடைவே னென்று ஆக்ரந்தநம்பண்ணினதை யருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண்-பாலையாழ், தாளம்-ஏழொத்து.

தோடிராகம் - ரூபகதாளம்.

⁂ பாமருமூவுலகும்படைத்த பற்பநாபாவோ *
பாமருமூவுலகுமளந்த பற்பபாதாவோ *
தாமரைக்கண்ணாவோ தனியேன்தனியாளாவோ *
தாமரைக்கையாவோ உன்னையென்றுகொல்சேர்வதுவே. (க)

† "இறப்பவை" என்று உரை. ‡ "சேர்த்தி" என்று உரை.

என்றுகொல்சேர்வதந்தோ அரன்நான்முகனேத்தும் * செய்ய
நின்திருப்பாதத்தையான் நிலநீரெரிகால் * விண்ணுயிர்
என்றிவைதான்முதலாமுற்றுமாய் நின்றவெந்தாயோ *
குன்றெடுத்தாநிரைமேய்த் தவைகாத்தவெங்கூத்தாவோ. (உ)

காத்தவெங்கூத்தாவோ மலையேந்திக்கன்மாரிதன்னை *
பூத்தண்டுழாய்முடியாய் புனைகொன்றையஞ்செஞ்சடையாய் *
வாய்த்தவென்நான்முகனே வந்தென்னாருயிர்நீயானால் *
ஏத்தமருங்கீர்த்தியினா யுன்னையெங்குத்தலைப்பெய்வனே. (ங)

எங்குத்தலைப்பெய்வன்நா னெழில்மூவுலகும்நீயே *
அங்குயர்முக்கட்பிரான் பிரமபெருமானவன்நீ *
வெங்கதிர்வச்சிரக்கை யிந்திரன்முதலாத்தெய்வம்நீ *
கொங்கலர்தண்ணந்துழாய்முடி யென்னுடைக்கோவலனே. (ச)

என்னுடைக்கோவலனே யென்பொல்லாக்கருமாணிக்கமே *
உன்னுடையுந்திமல ருலகமவைமூன்றும்பரந்து - *
உன்னுடைச்சோதிவெள்ளத்தகம்பா லுன்னைக்கண்டுகொண்டிட்டு - *
என்னுடையாருயிரா ரெங்ஙனேகொல்வந்தெய்துவரே. (ரு)

வந்தெய்துமாறறியேன் மல்குநீலச்சுடர்தழைப்ப *
செஞ்சுடர்ச்சோதிகள்பூத் தொருமாணிக்கம்சேர்வதுபோல் *
அந்தரமேல்செம்பட்டோ டடியுந்திகைமார்வுகண்வாய் *
செஞ்சுடர்ச்சோதிவிடவுறை யென்திருமார்பனையே. (சு)

என்திருமார்பன்றன்னை யென்மலைமகள்கூறன்றன்னை *
என்றுமென்நாமகளை யகம்பால்கொண்டநான்முகனை *
நின்றசசிபதியை நிலங்கீண்டெயில்மூன்றெரித்த *
வென்றுபுலன்துரந்த விசும்பாளியைக்காணேனோ. (எ)

ஆளியைக்காண்பரியாய் அரிகாண்நரியாய் * அரக்கர்
ஊளையிட்டன்றிலங்கைகடந்து பிலம்புக்கொளிப்ப *
† மீளியம்புள்ளைக்கடாய் விறல்மாலியைக்கொன்று * பின்னும்
ஆளுயர்குன்றங்கள்செய் தடர்த்தானையும்காண்டுங்கொலோ. (அ)

காண்டுங்கொலோநெஞ்சமே கடியவினையேமுயலும் *
ஆண்டிறல்மீளிமொய்ம்பி லரக்கன்குலத்தைத்தடிந்து *
மீண்டுமவன்தம்பிக்கே விரிநீலங்கையருளி
ஆண்டுதன்சோதிபுக்க வமரரரியேற்றினையே. (கூ)

ஏற்றரும்வைகுந்தத்தை யருளும்நமக்கு - * ஆயர்குலத்து
ஈற்றிளம்பிள்ளையொன்றாய்ப்புக்கு மாயங்களேயியற்றி *
கூற்றியல்கஞ்சனைக்கொன்று ஐவர்க்காய்கொடுஞ்சேனைதடிந்து - *
ஆற்றல்மிக்கான் பெரியபரஞ்சோதிபுக்கவரியே. (க0)

---

† மீளி-வலி, மிர்த்யு, பாலைநிலத்தலைமகன்.

⁂ புக்கவரியுருவா யவுணனுடல்கீண்டுகந்த *
சக்கரச்செல்வன்றன்னைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
மிக்கவோராயிரத்து ளிவைபத்தும்வல்லாரவரை *
தொக்குப்பல்லாண்டிசைத்துக் கவரிசெய்வரேழையரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பாமருவுவேதம் பகர்மால்குணங்களுடன்
நாமமழகுவேண்டப் பாடாமவற்றைத்—தூமனத்தால்
நண்ணியவனைக்காண நன்குருகிக்கூப்பிட்ட
அண்ணலைநண்ணுரேழையர். (சுசு)

---

## எ-வது, ஏழையராவி.



இவ்வண்ணம் ஆக்ரந்தநம்பண்ணிநிற்க ஈஶ்வரன் பாவநாப்ரத்யக்ஷம்பண்ணுகையில் அந்த திவ்யாவயவஸௌந்தர்யந் தமக்கு பாஹ்யஸம்ஶ்லேஷார்ஹ மல்லாமையால் வருத்தமாயிருக்கிறதென்று தாய்மாரோடுந்தோழிமார்களோடுஞ் சொன்னதாக அருளிச்செய்கிறார்.

---

கலித்துறை, பண்-பாலையாழ், தாளம்-ஏழொத்து.

மூகாரிராகம் - அடதாளம்.

⁂ ஏழையராவியுண்ணு மிணைக்கூற்றங்கொலோவறியேன் *
ஆழியங்கண்ணபிரான் திருக்கண்கள்கொலோவறியேன் *
சூழவும்தாமரைநாண்மலர்போல் வந்துதோன்றும்கண்டீர் *
தோழியர்காளன்னைமீ ரென்செய்கேன்துயராட்டியேனே. (க)

ஆட்டியும்தூற்றியும்நின் றன்னைமீரென்னைநீர்நலிந்தென் *
மாட்டுயர்கற்பகத்தின் வல்லியோகொழுந்தோவறியேன் *
ஈட்டியவெண்ணெயுண்டான் திருமூக்கெனதாவியுள்ளே *
மாட்டியவல்விளக்கின் சுடராய்நிற்கும்வாலியதே. (உ)

வாலியதோர்கனிகொல் வினையாட்டியேன்வல்வினைகொல் *
கோலம்திரள்பவளக் கொழுந்துண்டங்கொலோவறியேன் *
நீலநெடுமுகில்போல் திருமேனியம்மான்தொண்டைவாய் *
ஏலும்‡ திசையுளெல்லாம் வந்துதோன்றுமென்னின்னுயிர்க்கே. (ங)

இன்னுயிர்க்கேழையர்மேல் வளையுமிணைநீலவிற்கொல் *
மன்னியசீர்மதனன்கருப்புச்சிலைகொல் * மதனன்
றன்னுயிர்த்தாதைக் கண்ணபெருமான்புருவமவையே *
என்னுயிர்மேலனவா அடுகின்றனவென்றுநின்றே. (ச)

---

‡ "திசைகளெல்லாம்" என்று சில ஸ்ரீகோசங்கள்.

என்றுநின்றேதிகழும் செய்யவீசன்சுடர்வெண்மின்னுக்கொல் *
அன்றியென்னுவியடு மணிமுத்தங்கொலோவறியேன் *
குன்றமெடுத்தபிரான் முறுவலெனதாவியடும் *
ஒன்றுமறிகின்றிலே னன்னைமீரெனக்குப்விடமே. (ரு)

உய்விடமேழையர்க்கு மசுரர்க்குமரக்கர்கட்கும் *
எவ்விடமென்றிலங்கி மகரம்தழைக்கும்தளிர்கொல் *
பைவிடப்பாம்பணையான் திருக்குண்டலக்காதுகளே *
கைவிடலொன்றுமின்றி யடுகின்றனகாண்மின்களே. (சு)

காண்மின்களன்னையர்காளென்று காட்டும்வகையறியேன் *
நாள்மன்னுவெண்திங்கள்கொல் நயந்தார்கட்குநச்சிலைகொல் *
சேண்மன்னுநால்தடந்தோள் பெருமான்றன்திருநுதலே *
கோள்மன்னியாவியடும் கொடியேனுயிர்கோளிழைத்தே. (எ)

கோளிழைத்தாமரையும் கொடியும்பவளமும்வில்லும் *
கோளிழைத்தண்முத்தமும் தளிரும்குளிர்வான்பிறையும் *
கோளிழையாவுடைய கொழுஞ்சோதிவட்டங்கொல் * கண்ணன்
கோளிழைவாள்முகமாய் கொடியேனுயிர்கொள்கின்றதே. (அ)

கொள்கின்றகோளிருளைச் சுகிர்ந்திட்டகொழுஞ்சுருளின் *
உள்கொண்டநீலநன்னூல் தழைகொல், அன்றுமாயன்குழல் *
விள்கின்றபூந்தண்டுழாய் விரைநாறவந்தென்னுயிரை *
கள்கின்றவாறறியீ ரன்னைமீர்கழறுநிற்றிரே. (கூ)

நிற்றிமுற்றத்துளென்று நெரித்தகையராய் * என்னைமீர்
சுற்றியுஞ்சூழ்ந்தும்வைதிர் சுடர்ச்சோதிமணிநிறமாய் *
முற்றவிம்மூவுலகும் விரிகின்றசுடர்முடிக்கே *
ஒற்றுமைக்கொண்டதுள்ளம் அன்னைமீர்நசையென்நுங்கட்கே. (க0)

✤ கட்கரியபிரமன்சிவ னிந்திரனென்றிவர்க்கும் *
கட்கரியகண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
உட்குடையாயிரத்து ளிவையுமொருபத்தும்வல்லார் *
உட்குடைவானவரோ டடனுயென்றும்மாயாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஏழையாகநெஞ்சை யிளகுவிக்குமாலழகு
சூழவந்துதோன்றித் துயர்விளைக்க—ஆழுமனம்
தன்னுடனேயவ்வழகைத் தானுரைத்தமாறன்பால்
மன்னுமவர்தீவினைபோ மாய்ந்து. (கூஎ)

## அ-வது, மாயாவாமநனே.



*அவ்வாறு உபத்ரவப்படுகிற வென்னை இந்தலீலாவிபூதியிலே நிறுத்தினது எப்படிப்பட்ட ஆச்சர்யமோவென்ன ஒன்றுகேட்கவொன்றுவேறேசொல்லி பரிஹரிப்பாரைப்போலே என்ப்ரகார மிவ்வளவோவென்று தன்னுடைய விசித்ரவிபூதியெல்லாங்காட்ட வதைக்கண்டாச்சர்யப்பட்டதை யருளிச்செய்கிறார்.*

---

கலிவிருத்தம், பண்-பாலையாழ், தாளம் ஏழொத்து.
பந்துவராளிராகம் - ரூபகதாளம்.

⁂ மாயாவாமநனே மதுசூதாநீயருளாய் *
தீயாய்நீராய்நிலனாய் விசும்பாய்க்காலாய் *
தாயாய்த்தந்தையாய்மக்களாய் மற்றுமாய்முற்றுமாய் *
நீயாய்நீநின்றவா றிவையென்னநியாயங்களே. (௧)

அங்கண்மலர்த்தண்டுழாய்முடி யச்சுதனேயருளாய் *
திங்களும்ஞாயிறுமாய்ச் செழும்பல்சுடராயிருளாய் *
பொங்குபொழிமழையாய்ப் புகழாய்ப்பழியாய்ப்பின்னும்நீ *
வெங்கண்வெங்கூற்றமுமா யிவையென்னவிசித்திரமே. (௨)

சித்திரத்தேர்வலவா திருச்சக்கரத்தாயருளாய் *
எத்தனையோருகமு மவையாயவற்றுள்ளியனும் *
ஒத்தவொண்பல்பொருள்க ளுலப்பிலனவாய்வியவாய் *
† வித்தகத்தாய்நிற்றிநீ யிவையென்னவிடமங்களே. (௩)

கள்ளவிழ்தாமரைக்கட்கண்ணனே யெனக்கொன்றருளாய் *
உள்ளதுமில்லதுமா யுலப்பிலனவாய்வியவாய் *
வெள்ளத்தடங்கடலுள் விடநாகணைமேல்மருவி *
உள்ளப்பல்யோகுசெய்தி யிவையென்னவுபாயங்களே. (௪)

பாசங்கள்நீக்கியென்னை யுனக்கேயறக்கொண்டிட்டு * நீ
வாசமலர்த்தண்டுழாய்முடி மாயவனேயருளாய் *
காயமும்சீவனுமாய்க் கழிவாய்ப்பிறப்பாய்பின்னும்நீ *
மாயங்கள்செய்துவைத்தி யிவையென்னமயக்குக்களே. (௫)

மயக்காவாமநனே மதியாம்வண்ணமொன்றருளாய் *
அயர்ப்பாய்த்தேற்றமுமா யழலாய்க்குளிராய்வியவாய் *
வியப்பாய்வென்றிகளாய் வினையாய்ப்பயனாய்ப்பின்னும்நீ *
துயக்காநீநின்றவா றிவையென்னதுயரங்களே. (௬)

துயரங்கள்செய்யுங்கண்ணா சுடர்நீண்முடியாயருளாய் *
துயரம்செய்மானங்களாய் மதனாகியுகவைகளாய் *
துயரம்செய்காமங்களாய்த் துலையாய்நிலையாய்நடையாய் *
துயரங்கள்செய்துவைத்தி யிவையென்னசுண்டாயங்களே. (௭)

---

† "வித்தகத்தால்" என்று உரைக்கும் இருபத்துநாலாயிரத்துக்கும்பாடம்.

என்னசுண்டாயங்களால் † நின்றிட்டாயென்னையாளும்கண்ணா *
இன்னதோர்தன்மையையென்றுன்னை யாவர்க்கும்தேற்றரியை *
முன்னியமூவுலகு மவையாயவற்றைப்படைத்து *
பின்னுமுள்ளாய்புறத்தா யிவையென்னவியற்கைகளே. (அ)

என்னவியற்கைகளால் ‡ எங்ஙனேநின்றிட்டாயென்கண்ணா *
துன்னுகரசரணம்முதலாக வெல்லாவுறுப்பும் *
உன்னுசுவையொளி யூறொலிநாற்றமுற்றும்நீயே *
உன்னையுணரவுறி லுலப்பில்லைநுணுக்கங்களே. (௯)

இல்லைநுணுக்கங்களே யிதனில்பிறிதென்னும்வண்ணம் *
தொல்லைநன்னூலில்சொன்ன வுருமருவும்நீயே *
அல்லித்துழாயலங்க லணிமார்பஎன்னச்சுதனே *
வல்லதோர்வண்ணம்சொன்னா லதுவேயுனக்காம்வண்ணமே. (க0)

⁂ ஆம்வண்ணமின்னதொன்றென் றறிவதரியவரியை *
ஆம்வண்ணத்தால் குருகூர்ச்சடகோபனறிந்துரைத்த *
ஆம்வண்ணவொண்டமிழ்க ளிவையாயிரத்துளிப்பத்தும் *
ஆம்வண்ணத்தாலுரைப்பா ரமைந்தார்தமர்க்கென்றைக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



மாயாம்றன்னைவைத்தவைசித்திரியாலே
தீயாவிசித்திரமாச்சேர்பொருளோ—டாயால்
வாய்ந்துநிற்குமாயன்வளமுறைத்தமாறனைநாம்
ஏய்ந்துரைத்துவாழுநாளென்று. (சுஅ)

---

## கூ-வது; என்றைக்கும்.



அஸஹ்யமான லீலாவிபூதியிலென்னை யேன்வைத்தாயென்று கேட்க ஈஸ்வரன் எனக்குமென்னடியார்க்கும் ஸராவ்யமான ப்ரபந்தம் பண்ணிவைக்கவேண்டுமென வைத்தோமென்றுசொல்ல அந்தவுபகாரத்துக்கு ப்ரத்யுபகாரமெது சொல்லப்போகிறேனென்று தடுமாறினதை யருளிச்செய்கிறார்.

---

கலிவிருத்தம், பண்-நட்டபாஷை, தாளம்—ஒன்பதொத்து.

ஆரபிராகம் - ஆதிதாளம்.

⁂ என்றைக்குமென்னை யுய்யக்கொண்டுபோகிய *
அன்றைக்கன்றென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை *
இன்தமிழ்பாடியவீசனை யாதியாய்
நின்றவென்சோதியை * என்சொல்லிநிற்பனோ. (க)

---

† "எங்ஙனே நின்றிட்டாயென்கண்ணா" என்று உரைக்கும் இருபத்துநாலாயிரத்துக்கும்பாடம். ‡ "நின்றிட்டாயென்னையாளும் கண்ணா" என்று உரையும் இருபத்துநாலாயிரமும்.

என்சொல்லிநிற்ப னென்னின்னுயிரின்றொன்றாய்*
என்சொல்லால்யான்சொன்ன வின்கவியென்பித்து *
தன்சொல்லால்தான் தன்னைக் கீர்த்தித்தமாயன் * என்
முன்சொல்லும்மூவுருவாம் முதல்வனே. (உ)

ஆம்முதல்வனிவனென்று தற்றேற்றி * என்
நாமுதல்வந்துபுகுந்து நல்லின்கவி *
தூமுதல்பத்தர்க்குத்தான் தன்னைச்சொன்ன * என்
வாய்முதலப்பனை யென்றுமறப்பனோ. (ந)

அப்பனையென்றுமறப்ப னென்னாகியே *
தப்புதலின்றித் தனைக்கவிதான்சொல்லி *
ஒப்பிலாத்தீவினையேனை யுய்யக்கொண்டு *
செப்பமேசெய்து திரிகின்றசீர்கண்டே. (ச)

சீர்கண்டுகொண்டு திருந்துநல்லின்கவி *
நேர்படயான்சொல்லும் நீர்மையிலாமையில் *
ஏர்விலாவென்னைத்தன்னாக்கி யென்னால்தன்னை *
பார்பரவின்கவி பாடும்பரமரே. (ரு)

இன்கவிபாடும் பரமகவிகளால் *
தன்கவிதான்தன்னைப் பாடுவியாது * இன்று
நன்குவந்தென்னுடனாக்கி யென்னால்தன்னை *
வன்கவிபாடு மென்வைகுந்தநாதனே. (சு)

வைகுந்தநாத னென்வல்வினைமாய்ந்தற *
செய்குந்தன்றன்னை யென்னாக்கியென்னால்தன்னை *
வைகுந்தனாகப் புகழவண்டீன்கவி *
செய்குந்தன்றன்னை யெந்நாள்சிந்தித்தார்வனோ. (எ)

ஆர்வனோவாழியங்கை யெம்பிரான்புகழ் *
பார்விண்நீர்முற்றும் கலந்துபருகிலும் *
ஏர்விலாவென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை *
சீர்பெறவின்கவி சொன்னதிறத்துக்கே. (அ)

திறத்துக்கே † துப்பரவாம் திருமாலின்சீர் *
இறப்பெதிர்காலம் பருகிலுமார்வனோ *
மறப்பிலாவென்னைத் தன்னாக்கியென்னால்தன்னை *
உறப்பலவின்கவி சொன்னவுதவிக்கே. (கூ)

உதவிக்கைம்மாறென்னுயி ரென்னவுற்றெண்ணில் *
அதுவுமற்றாங்கவன்றன்ன தென்னால்தன்னை *
பதவியவின்கவி பாடியவப்பனுக்கு *
எதுவுமொன்றுமில்லை செய்வதிங்குமங்கே. (க0)

† துப்பரவு-ஸாமர்த்யம்.

‡‡ இங்குமங்கும் திருமாலன்றியின்மைகண்டு *
அங்ஙனே வண்குருகூர்ச் ‡ சடகோபன் *
இங்ஙனேசொன்ன வோராயிரத்திப்பத்தும் *
எங்ஙனேசொல்லிலு மின்பம்பயக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



என்றனைநீயிங்குவைத்ததேதுக்கெனமாலும்
என்றனக்குமென்றமர்க்குமின்பமதாம்—நன்றுகவி
பாடவென்றைக்கைம்மாறிலாமைபகர்மாறன்
பாடணைவார்க்குண்டாமின்பம். (௬௬)

---

## க0-வது, இன்பம்பயக்க.



இவ்வண்ணம் என்னால்ப்ரபந்தஞ்செய்வித்த ஸர்வேஶ்வரனெழுந்தருளி யிருக்கிற திருவாறன்விளையாடுகிற திருப்பதிக்குப்போய் ப்ரபந்தம் விண்ணப்பஞ் செய்யவேண்டுமென்று அபேக்ஷித்ததை அருளிச்செய்கிறார்.

---

அறுசீராசிரியவிருத்தம், பண்-பழம்பஞ்சுரம், தாளம்-ஏழொத்து.
கல்யாணிராகம்-அடதாளம்.

‡‡ இன்பம்பயக்க வெழில்மலர்மாதரும்தானும் * இவ்வேழுலகை
இன்பம்பயக்கவினிதுடன் வீற்றிருந்தாள்கின்றவெங்கள்பிரான் *
அன்புற்றமர்ந்துறைகின்ற வணிபொழில்சூழ்திருவாறன்விளை *
அன்புற்றமர்ந்துவலம்செய்து கைதொழூம்நாள்களுமாகுங்கொலோ.

ஆகுங்கொல்ஐயமொன்றின்றி யகலிடமுற்றவும் * ஈரடியே
ஆகும்பரிசுநிமிர்ந்த திருக்குறளப்பனமர்ந்துறையும்
மாகம்திகழ்கொடிமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை *
மாகந்தநீர்கொண்டுதூவிவலஞ்செய்து கைதொழக்கூடுங்கொலோ. ()

கூடுங்கொல்வைகலும் கோவிந்தனைமதுசூதனைக்கோளரியை *
ஆடு $ பறவைமிசைக்கண்டு கைதொழுதன்றியவனுறையும் *
பாடும்பெரும்புகழ்நான்மறை வேள்வியைந்தாறங்கம்பன்னினர்வாழ்
நீடு ¶ பொழில்திருவாறன்விளைதொழவாய்க்குங்கொல்நிச்சலுமே. ()

வாய்க்குங்கொல்நிச்சலு மெப்பொழுதும்மனத்தீங்குநினைக்கப்பெற *
வாய்க்கும்கரும்பும்பெருஞ்செந்நெலும் வயல்சூழ்திருவாறன்விளை *
வாய்க்கும்பெரும்புகழ்மூவுலகீசன் வடமதுரைப்பிறந்த *
வாய்க்கும்மணிநிறக்கண்ணபிரான்றன் மலரடிப்போதுகளே. (ச)

---

‡ "சடகோபன்சொல்" என்றுஉரை. $ "ஆடும்" என்றும்பாடம்.
¶ "நீடும்" என்றும் காண்கிறது.

மலரடிப்போதுகளென்னெஞ்சத் தெப்பொழுதுமிருத்திவணங்க *
பலரடியார்முன்பருளிய பாம்பணையப்பனமர்ந்துறையும் *
மலரில்மணிநெடுமாடங்கள்நீடு மதிள்திருவாறன்விளை *
உலகமலிபுகழ்பாட நம்மேல்வினையொன்றுமில்லாகெடுமே. (ரு)

ஒன்றுமில்லாகெடும்முற்றவும் தீவினையுள்ளித்தொழுமின்தொண்டீர் *
அன்றங்கமர்வென்றுருப்பிணிநங்கை யணிநெடுந்தோள்புணர்ந்தான் *
என்றுமெப்போதுமென்னெஞ்சம் துதிப்பவுள்ளேயிருக்கின்றபிரான்
நின்றவணிதிருவாறன் விளையென்னும் நீணகரமதுவே. (சு)

நீணகரமதுவேமலர்ச்சோலைகள்சூழ் திருவாறன்விளை *
நீணகரத்துறைகின்றபிரான் நெடுமால்கண்ணன்விண்ணவர்கோன் *
வாணபுரம்புக்குமுக்கட்பிரானைத் தொலையவெம்போர்கள்செய்து *
வாணனையாயிரந்தோள் துணித்தான் சரணன்றிமற்றொன்றிலமே. (எ)

அன்றிமற்றொன்றிலம்நின்சரணே யென்றகலிரும்பொய்கையின்வாய்
நின்றுதன்நீள்கழலேத்திய வானையின்நெஞ்சிடர்தீர்த்தபிரான் *
சென்றங்கினிதுறைகின்ற செழும்பொழில்சூழ்திருவாறன்விளை *
ஒன்றிவலஞ்செய்யவொன்றுமோ தீவினையுள்ளத்தின்சார்வல்லவே.()

தீவினையுள்ளத்தின்சார்வல்லவாகித் தெளிவிசும்பேறலுற்றால் *
நாவினுள்ளுமுள்ளத்துள்ளுமமைந்த தொழிலினுள்ளும்நவின்று *
யாவரும்வந்துவணங்கும்பொழில் திருவாறன்விளையதனை *
மேவிவலஞ்செய்துகைதொழக் கூடுங்கொலென்னுமென்சிந்தனையே.

சிந்தைமற்றொன்றின் திறத்ததல்லாத்தன்மைதேவபிரானறியும் *
சிந்தையினால்செய்வ தானறியாதனமாயங்களொன்றுமில்லை
சிந்தையினால்சொல்லினால் செய்கையால்நிலத்தேவர்குழுவணங்கும் *
சிந்தைமகிழ்திருவாறன்விளையுறை தீர்த்தனுக்கற்றபின்னே. (கO)

தீர்த்தனுக்கற்றபின்மற்றோர் சரணில்லையென்றெண்ணி * தீர்த்தனுக்கே
தீர்த்தமனத்தனாகிச் செழுங்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீர்த்தங்களாயிரத்துள் ளிவைபத்தும்வல்லார்களை * தேவர்வைகல்
தீர்த்தங்களேயென்று பூசித்துநல்கியுரைப்பர்தம்தேவியர்க்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஏழாம்பத்து - ஸம்பூர்ணம்.

இன்பக்கவிபாடுவித்தோனையிந்திரையோ
டன்புற்றுவாழ்திருவாறன்விளையில்—துன்பமறக்
கண்டிமைசெய்யக்கருதியமாறன்கழலே
திண்டிறலோர்யாவர்க்குந்தேவு. (எO)

---

# எட்டாம்பத்து.

## க-வது, தேவிமாராவார்.

ஶக்திஹாநியாலே அந்தத்திருப்பதிக்குப் போகமாட்டாமல் நடுவேநின்றுபுருஷகார பூதையானபிராட்டிகிட்டவிருக்கவும் ஆஶ்ரிதபாரதந்த்ர்யாதிகுணங்களிருக்கையாலுந் தமக்குப் பலஹித்தியான தில்லையென்று குணங்கள்மேலே அதிசங்கைபண்ணுகையில்ஸர்வேஶ்வரன் விஶ்வாஸஹேதுவான கல்யாணகுணங்களைக் காட்டுதலால் அந்த அதிசங்கைதீர்ந்து ப்ரீதரானதை யருளிச்செய்கிறார்.

எழுசீராசிரியவிருத்தம், பண்-புறநீர்மை, தாளம்- ஒன்பதொத்து.
பைரவிராகம் - ஆதிதாளம்.

⁂ தேவிமாராவார்திருமகள்பூமியேவ மற்றமரராட்செய்வார் *
மேவியவுலகம்மூன்றவையாட்சி வேண்டுவேண்டுருவம்நின்னுருவம் *
பாவியேன்றன்னையடுகின்ற கமலக்கண்ணதோர்பவளவாய்மணியே *
ஆவியேயமுதேயலைகடல்கடைந்தவப்பனே காணுமாறருளாய். (க)

காணுமாறருளாயென்றென்றேகலங்கிக் கண்ணநீரலமர * வினையேன்
பேணுமாறெல்லாம்பேணிநின்பெயரேபிதற்றுமாறருளெனக்கந்தோ*
காணுமாறருளாய்காகுத்தாகண்ணா தொண்டனேன்கற்பகக்கனியே*
பேணுவாரமுதேபெரியதண்புனல்சூழ்பெருநிலமெடுத்தபேராளா. ()

எடுத்தபேராளன்நந்தகோபன்றனின்னுயிர்ச்சிறுவனே * அசோதைக்
கடுத்தபேரின்பக்குலவிளங்களிறே யடியனேன்பெரியவம்மானே *
கடுத்தபோரவுணனுடலிருபிளவாக் கையுகிராண்டவெங்கடலே *
அடுத்ததோருருவாயின்றுநீவாரா யெங்ஙனம்தேறுவருமரே. (ங)

உமருகந்துகந்தவுருவம்நின்னுருவமாகி யுன்றனக்கன்பராணர் *
அவருகந்தமர்ந்தசெய்கையுன்மாயையறிவொன்றும்சங்கிப்பன்வினையேன் *
அமரதுபண்ணியகலிடம்புடைசூழடுபடையவித்தவம்மானே *
அமரர்தம்முதேயசுரர்கள்நஞ்சேயென்னுடையாருயிரேயோ. (ச)

ஆருயிரேயோவகலிடமுழுதும் படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்த *
பேருயிரேயோ, பெரியநீர்படைத்தங்குறைந்ததுகடைந்தடைத்துடைத்த *
சீரியரேயோ மனிசர்க்குத்தேவர்போலத் தேவர்க்கும்தேவாவோ *
ஒருயிரேயோவுலகங்கட்கெல்லா முன்னைநானெங்குவந்துறுகோ. (ரு)

எங்குவந்துறுகோவென்னையாள்வானே யேழுலகங்களும்நீயே *
அங்கவர்க்கமைத்ததெய்வமும்நீயே யவற்றவைகருமமும்நீயே *
பொங்கியபுறம்பால்பொருளுள்வேலு மவையுமோநீயின்னேயானல் *
மங்கியஅருவாம்நேர்ப்பமும்நீயே வான்புலனிறந்ததும்நீயே. (சா)

இறந்ததும்நீயேயெதிர்ந்ததும்நீயே நிகழ்வதோநீயின்னேயானல் *
சிறந்தநின்தன்மையதுவிதுவுதுவென்றறிவொன்றும்சங்கிப்பன்வினையேன்
கறந்தபால்நெய்யேநெய்யினின்சுவையே கடலினுள்அமுதமே * அமுதில்
பிறந்தவின்சுவையேசுவையதுபயனே பின்னைதோள்மணந்தபேராயா. (எ)

மணந்தபேராயாமாயத்தால்முழுதும் வல்வினையேனையீர்கின்ற *
குணங்களையுடையாய்அசுரர்வன்கையர்கூற்றமேகொடியபுள்ளுயர்த்தாய் *
பணங்களாயிரமுமுடைய பைந்நாகப்பள்ளியாய்ப்பாற்கடல்சேர்ப்பா
வணங்குமாறறியேன்மனமும்வாசகமும்செய்கையும்யானுநீதானே. ()

யானுநீதானேயாவதோமெய்யே யருநரகவையும்நீயானல் *
வானுயரின்பமெய்திலென் மற்றைநரகமேயெய்திலென்னெனினும் *
யானுநீதானாய்த்தெளிதொறும் நன்றுமஞ்சுவன்நரகம்நானடைதல் *
வானுயரின்பம்மன்னிவீற்றிருந்தாயருளுநின்தாள்களையெனக்கே.(கூ)

தாள்களையெனக்கேதலைத்தலைச்சிறப்பத்தந்த பேருதவிக்கைம்மாறு *
தோள்களையாரத்தழுவி யென்னுயிரையறவிலைசெய்தனன்சோதீ *
தோள்களாயிரத்தாய்முடிகளாயிரத்தாய் துணைமலர்க்கண்களாயிரத்தாய் *
தாள்களாயிரத்தாய்பேர்களாயிரத்தாய் தமியனேன்பெரியவப்பனே.()

⁂ பெரியவப்பனைப்பிரமனப்பனை யுருத்திரனப்பனை * முனிவர்க்
குரியவப்பனையமரரப்பனை யுலகுக்கோர்தனியப்பன்றன்னை *
பெரியவண்குருகூர்வண்சடகோபன் பேணினவாயிரத்துள்ளும் *
உரியசொல்மாலையிவையும்பத்திவற்று லுய்யலாம்தொண்டீர்நங்கட்கே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



தேவனுறைபதியிற்சேரப்பெறுமையால்
மேவுமடியார்வசனுமெய்ந்நிலையும்—யாவையுந்தான்
ஆநிலையுஞ்சங்கித்தவைதெளிந்தமாறன்பால்
மாநிலத்தீர்நங்கண்மனம். (எக)

---

## உ-வது, நங்கள்வரிவளை.



உபாயபூதனை ஈஸ்வரன்வந்து முகங்காட்டாமலிருக்கைக்குஹேதுஈஸ்
வரனறியும்படி ஸம்ஸாரஸம்பந்தமுண்டாயிருக்குமென்றுசங்கித்து
தமக்கு ஸம்ஸாரம் நைராச்யமென்று நாயகி ஸகிதாய்களைக்கு
றித்து உங்களோடுஸம்பந்தமில்லையென்று சொன்ன
தாக வருளிச்செய்கிறார்.

---

எண்சீராசிரியவிருத்தம், பண்-கொல்லி, தாளம்-ஏழொத்து.
சேஞ்சுருட்டிராகம் - அடதாளம்.

⁂ நங்கள்வரிவளையாயங்களோ நம்முடையேதலர்முன்புநாணி *
நுங்கட்கியானென்றுரைக்குமாற்றம் நோக்குகின்றேனெங்கும்காணமாட்டேன்
சங்கம்சரிந்தனசாயிழந்தேன் தடமுலைபொன்னிறமாய்த்தளர்ந்தேன் * [ன்
வெங்கண்பறவையின்பாகனெங்கோன்வேங்கடவாணனைவேண்டிச்சென்றே

வேண்டிச்சென்றொன்றுபெறுகிற்பாரிலென்னுடைத்தோழியர்நுங்கட்கேனு
ஈண்டிதுரைக்கும்படியையந்தோ காண்கின்றிலேனிடராட்டியேன்நான் *[ம்
காண்தகுதாமரைக்கண்ணன்கள்வன் விண்ணவர்கோன்நங்கள்கோனைக்கண்
ஈண்டியசங்கும்நிறைவும்கொள்வானெத்தனைகாலமிளைக்கின்றேனே. [டால்

காலமிளைக்கிலல்லால்வினையேன் நானிளைக்கின்றிலன்கண்டுகொண்மி
ஞாலமறியப்பழிசுமந்தேன்நன்னுதலீ ரினிநாணித்தானென் * [டன் *
நீலமலர்நெடும்சோதிசூழ்ந்த நீண்டமுகில்வண்ணன்கண்ணன்கொண்
கோலவளையொடுமாமைகொள்வானெத்தனைகாலமும்கூடச்சென்றே.

கூடச்சென்றேனினியென்கொடுக்கேன் கோல்வளைநெஞ்சத்துடக்க
மெல்லாம் *, பாடற்றொழியவிழந்துவைகல்பல்வளையார்முன்பரிசழிந்
தேன்*, மாடக்கொடிமதிள்தென்குளந்தை வண்குடபால்நின்றமாயக்
கூத்தன்*, ஆடல்பறவையுயர்த்தவெல்போராழிவலவனையாதரித்தே.

ஆழிவலவனையாதரிப்பு மாங்கவன்நம்மில்வரவுமெல்லாம்.*
தோழியர்காள்நம்முடையமேதான் சொல்லுவதோவிங்கரியதுதான் *
ஊழிதோறாழியொருவனாக நன்குணர்வார்க்குமுணரலாகா *
சூழலுடையசுடர்கொளாதித் தொல்லையம்சோதிநினைக்குங்காலே. ()

தொல்லையஞ்சோதிநினைக்குங்காலென்சொல்லளவன்றிமையோர்தமக்
கும் *, எல்லையிலாதனகூழ்ப்புச்செய்யு மத்திறம்நிற்கவெம்மாமைகொண்டா
ன் *, அல்லிமலர்த்தண்டுழாயும்தாரா னார்க்கிடுகோவினிப்பூசல்சொல்லீர் *
வல்லிவளவயல்சூழ்குடந்தை மாமலர்க்கண்வளர்கின்றமாலே. (௬)

மாலரிகேசவன்நாரணன் சீமாதவன்கோவிந்தன்வைகுந்தனென்றென்று *
ஓலமிடவென்னைப்பண்ணிவிட்டிட் டொன்றுமுருவும்சுவடும்காட்டான் *
எலமலர்க்குழலன்னைமீர்கா ளென்னுடைத்தோழியர்காளென்செய்கேன் *
காலம்பலசென்றும்காண்பதாணை யுங்களோடெங்களிடையில்லையே. (௭)

இடையில்லையான்வளர்த்தகிளிகாள் பூவைகள்காள்குயில்காள்மயில்காள் *
உடையநம்மாமையும்சங்கும்நெஞ்சுமொன்றுமொழியவொட்டாதுகொண்டா
அடையும்வைகுந்தமும்பாற்கடலு மஞ்சனவெற்புமவைநணிய * [ன் *
கடையறப்பாசங்கள்விட்டபின்னையன்றி யவனவைகாண்கொடானே. (௮)

காண்கொடுப்பானல்லனார்க்கும்தன்னைக்கைசெயப்பாலதோர்மாயந்தன்னால்*
மாண்குறள்கோலவடிவுகாட்டி மண்ணும்விண்ணும்நிறையமலர்ந்த *
சேண்சுடர்த்தோள்கள்பலதழைத்த தேவபிராற்கென்நிறைவினோடு * [ள்.
நாண்கொடுத்தேனினியென்கொடுக்கே னென்னுடைநன்னுதல்நங்கைமீர்கா

என்னுடைநன்னுதல்நங்கைமீர்காள் யானினிச்செய்வதென்னென்னெஞ்சென்
னின்னிடையேனல்லேனென்றுநீங்கிநேமியும்சங்குமிருகைக்கொண்டு * [னை
பன்னெடுஞ்சூழ்சுடர்நாயிற்றோடு பான்மதியேந்தி, ஓர்கோலநீல *
நன்னெடுங்குன்றம்வருவதொப்பான் நாண்மலர்ப்பாதமடைந்ததுவே. (௧0)

⁂ பாதமடைவதன்பாசத்தாலே மற்றவன்பாசங்கள்முற்றவிட்டு *
கோதில்புகழ்க்கண்ணன்றன்னடிமேல் வண்குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீதிலந்தாதியோராயிரத்துள்ளிவையுமோர்பத்திசையொடும்வல்லார்*
ஆதுமோர்தீதிலராகி † யிங்குமங்குமெல்லாமமைவார்கள்தாமே.(கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



நங்கருத்தைநன்றுகநாடிநிற்குமாலறிய
இங்கிவற்றிலாசை யெமக்குளதென்—சங்கையினல்
தன்னுயிரின்மற்றினசைதானெழிந்தமாறன்றன்
அங்கிலையையாய்ந்துரைத்தானங்கு. (எஉ)

## ரு-வது, அங்குமிங்கும்.



ஸம்ஸாரஸம்பந்த மில்லையென்றுசொல்ல ஈஶ்வரன் மாநஸ ஸாக்ஷாத்காரம் பண்ண அவன்ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளைப்பார்த்துத் தாம்பட்ட துக்கமும்மறந்து இப்படிப்பட்ட திவ்யமங்கள விக்ரஹத்தோடே யவதரித்த ஸர்வேஶ்வரனுக்கு மங்களாஶாஸநபர ரொருவரு மில்லை யென்றுந் தாமொருவருமே மங்களாஶாஸநம் பண்ணுகைக்கு இருந்தோமென்றும் இப்படி பயப்படுகையில் ஈஶ்வரன் தமக்கு மங்களாஶாஸநபரராய் நித்யமுக்தரிருக்க முமுக்ஷுக்களிருக்க நீரேன் பயப்படுகிறீரென்று சொல்ல பயந்தீர்ந்தமை யருளிச்செய்கிருர்.

---

கலித்துறை, பண்-நட்டபாஷை, தாளம்-ஏழொத்து.

வராளிராகம் - ரூபகதாளம்.

⁂ அங்குமிங்கும்வானவர்தானவர் * யாவரும்
எங்குமினையையென்றுன்னை யறியகிலாதலற்றி *
அங்கம்சேரும்பூமகள் மண்மகளாய்மகள் *
சங்குசக்கரக்கை யவனென்பர்சரணமே. (க)

சரணமாகியநான்மறை நூல்களுஞ்சாராதே *
மரணம்தோற்றம் வான்பிணிமூப்பென்றிவைமாய்த்தோம் *
கரணப்பல்படை. பற்றறவோடும்கனலாழி *
அரணத்திண்படையேந்திய வீசற்காளாயே. (உ)

ஆளும்மாளாராழியும் சங்கும்சுமப்பார்தாம் *
வாளும்வில்லுங்கொண்டு பின்செல்வார்மற்றில்லை *
தாளும்தோளும்கைகளையாரத் தொழக்காணேன் *
நாளும்நாளும்நாடுவ னடியேன்ஞாலத்தே. (ரு)

ஞாலம்போனகம்பற்றி யோர்முற்றுவுருவாகி *
ஆலம்பேரிலையன்ன வசஞ்செய்யுமம்மானே *
காலம்பேர்வதோர்காரிருளூழி யொத்துளதால் * உன்
கோலங்காரெழில் காணலுற்றாழும்கொடியேற்கே. (சு)

---

† "அங்குமிங்கும்" என்று ஆறுயிரப்படி.

கொடியார்மாடக்கோளூரகத்தும் புளிங்குடியும் *
மடியாதின்னே நீதுயில்மேவிமகிழ்ந்ததுதான் *
அடியாரல்லல்தவிர்த்தவசைவோ வன்றேல் * இப்
படிதான்நீண்டுதாவியவசைவோ பணியாயே. (ரு)

பணியாவமரர்பணிவும் பண்பும்தாமேயாம் *
அணியாராழியும்சங்கமுமேந்து மவர்காண்மின் *
தணியாவெந்நோயுலகில் தவிர்ப்பான் * திருநீல
மணியார்மேனியோ டென்மனம்சூழவருவாரே. (சா)

வருவார்செல்வார் வண்பரிசாரத்திருந்த * என்
திருவாழ்மார்வற் கென்திறம்சொல்லார்செய்வதென் *
உருவார்சக்கரம்சங்குசுமந் திங்கும்மோடு-*
ஒருபாடுழல்வா னோரடியானுமுளனென்றே. (எ)

† என்றேயென்னை யுன்னேரார்கோலத்திருந்தடிக்கீழ் *
நின்றேயாட்செய்ய நீகொண்டருளநினைப்பதுதான் *
குன்றேழ்பாரேழ்சூழ்கடல்ஞாலம் முழுவேழும் *
நின்றேதாவிய நீள்கழலாழித்திருமாலே. (அ)

திருமால்நான்முகன் செஞ்சடையானென் றிவர்கள் * எம்
பெருமான் தன்மையை யாரறிகிற்பார்பேசியென் *
ஒருமாமுதல்வா வூழிப்பிரானென்னையாளுடை *
கருமாமேனியனென்ப னென்காதல்கலக்கவே. (கூ)

கலக்கமில்லாநல்தவமுனிவர் கரைகண்டோர் *
துலக்கமில்லாவானவரெல்லாம் தொழுவார்கள் *
மலக்கமெய்த மாகடல்தன்னைக்கடைந்தானை *
உலக்கநாம்புகழ்கிற்ப தென்செய்வதுரையீரே. (க0)

‡ உரையாவெந்நோய்தவிர அருள்நீண்முடியானை *
வரையார்மாட மன்னுகுருகூர்ச்சடகோபன் *
உரையேய்சொல்தொடை யோராயிரத்துளிப்பத்தும் *
நிரையேவல்லார் நீடுலகத்துப்பிறவாரே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



அங்கமரர்பேணவவர்நடுவேவாழ்திருமாற்
கிங்கோர்பரிவரிலையென் றஞ்ச—எங்கும்
பரிவருளரென்னப்பயந்தீர்ந்தமாறன்
வரிகழற்றாள்சேர்ந்தவர்வாழ்வார். (எகூ)

† "என்றேல்" என்று உரையும். ஆறாயிரப்படியும்.

## ச-வது, வார்கடா.

அஸ்தாநபயசங்கைபண்ணுகிறப்ரேமஸ்வபாவமுடைய ஆழ்வார்க்குஇன்னம் பயமெங்கே வருமோவென்று விசாரித்து ஈஶ்வரன்தன்வீர்ய ஶக்த்யாதி குணங்களையும் மங்களாஶாஸநபரஸம்ருத்தியையுங்காட்டித் திருச்செங்குன்றூரில் ஸ்வாமிபயம்போக்கினதை அருளிச்செய்கிறார்.

---

எழுசீராசிரியவிருத்தம், பண்-புறநீர்மை, தாளம்-ஒன்பதொத்து.
அடாணராகம் - ஆதிதாளம்.

✠ வார்கடாவருவியானைமாமலையின் மருப்பிணைக்குவடிறுத்துருட்டி *
ஊர்கொள்திண்பாகனுயிர் செகுத்தரங்கின்மல்லரைக்கொன்றுசூழ்பரண்மே
போர்கடாவரசர்புறக்கிட மாடமீமிசைக்கஞ்சனைத்தகர்த்த * [ல் *
சீர்கொள்சிற்றயன்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெங்கள்செல்சார்வே.

எங்கள்செல்சார்வுயாமுடையமுத மிமையவரப்பனென்னப்பன் *
பொங்குமூவுலகும்படைத்தளித்தழிக்கும் பொருந்துமூவுருவனெம்மருவன் *
செங்கயலுகளும்தேம்பணைபுடைசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்று *
றங்கமர்கின்ற * ஆதியானல்லால்யாவர்மற்றென்னமர்துணையே. (உ)

என்னமர்பெருமானிமையவர்பெருமா னிருநிலமிடந்தவெம்பெருமான் *
முன்னைவல்வினைகள்முழுதுடன்மாள வென்னையாள்கின்றவெம்பெருமான் *
தென்திசைக்கணிகொள்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரைமீபால்
நின்றவெம்பெருமான் * அடியல்லால்சரண்நினைப்பிலும்பிறிதில்லையெனக்கே.

பிறிதில்லையெனக்குப்பெரியமூவுலகும்நிறையப் பேருருவமாய்நிமிர்ந்த *
குறியமாணெம்மான்குரைகடல்கடைந்த கோலமாணிக்கமென்னம்மான் *
செறிகுலைவாழைகமுகுதெங்கணிசூழ் திருச்செங்குன்றூர்த்திருச்சிற்று
றறிய * மெய்ம்மையேநின்றவெம்பெருமா னடியிணையல்லதோரரணே. (ச)

அல்லதோரரணுமவனில்வேறில்லை யதுபொருளாகிலும் * அவனை
யல்லதென்னாவியமர்ந்தணைகில்லா தாதலாலவனுறைகின்ற *
நல்லநான்மறையோர்வேள்வியுள்மடுத்த நறும்புகைவிசும்பொளிமறைக்கும் *
நல்லநீள்மாடத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறெனக்குநல்லரணே. (ரு)

எனக்குநல்லரணையெனதாருயிரை யிமையவர்தந்தைதாய்தன்னை *
தனக்கும்தன்தன்மையறிவரியானைத் தடங்கடல்பள்ளியம்மானை * [ழ்
மனக்கொள்சீர்மூவாயிரவர்வண்சிவனுமயனும்தானுமொப்பார்வா, க
ணக்கொள்திண்மாடத்திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாறதனுள்கண்டேனே.

திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாறதனுள் கண்டவத்திருவடியென்றும்
திருச்செய்யகமலக்கண்ணும்செவ்வாயும் செவ்வடியும்செய்யகையும் *
திருச்செய்யகமலவுந்தியும்செய்ய † கமலமார்பும்செய்யவுடையும் *
திருச்செய்யமுடியுமாரமும்படையும் திகழவென்சிந்தையுளானே. (எ)

---

† "கமலைமார்பும்" என்று பாடாந்தரம்.

திகழவென்சிந்தையுளிருந்தானைச் செழுநிலத்தேவர்நான்மறையோர் *
திசைகைகூப்பியேத்தும்திருச்செங்குன்றூரில்திருச்சிற்றாற்றங்கரையானை *
புகர்கொள்வானவர்கள்புகலிடந்தன்னை யசுரர்வன்கையர்வெங்கூற்றை *
புகழுமாறறியேன்பொருந்துமூவுலகும் படைப்பொடுகெடுப்புக்காப்பவனே. ()

படைப்பொடுகெடுப்புக்காப்பவன் பிரமபரம்பரன்சிவப்பிரானவனே *
இடைப்புக்கோருருவுமொழிவில்லையவனே புகழ்வில்லையாவையுந்தானே *
கொடைப்பெரும்புகழாரினையர்தன்னானார் கூரியவிச்சையோடொழுக்கம் *
நடைப்பலியியற்கைத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாறமர்ந்தநாதனே. ()

அமர்ந்தநாதனையவரவராகி யவர்க்கருளருளுமம்மானை *
அமர்ந்ததண்பழனத்திருச்செங்குன்றூரில் திருச்சிற்றாற்றங்கரையானை *
அமர்ந்தசீர்மூவாயிரவர்வேதியர்கள் தம்பதியவனிதேவர்வாழ்வு *
அமர்ந்தமாயோனைமுக்கணம்மானை நான்முகனையமர்ந்தேனே. (க0)

‡‡தேனைநன்பாலைக்கன்னலையமுதைத் திருந்துலகுண்டவம்மானை *
வானநான்முகனைமலர்ந்ததண்கொப்பூழ் மலர்மிசைப்படைத்தமாயோனை *
கோனைவண்குருகூர்வண்சடகோபன் சொன்னவாயிரத்துளிப்பத்தும் *
வானின்மீதேற்றியருள்செய்துமுடிக்கும் பிறவிமாமாயக்கூத்தினையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



வாராமலச்சமினிமால்தன்வலியினையும்
சீரார்பரிவருடன்சேர்த்தியையும்—பாருமெனத்
தானுகந்தமாறன்றாள்சார்நெஞ்சேசாராயேல்
மானிடவரைச்சார்ந்துமாய். (எசு)

---

## ரு-வது, மாயக்கூத்தா.



இவ்வாறு பயம்போக்கினதெல்லாம் மானஸாநுபவமாத்ரமாகையால் பாஹ்ய ஸம்ஶ்லேஷாபேக்ஷையாலே முன் புண்டான ப்ரீதியெல்லாம்போயப்படிப்பட்ட ஸர்வேஶ்வரனைக்குறித்து ப்ரத்யக்ஷமாகவேண்டுமென்று தாமும் தம்முடைய இந்த்ரியமும் கூப்பிட்டதாக வருளிச்செய்கிறார்.

---

அறுசீராசிரியவிருத்தம், பண்-பழம்பஞ்சுரம், தாளம்-ஏழொத்து.
சாவேரிராகம் - ஆதிதாளம்.

‡‡மாயக்கூத்தாவாமனா வினையேன்கண்ணாகண்கைகால் *
தூயசெய்யமலர்களா சோதிச்செவ்வாய்முகிழ்தா *
சாயல்சாமத்திருமேனி தண்பாசடையா * தாமரைநீள்
வாசத்தடம்போல்வருவானே யொருநாள்காணவாராயே. (க)

காணவாராயென்றென்று கண்ணும்வாயும்துவர்ந்து-* அடியேன்
நாணிநன்னாட்டலமர்ந்தா லிரங்கியொருநாள்நீயந்தோ *
காணவாராய்கருநாயிறுதிக்கும் கருமாமாணிக்க
நாள்நல்மலைபோல் * சுடர்ச்சோதிமுடிசேர்சென்னியம்மானே. (உ)

முடிசேர்சென்னியம்மா நின்மொய்பூம்தாமத்தண்டுழாய் *
கடிசேர்கண்ணிப்பெருமானே யென்றென்றேங்கியழுதக்கால் *
படிசேர்மகரக்குழைகளும் பவளவாயும்நால்தோளும் *
துடிசேரிடையுமமைந்ததோர் தூநீர்முகில்போல்தோன்றாயே. (ங)

தூநீர்முகில்போல்தோன்றும் நின்சுடர்கொள்வடிவும்கனிவாயும் *
தேநீர்கமலக்கண்களும் வந்தென்சிந்தைநிறைந்தவா *
மாநீர்வெள்ளிமலைதன்மேல் வண்கார்நீலமுகில்போல *
தூநீர்கடலுள் துயில்வானே யெந்தாய்சொல்லமாட்டேனே. (ச)

சொல்லமாட்டேனடியே னுன்துளங்குசோதித்திருப்பாதம் *
எல்லையில்சீரிளநாயி றிரண்டுபோலென்னுள்ளவா *
அல்லலென்னுமிருள்சேர்தற் குபாயமென்னே * ஆழிசூழ்
† மல்லைஞாலமுழுதுண்ட மாநீர்கொண்டல்வண்ணனே. (ரு)

கொண்டல்வண்ணாகுடக்கூத்தா வினையேன்கண்ணாகண்ணா * என்
அண்டவாணாவென்றென்னை யாளக்கூப்பிட்டழைத்தக்கால் *
விண்டன்மேல்தான்மண்மேல்தான் விரிநீர்க்கடல்தான்மற்றுத்தான் *
தொண்டனேனுன்கழல்காண வொருநாள்வந்துதோன்றாயே. (சு)

வந்துதோன்றாயன்றே லுன்வையம்தாயமலரடிக்கீழ் *
முந்திவந்துயான்நிற்ப முகப்பேகூவிப்பணிகொள்ளாய் *
செந்தண்கமலக்கண்கைகால் சிவந்தவாயோர்கருநாயிறு-*
அந்தமில்லாக்கதிர்பரப்பி யலர்ந்ததொக்குமம்மானே. (எ)

ஒக்குமம்மானுருவமென் றுள்ளம்குழைந்துநாளும் *
தொக்கமேகப்பல்குழாங்கள் காணும்தோறும்தலைவன்நான் *
தக்கவைவர்தமக்கா யன்றீரைம்பதின்மர்தாள்சாய *
புக்கநல்தேர்த்தனிப்பாகா வாராயிதுவோபொருத்தமே. (அ)

இதுவோபொருத்தம்மின்னாழிப்படையா யேறுமிரும்சிறைப்புள் *
அதுவேகொடியாவுயர்த்தானே யென்றென்றேங்கியழுதக்கால் *
எதுவேயாகக்கருதுங்கொ லிம்மாஞாலம்பொறைதீர்ப்பான் *
மதுவார்சோலை யுத்தரமதுரைப்பிறந்தமாயனே. (கூ)

பிறந்தமாயாபாரதம் பொருதமாயாநீயின்னே *
சிறந்தகால்தீநீர்வான் மண்பிறவுமாயபெருமானே *
கறந்தபாலுள்நெய்யேபோ லிவற்றுளெங்கும்கண்டுகொள் *
இறந்துநின்றபெருமாயா வுன்னையெங்கேகாண்கேனே. (க0)

† "மல்லல்" என்று உரை.

⁂ எங்கேகாண்கேனீன்துழாயம்மான்றன்னை யானென்றென்று - *
அங்கேதாழ்ந்தசொற்களா லந்தண்குருகூர்ச்சடகோபன் *
செங்கேழ்சொன்னவாயிரத்து ளிவையும்பத்தும்வல்லார்கள் *
இங்கேகாணவிப்பிறப்பேமகிழ்வ ரெல்லியுங்காலையே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



மாயன்வடிவழகைக்காணுதவல்விடாய்
ஆயதறவிஞ்சியழுதலற்றும்— தூயபுகழ்
உற்றசடகோபனைநாமொன்றிநிற்கும்போதுபகல்
அற்றபொழுதானதெல்லி யாம். (எரு)

---

## கூ-வது, எல்லியும்.



ஆழ்வாரவ்வாறு கூப்பிடுகையில் ஆழ்வாரைக்காட்டில் ஈஶ்வரனுக்கு ஆழ்வாரிடத்தில் த்ருஷ்ணை அதிகமாய் ஆக்ரோஶம் பண்ணுகைக்கு முன்னே வந்தோமில்லையென்று லஜ்ஜித்து ஆழ்வாரார்த்தி தீரும்படி ஸகலஸந்நாஹத்தோடே அதற்குஹிதமாகப் போனல் மோஹிப்பரென்று திருக்கடித்தானத் திருப்பதியி லெழுந்தருளின தறிவித்து ப்ரீதி ஸாத்மித்தவாறேமுகங்காட்டுவோமென் றிருந்ததைக்கண்டு ஆழ்வார் ப்ரீதி யடைந்ததை யருளிச் செய்கிறார்.

---

கலிவிருத்தம், பண்-வியந்தம், தாளம்-ஏழொத்து.
மோஹநராகம் - ஆதிதாளம்.

⁂ எல்லியுங்காலையும் தன்னைநினைந்தெழ *
நல்லவருள்கள்நமக்கேதந் தருள்செய்வான் *
அல்லியந்தண்ணந்துழாய் முடியப்பனூர் *
செல்வர்கள்வாழும் திருக்கடித்தானமே. (க)

திருக்கடித்தானமு மென்னுடைச்சிந்தையும் *
ஒருக்கடுத்துள்ளே யுறையும்பிரான்கண்டீர் *
செருக்கடுத்தன்று திகைத்தவரக்கரை *
உருக்கெடவாளி பொழிந்தவொருவனே. (உ)

ஒருவரிருவரோர் மூவரெனநின்று - *
உருவுகரந்துள்ளுந் தோறும்தித்திப்பான் *
திருவமர்மார்வன் திருக்கடித்தானத்தை *
மருவியுறைகின்ற மாயப்பிரானே. (ந)

மாயப்பிரானென வல்வினைமாய்ந்தற *
நேசத்தினல்நெஞ்சம் நாடுகுடிகொண்டான் *
தேசத்தமரர் திருக்கடித்தானத்தை *
வாசப்பொழில்மன்னு கோயில்கொண்டானே. (ச)

கோயில்கொண்டான்றன் திருக்கடித்தானத்தை *
கோயில்கொண்டானதனேடு மென்னெஞ்சகம் *
கோயில்கொள்தெய்வமெல்லாம் தொழ * வைகுந்தம்
கோயில்கொண்ட குடக்கூத்தவம்மானே. (ரு)

கூத்தவம்மான் கொடியேனிடர்முற்றவும் *
மாய்த்தவம்மான் மதுசூதவம்மானுறை *
பூத்தபொழில் தண்திருக்கடித்தானத்தை *
ஏத்தநில்லா குறிக்கொள்மினிடரே. (சு)

கொள்மினிடர்கெட வுள்ளத்துக்கோவிந்தன் *
மண்விண்முழுதுமளந்த வொண்டாமரை *
மண்ணவர்தாம்தொழ வானவர்தாம்வந்து *
நண்ணுதிருக்கடித் தானநகரே. (எ)

தானநகர்கள் தலைச்சிறந்தெங்கெங்கும் *
வானிந்நிலம்கடல் முற்றுமெம்மாயற்கே *
ஆனவிடத்து மென்னெஞ்சும்திருக்கடித்
தானநகரும் * தன தாயப்பதியே. (அ)

தாயப்பதிகள் தலைச்சிறந்தெங்கெங்கும் *
மாயத்தினல்மன்னி வீற்றிருந்தானுறை *
தேசத்தமரர் திருக்கடித்தானத்துள் *
ஆயர்க்கதிபதி யற்புதன்தானே. (கூ)

அற்புதன்நாராயண னரிவாமனன் *
நிற்பதுமேவி யிருப்பதென்னெஞ்சகம் *
நற்புகழ்வேதியர் நான்மறைநின்றதிர் *
கற்பகச்சோலைத் திருக்கடித்தானமே. (க0)

⁂ சோலைத்திருக்கடித் தானத்துறைதிரு
மாலை * மதிள்குருகூர்ச் சடகோபன்சொல் *
பாலோடமுதன்ன வாயிரத்திப்பத்தும் *
மேலைவைகுந்தத்திருத்தும் வியந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



எல்லிபகனடந்தவிந்தவிடாய்தீருகைக்கு
மெல்லவந்துதான்கலக்கவேணுமென—நல்லவர்கள்
மன்னுகடித்தானத்தேமாலிருக்கமாறன்கண்
டிந்நிலையைச்சொன்னனிருந்து. (எசு)

## எ-வது, இருத்தும்.



*திருக்கடித்தானத்தில் ஈஶ்வரன் ஆழ்வார்மநோரதமெல்லாம் தீரும்படி ஸம்ஶ்லேஷிக்க இது ஸ்வப்நமோ மோஹமோவென்று சங்கித்து இது ஸ்வப்நமன்று யதார்த்தமென்றுதெரிந்து அதிப்ரீதியடைந்ததை யருளிச்செய்கிறார்.*

---

கலிவிருத்தம், பண்—இந்தளம், தாளம்—ஏழொத்து.
**கல்யாணிராகம் - ஆதிதாளம்.**

✤✤ இருத்தும்வியந்தென்னைத் தன்பொன்னடிக்கீழென்று—*
அருத்தித்தெனைத்தோர் பலநாளழைத்தேற்கு *
பொருத்தமுடைவாமனன்றான்புகுந்து - * என்றன்
கருத்தையுறவீற்றிருந்தான் கண்டுகொண்டே. (க)

இருந்தான்கண்டுகொண் டெனதேழைநெஞ்சாளும் *
திருந்தாதவோரைவரைத் தேய்ந்தறமன்னி *
பெருந்தாள்களிற்றுக் கருள்செய்தபெருமான் *
தருந்தானருள்தா னினியானறியேனே. (உ)

அருள்தானினியானறியே னவனென்னுள் *
இருள்தானறவீற்றிருந்தா னிதுவல்லால் *
பொருள்தானெனில் மூவுலகும்பொருளல்ல *
மருள்தானீதோ மாயமயக்குமயக்கே. (ங)

மாயமயக்குமயக்கா னென்னைவஞ்சித்து - *
ஆயனமரர்க்கரியே றெனதம்மான் *
தூயசுடர்ச்சோதித் தனதென்னுள்வைத்தான் *
தேசம்திகழும் தன்திருவருள்செய்தே. (ச)

திகழும்தன்திருவருள் செய்துலகத்தார்
புகழும் * புகழ்தானதுகாட்டித்தந்து - * என்னுள்
திகழும்மணிக்குன்றமொன்றே யொத்துநின்றான் *
புகழும்புகழ் மற்றெனக்குமோர்பொருளே. (ரு)

பொருள்மற்றெனக்குமோர் பொருள்தன்னில்சீர்க்கத்
தருமேல் * பின்னையார்க்கவன் தன்னைக்கொடுக்கும் *
கருமாணிக்கக் குன்றத்துத்தாமரைபோல் *
திருமார்புகால்கண்கை செவ்வாயுந்தியானே. (சு)

செவ்வாயுந்திவெண்பல் சுடர்க்குழை * தன்னொ
டெவ்வாய்சுடரும் தம்மில்முன்வளாய்க்கொள்ள *
செவ்வாய்முறுவலோடெனதுள்ளத்திருந்த *
அவ்வாயன்றி யானறியேன்மற்றருளே. (எ)

அறியேன்மற்றரு ளென்னையாளும்பிரானார் *
வெறிதேயருள்செய்வர் செய்வார்கட்குகந்து *
சிறியேனுடைச்சிந்தையுள் மூவுலகும் * தன்
நெறியாவயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரே. (அ)

வயிற்றிற்கொண்டு நின்றொழிந்தாரும்யவரும் *
வயிற்றிற்கொண்டு நின்றொருமூவுலகும் * தம்
வயிற்றிற்கொண்டு நின்றவண்ணம்நின்றமாலை *
வயிற்றிற்கொண்டு மன்னவைத்தேன்மதியாலே. (கூ)

வைத்தேன்மதியா லெனதுள்ளத்தகத்தே *
எய்த்தேயொழிவேனல்லே னென்றுமெப்போதும் *
மொய்த்தேய்திரைமோது தண்பால்கடலுளால் *
பைத்தேசுடர்ப்பாம்பணை நம்பரனையே. (க0)

⁂ சுடர்ப்பாம்பணை நம்பரனைத் திருமாலை *
அடிச்சேர்வகை வண்குருகூர்ச்சடகோபன் *
முடிப்பான்சொன்னவாயிரத்திப் பத்தும்சன்மம்
விட * தேய்ந்தறநோக்கும் தன்கண்கள்சிவந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



இருந்தவன்றான்வந்திங்கிவரெண்ணமெல்லாம்
திருந்தவிவர்தந்திறத்தேசெய்து—பொருந்தக்
கலந்தினியனாய்நிற்கக்கண்டசடகோபர்
கலந்தநெறிகட்டுரைத்தார்கண்டு. (எஎ)

## அ-வது, கண்கள்சிவந்து.



ஆழ்வார் மூன்றாந்தரம் மோஹித்த திருவாய்மொழி.
ஸ்ரீயஃபதியினுடையஸர்வஸ்வாமித்வத்தையருளிச்செய்கிறார்.

அறுசீராசிரியவிருத்தம், பண்-தக்கேசி, தாளம்-ஏழொத்து.
பைரவிராகம் - ஆதிதாளம்.

⁂ கண்கள்சிவந்துபெரியவாய் வாயும்சிவந்துகனிந்து - * உள்ளே
வெண்பலிலகுசுடரிலகு விலகுமகரகுண்டலத்தன் *
கொண்டல்வண்ணன்சுடர்முடியன்நான்குதோளன் † குனிசார்ங்கன்
ஒண் ‡ சங்கதைவாளாழியா னொருவனடியேனுள்ளானே. (க)

† "குனிசார்ங்கம்" என்று உரை. ‡ சங்கதை=சங்கு, கதை என்பது கடைக்குறையாயிற்று.

அடியேனுள்ளானுடலுள்ளா னண்டத்தகத்தான்புறத்துள்ளான் *
படியேயிதுவென்றுரைக்கலாம் படியனல்லன்பரம்பரன் *
கடிசேர்நாற்றத்துள்ளாலை யின்பத்துன்பக்கழிநேர்மை *
ஒடியாவின்பப்பெருமையோ னுணர்விலும்பரொருவனே. (உ)

உணர்விலும்பரொருவனை யவனதருளாலுறல்பொருட்டு - * என்
உணர்வினுள்ளேயிருத்தினே னதுவுமவனதின்னருளே *
உணர்வுமுயிருமுடம்பும் மற்றுலப்பிலனவும்பழுதேயாம் *
உணர்வைப்பெறவூர்ந்திறவேறி யானும்தானாயொழிந்தானே. (ங)

யானும்தானாயொழிந்தானை யாதும்யவர்க்கும்முன்னோனை *
தானும்சிவனும்பிரமனுமாகிப் பணைத்ததனிமுதலை *
தேனும்பாலும்கன்னலு மமுதுமாகித்தித்தித்து - * என்
ஊனிலுயிரினுணர்வினில் நின்றவொன்றை யுணர்ந்தேனே. (ச)

நின்றவொன்றையுணர்ந்தேனுக்கதனுள் நேர்மையதுவிதுவென்று - *
ஒன்றுமொருவர்க்குணரலாகா துணர்ந்துமேலும்காண்பரிது *
சென்றுசென்றுபரம்பரமாய் யாதுமின்றித்தேய்ந்தற்று *
நன்றுதீதென்றறிவரிதாய் நன்றாய்ஞானம்கடந்ததே. (ரு)

நன்றாய்ஞானம்கடந்துபோய் நல்லிந்திரியமெல்லாமீர்த்து - *
ஒன்றாய்க்கிடந்தவரும்பெரும்பா ழுலப்பிலதனையுணர்ந்துணர்ந்து *
சென்றாங்கின்பத்துன்பங்கள் செற்றுக்களைந்துபசையற்றால் *
அன்றேயப்போதேவீ டதுவேவீடுவீடாமே. (சு)

அதுவேவீடுவீடுபெற் றின்பந்தானுமதுதேறி *
எதுவேதானும்பற்றின்றி யாதுமிலிகளாகிற்கில் *
அதுவேவீடுவீடுபெற் றின்பந்தானுமதுதேறாது - *
எதுவேவீடேதின்பமென் றெத்தாரெய்த்தாரெய்த்தாரே. (எ)

எய்த்தாரெய்த்தாரெய்த்தாரென் றில்லத்தாரும்புறத்தாரும்
மொய்த்து * ஆங்கலறிமுயங்கத்தாம்போகும்போது*உன்மத்தர்போல்
பித்தேயேறியநுராகம்பொழியும்போ தெம்பெம்மானோ
டொத்தேசென்று- * அங்குள்ளம்கூடக்கூடிற்றாகில் நல்லுறைப்பே.

கூடிற்றாகில்நல்லுறைப்புக் கூடாமையைக்கூடினால் *
ஆடல்பறவையுயர்கொடி யெம்மாயனாவததுவதுவே *
வீடைப்பண்ணியொருபரிசே எதிர்வும்நிகழ்வும்கழிவுமாய் *
ஓடித்திரியும்யோகிகளு முளருமில்லைபல்லரே. (கூ)

உளருமில்லையல்லரா யுளராயில்லையாகியே *
உளரெம்மொருவரவர்வந்தென்னுள்ளத்துள்ளேயுறைகின்றார் *
வளரும்பிறையுய்ந்தேய்பிறையும்போல அசைவுமாக்கமும் *
வளரும்சுடருமிருளும்போல் தெருளும்மருளும்மாய்த்தோமே. (க0)

⁂ தெருளுள்மருளும்மாய்த்துத் தன்திருந்துசெம்பொற்கழலடிக்கீழ்
அருளியிருத்துமம்மானு மயனும்சிவனும் * திருமாலால் *
அருளப்பட்டசடகோப னோராயிரத்துளிப்பத்தால் *
அருளியடிக்கீழிருத்தும் † நம்மண்ணல்கருமாணிக்கமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



கண்ணிறையவந்துகலந்தமாலிக்கலவி
திண்ணிலையாவே ணுமெனச்சிந்தித்துத்—தண்ணிதெனும்
ஆருயிரினேற்றமதுகாட்டவாய்ந்துரைத்தான்
காரிமாறன்றன்கருத்து. (எஅ)

---

## கூ-வது, கருமாணிக்கமலை.



இதுவுமது.

---

அறுசீராசிரியவிருத்தம், பண்-தக்கேசி, தாளம்—ஏழொத்து.

ஸ்ரீராகம் - ஆதிதாளம்.

⁂ கருமாணிக்கமலைமேல் மணித்தடந்தாமரைக்காடுகள்போல் *
திருமார்வுவாய்கண்கையுந்தி காலுடையாடைகள்செய்யபிரான் *
திருமாலெம்மான் செழுநீர்வயல்குட்டநாட்டுத்திருப்புலியூர் *
அருமாயன்பேரன்றிப்பேச்சில ளன்னைமீரிதற்கென்செய்கேனோ. (க)

அன்னைமீரிதற்கென்செய்கே னணிமேருவின்மீதுலவும் *
துன்னுசூழ்சுடர்நாயிறு மன்றியும்பல்சுடர்களும்போல் *
மின்னுநீண்முடியாரம் பல்கலன்றானுடையெம்பெருமான் *
புன்னையம்பொழில்சூழ் திருப்புலியூர்புகழுமிவளே. (உ)

புகழுமிவள்நின்றிராப்பகல் பொருநீர்க்கடல்தீப்பட்டு - * எங்கும்
திகழுமெரியொடுசெல்வதொப்பச் செழுங்கதிராழிமுதல் *
புகழும்பொருபடையேந்திப் போர்புக்கசுரரைப்பொன்றுவித்தான் *
திகழுமணிநெடுமாடநீடு திருப்புலியூர்வளமே. (ங)

ஊர்வளம்கிளர்சோலையும்கரும்பும்பெருஞ்செந்நெலும்சூழ்ந்து—*
ஏர்வளம்கிளர்தண்பணைக் குட்டநாட்டுத்திருப்புலியூர் *
சீர்வளம்கிளர் மூவுலகுண்டுமிழ்தேவபிரான் *
பேர்வளம்கிளர்ந்தன்றிப்பேச்சில ளின்றிப்புனையிழையே. (ச)

புனையிழைகளணிவுமாடையுடையும்புதுக்கணிப்பும் *
நினையும்நீர்மையதன் றிவட்கிதுநின்றுநினைக்கப்புக்கால் *
சுனையினுள்தடந்தாமரைமலரும் தண்திருப்புலியூர் *
முனைவன்மூவுலகாளி யப்பன்திருவருள்மூழ்கினளே. (ரு)

---

† "எம்மண்ணல்" என்றும் பாடம்.

திருவருள்மூழ்கிவைகலும் செழுநீர்நிறக்கண்ணபிரான் *
திருவருள்களும்சேர்ந்தமைக்கடையாளம்திருந்தவுள *
திருவருளருளா லவன்சென்றுசேர் தண்திருப்புலியூர் *
திருவருள்கமுகொண்பழத்தது மெல்லியல்செவ்விதழே. (௬)
மெல்லிலைச்செல்வவண்கொடிப்புல்க வீங்கிளந்தாள்கமுகின் *
மல்லிலைமடல்வாழை யீன்கனிசூழ்ந்துமணம்கமழ்ந்து *
புல்லிலைத்தெங்கினூடு காலுலவும்தண்திருப்புலியூர் *
மல்லலம்செல்வக்கண்ணன் தாளடைந்தா ளிம்மடவரலே. (எ)
மடவரலன்னைமீர்கட்கென் சொல்லிச்சொல்லுகேன் * மல்லைச்செல்வ
வடமொழிமறைவாணர்வேள்வியுள் நெய்யழல்வான்புகைபோய் *
திடவிசும்பிலமரர்நாட்டைமறைக்கும் தண்திருப்புலியூர் *
படவரவணையான் றன்நாமமல்லால் பரவாளிவளே. (அ)
பரவாளிவள்நின் றிராப்பகல் பனிநீர்நிறக்கண்ணபிரான் *
விரவாரிசைமறைவேதியரொலி வேலையின்நின்றொலிப்ப *
கரவார்தடந்தொறும்தாமரைக்கயம் தீவிகைநின்றலரும் *
புரவார்கழனிகள்சூழ்திருப்புலியூர்ப்புகழன் றிமற்றே. (௯)
அன் றிமற்றோருபாயமென் னிவளந்தண்டுழாய்க்கமழ்தல் *
குன்றமாமணிமாடமாளிகைக் கோலக்குழாங்கள்மல்கி *
தென்திசைத்திலதம்புரைக் குட்டநாட்டுத்திருப்புலியூர் *
நின்றமாயப்பிரான் திருவருளாமிவள்நேர்பட்டதே. (௧௦)
நேர்பட்டநிறைமூவுலகுக்கும் நாயகன்றன்னடிமை *
நேர்பட்டதொண்டர்தொண்டர்தொண்டர் தொண்டன்சடகோபன் *சொல்
நேர்பட்டதமிழ்மாலை யாயிரத்துள் ளிவைபத்தும்
நேர்பட்டாரவர் * நேர்பட்டார் நெடுமாற்கடிமைசெய்யவே. (௧௧)
ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



கருமால்திறத்திலொருகன்னிகையாமாறன்
ஒருமாகலவியுரைப்பால்—திரமாக
அன்னியருக்காகாதவன் றனக்கேயாகுமுயிர்
இந்நிலையையோருநெடிதா. (எ௬)

## ௧௦-வது, நெடுமாற்கடிமை.



இதுவுமது.

அறுசீராசிரியவிருத்தம், பண்-தக்கேசி, தாளம்-ஏழொத்து.
ஸ்ஹானுராகம்-அடதாளம்.

நெடுமாற்கடிமைசெய்வேன்போ லவனைக்கருதவஞ்சித்து *
தடுமாற்றற்றதீக்கதிகள் முற்றும்தவிர்ந்தசதிர்நினைந்தால் *
கொடுமாவினையேனவனடியாரடியே கூடுமிதுவல்லால் *
விடுமாறென்பதென்னந்தோ வியன்மூவுலகுபெறினுமே. (௧)

வியன்மூவுலகுபெறினும் போய்த்தானேதானேயானாலும் *
புயல்மேகம்போல்திருமேனியம்மான் புனைபூங்கழலடிக்கீழ் *
சயமேயடிமைதலைநின்றார் திருத்தாள்வணங்கி * இம்மையே
பயனேயின்பம்யான்பெற்றதுறுமோ பாவியேனுக்கே. (உ)

உறுமோபாவியேனுக் கிவ்வுலகமூன்றுமுடன்நிறைய *
சிறுமாமேனிநிமிர்த்த வென்செந்தாமரைக்கண்திருக்குறளன் *
நறுமாவிரைநாண்மலரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் *
சிறுமாமனிசராயென்னையாண்டா ரிங்கேதிரியவே. (௩)

இங்கேதிரிந்தேற்கிழுக்குற்றெ ன்இருமாநிலமுன்னுண்டுமிழ்ந்த *
செங்கோலத்தபவளவாய்ச் செந்தாமரைக்கணென்னம்மான் *
பொங்கேழ்புகழ்கள் வாயவாய்ப்புலன்கொள்வடிவென்மனத்ததாய் *
அங்கேய்மலர்கள்கையவாய் வழிபட்டோடவருளிலே. (௪)

வழிபட்டோடவருள்பெற்று மாயன்கோலமலரடிக்கீழ் *
சுழிபட்டோடும்சுடர்ச்சோதிவெள்ளத் தின்புற்றிருந்தாலும் *
இழிபட்டோடுமுடலினிற்பிறந்து தன்சீரியான்கற்று *
மொழிபட்டோடும் கவியமுதம்நுகர்ச்சியுறுமோமுழுதுமே. (௫)

நுகர்ச்சியுறுமோமூவுலகின் வீடுபேறுதன்கேழில் *
புகர்ச்செம்முகத்தகளிறட்ட பொன்னாழிக்கையென்னம்மான் *
நிகர்ச்செம்பங்கியெரிவிழிகள் நீண்டவசுரருயிரெல்லாம் *
தகர்த்துண்டுழலும்புட்பாகன் பெரியதனிமாப்புகழே. (௬)

தனிமாப்புகழேயெஞ்ஞான்றும் நிற்கும்படியாத்தான்தோன்றி *
முனிமாப்பிரமமுதல்வித்தா யுலகமூன்றும்முளைப்பித்த *
தனிமாத்தெய்வத்தளிரடிக்கீழ்ப் புகுதலன்றியவனடியார் *
நனிமாக்கலவியின்பமே நாளும்வாய்க்கநங்கட்கே. (௭)

நாளும்வாய்க்கநங்கட்கு நளிநீர்க்கடலைப்படைத்து * தன்
தாளும்தோளும்முடிகளும் சமனிலாதபலபரப்பி *
நீளும்படர்பூங்கற்பகக்காவும் நிறைபன்னாயிற்றின் *
கோளுமுடையமணிமலைபோல்கிடந்தான்தமர்கள்கூட்டமே. (அ)

தமர்கள்கூட்டவல்வினையை நாசஞ்செய்யும் † சதுமூர்த்தி *
அமர்கொளாழிசங்குவாள் வில்தண்டாதிபல்படையன் *
குமரன்கோலவைங்கணைவேள் தாதை கோதிலடியார்தம் *
தமர்கள்தமர்கள்தமர்களாம் சதிரேவாய்க்கதமியேற்கே. (௯)

வாய்க்கதமியேற்கூழிதோறூழியூழி * மாகாயாம்
பூக்கொள்மேனிநான்குதோள் பொன்னாழிக்கையென்னம்மான் *
நீக்கமில்லாவடியார்தம மடியாரடியாரடியாரெங்
கோக்கள் * அவர்க்கேகுடிகளாய்ச்செல்லும் நல்லகோட்பாடே. (கO)

† "சதிர்மூர்த்தி" என்று பாடாந்தரம்.

‡‡ நல்லகோட்பாட்டுலகங்கள் மூன்றினுள்ளுந்தான்நிறைந்த *
அல்லிக்கமலக்கண்ணனை யந்தண்குருகூர்ச்சடகோபன் *
சொல்லப்பட்டவாயிரத்து ளிவையும்பத்தும்வல்லார்கள் *
நல்லபதத்தால்மனைவாழ்வர் கொண்டபெண்டிர்மக்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



எட்டாம்பத்து - ஸம்பூர்ணம்.

நெடுமாலழகுதன்னில்நீல்குணத்திலீடு
படுமாநிலையுடையபத்தர்க்—கடிமைதனில்
எல்லைநிலந்தானாகவெண்ணினன்மாறனது
கொல்லைநிலமானநிலைகொண்டு. (அ0)



# ஒன்பதாம்பத்து.



## க-வது, கொண்டபெண்டிர்.



ஈஶ்வரனுக்கு சேதனன்செய்யும் நித்யகைங்கர்யத்தை
அருளிச்செய்கிறார்.



கலித்துறை, பண்-பழம்தக்கராகம், தாளம்—ஏழொத்து.
செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

‡‡ கொண்டபெண்டிர்மக்களுற்றார் சுற்றத்தவர்பிறரும் *
கண்டதோடுபட்டதல்லால் காதல்மற்றியாதுமில்லை *
எண்டிசையுங்கீழும்மேலும் முற்றவுமுண்டபிரான் *
தொண்டரோமாயுய்யலல்லா லில்லைகண்டீர் துணையே. (க)

துணையும்சார்வுமாகுவார்போல் சுற்றத்தவர்பிறரும் *
அணையவந்தஆக்கமுண்டேல் அட்டைகள்போல்சுவைப்பர் *
கணையொன்றாலேயேழ்மரமுமெய்த எங்கார்முகிலை *
புணையென்றுய்யப்போகிலல்லா லில்லைகண்டீர்பொருளே. (உ)

பொருள்கையுண்டாய்ச்செல்லக்காணில் போற்றியென்றேற்றெழுவர்
இருள்கொள் துன்பத்தின்மைகாணில் என்னேஎன்பாருமில்லை *
மருள்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு *
அருள்கொளாளாயுய்யிலல்லா லில்லைகண்டீரரணே. (ங)

அரணமாவரற்றகாலைக் கென்றென்றமைக்கப்பட்டார் *
இரணங்கொண்ட ‡ தெப்பராவ ரின்றியிட்டாலுமஃதே *
வருணித்தென்னே வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
சரணென்றுய்யப்போகிலல்லா லில்லைகண்டீர்சதிரே. (௪)

‡ தெப்பர் - சப்ரார்.

சதிரமென்றுதம்மைத்தாமே சம்மதித்தின்மொழியார் *
மதுரபோகம்துற்றவரே வைகிமற்றொன்றுறுவர் *
அதிர்கொள்செய்கையசுரர்மங்க வடமதுரைப்பிறந்தாற்கு - *
எதிர்கொளாளாயுய்யலல்லா லில்லைகண்டீரின்பமமே. (ரு)

இல்லைகண்டீரின்பமந்தோ உள்ளதுநினையாதே *
தொல்லையார்களெத்தனைவர் தோன்றிக்கழிந்தொழிந்தார் *
மல்லைமூதூர் வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
சொல்லியுய்யப்போகிலல்லால் மற்றொன்றில்லைசுருக்கே. (சு)

மற்றொன்றில்லைசுருங்கச்சொன்னோம் மாநிலத்தெவ்வுயிர்க்கும் *
சிற்றவேண்டா சிந்திப்பேயமையுங்கண்டீர்களந்தோ *
குற்றமன்றெங்கள்பெற்றத்தாயன் வடமதுரைப்பிறந்தான் *
குற்றமில்சீர்கற்று வைகல்வாழ்தல்கண்டீர்குணமே. (எ)

வாழ்தல்கண்டீர்குணமிதந்தோ மாயவனடிபரவி *
போழ்துபோகவுள்ளகிற்கும் புன்மையிலாதவர்க்கு *
வாழ்துணையா வடமதுரைப்பிறந்தவன்வண்புகழே *
வீழ்துணையாப்போமிதனில் யாதுமில்லைமிக்கதே. (அ)

யாதுமில்லைமிக்கதனி லென்றென்றதுகருதி *
காதுசெய்வான்கூதைசெய்து கடைமுறைவாழ்க்கையும்போம் *
மாதுகிலின்கொடிக்கொள்மாட வடமதுரைப்பிறந்த *
தாதுசேர்தோள்கண்ணனல்லா லில்லைகண்டீர்சரணே. (கூ)

கண்ணனல்லாலில்லைகண்டீர் சரணதுநிற்கவந்து *
மண்ணின்பாரம்நீக்குதற்கே வடமதுரைப்பிறந்தான் *
திண்ணமாநும்முடைமையுண்டேல் அவனடிசேர்த்துய்மினோ *
எண்ணவேண்டா நும்மதாதும் அவனன்றிமற்றில்லையே. (க0)

⁂ ஆதுமில்லைமற்றவனி லென்றதுவேதுணிந்து *
தாதுசேர்தோள்கண்ணனைக் குருகூர்ச்சடகோபன்சொன்ன *
தீதிலாதவொண்டமிழ்க ளிவையாயிரத்துளிப்பத்தும் *
ஓதவல்லபிராக்கள் நம்மையாளுடையார்கள்பண்டே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



கொண்டபெண்டீர்தான்முதலாக்கூறுமுற்றார்கன்மத்தால்
அண்டினவரென்றேயவரைவிட்டுத்—தொண்டருடன்
சேர்க்குந்திருமாலைச்சேருமென்றானூர்க்குமிதம்
பார்க்கும்புகழ்மாறன்பண்டு. (அக)

## உ-வது, பண்டைநாளாலே.

——∞✿∞——

இதுவுமது.

---

எழுசீராசிரியவிருத்தம், பண்-புறநீர்மை, தாளம்-ஒன்பதொத்து.

**துசாவந்திராகம் -ஆதிதாளம்.**

⁂ பண்டைநாளாலேநின்திருவருளும்பங்கயத்தாள்திருவருளும்
கொண்டு * நின்கோயில்சீய்த்துப்பல்படிகால் குடிகுடிவழிவந்தாட்செய்யும் *
தொண்டரோர்க்கருளிச்சோதிவாய்திறந்துன் தாமரைக்கண்களால்நோக்காய்
தெண்டிரைப்பொருநல்தண்பணைசூழ்ந்த திருப்புளிங்குடிக்கிடந்தானே. (க)

குடிக்கிடந்தாக்கஞ்செய்துநின்தீர்த்தவடிமைக்குற்றேவல்செய்து * உன்பொ
னடிக்கடவாதே வழிவருகின்றவடியரோர்க்கருளி * நீயொருநாள் [ன்
படிக்களவாகநிமிர்த்த நின்பாதபங்கயமேதலைக்கணியாய் * கொடிக்கொள்
பொன்மதிள்சூழ்குளிர்வயல்சோலைத் திருப்புளிங்குடிக்கிடந்தானே. (உ)

கிடந்தநாள்கிடந்தாயெத்தனைகாலம்கிடத்தி யுன்திருவுடம்பசைய * [ளி
தொடர்ந்துகுற்றேவல்செய்து தொல்லடிமைவழிவரும்தொண்டரோர்க்கரு
தடங்கொள்தாமரைக்கண்விழித்து நீயெழுந்துன்தாமரைமங்கையும்நீயும் *
இடங்கொள்மூவுலகும்தொழவிருந்தருளாய்திருப்புளிங்குடிக்கிடந்தானே. ()

புளிங்குடிக்கிடந்துவரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள்நின்று *
தெளிந்தவென்சிந்தையகங்கழியாதே யென்னையாள்வாயெனக்கருளி*
நளிர்ந்தசீருலகம்மூன்றுடன்வியப்ப நாங்கள்கூத்தாடிநின்றார்ப்ப *
பளிங்குநீர்முகிலின்பவளம்போல் கனிவாய்சிவப்பநீகாணவாராயே.

பவளம்போல்கனிவாய்சிவப்பநீகாணவந்து நின்பன்னிலாமுத்தம் *
தவழ்கதிர்முறுவல்செய்து நின்திருக்கண்டாமரைதயங்கநின்றருளாய்
பவளநன்படர்க்கீழ்ச்சங்குறைபொருநல்தண் திருப்புளிங்குடிக்கிடந்தாய்
கவளமாகளிற்றினிடர் கெடத்தடத்துக்காய்சினப்பறவையூர்ந்தானே.

காய்சினப்பறவையூர்ந்துபொன்மலையின்மீமிசைக்கார்முகில்போல் *
மாசினமாலிமாலிமானென் றங்கவர்படக்கனன்றுமுன்னின்ற *
காய்சினவேந்தேகதிர்முடியானே கலிவயல்திருப்புளிங்குடியாய் *
காய்சினவாழிசங்குவாள் வில்தண்டேந்தியெம்மிடர்கடிவானே. (சு)

எம்மிடர்கடிந்திங்கென்னையாள்வானேயிமையவர்தமக்குமாங்கனையாய் *
செம்மடல்மலரும்தாமரைப்பழனத்தண்திருப்புளிங்குடிக்கிடந்தாய்*
நம்முடையடியர்கவ்வைகண்டுகந்து நாட்களித்துளநலம்கூர *
இம்மடவுலகர்காணநீயொருநா ளிருந்திடாயெங்கள்கண்முகப்பே. ()

எங்கள்கண்முகப்பேயுலகர்களெல்லாமிணையடிதொழுதெழுதிறைஞ்சி *
தங்களன்பாரத்தமதுசொல்வலத்தால் தலைத்தலைச்சிறந்துபூசிப்ப *
திங்கள்சேர்மாடத்திருப்புளிங்குடியாய் திருவைகுந்தத்துள்ளாய்தேவா *
இங்கண்மாஞாலத்திதனுளுமொருநாளிருந்திடாய்வீற்றிடங்கொண்டே. (அ)

வீற்றிடங்கொண்டுவியன்கொள்மாஞாலத்திதனுளுமிருந்திடாய் * அடியோம்
போற்றியோவாதேகண்ணிணைகுளிரப் புதுமலராகத்தைப்பருக *
சேற்றிளவாளைசெந்நெலூடுகளும் செழும்பணைத்திருப்புளிங்குடியாய் *
கூற்றமாயசுரர்குலமுதலரிந்த கொடுவினைப்படைகள்வல்லானே. (கூ)

கொடுவினைப்படைகள் வல்லையாயமரர்க்கிடர்கெடவசுரர்கட்கிடர்செ[ய்
கடுவினைநஞ்சேயென்னுடையமுதேகலிவயல்திருப்புளிங்குடியாய்
வடிவிணையில்லாமலர்மகள்மற்றை நிலமகள்பிடிக்கும்மெல்லடியை *
கொடுவினையேனும்பிடிக்கநீயொருநாள் கூவுதல்வருதல்செய்யாயே. ()

‡‡ கூவுதல்வருதல்செய்திடாயென்றுகுரைகடல்கடைந்தவன்றன்னை
மேவிநன்கமர்ந்தவியன்புனல்பொருநல் வழுதிநாடன்சடகோபன் *
நாவியல்பாடலாயிரத்துள்ளு மிவையுமோர்பத்தும் ‡ வல்லார்கள் *
ஓவுதலின்றியுலகம்மூன்றளந்தா னடியிணையுள்ளத்தோர்வாரே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பண்டையுறவானபரனைப்புளிங்குடிக்கே
கண்டெனக்கெல்லாவுறவின்காரியமும்—தண்டறநீ
செய்தருளென்றேயிரந்தசீர்மாறன்றாளிணையே
உய்துணையென்றுள்ளமேயோர். (அஉ)

---

## ரு-வது, ஓராயிரமாய்.



இதுவுமது.

கலித்துறை, பண்-நட்டபாஷை, தாளம்-ஏழொத்து.
கேதாரராகம் - ஆதிதாளம்.

‡‡ ஓராயிரமா யுலகேழளிக்கும் *
பேராயிரம்கொண்டதோர் பீடுடையன் *
காராயின காளநன்மேனியினன் *
நாராயணன் நங்கள்பிரானவனே. (க)

அவனேயகல்ஞாலம் படைத்திடந்தான் *
அவனேயஃதுண்டுமிழ்ந்தானளந்தான் *
அவனேயவனு மவனுமவனும் *
அவனே மற்றெல்லாமுமறிந்தனமே. (உ)

அறிந்தனவேத வரும்பொருள்நூல்கள் *
அறிந்தனகொள்க அரும்பொருளாதல் *
அறிந்தனரெல்லா மரியைவணங்கி *
அறிந்தனர் நோய்களறுக்கும்மருந்தே. (ங)

‡ "ஆயிரத்துளிவையு மோர்பத்தும்" என்றும் "ஆயிரத்துளிவையும் பத்தும்" என்றும் சிலமூலஸ்ரீகோசங்கள்.

மருந்தேநங்கள் போகமகிழ்ச்சிக்கென்று *
பெருந்தேவர்குழாங்கள் பிதற்றும்பிரான் *
கருந்தேவனெம்மான் கண்ணன்விண்ணுலகம் *
தரும்தேவனைச் சோரேல்கண்டாய்மனமே. (ச)

மனமேயுன்னை வல்வினையேனிரந்து *
கனமேசொல்லினே னிதுசோரேல்கண்டாய் *
புனமேவிய பூந்தண்டுழாயலங்கல் *
இனமேதுமிலானை யடைவதுமே. (ரு)

அடைவது மணியார்மலர்மங்கைதோள் *
மிடைவது மசுரர்க்குவெம்போர்களே *
கடைவதும் கடலுளமுதம் * என்மனம்
உடைவது மவற்கேயொருங்காகவே. (சு)

ஆகம்சேர் நரசிங்கமதாகி * ஓர்
ஆகம்வள்ளுகிரால்பிளந்தானுறை *
மாகவைகுந்தம் காண்பதற்கு * என்மனம்
ஏகமெண்ணு மிராப்பகலின்றியே. (எ)

இன்றிப்போக விருவினையும்கெடுத்து *
ஒன்றியாக்கை புகாமையுய்யக்கொள்வான் *
நின்றவேங்கடம் நீணிலத்துள்ளது *
சென்றுதேவர்கள் கைதொழுவார்களே. (அ)

தொழுதுமாமலர் நீர்சுடர்தூபம்கொண்டு *
எழுதுமென்னு மிதுமிகையாதலில் *
பழுதில்தொல்புகழ்ப் பாம்பணைப்பள்ளியாய் *
தழுவுமாறறியே னுனதாள்களே. (கூ)

தாளதாமரையா னுனதுந்தியான் *
வாள்கொள்நீள்மழுவாளி யுன்னாகத்தான் *
ஆளராய்த்தொழுவாரு மமரர்கள் *
நாளுமென்புகழ்கோ வுனசீலமே. (க0)

⁂ சீலமெல்லையிலானடிமேல் * அணி
கோலநீள் குருகூர்ச்சடகோபன்சொல் *
மாலையாயிரத்துள் ளிவைபத்தினின்
பாலர் * வைகுந்தமேறுதல் பான்மையே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



ஒராநீர்வேண்டினவையுள்ளதெல்லாஞ்செய்கின்றேன்
நாராயணனன்றேநானென்று—பேருறவைக்
காட்டவவன்சீலத்திற்கால்தாழ்ந்தமாறனருள்
மாட்டிவிடுநம்மனத்துமை. (அரு)

## ச-வது, மையார்.

இதுவுமது.

கலிவிருத்தம், பண்-கொல்லி, தாளம்-ஏழொத்து.
தன்யாசிராகம் - ஆதிதாளம்.

⁂ மையார்கருங்கண்ணி கமலமலர்மேல்
செய்யாள் * திருமார்வினில்சேர் திருமாலே *
வெய்யார்சுடராழி சுரிசங்கமேந்தும் *
கையா * உன்னைக்காணக் கருதுமென்கண்ணே. (க)

கண்ணேயுன்னைக் காணக்கருதி * என்னெஞ்சம்
எண்ணேகொண்டசிந்தையதாய் நின்றியம்பும் *
விண்ணோர்முனிவர்க்கென்றும் காண்பரியாயை *
நண்ணுதொழியேனென்று நானழைப்பனே. (உ)

அழைக்கின்றவடிநாயேன் நாய்கூழைவாலால் *
குழைக்கின்றதுபோல வென்னுள்ளம்குழையும் *
மழைக்கன்றுகுன்றமெடுத் தாநிரைகாத்தாய் *
பிழைக்கின்றதருளென்று பேதுறுவனே. (ங)

உறுவதிதுவென் றுனக்காட்பட்டு * நின்கண்
பெறுவதெதுகொலென்று பேதையேன்நெஞ்சம் *
மறுகல்செய்யும் வானவர்தானவர்க்கென்றும் *
அறிவதரிய வரியாயவம்மானே. (ச)

அறியாயவம்மானை யமரர்பிரானை *
பெரியானைப் பிரமனைமுன்படைத்தானை *
வரிவாளரவினணைப் பள்ளிகொள்கின்ற *
கரியான்கழல்காணக் கருதும்கருத்தே. (ரு)

கருத்தேயுன்னைக்காணக்கருதி * என்னெஞ்சத்
திருத்தாகவிருத்தினேன் தேவர்கட்கெல்லாம்
விருத்தா * விளங்கும்சுடர்ச்சோதி யுயரத் *
தொருத்தா * உன்னையுள்ளு மென்னுள்ளமுகந்தே. (சு)

உகந்தேயுன்னையுள்ளுமென்னுள்ளத்து - * அகம்பால்
அகந்தா னமர்ந்தேயிடங்கொண்டவமலா *
மிகுந்தானவன்மார்வகல மிருகூறு
நகந்தாய் * நரசிங்கமதாயவுருவே. (எ)

உருவாகிய ஆறுசமயங்கட்கெல்லாம் *
பொருவாகிநின்று னவனெல்லாப்பொருட்கும் *
அருவாகியவாதியைத் தேவர்கட்கெல்லாம் *
கருவாகியகண்ணனைக் கண்டுகொண்டேனே. (அ)

கண்டுகொண் டென்கண்ணிணையாரக்களித்து *
பண்டைவினையாயின பற்ருேடறுத்து *
தொண்டர்க்கமுதுண்ணச் சொன்மாலைகள்சொன்னேன் *
அண்டத்தமரர்பெருமா னடியேனே. (கூ)

அடியானிவனென் றெனக்காரருள்செய்யும்
நெடியானை * நிறைபுகழஞ்சிறைப்புள்ளின்
கொடியானை * குன்ருமலுலகமளந்த
அடியானை * அடைந்தடியேனுய்ந்தவாறே. (க0)

⁂ ஆருமதயானை யடர்த்தவன்றன்னை *
சேருர்வயல் தென்குருகூர்ச்சடகோபன் *
நூறேசொன்ன வோராயிரத்துளிப்பத்தும் *
ஏறேதரும் வானவர்தமின்னுயிர்க்கே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



மையார்கண்மாமார்பின்மன்னுந்திருமாலைக்
கையாழிசங்குடனேகாணவெண்ணி—மெய்யான
காதலுடன்கூப்பிட்டுக்கண்டுகந்தமாறன்பேர்
ஓதவுய்யுமேயின்னுயிர். (அச)

---

## ரு-வது, இன்னுயிர்ச்சேவல்.



இதுவுமது.

---

கலித்துறை, பண்-கொல்லி, தாளம்-ஏமொத்து.
அசாவேரிராகம் - ஆதிதாளம்.

இன்னுயிர்ச்சேவலும்நீரும்கூவிக்கொண்டு-*இங்கெத்தனை
என்னுயிர்நோவமிழற்றேல்மின் குயில்பேடைகாள் ! *
என்னுயிர்க்கண்ணபிரானை நீர்வரக்கூவுகிலீர் *
என்னுயிர்கூவிக்கொடுப்பார்க்கு மித்தனைவேண்டுமோ. (க)

இத்தனைவேண்டுவதன்றந்தோ அன்றில்பேடைகாள் ! *
எத்தனைநீரும்நுஞ்சேவலும் கரைந்தேங்குதிர் *
வித்தகன்கோவிந்தன் மெய்யனல்லனொருவர்க்கும் *
அத்தனையாமினி யென்னுயிரவன்கையதே. (உ)

அவன்கையதேயெனதாருயிர் அன்றில்பேடைகாள் ! *
எவம்சொல்லி நீர்குடைந்தாடுதிர்புடைசூழவே *
தவம்செய்திலா வினையாட்டியேனுயிரிங்குண்டோ *
எவம்சொல்லிநிற்றும் நும்மேங்குகூக்குரல்கேட்டுமே. (ந)

கூக்குரல்கேட்டும் நங்கண்ணன்மாயன்வெளிப்படான் *
மேற்கிளைக்கொள்ளேல்மின் † நீரும்சேவலும்கோழிகாள் ! *
வாக்கும்மனமும் கருமமும்நமக்காங்கதே *
ஆக்கையுமாவியு மந்தரம்நின்றுழலுமே. (ச)
அந்தரம்நின்றுழல்கின்ற யானுடைப்பூவைகாள் ! *
நுந்திறத்தேதுமிடையில்லை குழறேல்மினோ *
இந்திரஞாலங்கள்காட்டி யிவ்வேழுலகும்கொண்ட *
நந்திருமார்பன் நம்மாவியுண்ண நன்கெண்ணினன். (ரு)
நன்கெண்ணிநான்வளர்த்த சிறுகிளிப்பைதலே ! *
இன்குரல்நீமிழற்றே லென்னாருயிர்க்காகுத்தன் *
நின்செய்யவாயொக்கும்வாயன் கண்ணன்கைகாலினன் *
நின்பசுஞ்சாமநிறத்தன் கூட்டுண்டுநீங்கினன். (சு)
கூட்டுண்டுநீங்கிய கோலத்தாமரைக்கட்செவ்வாய் *
வாட்டமிலென்கருமாணிக்கம் கண்ணன்மாயன்போல் *
கோட்டியவில்லொடு மின்னுமேகக்குழாங்கள்காள் ! *
காட்டேல்மின்நும்முரு என்னுயிர்க்கதுகாலனே. (எ)
உயிர்க்கதுகாலனென் றும்மை ‡ யானிரந்தேற்கு * நீர்
குயில்பைதல்காள் ! கண்ணநாமமேகுழறிக்கொன்றீர் *
தயிர்ப்பழஞ்சோற்றொடு பாலடிசிலும்தந்து * சொல்
பயிற்றியநல்வளமூட்டினீர் பண்புடையீரே. (அ)
பண்புடைவண்டொடுதும்பிகாள் ! பண்மிழற்றேல்மின் *
புண்புரைவேல்கொடுகுத்தாலொக்கும் நும்மின்குரல் *
தண்பெருநீர்த்தடந்தாமரை மலர்ந்தாலொக்கும்
கண்பெருங்கண்ணன் * நம்மாவியுண்டெழநண்ணினன். (கூ)
எழநண்ணிநாமும் நம்வானநாடனோடொன்றினோம் *
பழனநன்னாரைக்குழாங்கள்காள் ! பயின்றென்னினி *
இழைநல்லவாக்கையும் பையவேபுயக்கற்றது *
தழைநல்லவின்பந்தலைப்பெய் தெங்கும்தழைக்கவே. (க0)
‡‡ இன்பம்தலைப்பெய்தெங்குந் தழைத்த பல்லூழிக்கு *
தன்புகழேத்தத் தனக்கருள்செய்தமாயனை *
தென்குருகூர்ச்சடகோபன் சொல்லாயிரத்துள்ளிவை *
ஒன்பதோடொன்றுக்கும் மூவுலகுமுருகுமே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.

இன்னுயிர்மால்தோற்றின திங்கென்னெஞ்சிலென்று கண்ணால்
அன்றவனைக்காணவெண்ணியாண்பெண்ணாய்ப்—பின்னையவன்
தன்னைநினைவிப்பவற்றால்தான் தளர்ந்தமாறனருள்
உன்னுமவர்க்குள்ளமுருகும். (அரு)

---

"நீருநுஞ்சேவலும்" என்று ஆறாயிரத்திலும், உரையிலும், ஒன்பதினாயிரத்திலும்பாடம். ‡ "நான்" என்றும்பாடம்.

## சு-வது, உருகுமால்.

இதுவுமது.

கலிவிருத்தம், பண்-நட்டராகம், தாளம்-ஏழொத்து.

அபருபராகம் - அதிதாளம்.

‡‡ உருகுமால்நெஞ்ச முயிரின்பரமன்றி *
பெருகுமால்வேட்கையு மென்செய்கேன்தொண்டனேன் *
தெருவெல்லாம்காவிகமழ் † திருக்காட்கரை *
மருவியமாயன்றன் மாயம்நினைதொறே. (க)

நினைதொறும்சொல்லுந்தொறும் நெஞ்சிடிந்துகும் *
வினைகோள்சீர்பாடிலும் வேமெனதாருயிர் *
சுனைகொள்பூஞ்சோலைத் தென்காட்கரையென்னப்பா *
நினைகிலேன் நானுனக்காட்செய்யும்நீர்மையே. (உ)

நீர்மையால்நெஞ்சம் வஞ்சித்துப்புகுந்து - * என்னை
ஈர்மைசெய் தென்னுயிராயென்னுயிருண்டான் *
சீர்மல்குசோலைத் தென்காட்கரையென்னப்பன் *
கார்முகில்வண்ணன்றன் கள்வமறிகிலேன். (ங)

அறிகிலேன் தன்னு ளனைத்துலகும்நிற்க *
நெறிமையால்தானு மவற்றுள்நிற்கும்பிரான் *
வெறிகமழ்சோலைத் தென்காட்கரையென்னப்பன் *
சிறியவென்னாருயிருண்ட திருவருளே. (ச)

திருவருள்செய்பவன்போல வென்னுள்புகுந்து - *
உருவமுமாருயிரு முடனேயுண்டான் *
திருவளர்சோலைத் தென்காட்கரையென்னப்பன் $
கருவளர்மேனி ‡ நங்கண்ணன் கள்வங்களே. (ரு)

என்கண்ணன்கள்வ மெனக்குச்செம்மாய்நிற்கும் *
அங்கண்ணனுண்ட வென்னாருயிர்க்கோதிது *
புன்கண்மையெய்திப் புலம்பியிராப்பகல் *
என்கண்ணனென் றவன்காட்கரையேத்துமே. (சு)

காட்கரையேத்து மதனுள்கண்ணுவென்னும் *
வேட்கைநோய்கூர நினைந்துகரைந்துகும் *
ஆட்கொள்வானொத் தென்னுயிருண்டமாயனால் *
கோட்குறைபட்ட தென்னாருயிர்கோளுண்டே. (எ)

---

† இத்திருவாய்மொழி முழுதும், "கார்க்கரை" என்று சில ஸ்ரீகோசங்களிற் பாடம் காண்கிறது. ‡ "என்கண்ணன்" என்று உரை.

கோளுண்டானன்றிவந் தென்னுயிர்தானுண்டான் *
நாளுநாள்வந் தென்னைமுற்றவும்தானுண்டான் *
காளநீர்மேகத் தென்காட்கரையென்னப்பற்கு - *
ஆளன்றேபட்ட தென்னாருயிர்பட்டதே. (அ)
ஆருயிர்ப்பட்ட தெனதுயிர்பட்டது *
பேரிதழ்தாமரைக்கண் கனிவாயதோர் *
காரெழில்மேகத் தென்காட்கரைக்கோயில்கொள் *
சீரெழில்நால்தடந்தோள் தெய்வவாரிக்கே. (கூ)
வாரிக்கொண்டுன்னை விழுங்குவன்காணிலென்று *
ஆர்வுற்றவென்னையொழிய வென்னில்முன்னம் *
பாரித்து * தானென்னை முற்றப்பருகினான் *
காரொக்கும்காட்கரையப்பன்கடியனே. (க0)
⁂ கடியனாய்க் கஞ்சனைக்கொன்றபிரான்றன்னை *
கொடிமதிள்தென்குருகூர்ச் சடகோபன்சொல் *
வடிவமையாயிரத் திப்பத்தினால் * சன்மம்
முடிவெய்தி நாசங்கண்டீர்களெங்கானலே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



உருகுமாலென்னெஞ்சமுன்செயல்களெண்ணிப்
பெருகுமால்வேட்கையெனப்பேசி—மருவுகின்ற
இன்னாப்புடனவன்சீரேய்ந்துரைத்தமாறன்சொல்
என்னாச்சொல்லாதிருப்பதெங்கு. (அகூ)

---

## எ-வது, எங்கானல்.



இதுவுமது.

---

நாலடித்தாழிசை, கலிவிருத்தமுமாம், பண்-நட்டராகம், தாளம்-எழொத்து.
கண்டாராகம் - ஆதிதாளம்.

⁂ எங்கானலகங்கழிவா யிரைதேர்ந்திங்கினிதமரும் *
செங்காலமடநாராய் திருமூழிக்களத்துறையும் *
கொங்கார்பூந்துழாய்முடி யெங்குடக்கூத்தர்க்கென்தூதாய் *
நுங்கால்களென்தலைமேல் கெழுமீரோநுமரோடே. (க)
நுமரோடும்பிரியாதே நீரும்நும்சேவலுமாய் *
அமர்காதல்குருகினங்காள் அணிமூழிக்களத்துறையும் *
எமராலும்பழிப்புண்டிங்கென்தம்மாலிழிப்புண்டு *
தமரோடங்குறைவார்க்குத் தக்கிலமேகேளீரே. (உ)
தக்கிலமேகேளீர்கள் தடம்புனல்வாயிரைதேரும் *
கொக்கினங்காள் ! குருகினங்காள் ! குளிர்மூழிக்களத்துறையும் *
செக்கமலத்தலர்போலும் கண்கைகால்செங்கனிவாய் *
அக்கமலத்திலைபோலும் திருமேனியடிகளுக்கே. (ங)

திருமேனியடிகளுக்குத் தீவினையேன்விடுதூதாய் *
திருமூழிக்களமென்னும் செழுநகர்வாயணிமுகில்காள் ! *
திருமேனியவட்கருளீ ரென்றக்கால் * இம்மைத்தன்
திருமேனியொளியகற்றித் தெளிவிசும்புகடியுமே. (ச)

தெளிவிசும்புகடிதோடித் தீவளைத்துமின்னிலகும் *
ஒளிமுகில்காள் திருமூழிக்களத்துறையுமொண்சுடர்க்கு *
தெளிவிசும்புதிருநாடாத் தீவினையேன்மனத்துறையும் *
துளிவார்கள்குழலார்க் கென் தூதுரைத்தல்செப்புமினே. (ரு)

தூதுரைத்தல்செப்புமின்கள் தூமொழிவாய்வண்டினங்காள் ! *
போதிரைத்துமதுநுகரும் பொழில்மூழிக்களத்துறையும் *
மாதரைத்தம்மார்வகத்தே வைத்தார்க்கென்வாய்மாற்றம் *
தூதுரைத்தல்செப்புதிரேல் சுடர்வளையும்கலையுமே. (சு)

சுடர்வளையும்கலையுங்கொண் டருவினையேன்தோள்துறந்த *
படர்புகழான் திருமூழிக்களத்துறையும்பங்கயக்கண் *
சுடர்பவளவாயனைக்கண் டொருநாளோர்தூய்மாற்றம் *
படர்பொழில்வாய்க்குருகினங்காள் ! எனக்கொன்றுபணியீரே. (எ)

எனக்கொன்றுபணியீர்க ளிரும்பொழில்வாயிரைதேர்ந்து *
மனக்கின்பம்படமேவும் வண்டினங்காள் ! தும்பிகாள் ! *
கனக்கொள்திண்மதிள்புடைசூழ் திருமூழிக்களத்துறையும் *
புனக்கொள்காயாமேனிப் பூந்துழாய்முடியார்க்கே. (அ)

பூந்துழாய்முடியார்க்குப் பொன்னாழிக்கையாருக்கு - *
ஏந்துநீரிளங்குருகே ! திருமூழிக்களத்தாருக்கு - *
ஏந்துபூண்முலைபயந் தென்னிணைமலர்க்கண்ணீர்ததும்ப *
தாம்தம்மைக்கொண்டகல்தல் தகவன்றென்றுரையீரே. (கூ)

தகவன்றென்றுரையீர்கள் தடம்புனல்வாயிரைதேர்ந்து *
மிகவின்பம்படமேவும் மென்னடையவன்னங்காள் ! *
மிகமேனிமெலிவெய்தி மேகலையுமீடழிந்து - * என்
அகமேனியொழியாமே திருமூழிக்களத்தார்க்கே. (க0)

⁂ ஒழிவின்றித்திரு மூழிக்களத்துறையு மொண்சுடரை *
ஒழிவில்லாவணிமழலைக் கிளிமொழியாளலற்றியசொல் *
வழுவில்லாவண்குருகூர்ச் சடகோபன் வாய்ந்துரைத்த *
அழிவில்லாவாயிரத் திப்பத்தும்நோயறுக்குமே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



எங்காதலுக்கடிமாலேய்ந்தவடிவழகன்
றங்காதுபற்றுசாவாங்கவன்பால்—எங்குமுள்ள
புள்ளினத்தைத்தூதாகப்போகவிடுமாறன்றருள்
உள்ளினர்க்குத்தீங்கையறுக்கும். (அஎ)

## அ-வது, அறுக்கும்.

இதுவுமது.

கலிவிருத்தம், பண்-கொல்லி, தாளம்இடையொத்து.
சாவேரிராகம் - ஆதிதாளம்.

அறுக்கும்வினையாயின ஆகத்தவனை *
நிறுத்தும்மனத்தொன்றிய சிந்தையினார்க்கு *
வெறித்தண் மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் *
குறுக்கும்வகையுண்டுகொலோ கொடியேற்கே. (க)

கொடியேரிடைக் கோகனகத்தவள்கேள்வன் *
வடிவேல்தடங்கண் மடப்பின்னைமணாளன் *
நெடியானுறைச்சோலைகள்சூழ் திருநாவாய் *
அடியேனணுகப்பெறுநாள் யவைகொலோ. (உ)

யவைகொலணுகப்பெறுநா ளென்றெப்போதும் *
கவையில்மனமின்றிக் கண்ணீர்கள்கலுழ்வன் *
நவையில்திருநாரணன்சேர் திருநாவாய் *
அவையுள்புகலாவ தோர்நாளறியேனே. (௩)

நாளேலறியே னெனக்குள்ளன * நானும்
மீளாவடிமைப் பணிசெய்யப்புகுந்தேன் *
நீளார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் *
வாளேய்தடங்கண் மடப்பின்னைமணாளா. (ச)

மணாளன்மலர்மங்கைக்கும் மண்மடந்தைக்கும் *
கண்ணாள னுலகத்துயிர்தேவர்கட்கெல்லாம் *
விண்ணாளன் விரும்பியுறையும்திருநாவாய் *
கண்ணாரக்களிக்கின்ற திங்கென்றுகொல்கண்டே. (ரு)

கண்டேகளிக்கின்ற திங்கென்றுகொல்கண்கள் *
தொண்டேயுனக்காயொழிந்தேன் துரிசின்றி *
வண்டார்மலர்ச்சோலைகள்சூழ்திருநாவாய் *
கொண்டேயுறைகின்ற வெங்கோவலர்கோவே. (கூ)

கோவாகிய மாவலியைநிலங்கொண்டாய் *
தேவாசுரம்செற்றவனே திருமாலே *
நாவாயுறைகின்ற என்நாரணநம்பீ *
ஆவாவடியா னிவனென்றருளாயே. (எ)

அருளாதொழிவா யருள்செய்து - * அடியேனைப்
பொருளாக்கி யுன்பொன்னடிக்கீழ்புகவைப்பாய் *
மருளேயின்றி யுன்னையென்னெஞ்சத்திருத்தும் *
தெருளேதரு தென்திருநாவாயென்தேவே. (அ)

தேவர்முனிவர்க்கென்றும் காண்டற்கரியன் *
மூவர்முதல்வ னொருமூவுலகாளி *
தேவன்விரும்பியுறையும் திருநாவாய் *
யாவரணுகப்பெறுவா ரினியந்தோ. (௯)

அந்தோவணுகப்பெறுநா ளென்றெப்போதும் *
சிந்தைகலங்கித் திருமாலென்றழைப்பன் *
கொந்தார்மலர்ச்சோலைகள்சூழ் திருநாவாய் *
வந்தேயுறைகின்ற எம்மாமணிவண்ணா. (௧0)

⁂ வண்ணம்மணிமாடம் நன்னாவாயுள்ளானை *
திண்ணம்மதிள் தென்குருகூர்ச்சடகோபன் *
பண்ணார்தமி ழாயிரத்திப்பத்தும்வல்லார் *
மண்ணாண்டு மணம்கமழ்வர்மல்லிகையே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



அறுக்குமிடரென்றவன்பாலாங்குவிட்டதூதர்
மறித்துவரப்பற்றுமனத்தால்—அறப்பதறிச்
செய்யதிருநாவாயிற்செல்லநினைந்தான்மாறன்
மையலினாற் செய்வதறியாமல். (அஅ)

---

## ௯-வது, மல்லிகை.



இதுவுமது.



---

எண்சீராசிரியவிருத்தம், பண்-பஞ்சமம், தாளம்-ஏழொத்து.

**சங்கராபரணராகம் -ஆதிதாளம்.**

⁂ மல்லிகைகமழ்தென்றலீருமாலோவண்குறிஞ்சியிசைதவழுமாலோ *
செல்கதிர்மாலையும்மயக்குமாலே செக்கர்நன்மேகங்கள்சிதைக்குமாலோ *
அல்லியந்தாமரைக்கண்ணனெம்மா னாயர்களேறரியேறெம்மாயோன் *
புல்லியமுலைகளும்தோளும்கொண்டு புகலிடமறிகிலம்தமியமாலோ. (௧)

புகலிடமறிகிலம்தமியமாலோ புலம்புறுமணிதென்றலாம்பலாலோ *
பகலடுமாலைவண்சாந்தமாலோ பஞ்சமம்முல்லைதண்வாடையாலோ *
அகலிடம்படைத்திடந்துண்டுமிழ்ந்தளந்தெங்கு மளிக்கின்றவாயன்மாயோன்
இகலிடத்தசுரர்கள்கூற்றம்வாரா னினியிருந்தென்னுயிர்காக்குமாறென். (௨)

இனியிருந்தென்னுயிர்காக்குமாறெ னிணைமுலைநமுகநுண்ணிடைநுடங்க *
துனியிரும்கலவிசெய்தாகம்தோய்ந்து துறந்தெம்மையிட்டகல்கண்ணன்கள்வ
தனியிளம்சிங்கமெம்மாயன்வாரான் தாமரைக்கண்ணும்செவ்வாயும் *நீலப்[ன்
பனியிருங்குழல்களும்நான்குதோளும் பாவியேன்மனத்தேநின்றீருமாலோ.()

பாவியேன்மனத்தேநின்றீருமாலோ வாடைதண்வாடைவெவ்வாடையாலோ
மேவுதண்மதியம்வெம்மதியமாலோ மென்மலர்ப்பள்ளிவெம்பள்ளியாலோ *
தூவியம்புள்ளுடைத்தெய்வவண்டுதுதைந்தவெம்பெண்மையம்பூவிதாலோ *
ஆவியின்பரமல்லவகைகளாலோ யாமுடைநெஞ்சமுந்துணையன்றாலோ. (௪)

யாமுடைநெஞ்சமுந்துணையன்றாலோ ஆபுகுமாலையுமாகின்றாலோ *
யாமுடையாயன்றன்மனம்கல்லாலோ அவனுடைத்தீங்குழலீருமாலோ *
யாமுடைத்துணையென்னும்தோழிமாரு மெம்மில்முன்னவனுக்குமாய்வரா
யாமுடையாருயிர்காக்குமாற னவனுடையருள்பெறும்போதரிதே. [லோ

அவனுடையருள்பெறும்போதரிதா லவ்வருளல்லனவருளும்மல்ல *
அவனருள்பெறுமளவாவிநில்லாதடு பகல்மாலையும்நெஞ்சும்காணேன் *
சிவனொடுபிரமன்வண்டிருமடந்தை சேர்திருவாகமெம்மாவியீரும் * [ள்
எவமினிப்புகுமிடமெவம்செய்கேனோ ஆருக்கென்சொல்லுகேனன்னைமீர்கா

ஆருக்கென்சொல்லுகேனன்னைமீர்கா ளாருயிரளவன்றிக்கூர்தண்வாடை *
காரொக்குமேனிநங்கண்ணன்கள்வம் கவர்ந்தவத்தனிநெஞ்சமவன்கணஃதே *
சீருற்றவகிற்புகையாழ்நரம்பு பஞ்சமம்தண்பசும்சாந்தணைந்து *
போருற்றவாடைதண்மல்லிகைப்பூப்புதுமணமுகந்துகொண்டெறியுமாலோ.

புதுமணமுகந்துகொண்டெறியுமாலோ பொங்கிளவாடைபுன்செக்கராலோ
அதுமணந்தகன்றநங்கண்ணன்கள்வம்கண்ணனிற்கொடிதினியதனிலும்பர் *
மதுமணமல்லிகைமந்தக்கோவை வண்பசும்சாந்தினில்பஞ்சமம்வைத்து - *
அதுமணந்தின்னருளாய்ச்சியர்க்கே யூதுமத்தீங்குழற்கேயுய்யேன்நான். (அ)

ஊதுமத்தீங்குழற்கேயுய்யேன்நா னதுமொழிந்திடையிடைதன்செய்கோல *
தூதுசெய்கண்கள்கொண்டொன்றுபேசித்தூமொழியிசைகள்கொண்டொன்
றுநோக்கி *, பேதுறுமுகம்செய்துநொந்துநொந்து பேதைநெஞ்சறவறப்பாடும்
பாட்டை *, யாதுமொன்றறிகிலமம்மவம்மமாலையும்வந்ததுமாயன்வாரான்.()

மாலையும்வந்ததுமாயன்வாரான் மாமணிபுலம்பவல்லேறணைந்த *
கோலநன்னாகுகளுகளுமாலோ கொடியனகுழல்களும்குழறுமாலோ *
வாலொளிவளர்முல்லைகருமுகைகள் மல்லிகையலம்பிவண்டாலுமாலோ *
வேலையும்விசும்பில்விண்டலறுமாலோ என்சொல்லியுய்வனிங்கவனைவிட்டே.

⁂ அவனைவிட்டகன்றுயிராற்றகில்லா அணியிழையாய்ச்சியர்மாலைப்பூசல் *
அவனைவிட்டகல்வதற்கேயிரங்கி யணிகுருகூர்ச்சடகோபன்மாறன் *
அவனியுண்டுமிழ்ந்தவன்மேலுரைத்த வாயிரத்துள்ளிவைபத்தும்கொண்டு -*
அவனியுளலற்றிநின்றுய்மின்தொண்டீர்சொன்னமாலைநண்ணித்தொழுதே.

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



மல்லடிமைசெய்யுநாள்மால்தன்னைக்கேட்கவவன்
சொல்லுமளவும்பற்றாத்தொன்னலத்தால்—செல்கின்ற
ஆற்றாமைபேசியலமர்ந்தமாறனருள்
மாற்றாகப்போகுமென்றன்மால். (அ௯)

## க௦-வது, மாலைநண்ணி.

இதுவுமது.

கலிவிருத்தம், பண்-நட்டபாஷை, தாளம்-ஒன்பதொத்து.
கேதாரகௌளராகம் - ஆதிதாளம்.

மாலைநண்ணித் தொழுதெழுமினோவினைகெட *
காலைமாலை கமலமலரிட்டுநீர் *
வேலைமோதும்மதிள்சூழ் திருக்கண்ணபுரத்து - *
ஆலின்மேலாலமர்ந்தா னடியிணைகளே. (க)

கள்ளவிழும்மலரிட்டு நீரிறைஞ்சுமின் *
நள்ளிசேரும்வயல்சூழ் கிடங்கின்புடை *
வெள்ளியேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
உள்ளி * நாளும்தொழுதெழுமினோதொண்டரே. (உ)

தொண்டர்நுந்தம்துயர்போக நீரேகமாய் *
விண்டுவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின் *
வண்டுபாடும்பொழில்சூழ் திருக்கண்ணபுரத் *
தண்டவாணன் * அமரர்பெருமானையே. (ங)

மானைநோக்கி மடப்பின்னைதன்கேள்வனை *
தேனைவாடாமலரிட்டு நீரிறைஞ்சுமின் *
வானையுந்துமதிள்சூழ் திருக்கண்ணபுரத் *
தானயந்தபெருமான் சரணாகுமே. (ச)

சரணமாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
மரணமானால் வைகுந்தம்கொடுக்கும்பிரான் *
அரணமைந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தரணியாளன் * தனதன்பர்க்கன்பாகுமே. (ரு)

அன்பனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
செம்பொனாகத் தவுணனுடல்கீண்டவன் *
நன்பொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரத்
தன்பன் * நாளும்தனமெய்யர்க்குமெய்யனே. (சு)

மெய்யனாகும் விரும்பித்தொழுவார்க்கெல்லாம் *
பொய்யனாகும் புறமேதொழுவார்க்கெல்லாம் *
செய்யில்வாளையுகளும் திருக்கண்ணபுரத்
தையன் * ஆகத்தணைப்பார்கட்கணியனே. (எ)

அணியனாகும் தனதாளடைந்தார்க்கெல்லாம் *
பிணியும்சாரா, பிறவிகெடுத்தாளும் *
மணிபொனேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
பணிமின் * நாளும்பரமேட்டிதன்பாதமே. (அ)

பாதநாளும்பணியத் தணியும்பிணி *
ஏதம்சாரா எனக்கேலினியென்குறை *
வேதநாவர்விரும்பும் திருக்கண்ணபுரத்
தாதியானை * அடைந்தார்க்கல்லலில்லையே. (கூ)

இல்லையல்ல லெனக்கேலினியென்குறை *
அல்லிமாத ரமரும்திருமார்பினன் *
கல்லிலேய்ந்தமதிள்சூழ் திருக்கண்ணபுரம்
சொல்ல * நாளும்துயர்பாடுசாராவே. (க0)

‡‡ பாடுசாராவினை பற்றறவேண்டுவீர் *
மாடநீடு குருகூர்ச்சடகோபன் * சொல்
பாடலானதமிழ் † ஆயிரத்துளிப்பத்தும்
பாடியாடி * பணிமினவன் ‡ தாள்களே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



ஒன்பதாம்பத்து ஸம்பூர்ணம்.

மாலுமதுவாஞ்சைமுற்றும்மன்னுமுடம்பின்முடிவில்
சாலநண்ணிச்செய்வனெனத்தானுகந்து—மேலவனைச்
சேரார்கணபுரத்தேசேருமெனுஞ்சீர்மாறன்
தாராளேவென்றனக்குத்தாள். (கூ0)

# பத்தாம்பத்து.



## க-வது, தாளதாமரை.



கைங்கர்ய ப்ரதிபந்தக நிஶ்ஶேஷ நிபர்ஹணத்தை
அருளிச்செய்கிறார்.

கலித்துறை, பண்-இந்தளம், தாளம்-ஏழொத்து.
பைரவிராகம் - ரூபகதாளம்.

‡‡ தாளதாமரைத் தடமணிவயல்திருமோகூர்
நாளுமேவிநன்கபர்ந்துநின் றசுரரைத்தகர்க்கும் *
தோளுநான்குடைச் சுரிகுழல்கமலக்கட்கனிவாய் *
காளமேகத்தையன்றி மற்றொன்றிலம்கதியே. (க)

இலங்கதிமற்றொன்றெம்மைக்கும், ஈந்தண்டுழாயின் *
அலங்கலங்கண்ணி யாயிரம்பேருடையப்பான் *
நலங்கோள்நாண்மறைவாணர்கள்வாழ் திருமோகூர் *
நலங்கழல்வனடிநிழல்தடமன்றியாமே. (உ)

† "ஆயிரத்திப்பத்தும்" என்றும், ‡ "தாள்களையே" என்றும்பாடம்.

அன்றியாமொருபுகலிட மிலமென்றென்றலற்றி *
நின்றுநான்முகனரனொடு தேவர்கள்நாட *
வென்றிமூவுலகளித்துழல்வான் திருமோகூர் *
நன்றுநாமினிநணுகுதும் நமதிடர்கெடவே. (ங)

இடர்கெடவெம்மைப்போந்தளியா யென்றென்றேத்தி *
சுடர்கொள்சோதியைத் தேவருமுனிவருந்துடர *
படர்கொள்பாம்பணைப் பள்ளிகொள்வான் திருமோகூர் *
இடர்கெடவடிபரவுதும்தொண்டீர்வம்மினே. (ச)

தொண்டீர்வம்மின் நம்சுடரொளியொருதனிமுதல்வன் *
அண்டமூவுலகளந்தவ னணிதிருமோகூர் *
எண்டிசையுமீன்கரும்பொடு பெருஞ்செந்நெல்விளைய *
கொண்டகோயிலைவலஞ்செய்திங்காடுதுங்கூத்தே. (ரு)

கூத்தன்கோவலன் குதற்றுவல்லசுரர்கள்கூற்றம் *
ஏத்துந்நங்கட்கு மமரர்க்குமுனிவர்க்குமின்பன் *
வாய்த்ததண்பணைவளவயல்சூழ் திருமோகூர்
ஆத்தன் * தாமரையடியன்றி மற்றிலமரணே. (சா)

மற்றிலமரண் வான்பெரும்பாழ்தனிமுதலா *
சுற்றுநீர்படைத் ததன்வழித்தொன்முனிமுதலா *
முற்றும்தேவரோ டுலகுசெய்வான்திருமோகூர் *
சுற்றிநாம்வலஞ்செய்ய நம்துயர்கெடும்கடிதே. (எ)

துயர்கெடும்கடி தடைந்துவந்தடியவர்தொழுமின் *
உயர்கொள்சோலை யொண்டடமணியொளிதிருமோகூர் *
பெயர்களாயிரமுடைய வல்லரக்கர்புக்கழுந்த *
தயரதன்பெற்ற மரதகமணித்தடத்தினையே. (அ)

மணித்தடத்தடிமலர்க்கண்கள் பவளச்செவ்வாய் *
அணிக்கொள்நால்தடந்தோள் தெய்வம், அசுரரையென்றும் *
துணிக்கும்வல்லரட்ட னுறைபொழில்திருமோகூர் *
நணித்துநம்முடைநல்லரண் நாமடைந்தனமே. (கூ)

நாமடைந்தநல்லரண் நமக்கென்று நல்லமரர் *
தீமைசெய்யும்வல்லசுரரை யஞ்சிச்சென்றடைந்தால் *
காமரூபம்கொண் டெழுந்தளிப்பான் திருமோகூர் *
நாமமேநவின்றெண்ணுமி னேத்துமின்நமர்காள். (க0)

⁂ ஏத்துமின் † நமர்காளென்றுதான்குடமாடு
கூத்தனை * குருகூர்ச்சடகோபன்குற்றேவல்கள் *
வாய்த்தவாயிரத்துள்ளிவை வண்திருமோகூர்க்கு - *
ஈத்தபத்திவையேத்தவல்லார்க் கிடர்கெடுமே.　　　(௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



தாளடைந்தோர் தங்களுக்குத் தானேவழித்துணையாம்
காளமேகத்தைக் கதியாக்கி—மீளுதலாம்
ஏதமிலாவிண்ணுலகி லேகவெண்ணுமாறனெனக்
கேதமுளதெல்லாங் கெடும்.　　　(௯௧)

---

## உ-வது, கெடுமிடர்.



இதுவுமது.

---

கலிவிருத்தம், பண்-இந்தளம், தாளம்-ஏழொத்து.
கமாசுராகம்-ரூபகதாளம்.

⁂ கெடுமிடராயவெல்லாம் கேசவாவென்ன * நாளும்
கொடுவினைசெய்யும் கூற்றின் தமர்களுங்குறுககில்லார் *
விடமுடையரவில்பள்ளி விரும்பினான் சுரும்பலற்றும் *
தடமுடைவய லனந்தபுரநகர்ப்புகுதுமின்றே.　　　(௧)

இன்றுபோய்ப்புகுதிராகி லெழுமையுமேதம்சாரா *
குன்றுநேர்மாடமாடே குருந்துசேர்செருந்திபுன்னை *
மன்றலர்பொழி லனந்தபுரநகர்மாயன்நாமம் *
ஒன்றுமோராயிரமா ‡ முள்ளுவார்க்கும்பளுரே.　　　(௨)

ஊரும்புட்கொடியுமஃதே யுலகெல்லாமுண்டுமிழ்ந்தான் *
சேரும்தண்ணனந்தபுரம் சிக்கெனப்புகுதிராகில் *
தீரும்நோய்வினைகளெல்லாம் திண்ணநாமறியச்சொன்னோம்
பேருமோராயிரத்து ளொன்றுநீர்பேசுமினே.　　　(௩)

பேசுமின்கூசமின்றிப் பெரியநீர்வேலைசூழ்ந்து *
வாசமேகமழும்சோலை வயலணியனந்தபுரம் *
நேசஞ்செய்துறைகின்றானை நெறிமையால்மலர்கள்தூவி *
பூசனைசெய்கின்றார்கள் புண்ணியஞ்செய்தவாறே!.　　　(௪)

புண்ணியஞ்செய்து நல்லபுனலொடுமலர்கள்தூவி *
எண்ணுமினெந்தைநாம மிப்பிறப்பறுக்குமப்பால் *
திண்ணநாமறியச்சொன்னோம் செறிபொழிலனந்தபுரத்து - *
அண்ணலார்கமலபாத மணுகுவாரமரராவார்.　　　(௫)

---

† "எமர்காள்" என்றும் பாடம். ‡ "ஆயிரமாவுள்ளுவார்க்கு" என்று உரை.

அமரராய்த்திரிகின்றார்கட் காதிசேரனந்தபுரத்து - *
அமரர்கோனர்ச்சிக்கின் றங்ககப்பணிசெய்வர்விண்ணோர் *
நமர்களோசொல்லக்கேண்மின் நாமும்போய்நணுகவேண்டும் *
குமரனார்தாதைதுன்பம் துடைத்தகோவிந்தனாரே. (௬)
துடைத்தகோவிந்தனாரே யுலகுயிர்தேவும்மற்றும் *
படைத்தவெம்பரமமூர்த்தி பாம்பணைப்பள்ளிகொண்டான் *
மடைத்தலைவாளைபாயும் வயலணியனந்தபுரம் *
கடைத்தலைசீய்க்கப்பெற்றால் கடுவினைகளையலாமே. (எ)
கடுவினைகளையலாகும் காமனைப்பயந்தகாளை *
இடவகைகொண்டதென்ப ரெழிலணியனந்தபுரம் *
படமுடையரவில் பள்ளிபயின்றவன்பாதம்காண *
நடமினோநமர்களுள்ளீர் நாமுமக்கறியச்சொன்னோம். (அ)
நாமுமக்கறியச்சொன்ன நாள்களும்நணியவான *
சேமநன்குடைத்துக்கண்டீர் செறிபொழிலனந்தபுரம் *
† தூபநல்விரைமலர்கள் துவளறஆய்ந்துகொண்டு *
வாமனனடிக்கென்றேத்த மாய்ந்தறும்வினைகள்தானே. (௯)
மாய்ந்தறும்வினைகள்தானே மாதவாவென்ன * நாளும்
ஏய்ந்தபொன்மதி ளனந்தபுரநகரெந்தைக்கென்று *
சாந்தொடுவிளக்கம்தூபம் தாமரைமலர்கள்நல்ல *
ஆய்ந்துகொண்டேத்தவல்லா ரந்தமில்புகழினாரே. (௧0)
‡‡ அந்தமில்புக ழனந்தபுரநகராதிதன்னை *
கொந்தலர்பொழில் குருகூர்மாறன்சொல்லாயிரத்துள் *
ஐந்தினோடைந்தும்வல்லா ரணைவர்போயமருலகில் *
பைந்தொடிமடந்தையர்தம் வேய்மருதோளிணையே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



கெடுமிடர்வைகுந்தத்தைக் கிட்டினாப்போல்
தடமுடையனந்தபுரந் தன்னில்—படவரவில்
கண்டுயில்மாற்காட்செய்யக் காதலித்தான்மாறனுயர்
விண்டனிலுள்ளோர்வியப்பவே. (௬௨)

## ௩-வது, வேய்மருதோள்.



இதுவுமது.

எண்சீராசிரியவிருத்தம், பண்-பஞ்சமம், தாளம்-ஏழொத்து.
காப்போஜிராகம் - ஆதிதாளம்.

‡‡ வேய்மருதோளிணைமெலியுமாலோமெலிவுமென்தனிமையும்யாதும்நோக் [கா *
காமருகுயில்களும்கூவுமாலோகணமயிலவைகலந்தாலுமாலோ *
ஆமருவினநிரைமேய்க்கநீபோக் கொருபகலாயிரமூழியாலோ *
தாமரைக்கண்கள்கொண்டீர்தியாலோ தகவிலைதகவிலையேநீகண்ணா.()

† "தூமம்" என்று உரையில் முந்தின பாடம்.

தகவிலைதகவிலையேநீகண்ணா தடமுலைபுணர்தொறும்புணர்ச்சிக்காரா *
சுகவெள்ளம்விசும்பிறந்தறிவைமூழ்க்கச் சூழ்ந்ததுகனவெனநீங்கியாங்கே *
அகவுயிரகமகந்தோறுமுள்புக் காவியின்பரமல்லவேட்கையந்தோ *
மிகமிகவினியுன்னைப்பிரிவையாமால் ‡ வீவநின்பசுநிரைமேய்க்கப்போக்கே.()

வீவன்நின்பசுநிரைமேய்க்கப்போக்கு வெவ்வுயிர்க்கொண்டெனதாவிவேமால்
யாவரும்துணையில்லையானிருந் துன்னஞ்சனமேனியையாட்டம்காணேன் *
போவதன்றொருபகல்நீயகன்றால்பொருகயற்கண்ணிணைநீரும்நில்லா *
சாவதிவ்வாய்க்குலத்தாய்ச்சியோமாய்ப்பிறந்தவித்தொழுத்தையோம்தனிமை தானே. (௩)

தொழுத்தையோம்தனிமையும் துணைபிரிந்தார்துயரமும்நினைகிலைகோவிந்தா *†நின், தொழுத்தனில்பசுக்களையேவிரும்பித்துறந்தெம்மையிட்டவைமேய்க்கப்போதி *, பழுத்தநல்லமுதினின்சாற்றுவெள்ளம்பாவியேன்மனமகந்தோறுமுள்புக், கழுத்தநின் * செங்கனிவாயின்கள்வப்பணிமொழிநினைதொறுவிவேமால். (௪)

பணிமொழிநினைதொறுமாவிவேமால் பகல்நிரைமேய்க்கியபோயகண்ணா *
பிணியவிழ்மல்லிகைவாடைதூவப் பெருமதமாலையும்வந்தின்றாலோ *
மணிமிகுமார்வினில்முல்லைப்போதென்வநமுலைகமழ்வித்துன்வாயமுதந்தந்து
அணிமிகுதாமரைக்கையையந்தோ அடிச்சியோந்தலைமிசைநீயணியாய். (௫)

அடிச்சியோந்தலைமிசைநீயணியா யாழியங்கண்ணாஉன்கோலப்பாதம் *
பிடித்ததுநடுவுனக்கரிவையரும்பல ரதுநிற்கவெம்பெண்மையாற்றோம் *
வடித்தடங்கண்ணிணைநீரும்நில்லா மனமும்நில்லாவெமக்கதுதன்னாலே *
வெடிப்புநின்பசுநிரைமேய்க்கப்போக்கு வேமெமதுயிரழல்மெழுகிலுக்கே. (௬)

வேமெமதுயிரழல்மெழுகிலுக்கு வெள்வளைமேகலைகழன்றுவீழ *
தூமலர்க்கண்ணிணைமுத்தம்சோரத்துணைமுலைபயந்தெனதோள்கள்வாட *
மாமணிவண்ணாவுன்செங்கமலவண்ணமென்மலரடிநோவநீபோய் * [ங்கே.
ஆமகிழ்ந்துகந்தவைமேய்க்கின்றுன்னோடசுரர்கள்தலைப்பெய்யில்யவங்கொலா

அசுரர்கள்தலைப்பெய்யில்யவங்கொலாங் கென்றாழுமென்னாருயிரான்பின்போ
கசிகையும்வேட்கையுமுள்கலந்துகலவியும்நலியுமென்கைகழியேல் * [கேல்*
வசிசெயுன்தாமரைக்கண்ணும்வாயும்கைகளும்பீதகவுடையும்காட்டி*
ஒசிசெய்நுண்ணிடையிளவாய்ச்சியர்நீயுகக்குநல்லவரொடுமுழிதராயே. (அ)

உகக்குநல்லவரொடுமுழிதந் துன்றன்திருவுள்ளமிடர்கெடுந்தோறும்*நாங்கள்
வியக்கவின்புறுதுமெம்பெண்மையாற்றோ மெம்பெருமான்பசுமேய்க்கப் போ
மிகப்பலவசுரர்கள்வேண்டுருவங்கொண்டு நின்றுழிதருவர்கஞ்சனேவ * [கேல்
அகப்படிலவரொடும்நின்னொடாங் கேயவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்
தோ. (௯)

‡வீவுதல்-ஒழிதல். †"உன்" என்றுபாடம்.

அவத்தங்கள்விளையுமென்சொற்கொளந்தோ அசுரர்கள்வன்கையர்கஞ்சனேவ
தவத்தவர்மறுகநின்றுழிதருவர் தனிமையும்பெரிதுனக்கிராமனையும்
‡ உவர்த்தலை *உடன்திரிகிலையுமென்றென்றுடறவென்னுடையாவிவேமால்
திவத்திலும்பசுநிரைமேய்ப் § புகத்திசெங்கனிவாயெங்களாயர்தேவே. (க0)

⁂செங்கனிவாயெங்களாயர் தேவத்திருவடி திருவடிமேல்*பொருநல்
சங்கணிதுறைவன்வண்டென்குருகூர் வண்சடகோபன்சொல்லாயிரத்துள் *
மங்கையராய்ச்சியராய்ந்தமாலை யவனொடும்பிரிவதற்கிரங்கி * தையல் [வே.
அங்கவன்பசுநிரைமேய்ப்பொழிப்பானுரைத்தன விவையும்பத்தவற்றின்சார்

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



வேய்மருதோளிந்திரைகோன்மேவுகின்றதேசத்தைத்
தான்மருவாத்தன்மையினுற்றன்னையின்னம்—பூமியிலே
வைக்குமெனச்சங்கித்துமால்தெளிவிக்கத்தெளிந்த
தக்கபுகழ்மாறனெங்கள்சார்வு. (சுஈ)

## சு-வது, சார்வேதவநெறி.



இதுவுமது.

கலிவிருத்தம், பண்-கொல்லி, தாளம்-நடையொத்து.

அபநுபராகம் - ஆதிதாளம்.

⁂ சார்வேதவநெறிக்குத் தாமோதரன்தாள்கள் *
கார்மேகவண்ணன் கமலநயனத்தன் *
நீர்வானம்மண்ணெரிகாலாய் நின்றநேமியான் *
பேர்வானவர்கள் பிதற்றும்பெருமையனே. (க)

பெருமையனேவானத்திமையோர்க்கும் * காண்டற்
கருமையனேயாகத்தணையாதார்க்கு - * என்றும்
திருமெய்யுறைகின்ற செங்கண்மால் * நாளும்
இருமைவினைகடிந் திங்கென்னையாள்கின்றானே. (உ)

ஆள்கின்றானாழியா னாரால்குறைவுடையம் *
மீள்கின்றதில்லைப் பிறவித்துயர்கடிந்தோம் *
வாள்கொண்டையொண்கண் மடப்பின்னைதன்கேள்வன் *
தாள்கண்டுகொண் டென்தலைமேல்புனைந்தேனே. (ங)

தலைமேல்புனைந்தேன் சரணங்கள் * ஆலின்
இலைமேல்துயின்றா னிமையோர்வணங்க *
மலைமேல்தான்நின்றென்மனத்துளிருந்தானை *
நிலைபேர்க்கலாகாமை நிச்சித்திருந்தேனே. (ச)

‡ உவர்த்தல்-வெறுப்பு. § "உவத்தி" என்றும் பாடம்.

நிச்சித்திருந்தே னென்னெஞ்சம்கழியாமை *
கைச்சக்கரத்தண்ணல் கள்வம்பெரிதுடையன் *
மெச்சப்படான்பிறர்க்கு மெய்போலும்பொய்வல்லன் *
நச்சப்படும்நமக்கு நாகத்தணையானே. (ரு)

நாகத்தணையானை நாடோறும்ஞானத்தால் *
ஆகத்தணைப்பார்க் கருள்செய்யுமம்மானை *
மாகத்திளமதியம் சேரும்சடையானை *
பாகத்துவைத்தான்றன் பாதம்பணிந்தேனே. (சா)

பணிநெஞ்சேநாளும் பரமபரம்பரனை *
பிணி † யொன்றும்சாரா ; பிறவிகெடுத்தாளும் *
மணிநின்றசோதி மதுசூதனென்னம்மான் *
அணிநின்றசெம்பொ னடலாழியானே. (எ)

ஆழியானாழி யமரர்க்குமப்பாலான் *
ஊழியானூழி படைத்தான்நிரைமேய்த்தான் *
பாழியந்தோளால் வரையெடுத்தான்பாதங்கள் *
வாழியென்னெஞ்சே மறவாதுவாழ்கண்டாய். (அ)

கண்டேன் கமலமலர்ப்பாதம் * காண்டலுமே
விண்டேயொழிந்த வினையாயினவெல்லாம் *
தொண்டேசெய்தென்றும் தொழுதுவழியொழுக *
பண்டேபரமன்பணித்த பணிவகையே. (கூ)

வகையால்மனமொன்றி மாதவனை * நாளும்
புகையால்விளக்கால் புதுமலரால்நீரால் *
திசைதோறமரர்கள் சென்றிறைஞ்சநின்ற *
தகையான்சரணம் தமர்கட்கோர்பற்றே. (க0)

⁂ பற்றென்றுபற்றிப் பரமபரம்பரனை *
மல்திண்டோள்மாலை வழுதிவளநாடன் *
சொல்தொடையந்தாதி யோராயிரத்துளிப்பத்தும் *
கற்றார்க்கோர்பற்றாகும் கண்ணன்கழலிணையே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



சார்வாகவேயடியிற் றானுரைத்தபத்திதான்
சீரார்பலத்துடனே சேர்ந்ததனைச்—சோராமல்
கண்டுரைத்தமாறன் கழலிணையேநாடோறும்
கண்டுகக்கு மென்னுடையகண். (கூச)



† "என்றும்சாரா" என்று ஆறுயிரம்.

## ரு-வது, கண்ணன்கழலிணை.

இதுவுமது.

வஞ்சித்துறை, பண்-நாட்டம், தாளம்-இடையொத்து.
வசந்தராகம்|- ஆதிதாளம்.

‡‡ கண்ணன்கழலிணை *
நண்ணும்மனமுடையீர் *
எண்ணும்திருநாமம் *
திண்ணம்நாரணமே. (க)

நாரணனெம்மான் *
பாரணங்காளன் *
வாரணம்தொலைத்த *
காரணம்தானே. (உ)

தானேயுலகெல்லாம் *
தானேபடைத்திடந்து *
தானேயுண்டுமிழ்ந்து *
தானேயாள்வானே. (ங)

ஆள்வானாழிநீர் *
கோள்வாயரவணையான் *
தாள்வாய்மலரிட்டு *
நாள்வாய்நாடீரே. (ச)

நாடீர்நாடோறும் *
வாடாமலர்கொண்டு *
பாடீரவன்நாமம் *
வீடேபெறலாமே. (ரு)

‡‡ மேயான்வேங்கடம் *
காயாமலர்வண்ணன் *
பேயார்முலையுண்ட *
வாயான்மாதவனே. (சு)

மாதவனென்றென்று *
ஓதவல்லீரேல் *
தீதொன்றுமடையா *
ஏதம்சாராவே. (எ)

சாராஏதங்கள் *
நீரார்முகில்வண்ணன் *
பேராரோதுவார் *
ஆராரமரரே. (அ)

அமரர்க்கரியானை *
தமர்கட்கெளியானை *
அமரத்தொழுவார்கட்கு *
அமராவினைகளே. (கூ)

வினைவல்லிருளென்னும் *
முனைகள்வெருவிப்போம் *
சுனைநன்மலரிட்டு *
நினைமின்நெடியானே. (க0)

நெடியானருள்சூடும் *
படியான்சடகோபன் *
நொடியாயிரத்திப்பத்து *
அடியார்க்கருள்பேறே. (கக)

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.

கண்ணனடியிணையிற்காதலுறுவார்செயலைத்
திண்ணமுறவேசுருங்கச்செப்பியே—மண்ணவர்க்குத்
தானுபதேசிக்கைதலைக்கட்டினான்மாறன்
ஆனபுகழ்சேர்தன்னருள். (கூரு)

## கூ-வது, அருள்பெறுவார்.

இதுவுமது.

கலிவிருத்தம், பண்-இந்தளம், தாளம்-நடையொத்து.

நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.

⁂ அருள்பெறுவாரடியார்தம்மடியனேற்கு - * ஆழியான்
அருள்தருவானமைகின்றா னதுநமதுவிதிவகையே *
இருள்தருமாஞாலத்து ளினிப்பிறவியான்வேண்டேன் *
மருளொழிநீமடநெஞ்சே வாட்டாற்றானடிவணங்கே. (க)

வாட்டாற்றானடிவணங்கி மாஞாலப்பிறப்பறுப்பான் *
கேட்டாயேமடநெஞ்சே கேசவனெம்பெருமானை *
பாட்டாயபலபாடிப் பழவினைகள்பற்றறுத்து *
நாட்டாரோடியல்வொழிந்து நாரணனைநண்ணினமே. (உ)

நண்ணினம்நாராயணனை நாமங்கள்பலசொல்லி *
மண்ணுலகில்வளம்மிக்க வாட்டாற்றான்வந்தின்று *
விண்ணுலகம்தருவானாய் விரைகின்றான்விதிவகையே *
எண்ணினவாறுகா விக்கருமங்களென்னெஞ்சே. (ங)

என்னெஞ்சத்துள்ளிருந் திங்கிருந்தமிழ்நூலிவைமொழிந்து *
வஞ்னெஞ்சத்திரணியனை மார்விடந்தவாட்டாற்றான் *
மன்னஞ்சப்பாரதத்துப் பாண்டவர்க்காய்ப்படைதொட்டான் *
நன்னெஞ்சேநம்பெருமான் நமக்கருள்தான்செய்வானே. (ச)

வானேறவழிதந்த வாட்டாற்றான்பணிவகையே *
நானேறப்பெறுகின்றேன் நரகத்தைநகுநெஞ்சே *
தேனேறுமலர்த்துளவம் திகழ்பாதன், செழும்பறவை *
தானேறித்திரிவான்றன தாளிணை † யென்தலைமேலே. (ரு)

தலைமேலதாளிணைகள் தாமரைக்கண்ணென்னம்மான் *
நிலைபேரானென்நெஞ்சத் தெப்பொழுதுமெம்பெருமான் *
பலைமாடத்தரவணைமேல் வாட்டாற்றான், மதம்மிக்க *
கொலையானைமருப்பொசித்தான் குரைகழல்கள்குறுகினமே. (சு)

குரைகழல்கள்குறுகினம் நங்கோவிந்தன்குடிகொண்டான் *
திரைகுழுவுகடல்புடைசூழ் தென்னாட்டுத்திலதமன்ன *
வரைகுழுவுமணிமாட வாட்டாற்றான்மலரடிமேல் *
விரைகுழுவுநறுந்துளவம் மெய்நின்றுகமழுமே. (எ)

† "அத்தாளிணை" என்று உரை.

மெய்நின்றுகமழ்துளவ விரையேறுதிருமுடியன் *
கைநின்றசக்கரத்தன் கருதுமிடம்பொருதுபுனல் *
மைநின்றவரைபோலும் திருவுருவவாட்டாற்றாற்கு - *
எந்நன்றிசெய்தேனா வென்னெஞ்சில்திகழ்வதுவே. (௮)
திகழ்கின்றதிருமார்பில் திருமங்கைதன்னோடும் *
திகழ்கின்றதிருமாலார் சேர்விடம்தண்வாட்டாறு *
புகழ்நின்றபுள்ளூர்தி போரரக்கர்குலம்கெடுத்தான் *
இகழ்வின்றியென்னெஞ்சத் தெப்பொழுதும்பிரியானே. (௯)
பிரியாதாட்செய்யென்று பிறப்பறுத்தாளறக்கொண்டான் *
அரியாகியிரணியனை யாகங்கீண்டானன்று *
பெரியார்க்காட்பட்டக்கால் பெறாதபயன்பெறுமாறு *
வரிவாள்வாயரவணைமேல் வாட்டாற்றான்காட்டினனே. (௧௦)
✠ காட்டித்தன்கனைகழல்கள் கடுநரகம்புகலொழித்த *
வாட்டாற்றெம்பெருமானை வளங்குருகூர்ச்சடகோபன் *
பாட்டாயதமிழ்மாலை யாயிரத்துளிப்பத்தும்
கேட்டு - * ஆரார்வானவர்கள் செவிக்கினியசெஞ்சொல்லே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



அருளாலடியி லெடுத்தமாலன்பால்
இருளார்ந்ததம்முடம்பை யிச்சித்—திருவிசும்பில்
இத்துடன்கொண்டேக விசைவுபார்த்தேயிருந்த
சுத்திசொல்லுமாறன்செஞ் சொல். (௯௯)

## ௭-வது, செஞ்சொல்கவிகாள்.



இதுவுமது.

அறுசீராசிரியவிருத்தம். பண்-தக்கேசி, தாளம்-ஏழொத்து.
தன்யாசிராகம் - அதிதாளம்.

✠ செஞ்சொற்கவிகாளுயிர்காத்தாட்செய்மின்திருமாலிருஞ்சோலை *
வஞ்சக்கள்வன்மாமாயன் மாயக்கவியாய்வந்து - * என்
நெஞ்சுமுயிருமுள்கலந்து நின்றாரறியாவண்ணம் * என்
நெஞ்சுமுயிருமவையுண்டு தானேயாகிநிறைந்தானே. (௧)
தானேயாகிநிறைந் தெல்லாவுலகுமுயிரும்தானேயாய் *
தானேயானென்பானாகித் தன்னைத்தானேதுதித்து - * எனக்குத்
தேனேபாலேகன்னலேயமுதே திருமாலிருஞ்சோலை *
கோனேயாகிநின்றொழிந்தா னென்னைமுற்றுமுயிருண்டே. (௨)
என்னைமுற்றுமுயிருண் டென்மாயவாக்கையிதனுள்புக்கு - *
என்னைமுற்றுந் தானேயாய் நின்றமாயவம்மான்சேர் *
தென்னன்திருமாலிருஞ்சோலைத் திசைகைகூப்பிச்சேர்ந்தயான் *
இன்னம்போவேனேகொலோ என்கொலம்மான்திருவருளே. (௩)

என்கொலம்மான்திருவருள்க ளுலகுமுயிரும்தானேயாய் *
நன்கென்னுடலம்கைவிடான் ஞாலத்தூடேநடந்துழக்கி *
தென்கொள்திசைக்குத்திலதமாய்நின்ற திருமாலிருஞ்சோலை *
நங்கள்குன்றம்கைவிடான் நண்ணாவசுரர்நலியவே. (௪)

நண்ணாவசுரர்நலிவெய்த நல்லவமரர்பொலிவெய்த *
எண்ணாதனகளெண்ணும்நன்முனிவ ரின்பம்தலைச்சிறப்ப *
பண்ணார்பாடலின்கவிகள் யானாய்த்தன்னைத்தான்பாடி *
தென்னாவென்னுமென்னம்மான் திருமாலிருஞ்சோலையானே. (௫)

திருமாலிருஞ்சோலையானேயாகிச் செழுமூவுலகும் * தன்
ஒருமாவயிற்றினுள்ளேவைத் தூழியூழிதலையளிக்கும் *
திருமாலென்னையாளுமால் சிவனும்பிரமனும்காணாது *
அருமாலெய்தியடிபரவ அருளையீந்தவம்மானே. (௬)

அருளையீயென்னம்மானேயென்னும் முக்கணம்மானும் *
தெருள்கொள்பிரமனம்மானும் தேவர்கோனும்தேவரும் *
இருள்கள்கடியும்முனிவரு மேத்துமம்மான்திருமலை *
மருள்கள்கடியும்மணிமலை திருமாலிருஞ்சோலைமலையே. (எ)

திருமாலிருஞ்சோலைமலையே திருப்பாற்கடலேயென்தலையே *
திருமால்வைகுந்தமே தண்திருவேங்கடமேயெனதுடலே *
அருமாமாயத்தெனதுயிரே மனமேவாக்கேகருமமே *
ஒருமாமொடியும்பிரியா னென்னூழிமுதல்வனொருவனே. (அ)

ஊழிமுதல்வனொருவனேயென்னு மொருவனுலகெல்லாம் *
ஊழிதோறும்தன்னுள்ளே படைத்துக்காத்துக்கெடுத்துழலும் *
ஆழிவண்ணனென்னம்மா னந்தண்திருமாலிருஞ்சோலை *
வாழிமனமேகைவிடேலுடலுமுயிருமங்கவொட்டே. (௯)

மங்கவொட்டுன்மாமாயை திருமாலிருஞ்சோலைமேய *
நங்கள்கோனே யானேநீயாகியென்னையளித்தானே *
பொங்கைம்புலனும் பொறியைந்தும் கருமேந்திரியமைம்பூதம் *
இங்கிவ்வுயிரேய்பிரகிருதி மானாங்காரமனங்களே. (௧0)

மானாங்காரமனங்கெட ஐவர்வன்கையர்மங்க *
தானாங்காரமாய்ப்புகுத் தானேதானேயானானை *
தேனாங்காரப்பொழில்குருகூர்ச் சடகோபன்சொல்லாயிரத்துள் *
மானாங்காரத்திவைபத்தும் திருமாலிருஞ்சோலைமலைக்கே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



செஞ்சொற்பரன்றனதுசீராருமேனிதனில்
வஞ்சித்துச்செய்கின்றவாஞ்சைதனின்—விஞ்சுதலைக்
கண்டவனைக்காற்கட்டிக்கைவிடுவித்துக்கொண்ட
திண்டிறல்மாறன்னந்திரு. (௬௭)

## அ-வது, திருமாலிருஞ்சோலைமலை.

இதுவுமது.

கலிவிருத்தம், பண்-இந்தளம், தாளம்-ஏழொத்து.
மோஹநராகம் - ஆதிதாளம்.

திருமாலிருஞ்சோலைமலை யென்றேனென்ன *
திருமால்வந் தென்னெஞ்சுநிறையப்புகுந்தான் *
குருமாமணியுந்துபுனல் பொன்னித்தென்பால் *
திருமால்சென்றுசேர்விடம் தென்திருப்பேரே. (க)

பேரேயுறைகின்றபிரா னின்றுவந்து *
பேரேனென் றென்னெஞ்சுநிறையப்புகுந்தான் *
காரேழ்கடலேழ் மலையேழுலகுண்டும் *
ஆராவயிற்றானை யடங்கப்பிடித்தேனே. (உ)

பிடித்தேன்பிறவிகெடுத்தேன் பிணிசாரேன் *
மடித்தேன்மனைவாழ்க்கையுள் நிற்பதோர்மாயையை *
கொடிக்கோபுரமாடங்கள்சூழ் திருப்பேரான் *
அடிச்சேர்வதெனக் கெளிதாயினவாறே !. (ங)

எளிதாயினவாறென் றென்கண்கள்களிப்ப *
களிதாகியசிந்தையனாய்க் களிக்கின்றேன் *
கிளிதாவியசோலைகள்சூழ் திருப்பேரான் *
தெளிதாகிய சேண்விசும்புதருவானே. (ச)

வானேதருவானெனக்கா யென்னோடொட்டி *
ஊனேய்குரம்பை யிதனுள்புகுந்து - * இன்று
தானேதடுமாற்றவினைகள் தவிர்த்தான் *
தேனேபொழில்தென் திருப்பேர்நகரானே. (ரு)

திருப்பேர்நகரான் திருமாலிருஞ்சோலை *
பொருப்பேயுறைகின்றபிரா னின்றுவந்து *
இருப்பேனென் றென்னெஞ்சுநிறையப்புகுந்தான் *
விருப்பேபெற் றமுதமுண்டுகளித்தேனே. (சு)

உண்டுகளித்தேற் கும்பரென்குறை * மேலைத்
தொண்டுகளித் தந்திதொழும்சொல்லுப்பெற்றேன் *
வண்டுகளிக்கும்பொழில்சூழ் திருப்பேரான் *
கண்டுகளிப்பக் கண்ணுள்நின்றகலானே. (எ)

கண்ணுள்நின்றகலான் கருத்தின்கண்பெரியன் *
எண்ணில்நுண்பொருளேழிசையின்சுவைதானே *
வண்ணநன்மணிமாடங்கள்சூழ் திருப்பேரான் *
திண்ணமென்மனத்துப் புகுந்தான்செறிந்தின்றே. (அ)

இன்றென்னைப்பொருளாக்கித் தன்னையென் னுள்வைத்தான் *
அன்றென்னைப்புறம்போகப் புணர்த்ததென்செய்வான் ? *
குன்றென்னத்திகழ்மாடங்கள்சூழ் திருப்பேரான் *
ஒன்றெனக்கருள்செய்ய வுணர்த்தலுற்றேனே. (கூ)

✤ உற்றேனுகந்துபணிசெய் துனபாதம்
பெற்றேன் * ஈதேயின்னம்வேண்டுவதெந்தாய் *
கற்றார்மறைவாணர்கள்வாழ் திருப்பேராற்கு - *
அற்றாரடியார்தமக் கல்லல்நில்லாவே. (க0)

✤ நில்லாவல்லல் நீள்வயல்சூழ்திருப்பேர்மேல் *
நல்லார்பலர்வாழ் குருகூர்ச்சடகோபன் *
சொல்லார்தமி ழாயிரத்துள்ளிவைபத்தும்
வல்லார் * தொண்டராள்வது சூழ்பொன்விசும்பே. (கக)

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



திருமால் தம்பால்விருப்பஞ்செய்கின்றநேர்கண்
டருமாயத்தன்றகல்விப்பானென்—பெருமானீ
இன்றென்பாற்செய்வானென்னவிடாருற்றுநின்றான்
துன்னுபுகழ்மாறனைத்தான் சூழ்ந்து. (கூஅ)

---

## கூ-வது, சூழ்விசும்பு.



அர்ச்சிராதிமார்க்கம்.

கலிவிருத்தம், பண்-கொல்லி, தாளம்-ஏழொத்து.

கல்யாணிராகம் - அடதாளம்.

✤ சூழ்விசும்பணிமுகில் தூரியம்முழக்கின *
ஆழ்கடலலைதிரை கையெடுத்தாடின *
ஏழ்பொழிலும் வளமேந்திய, என்னப்பன் *
வாழ்புகழ்நாரணன் தமரைக் கண்டுகந்தே. (க)

நாரணன் தமரைக்கண்டுகந்து நன்னீர்முகில் *
பூரணபொற்குடம் பூரித்ததுயர்விண்ணில் *
நீரணிகடல்கள் நின்றார்த்தன * நெடுவரைத்
தோரணம்நிரைத் தெங்கும்தொழுதனருலகே. (உ)

தொழுதனருலகர்கள் தூபநல்மலர்மழை
பொழிவனர் * பூமியன்றளந்தவன்தமர்முன்னே *
எழுமினென்றிருமருங்கிசைத்தனர்முனிவர்கள் *
வழியிதுவைகுந்தற் கென்றுவந்தெதிரே. (௩)

எதிரெதிரிமையவ ரிருப்பிடம்வகுத்தனர் *
கதிரவரவரவர் கைநிரைகாட்டினர் *
அதிர்குரல்முரசங்க ளலைகடல்முழக்கொத்த *
மதுவிரிதுழாய்முடி யாதவன்தமர்க்கே. (௪)

மாதவன்தமரென்று வாசலில்வானவர் *
போதுமினெமதிடம் புகுதுகவென்றலும் *
கீதங்கள்பாடினர் கின்னரர்கெருடர்கள் *
வேதநல்வாயவர் வேள்வியுள்மடுத்தே. (௫)

வேள்வியுள்மடுத்தலும் விரைகமழ்நறும்புகை *
காளங்கள்வலம்புரி கலந்தெங்குமிசைத்தனர் *
ஆண்மின்கள்வானகம் ஆழியான்தமரென்று *
வாளொண்கண்மடந்தையர் வாழ்த்தினர்மகிழ்ந்தே. (௬)

மடந்தையர்வாழ்த்தலும் மருதரும்வசுக்களும் *
தொடர்ந்தெங்குந்தோத்திரம் சொல்லினர் * தொடுகடல்
கிடந்தவெங்கேசவன் கிளரொளிமணிமுடி *
‡ குடந்தையெங்கோவலன் குடியடியார்க்கே. (௭)

குடியடியாரிவர் கோவிந்தன்றனக்கென்று *
முடியுடைவானவர் முறைமுறையெதிர்கொள்ள *
கொடியணிநெடுமதிள் கோபுரங்குறுகினர் *
வடிவுடைமாதவன் வைகுந்தம்புகவே. (௮)

வைகுந்தம்புகுதலும் வாசலில்வானவர் *
வைகுந்தன்தமரெமரெமதிடம்புகுதென்று *
வைகுந்தத்தமரரும் முனிவருமவியந்தனர் *
வைகுந்தம்புகுவது மண்ணவர்விதியே. (௯)

விதிவகைபுகுந்தனரென்று நல்வேதியர் *
பதியினில்பாங்கினில் பாதங்கள்கழுவினர் *
நிதியுநற்சுண்ணமும் நிறைகுடவிளக்கமும் *
மதிமுகமடந்தையரேந்தினர்வந்தே. (௧0)

‡ "குடந்தையன்" என்று உரை.

⁂ வந்தவரெதிர்கொள்ள மாமணிமண்டபத்து - *
அந்தமில்பேரின்பத் தடியரோடிருந்தமை *
கொந்தலர்பொழில் குருகூர்ச்சடகோபன் * சொல்
சந்தங்களாயிரத் திவைவல்லார்முனிவரே. (௧௧)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.

சூழ்ந்துநின்றமால்விசும்பில் தொல்லைவழிகாட்ட
ஆழ்ந்ததனைமுற்றுமனுபவித்து—வாழ்ந்தங்
கடியருடனேயிருந்த வாற்றையுரைசெய்தான்
முடிமகிழ்சேர்ஞானமுனி. (௯௯)

---

## ௧0-வது, முனியே.

இதுவுமது.

---

கலித்துறை, பண்-பஞ்சமம், தாளம்-ஏழொத்து.

அபரூபராகம் - அடதாளம்.

⁂ முனியேநான்முகனே முக்கண்ணப்பா * என்பொல்லாக்
கனிவாய்த் தாமரைக்கட்கருமாணிக்கமே யென்கள்வா *
தனியேனாருயிரே யென்தலைமிசையாய்வந்திட்டு - *
இனிநான்போகலொட்டே னென்றும்மாயம்செய்யேலென்னையே.(௧)
மாயம்செய்யேலென்னை உன்திருமார்வத்துமாலைநங்கை *
வாசம்செய்பூங்குழலாள் திருவாணைநின்னாணைகண்டாய் *
நேசம்செய்துன்னோடென்னை யுயிர்வேறின்றியொன்றாகவே *
கூசம்செய்யாதுகொண்டா யென்னைக்கூவிக்கொள்ளாய்வந்தந்தோ.()
கூவிக்கொள்ளாய்வந்தந்தோ என்பொல்லாக்கருமாணிக்கமே *
ஆவிக்கோர்பற்றுக்கொம்பு நின்னலாலறிகின்றிலேன்நான் *
மேவித்தொழும்பிரமன்சிவ னிந்திரனாதிக்கெல்லாம் *
நாவிக்கமலமுதற்கிழங்கே உம்பரந்ததுவே. (௩)
உம்பரந்தண்பாழேயோ அதனுள்மிசைநீயேயோ *
அம்பரநற்சோதி யதனுள்பிரமனரன்நீ *
உம்பரும்யாதவரும்படைத்த முனிவனவன்நீ - *
எம்பரம்சாதிக்கலுற் றென்னைப்போரவிட்டிட்டாயே. (௪)
போரவிட்டிட்டென்னைநீ புறம்போக்கலுற்றால் * பின்னையான்
ஆரைக்கொண்டெத்தையந்தோ! எனதென்பதென்? யானென்பதென்
தீரவிரும்புண்டநீரதுபோல வென்னாருயிரை
ஆரப்பருக * எனக்காராவமுதானாயே. (௫)
எனக்காராவமுதா யெனதாவியையின்னுயிரை *
மனக்காராமைமன்னியுண்டிட்டா யினியுண்டொழியாய் *
புனக்காயாநிறத்த புண்டரீகக்கட்செங்கனிவாய் *
உனக்கேற்குங்கோலமலர்ப்பாவைக்கன்பா என்னன்பேயோ. (௬)

கோலமலர்ப்பாவைக்கன்பாகிய வென்னன்பேயோ *
நீலவரையிரண்டுபிறைகவ்வி நிமிர்ந்ததொப்ப *
கோலவராகமொன்றாய் நிலங்கோட்டிடைக்கொண்டவெந்தாய் *
நீலக்கடல்கடைந்தா யுன்னைப்பெற்றினிப்போக்குவனோ. (எ)

பெற்றினிப்போக்குவனோ வுன்னையென் தனிப்பேருயிரை *
உற்றவிருவினையா யுயிராய்ப்பயனாயவையாய் *
முற்றவிம்மூவுலகும் பெருந்தூறாய்த்தூற்றில்புக்கு *
முற்றக்கரந்தொளித்தா யென்முதல்தனிவித்தேயோ. (அ)

முதல்தனிவித்தேயோ முழுமூவுலகாதிக்கெல்லாம் *
முதல்தனியுன்னையுன்னை யெனைநாள்வந்துகூடுவன்நான் *
முதல்தனியங்குமிங்கும் முழுமுற்றுறுவாழ்பாழாய் *
முதல்தனிசூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவிலீயோ. (௯)

⁂ சூழ்ந்தகன்றாழ்ந்துயர்ந்த முடிவில்பெரும்பாழேயோ *
சூழ்ந்ததனில்பெரிய பரநன்மலர்ச்சோதீயோ *
சூழ்ந்ததனில்பெரிய சுடர்ஞானவின்பமேயோ *
சூழ்ந்ததனில்பெரிய என்னவாவறச்சூழ்ந்தாயே. (க0)

⁂ அவாவறச்சூழரியையயனையரனையலற்றி *
அவாவற்றுவீடுபெற்ற குருகூர்ச்சடகோபன்சொன்ன *
அவாவிலந்தாதிகளா லிவையாயிரமும் * முடிந்த
அவாவிலந்தாதியிப்பத்தறிந்தார் பிறந்தாருயர்ந்தே. (கக)

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



பத்தாம்பத்து - ஸம்பூர்ணம்.

ஆக, பத்து-க0-ல்-திருவாய்மொழி-க00-க்கு-பாட்டு-கக0உ.

முனிமாறன்முன்புரைசெய் முற்றின்பநீங்கித்
தனியாகிநின்றுதளர்ந்து—நனியாம்
பரமபத்தியால்நைந்து பங்கயத்தாள்கோனை
ஒருமையுற்றுச்சேர்ந்தானுயர்ந்து. (க00)



## திருவாய்மொழி ஸம்பூர்ணம்.

ஆழ்வார்திருவடிகளேசரணம். ஜீயர்திருவடிகளேசரணம்.



| | | |
|---|---|---|
| முதலாயிரம் | பாட்டு | ௯௪எ |
| பெரியதிருமொழி | பாட்டு | கக௬௪ |
| இயற்பா | பாட்டு | அகஎ |
| திருவாய்மொழி | பாட்டு | கக0உ |

ஆக, பாட்டு - ௪000.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம꞉.

# திருவரங்கத்தமுதனாருளிச்செய்த
ப்ரபந்நகாயத்ரி யென்னும்

# இராமாநுஜ நூற்றந்தாதி.

## தனியன்கள்.

வேதப்பிரான்பட்டர் அருளிச்செய்தவை.

நேரிசை வெண்பா.

முன்னைவினையகல மூங்கிற்குடியமுதன் *
பொன்னங்கழற்கமலப் போதிரண்டும் *—என்னுடைய
சென்னிக்கணியாகச் சேர்த்தினேன் * † தென்புலத்தார்க்
கென்னுக்கடவுடையேன் ‡ யான்.

கலித்துறை.

நயந்தருபேரின்பமெல்லாம் பழுதின்றிநண்ணினர்பால் § *
சயந்தருகீர்த்தியிராமாநுசமுனிதாளிணைமேல் *
உயர்ந்தகுணத்துத் திருவரங்கத்தமுதோங்கும் * அன்பால்
இயம்புங்கலித்துறையந்தாதியோதவிசைநெஞ்சமே.

¶ [இனியென்குறைநமக்கெம்பெருமானார்திருநாமத்தினால் *
முனிதந்தநூற்றெட்டுச் சாவித்திரியென்னுநுண்பொருளை *
கனிதந்தசெஞ்சொல்கலித்துறையந்தாதிபாடித்தந்தான் *
புனிதன்திருவரங்கத்தமுதாகியபுண்ணியனே.]

அமுதனாருளிச்செய்ததாதல்அவரபிப்பிராயத்தாலே
அபிநிவேசமுடையஆஸ்திகரருளிச்செய்ததாதல்.

சொல்லின்தொகைகொண்டுனதடிப்போதுக்குத் தொண்டுசெய்யும் *
நல்லன்பரேத்துமுன்நாமமெல்லாமென்றன் நாவினுள்ளே *
அல்லும்பகலுமமரும்படிநல்கு அறுசமய
வெல்லும்பரம * இராமாநுஜஇதென்விண்ணப்பமே.

---

† தென்புலம்-யமபுரம். ‡ "என்னுக்கு-கடவுடையேன்" என்பது "என்னுக்கடவுடையேன்" எனக் குகரம் கடைக்குறைத்தலாயிற்று. § பழுதின்றி நண்ணிநம்பால்" என்றும், "பழுதென்றுநண்ணி நன்பால்" என்றும் பாடாந்தரம். ¶ இத்தனியன், திருநாராயணபுரம் முதலான மேனாட்டுதிவ்யதேசங்களில் அநுஸந்திப்பதாகத் தெரிகிறது.

பைரவிராகம் - ரூபகதாளம்.

⁂ பூமன்னுமாது பொருந்தியமார்பன் * புகழ்மலிந்த
பாமன்னுமாற னடிபணிந்துய்ந்தவன் * பல்கலையோர்
தாம்மன்னவந்தவிராமாநுஜன் சரணாரவிந்தம்
நாம்மன்னிவாழ * நெஞ்சேசொல்லுவோமவன்நாமங்களே. (க)

தோடிராகம் - ரூபகதாளம்.

⁂ கள்ளார்பொழில்தென்னரங்கன் * கமலப்பதங்கள்நெஞ்சிற்
கொள்ளாமனிசரைநீங்கி * குறையல்பிரானடிக்கீழ்
விள்ளாதவன்பனிராமாநுஜன்மிக்கசீலமல்லால்
உள்ளாதென்னெஞ்சு - * ஒன்றறியேனெனக்குற்றபேரியல்வே. (உ)

பேரியல்நெஞ்சே அடிபணிந்தேனுன்னை * பேய்ப்பிறவிப்
† பூரியரோடுள்ள சுற்றம் ‡ புலற்றி * பொருவரும்சீர்
ஆரியன்செம்மையிராமாநுஜமுனிக்கன்புசெய்யும்
சீரியபேறுடையார் * அடிக்கீழென்னைச்சேர்த்ததற்கே. (ங)

என்னைப்புவியி லொருபொருளாக்கி * மருள்சுரந்த
முன்னைப்பழவினை வேரறுத்து - * ஊழிமுதல்வனையே
பன்னப்பணித்தவிராமாநுஜன்பரன்பாதமுமென் $
சென்னித்தரிக்கவைத்தான் * எனக்கேதும் சிதைவில்லையே. (ச)

எனக்குற்றசெல்வமிராமாநுஜனென்று - * இசையகில்லா
மனக்குற்றமாந்தர் பழிக்கில் புகழ் * அவன்மன்னியசீர்
தனக்குற்றவன்ப ரவன்திருநாமங்கள்சாற்றுமென்பா
வினக்குற்றம்காணகில்லார் * பத்தியேய்ந்தவியல்விதென்றே. (ரு)

இயலும்பொருளு மிசையத்தொடுத்து - * ஈன்கவிகளன்பால்
மயல்கொண்டுவாழ்த்துமிராமாநுஜனை * மதியின்மையால்
பயிலும்கவிகளில்பத்தியில்லாதவென்பாவிநெஞ்சால்
முயல்கின்றனன் * அவன்றன்பெருங்கீர்த்திமொழிந்திடவே. (சு)

பியாகடைராகம் - ரூபகதாளம்.

⁂ மொழியைக்கடக்கும் பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நம்கூரத்தாழ்வான் ¶ சரண்கூடியபின் *
பழியைக்கடத்து மிராமாநுஜன்புகழ்பாடி யல்லா
வழியைக்கடத்தல் * எனக்கினியாதும் வருத்தமன்றே. (எ)

வருத்தும்புறவிருள் மாற்ற * எம்பொய்கைப்பிரான்மறையின்
குருத்தின்பொருளையும் செந்தமிழ்தன்னையும் கூட்டி * ஒன்றத்
திரித்தன்றெரித்த திருவிளக்கைத் தன்திருவுள்ளத்தே
யிருத்தும்பரமன் * இராமாநுஜனெம்மிறையவனே. (அ)

† பூரியர்-பொல்லாதவர்கள். ‡ புலற்றல்-நீக்கல். $ "பாதமென்றன்" என்றும் பாடம். ¶ "குழியைக்கடத்தும்" என்றும், "எம்கூரத்தாழ்வான்" என்றும் பாடாந்தரம்.

இறைவனைக்காணு மிதயத்திருள்கெட * ஞானமென்னும்
நிறைவிளக்கேற்றிய பூதத்திருவடிதாள்கள் * நெஞ்சத்
துறையவைத்தாளுமிராமாநுஜன் புகழோதுந்நல்லோர்
மறையினைக்காத்து * இந்தமண்ணகத்தே மன்னவைப்பவரே. (௯)

மன்னியபேரிருள்மாண்டபின் * கோவலுள்மாமலராள்
தன்னொடுமாயனைக்கண்டமைகாட்டும் தமிழ்த்தலைவன்
பொன்னடிபோற்றுமிராமாநுஜற்கன்புபூண்டவர்தாள்
சென்னியிற்சூடும் * திருவுடையாரென்றுஞ்சீரியரே. (௧0)

கல்யாணிராகம் - ரூபகதாளம்.

சீரியநான்மறைச்செம்பொருள் * செந்தமிழாலளித்த
பாரியலும்புகழ்ப் பாண்பெருமாள் * சரணாம்பதுமத்
தாரியல்சென்னி யிராமாநுஜன் றன்னைச்சார்ந்தவர்தம்
† காரியவண்மை * என்னாற்சொல்லொணாதிக்கடலிடத்தே. (௧௧)

இடங்கொண்டகீர்த்தி மழிசைக்கிறைவன் * இணையடிப்போ
தடங்குமிதயத்திராமாநுஜன் * அம்பொற்பாதமென்றும்
‡ கடங்கொண்டிறைஞ்சும் திருமுனிவர்க்கன்றிக்காதல்செய்யாத்
திடங்கொண்டஞானியர்க்கே * அடியேனன்புசெய்வதுவே. (௧௨)

செய்யும்பசுந்துளபத்தொழில் மாலையும் * செந்தமிழில்
பெய்யும் மறைத்தமிழ்மாலையும் * பேராதசீரரங்கத்
தய்யன்கழற்கணியும் பரந்தாளன்றி யாதரியா
மெய்யன் * இராமாநுஜன்சரணேகதிவேறெனக்கே. (௧௩)

கதிக்குப்பதறி * வெங்கானமுங்கல்லும் கடலுமெல்லாம்
கொதிக்கத்தவம்செய்யும் § கொள்கையற்றேன்*கொல்லிகாவலன்சொல்
பதிக்குங்கலைக்கவிபாடும் பெரியவர்பாதங்களே
துதிக்கும்பரமன் * இராமாநுஜனென்னைச்சோர்விலனே. (௧௪)

சோராதகாதல்பெருஞ்சுழிப்பால் * தொல்லைமாலையொன்றும்
பாராதவனைப் பல்லாண்டென்றுகாப்பிடும் * பான்மையன்தாள்
பேராதவுள்ளத் திராமாநுஜன்றன் பிறங்கியசீர்
சாரமனிசரைச்சேரேன் * எனக்கென்னதாழ்வினியே. (௧௫)

நாதநாமக்கிரியைராகம் - ரூபகதாளம்.

‡‡ தாழ்வொன்றில்லாமறைதாழ்ந்து * தலமுழுதுங்கலியே
ஆள்கின்றநாள்வந் தளித்தவன்காண்மின் * அரங்கர் ¶ மௌலி
சூழ்கின்றமாலையைச் சூடிக்கொடுத்தவள்தொல்லருளால்
வாழ்கின்றவள்ளல் * இராமாநுஜனென்னும்மாமுனியே. (௧௬)

---

† "காரியல்வண்மை" என்று பாடாந்தரம். ‡ கடம்-கடன்; ப்ராப்தம்.
§ கொள்கை-ஸ்வபாவம். ¶ மௌலி-திருமுடி.

† முனியார் துயரங்கள்முந்திலும் * இன்பங்கள் ‡ மொய்த்திடினும்
கனியார்மனம் கண்ணமங்கைநின்றானை * கலைபரவும்
தனியானையைத்தண்டமிழ்செய்த § நீலன்றனக்குலகி
லினியானை * எங்களிராமாநுஜனை வந்தெய்தினரே. (கஎ)

எய்தற்கரியமறைகளை * ஆயிரமின்தமிழால் *
செய்தற்குலகில்வரும் சடகோபனை * சிந்தையுள்ளே
பெய்தற்கிசையும் பெரியவர்சீரையுயிர்களெல்லாம்
உய்தற்குதவும் * இராமாநுஜனெம்முறுதுணையே. (கஅ)

உறுபெருஞ்செல்வமும் தந்தையும்தாயும் * உயர்குருவும்
வெறிதருபூமகள்நாதனும் மாறன்விளங்கியசீர்
நெறிதரும்செந்தமிழாரணமேயென்றிந்நீணிலத்தோர்
அறிதரநின்ற * இராமாநுஜனெனக்காரமுதே. (கசு)

ஆரப்பொழில்தென்குருகைப்பிரான் * அமுதத்திருவா
யீரத்தமிழி னிசையுணர்ந்தோர்கட்கு - * இனியவர்தம்
சீரைப்பயின்றுய்யும் சீலங்கொள்நாதமுனியை நெஞ்சால்
வாரிப்பருகும் * இராமாநுஜனென்றன்மாநிதியே. (உ0)

சங்கராபரணராகம் - ரூபகதாளம்.

நிதியைப்பொழியும்முகிலென்று * நீசர்தம்வாசல்பற்றித்
துதிகற்றுலகில்துவள்கின்றிலேன் * இனித்தூய்நெறிசேர்
எதிகட்கிறைவன் $ யமுனைத்துறைவனிணையடியாம்
கதிபெற்றுடைய * இராமாநுஜனென்னைக்காத்தனனே. (உக)

கார்த்திகையானும்கரிமுகத்தானும் * கனலும்முக்கண்
மூர்த்தியும் ¶ மோடியும் ‡‡ வெப்பும்முதுகிட்டு * மூவுலகும்
பூத்தவனேயென்று போற்றிட வாணன்பிழைபொறுத்த
தீர்த்தனையேத்தும் * இராமாநுஜனென்றன்சேமவைப்பே. (உஉ)

வைப்பாய வான்பொருளென்று * நல்லன்பர்மனத்தகத்தே
எப்போதும்வைக்குமிராமாநுஜனை * இருநிலத்தில்
ஒப்பாரிலாதவுறுவினையேன்வஞ்சநெஞ்சில்வைத்து
முப்போதும்வாழ்த்துவன் * என்னுமிதுவவன்மொய்புகழ்க்கே. (உங)

மொய்த்தவெந் †† தீவினையால்பல்லுடல்தொறும்மூத்து - * அதனால்
எய்த்தொழிந்தேன் முனைநாள்களெல்லாம் * இன்றுகண்டுயர்ந்தேன்
பொய்த்தவம்போற்றும்புலைச்சமயங்கள்நிலத்தவியக்
கைத்தமெஞ்ஞானத்து - * இராமாநுஜனென்னும்கார்தன்னையே. ()

† முனிவு - வெறுப்பு. ‡ மொய்த்தல் - திரள்தல். § நீலன் - திருமங்கையாழ்வார். $ யமுனைத்துறைவன் - ஆளவந்தார். ¶ மோடி - துர்க்கை. ‡‡ வெப்பு-ஜ்வரம். †† "தீவினையார்" என்று பாடாந்தரம்.

காரேய்கருணையிராமாநுஜ * இக்கடலிடத்தில்
ஆரேயறிபவர் † நின்னருளின் தன்மை * அல்லலுக்கு
நேரேயுறைவிடம்நான்வந்துநீயென்னையுய்த்தபின்னுன்
சீரேயுயிர்க்குயிராய் * அடியேற்கின்றுதித்திக்குமே. (௨௫)
திக்குற்றகீர்த்தியிராமாநுஜனை * என்செய்வினையாம்
மெய்க்குற்றம்நீக்கி விளங்கியமேகத்தை * மேவும்நல்லோர்
எக்குற்றவாளரெதுபிறப் பேதியல்வாகநின்றோர்
அக்குற்றமப்பிறப்பு * அவ்வியல்வே, நம்மையாட்கொள்ளுமே. (௨௬)
கொள்ளக்குறைவற்றிலங்கி * கொழுந்துவிட்டோங்கியவுன்
வள்ளல்தனத்தினால் வல்வினையேன்மனம்நீபுகுந்தாய் *
வெள்ளைச்சுடர்விடுமுன்பெருமேன்மைக்கிழுக்கிதென்று
‡ தள்ளுற்றிரங்கும் * இராமாநுஜவென் தனிநெஞ்சமே. (௨௭)
நெஞ்சில்கறைகொண்டகஞ்சனைக் காய்ந்தநிமலன் * நங்கள்
§ பஞ்சித்திருவடிப் பின்னைதன்காதலன் * பாதம்நண்ணா
வஞ்சர்க்கரியவிராமாநுஜன் புகழன்றியென்வாய்
கொஞ்சிப்பரவகில்லாது - * என்னவாழ்வின்றுகூடியதே. (௨௮)
கூட்டும்விதியென்றுகூடுங்கொலோ * தென்குருகைப்பிரான்
பாட்டென்னும்வேதப்பசுந்தமிழ்தன்னை * தன்பத்தியென்னும்
வீட்டின்கண்வைத்த விராமாநுஜன்புகழ்மெய்யுணர்ந்தோ
ரீட்டங்கள்தன்னை * என்நாட்டங்கள் கண்டின்பமெய்திடவே. (௨௯)
இன்பந்தருபெருவீடுவந்தெய்திலென் * எண்ணிறந்த
துன்பந்தருநிரயம்பலசூழிலென் * தொல்லுலகில்
மன்பல்லுயிர்கட்கிறையவன் மாயனெனமொழிந்த
அன்பனனகன் * இராமாநுஜனென்னை யாண்டனனே. (௩0)

பந்துவராளிராகம்-ரூபகதாளம்.

‡‡ ஆண்டுகள்நாள்திங்களாய் * நிகழ்காலமெல்லாம்மனமே
ஈண்டு பல்யோனிகள்தோறுழல்வோம் * இன்றோரெண்ணின்றியே
காண்டகுதோளண்ணல் தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப்
பூண்டவன்பாளன் * இராமாநுஜனைப் பொருந்தினமே. (௩௧)
பொருந்தியதேசும் பொறையுந்திறலும்புகழும் * நல்ல
திருந்தியஞானமும் செல்வமும்சேரும் * செறுகலியால்
வருந்தியஞாலத்தை வண்மையினால்வந்தெடுத்தளித்த
அருந்தவன் * எங்களிராமாநுஜனை யடைபவர்க்கே. (௩௨)
¶ அடையார்கமலத் தலர்மகள்கேள்வன் * கையாழியென்னும்
படையோடுநாந்தகமும் படர்தண்டும் * ஒண்சார்ங்கவில்லும்
புடையார்புரிசங்கமுமிந்தப் பூதலம்காப்பதற்கென்று *
இடையேயிராமாநுஜமுநியாயினவிந்நிலத்தே. (௩௩)

† "உன்னருளின்" என்றும்பாடம். ‡ தள்ளுதல்-துளும்பல். § பஞ்சி-பஞ்சு. ¶ அடை-இலை.

நிலத்தைச்செறுத்துண்ணும் நீசக்கலியை * நினைப்பரிய
பலத்தைச்செறுத்தும் பிறங்கியதில்லை * என்பெய்வினை தென்
புலத்தில்பொறித்த வப்புத்தகச் † சும்மைபொறுக்கியபின்
நலத்தைப்பொறுத்தது - * இராமாநுஜன்றன்நயப்புகழே. (ங௪)

நயவேனொருதெய்வம் நானிலத்தே * சிலமானிடத்தைப்
புயலேயெனக் கவிபோற்றிசெய்யேன் * பொன்னரங்கமென்னில்
மயலேபெருகுமிராமாநுஜன் மன்னுமாமலர்த்தாள்
‡ அயரேன் அருவினையென்னையெவ்வாறின் றடர்ப்பதுவே. (ங௫)

அடல்கொண்டநேமிய னாருயிர் § நாதன் * அன்றாரணச்சொல்
கடல்கொண்டவொண்பொருள்கண்டளிப்ப * பின்னும்காசினியோர்
இடரின்கண்வீழ்ந்திடத்தானுமவ்வொண்பொருள்கொண்டவர்பின்
படரும்குணன் * எம்மிராமாநுஜன்றன்படியிதுவே. (ங௬)

படிகொண்டகீர்த்தி யிராமாயணமென்னும் பத்திவெள்ளம் *
குடிகொண்டகோயிலிராமாநுஜன் குணங்கூறும் * அன்பர்
கடிகொண்டமாமலர்த்தாள்கலந்துள்ளங்கனியும் நல்லோர்
அடிகண்டுகொண்டுகந்து - * என்னையுமாளவர்க்காக்கினரே. (ங௭)

ஆக்கியடிமைநிலைப்பித்தனையென்னையின்று - * அவமே
போக்கிப்புறத்திட்டதென்பொருளா ? முன்பு * புண்ணியர்தம்
வாக்கிற்பிரியாவிராமாநுஜ நின்னருளின்வண்ணம்
நோக்கில்தெரிவரிதால் * உரையாயிந்தநுண்பொருளே. (ங௮)

பொருளும்புதல்வரும்பூமியும் * பூங்குழலாருமென்றே
மருள்கொண்டிளைக்கும் நமக்குநெஞ்சே * மற்றுளார்தரமோ
இருள்கொண்டவெந்துயர்மாற்றித் தன்னீரில்பெரும்புகழே
தெருளும்தெருள்தந்து - * இராமாநுஜன்செய்யும்சேமங்களே. (ங௯)

சேமநல்வீடும் பொருளும்தருமமும் * சீரியநற்
காமமுமென்றிவைநான்கென்பர் * நான்கினும்கண்ணனுக்கே
ஆமதுகாம மறம்பொருள்வீடிதற்கென்றுரைத்தான்
$ வாமனன்சீலன் * இராமாநுஜனிந்தமண்மிசையே. (௪0)

ஆரபிராகம் - ரூபகதாளம்.

மண்மிசையோனிகள்தோறும்பிறந்து - * எங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலும்காணகில்லா * உலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுஜன்வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானம் தலைக்கொண்டு * நாரணற்காயினரே. (௪௧)

ஆயிழையார்கொங்கைதங்கும் * அக்காதலளற்றழுந்தி
மாயுமென்னாவியைவந்தெடுத்தானின்று * மாமலராள்
நாயகனெல்லாவுயிர்கட்கும்நாத னரங்கனென்னும்
தூயவன் * தீதிலிராமாநுஜன் தொல்லருள்சுரந்தே. (௪௨)

---

† சும்மை-சுமை. பொறிக்குதல்-தஹித்தல். ‡ அயர்வு-மறப்பு. § "நாதனென்று" என்றுபாடாந்தரம். $ "வாமனன்சீரை" என்று பாடாந்தரம்.

சுரக்கும்திருவுமுணர்வும் * சொலப்புகில்வாயமுதம்
பரக்கு மிருவினைபற்றறவோடும்*படியிலுள்ளீர்
உரைக்கின்றனனுமக்கியானறஞ்சீறுமுறுகலியைத்
துரக்கும்பெருமை * இராமாநுஜனென்றுசொல்லுமினே. (சரு)

சொல்லார் தமிழொருமூன்றும் * சுருதிகள்நான்குமெல்லை
யில்லாவறநெறியாவும் தெரிந்தவன் * எண்ணருஞ்சீர்
நல்லார்பரவுமிராமாநுஜன்திருநாமம்நம்பிக்
கல்லாரகலிடத்தோர் * எதுபேறென்றுகாமிப்பரே. (சச)

பேறொன்றுமற்றில்லைநின் சரணன்றி * அப்பேறளித்தற்
காறொன்றுமில்லைமற்றச்சரணன்றி * என்றிப்பொருளைத்
தேறுமவர்க்குமெனக்குமுனைத்தந்தசெம்மைசொல்லால்
கூறும்பரமன்று - * இராமாநுஜமெய்ம்மைகூறிடிலே. (சரு)

கூறும்சமயங்களாறும் குலைய * குவலயத்தே
மாறன்பணித்தமறையுணர்ந்தோனை * மதியிலியேன்
தேறும்படியென்மனம்புகுந்தானைத்திசையனைத்தும்
ஏறும்குணனை * இராமாநுஜனையிறைஞ்சினமே. (சசு)

இறைஞ்சப்படும்பரனீசனரங்கனென்று - * இவ்வுலகத்
தறம்செப்புமண்ணலிராமாநுஜன் * என்னருவினையின்
† திறம்செற்றிரவும்பகலும்விடாதென்றன்சிந்தையுள்ளே
நிறைந்தொப்பறவிருந்தான் * எனக்காரும் நிகரில்லையே. (சஎ)

நிகரின்றிநின்றவென்னீசதைக்கு * நின்னருளின்கணன்றிப்
புகலொன்றுமில்லை யருட்குமஃதேபுகல் * புன்மையிலோர்
பகரும்பெருமையிராமாநுஜ இனிநாம்பழுதே
அகலும்பொருளென் * பயனிருவோமுக்குமானபின்னே. (சஅ)

ஆனது செம்மை யறநெறி ‡ பொய்மை * அறுசமயம்
போனது § பொன்றி யிறந்ததுவெங்கலி * பூங்கமலத்
தேனதிபாய்வயல் தென்னரங்கன்கழல்சென்னிவைத்துத்
தானதில்மன்னும் * இராமாநுஜனித்தலத்துதித்தே. (சகூ)

உதிப்பன வுத்தமர்சிந்தையுள் * ஒன்னலர்நெஞ்சமஞ்சிக்
கொதித்திடமாறிநடப்பன * கொள்ளைவன்குற்றமெல்லாம்
பதித்தவென்புன்கவிபாவினம்பூண்டன பாவுதொல்சீர்
எதித்தலைநாதன் * இராமாநுஜன்றன்னிணையடியே. (ரு0)

அடாணாராகம் - ரூபகதாளம்.

அடியைத்தொடர்ந்தெழு மைவர்கட்காய் * அன்றுபாரதப்போர்
முடியப்பரிநெடுந்தேர்விடுங்கோனை * முழுதுணர்ந்த
அடியர்க்கமுதமிராமாநுஜனென்னையாளவந்திப்
படியிற்பிறந்தது * மற்றில்லைகாரணம்பார்த்திடிலே. (ருக)

† திறம்-ஸமூஹம். ‡ "புன்மையறுசமயம்" என்றுபாடாந்தரம். § பொன்றல்-முடிதல்.

பார்த்தானறுசமயங்கள்பதைப்ப * இப்பார்முழுதும்
போர்த்தான்புகழ்கொண்டுபுன்மையினேனிடைத்தான்புகுந்து *
தீர்த்தானிருவினைதீர்த் தரங்கன்செய்யதாளிணையோ
டார்த்தான் * இவையெம்மிராமாநுஜன்செய்யுமற்புதமே. (ருஉ)

அற்புதன்செம்மையிராமாநுஜன் * என்னையாளவந்த
கற்பகம் கற்றவர்காமுறுசீலன் * கருதரிய
பற்பல்லுயிர்களும் † பல்லுலகியாவும்பரனதென்னும்
நற்பொருள்தன்னை * இந்நானிலத்தேவந்துநாட்டினனே. (ருங)

நாட்டியநீசச்சமயங்கள்மாண்டன * நாரணனைக்
காட்டியவேதம்களிப்புற்றது * தென்குருகைவள்ளல்
வாட்டமிலாவண்டமிழ்மறைவாழ்ந்தது மண்ணுலகில்
ஈட்டியசீலத்து - * இராமாநுஜன்றன்னியல்வுகண்டே. (ருச)

கண்டவர்சிந்தைகவரும் * கடிபொழில்தென்னரங்கன்
தொண்டர்குலாவுமிராமாநுஜனை * தொகையிறந்த
பண்டருவேதங்கள் பார்மேல்நிலவிடப்பார்த்தருளும்
கொண்டலைமேவித்தொழும் * குடியாமெங்கள்கோக்குடியே. (ருரு)

கோக்குலமன்னரை மூவெழுகால் * ஒருகூர்மழுவால்
போக்கியதேவனைப் போற்றும்புனிதன் * புவனமெங்கும்
ஆக்கியகீர்த்தியிராமாநுஜனை ‡ யடைந்தபின்என்
வாக்குரையாது - * என்மனம்நினையாதினிமற்றொன்றையே. (ருசு)

மற்றொருபேறுமதியாது - அரங்கன்மலரடிக்கா
ளுற்றவரே தனக்குற்றவராய்க் கொள்ளுமுத்தமனை
நற்றவர்போற்றுமிராமாநுஜனை யிந்நானிலத்தே
பெற்றனன் * பெற்றபின் மற்றறியேனொருபேதைமையே. (ருஎ)

பேதையர்வேதப்பொருளிதென்றுன்னி * பிறமநன்றென்
றோதிமற்றெல்லாவுயிருமஃதென்று - * உயிர்கள்மெய்விட்
டாதிப்பரனோடொன்றாமென்றுசொல்லுமவ்வல்லலெல்லாம்
வாதில்வென்றான் * எம்மிராமாநுஜன்மெய்ம்மதிக்கடலே. (ருஅ)

கடலளவாயதிசையெட்டினுள்ளும் * கலியிருளே
மிடைதருகாலத்திராமாநுஜன் * மிக்கநான்மறையின்
சுடரொளியாலவ்விருளைத்துரந்திலனே லுயிரை
யுடையவன் * நாரணனென்றறிவாரில்லை யுற்றுணர்ந்தே. (ருகூ)

உணர்ந்தமெஞ்ஞானியர்யோகந்தொறும் * திருவாய்மொழியின்
மணந்தருமின்னிசைமன்னுமிடந்தொறும் * மாமலராள்
புணர்ந்தபொன்மார்பன் பொருந்தும்பதிதொறும்புக்குநிற்கும்
குணந்திகழ்கொண்டல் * இராமாநுஜனெங்குலக்கொழுந்தே. (சூ0)

† "பல்லுலகில்யாவும்" என்றும் பாடாந்தரம். ‡ "அடைந்ததற்பின்" என்று பாடாந்தரம்.

ஸஹாநாராகம் - ரூபகதாளம்.

கொழுந்துவிட்டோடிப்படரும் வெங்கோள்வினையால் * நிரயத்
தழுந்தியிட்டேனை வந்தாட்கொண்டபின்னும் * அருமுனிவர்
தொழுந்தவத்தோனெம் † மிராமாநுஜன்தொல்புகழ்சுடர்மிக்
கெழுந்தது - * அத்தால்நல்லதிசயங்கண்டதிருநிலமே. (சுக)

இருந்தேனிருவினைப்பாசம் கழற்றி இன்றுயானிறையும்
வருந்தேனினியெம்மிராமாநுஜன் * மன்னுமாமலர்த்தாள்
பொருந்தாநிலையுடைப்புன்மையினோர்க்கொன்றும்‡ நன்மைசெய்யாப்
$ பெருந்தேவரைப்பரவும் * பெரியோர்தம்கழல்பிடித்தே. (சுஉ)

பிடியைத்தொடரும் களிறென்ன * யானும்பிறங்கியசீர்
அடியைத்தொடரும்படி நல்கவேண்டும் * அறுசமயச்
செடியைத்தொடரும்மருள்செறிந்தோர்சிதைந்தோடவந்திப்
படியைத்தொடரும் * இராமாநுஜாமிக்கபண்டிதனே. (சுரு)

பண்டருமாறன்பசுந்தமிழ் * ஆனந்தம்பாய்மதமாய்
விண்டிடஎங்களிராமாநுஜமுனிவேழம் * மெய்ம்மை
கொண்டநல்வேதக்கொழுந்தண்டமேந்திக் குவலயத்தே
மண்டிவந்தேன்றது * வாதியர்கா ளுங்கள் வாழ்வற்றதே. (சுச)

வாழ்வற்றது தொல்லைவாதியர்க்கு - * என்றும்மறையவர்தம்
தாழ்வற்றது தவம்தாரணிபெற்றது * தத்துவநூல்
கூழற்றது குற்றமெல்லாம்பதித்த குணத்தினர்க்கந்
நாழற்றது * நம்மிராமாநுஜன் தந்தஞானத்திலே. (சுரு)

ஞானம்கனிந்தநலங்கொண்டு * நாடொறும்நைபவர்க்கு
வானம்கொடுப்பது மாதவன் * வல்வினையேன்மனத்தில்
ஈனம்கடிந்தவிராமாநுஜன்தன்னையெய்தினர்க்கத்
தானம்கொடுப்பது * தன்தகவென்னும் சரண்கொடுத்தே. (சுசு)

சரணமடைந்ததருமனுக்கா * பண்டுநூற்றுவரை
மரணமடைவித்த * மாயவன் ¶ தன்னைவணங்கவைத்த
கரணமிவையுமக்கன்றென்றிராமாநுஜனுயிர்கட்
கரணங்கமைத்திலனேல் அரணார்மற்றிவ்வாருயிர்க்கே. (சுஎ)

ஆரெனக்கின்று நிகர்சொல்லில் * மாயனன்றைவர்தெய்வத்
தேரினிற்செப்பிய கீதையின்செம்மை * பொருள்தெரியப்
பாரினிற்சொன்னவிராமாநுஜனைப் பணியும்நல்லோர்
சீரினிற்சென்றுபணிந்தது - * என்னாவியும்சிந்தையுமே. (சுஅ)

---

† "இராமாநுசன்றன் புகழ்" என்று பாடாந்தரம். $ ‡ "என்றும்"என்றும்பாடாந்தரம். "பெருந்தேவனை"என்றும் பாடம். ¶ "மாயவன்றன்னை" என்று யோஜிக்கவுமாம்.

சிந்தையினோடுகரணங்கள் யாவும்சிதைந்து * முன்னாள்
அந்தமுற்றாழ்ந்தது கண்டு - * அவையென்றனக்கன்றருளால்
தந்தவரங்கனும் தன்சரண்தந்திலன் தானதுதந்து - *
எந்தையிராமாநுஜன்வந்தெடுத்தன னின்றென்னையே. (௬௯)

என்னையும்பார்த்தென்னியல்வையும்பார்த்து - *எண்ணில்பல்குணத்த
உன்னையும்பார்க்கி லருள்செய்வதேநலம் * அன்றியென்பால்
பின்னையும்பார்க்கில் நலமுளதேயுன்பெருங்கருணை
தன்னையென்பார்ப்பர் * இராமாநுஜாவுன்னைச்சார்ந்தவரே. (எ0)

தன்யாசிராகம் - ரூபகதாளம்.

சார்ந்ததென்சிந்தையுன் தாளிணைக்கீழ் * அன்புதான்மிகவும்
கூர்ந்ததத்தாமரைத்தாள்களுக்கு - * உன்றன்குணங்களுக்கே
தீர்ந்ததென்செய்கை முன்செய்வினை † நீசெய்வினையதனால்
பேர்ந்தது * வண்மையிராமாநுஜா எம்பெருந்தகையே. (எக)

கைத்தனன்தீயசமயக்கலகரை * காசினிக்கே
உய்த்தனன் தூயமறைநெறிதன்னை * என்றுன்னியுள்ளம்
நெய்த்தவன்போடிருந்தேத்தும் நிறைபுகழோருடனே
வைத்தனனென்னை * இராமாநுஜன்மிக்கவண்மைசெய்தே. (எ௨)

வண்மையினாலும் தன்மாதகவாலும் * மதிபுரையும்
தண்மையினாலுமித்தாரணியோர்கட்கு * தான்சரணாய்
உண்மைநன்ஞானமுரைத்தவிராமாநுஜனையுன்னும்
திண்மையல்லாலெனக்கில்லை * மற்றோர்நிலைதேர்ந்திடிலே. (எ௩)

தேரார்மறையின் திறமென்று * மாயவன்தீயவரைக்
கூராழிகொண்டுகுறைப்பது * கொண்டலனையவண்மை
ஏரார்குணத்தெம்மிராமாநுஜனவ்வெழில்மறையில்
சேராதவரைச்சிதைப்பது - * அப்போதொருசிந்தைசெய்தே. (எ௪)

செய்த்தலைச்சங்கம் செழுமுத்தமீனும் * திருவரங்கர்
கைத்தலத்தாழியும் சங்கமுமேந்தி * நங்கண்முகப்பே
‡ மொய்த்தலைத்துன்னை விடேனென்றிருக்கிலும் $ நின்புகழே
மொய்த்தலைக்கும்வந்து - * இராமாநுஜாவென்னைமுற்றுநின்றே. ()

செஞ்சுருட்டிராகம் - ரூபகதாளம்.

‡‡ நின்றவண்கீர்த்தியும் நீள்புனலும் * நிறைவேங்கடப்பொற்
குன்றமும்வைகுந்தநாடும் குலவியபாற்கடலும் *
உன்றனக்கெத்தனையின்பந்தருமுன்னிணைமலர்த்தாள்
என்றனக்குமது - * இராமாநுஜாவிவையீந்தருளே. (எ௬)

† "நீசெய்வனவதனால்" என்று பாடாந்தரம். ‡ "மெய்த்தலத்து" என்று பாடாந்தரம். $ "உன்புகழே" என்றும் பாடம்.

ஈந்தனனீயாதவின்னருள் * எண்ணில்மறைக்குறும்பைப்
பாய்ந்தனனம்மறைப்பல்பொருளால் * இப்படியனைத்தும்
† ஏய்ந்தனன்கீர்த்தியினு லென்வினைகளைவேர்பறியக்
காய்ந்தனன் * வண்மையிராமாநுஜற்கென்கருத்தினியே. (எஎ)

கருத்திற்புகுந் துள்ளில்கள்ளம்கழற்றி * கருதரிய
வருத்தத்தினல்மிகவஞ்சித்து * நீயிந்தமண்ணகத்தே
திருத்தித்திருமகள்கேள்வனுக்காக்கியபின்னென்னெஞ்சில்
பொருத்தப்படாது - * எம்மிராமாநுஜமற்றோர்பொய்ப்பொருளே.()

பொய்யைச்சுரக்கும் பொருளைத்துரந்து - * இந்தப்பூதலத்தே
மெய்யைப்புரக்கு மிராமாநுஜன்நிற்க * வேறுநம்மை
உய்யக்கொள்ளவல்ல தெய்வமிங்கியாதென்றுலர்ந்தவமே
ஐயப்படாநிற்பர் * வையத்துள்ளோர்நல்லறிவிழந்தே. (எகூ)

நல்லார்பரவுமிராமாநுஜன் * திருநாமம்நம்ப
வல்லார்திறத்தை ‡ மறவாதவர்கள்யவர் * அவர்க்கே
எல்லாவிடத்திலுமென்று மெப்போதிலுமெத்தொழும்பும் *
சொல்லால்மனத்தால் கருமத்தினல்செய்வன்சோர்வின்றியே. (அ0)

அபநுபராகம் - நுபகதாளம்.

சோர்வின்றியுன்றன் துணையடிக்கீழ் * தொண்டுபட்டவர்பால்
சார்வின்றிநின்றவெனக்கு - * அரங்கன்செய்யதாளிணைகள்
பேர்வின்றியின்று பெறுத்துமிராமாநுஜவினியுன்
சீரொன்றியகருணைக்கு - * இல்லைமாறுதெரிவுறிலே. (அக)

தெரிவுற்றஞானம் செறியப்பெறாது * வெந்தீவினையால்
உருவற்ற$ ஞானத்துழல்கின்றவென்னை ஒருபொழுதில்
பொருவற்றகேள்வியனாக்கிநின்றானென்னபுண்ணியனோ
தெரிவுற்றகீர்த்தி * இராமாநுஜனென்னும்சீர்முகிலே. (அஉ)

சீர்கொண்டுபேரறம் செய்து * நல்வீடு ¶ செறிதுமென்னும்
பார்கொண்டமேன்மையர் கூட்டனல்லேன் * உன்பதயுகமாம்
ஏர்கொண்ட § வீட்டையெளிதினிலெய்துவனுன்னுடைய
கார்கொண்டவண்மை * இராமாநுஜா இதுகண்டுகொள்ளே. (அங)

கண்டுகொண்டேனெம்மிராமாநுஜன்றன்னை * காண்டலுமேதொண்டு
கொண்டேனவன்தொண்டர்பொற்றாளில் * என்தொல்லைவெந்நோய்
விண்டுகொண்டேனவன் சீர்வெள்ளவாரியைவாய்மடுத்தின்
றுண்டுகொண்டேன் * இன்னமுற்றனவோதிலுலப்பில்லையே. (அச)

† "ஏய்ந்தவண்கீர்த்தியினல்" என்றும் பாடம். ‡ "திறத்தைமதியாதவர்கள்" என்று பாடாந்தரம். $ "ஞாலத்து", என்றுபாடாந்தரம். ¶ "பெறுதும்,, என்றும் சொல்லுவர். § "வீட்டில்" என்று பாடாந்தரம்.

ஓதியவேதத்தினுட்பொருளாய் * அதனுச்சிமிக்க
சோதியைநாதனெனவறியாதுழல்கின்றதொண்டர் *
பேதைமை † தீர்த்தவிராமாநுஜனைத்தொழும்பெரியோர்
பாதமல்லாலென்றன்னாருயிர்க்கு * யாதொன்றும்பற்றில்லையே.(அரு)

பற்றுமனிசரைப்பற்றி * அப்பற்றுவிடாதவரே
உற்றாரெனவுழன்றோடிநையேனினி * ஒள்ளியநூல்
கற்றார்பரவுமிராமாநுஜனைக் கருதுமுள்ளம்
பெற்றார்யவர் * அவரெம்மை நின்றாளும்பெரியவரே. (அசு)

பெரியவர்பேசிலும் பேதையர்பேசிலும் * தன்குணங்கட்
குரியசொல்லென்றுமுடையவனென்றென்று - * உணர்வில்மிக்கோர்
தெரியும்வண்கீர்த்திஇராமாநுஜன்மறைதேர்ந்துலகில்
புரியுநன்ஞானம் * பொருந்ாதவரைப்பொரும் கலியே. (அஎ)

‡ கலிமிக்கசெந்நெல்கழனிக்குறையல் * கலைப்பெருமான்
ஒலிமிக்கபாடலையுண்டு தன்னுள்ளம் தடித்து - * அதனால்
வலிமிக்க § சீயமிராமாநுஜன்மறைவாதியராம்
புலிமிக்கதென்று - * இப்புவனத்தில்வந்தமைபோற்றுவனே. (அஅ)

போற்றருஞ்சீலத்திராமாநுஜ * நின்புகழ்தெரிந்து
சாற்றுவனேலதுதாழ்வது தீரில் * உன்சீர்தனக்கோர்
ஏற்றமென்றேகொண்டிருக்கிலுமென்மனமேத்தியன்றி
ஆற்றகில்லாது -* இதற்கென்னினைவாயென்றிட்டஞ்சுவனே.(அகூ)

நினையார்பிறவியைநீக்கும்பிரானை * இந்நீணிலத்தில்
எனையாளவந்தவிராமாநுஜனை * இருங்கவிகள்
புனையார் புனையும்பெரியவர்தாள்களில் பூந்தொடையல்
வனையார் * பிறப்பில் வருந்துவர்மாந்தர்மருள்சுரந்தே. (கூ0)

காம்போஜிராகம் - ரூபகதாளம்.

மருள்சுரந் தாகமவாதியர் ¶ கூறும் * அவப்பொருளாம்
$ இருள்சுரந்தெய்த்தவுலகிருள்நீங்க * தன்னீண்டியசீர்
அருள்சுரந் தெல்லாவுயிர்கட்குநாதனரங்கனென்னும்
பொருள்சுரந்தான் * எம்மிராமாநுஜன் §§ மிக்கபுண்ணியனே. (கூக)

புண்ணியநோன்பு புரிந்துமிலேன் * அடிபோற்றிசெய்யும்
நுண்ணருங்கேள்வி நுவன்றுமிலேன் * செம்மைநூற்புலவர்க்
கெண்ணருங்கீர்த்தி யிராமாநுஜஇன்றுநீபுகுந்தென்
கண்ணுள்ளும்நெஞ்சுள்ளும் * நின்றவிக்காரணம் †† கட்டுரையே. ()

† "தீர்க்கும்" என்று பாடம். ‡ கலி-கோஷம். § சீயம்-ஸிம்ஹம், ¶ "கூறும் மறைப்பொருளாம்" என்றும், $ "இருள் சுமந்து" என்றும் பாடாந்தரம். §§ "என்றும்புண்ணியனே" என்றுபாடாந்தரம். †† கட்டுரை-சொல்லவேணுமென்றபடி.

கட்டப்பொருளைமறைப்பொருளென்று * கயவர்சொல்லும்
† பெட்டைக்கெடுக்கும் பிரானல்லனே * என்பெருவினையைக்
கிட்டிக்கிழங்கொடு தன்னருளென்னுமொள்வாளுருவி
வெட்டிக்களைந்த * இராமாநுஜனென்னும் மெய்த்தவனே. (கூ௩)
தவந்தரும்செல்வம் தகவும்தரும் * சலியாப்பிறவிப்
பவந்தரும் தீவினை பாற்றித்தரும் * பரந்தாமமென்னும்
திவந்தரும் தீதிலிராமாநுஜன் தன்னைச்சார்ந்தவர்கட்
குவந்தருந்தேன் * அவன்சீரன்றியானென்றுமுள்மகிழ்ந்தே. (கூ௪)
உண்ணின்றுயிர்களுக் குற்றனவேசெய்து - * அவர்க்குயவே
பண்ணும்பரனும் பரிவிலனும்படி * பல்லுயிர்க்கும்
விண்ணின்தலைநின்று வீடளிப்பானெம்பிராமாநுஜன்
மண்ணின்தலத்துதித்து * மறைநாலும் வளர்த்தனனே. (கூ௫)
வளரும்பிணிகொண்ட வல்வினையால் * மிக்கநல்வினையில்
கிளரும்துணிவு கிடைத்தறியாது * முடைத்தலையூன்
தளருமளவும் தரித்தும்விழுந்தும் தனிதிரிவேற்
குளரெம்மிறைவர் * இராமாநுஜன்றன்னையுற்றவரே. (கூ௬)
தன்னையுற்றாட்செய்யும் தன்மையினோர் * மன்னுதாமரைத்தாள்
தன்னையுற்றாட்செய்யவென்னையுற்றுனின்று * தன்தகவால்
தன்னையுற்றாரன்றித் தன்மையுற்றாரில்லையென்றறிந்து
தன்னையுற்றாரை * இராமாநுஜன் குணம்சாற்றிடுமே. (கூ௭)

எழுநுகல்யாணிராகம் - ரூபகதாளம்.

‡‡ இடுமேயின்யசுவர்க்கத்தில் * இன்னம்நரகிலிட்டுச்
சுடுமேயவற்றைத் தொடர்தருதொல்லை * சுழல்பிறப்பில்
நடுமேயினிநம்மிராமாநுஜன் நம்மைநம்வசத்தே
விடுமேசரணமென்றால் * மனமேநையல்மேவுதற்கே. (கூ௮)
தற்கச்சமணரும் சாக்கியப்பேய்களும் * தாழ்சடையோன்
சொற்கற்றசோம்பரும் சூனியவாதரும் * நான்மறையும்
நிற்கக்குறும்புசெய் நீசரும்மாண்டனர் நீணிலத்தே
பொற்கற்பகம் * எம்மிராமாநுஜமுனிபோந்தபின்னே. (கூ௯)
போந்ததென்னெஞ்சென்னும் பொன்வண்டு*உனதடிப்போதிலொண்
ராம்தெளிதேனுண்டமர்ந்திடவேண்டி * நின்பாலதுவே ‡ [சீ
ஈந்திடவேண்டுமிராமாநுஜ இதுவன்றியொன்றும்
§ மாந்தகில்லாது * இனிமற்றொன்று காட்டிமயக்கிடலே. (க00)

† பெட்டு-ப்ராமகவாக்யம். ‡ "அன்பாலதுவே" என்று பாடாந்தரம்.
§ மாந்தல்-உண்டல்.

கேதாரகோளளராகம் - நபகதாளம்.

மயக்குவிருவினை † வல்லியிற்பூண்டு * மதிமயங்கித்
துயக்கும்பிறவியில் தோன்றியவென்னை * துயரகற்றி
உயக்கொண்டுநல்குமிராமாநுஜவென்றதுன்னையுன்னி
நயக்குமவர்க்கிதிழுக்கென்பர் * நல்லவரென்றுநைந்தே. (க0க)

நையும்மனமுன்குணங்களையுன்னி * என்நாவிருந்தெம்
ஐயனிராமாநுஜனென்றழைக்கும் * அருவினையேன்
கையும்தொழும் கண்கருதிடுங்காணக் கடல்புடைசூழ்
வையமிதனில் * உன்வண்மையென்பாலென்வளர்ந்ததுவே. (க0உ)

வளர்ந்தவெங்கோப ‡ மடங்கலொன்றாய் * அன்றுவாளவுணன்
கிளர்ந்தபொன்னாகம்கிழித்தவன் * கீர்த்திப்பயிரெழுந்து
விளைந்திடும்சிந்தையிராமாநுஜனென்றன்மெய்வினைநோய்
களைந்துநன்ஞானமளித்தனன் * கையிற்கனியென்னவே. (க0ஙூ)

கையிற்கனியென்ன கண்ணனைக்காட்டித்தரினும் * உன்றன்
மெய்யிற்பிறங்கிய சீரன்றிவேண்டிலன்யான் * நிரயத்
தொய்யில் § கிடக்கிலும் சோதிவிண்சேரிலும்இவ்வருள்நீ
செய்யில்தரிப்பன் * இராமாநுஜஎன்செழுங்கொண்டலே. (க0சூ)

கமாசுராகம் - நபகதாளம்.

‡‡ செழுந்திரைப்பாற்கடல் ¶ கண்டுயில்மாயன் * திருவடிக்கீழ்
விழுந்திருப்பார்நெஞ்சில் மேவுநன்ஞானி * நல்வேதியர்கள்
தொழுந்திருப்பாத னிராமாநுஜனைத்தொழும்பெரியோர்
எழுந்திரைத்தாடுமிடம் * அடியேனுக்கிருப்பிடமே. (க0ரு)

[சாற்றுப்பாட்டுக்கள்.]

மோஹநராகம் - நபகதாளம்.

‡‡ இருப்பிடம்வைகுந்தம்வேங்கடம் * மாலிருஞ்சோலையென்னும்
பொருப்பிடம்மாயனுக்கென்பர்நல்லோர் * அவைதன்னொடும்வந்
திருப்பிடம்மாயனிராமாநுஜன்மனத்தின்றவன்வந்
திருப்பிடம் * என்றனிதயத்துள்ளே தனக்கின்புறவே. (க0சு)

† "வல்லியைப்பூண்டு" என்றுபாடாந்தரம். ‡ மடங்கல்-ஸிம்ஹம் § "இக்கிலென் சோதிவிண்சேரிலென்" என்று பாடாந்தரம். ‡‡ ¶ "பள்ளிகொள் மாயன்" என்றும் பாடம்.

சௌராட்டிராகம் - ரூபகதாளம்.

⁂ இன்புற்றசீலத்திராமாநுஜ * என்றுமெவ்விடத்தும்
என்புற்றநோயுடல்தோறும் பிறந்திறந்து - * எண்ணரிய
துன்புற்றுவீயினும் சொல்லுவதொன்றுண்டுன்தொண்டர்கட்கே
அன்புற்றிருக்கும்படி * என்னையாக்கியங்காட்படுத்தே. (க0எ)

சுருட்டிராகம் - ரூபகதாளம்.

⁂ அங்கயல்பாய்வயல் தென்னரங்கன் * அணியாகமன்னும்
பங்கயமாமலர்ப்பாவையைப்போற்றுதும் * பத்தியெல்லாம்
தங்கியதென்னத் தழைத்துநெஞ்சே நந்தலைமிசையே
பொங்கியகீர்த்தி * இராமாநுஜனடிப்பூமன்னவே. (க0அ)

தசகம்.—பூச்சீர் நிதி ஆண்டு மண் அடி கொழுந்து
சார்ந்தது சோர்வு மருள் மயக்கு.

திருவரங்கத்தமுதனார் திருவடிகளேசரணம்.



ப்ரபந்நகாயத்ரி என்னும்

இராமாநுஜ நூற்றந்தாதி ஸம்பூர்ணம்.

---

ஆ பாட்டு-க0அ.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

மணவாளமாமுனிகள் நியமித்தருளிய

# இயல்சாற்று.

நேரிசைவெண்பா.

பிள்ளையுறங்கா வில்லிதாஸ ரருளிச்செய்தது.

நன்றும்திருவுடையோம் நானிலத்திலெவ்வுயிர்க்கும் *
ஒன்றும்குறையில்லையோதினோம் *—குன்ற
மெடுத்தானடிசேரிராமாநுஜன்தாள் *
பிடித்தார்பிடித்தாரைப்பற்றி. (க)

வதுளாபரணபட்டரருளிச்செய்தது.

வாழிதிருக்குருகூர் வாழிதிருமழிசை *
வாழிதிருமல்லிவளநாடு *—வாழி
சுழிபொறித்தநீர்ப்பொன்னித்தென்னரங்கன்றன்னை
வழிபறித்தவாளன்வலி. (உ)

ஸ்ரீபராங்குசதாஸரருளிச்செய்தது.

திருநாடுவாழிதிருப்பொருநல்வாழி *
திருநாட்டுத்தென்குருகூர்வாழி *—திருநாட்டுச்
சிட்டத்தமர்வாழி * வாழிசடகோபன்
இட்டத்தமிழ்ப்பாவிசை. (ங)

பரகாலதாஸரருளிச்செய்தது.

மங்கைநகர்வாழி வண்குறையலூர்வாழி *
செங்கையருள்மாரிசீர்வாழி *—பொங்குபுனல்
மண்ணித்துறைவாழி * வாழிபரகாலன்
எண்ணில்தமிழ்ப்பாவிசை. (ச)

பிள்ளைஇராமாநுசதாஸரருளிச்செய்தது.

வாழியரோதென்குருகை வாழியரோதென்புதுவை *
வாழியரோதென்குறையல்மாநகரம் *—வாழியரோ
தக்கோர்பரவும்தடஞ்சூழ்பெரும்பூதூர் *
முக்கோல்பிடித்தமுனி. (ரு)

கட்டளைக்கலித்துறை.

திருவரங்கத்தமுதனாரருளிச்செய்தது.

மொழியைக்கடக்கும்பெரும்புகழான் * வஞ்சமுக்குறும்பாம்
குழியைக்கடக்கும் நங்கூரத்தாழ்வான்சரண்கூடியபின் *
பழியைக்கடத்துமிராமாநுஜன்புகழ்பாடியல்லா
வழியைக்கடத்தல் * எனக்கினியாதும்வருத்தமன்றே. (சு)

பிள்ளையழகியமணவாளதாஸரருளிச்செய்தது.

நெஞ்சத்திருந்துநிரந்தரமாகநிரயத்துய்க்கும் *
வஞ்சக்குறும்பின்வகையறுத்தேன் * மாயவாதியர்தாம்
அஞ்சப்பிறந்தவன்சீமாதவனடிக்கன்புசெய்யும்
தஞ்சத்தொருவன்சரணும்புயமென்தலைக்கணிந்தே. (எ)

எண்சீராசிரியவிருத்தம்.

பின்பழகராம்பெருமாள்ஜீயரருளிச்செய்தது.

ஊழிதொறுமூழிதொறுமுலகமுய்ய
வும்பர்களும்கேட்டுய்ய * அன்பினாலே
வாழியெனும்பூதம்பேய்பொய்கைமாறன்
மழிசையர்கோன்பட்டர்பிரான் மங்கைவேந்தன் *
கோழியர்கோன்தொண்டர்துகள்பாணன்கோதை
குலமுனிவன்கூறியநூலோதி * வீதி
வாழியெனவரும்திரளைவாழ்த்துவார்தம்
மலரடியென்சென்னிக்குமலர்ந்தபூவே. (அ)

இயல்சாற்று ஸம்பூர்ணம்.

---

ஆழ்வார் திருவடிகளேசரணம். ஜீயர் திருவடிகளேசரணம்.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

# சாற்றுமுறை.

பல்லாண்டுபல்லாண்டுபல்லாயிரத்தாண்டு *
பல்கோடிநூறாயிரம்
மல்லாண்டதிண்டோள்மணிவண்ணா * உன்
சேவடிசெவ்விதிருக்காப்பு.

அடியோமோடும்நின்னோடும்பிரிவின்றியாயிரம்பல்லாண்டு
வடிவாய்நின்வலமார்பினில்வாழ்கின்றமங்கையும்பல்லாண்டு
வடிவார்சோதிவலத்துறையும்சுடராழியும்பல்லாண்டு *
படைபோர்புக்குமுழங்கு மப்பாஞ்சசன்னியமும்பல்லாண்டே.

பெரியஜீயரருளிச்செய்தது.

𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌶𑌦𑌶𑌾𑌕𑌾𑌲𑍇 𑌷𑍍𑌵𑌵𑍍𑌯𑌾𑌹𑌤𑌪𑌰𑌾𑌕𑍍𑌰𑌮𑌾 |
𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾 𑌵𑌰𑍍𑌧𑌤𑌾𑌮𑌭𑌿 𑌵𑌰𑍍𑌧𑌤𑌾𑌮𑍍 ||

ஸர்வதேஶதஶாகாலேஷ்வவ்யாஹதபராக்ரமா -
ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞாவர்த்ததாமபிவர்த்ததாம்.

கந்தாடையண்ணனருளிச்செய்தது.

𑌰𑌾𑌮𑌾𑌨𑍁𑌜𑌾𑌰𑍍𑌯 𑌦𑌿𑌵𑍍𑌯𑌾𑌜𑍍𑌞𑌾 𑌪𑍍𑌰𑌤𑌿𑌵𑌾𑌸𑌰 𑌮𑍁𑌜𑍍𑌜𑍍𑌵𑌲𑌾|
𑌦𑌿𑌗𑌨𑍍𑌤𑌵𑍍𑌯𑌾𑌪𑌿𑌨𑍀𑌭𑍂𑌯𑌾𑌤𑍍𑌸𑌾𑌹𑌿𑌲𑍋𑌕𑌹𑌿𑌤𑍈𑌷𑌿𑌣𑍀 ||

ராமாநுஜார்யதிவ்யாஜ்ஞாப்ரதிவாஸரமுஜ்வலா -
திகந்தவ்யாபிநீபூயாத்ஸாஹிலோகஹிதைஷிணீ.

உடையவரருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌮𑌨𑍍𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍁𑌪𑌦𑍍𑌰𑌵𑌾𑌮𑌨𑍁𑌦𑌿𑌨𑌂𑌸𑌂𑌵𑌰𑍍𑌧𑌯 |
𑌶𑍍𑌰𑍀𑌮𑌨𑍍𑌶𑍍𑌰𑍀𑌰𑌙𑍍𑌗𑌶𑍍𑌰𑌿𑌯𑌮𑌨𑍁𑌪𑌦𑍍𑌰𑌵𑌾𑌮𑌨𑍁𑌦𑌿𑌨𑌂𑌸𑌂𑌵𑌰𑍍𑌧𑌯 ||

ஸ்ரீமந்ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய -
ஸ்ரீமந்ஸ்ரீரங்கஶ்ரியமநுபத்ரவாமநுதிநம்ஸம்வர்த்தய.

### பெரியஜீயரருளிச்செய்தது.

𑌨𑌮𑌃 𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑌨𑌾𑌥𑌾𑌯 𑌕𑍁𑌨𑍍𑌤𑍀𑌨𑌗𑌰𑌜𑌨𑍍𑌮𑌨𑍇 ।
𑌪𑍍𑌰𑌸𑌾𑌦𑌲𑌬𑍍𑌧𑌪𑌰𑌮𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌕𑍈𑌙𑍍𑌕𑌰𑍍𑌯𑌶𑌾𑌲𑌿𑌨𑍇 ॥

நமஸ்ஸ்ரீசைலநாதாயகுந்தீநகரஜந்மநே
ப்ரஸாதலப்தபரமப்ராப்யகைங்கர்யசாலிநே.

### நம்பெருமாளருளிச்செய்தது.

𑌶𑍍𑌰𑍀𑌶𑍈𑌲𑍇𑌶𑌦𑌯𑌾𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌧𑍀𑌭𑌕𑍍𑌤𑍍𑌯𑌾𑌦𑌿𑌗𑍁𑌣𑌾𑌰𑍍𑌣𑌵𑌂 ।
𑌯𑌤𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌪𑍍𑌰𑌵𑌣𑌂 𑌵𑌨𑍍𑌦𑍇 𑌰𑌮𑍍𑌯𑌜𑌾𑌮𑌾𑌤𑌰𑌂 𑌮𑍁𑌨𑌿𑌮𑍍 ॥

ஸ்ரீசைலேச தயாபாத்ரம்தீபக்த்யாதிகுணார்ணவம் -
யதீந்த்ரப்ரவணம்வந்தேரம்யஜாமாதரம்முநிம்.

### படத்துப்பிள்ளையருளிச்செய்தது.

வாழிதிருவாய்மொழிப்பிள்ளை மாதகவால்
வாழும் * மணவாளமாமுனிவன்—வாழியவன் *
மாறன்திருவாய்மொழிப்பொருளைமாநிலத்தோர்
தேறும்படியுரைக்கும் சீர்.

### ப்ரதிவாதிபயங்கரமண்ணனருளிச்செய்தது.

செய்யதாமரைத்தாளிணைவாழியே சேலைவாழிதிருநாபிவாழியே *
துய்யமார்பும்புரிநூலும்வாழியே சுந்தரத்திருத்தோளிணைவாழியே *
கையுமேந்தியமுக்கோலும்வாழியேகருணைபொங்கியகண்ணிணைவாழி
பொய்யிலாதமணவாளமாமுனிபுந்திவாழிபுகழ்வாழிவாழியே. [யே.

அடியார்கள்வாழ அரங்கநகர்வாழ
சடகோபன்தண்தமிழ்நூல்வாழ *—கடல்சூழ்ந்த
மன்னுலகம்வாழ * மணவாளமாமுனியே !
இன்னமொருநூற்றாண்டிரும்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநமஃ.

# ஆண்டாள் வாழித்திருநாமம்.

வெண்பா.

வேதப்பிரான்பட்டரருளிச்செய்தது.

கோதைபிறந்தவூர்கோவிந்தன்வாழுமூர் *
சோதிமணிமாடம்தோன்றுமூர் * நீதியால்
நல்லபத்தர்வாழுமூர் நான்மறைகளோதுமூர் *
வில்லிபுத்தூர்வேதக்கோனூர்.

பாதகங்கள்தீர்க்கும் பரமனடிகாட்டும் *
வேதமனைத்துக்கும்வித்தாகும் *—கோதைதமிழ்
ஐயைந்துமைந்தும்அறியாதமானிடரை *
வையம்சுமப்பதும்வம்பு.

எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

அப்பிள்ளையருளிச்செய்தது.

திருவாடிப்பூரத்துச் செகத்துதித்தாள்வாழியே *
திருப்பாவைமுப்பதும்செப்பினாள்வாழியே *
பெரியாழ்வார்பெற்றெடுத்தபெண்பிள்ளைவாழியே *
பெரும்பூதூர்மாமுனிக்குப்பின்னானாள்வாழியே *
ஒருநூற்றுநாற்பத்தொருமூன்றுரைத்தாள்வாழியே *
உயரரங்கர்க்கேகண்ணியுகந்தளித்தாள்வாழியே *
மருவாரும்திருமல்லிவளநாடிவாழியே *
வண்புதுவைநகர்க்கோதை மலர்ப்பதங்கள்வாழியே.

ஆண்டாள் வாழித்திருநாமம்

ஸம்பூர்ணம்.

---

ஆழ்வார் திருவடிகளே சரணம். ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:.

ஆழ்வார்கள்மங்களாசாஸநம்செய்தருளின

# நூற்றெட்டுத்திருப்பதிகளின்

# அட்டவணை.

ஈரிருபதாஞ்சோழமீரொன்பதாம்பாண்டி
ஓர்பதின்மூன்றுமலைநாடோரிரண்டாம்—சீர்நடுநா
டாறுடனெட்டுதொண்டையவ்வடநாடாறிரண்டு
கூறு திருநாடொன்றாக்கொள்.

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸனம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| **சோழநாட்டுத்திருப்பதிகள் (ச0)** | | | | |
| **க. திருவரங்கம்பெரிய** | க | பெரியாழ்வார் | கருவுடை | ங0 |
| **கோயில்.** | | | சீமாலிகன் | ஙக |
| ஸ்ரீரங்கம், | | | வண்டுகளித்து | ஙச |
| ஸ்ரீரங்கநாதன்-நம்பெருமா | | | கன்னிநன்மா | ஙகூ |
| ள், | | | மாதவத்தோ (க0) | சுக |
| ஸ்ரீரங்கநாச்சியார், | | | மரவடியை(கக) | சுங |
| ப்ரணவாக்ருதிவிமாநம், | | | துப்புடையா (க0) | சுச |
| வேதச்ருங்கம், | ,, | ஆண்டாள் | தாமுகக்கும் (க0) | கூச |
| காவேரிநதி, | ,, | குலசேகராழ்வார் | இருளிரிய (க0) | க00 |
| சந்திரபுஷ்கரிணி, | | | தேட்டரும் (க0) | க0ங |
| புன்னைவிருக்ஷம், | | [வார் | மெய்யில் (கூ) | க0ச |
| புஜங்கசயநம், | ,, | திருமழிசை யாழ் | கொண் (சகூ) | கஉக |
| [ம் | | திருச்சந்தவிருத்த | மன்னு (ருரு) | கஉஉ |
| தெற்கே திருமுகமண்டல | ,, | தொண்ட ரடிப் | காவலில் (சரு) | கஙக |
| தருமவர்மாவுக்கும் ரவிதர் | | பொடியாழ்வார். | கதிரவன் (க0) | கஙஅ |
| மனுக்கும்ப்ரத்யக்ஷம். | ,, | திருப்பாணாழ்வார் | அமலன் (க0) | கசக |
| | உ | திருமங்கை யாழ் | பள்ளியாவது | கச |
| | | [வார் | உந்திமேல் (க0) | எக |
| | | | வெருவாதாள்(க0) | எங |
| | | | கைம்மானம்(க0) | எச |
| | | | பண்டை (க0) | எரு |
| | | | எழை (க0) | எஎ |
| | | | உரங்களால் | க00 |
| | | | தாங்கநீர் | ககசு |
| | | | புனைவளர் | கஙஅ |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| க. திருவரங்கம்பெரியகோயில். (தொடர்ச்சி) | ௨ | திருமங்கை யாழ்[வார் | கண்ணன் | கசு0 |
| | | | அணியார் | கசுஎ |
| | | | இம்மையை | கசுஅ |
| | | | ஆவியை | கசுகூ |
| | | | இரும்பு | ,, |
| | | | பிண்டியார் | கஎ0 |
| | | | பட்டுடுக்கும் | கஎ௩ |
| | | | நெஞ்சுருகி | கஎ௪ |
| | | | மூளைக்கதிரை | ,, |
| | | | கார்வண்ணம் | கஎ௫ |
| | | | முற்றாரா | ,, |
| | | | மைவள (௨௨-௨௫) | கஎசு கஎஎ |
| | ௩ | பொய்கையார் | ஒன்றுமறந்து | ௨ |
| | ,, | பூதத்தார் | மனத்துள்ளான் | கஅ |
| | | | பயின்றதரங்கம் | ௨0 |
| | | | தமருள்ளம் | ௨௩ |
| | ,, | பேயாழ்வார் | விண்ணகரம் | ௩சு |
| | ,, | திருமழிசை யாழ்[வார் | பாலில்கிடந்தது | ௪க |
| | | | அவனென்னை | ௪௪ |
| | | | நாகத்தணை | ௪௫ |
| | | | ஆள்பார்த்து | ௪அ |
| | ,, | நம்மாழ்வார் | தண்ணந்துழாய் | ௫சு |
| | ,, | திருமங்கை யாழ்[வார் | ஆராமம்சூழ்ந்த | அ௩ |
| | | | மன்னுமரங்கத்து | கூ0 |
| | ௪ | நம்மாழ்வார் | கங்குலும் (கக) | க0௩ |
| ௨. உரையூர் (நிசுளாபுரி.) அழகியமணவாளன், கல்யாணவிமானம், வாஸலக்ஷ்மி, உரையூர்வல்லி, கல்யாணதீர்த்தம், குடமுருட்டிநதி, வடக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், முப்பத்துமுக்கோடிதேவர்களுக்கும் ரவிதர்மராஜாவுக்கும்ப்ரத்யக்ஷம். | ௨ | திருமங்கை யாழ்[வார் | கோழியும்கூடலு | க௨கூ |
| ௩. தஞ்சை மாமணிக்கோயில். நீலமேகப்பெருமாள், செங்கமலவல்லி, | ,, | ,, | எம்பிரான் | ௪ |
| | ,, | ,, | உடம்புருவில் | ௨௪ |
| | ௩ | பூதத்தாழ்வார் | தமருள்ளம் | ௨௩ |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| ௩. **தஞ்சைமாமணிக்கோயில் (தொடர்ச்சி.)**<br>ஸௌந்தரியவிமாநம்,<br>கன்னிகாபுஷ்கரிணி,<br>அமுததீர்த்தம், [ம்<br>கிழக்கே திருமுகமண்டல<br>வீற்றிருந்ததிருக்கோலம்,<br>பராசரமுனிக்கு ப்ரத்யக்ஷம். | | | | |
| **தஞ்சையாளிநகர்.**<br>நரசிங்கப்பெருமாள்,<br>தஞ்சைநாயகி,<br>வேதசுந்தரவிமாநம்,<br>சூரியபுஷ்கரிணி,<br>ஸ்ரீராமதீர்த்தம், [ம்<br>கிழக்கே திருமுகமண்டல<br>வீற்றிருந்ததிருக்கோலம்,<br>மார்க்கண்டேயமகாமுனிக்கு ப்ரத்யக்ஷம். | | | | |
| **ச. அன்பில்.**<br>திருவடிவழகியநம்பி,<br>அழகியவல்லிநாய்ச்சியார்,<br>தாரகவிமாநம்,<br>மண்டூகபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டல<br>நின்றதிருக்கோலம், [ம்<br>புஜங்கசயநம்,<br>ப்ரம்மாவுக்கும் வால்மீகருக்கும் ப்ரத்யக்ஷம். | ௩ | திருமழிசை யாழ்[வார் | நாகத்தணை | சரு |
| ரு. **கரம்பனூர் (உத்தமர் கோயில்.)**<br>புருஷோத்தமன்,<br>பூர்வாதேவி,<br>உத்யோகவிமாநம்,<br>கதம்பதீர்த்தம்,<br>வாழைமரம், [ம்<br>கிழக்கே திருமுகமண்டல<br>புஜங்கசயநம்,<br>கதம்ப மகர்ஷிக்கும், திருமங்கை யாழ்வாருக்கும், உபரி சரவஸுவுக்கும், ஸநகஸநந்தஸநத் குமாரர்களுக்கும் ப்ரத்யக்ஷம். | உ | திருமங்கை யாழ்[வார் | பேரானை | எச |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| சூ. திருவெள்ளறை. | க | பெரியாழ்வார் | உன்னையும் | கரு |
| புண்டரீகாக்ஷன், | | | இந்திரனோடு (க0) | ௩க |
| பங்கயச்செல்வி, | உ | திருமங்கை யாழ் | வென்றிமா (க0) | எ0 |
| செண்பகவல்லி, | | [வார் | துளக்கமில் | கசக |
| விமலாக்ருதிவிமாநம், | ௩ | ,, | பேராமருதிருத்தா | அ௩ |
| குசதீர்த்தம், மணிகர்ணிகா தீர்த்தம், சக்ரதீர்த்தம், திவ்யபுஷ்கரிணி, புஷ்கலதீர்த்தம், பத்மதீர்த்தம், கந்த புஷ்கரிணிக்ஷீர புஷ்கரிணி, வராகதீர்த்தம், சுவேதகிரி, | | | மின்னையிருசுட | கூ0 |
| கிழக்கேதிருமுகமண்டலம் | | | | |
| நின்றதிருக்கோலம், | | | | |
| பெரியதிருவடிக்கும், சிபிசக்ரவர்த்திக்கும், பூதேவிக்கும், மார்க்கண்டேயருக்கும், ப்ரத்யக்ஷம். | | | | |
| எ. புள்ளம்பூதங்குடி | உ | ,, | அறிவதரியான்-க0 | சூஎ |
| வல்விலிராமன், | | | | |
| பொற்றாமரையாள், | | | | |
| சோபநவிமாநம், | | | | |
| க்ருத்ரதீர்த்தம், | | | | |
| கிழக்கேதிருமுகமண்டலம் | | | | |
| புஜங்கசயநம், | | | | |
| சக்ரவர்த்தித்திருமகனுக்கும், க்ருத்ரராஜனுக்கும்ப்ரத்யக்ஷமாய்மோக்ஷம் தந்தவிடம். | | | | |
| அ. திருப்பேர்நகர். | க | பெரியாழ்வார் | கொங்கும் | உகூ |
| அப்பக்குடத்தான், | | | கொண்டல் | ௩௩ |
| கமலவல்லித்தாயார், | உ | திருமங்கை யாழ் | கையிலங்கு (க0) | எகூ |
| இந்திரவிமாநம், | | [வார் | பிண்டியார் | கஎ0 |
| இந்திரதீர்த்தம், | | [வார் | நீரகத்தாய் | கஎ௩ |
| மேற்கே திருமுகமண்டல | ௩ | திருமழிசை யாழ் | நாகத்தணை | சரு |
| புஜங்கசயநம், [ம் | ,, | திருமங்கை யாழ் | மதிள்கச்சி | அ௩ |
| வலதுகையின்கீழேகுடம் | ச | நம்மாழ்வார் [வார் | திருமாலிரும் (கக) | கசூ0 |
| இந்திரகிரி, | | | | |
| உபமநுவுக்கும் பராசருக்கும் ப்ரத்யக்ஷம். | | | | |
| கூ. ஆதனூர். | ௩ | திருமங்கை யாழ் | அன்னவனை | கூக |
| ஆண்டளக்குமையன், | | [வார் | | |
| ஸ்ரீரங்கநாயகியார், | | | | |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| கூ. ஆதனூர் (தொடர்ச்சி.)<br>ப்ரணவவிமாநம்,<br>சூரியபுஷ்கரிணி<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>புஜங்கசயநம்,<br>காமதேநுவுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். | | | | |
| க0. திருவழுந்தூர்.<br>ஆமருவியப்பன்,<br>செங்கமலவல்லித்தாயார்,<br>கருடவிமாநம்,<br>தர்சனபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுக மண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>உபரிசரவஸு ராஜாவுக்கும், காவேரிக்கும், தர்மதேவதைக்கும்ப்ரத்யக்ஷம். | உ<br>௩ | திருமங்கை யாழ்வார்<br>,, | தந்தைகாலில் (க0)<br>சிங்கமதாய் (க0)<br>திருவுக்கும் (க0)<br>செங்கமல (க0)<br>கல்லுயர்ந்த<br>தேமருவு<br>சீரார்கணபுரம்<br>அள்ளல்வாய் | க0௩<br>க0ச<br>க0ரு<br>க0அ<br>கஎச<br>கஎஎ<br>அ௩<br>கூ0 |
| கக. சிறுபுலியூர்.<br>அருமாகடல்,<br>திருமாமகள்நாய்ச்சியார்,<br>நந்தவர்த்தநவிமாநம்,<br>அநந்தஸரஸ்ஸு<br>மாநஸபுஷ்கரிணி,<br>தெற்கே திருமுகமண்டலம்<br>புஜங்கசயநம்,<br>வ்யாஸமஹாமுனிக்கும், வ்யாக்ரமருக்கும் ப்ரத்யக்ஷம். | உ | ,, | கள்ளம் (க0) | கக0 |
| கஉ. திருச்சேறை.<br>ஸாரக்ஷேத்ரம்,<br>ஸாரநாதன்,<br>ஸாரநாயகி,<br>ஸாரவிமாநம்,<br>ஸாரபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>காவேரிக்குப்ரத்யக்ஷம், | ,,<br>௩ | ,,<br>,, | கண்சோர (க0)<br>வானையார்<br>சீரார்கணபுரம்<br>மன்னியதண் | க0க<br>கசக<br>அ௩<br>கூ0 |
| க௩. தலைச்சங்கநாண்மதியம்.<br>நாண்மதியப்பெருமாள்,<br>வெண்சுடர்ப்பெருமாள், | ,, | ,, | நன்னீர் | கூக |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| கந. (தொடர்ச்சி.) | | | | |
| தலைச்சங்கநாய்ச்சியார், | | | | |
| செங்கமலவல்லி, | | | | |
| சந்திரவிமானம், | | | | |
| சந்திரபுஷ்கரிணி, [ம் | | | | |
| கிழக்கே திருமுகமண்டல | | | | |
| நின்றதிருக்கோலம்; | | | | |
| தேவப்ருந் தங்களுக்கும் ச | | | | |
| ந்திரனுக்கும் ப்ரத்யக்ஷ | | | | |
| ம். | | | | |
| கச. திருக்குடந்தை | க | பெரியாழ்வார் | கொங்கும் | உகூ |
| (கும்பகோணம்.) | | [வார் | குடங்கள் | நக |
| சார்ங்கபாணிப்பெருமாள், | ,, | திருமழிசை யாழ் | இலங்க (ருசு) | கஉஉ |
| | | [வார் | நடந்த (சுக) | கஉந |
| ஆராவமுது, | உ | திருமங்கை யாழ் | ஆவியே | ந |
| கோமளவல்லி, | | | இற்பிறப்பு | ச |
| * வைதிகவிமாநம், | | | அன்றாயர் | உஉ |
| ஹேமபுஷ்கரிணி, | | | வாளாய | சந |
| கிழக்கேதிருமுகமண்டலம் | | | குயிலாலும் | ,, |
| உத்யோகசயநம், | | | வாராளும் | எந |
| ஹேமமஹர்ஷிக்கு ப்ரத்ய | | | பொங்கேறு | கூந |
| க்ஷம். | | | வந்தநாள் | கூகூ |
| | | | பேரானை | க0ரு |
| | | | வந்தாய் | கஉரு |
| | | | தோடவிழ் | கஉகூ |
| | | | வானையார் | கசக |
| | | | இங்கே | கருசு |
| | | | அண்டத்தின் | கசுரு |
| | | | மூவரில் | கசுஅ |
| | | | காவியை | கசுகூ |
| | | | பொங்கார் | களரு |
| | | | முற்றாரா | ,, |
| | | | அன்றாயர் | களஅ |
| | ந | பூதத்தாழ்வார் | தமருள்ளம் | உந |
| | | | எங்கள்பெருமான் | உசு |
| | ,, | பேயாழ்வார் | சேர்ந்ததிருமால் | நஉ |
| | | [வார் | விண்ணகரம் | நசு |
| | ,, | திருமழிசை யாழ் | நாகத்தணை | சரு |
| | ,, | திருமங்கை யாழ் | ஒருபேருந்தி } | எஅ |
| | | [வார் | செல்வம்மல்கு } | |
| | | | காரார்குடந்தை | அந |
| | | | பொன்னிமணி | கூ0 |
| | ச | நம்மாழ்வார் | ஆராவமுதே (கக) | அ0 |

* வேதவேதவிமானம் என்றும் சொல்லுவர்கள்.

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| **௧௫. கண்டியூர்.**<br>அரன்சாபந்தீர்த்தவர்,<br>கமலவல்லிநாய்ச்சியார்,<br>கமலாக்ருதிவிமாநம்,<br>கபாலதீர்த்தம்,<br>கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம்,<br>ருத்ரனுக்குக் கபாலநிவ்ருத்திசெய்தவர், அகஸ்த்யருக்கு ப்ரத்யக்ஷம். | ௨ | திருமங்கை யாழ்வார் | பிண்டியார் | ௧௭௰ |
| **௧௬. திருவிண்ணகர்.**<br>உப்பிலியப்பன்,<br>பூமிதேவிநாய்ச்சியார்,<br>விஷ்ணுவிமாநம்,<br>ஆர்த்திபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம்,<br>மார்க்கண்டேயருக்கும், பெரியதிருவடிக்கும், காவேரிக்கும், தர்மதேவதைக்கும் ப்ரத்யக்ஷம். | ௨ | திருமங்கை யாழ்வார் | வண்டுணு (௧௰) | ௮௨ |
| | | | பொறுத்தேன்-௧௰ | ௮௩ |
| | | | துறப்பேன் | ௮௫ |
| | | | பத்தராவியை | ௧௪௨ |
| | | | அன்றுயர் | ௧௭௮ |
| | ௩ | பொய்கையாழ்வார் | வேங்கடமும் | ௧௰ |
| | ,, | பேயாழ்வார் | பண்டெல்லாம் | ௩௬ |
| | | | விண்ணகரம் | ,, |
| | ,, | திருமங்கை யாழ்வார் | காரார்மணிநிற | ௮௩ |
| | ௪ | நம்மாழ்வார் | நல்குரவும் (௧௧) | ௮௮ |
| **௧௭. திருக்கண்ணபுரம்.**<br>சௌரிராஜர்,<br>கண்ணபுரிநாயகி,<br>உற்பலாவர்த்தகவிமாநம்,<br>நித்யபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம்,<br>கண்வமாமுனிக்கு ப்ரத்யக்ஷம். | ௧ | பெரியாழ்வார் | உன்னையும் | ௧௫ |
| | ,, | ஆண்டாள் | காட்டில் | ௮௪ |
| | ,, | குலசேகராழ்வார் | மன்னுபுகழ் (௧௧) | ௧௧௰ |
| | ௨ | திருமங்கை யாழ்வார் | சிலையிலங்கு(௧௰) | ௧௧௪ |
| | | | தெள்ளியீர் (௧௰) | ௧௧௫ |
| | | ,, | கரையெடுத்த (௧௰) | ௧௧௭ |
| | | | விண்ணவர்(௧௰) | ௧௧௮ |
| | | | தந்தைகாலில் (௧௰) | ௧௧௯ |
| | | | தொண்டீர் (௧௰) | ௧௨௧ |
| | | | வியமுடை(௧௰) | ௧௨௨ |
| | | | வானோரளவு (௧௰) | ௧௨௩ |
| | | | கைம்மானம் (௧௰) | ௧௨௫ |
| | | | வண்டார் (௧௰) | ௧௨௬ |
| | | | கன்றுமேய்த்து | ௧௭௫ |
| | | | செங்கால | ௧௭௭ |
| | ௩ | | சீரார்கணபுரம் | ௮௩ |
| | | | கணபுரத்து | ௮௯ |
| | | | கண்ணனே | ௯௧ |
| | ௪ | நம்மாழ்வார் | மாலைநண்ணி (௧௧) | ௧௪௮ |
| **௧௮. திருவாலி.**<br>வயலாலிமணவாளன்,<br>அம்ருதகடவல்லி, | ௨ | திருமங்கை யாழ்வார் | அன்றுயர் | ௨௨ |
| | | | வந்துனது (௧௰) | ௪௧ |
| | | | தூவிரிய (௧௰) | ௪௩ |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| கஅ. திருவாலிதொடர்ச்சி<br>அஷ்டாக்ஷரவிமாநம்,<br>இலாக்ஷணிபுஷ்கரிணி,<br>அலாதநிபுஷ்கரிணி, [ம்<br>மேற்கே திருமுகமண்டல | உ | திருமங்மை யாழ் [வார் | கள்வன் (க0)<br>எஞ்சா } கற்றூர் }<br>படைநின்ற<br>நெஞ்சுருகி | கசச<br>கஉரு<br>கசுஎ<br>களச |
| வீற்றிருந்த திருக்கோலம்,<br>அலாதநிகஞ்சமப்ரஜாபதிக்கும், திருமங்கையாழ்வாருக்கும்ப்ரத்யக்ஷம். | ந | ,, | மாமலர்மேல் | கூ0 |
| கக. திருநாகை.<br>ஸௌந்தர்யராஜர்,<br>ஸௌந்தர்யவல்லி,<br>ஸௌந்தர்யவிமாநம்,<br>ஸாரபுஷ்கரிணி,<br>கிழக்கேதிருமுகமண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>நாகராஸனுக்கும் திருமங்கையாழ்வாருக்கும் ப்ரத்யக்ஷம். | உ | ,, | பொன்னிவர் (க0) | கஉகூ |
| உ0. திருநறையூர்.<br>நம்பி,<br>நம்பிக்கைநாய்ச்சியார்,<br>ஸ்ரீநிவாஸவிமாநம்<br>மணிமுக்தாநதி,<br>கிழக்கேதிருமுகமண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>மேதவ முனி கன்னிகையைப்பலிமி பிடித்துக்கொண்டுபோக அவனைச்சயித்து மேதவமுனிக்குஅருள்செய்தவர். | உ | ,, | அன்றுயர்<br>மானேய்<br>கண்ணும் (க0)<br>கலங்க (க0)<br>அம்பரமும் (க0)<br>ஆளும்பணி (க0)<br>மான் (க0)<br>பெடையடர் (க0)<br>கிடந்தநம்பி (க0)<br>கறவா (க0)<br>புள்ளாய் (க0)<br>சினவில் (க0)<br><br>பரனே<br>சுடலையில்<br>கன்றுமேய்த்து } பொங்கார் } | உஉ<br>அரு<br>அசு<br>அஎ<br>அகூ<br>கூக<br>கூஉ<br>கூச<br>கூரு<br>கூசு<br>கூஅ<br>கூகூ<br><br>க0சு<br>கசக<br>களரு |
| | ந | ,, | பேராலி<br>மன்னுமறையோர்<br>கண்ணனை | அந<br>அஅ<br>கூக |
| உக. நந்திபுரவிண்ணகரம்.<br>விண்ணகரப்பெருமாள்,<br>ஜகந்நாதர்,<br>நாதநாதப்பெருமாள், | உ | ,, | நீதறு (க0) | அக |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| **உக. நந்திபுரவிண்ணகரம்** (தொடர்ச்சி.)<br>செண்பகவல்லி, மந்தாரவிமாநம், நந்திதீர்த்தம், மேற்கே திருமுகமண்டலம் வீற்றிருந்ததிருக்கோலம், நந்திக்கும், சிபிசக்ரவர்த்திக்கும் ப்ரத்யக்ஷம். | | | | |
| **உஉ. இந்தளூர்.** | உ | திருமங்கையாழ்வார் | நும்மை (கO) | கூச |
| சுகந்தவநநாதன், மருவினியமைந்தன், சந்திரசாபவிமோசநவல்லி புண்டரீகவல்லி, வேதசக்ரவிமாநம், இந்துபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம் வீரசயநம், சந்திரனுக்கு ப்ரத்யக்ஷம், | ங | ,, | அன்னவுருவில் | கூக |
| **உங. சித்திரகூடம்.** | க | பெரியாழ்வார் | பொன்திகழ்<br>மானமரும்<br>சித்திரகூடத்து | உகூ<br>ருO<br>,, |
| கோவிந்தராஜர், புண்டரீகவல்லி, ஸாத்விகவிமாநம், | ,, | குலசேகராழ்வார் | அங்கணெடு (கக) | ககங |
| புண்டரீகசரஸ்ஸு, கிழக்கே திருமுகமண்டலம் | உ | திருமங்கையாழ்வார் | ஊன்வாட (கO)<br>வாடமருது (கO) | ஙரு<br>ஙஅ |
| போகசயநம், சிவன்முதலிய தில்லைமூவாயிரவர்க்கும் கண்வர்க்கும் ப்ரத்யக்ஷம். தேவர்கள்கொலுவீற்றிருந்தவிடம். | ங | ,, | தென்தில்லை | கூக |
| **உச. காழிச்சீராம விண்ணகரம்.** | உ | ,, | ஒருகுறளாய் (கO) | ஙக |
| தாடாளன், திருவிக்கிரமமூர்த்தி, மட்டவிழுங்குழலி, புஷ்கலாவர்த்தகவிமாநம் சக்ரதீர்த்தம், சங்கபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், அஷ்டகோண மகர்ஷிக்கு ப்ரத்யக்ஷம். | | | | |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| ௨௫. **கூடலூர்.** | ௨ | திருமங்கை யாழ்[வார் | தாந்தம் (௧௦) | ௬௯ |
| வையங்காத்தபெருமாள், பத்மாஸநவல்லி, சுத்தஸத்வவிமாநம், சக்ரதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், நந்தகமா முனிக்கு ப்ரத்யக்ஷம், | | | | |
| ௨௬. **திருக்கண்ணங்குடி.** | ,, | ,, | வங்கமா (௧௦) | ௧௨௭ |
| ச்யாமளமேனிப்பெருமாள் அரவிந்தவல்லிநாச்சியார், உத்பலவிமாநம், ராவணபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், ப்ருகு சைத் யருக்கும், கௌதமமுனிக்கும் ப்ரத்யக்ஷம். | | | | |
| ௨௭. **திருக்கண்ணமங்கை.** | ,, | ,, | பெரும்புற (௧௦) | ௧௧௧ |
| பக்தவத்ஸலப்பெருமாள், | | | ஒருநற்சுற்றம் | ௧௪௧ |
| அபிஷேகவல்லித்தாயார், | ௩ | ,, | பேராலி | ௮௫ |
| உத்பலவிமாநம், தர்சநபுஷ்கரிணி, கிழக்கே திருமுகமண்டலம் நின்றதிருக்கோலம், வருணனுக்கும், உரோமச னுக்கும் ப்ரத்யக்ஷம். | | | என்னுடைய | ௯௦ |
| ௨௮. **கவித்தலம்.** | ,, | திருமழிசை யாழ்[வார் | கூற்றமும் | ௪௭ |
| கஜேந்திரவரதர், ரமாமணிவல்லி, பொற்றாமரையாள், ககநாக்ருதிவிமாநம், கஜேந்தரபுஷ்கரிணி, கபிலதீர்த்தம், கிழக்கே திருமுகமண்டலம் [ம் புஜங்கசயநம், கஜேந்தரனுக்கும் ஆஞ்சநே யருக்கும் ப்ரத்யக்ஷம். | | | | |
| ௨௯. **திருவெள்ளியங்குடி.** | ௨ | திருமங்கை யாழ்[வார் | ஆய்ச்சியர் (௧௦) | ௬௬ |
| கோலவில்லிராமன், மரதகவல்லிநாய்ச்சியார், | | | | |

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| உகூ. **திருவெள்ளியங்குடி** (தொடர்ச்சி.)<br>* புஷ்பலாவர்த்தக விமாநம்,<br>சுக்ரபுஷ்கரிணி,<br>ப்ரஹ்மதீர்த்தம்,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>புஜங்கசயநம்,<br>சுக்கிரனுக்கும், பிரமனுக்கும், பாராசருக்கும், இந்திரனுக்கும் ப்ரத்யக்ஷம், | | | | |
| நO. **மணிமாடக் கோயில்.**<br>நந்தாவிளக்குப்பெருமாள்<br>நரநாராயணர்,<br>புண்டரீகவல்லி,<br>ப்ரணவவிமாநம்,<br>இந்திரபுஷ்கரிணி,<br>ருத்ரபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>வீற்றிருந்த திருக்கோலம்,<br>ஏகாதசருத்ரருக்கும், இந்த்ரனுக்கும் ப்ரத்யக்ஷம். | உ<br>ந | திருமங்கை யாழ்வார்<br>,, | நந்தா (கO)<br>மன்னுமணி | சரு<br>கூக |
| நக. **வைகுந்தவிண்ணகரம்**<br>வைகுந்தநாதன்,<br>தாமரைக் கண்ணுடைய பிரான்,<br>வைகுந்தவல்லி,<br>அநந்தஸத்ய வர்த்தகவிமாநம்,<br>லட்சுமி புஷ்கரிணி,<br>உதங்கபுஷ்கரிணி விரஜை,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>வீற்றிருந்ததிருக்கோலம்,<br>உபரிசரவஸு ராஜாவுக்கும் உதங்கமஹர்ஷிக்கும் ப்ரத்யக்ஷம். | உ | ,, | சலம்(கO) | சஅ |
| நஉ. **அரிமேயவிண்ணகரம்**<br>குடமாடுகூத்தர்,<br>அம்ருதகடவல்லி,<br>உச்சச்ருங்கவிமாநம்,<br>கோடிதீர்த்தம்,<br>அமுததீர்த்தம்,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>வீற்றிருந்ததிருக்கோலம், | ,, | ,, | திருமடந்தை (கO) | ருO |

* சோபந விமாநம் என்றும் பெயர்.

| திவ்யதேசங்களின் ப்ரபாவம். | ஆயிரம். | மங்களாசாஸநம் செய்தஆழ்வார்கள். | பாசுரங்களின் தலைப்பு. | பக்கம். |
|---|---|---|---|---|
| **௩௨. அரிமேயவிண்ணகரம்.** (தொடர்ச்சி.)<br>உதங்க மகர்ஷிக்கு ப்ரத்யக்ஷம், | | | | |
| **௩௩. திருத்தேவனார் தொகை**<br>தெய்வநாயகப்பெருமாள்,<br>கடல்மகள் நாய்ச்சியார்,<br>சோபநவிமாநம்,<br>சோபநபுஷ்கரிணி,<br>தேவஸபாபுஷ்கரிணி,<br>மேற்கே திருமுகமண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>வஸிஷ்டருக்குப்ரத்யக்ஷம் | ௨ | திருமங்கையாழ்வார் | போதலர்ந்த (௰) | ௫௩ |
| **௩௪. வண்புருடோத்தமம்.**<br>புருஷோத்தமர்<br>புருஷோத்தமநாயகி,<br>ஸஞ்சீவிக்ரஹவிமாநம்,<br>திருப்பாற்கடல்தீர்த்தம்,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>உபமந்யுவுக்குப்ரத்யக்ஷம், | ,, | ,, | கம்பமா (௰) | ௫௪ |
| **௩௫. செம்பொன்செய் கோயில்.**<br>பேரருளாளர்,<br>அல்லிமாமலர்நாய்ச்சியார்<br>கநகவிமாநம்,<br>கநகதீர்த்தம்,<br>நித்யபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>நின்றதிருக்கோலம்,<br>ருத்ரனுக்குப்ரத்யக்ஷம், | ,, | ,, | பேரணிந்து (௰) | ௫௫ |
| **௩௬. திருத்தெற்றியம்பலம்**<br>செங்கண்மால்,<br>செங்கமலவல்லி,<br>வேதவிமாநம்,<br>சூர்யபுஷ்கரிணி,<br>கிழக்கே திருமுகமண்டலம்<br>புஜங்கசயநம்,<br>செங்கமலவல்லி நாய்ச்சியாருக்கும், அநந்தனுக்கும் ப்ரத்யக்ஷம். | ,, | ,, | மாற்றரசர் (௰) | ௫௭ |
| **௩௭. திருமணிக்கூடம்.**<br>மணிக்கூடநாயகன், | ,, | ,, | தூம்புடை (௰) | ௫௯ |

